நூறு வழங்குவதெனக் கழகம் முடிபு செய்தது. அங்ஙனமே அத்தொகை அவர்கள் மக்களுக்குப் பிரித்துக் கொடுக்கப் பெற்று வருகின்றது. இதன் வாயிலாகத் திருவரங்கனருக்குக் கழகம் என்றும் மாறுத நன்றியைச் செலுத்தி வருவது போற்றற் குரியதாகும்.

### அப்பர் அச்சகம்

1948 செப்டம்பர்த் திங்களில் கழக நூல்களை அச்சிடுவதற்கெனப் பழைய அச்சகம் ஒன்றைக் கழகம் விலைக்கு வாங்கியது. அதனை 'அப்பர் அச்சகம்' என்று பெயர் சூட்டிச் சென்னை டேவிட்சன் தெருவில் நிறுவியது. அப்போது சென்னை முதலமைச்சராக விளங்கிய ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் அவர்கள் அதனைத் திறந்து வைத்து வாழ்த்தினர். 1-7-1949 முதல் அப்பர் அச்சகம் 2/140 எண் கட்டிடத்திற்கு மாற்றப்பட்டது. கழக விற்பனை நிலையமும் பிராட்வே 1/140 எண் கட்டிடத்திற்கு மாற்றப்பட்டு நடைபெற்று வருகிறது.

கழகத்திற்கெனத் தனி அச்சகம் நிறுவிய காலம் முதல் கழக நூல்கள் பெரும்பாலும் அதிலேயே அச்சிடப்பெற்று வருகின்றன. ஆண்டுதோறும் தகுதியுடைய சிறந்த நூல்கள் மிகுதியாக வெளியிடப் பெறுகின்றன. பள்ளி மாணவர்க்குப் பாடமாக அமைத்தற்குரிய தமிழ்நூல்கள் பல, தக்க ஆசிரியர்களைக் கொண்டு எழுதச்செய்து வெளியிட்டும், அவற்றை அரசினர் ஒப்புதல் பெற்றுப் பள்ளிகளில் பாட நூல்களாக்கியும் கழக வருவாயைப் பெருக்கி வளர்த்து வருகிறது,

### கழகத்தின் அற நிலையங்கள்

இக் கழகத்தைச் சார்ந்து சைவப்பணிக்கெனவும் தமிழ்ப்பணிக்கெனவும் இரண்டு அற நிலையங்கள் இயங்குகின்றன. சைவப் பணிக்கென விளங்குவது சைவசித்தாந்த சங்கம். தமிழ்ப்பணிக்கென விளங்குவது தென்னிந்தியத் தமிழ்ச் சங்கம். கழக வெளியீடுகளால் கிடைக்கும் ஆதாயத்தில் நேர்பாதி இவ்வறநிலையங்களின் அறப்பணிக்கே ஒதுக்கப்பெறும். அமைச்சர்க்குரிய கழிவாக 10 சத வீதம் கொடுக்கப்பெறும். பங்காளிகட்கு 6 சத வீதம் தரப்பெறும். இவைபோக எஞ்சியதெல்லாம் கழகக் காப்பு நிதியாகத் தொகுக்கப் பெறும்.

### சிவஞானமுனிவர் நூல் நிலையம்—படிப்பகம்

இக் கழகத்தைச் சார்ந்த இரு அறநிலையங்களின் நிதிகளிலிருந்து திருநெல்வேலித் தலைமை நிலையக் கட்டிடத்தில் 1927 இல் பெரியதொரு நூல்நிலையம் சிவஞானமுனிவர் திருப் பெயரால் நிறுவப் பெற்றது. அந்நூல் நிலையத்தை 1937 இல் மேலும் விரிவுசெய்து 10-11-1937 அன்று சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் (சம்பந்த சரணலயத் தம்பிரான்) திறந்து வைத்தனர். 1950 இல் மேலும் விரிவு செய்யப்பெற்று 18-10-1950 இல் துறைசை யாதீனம் 20 ஆவது மகாசந்நிதானம் தவத்திரு. அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகளால் திறந்துவைக்கப் பெற்றது.

நூல் நிலையத்தில் மிகப் பழந்தமிழ் நூல்களும் மிகப் புதிய தமிழ் நூல்களுமாகப் பதினாயிரத்திற்கும் மேற்பட்ட நூல்கள் உள்ளன. தமிழில் வெளிவரும் சிறந்த புதிய நூல்கள் பலவும் உடனுக்குடன் வாங்கிச் சேர்க்கப் பெறுகின்றன. நூல்நிலையத்தைச் சார்ந்த காசில்லாப் படிப்பகத்தில் தமிழ், ஆங்கில நாளிதழ்கள் பலவும், தமிழிலுள்ள வார இதழ், திங்கள் இதழ்கள் பலவும் வரவழைக்கப் பெறுகின்றன. தமிழின் மாண்பைப் பிற நாட்டினர்க்கு விளக்கும் வகையில் தோன்றியுள்ள 'Tamil Culture' என்னும் ஆங்கில இதழும் வரவழைக்கப் பெறுகிறது.

நூல் நிலையத்தையும் படிப்பகத்தையும் நாள்தோறும் பல நூற்றுக் கணக்கான அன்பர்கள் பயன்படுத்தி இன்புறுகின்றனர். இவற்றைக் கவனித்தற்கென நூலகர் ஒருவர் நியமனம் செய்யப் பெற்றுள்ளார்.

### திருவள்ளுவர் செந்தமிழ்க் கல்லூரி

கழக அறநிலையச் சார்பில் நடைபெறும் திருவள்ளுவர் செந்தமிழ்த் தனிப்பயிற்சிக் கல்லூரியைப் பேராசிரியர் பெருநாவலர் திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கள் முதல்வராக இருந்து நடத்தி வருகின்றனர். பத்தாண்டுகளாக இக் கல்லூரி சிறந்த பணி புரிந்து வருகிறது. நெல்லையைச் சார்ந்த எல்லைப் பகுதிகளில் உள்ள ஆசிரியர்கள் தனிப் பயிற்சி பெற்று வித்துவான் பட்டத் தேர்வில் வெற்றியுறுதற்கு உறுதுணையாய் விளங்கி வருகிறது. ஆண்டுதோறும் புகுநிலை, முதனிலை, இறுதிநிலையாகிய மூன்று தகுதித் தேர்வுகட்கும் பல மாணவர்களைப் பயிற்சியளித்து அனுப்பி வருகிறது.

இஃதன்றித் தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் தமிழ்க் கல்லூரி மாணவர்களிடையே போட்டித் தேர்வுகளை நடத்தி நற்சான்றிதழ்களும் பரிசுகளும் வழங்கிவருகிறது. கல்லூரி வகுப்புக்களையும் போட்டித் தேர்வுகளையும் பேராசிரியர் திரு. பு. சி. பு. அவர்களே பொறுப்பேற்றுச் சிறப்புடன் நடத்தி வருகின்றனர்.

### செந்தமிழ்ச் செல்வி

1924 ஆம் ஆண்டில் நம் கழகம் மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு 'செந்தமிழ்ச் செல்வி' என்னும்

திங்கள் வெளியீட்டைத் தொடங்கியது. அப்போது வேலூர் க. ப. சந்தோஷம் (மகிழ்நன்) என்பார் செந்தமிழ்ச் செல்விக்கு நகைச்சுவை நிறைந்த ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி வந்தனர். தமிழகத்தின் பல பகுதிகளிலுமுள்ள பல்துறைத் தமிழ்ப் பேரறிஞர்கள் செல்விக்கு ஆராய்ச்சிக் கட்டுரைகள் தொடர்ந்து எழுதலாயினர். மொழி, சமயம், தத்துவம் பற்றிய அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் செல்வியில் வெளிவந்தமையால் தமிழன்பர்கள் அதனைப் போற்றி வரவேற்றனர். செல்வியின் ஆண்டுத் தொகுதிகள் கட்டடம் செய்யப் பெற்றுச் செந்தமிழ் அறிவுக் களஞ்சியங்களாக நூலகங்களிலும் தமிழறிஞர்களாலும் போற்றிக் காக்கப் பெறுவது கண்கூடு. இக் காரணத்தால் செல்வியிதழ் உயர்ந்த தாள்களிலேயே அச்சிடப் பெறுகின்றது.



இரண்டாவது உலகப்போர் காரணமாக 1941 நவம்பர் முதல் சில திங்கள் வரை கழகப் பணிகள் சில தடையுற்றன. அதனுல் செந்தமிழ்ச் செல்வியும் சில திங்கள் வெளிவராதிருந்தது. மீண்டும் அரசினரின் தாள் கட்டுப்பாட்டு ஆணையால் 1944 முதல் 1947 ஆகஸ்டு வரை செந்தமிழ்ச் செல்வி வெளிவருதற்கில்லை. 1947 செப்டம்பர்த்திங்களில் பாரதப் பேரரசின் ஆணைபெற்று மீண்டும் செந்தமிழ்ச் செல்வி வெளிவரலாயிற்று. தற்போது, டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியாரவர்களைத் தலைவராகவும், ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, பேராசிரியர் மு. இராசாக்கண்ணனுர், பண்டித கா. பொ. இரத்தினம், எம். ஏ., கு. பரமசிவம், எம். ஏ., பேராசிரியர் க. கோவிந்தராசன், எம். ஏ., சித்தாந்தபண்டிதர் ப. இராமநாத பிள்ளை, பண்டித வித்துவான் தி. சங்குப் புலவர் ஆகிய அறிஞர்களை ஆசிரியக் குழு உறுப்பினராகவும் திரு. வ. சு. பிள்ளையை ஆசிரியராகவும் பதிப்பாளராகவுங் கொண்டு நடைபெற்று வருகிறது.

இத் திங்களிதழ் தொடங்கிய நாள்முதல் தகுதி மிக்க தமிழ்ப்பேரறிஞர்களை இதழாசிரியர் கூட்ட உறுப்பினர்களாகக்கொண்டு சிறப்பாக நடைபெற்று வருகிறது. கல்லூரிகள், கலாசாலைகள், நூலகங்கள், படிப்பகங்கள், கழகங்கள் முதலிய பல நிறுவனங்களும் செல்வியை விருப்புடன் வரவேற்றுப் போற்றி வருகின்றன.

### சைவப் பஞ்சாங்க வெளியீடு

1929 ஆம் ஆண்டு முதல் கழக வாயிலாகச் சைவப் பஞ்சாங்கம் ஒன்று வெளிவரத் தொடங்கியது. அதனைத் தமிழ்ப் பெரும்புலவரும் சோதிட மருத்துவத் துறைகளில் வல்லாரும் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்க அமைச்சருமாகிய திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை ஆகம முறைப்படி அமைத்துக் கொடுக்கலாயினர். இவ்வாண்டில் சார்வரி வருடப் பஞ்சாங்கம் வெளியிடப் பெற்றது. சைவப் பஞ்சாங்கக் குறிப்புக்களே திருக்குறள் நாட் குறிப்புக்குப் பயன்படுத்தப் பெறுகின்றன.

### சிறந்த நூற்பதிப்புக் கொடை

1940 இல் கழகத் தலைவராகிய திரு. மு. காசிவிசுவநாதன் செட்டியாரவர்கள் சிறந்த நூல்களைக் குறைந்த விலையில் அச்சிட்டு விற்க வேண்டுமெனப் பதினுயிரம் ரூபாய்க் கொடையொன்றைக் கழகத்தில் ஒப்புவித்தனர். அவர்கள் கருத்தின்படியே திருவாசகம், தாயுமானவர் பாடல்கள், பட்டினத்தார் பாடல்கள் முதலிய நூல்கள் பதிப்பிக்கப்பெற்றன. இச் சமயத்தில் நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் அண்ணுமலைப் பல்கலைக்கழகப் பேராசிரியப் பணியினின்று விலகி ஓய்வு பெற்றுத் தஞ்சையில் வாழ்ந்து வந்தனர். அதனையறிந்த கழக ஆட்சியாளர் திரு. வ. சு. பிள்ளையவர்கள், நாட்டார் அவர்கட்கு ஊக்கமூட்டிச் சிலப்பதிகாரம், மணிமேகலை, அகநானூறு போன்ற நூல்களுக்குப் புத்துரை வரையுமாறு வேண்டித் தூண்டினர். அவர்களது பெருமுயற்சியால் நாட்டார் அவர்களின் நல்லுரை நூல்கள் வெளிவரலாயின. கழகப்புலவர் இளவழகனுரைக் கொண்டு கலித்தொகை—நச்சினர்க்கினியர் உரைக்கு விளக்கம் எழுதுமாறு செய்து வெளியிடப் பெற்றது. நாவலர் நாட்டாரவர்களும், கரந்தைக் கவியரசு இரா. வேங்கடாசலம் பிள்ளையவர்களும் வரைந்துதவிய சிறந்த விளக்கவுரையுடன் அகநானூறு வெளியிடப் பெற்றது.

### திருக்குறள் திருப்பணி

1935 இல் சென்னையில் தமிழறிஞர்களால் திருவள்ளுவர் திருநாட் கழகம் நிறுவப்பெற்றது. அதற்குத் திரு. வ. சுப்பையாப் பிள்ளையவர்களைப் பொருளாளராகத் தேர்ந்தெடுத்தனர். மறைமலையடிகளார் தலைமையில் முதலாண்டுவிழாச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதனையொட்டித் திரு. வ. சு. அவர்கள் அரிய முயற்சியால் 'திருவள்ளுவர் நினைவு மலர்' ஒன்று வெளியிடப்பெற்றது. அத்தகைய அழகிய அரிய மலரொன்று இதுகாறும் எந்த விழாவிலும் வெளியிடப் பெறவில்லை என்பதைத் தமிழுலகம் அறியும். டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் தலைமையில் இரண்டாவ

தாண்டு விழாவும், சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் தலைமையில் மூன்றுவதாண்டு விழாவும் நடைபெற்றன.

1937 இல் திருக்குறள் பரிமேலழகர் உரையைப் பல்வகைக் குறிப்புக்களுடன் உயர்ந்த கட்டடம் செய்து ரூ. 1-8-0 ஆக மிகவும் குறைந்த விலையில் வெளியிட்டதைக் கற்றவர் அனைவரும் களிப்புடன் பாராட்டினர். அங்ஙனமே சிவஞானபாடியம், திருக்குறள் மூலம், திருவாசக மூலம், பேரறிஞர் கா. சுப்பிரமணிய பிள்ளை எழுதிய திருக்குறள் பொழிப்புரை ஆகியவற்றையும் அழகுற அச்சிட்டுக் குறைந்த விலைக்கு விற்றுக் கழகம் சைவத் தமிழ்ப்பணியாற்றியதை எவரும் மறவார்.

கழக ஆட்சியாளர் திரு. வ. சு. பிள்ளையவர்கள் பள்ளியில் பயிலுங் காலத்திலேயே திருக்குறளில் பற்றுக்கொண்டனர். அவர் ஒருநாள் பாளையங்கோட்டையில் வழக்கறிஞராக இருந்த தம் உறவினராகிய சி. பி. சுப்பையா பிள்ளை இல்லத்திற்குச் சென்று அவருடன் உரையாடிக்கொண்டிருந்தபோது, வழக்கறிஞர் தம் கையை மூடிக்கொண்டு, "எனது கையில் இருப்பது என்ன?" என்று கேட்டார், பிறகு கையை விரித்துக் காட்டினர். அவர் கையுள் இருந்தது சேக்ஸ்பியர் எழுதிய 'ஒதல்லோ' என்ற ஆங்கில நாடக நூலாகும். அந்நூல் கையுள் அடங்கும் $2'' \times 1\frac{1}{3}''$ அளவில் மிகச் சிறியதாக அச்சிடப்பெற்று அழகிய கட்டடத்துடன் விளங்குவதைக் கண்ட பிள்ளையவர்கள் உலகப் பொதுமறையாகிய திருக்குறட் பெருநூலும் அங்ஙனம் சிறுவடிவில் வெளிவருமாயின் மக்கள் பெரிதும் விரும்பிக் கற்பரே என்று கருதினர். அக் கருத்தை நிறைவேற்றப் பிள்ளையவர்கட்குக் கழகப்பணி வாய்த்தது திருவருட் குறிப்பேயாகும். தமிழ்நாட்டு நகைச்சுவை நடிகர் திரு. என். எஸ். கிருட்டிணன் 'பணம்' என்ற படத்தில் இத் திருக்குறட் பதிப்பைக் 'கையில் எடுத்துக்காட்டி' உலகம் இதற்குள் அடங்கியிருக்கிறது என்று சொன்னது யாவரும் அறிவர்.

திரு. வ. சு. பிள்ளையவர்கள் தாம் இளமையில் எண்ணிய வண்ணமே திருக்குறளைக் கைக்குள் அடங்கும் $2'' \times 2\frac{1}{2}''$ சிறு வடிவிலும் அதற்குமேல் மூன்று பெரிய அளவுகளிலும் அச்சிட்டு உயர்ந்த கட்டடம் செய்து பல்லாயிரம் படிகளை வெளியிட்டு நாடெங்கணும் பரப்பியுள்ளனர். திருக்குறள் கையடக்கப் பதிப்பின் கவினைப் பாராட்டி 1956 ஆம் ஆண்டில் பாரதக் குடியரசின் துணைத்தலைவர் டாக்டர் எஸ். இராதாகிருட்டிணன் அவர்கள் சான்றிதழ் வழங்கியுள்ளனர்.

மறைமலையடிகளாரின் மாணவராகிய தமிழ்ப்பெரும் புலவர் நாகைத் தண்டபாணி பிள்ளையைக் கொண்டு திருக்குறளுக்கு விருத்தியுரை எழுதுமாறு செய்து, அவர் வரைந்துதவிய அறத்துப்பால் விருத்தியுரையைத் தண்டபாணி விருத்தியுரை என்று கழகம் வெளியிட்டுள்ளது. எஞ்சிய இரண்டு பால்கட்கும் உரையெழுத முடியாதவாறு கூற்றுவன் இவர் உயிரைக் கொள்ளைக்கொண்டது பெரிதும் வருந்துதற்குரியது.

தமிழ் நாட்டிலே திருக்குறள் அட்டாவதானம் செய்து புகழ்பெற்றவர் திரு. சுப்பிரமணியதாசு அவர்களாவர். 1934 இல் இவர்கள், அட்டாவதானம் பயிற்சியளிக்கப் பெற்ற பன்னிரண்டு வயதுள்ள தம் மகனார் திரு. இராமதாசுடன் வந்து சென்னைக் கழக நிலையத்தில் சில திங்கள் தங்கினர். இளைஞர் இராமதாசரின் திருக்குறள் அட்டாவதான நிகழ்ச்சியைச் சென்னையிலுள்ள பல கல்வி நிலையங்களிலும் கழகங்களிலும் நடத்திக் காட்டுதற்குத் திரு. வ. சு. அவர்கள் தக்க ஏற்பாடுகள் செய்தனர். அச்சமயம் சுப்பிரமணியதாசுடன் நெருங்கிப் பழகிய தொடர்பால் திருக்குறளைப் பற்றிய பல கருத்துக்கள் திரு. வ. சு. அவர்கட்குத் தோன்றின. அதன் பயனைத் திருக்குறட் பாக்களில் கருத்து முடிபுள்ள முச்சீர்களையும் நாற்சீர்களையும் தொகுத்துத் திருக்குறள் முச்சீர்மணிகள், திருக்குறள் நாற்சீர்மணிகள் என்ற பெயருடன் கருத்துரை சேர்த்துப் பதிப்பித்தனர். திரு. சு. இராமதாசு அவர்கள் வித்துவான் பட்டம் பெற்று இப்போது மதுரையில் ஓர் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியப் பணியாற்றி வருகின்றனர்.





பின்னர்த் திருக்குறள் பரிமேலழகர் உரையினைப் பல்வகைக் குறிப்புக்களுடனும் சாத்தூர்த் தமிழறிஞர் தூ. சு. கந்தசாமி முதலியார், எம். ஏ. வரைந்துதவிய அரிய ஆராய்ச்சி முன்

னுரையுடனும் அழகிய பதிப்பாகக் கழகம் அச்சிட்டு வெளியிட்டது.

அப்பர் அச்சகம் தோன்றிய பின்னர்ச் சிறிய வடிவில் திருக்குறள் தெளிவுரையொன்று கழகம் வெளியிட விரும்பியது. அத் தெளிவுரை வரையும் பணியை டாக்டர் மு. வரதராசனர் அவர்களிடம் திரு. வ. சு. அவர்கள் ஒப்புவித்தனர். அவர்களும் அப் பணியை இருதிங்களில் செவ்வையாக முடித்துக்கொடுத்தனர். புத்தகத்தின் வலப்பக்கம் ஓர் அதிகாரத்தின் பத்துப் பாக்களும், அதற்கு எதிரே இடப்பக்கம் ஒவ்வொரு பாடலுக்கும் நேராக மும்மூன்று வரிகளில் பொழிப்புரையும் அமையுமாறு தெளிவுரையைத் திரு. வரதராசனர் வகுத்துக் கொடுத்தனர். 1949 இல் அதன் முதற்பதிப்பு வெளிவந்தது. இதுகாறும் ஏறக்குறைய இருநூருயிரம் படிகள் விற்பனையாகியுள்ளன. இத் திருக்குறள் தெளிவுரைப் பதிப்பு, தமிழ்நூல் வெளியீட்டுலகில் பெரும்புரட்சியை உண்டுபண்ணியுள்ளது. இளைஞர்களிடையே திருக்குறளார்வத்தைப் பெருக்கியுள்ளது.

சொல்லின்செல்வர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் தம் இளமைக்காலத்தில் எழுதிய 'திருவள்ளுவர் நூல் நயம்' என்னும் நூலை இரண்டாம் பதிப்பு முதல் நம் கழகமே வெளியிட்டு வருகிறது. திருக்குறள் நீதிக் கதைகளை இரு பகுதிகளாக வெளியிட்டுள்ளது. இன்னும் பள்ளி மாணவர்க்கென அரசியலாரால் தேர்ந்தெடுக்கப்பெற்ற திருக்குறள் 50, 60, 70, 80, 100 ஆகியவற்றை உரையுடன் வெளியிட்டுப் பரப்பியது.

வித்துவான் திருக்குறள்மணி திரு. அ. க. நவநீதகிருட்டிணனர் வரைந்துதவிய 'வள்ளுவர் சொல்லமுதம்' என்னும் திருக்குறள் ஆய்வு நூல்கள் நான்கைக் கழகம் வெளியிட்டுள்ளது. செல்லூர்க்கிழார் திரு. செ. ரெ. இராமசாமி பிள்ளையவர்கள் தொகுத்தளித்த 'திருக்குறள் பொருள் விளக்கம்' என்னும் நூலை வெளியிட்டுள்ளது.

## திருக்குறள் நாட்குறிப்பு

1932 முதல் திருக்குறள் நாட்குறிப்பு ஒன்றனைத் திரு. வ. சு. அவர்கள் கழக வாயிலாக வெளியிடத் தொடங்கினர். அந்நாட் குறிப்பேட்டின் ஒவ்வொரு பக்கத் தலைப்பிலும் திருக்குறள் பாவொன்று கருத்துரையுடன் திகழும். 1330 குறட்பாக்களும் நான்கு ஆண்டு நாட்குறிப்புக்களில் முடிவெய்தும். ஐந்தாவது ஆண்டில் மீண்டும் முதலிலிருந்து தொடங்கப் பெறும். இவ்வாறே 1932 முதல் இதுகாறும் திருக்குறள் நாட்குறிப்பேடு வெளிவந்து கொண்டிருக்கிறது இதனல் நாள்தோறும் நாட்குறிப்பெழுதும் பலர் திருக்குறளைப் பயிலுதற்கு அரிய வாய்ப்பு ஏற்பட்டது. நாடாளும் அமைச்சர்களும் அரசாங்க உயரலுவலர்களும் அறிஞர் பெருமக்களும் ஒருங்கே விரும்பும் உயர்வுடையதாக நம் கழகத் 'திருக்குறள் நாட்குறிப்பு' திகழ்ந்து வருகின்றது.

## மாநாட்டு மாபெரும் பணிகள்

1939 இல் சென்னை—சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் திரு. வி. கலியாணசுந்தரனர் தலைமையில் பத்துப்பாட்டு மாநாடு நடைபெற்றது. அம் மாநாட்டில் ஆண்பாற் புலவர் ஐவரும் பெண்பாற் புலவர் ஐவருமாகப் பதின்மர் பத்துப் பாட்டுக்களையும் பற்றிச் சிறந்த சொற்பொழிவாற்றினர். அச் சொற்பொழிவுகளைக் கேட்கும் வாய்ப்பைப் பெற்ற திரு. வ. சு. அவர்கள் சொற்பொழிவாற்றிய புலவர்களை அணுகி அவர்தம் சொற்பொழிவுகளை எழுதித் தருமாறு பலகால் வேண்டினர். அம் முயற்சி பயன்தராது போகவே கழகச் சார்பில் சங்க இலக்கியங்கட்கெல்லாம் மாநாடு கூட்ட வேண்டுமென்ற உறுதியான எண்ணம், பிள்ளையவர்கள் உள்ளத்தில் பெரிதும் வேரூன்றியது. அங்ஙனமே மாநாட்டிற்கு முன்பே தலைவர் உரை, சொற்பொழிவாளர்களின் உரைகள் அனைத்தையும் எழுதி வாங்கித் தொகுத்து அச்சிட்டு மாநாட்டுப்பேரவையிலே மாநாட்டுச் சொற்பொழிவு நூலை வெளியிடுவது என்று முடிவு செய்தனர்.

இம் முறையில் 1940 இல் கலித்தொகை, குறுந்தொகை, அகநானூறு, ஆகிய மூன்று நூல்கட்கும் மூன்று மாநாடுகளைக் கழகம் நடத்தியது. 1941 இல் கழக முதலமைச்சர் திருவரங்கனர் பெருமுயற்சியால் திருநெல்வேலியில் 'மெய்கண்ட சாத்திர மாநாடு' பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை, சிவத்திரு ஈசான சிவாச்சாரியார் இவர்களின் தலைமையில் ஏழு நாட்கள் பேராரவாரத்துடன் நடைபெற்றது. 1942 இல் நற்றிணை மாநாடும், 1944 இல் புறநானூறு மாநாடும் நடைபெற்றன. 1952 இல் பத்துப்பாட்டு மாநாடும், 1955 இல் பரிபாடல் மாநாடும், ஐங்குறுநூறு மாநாடும், 1956 இல் பதிற்றுப்பத்து மாநாடும், பதினெண் கீழ்க்கணக்கு மாநாடும் நடைபெற்றன. 1958 இல் முதலாவது சிற்றிலக்கிய மாநாடும், 1959 இல் இரண்டாவது சிற்றிலக்கிய மாநாடும், 1960 இல் மூன்ருவது சிற்றிலக்கிய மாநாடும் நடைபெற்றன. மேலும் பல சிற்றிலக்கிய மாநாடுகளை நடத்த வழி வகுத்துக் கொண்டிருக்கிறது.

இவையன்றித் தமிழக வரலாறு, அரசியல் அறிவு ஆகியவற்றிற்கும் இரு மாநாடுகளைக் கழகம் நடத்தியது. இம்முறையால் பதினைந்து சொற்பொழிவு நூல்களைக் கழகம் வெளியிட்டுள்ளது. மெய்கண்ட சாத்திர மாநாட்டுச் சொற்பொழிவுகள் மட்டும் இது காணும் நூலாக வெளிவரவில்லை.

# கழக மாநாட்டுத் தலைவர்கள்



கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல்.,



பண்டிதமணி மு. கதிரேசன்செட்டியார்



# கழக மாநாட்டுத் தலைவர்கள்


நாவலர்
. மு. வேங்கடசாமி நாட்டார்


தெ. பொ. மீனாட்சிசுந்தரனர்
எம். ஏ., பி. எல்., எம். ஓ. எல்.


கரந்தைக் கவியரசு
ரா. வேங்கடாசலம் பிள்ளை


டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை
பி. ஏ., பி. எல்.


டாக்டர். மு. வரதராசன்,
ம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்.டி.


டாக்டர். அ. சிதம்பரநாதன்,
எம். ஏ., பி. எச். டி.


சித்தாந்த கலாநிதி
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை


வித்துவான்
கு. அருணசலக் கவுண்டர்


கா. அப்பாத்துரை,


பண்டிதமணி லெ. ப. கரு.


அ. மு. பரமசிவானந்தம்,


பேராசிரியர்

# கழகம் நடத்திய மாநாடுகள்

## இலக்கிய மாநாடுகள்

### கலித்தொகை மாநாடு

தலைவர் : நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார்

| நாள் | இடம் | விரிவுரைப்பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 9-3-1940 | சென்னை | கலித்தொகை மாண்பு | ந. மு. வேங்கடசாமி நாட்டார் |
| | | முல்லைக்கலி | வித்துவான் E. K. நடேச சர்மா |
| | | குறிஞ்சிக்கலி | வித்துவான் மா. இராசமாணிக்கம் பிள்ளை |
| | | பாலைக்கலி | K. ஞானம்பாள், M.A. |
| | | மருதக்கலி | வித்துவான் மு. வரதராசனார் |
| | | நெய்தற்கலி | இளவழகனார் |

### குறுந்தொகை மாநாடு

தலைவர் : பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்

| நாள் | இடம் | விரிவுரைப்பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 3-11-1940 | சென்னை | தலைமையுரை | |
| | | நெய்தல் | வித்துவான் இராச சிவ. சாம்பசிவ சர்மா |
| | | முல்லை | ,, ஔவை. சு. துரைசாமி பிள்ளை |
| | | பாலை | ,, ம. இராசமாணிக்கம் பிள்ளை |
| | | மருதம் | பண்டித லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் |
| | | குறிஞ்சி | வித்துவான் பா. சொக்கலிங்கம் |

### அகநானூற்று மாநாடு

தலைவர் : கரந்தைக் கவியரசு இரா வேங்கடாசலம் பிள்ளை

| நாள் | இடம் | விரிவுரைப்பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 15-12-1940 | சென்னை | தலைமையுரை | |
| | | நெய்தல் | பண்டித கா. பொ. இரத்தினம் |
| | | முல்லை | வித்துவான் ச. ஆறுமுக முதலியார், M.A., B.O.L., L.T. |
| | | மருதம் | பூ. ஆலால சுந்தரம் செட்டியார், M.A. |
| | | பாலை | வித்துவான் முருக, இலக்குவர் |
| | | குறிஞ்சி | ,, இ. சிவகுருநாதன் |

### நற்றிணை மாநாடு

தலைவர் : தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்

| நாள் | இடம் | விரிவுரைப்பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 22-2-1942 | சென்னை | தலைமையுரை | |
| | | பாலை | வித்துவான் கா. கோவிந்தன் |
| | | மருதம் | ,, அ. கு. ஆதித்தர் |
| | | நெய்தல் | ,, ஆ. பூவராகம் பிள்ளை |
| | | குறிஞ்சி | ,, வி. அ. அரங்கசாமி |
| | | முல்லை | ,, கோ. பாலசுந்தர நாயகர் |

**புறநானூற்று மாநாடு** — *தலைவர்:* ரா. பி. சேதுப்பிள்ளை

| நாள் | இடம் | விரிவுரைப்பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 19-2-1944 | சென்னை | தலைமையுரை | |
| 20-2-1944 | | புறநானூறும் புலவரும் | வித்துவான் G. சுப்பிரமணிய பிள்ளை, M.A., B.L. |
| | | புறநானூறும் கல்வெட்டுக்களும் | T. V. சதாசிவ பண்டாரத்தார் |
| | | புறநானூறு—வரலாற்றுச்சிறப்பு | வித்துவான் மா. இராசமாணிக்கம் பிள்ளை |
| | | புறநானூறும் மன்னரும் | ,, மு. இராசாக்கண்ணனார் |
| | | புறநானூறும் கலைகளும் | டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், M.A. |
| | | புறநானூறும் போர்முறையும் | வித்துவான் அ. கிருட்டிணமூர்த்தி |
| | | புறநானூறு காட்டும் தமிழ் நாகரிகம் | ,, ஒளவை சு. துரைசாமி பிள்ளை |
| | | புறநானூறும் வான நூலும் | இ. மு. சுப்பிரமணிய பிள்ளை |
| | | புறநானூறும் சமயமும் | இளவழகனார் |
| | | புறநானூறும் இலக்கியமும் | பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், M.A. |
| | | புறநானூறும் மொழியும் | புலவர் ஞா. தேவநேயனார், B.O.L. |

**பத்துப்பாட்டு மாநாடு** — *தலைவர்:* டாக்டர் மு. வரதராசனார்

| நாள் | இடம் | விரிவுரைப்பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 9-2-1952 | திருநெல்வேலி | தலைமையுரை | |
| 10-2-1952 | | திருமுருகாற்றுப்படை | வித்துவான் ஒளவை சு. துரைசாமி பிள்ளை |
| | | பொருநராற்றுப்படை | வித்துவான் வி. சிவக்கொழுந்து |
| | | சிறுபாணாற்றுப்படை | ,, கா. மாயாண்டி பாரதி |
| | | பெரும்பாணாற்றுப்படை | ,, மு. ரா. கந்தசாமிக் கவிராயர் |
| | | முல்லைப்பாட்டு | சா. குருஸ் அந்தோணி, M.A. |
| | | மதுரைக்காஞ்சி | ஆ. செபரத்தினம், M.A. |
| | | நெடுநல்வாடை | வித்துவான் அ. க. நவநீதகிருட்டிணன் |
| | | குறிஞ்சிப்பாட்டு | ,, க. வெள்ளைவாரணன் |
| | | பட்டினப்பாலை | ஆ. அருளப்பன், B.A. |
| | | மலைபடுகடாம் | வித்துவான் ந. சேதுரகுநாதன் |

**பரிபாடல் மாநாடு** — *தலைவர்:* கு. அருணாசலக் கவுண்டர்

| நாள் | இடம் | விரிவுரைப்பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 27-2-1955 | திருநெல்வேலி | தலைமையுரை | |
| | | திருமால் | வித்துவான் ந. சேதுரகுநாதன் |
| | | செவ்வேள் | ச. கணபதி முதலியார், M.A. |
| | | வையை | வித்துவான் அ. க. நவநீதகிருட்டிணன் |
| | | மதுரை | கு. பரமசிவன், M.A. |

**ஐங்குறுநூற்று மாநாடு** தலைவர் : **பண்டித ஆ. கார்மேகக் கோனுர்**

| நாள் | இடம் | விரிவுரைப்பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 21-8-1955 | மதுரை | தலைமையுரை | |
| | | மருதம் | பண்டித வித்துவான் தி. சங்குப்புலவர் |
| | | நெய்தல் | வித்துவான் மு. அருணுசலம் பிள்ளை |
| | | குறிஞ்சி | சுப. இராமநாதன், M.A, |
| | | பாலை | அ. கி. பரந்தாமனுர், M.A. |
| | | முல்லை | வித்துவான் வீ. குமாரசாமி ஐயர் |

**பதிற்றுப்பத்து மாநாடு** தலைவர் : **டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார்**

| நாள் | இடம் | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 11-12-1955 | சென்னை | தலைமையுரை | |
| | | இரண்டாம் பத்து | அ. மு. பரமசிவானந்தம், M.A., M. Litt. |
| | | மூன்ரும் பத்து | ந. சஞ்சீவி, M.A., |
| | | நான்காம் பத்து | வித்துவான் தணிகை உலகநாதன் |
| | | ஐந்தாம்பத்து | அ. ச. ஞானசம்பந்தன், M.A. |
| | | ஆரும் பத்து | க. பெருமாள், M.A., |
| | | ஏழாம் பத்து | புலவர் முருகவேள், B O.L. |
| | | எட்டாம் பத்து | கு. பரமசிவன், M.A., |
| | | ஒன்பதாம் பத்து | மேரி மாசிலாமணி அம்மையார், M.A. |

**பதினெண்கீழ்க்கணக்கு மாநாடு** தலைவர் : **ஔவை சு. துரைசாமி பிள்ளை**

| நாள் | இடம் | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 12-2-1956 | திருநெல்வேலி | தலைமையுரை | |
| | | ஒருமறை திருக்குறள் | |
| | | க. அறம் | வித்துவான் ந. சேதுரகுநாதன் |
| | | உ. பொருள் | ஆ. செபரத்தினம், M.A., |
| | | ௩. இன்பம் | ஆ. அருளப்பன், M.A., |
| | | இருநானூறு | |
| | | க. நாலடியார் | கு. பரமசிவன், M.A., |
| | | உ. பழமொழி | ச. கணபதி முதலியார், M.A., L.T. |
| | | மும்மருந்து | |
| | | கடுகம், ஏலம் ஏலாதி | இ. மு. சுப்பிரமணிய பிள்ளை |
| | | நாஞற்பது | |
| | | இன்ஞ, இனிய, களவழி, கார் | தி. அ. சொக்கலிங்கம், M.A. |
| | | ஐயைந்திணை | |
| | | க. எழுபதும், ஈரைம்பதும் | வித்துவான் அ. க. நவநீதகிருட்டிணன் |
| | | உ. நூற்றைம்பது, கைந்நிலை, இன்னிலை | நெ. சுப்பையா பிள்ளை, M.A. |
| | | மணிமொழிக்கோவை | |
| | | நான்மணி, ஆசாரம், முதுமொழி | தி. வ. காந்திமதிநாதன், B.A. (Hons) |

## முதலாவது சிற்றிலக்கிய மாநாடு — தலைவர்: லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்

| நாள் | இடம் | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 19-1-1958 | சென்னை | தலைமையுரை | |
| | | க. உலாப்பகுதி | |
| | | 1. திருக்கைலாய ஞானவுலா, திருவாரூர் உலா | புலவர் முருகவேள், M.O.L., |
| | | 2. திருப்பூவண நாதருலா, மதுரைச் சொக்கநாதருலா | வித்துவான் செ. வேங்கடராமச்செட்டியார் |
| | | 3. திருவானைக்காவுலா, ஏகம்பரநாதர் உலா | வித்துவான் இராச. சாம்பசிவ சர்மா |
| | | 4. திருக்காளத்திநாதருலா, திருக்கழுக்குன்றத்துலா | வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார், B.O.L., |
| | | உ. கலம்பகப் பகுதி | |
| | | 1. மதுரைக்கலம்பகம், அழகர் கலம்பகம் | வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை |
| | | 2. திருவருணைக் கலம்பகம், திருவெங்கைக் கலம்பகம் | வித்துவான் ஆ. சிவலிங்கனார் |
| | | 3. கச்சிக்கலம்பகம், திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம் | வித்துவான் வே. சிவசுப்பிரமணியன் |
| | | ௩. தூதுப் பகுதி | |
| | | 1. தமிழ்விடு தூது, வண்டுவிடு தூது | வித்துவான் சொ. சிங்காரவேலனார் |

## இரண்டாவது சிற்றிலக்கிய மாநாடு — தலைவர்: அ. மு. பரமசிவானந்தம் M.A., M. Litt.

| நாள் | இடம் | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 19-4-1959 | திருநெல்வேலி | தலைமையுரை | |
| | | செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் | பண்டித மீ. கந்தசாமிப் புலவர் |
| | | அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், திருவானைக்கா அகிலாண்ட நாயகி பிள்ளைத் தமிழ் | மகா வித்துவான் ச. தண்டபாணி தேசிகர் |
| | | மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், திருநெல்வேலிக் காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ் | வித்துவான் அ. இராசகோட்டியப்பன் |
| | | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் | பண்டித வித்துவான் கு. சுந்தரமூர்த்தி |
| | | திருவிடைக்கழி முருகன் பிள்ளைத் தமிழ், சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ் | வித்துவான் சொ. சிங்காரவேலனார் |
| | | திருமலைமுருகன் பிள்ளைத் தமிழ், சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ் | கு. பரமசிவன், M.A. |
| | | சம்பந்தர், அப்பர் பிள்ளைத் தமிழ் | பாலகவி வே. இராமநாதன் செட்டியார் |
| | | சுந்தரமூர்த்தி, மாணிக்க வாசகர் பிள்ளைத்தமிழ் | வித்துவான் வே. மாணிக்கவாசகம் பிள்ளை |
| | | சேக்கிழார் பிள்ளைத்தமிழ் | பண்டித மீ. கந்தசாமிப்புவர் |

# கழக மாநாட்டுச் சொற்பொழிவாளர்





வித்துவான்
இ. கே. நடேசசர்மா



டாக்டர்
மா. இராசமாணிக்கனர்



கழகப் புலவர்
இளவழகனர்



கே. ஞானம்பாள்,
எம். ஏ.



வித்துவான்
இரா. சாம்பசிவசர்மா



ம. இராசமாணிக்கனர்,
எம். ஏ.



பண்டித
கா. பொ. இரத்தினம், எம். ஏ.



ச. ஆறுமுக முதலியார்,
எம்.ஏ., எம். ஓ. எல்., எல்.



பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார்,
எம். ஏ.



வித்துவான்
முருக இலக்குவனர்



வித்துவான்
கா. கோவிந்தன், எம். ஏ.



வித்துவான்
அ. கு. ஆதித்தர்

# கழக மாநாட்டுச் சொற்பொழிவாளர்



வித்துவான்
ஆ. பூவராகம் பிள்ளை



கோ. சுப்பிரமணிய பிள்ளை
எம்.ஏ., பி.எல்.



வித்துவான்
டி. வி. சதாசிவ பண்டாரத்தார்



மு இராசாக்கண்ணனார்,
எம். ஏ.



டாக்டர்
மு. சுப்பிரமணிய பிள்ளை



பண்டித புலவர்
தேவநேயனார்



வித்துவான்
வி. சிவக்கொழுந்து



வித்துவான்
க. மாயாண்டிபாரதி



வித்துவான்
கந்தசாமிக் கவிராயர்



சா. குரூஸ் அந்தோணி
எம். ஏ.



ஆ. செபரத்தினம்,
எம். ஏ.



வித்துவான்
அ. க. நவநீதகிருட்டிணன்

# கழக மாநாட்டுச் சொற்பொழிவாளர்



வித்துவான்
க. வெள்ளைவாரணன்



ஆ. அருளப்பன்,
பி.ஏ.



வித்துவான்
ந. சேதுரகுநாதன்



ச. கணபதி முதலியார்
எம். ஏ., எல். டி.



கு. பரமசிவம்,
எம்.ஏ,



பண்டித வித்துவான்
தி. சங்குப் புலவர்



வித்துவான்
மு. அருணசலம் பிள்ளை



சுப. இராமநாதன்,
எம்.ஏ.



அ. கி. பரந்தாமனர்,
எம்.ஏ.



வித்துவான்
வி. குமாரசாமி ஐயர்



ந. சஞ்சீவி,
எம்.ஏ.



வித்துவான்
தணிகை உலகநாதன்

# கழக மாநாட்டுச் சொற்பொழிவாளர்


அ. ச. ஞானசம்பந்தம், எம். ஏ.


க. பெருமாள், எம். ஏ.


புலவர் முருகவேள், எம். ஓ. எல்.


மேரி மாசிலாமணி அம்மையா எம். ஏ.


வித்துவான் வேங்கடராமச் செட்டியார்


வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார்


தி. அ. சொக்கலிங்கம், எம். ஏ.


நெ. சுப்பையா பிள்ளை, எம். ஏ.


தி. வ. காந்திமதிநாதன், எம். ஏ.


வித்துவான் மே. வீ. வேணுகோபால் பிள்ளை


வித்துவான் ஆ. சிவலிங்கனர்


வித்துவான் வே. சிவசுப்பிரமணியன்

# கழக மாநாட்டுச் சொற்பொழிவாளர்



ரெ. சேஷாசலம்,
எம். ஏ.



வே. தியாகராச ஐயர்,
எம்.ஏ., எல்.டி.



சிவ. இராமசந்திரன்,
எம். ஏ.



ஞா. துரைசாமிப் பிள்ளை
எம்.ஏ., எல்.டி.



வ. பொன்னுசாமிப் பிள்ளை,
எம். ஏ.



எம். வி. சுப்பிரமணிய ஐயர்,
எம்.ஏ., எல். டி.



பண்டித வித்துவான்
தா. மாசிலாமணி நாடார்



பண்டித
மி. கந்தசாமிப் புலவர்



வித்துவான்



வித்துவான்



வித்துவான்



பாரிப்பாக்கம்

# கழக மாநாட்டுச் சொற்பொழிவாளர்



வித்துவான்
சா. சிங்காரவேலன்



வித்துவான்
ச. தண்டபாணிதேசிகர்



வித்துவான்
அ. இராசகோட்டியப்பன்



பண்டித வித்துவான்
கு. சுந்தரமூர்த்தி



பாலகவி
இராமநாதன் செட்டியார்



வித்துவான்
வே. மாணிக்கவாசகம் பிள்ளை



வித்துவான்
க. சிதம்பரதாணு



இரா. சுந்தராம்பாள்,
எம். ஏ.



விந்துவான்



பண்டித வித்துவான்



ஷாயிஜான் அம்மையார்.



பண்டித

**மூன்ருவது சிற்றிலக்கிய மாநாடு** தலைவர் : சி. இலக்குவனுர், M.A., M.O.L.,

| நாள் | இடம் | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 13-3-1960 | திருநெல்வேலி | தலைமையுரை | |
| | | பரணி நூல்கள்: | |
| | | க. பாசவதைப் பரணி | வித்துவான் க. சிதம்பர தாணு |
| | | உ. தக்கயாகப் பரணி | ,, ந. சேதுரகுநாதன் |
| | | ௩. கலிங்கத்துப் பரணி | இரா. சுந்தராம்பாள், M.A. |
| | | பள்ளு நூல்கள் : | |
| | | க. முக்கூடற் பள்ளு | நெ. சுப்பையா பிள்ளை, M.A. |
| | | உ. திருமலை முருகன் பள்ளு | வித்துவான் வி. குஞ்சிதபாதமையர் |
| | | ௩. குருகூர்ப்பள்ளு | பண்டித வித்துவான் தி. இராமாநுசு ஐயங்கார் |
| | | குறிஞ்சி நூல்கள் | |
| | | திருக்குற்ருலக் குறவஞ்சி | வித்துவான் அ. இராசகோட்டியப்பன் |
| | | கும்பேசர் குறவஞ்சி | கு. பரமசிவன், M.A., |
| | | சரபேந்திரக் குறவஞ்சி | லூயி. ஜான் அம்மையார், M.A. |
| | | மதுரை மீனட்சியம்மை குறம் | பண்டித ச. சாம்பசிவன் |

## அரசியல் மாநாடு

**அரசியலறிவு மாநாடு** தலைவர்: தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை M.A., B.L., M.O.L.

| நாள் | இடம் | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 13-2-1953 | திருநெல்வேலி | தலைமையுரை | |
| | | பிளேட்டோ | ரெ. சேஷாசலம், M.A., |
| | | வள்ளுவர் | கு. அருணசலக் கவுண்டர் |
| | | ரூஸோ | வே. தியாகராச ஐயர், M.A., L.T. |
| | | பர்க் | பொன்னுசாமி பிள்ளை, M.A , |
| | | மார்க்ஸ் | எம். வி. சுப்பிரமணிய ஐயர், M.A., L.T. |

## வரலாற்று மாநாடு

**தமிழக வரலாற்று மாநாடு** தலைவர் : கா. அப்பாத்துரை பிள்ளை M.A., L.T.,

| நாள் | இடம் | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 24-1-1954 | திருநெல்வேலி | தலைமையுரை | |
| | | சங்க காலம் | பண்டித வித்துவான் தா. மாசிலாமணி நாடார் |
| | | பல்லவர் காலம் | வ. பொன்னுசாமி பிள்ளை, M.A. |
| | | சோழர் காலம் | ரெ. சேஷாசலம், M.A., |
| | | பாண்டியர் காலம் | ஞா. துரைசாமி பிள்ளை, M.A., L.T. |
| | | நாயக்கர் காலம் | ஆ. செபரத்தினம், M.A. |
| | | ஆங்கிலேயர் காலம் | சிவ. இராமச்சந்திரன், M.A. |

# சமய மாநாடு

## மெய்கண்ட சாத்திர மாநாடு

நாள்: 21-5-1941 முதல் 25-5-1941 வரை  இடம்: திருநெல்வேலி

*21-5-41*  தலைவர்: ஈசான சிவாச்சாரியர்

| பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|
| திருவுந்தியார் | க. வச்சிரவேலு முதலியார் |
| திருக்களிற்றுப்படியார் | S. அருணைவடிவேலு முதலியார் |
| சிவஞானபோதம் | பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியார்<br>A. முத்தையா பிள்ளை |

*22-5-41*  தலைவர்: திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., எம். எல்.

| | |
|---|---|
| சிவஞானசித்தியார் பரபக்கம் | காசிவாசி ஈசான சிவாச்சாரியர் |
| சிவஞானசித்தியார் சுபக்கம் | ந. சிவகுருநாத பிள்ளை<br>வே. மாணிக்கவாசகம் பிள்ளை |
| இருபாஇருபஃது | ஔவை சு. துரைசாமிப் பிள்ளை<br>துடிசைக்கிழார் அ. சிதம்பரனார் |

*23-5-41*  தலைவர்: ஈசான சிவாச்சாரியர்

| | |
|---|---|
| உண்மை விளக்கம் | அ. வரதநஞ்சைய பிள்ளை |
| சிவப்பிரகாசம் | S. தண்டபாணி தேசிகர் |

*24-5-41*  தலைவர்: திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை

| | |
|---|---|
| திருவருட்பயன் | ஔவை சு. துரைசாமிப் பிள்ளை |
| வினாவெண்பா | ரா. சண்முகசுந்தரம் செட்டியார்<br>குலசை குமாரவேலுப் பிள்ளை<br>பாலகவி வே. இராமநாதன் செட்டியார் |
| போற்றிப்பஃறொடை | கு. சோமசுந்தர தேசிகர் |
| உண்மைநெறிவிளக்கம் | கீ. இராமலிங்க முதலியார் |

*25-5-41*  தலைவர்: ஈசான சிவாச்சாரியர்

| | |
|---|---|
| கொடிக்கவி | ஆ. ஈசுர மூர்த்தியா பிள்ளை |
| நெஞ்சுவிடுதூது | அ. மு. பரமசிவானந்தம் |
| சங்கற்ப நிராகரணம் | கா. சுப்பிரமணிய பிள்ளை |

இச்சமய மாநாட்டை யொட்டி 24-5-41 அன்று சாத்தூர் T. S. கந்தசாமி முதலியார் அவர்கள் தலைமையில் 'தமிழ்ப்புலவர் மாநாடு' ஒன்றும் நடைபெற்றது. 'எழுத்துப் புரட்சி' என்ற தலைப்பில் ஆராய்ச்சிச் சொற்போரும் நடைபெற்றது.

26-5-41 அன்று மாலை 'சைவ மாதர் மாநாடு' தனித்தமிழ்த் திருவாட்டி திருவரங்க நீலாம்பிகையம்மையார் தலைமையில் நடைபெற்றது.

மாநாட்டில் நாள்தோறும் மாலையில் இசைப்பெரும் புலவர்களால் இசையரங்குகளும் நடத்தப்பெற்றன.

### சங்க இலக்கிய உரைப்பணி

1941 இல் திரு. சச்சிதானந்தம் பிள்ளையவர்களின் தூண்டுதலால் வித்துவான் ஔவை. சு. துரைசாமி பிள்ளையவர்கள் தொடர்பைக் கழகம் பெற்றது. அவர்கள் பழந்தமிழ் நூல்களில் மிகுந்த பயிற்சியும் நிறைந்த ஆய்வும் உடையார்; எழுத்து வன்மையும் சொல்வன்மையும் ஒருங்கே பழுத்து முதிர்ந்த பைந்தமிழ்ப் பேரறிஞர். அவரது திறமையினை உணர்ந்த திரு. வ. சு. அவர்கள், அன்னவரைக் கொண்டு சங்க இலக்கியங்கட்குச் சிறந்த உரை வரையுமாறு செய்து வெளியிட விரும்பினர். அவ்விருப்பிற்கிசைந்த ஔவை. துரைசாமி பிள்ளையவர்கள், சிலப்பதிகாரச் சுருக்கம், சிந்தாமணிச் சுருக்கம், மணிமேகலைச் சுருக்கம், சூளாமணிச் சுருக்கம், பெருங்கதைச் சுருக்கம் ஆகிய நூல்களை விளக்கக் குறிப்புரையுடன் எழுதிக் கொடுத்தனர். பின்னர், புறநானூற்றுக்குப் புதியதோர் அரிய தெளிவுரை வரைந்து உதவினர். அதன்பின் பதிற்றுப்பத்து உரை வரைந்து வழங்கினர். பெருங்கதைச் சுருக்கத்தைத் தவிர ஏனையவற்றைக் கழகம் வெளியிட்டுப் பழந்தமிழ் இலக்கியப் பணியாற்றியது.

1952 இல் பெருமழைப் புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள் கழகத் தொடர்பு கொண்டனர். அவர்களைக் கொண்டு குறுந்தொகை, பத்துப்பாட்டு, பரிபாடல், பெருங்கதை இலாவாண காண்டம் ஆகிய நூல்களுக்குப் புத்துரை வரையுமாறு செய்து கழகம் வெளியிட்டுள்ளது. பெருங்கதையிலுள்ள ஏனைய காண்டங்களும், ஐங்குறுநூறும் இவர்கள் உரை விளக்கங்களுடன் அச்சிடப் பெறுகின்றன. இவையன்றிப் புறப்பொருள் வெண்பா மாலை உரை விளக்கம், பெருங்கதை உரைநடை, செங்கோல் (நாடகம்), பண்டித மணிவரலாறு, மானனீகை (நாடகம்) முதலிய நூல்களையும் எழுதச் செய்து கழகம் வெளியிட்டுள்ளது. இன்னும் சில பழைய நூல்கட்கு உரை வரைந்து கொண்டிருக்கின்றனர்.



சங்கமருவிய தனிப்பெருந் தமிழ்நூல்களிற் சிறந்த நூல்களை முதன் முதல் அரும்பாடுபட்டு ஏட்டுச்சுவடியினின்றும் பெயர்த்து அச்சிட்டு வெளியிட்ட தமிழ்ப் பெருமகனார் புதுக்கோட்டை உயர் நீதிமன்ற நடுவர் யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்களாவர். அவர்கள் வெளியிட்டுள்ள நூல்கள் வருமாறு:

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம், சொல்லதிகாரம் நச்சினார்க்கினியமும், சேனாவரையமும், பொருளதிகாரம் முழுவதும் உரையுடன், சூளாமணி, சூளாமணி உரைநடை நூல், கலித்தொகை நச்சினார்க்கினியம், இலக்கண விளக்கம் முதலியன. இந்நூல்களில் வரும் பதிப்புரை முன்னுரைகளால் அவர்களின் தனிப்பெருந் தமிழ்த் தொண்டு புலனாம். அம் மட்டுமன்று அவர்கட்கு எவ்வகை வெளியுதவியும் இல்லாமல், அச்சிட்ட நூல்களும் நன்கு விலைப் போகாமல் அவர்களுற்ற இன்னல்களுக்கு அளவில்லை என்பதும் அவ்வுரைகளால் புலனாம். அவ்வுரைகள் தனிப்பெரு நூலாகப் படித்துணர்ந்து இன்புறற்கியைந்தனவாகும்.

இதுபோல் டாக்டர். உ. வே. சாமிநாத ஐயரவர்கள் புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், குறுந்தொகை, ஐங்குறுநூறு, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, முதலிய சங்க நூல்களும் சீவக சிந்தாமணி முதலிய பிற்காலச் சிறந்த நூல்களும் அவ்வவற்றிற்கு நச்சினார்க்கினியர் முதலியோர் வரைந்த பழைய உரைகளும்,



அரிய பெரிய விளக்கக் குறிப்புக்களும், ஒப்புமைப் பகுதிகளும், இலக்கணக் குறிப்புகளை நுண்ணிதின் விளக்கும் எடுத்துக்காட்டுக்களும், அரிய ஆராய்ச்சி முன்னுரைகளும் பிறவும் சேர்த்து அழகிய முறையில் வெளியிட்டுத் தமிழ்ப்பெருந் தந்தையெனப் புகழ் பெற்றுள்ளார்கள். குறுந்தொகைக்குச் சிறந்ததொரு விளக்கவுரையும் வரைந்து வெளியிட்டுள்ளார்கள்.

இவ்விரு பெருஞ் சான்றோரின் அரிய வெளியீட்டுமுறையினையே பின்பற்றிக் கழகத்தார் சங்க நூல்களுக்கு உரை விளக்கங்களும், உரையில்லனவற்றிற்குப் புத்துரைகளும், விளக்கங்களும், எழுதுவித்தும், உரைநடை நூல்கள் ஆக்குவித்தும், சுருக்கப் பதிப்பு நூல்கள் எழுதுவித்தும் பல துறை நூல்களுடன் அழகிய முறையில் வெளியிட்டு வருகின்றனர், கழகத்தாரின் அன்பும் நன்றியும் அவ்விருவர்க்கும் என்றும் உரியவாகுக.

### மறைமலையடிகள் நூல் நிலையம்

1950 செப்டம்பர்த் திங்கள் தொடக்கத்தில் மறைமலையடிகளார் கடுமையான நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாய்த் துன்புறும் செய்தியறிந்து கழக ஆட்சியாளர் திரு. வ. சு. அவர்கள் அடிகளாரைப் பார்த்துவரப் பல்லாவரம் சென்றனர். அப்போது அடிகளார் தம் வாழ்வுக்குப் பின் தம்முடைய நூல் நிலையத்தைத் தமது பெயரால் பொது மக்கட்குப் பயன்படும் வகையில் கழகவழி நடத்த விரும்பினால் தாம் அதனைக் கழகத்துக்குக் கொடுத்து விடுவதாகவும், தம் நூல்களையெல்லாம் கழகவழி வார முறையில் அச்சிட்டு அதனால் வரும் ஊதியத்தைத் தம் குடும்பத்தினருக்குக் கொடுக்கவேண்டுமென்றும் அறிவித்தனர். அவர்கள் விருப்பின் வண்ணமே 9-9-1950 இல் (விருப்ப ஆவணம்) இறுதிமுறி (Will) எழுதப் பெற்றது. 15-9-50 இல் அடிகளார் இறைவன் திருவடி நீழல் எய்தினர்.

திரு. வ. சு. அவர்கள், அடிகளாரை நோய்ப்படுக்கையில் சென்று கண்டதுமுதல் அவர்கள் மருத்துவச் செலவினையும், மறைவுக்குப்பின் இறப்புச் சடங்கின் செலவினையும் கழகப் பொறுப்பில் செய்தனர். அடிகளார் இறுதி முறியில் குறித்த வண்ணம் அவர்களின் விருப்பங்களைச் செயற்படுத்தற்கு ஆணைதருமாறு வேண்டி விருப்ப ஆவணச் செயற் குழுவினர் சென்னை உயர்நீதி மன்றத்தில் விண்ணப்பம் செய்தனர்.

அடிகளார் மக்களில் நால்வர் மட்டும் அடிகளார் நல்ல நினைவுடன் இருக்குங்கால் இறுதிமுறி எழுதவில்லையென்றும், செயற் குழுவினருக்கு ஆதரவாக ஆணைதரலாகா தென்றும் எதிர்வழக் காடினர்.

1953 சூலைத் திங்கள் இறுதியில் உயர்நீதி மன்ற நடுவர் இவ்வழக்கினை விசாரித்து விருப்ப ஆவணச் செயற்குழுவினருக்கு ஆதரவாகத் தீர்ப்புக்கூறி, இறுதி முறியினை உறுதிப்படுத்தினர். பின்பு அடிகளாரின் மக்கள் அத்தீர்ப்பினை எதிர்த்து மேலும் வழக்குப் பதிவு செய்தனர். அந்த வழக்கு 1957 ஏப்பிரல் திங்களில் கேள்வி (விசாரணை) க்கு வந்தது. 30-4-1957 இல் முன் செய்யப்பட்ட தீர்ப்பே நேர்மையானதென்று மீண்டும் தீர்ப்பளிக்கப்பட்டது.

நீதிமன்றத்தின் முடிவு தெரிதற்குமுன்பே மறைமலையடிகளார் நூல் நிலையத்தை நிறுவுதற்காகவும் அவர்கள் பெயரால் தமிழ்க் கல்லூரியொன்றை அமைத்தற்காகவும் சென்னை இலிங்கிச் செட்டித்தெரு 105 எண் கட்டிடம் கழகத்தால் 25-4-57 இல் விலைக்கு வாங்கப் பெற்றது. இக் கட்டிடத்தில் திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகள் தம் வாழ்நாளில் தங்கியிருந்து பல சன்மார்க்கச் சொற்பொழிவுகள் நடத்தினர் என்பர். இராமலிங்க அடிகளாரின் கொள்கைகளைப் பரப்பும் நோக்குடன் ஐம்பது ஆண்டுகட்குமுன்பே மறைமலையடிகளார் பொதுநிலைக் கழகம் (சமரச சன்மார்க்கசங்கம்) ஒன்றை நிறுவினர். அத்தகைய அடிகளாரின் நூல்நிலையத்திற்கு இக் கட்டிடம் வாய்த்தது அம்பலவாணர் திருவருட்குறிப்பே யாகும். அடிகளார் இறுதிமுறியில் குறித்தவாறே அவர்களின் நூல்களையெல்லாம் கழகம் வெளியிட்டு வருகின்றது.

### மறைமலையடிகள் நூல்நிலையத் திறப்புவிழா

மறைமலையடிகள் நூல்நிலையத்தை அமைப்பதற்குச் சென்னை இலிங்கிச் செட்டித் தெரு 105 எண் கட்டிடம் ரூ. 57000 க்கு விலைக்கு வாங்கப்பெற்றது. ரூ. 20000 மேலும் செலவு செய்து, அக் கட்டிடம் நூல்நிலையத்திற்கு ஏற்றவாறு சீர்திருத்திப் புதுப்பிக்கப்பட்டது. இங்கு அடிகளாரால் தொகுக்கப்பெற்ற தமிழ், வடமொழி, ஆங்கில நூல்கள் 4000 க்கு மேற்பட்டவையும், கழகம் தொகுத்து வைத்த 8000 க்கு மேற்பட்ட நூல்களும் இடம் பெற்றுள்ளன. மொழி, வரலாறு, தத்துவம் ஆகிய மூன்று துறைகளிலும் ஆராய்ச்சிசெய்ய விரும்புவோர்க்கு வேண்டிய அரிய நூல்கள் பல இங்குள்ளன. ஆராய்ச்சி செய்ய வருவோர்க்கு வேண்டிய வசதிகளும் இதில் அமைக்கப்பெற்றுள்ளன. நூலகத்துறையில் உலகப் புகழ் பெற்ற பேரறிஞர் டாக்டர், பத்மஸ்ரீ எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள் அன்புடன் வழங்கிய நுண்ணிய ஆய்வுரைகளின்படி நூல்நிலையம் மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பெற்றுள்ளது. திரு. இரா. முத்துக்குமாரசாமி, M.A., D.L.SC. அவர்கள் நூலகராக நியமிக்கப் பெற்றுள்ளார்.

இந் நூல்நிலையம் விளம்பி ஆண்டு ஆவணித் திங்கள் 8 ஆம் நாள் (24-8-1958) சென்னை மாநில ஆளுநர் மாண்பமை விட்ணுராம் மேதி அவர்கள் தலைமையில் சென்னை மாநில அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்களால் திறந்து வைக்கப்பெற்றது. இத் திறப்பு விழாவில் நூல்நிலையப் பேராசிரியர் டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள் 'நூலகப்பணி' என்னும் பொருள்பற்றி அரியதொரு பேருரையாற்றினர். அன்று மாலை நிகழ்ச்சியில் சைவப்பாதிரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T. அவர்கள் தலைமை தாங்கினர். மறைமலையடிகள், பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை, சோமசுந்தர நாயகர், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, திருவரங்கனார் ஆகியோருடைய உருவப் படங்களை முறையே திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, திரு. மொ. அ. துரை அரங்கனார், திரு. இளவழகனார், திரு. கு. கோதண்டபாணிப் பிள்ளை, திரு. கா. அப்பாத்துரைப் பிள்ளை ஆகியோர் திறந்து வைத்துச் சிறந்த உரைகளை வழங்கினர். திரு. டி. செங்கல்வராயன், அறிஞர், திரு. சி. என் அண்ணாத்துரை, திருவாட்டி. சவுந்தரம்

# மறைமலையடிகள் நூல்நிலையம்

105, இலிங்கிச்செட்டித் தெரு, சென்னை-1.




தொடக்க நாள்: 24-8-1958

திறப்புவிழாத் தலைவர்: சென்னை மாநில ஆளுநர்

**மேன்மைதங்கிய பி. விட்ணுராம் மேதி**

திறந்து வைத்தவர்: சென்னை மாநில உள்துறை அமைச்சர்

**திரு. எம். பக்தவத்சலம்,** பி.ஏ., பி.எல்.

திறப்புவிழாச் சொற்பொழிவாளர்:

டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதன், எம்.ஏ., டி.லிட்.,



சித்திர வேலைப்பாடமைந்த
நுழைவு வாயில்

வாயிலுக்கு எதிரில் அமைந்துள்ள
பொன் மெருகுடன் கூடிய
அம்பலவாணர் திருவுரு





முன்பக்கம் அமைந்துள்ள படிப்பறை



மறைமலை அடிகள் தொகுத்த
அரிய ஆங்கில நூற்கள்



கழகம் சேர்த்த பயனுடைத் தமிழ் நூற்கள்





நூலகத் திறப்புவிழா

ஆளுநர் விட்ணுராம் மேதி
தலைமையுரை நிகழ்த்துதல்



விழாவிற்கு வந்திருந்த
பெருமக்களுள் ஒரு பகுதியார்



மாநில ஆளுநர் பார்வையாளர் ஏட்டில்
தம் கருத்தை எழுதுதலும் அமைச்சர்
வருகையாளர் பதிவேட்டில்
கையெழுத்திடுதலும்



## பார்வையாளர்கள்

அமைச்சர்
திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள்
நூல் நிலையத்தைப் பார்வையிடல்
16—2—'60



டாக்டர்
திரு. ப. சுப்பராயன் அவர்கள்
பார்வையாளர் ஏட்டை
நோக்குதல்
9—11—'60



திரு. சுநீதிகுமார் சட்டர்ஜி,
வங்காள சட்டசபைத் தலைவர்,
வருகை தரல்
3—11—'60



# பாராட்டுக்கள்

திரு. மீ. ப. சோமு
வெளிநாடுகட்குச் சென்று
திரும்பியதையொட்டி அளித்த
வரவேற்பு
14—11—'60



திரு. நெ. து. சுந்தரவடிவேலு
அவர்கட்கு
'பத்மஸ்ரீ' பட்டம்
அளித்ததைப் பாராட்டல்



திரு. வி. என்.
சுப்பராயன் அவர்கள்
வெளிநாடுகட்குச்
சென்று மீண்டகாலை
அளித்த பாராட்டு

கைலாசம் அம்மையார் ஆகியோரும் பேருரை யாற்றி விழாவைச் சிறப்பித்தனர். தலைவரால் புலவர் அரசு அவர்கள் ஆக்கிய 'மறைமலை யடிகள் வரலாற்று' நூல் விழாவில் வெளியிடப் பெற்றது.

இந்திய வரலாற்றுப் பேராசிரியர் வி. அரங்காச் சாரியார் எம்.ஏ., எல்.டி. அவர்கள் அத் துறையில் மிக்க திறலோரு மாவர். கல்வெட்டுக்களை நுண்ணிதின் ஆய்ந்து நடுநிலை வழாது, உள்ளவாறு வெளியிடும் ஒள்ளியர். 'தென்னாட்டுக்கல்வெட்டுக்களின் அட்டவணை' எனப் பெயரிய மூன்று நூல்கள் வெளியிட்டுள்ளார்கள். அவர் தம் வரலாற்றுக்கென வாங்கித் தொகுத்துப் பொன்னேபோல் போற்றி வைத்துள்ள வரலாற்று ஆங்கில நூல்கள், கல்வெட்டைப்பற்றிய அரிய நூல்கள் பலவும் சேர்ந்தது அவர்தம் நூலகம். அதனை அவர்தம் திருமகனார் சேஷாத்திரி அவர்கள்பால் விலைக்கு வாங்கி மறைமலை யடிகள் நூலகத்தில் சேர்த்துள்ளோம். அவைகள் ஆராய்ச்சி மாணவர்கட்கும் அத்துறை வல்லுநர்க்கும் பெரிதும் பயன்படுவனவாம். அந்நூல்கள் எத்துணைப் பொன் கொடுப்பினும் கிடைத்தற்கரியன. நூல் நிலையத்தின் பேருகவே இவை கிடைத்தன என்பது மெய்ம்மையாகும். அப் பெரியார்க்கும் கழகத்தின் நன்றி என்றென்று முரித்தாகுக.



இந் நூல்நிலையத்தின் முதலாண்டு நிறைவு விழா 13-9-1959 அன்று, சென்னை உயர்நீதிமன்ற நடுவர் திரு. வ். சுப்பிரமணிய நாடார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. புதியதாக அமைக்கப்பெற்ற 'கொடுத்து வாங்கும் நூலகப்பகுதி'யினைத் திரு. ஆர்.சனார்த்தன நாயுடு அவர்கள் திறந்து வைத்தார்கள். மறை. திருநாவுக்கரசு அவர்களால் வரையப்பெற்ற மறைமலையடிகள் வரலாற்றுப் பெருநூலை டாக்டர் திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள் வெளியிட்டுப் பேருரை வழங்கினர். சென்னை அரசின் ஆட்சிமொழி அலுவலர் திரு. கீ. இராமலிங்கனார், பேராசிரியர் திரு. அ. மு. பரமசிவானந்தம், திரு இரா. பாலகிருட்டிண முதலியார், திரு. க. அன்பழகன் ஆகியோர் விழாவில் பேருரை வழங்கினர்.

## கழகப் புலவர்கள்

கழக வெளியீடுகளைப் பிழையின்றிச் செம்மையாக வெளியிடுதற் பொருட்டும் உரைகளும் நூல்களும் வரைதற்பொருட்டும் கழகத்தில் புலவர்கள் பலர் நியமனம் செய்யப்பெற்றுப் பணியாற்றி வருகின்றனர். இம் முறையில் 1928 இல் மறைமலையடிகளார் மாணவர் திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளை (இளவழகனார்) கழகப் புலவராக அமர்த்தப்பெற்றனர். அவர் நான்காண்டுகள் பணியாற்றிப் பின் விலகிக் கொண்டனர். மீண்டும் 1941 இல் அவர் கழகப் புலவர் பணியேற்றனர். அதிலிருந்து நான் காண்டுகள் பணியாற்றி விலகினர்.

புலவர் இளவழகனார் கழகத்தில் பணியாற்றுங்கால் ஆக்கிய 'சங்க இலக்கிய இன்கவித் திரட்டு' மூன்று பகுதிகளும், 'சங்கநூற் கட்டுரைகள்' இரு பகுதிகளும், பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை, பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை ஆகிய இருநூல்களும் தமிழறிஞர்களின் பெருமதிப்பைப் பெற்றன. 'சங்க இலக்கிய இன்கவித் திரட்டு' நூல்கள் பாரதப் பேரரசின் நிதியமைச்சராக நிலவிய சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. அதனால் இளவழகனார் ஒருமுறை கோவை சென்றிருந்த காலத்தில் அவரைச் செட்டியார், தமது மாளிகைக்கு வரவேற்று விருந்தூட்டி ஒருநூறு வெண்பொற் காசுகள் பரிசளித்துப் பாராட்டினர்.

செல்லூர்க்கிழார் திரு. இராமசாமிப் பிள்ளையவர்கள் கழகப் புலவராகப் பணியாற்றிச் சில நூல்களை வரைந்தனர்; நளவெண்பாவுக்கு இவர் எழுதிய தெளிபொருள் விளக்கவுரை அறிஞர் பாராட்டிற்குரியது. குற்றாலக் குறவஞ்சி, நந்திக்கலம்பகம் போன்ற சிற்றிலக்கியங்களுக்கும் சிறந்த உரை வரைந்துள்ளனர். இப்பொழுது சித்தாந்த பண்டிதர் திரு. ப. இராமநாத பிள்ளையவர்கள் கழகப் புலவராகப் பணியாற்றி வருகின்றனர். அவர்கள் தமிழ் இலக்கிய இலக்கண சமய நூல்களில் ஆழ்ந்த புலமை படைத்தவர்கள். அவர்கள் திருமூலர் திருமந்திர நூலுக்குச் சிறந்ததோர் உரை வகுத்துள்ளனர். அதனை இரு பகுதிகளாகக் கழகம் வெளியிட்டுள்ளது. செந்தமிழ்ச்செல்வியில் திங்கள் தோறும் அரிய ஆய்வுக்கட்டுரைகள் தொடர்ந்து வரைந்து வருகின்றனர். மேலும் வேதநாயகம் பிள்ளை நீதிநூலுக்கு உரையும், சிவஞானபோதச் சிற்றுரைக்கு விளக்கமும் எழுதியுள்ளனர்.

1949 முதல் எஸ். ஆர். பக்தவத்சலம் என்பார் கழகப் புலவராகப் பணியேற்று அச்சிதழ்களை ஒப்புநோக்குதல், கதை,கட்டுரை, நாடக நூல்களை ஒழுங்குபடுத்தல் முதலிய பணிகளைச் செவ்வையாகச்செய்து வந்தனர்.

மேலும் உயிர்கள் உலகம், ஈசாப் கதைகள், தென்னாலிராமன் கதைகள் முதலிய நூல்களை எழுதினர். இவர் அண்மையில் மறைந்த செய்தி வருந்துதற்குரியதாகும்.

1950 முதல் திருநெல்வேலித் தலைமை நிலையத்தில் பெருநாவலர் திரு. பு. சி. புன்னை வனநாத முதலியார் அவர்கள் கழகப்புலவராக இருந்து பணியாற்றி வருகின்றனர். அவர்கள் அங்கு நடைபெறும் சிவஞானமுனிவர் நூல் நிலையத்தின் நூலகராகவும் திருவள்ளுவர் செந்தமிழ்க் கல்லூரி ஆசிரியராகவும் பணி புரிந்து வருகின்றனர். அவர்கள் நீதிசாரம், ஆசாரக்கோவை, மதுரைக் கலம்பகம், மீனாட்சி யம்மை பிள்ளைத்தமிழ் முதலிய நூல்கட்கு உரை வரைந்துள்ளனர். அவற்றைக் கழகம் வெளியிட்டுள்ளது.

1957 இல் தமிழ்ப்பெரும் புலவராகிய பண்டித வித்துவான் திரு. தி. சங்குப் புலவர் அவர்கள் தம் ஆசிரியப் பணியினின்று ஓய்வு பெற்றிருப்பதைக் கண்டு, திரு. வ. சு. அவர்கள், அன்னவரைக் கழகப் புலவராகக் கொண்டனர். இலக்கிய வெளியீடுகட்கு அவர்கள் புலமைத்திறம் பெருந்துணை புரிகின்றது.

### உருவப் பட வெளியீடுகள்

சமய குரவர்கள், சந்தான குரவர்கள், திருவள்ளுவர், மறைமலையடிகளார் ஆகியோரின் திருவுருவப் படங்களை அழகிய முறையில் அமைத்துக் கழகம் வெளியிட்டது. கழக ஆட்சியாளர் திரு. வ. சு. அவர்களின் பெருமுயற்சியால் காலஞ்சென்ற தமிழ்ப்பெரும் புலவர்கள் இருநூற்று ஐம்பதுக்கு மேற்பட்டவர்களின் திருவுருவப் படங்கள் தொகுக்கப்பெற்றுள்ளன. தற்காலத்தில் சிறந்து விளங்கும் புலவர்களின் உருவப்படங்களையும் திரு. வ. சு. அவர்கள் சமயம்வாய்க்கும்போதெல்லாம் தொகுத்து வருகின்றனர்; புலவர்களின் உருவப்படங்களுடன் அவர்தம் வரலாறுகளையும் பல்லாற்ருன் முயன்று தொகுத்து வருகின்றனர்; மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தியாகராசச் செட்டியார், மாயூரம் வேதநாயகம் பிள்ளை போன்ற பேரறிஞர்களின் கடிதங்கள், கையெழுத்துக்கள் முதலியவற்றையும் பழமையான செய்தித்தாட்களையும் முயன்று தொகுத்து வருகின்றனர்.

### பொன்மொழி வெளியீடுகள்

சமயம், ஒழுக்கம், நீதி, அறம் இவற்றைப் பற்றிய உணர்ச்சியூட்டும் ஆன்ருேர் திருவாக்காய் அருமைப் பழமொழிகளாய் அமைந்த பொன்மொழிகள் பலவற்றைப் பருத்த எழுத்துக்களில் அச்சிட்டுத் தாள்களாகவும் அட்டைகளாகவும் கழகம் வெளியிட்டதை அறிஞர் பலரும் பாராட்டினர்.

### சமய வளர்ச்சி வெளியீடுகள்

தமிழகத்தின் பழமையான சமயங்களாகிய சைவ வைணவ வளர்ச்சிக்குதவும் திருவிளக்கு வழிபாடு முதலான 22 சிறு நூல்கள் ஓரணாப் பதிப்பாக மிகவும் குறைந்த விலையில் அச்சிட்டு வெளியிட்டுள்ளது. திருவெம்பாவை, திருப்பாவைப் பாடல்களை உரையுடன் வெளியிட்டுள்ளது. இவை சமய வளர்ச்சி நூல்கள். தமிழ் அர்ச்சனைக்கு வேண்டிய மலர் வழிபாட்டு வரிசை, வேண்டுகோள் பதிகங்கள், சமய நூல்கள் என்னும் தொகுப்புக்களாகவும் வெளிவந்துள்ளன.

### இந்தி எதிர்ப்புப் பணிகள்—தமிழ்க்கொடி

1937 இல் திரு. இராசகோபாலாச்சாரியார் சென்னை முதலமைச்சராக வருதற்கு முன் தேர்தல் பேச்சுக்களில் தாம் அமைச்சரவை அமைக்க நேரிட்டால் இந்தியைப் பள்ளிகளில் கட்டாயப்பாடமாக்குவதாகக் குறிப்பிட்டனர். பின்பு அவர் முதலமைச்சராகப் பதவியேற்றதும் இந்தியைப் பள்ளிகளில் கட்டாயப்பாடமாகப் புகுத்தவும் செய்தனர். அதனை எதிர்த்துத் தமிழ்நாடெங்கணும் கண்டனக் கூட்டங்களும் மாநாடுகளும் விறுவிறுப்பாக நடைபெற்றன. அச்சமயத்தில் மக்களிடையே தமிழார்வத்தைப் பரப்பும் வகையில் திரு. வ. சு. அவர்கள் முடியுடைத் தமிழ் வேந்தர்மூவரின் அடையாளங்களாகிய வில், புலி, கயல் உருவங்கள் தீட்டிய தமிழ்க்கொடியை அமைத்துச் சிறிதும் பெரிதுமாகத் துணிகளில் பொறித்துக் கழகங்கட்கும் மாநாடுகட்கும் வழங்கினர். 'இந்தி ஒழிக!' "தமிழ் வாழ்க!' என்று அட்டைகள் பல அச்சிட்டுப் பரப்பினர்.




மறைமலையடிகளாரைக் கொண்டு 'இந்தி பொது மொழியா?' என்ற தலைப்பில், அது பொதுமொழியாதற்குரிய தகுதி ஒருகாலத்தும் கிடையாது என்பதை அறுதியிட்டுக் கூறும் நூலை எழுதுவித்து ஈழத்துச் சிவானந்த அடிகள் துணையால் 15,000 படிகள் வரை அச்சிட்டு இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை நாடெங்கும் பரவுமாறு செய்தனர்.

### தமிழ் உணர்ச்சி மாநாடுகள்

1943 அக்டோபர்த் திங்களில் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் தலைமையில் சென்னைத் தொண்டைமண்டல உயர்நிலைப் பள்ளியில் 'முதலாவது தமிழ் உணர்ச்சி மாநாட்டை' மிகச் சிறப்புற நடத்தினர். அம் மாநாட்டில் கே. கோதண்டபாணிப் பிள்ளை,

ஞா. தேவநேயப் பாவாணர் போன்ற தமிழ்ப் பேரறிஞர்கள் உணர்ச்சியூட்டும் உரைகளை நிகழ்த்தித் தமிழரைத் தட்டியெழுப்பினர்.

அதே ஆண்டில் டிசம்பர்த் திங்களில் சேலம் நகரவைக் கல்லூரியில், அக் கல்லூரி முதல்வர் அ. இராமசாமிக் கவுண்டர், எம். ஏ, தலைமையில் இரண்டாவது தமிழுணர்ச்சி மாநாடு நடைபெற்றது. அதனையொட்டிப் பேச்சுவழக்கில் மிகுதியாகப் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களை நீக்கும்பொருட்டு எடுத்துக்காட்டாக நூறு பிறமொழிச் சொற்களைத் தொகுத்து அவற்றிற்கு நேரான தூய தமிழ்ச்சொற்களையும் பொறித்துத் துண்டு வெளியீடுகளை அச்சிட்டுக் கழகம் நாடெங்கும் பரப்பியது. அதனைக் கண்ணுற்ற டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர் அவர்கள் 'தமிழ் எங்ஙனம் தனித்தியங்க இயலும்?' என்று எள்ளிநகையாடி இந்துத்தாளில் எழுதினர். 'ஆணி' என்ற சொல், வடமொழி இருக்கு வேதத்தில் உள்ளது; அதனைத் தமிழர் கடன் வாங்கித் தமிழில் பயன்படுத்தினர்' என்று ஆராயாது பிழைபட எழுதினர். அக் கருத்தை மறுத்து 'ஆணித்தரமான விடை' என்றே தலைப்பிட்டுத் திரு. வ. சு. அவர்கள் மறுப்புரையொன்று கழகவழி அச்சிட்டு அனுப்பினர்.

### கல்விப் பணிகள்

மாவட்டக் கல்வி அதிகாரி திரு. சிவசைலம் பிள்ளை, எம். ஏ., எல். டி. அவர்கள் அருந்துணையால் பள்ளி மாணவர்க்குச் செந்தமிழ் உணர்ச்சியைச் சிறப்பாக ஊட்டும் முறையில் கழகம் தமிழ்ப் பாடநூல்களை எழுதி வெளியிட்டது. இப்போது அவர்கள் ஓய்வுபெற்ற பின்னரும் கழகத்துக்குப் பாட நூல்களை அவ்வப்போது புதிய பாடத்திட்டத்திற் கேற்ப எழுதி வருகின்றனர்.

1939 செப்டம்பரில் கழக ஆட்சியாளர் திரு. வ. சு. அவர்கள் தாமே முதியோர் கல்வியின் பொருட்டுத் 'தானே தமிழ் கற்குமுறை' என்ற நூலைப் பெரிய அளவில் எழுதிக் கழக வழி வெளியிட்டனர். அதனைப் பின்னும் சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதல்வராக இருந்து ஓய்வுபெற்ற திரு. டி. பி. சந்தானகிருஷ்ண நாயுடு பி.ஏ., எல்.டி., அவர்கள் கருத்திற்கிசையச் சிறிய வடிவில் 1940 மார்ச்சுத் திங்களில் வெளியிட்டனர். சிறுவர்க்கும் முதியோர்க்கும் பயன்படுமாறு, பிழையின்றிப் பேசுக, எங்களூர்ச் சந்தை, அஞ்சல் முறை, விளையாட்டுப் பந்தயம், குழந்தைப் பேச்சு முதலிய நூல்களையும் எழுதி வெளியிட்டனர்.

இனித் தமிழகத்தின் ஊர்களுக்கும், பூங்கா முதலிய குறிப்பிட்ட இடங்களுக்கும் தமிழ்ப் பெயர்கள் அமைக்குமாறு துண்டு வெளியீடுகள் வாயிலாகக் கிளர்ச்சி செய்து கழகம் வெற்றியும் கண்டது. தமிழைப் பிழை நீக்கி எழுதும் முறை, அழைப்பிதழ் எழுதும் முறை, மக்கட்பெயர் அகரவரிசை, இல்லப்பெயர் அகரவரிசை, வடசொல் தமிழ் அகரவரிசை முதலிய சின்னஞ்சிறு நூல்களை வெளியிட்டுத் தமிழுணர்வூட்டியதை அறிஞர் பெரிதும் போற்றினர்.

### நெல்லைச் சித்தாந்த வகுப்பு

1952 இல் 27-4-52 முதல் 20-5-52 முடியத் திருநெல்வேலிச் சந்திப்புத் தருமபுர மடத்தில் நெல்லை அருணகிரி இசைக் கழகச் சார்பில் கழகம் சித்தாந்த வகுப்பொன்றை 21 நாட்கள் நடத்தியது. சாத்தூர் வழக்கறிஞரும், தமிழ்ப் பேரறிஞரும் சித்தாந்தப் பேராசிரியருமான தூ. சு. கந்தசாமி முதலியார், எம். ஏ. அவர்களை ஆசிரியராகக் கொண்டு சிவஞானபோத வகுப்புச் சிறப்பாக நடைபெற்றது. அவ் வகுப்பில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் தமிழ்ப் புலவர்களும் தமிழன்பர்களுமாக அறுபதின்மருக்குமேல் வந்து கலந்து சிறந்த பயனடைந்தனர்.

வகுப்பு நாட்களில் மாலை நேரங்களில் கழகப் புலவர் சித்தாந்த பண்டிதர் திரு. ப. இராமநாத பிள்ளையவர்கள் ஐயத்தெளிவு வகுப்பு நடத்தினர். வகுப்பில் கலந்துகொண்ட தமிழ்ப் புலவர்கட்கு எழுந்த ஐயங்களையெல்லாம் மிகத் தெளிவுற விளக்கினர். அவர்களால் சிவஞானபோதச் சிற்றுரையை இருபத்தொரு நாட்களில் பாடமாக நடத்துதற்குப் பாடத் திட்டமொன்று வகுக்கப்பெற்றது. சிவஞான போதச் சிற்றுரையைப் பயில்வார்க்குத் துணை செய்யும் வகையில் சித்தாந்தபூடணம் வித்துவான் திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்களால் 'சிவஞான போதச் சிற்றுரை அருஞ் சொற்பொருள் அகரவரிசை' என்னும் சின்னூலொன்று தொகுக்கப்பெற்றுக் கழகத்தால் வெளியிடப்பெற்றது. அவ் வகுப்பில் கலந்து கொண்டவர்கட்கு இறுதியில் தேர்வொன்று நடைபெற்றது. அவ்வகுப்பில் கலந்து கொண்டவர் அனைவர்க்கும் சான்றிதழ் வழங்கப் பெற்றது.

1944 இல் தாகூர்ச் சட்டவிரிவுரையாளர் பேராசிரியர், திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ., எம். எல். அவர்கள் கடுநோயால் பீடிக்கப்பட்டு நலிவுற்று, உடல்நலங் குன்றிப் பெருந்துன்பெய்தினர். அது காரணமாக அண்ணாமலைப் பல்கலைக் கழக அலுவலினின்றும் விலக நேர்ந்தது. உடல்நலங் குன்றியது போன்று செல்வ நலமும் நனிமிகக் குன்றியிருந்தது. இந் நிலையில் ஒப்பரும் அப் பெரியாரை எவ்வகையாலும் காக்கும் கடன் கழகத்தாரின் மேலதாயிற்று. அவர்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினின்றும் நெல்லைக் கழக நிலையத்திற்குத் தக்க ஆதரவுடன் அழைத்து வந்தனர். பெருமருத்துவர் பலரைக் கொண்டு பெரும்பொருட் செலவில்

பன்னுள் தக்க மருந்துகள் கொடுப்பித்தனர். தந்தையினும் மிக்க பரிவொடு எவ்வகைப் பணியும் புரிவித்தனர். ஊழ் வேறுவகையாக விருந்தமையால் 1945 இல் இறையடி நீழலை எய்தினர். பிற்சடங்கு முதலியனவும் பீடுற ஆற்றுவித்தனர்.

13-10-47 இல் திரு. கா. சு. அவர்கட்குக் கழகத்தாரின் பெருமுயற்சியால் நடுகல் நிறுவலாயிற்று. அக் கல் அவர்தம் பெயரும் பீடும் பொறித்த பெருமை தாங்கியது. திருநெல்வேலிப் பெருஞ்சாலையில் தாம்பிரவருணி ஆற்றுக்குப் போகும்வழியில் வனப்பமை வளைவினண்மையில் முக்கோண நிலப்பரப்பில் மொய்கிளர் பூங்காவினடுவில் பொதுப்பணி அமைச்சர் எம். பக்தவத்சலம் அவர்களால் நாட்டப்பட்டது. அந்நாள் எட்டையபுரத்தின்கண் பாரதியாரின் நினைவு மண்டபத் திறப்பு நாளுமாகும்.

1946 இல் கழக அமைச்சர் வ. திருவரங்கனர் அவர்கட்கும், அவர்தம் வாழ்க்கைத் துணைவியாராம் நீலாம்பிகையம்மையார்க்கும், அவர்தம் இளவலார், கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் பொருநையாற்றங்கரையிலுள்ள பாளையங்கோட்டை நன்காட்டகத்து நடுகல் நாட்டச் செய்தனர். அக்கல்லின் ஓருபுறம் திருவரங்கனரின் பெயரும் பீடும் மற்றொருபுறம் அம்மையாரின் பெயரும் பீடும் பொறிக்கப்பட்டுள்ளன. அக் கல்லினைப் பாளையங்கோட்டை நகராண்மைக் கழகத் தலைவர் திரு. பி. டி. சுப்பையா பிள்ளை, பி. ஏ., பி. எல். அவர்கள் நாட்டுவித்தனர்.

திருப்பாதிரிப்புலியூர், திருக்கோவலூர் ஆதீனம் சிவத்திரு ஞானியாரடிகள் நிகழும் விசு, தைப் பூசத்திருநாளன்று இறைவன்திருவடிநீழலெய்தினர். 1941 ஆம் ஆண்டு அடிகளாரின் பெரும்பிரிவு குறித்துக் கழகச் சார்பில் சென்னையிலே ஓர் இரங்கற்கூட்டம் நிகழ்த்தப்பட்டது. அடிகளார் செய்தருளிய செந்தமிழ்த் தொண்டும் சிவநெறித்தொண்டும் அனைவர்கட்கும் என்றும் பெரும்பயன் விளைத்து இன்புறுத்துகின்றன.

ஆட்சிமொழி மாநாடு: கழகச் சார்பிலும் சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கச் சார்பிலும் 20-12-1953 இல் சென்னை அண்ணாமலை மன்றத்தில் 'தமிழ் ஆட்சிமொழி மாநாடு' இனிது நடைபெற்றது. தலைவர் ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி திருவாளர் ஆ. கசபதி நாயகர் பி.ஏ., பி.எல்., எம்.எல்.சி. அவர்கள். வரவேற்புரை திரு. சொ. அமிர்தகணேச முதலியார், பி.ஏ., அவர்கள். பல அரசியற்கட்சி அறிஞர்கள் தமிழ்மொழியே ஆட்சிமொழியாக வேண்டுமென்பதற்குத் தக்க காரணங்கள் காட்டி அரிய விரிவுரைகள் பல ஆற்றினர்.

1957 இல் 'மனோன்மணீய' ஆசிரியர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களின் 'நினைவு மலர் வெளியீட்டு விழா' சென்னை இராசாசி மண்டபத்தில் நடந்தது. சென்னை முதலமைச்சர் திரு. காமராசர் அவர்கள் தலைமை தாங்கினர்கள். கல்வியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் நினைவுமலரை வெளியிட்டார்கள். பல அறிஞர்கள் பாராட்டிப் பேசினர்கள்.

1960 இல் நாவலர், சோமசுந்தர பாரதியார், ஆய்வறிஞர், சதாசிவ பண்டாரத்தார் ஆகிய இருவர்களுக்கும் நினைவுக்கூட்டம் நிகழ்ந்தது. சென்னை மாநிலக் கல்வி நிதியமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்கள் தலைமை தாங்கினர்கள். அமைச்சரவர்கள் கழக வெளியீடாம் 'நாவலர் பாரதியார்' என்னும் வரலாற்று நூலை வெளியிட்டனர். செட்டிநாட்டரசர் இராசா சர். முத்தையாசெட்டியாரவர்கள் நாவலர் பாரதியாரவர்களின் உருவப்படத்தைத் திறந்துவைத்தார்கள். பேராசிரியர், கோ. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் சதாசிவ பண்டாரத்தார் உருவப் படத்தைத் திறந்துவைத்தார்கள். பல அறிஞர்கள் பாராட்டிப் பேசினர்கள்.

## கழகத்தின் பிற தொண்டுகள்

சிவத்திரு சிவானந்தசிவாச்சாரியார் என்னும் அந்தணப் பெருந்துறவியார் ஆங்கிலத்தில் பி. ஏ. பட்டம் பெற்ற நுண்புலவர்; வடமொழி வல்லார்; செந்தமிழ்ப் புலவர்; சித்தாந்தப் பெருநூல்கள் கைவந்து சிறப்புற்றுத் திகழ்ந்த செம்மலார். இவர்கள் பன்னெடுங்காலம் திருக்காளத்தித் திருப்பதிக்கண் உறைந்து தவம் புரிந்தவர். 1929 இல் சிலகாலம் இவர்களைக் கொண்டு திருநெல்வேலியில் தொடர்ந்து 'சிவஞான போத வகுப்பும் சிவஞான சித்தியார் வகுப்பும்' சீர் சிறப்புடன் நிகழ்த்தப் பெற்றன.

1930, 1936 ஆம் ஆண்டுகளில் லால்குடி, பெருஞ்சொல்விளக்கனர் திரு, அ. மு. சரவண முதலியார் அவர்களைக் கொண்டு 'பெரியபுராண விரிவுரைகள்' தொடர்ந்து பல நடத்தப்பெற்றன. இவற்றுள் சில நெல்லையம்பதிப் பெருஞ்செல்வர்களின் ஆதரவால் நிகழ்ந்தன.

1944 மார்ச்சு ஏப்பிரல் திங்களில் கழகத்தின் சென்னைக் கிளை நிலையச் சார்பில் மேற்போந்த பெருஞ்சொல் விளக்கனரவர்களைக் கொண்டு பெரியபுராண விரிவுரைகள் பல நிகழ்த்தப்பட்டன. இவ்விரண்டானும் தமிழகத்தின் தென்பாலும் வடபாலும் பெரிய புராணப் பெருமை பெருமக்களிடையே நன்கு பரவலாயிற்று.

1931 இல் 'திருக்குறள் ஒழுக்கமுறை' என்பது பற்றியும், 'சைவசமயம் உலகப் பொதுச்சமயம்' என்பது பற்றியும் பல பேரறிஞர்களைக் கொண்டு கட்டுரைகள் எழுதுவித்து அவற்றுள் சிறந்தனவாயுள்ள திருக்குறள் கட்டு

கழகச் சென்னைக் கிளைநிலையப் பணியாளர்கள்



இருப்பவர்: மு. சதாசிவம், எம். ஏ., சங்குப் புலவர், புலவர் ப. இராமநாத பிள்ளை, வ. சுப்பையா பிள்ளை, ஆட்சியாளர், இரா. கல்யாணசுந்தரம், பி. எஸ்ஸி., பொது மேலாளர், சு. அன்புமலர், பி. ஏ. ஆனர்சு, கிளை மேலாளர், இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ. நூலகர்.

அப்பர் அச்சகப் பணியாளர்கள்



மேலாளர் ச. துக்காராம் அவர்களுடன் பிற பணியாளர்கள்



திருநெல்வேலித் தலைமை நிலையப் பணியாளர்கள்



நூற் கட்டுக்கோப்பாளர் இரா. மாணிக்கசாமியுடன் பிற பணியாளர்கள்



திருநெல்வேலியிலுள்ள தலைமை நிலையம்



சென்னையிலுள்ள கிளைநிலையம்



கழகக் கட்டடப் பகுதி, சென்னை



அப்பர் அச்சகம், சென்னை

ரைக்கு வெண்பொன் நூறும், சைவக் கட்டுரைக்கு வெண்பொன் ஐம்பதும் பரிசுகளாக வழங்கப்பட்டன.

சமயத்தைக் குறித்த பாடங்களையும், திருக்குறட் பாடங்களையும், பல பள்ளிக்கூடங்களில் நிகழ்த்துவித்துப் பள்ளி மாணவர்களுக்குப் பரிசுகள் அவ்வப்போது வழங்கப்பட்டன

1932 இல் 'சிவஞான சித்தியார் வகுப்பு' தூத்துக்குடி, சித்தாந்தப் பேராசிரியர் ந. சிவகுருநாத பிள்ளையவர்களைக் கொண்டு நடத்தப்பெற்றது.

1933-34 ஆம் ஆண்டுகளில் திருவாலங்காட்டிலுறைந்து தேர்த் திருப்பணி புரிந்து கொண்டிருந்த யாழ்ப்பாணத்துச் சிவத்திரு சச்சிதானந்த சிவராஜயோகிகளைக் கொண்டு 'மாணிக்கவாசகரும் திருவாசகமும்' என்னும் சிறந்த பொருள்பற்றித் தொடர்ந்து நாற்பது சொற்பொழிவுகள் நடத்தப்பெற்றன.

1934 இல் ஆசிரியர் மறைமலையடிகளாரைக் கொண்டு 'அர்ணாயப்பர் திருவுருவ விளக்கம், தமிழும் சிவமும் என்னும் அரிய பொருள்கள்பற்றிச் சில சொற்பொழிவுகள் நடத்தப்பெற்றன.

கழகச் சார்பில் நிகழ்ந்துவரும் பேரறப் பெரும்பணிகளாகிய தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம், தென்னிந்திய தமிழ்ச்சங்கம் என்னும் இரண்டின் ஆண்டுவிழாக்களைச் சீர்சிறப்புடன் அவ்வப்போது சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் பி. ஏ. அவர்கள் ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி நல்லாடை பி. சுப்பையா முதலியார் அவர்கள், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் முதலிய சான்றோர்களைத் தலைமையாகக் கொண்டு பல பேறிஞர்கள் சொற்பொழிவாற்ற நிகழ்த்துவிக்கப்பட்டுள்ளன.

1934 இல் பாளையங்கோட்டையில் பேர் பெற்று விளங்கும் ஆயிரத்தம்மன் திருக்கோவிலில் நெடுங்காலமாகப் பன்னிரண்டு ஆண்டுகட்கொருமுறை எருமைக்கடாப்பலி கொடுத்து வருவது வழக்கம். அவ்வுயிர்க் கொலைக் கொடுமையினை அறவே நிறுத்திவிடச் செய்வதே கழகத்தின் பேரறத் தொண்டுகளுள் முதன்மையெனக் கழக அமைச்சர் வ. திருவரங்கனர் அருளுந்தலால் உன்னி உரங்கொண்டு எழுந்தனர். வேண்டு முயற்சிகளையும் இடைவிடாது ஆற்றினர், செய்தித்தாள்களுக்கு எழுதுதல், துண்டுவெளியீடுகளைத்தொடர்ந்து வெளியிடுதல், இடமிடந்தோறும் பலி நிறுத்தச் சொற்பொழிவுகளைத் தக்காரைக் கொண்டு ஆற்றுவித்தல் செய்ததோடு, முருகனடியார் கிருபானந்தவாரியார், சிவபந்து ஸ்ரீபால், காரைக்குடிக் கட்டிளைஞர் திரு. சோமசுந்தரஞ் செட்டியார் ஆகிய நயம்படவுரைக்கும் நாவலலாரைக் கொண்டு பல சொற்பொழிவுகள் ஆற்றுவித்தனர். இக்கிளர்ச்சி மாபெரு மக்கள் கிளர்ச்சியாக மலர்ந்தெழுந்தது. அனைத்துலகும் ஒருங்கு புகழும் மகாத்துமா காந்தியடிகளாரும் உலக மதிக்கும் ஒப்பில் ஒருவராம் பண்டிட் சவகர்லால் நேருவும் இச் சிறந்த தொண்டினைப் பாராட்டி இக்கொள்கையினை ஆதரித்து எழுதியுள்ளனர். இத்தகைய பெருமுயற்சியால் அக் கொடுங் கொலைப்பலி அறவே நின்றது.

நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், மறை. திருநாவுக்கரசனர், திருமுருக கிருபானந்த வாரியார், ஞா. தேவநேயப்பாவாணர், வித்துவான் மு. இராசாக்கண்ணனர், பண்டிதவித்துவான் சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, சித்தாந்தப் பேராசிரியர் ந. சிவகுருநாத பிள்ளை, கந்தபுராணச் சொற்பொழிவாளர் ச. முத்துக்குமாரசாமி பிள்ளை, திருவாவடுதுறையாதீனப்புலவர் ஆ. முத்துக்குமாரசாமிப் பிள்ளை, பெருமழைப் புலவர் சோமசுந்தரனர், வித்துவான் வீ. குமாரசாமி ஐயர், எண்ணாலும், இயைபாலும் அளவிலா அடுக்குமொழிகளும், நகைச்சுவை நாவன்மையும், கடல்மடை திறந்தனைய ஓட்டமும், பெருங் கொண்டற் பொழிவும் ஒருங்கமைந்த ஒப்பில் பெருந்தகையார் மணம்பூண்டி, ரா. குமாரசாமிப் பிள்ளை, பிரசங்க பானு இராசாராம் பிள்ளை, புரிசை முருகேச முதலியார், நாவலர் சோமசுந்தர பாரதியார், சொல்லாட்சி வல்லார் கீ. இராமலிங்க முதலியார், பெரும்புலவர், அ. வரத நஞ்சைய பிள்ளை முதலிய சான்றோர்களைக் கொண்டு அவ்வப்போது தனித்தனி சொற்பொழிவுகள் பல ஆற்றுவிக்கப்பெற்றன.

## கழகப் பணியாளர்கள்

காலஞ் சென்ற சுப்பராயலு நாயுடு அவர்கள் 1931 முதல் 1944 வரை சென்னைக் கிளை நிலையத்தில் கழகத் தலைமை எழுத்தாளராகப் பணிபுரிந்தனர். 1945 முதல் 1949 வரை முகவராகவும் பணிபுரிந்தனர். அன்னர் மலர்ந்த முகமும் இன்சொல்லும் நிறைந்தவர். அதனுல் தக்கார் பலரையும் தம் வழிப்படுத்தும் பெருந்திறல் படைத்தவர். அயராது உழைக்கும் ஆற்றலுடையார். அவரது பேருழைப்பும் கழக வளர்ச்சிக்குக் காரணமாகும். திரு. ஜி. சு. சின்னசாமி நாயுடு அவர்கள் தலைமைக் கணக்கராக 1927 முதல் 1931 வரையும் பின் 1941 முதல் 1945 வரையும் பணிபுரிந்தமையும், திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் 1933 முதல் 1941 வரை எழுத்தாளராகப் பணிபுரிந்தமையும் மறக்கற்பாலதன்று. திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் இப்போது கூட்டுறவு நெருப்பு இன்சூரன்சு கழகத் தலைமை எழுத்தாளராகவும் பணிபுரிந்து வருகின்றனர். திரு. இராமச்சந்திர முதலியார் கழகத்தில் சில ஆண்டுகள் நூற்பதிப்புக்களை மேற்பார்ப்பவராகவும் அப்பர் அச்சகப் பொறுப்பாளராகவும் பணி செய்ததும் இங்குக் குறிப்பிடத்தக்கது. இவர்கள் பின் வேலை பார்த்த இம்பீரியல்

பிரின்டிங் ஓர்க்சு, சூபிட்டர் அச்சகம் இவற்றில் கழக நூல்கள் அச்சிடப் பெற்றபோது அவை பிழையின்றிச் சிறந்த முறையில் வெளிவருவதற்குத் துணைபுரிந்து வந்தனர். திரு. ஜி. சு. சின்னசாமி நாயுடு அவர்கள் மகனார் திரு. சீராமுலு கிளை நிலைய எழுத்தாளராகவும், திரு. சுப்பராயலு நாயுடு அவர்கள் மகனார் திரு. அரங்கபாசியம் அப்பர் அச்சகத்தில் பார்வைப்படி பிழை திருத்துபவராகவும் பணி செய்கின்றனர்.

முயற்சியால் மாவட்ட ஆட்சிமன்றப் பள்ளிகளில் கழக நூல்கள் பாடமாக்கப் பெற்றது ஒரு வாய்ப்பாகும்.

## கழகச் செயற்குழு

1920 முதல் 1938 முடிய மா. வே. நெல்லையப்ப பிள்ளை B. A. அவர்களும், 1939 முதல் 1948 முடிய நாகர்கோவில் ப. சிதம்பரம் பிள்ளை B. A., B. L. அவர்களும் செயற்குழுத்



முன்னாள் முதலமைச்சர்
பி. எஸ். குமாரசாமி ராஜா



வழக்குரைஞர்
வி. இராசகோபால் முதலியார்



முகவர்
எம். வி. சுப்பராயலு நாயுடு



தலைமைக் கணக்கர்
ஜே. சு. சின்னசாமி நாயுடு



தலைமை எழுத்தாளர்
ஆ. சுப்பையா பிள்ளை



கிளை மேலாளர்
தீ. வள்ளிநாயகம் பிள்ளை

1955 முதல் 1960 வரை திரு. தீ. வள்ளிநாயகம் பிள்ளையவர்கள் சென்னைக் கிளை நிலைய மேலாளராகப் பணியாற்றினர். அவர்கள் திருநெல்வேலி மாவட்ட ஆட்சிமன்றச் செயலாளராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர்களாதலின் மாவட்ட ஆட்சித் துறைகளில் உள்ள அலுவலர்களையெல்லாம் நன்கு அறிவார்கள். அம் முறையில் அவர்களது

தலைவராக விளங்கினர். 1949 முதல் திரு. மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்கள் செயற்குழுத் தலைவராக விளங்கி வருகின்றனர். கழகச் செயற் குழு உறுப்பினர்களாக இருந்து பணியாற்றியவர்களுள் குறிப்பிடத் தக்கோர்: கா. சுப்பிரமணியப் பிள்ளை, M. A., M. L., திருவைகுண்டம் பொன்னம்பல முதலியார், B.A., B.L., T. P. வேலாயுதம் பிள்ளை, B.A., B. L.,

T. S. இராமலிங்கம்பிள்ளை, M.A., B.L., டாக்டர் T, S. வைகுண்டராம பிள்ளை, டாக்டர் R. சண்முகம் பிள்ளை, N.P, சுந்தரம் பிள்ளை, B.E., சாத்தூர் T. S. கந்தசாமி முதலியார், M. A, சி. உ. சுப. உடையப்பா, M.L.C., தூத்துக்குடி சித்தாந்தப் பேராசிரியர் ந. சிவகுருநாத பிள்ளை, நாவலர் பு. சி. புன்னைவனநாத முதலியார்.

சென்னை வழக்குரைஞர் திரு. வி. இராச கோபால முதலியாரவர்களின் தொடர்பு கழகத்திற்கு 1940 ஆம் ஆண்டிலேற்பட்டது. அந்நாள் தொட்டுக் கழகத்தின் சட்ட அறிவுரைஞராய் விளங்கினர். கழகத்தின் வழக்குகள் அனைத்தும் இவர்கள் வாயிலாகவே நிகழ்ந்தன. ஆசிரியர் மறைமலையடிகளாரின் விருப்ப ஆவண வழக்கைத் திறம்பட நடத்தி வெற்றியுங் கண்டனர். பலவகையாலும் கழகத்துக்குப் பாராட்டத்தக்க,உற்றகாலத்து உறுதுணையாக விருந்தனர். இவர்கள் உதவி என்றும் மறக்கற்பாலதன்று.

கழகத்தின் வெளியீட்டுப் பணி திருவருளால் நாளும் பெருகுவதாயிற்று. அதனால் ஓர் அச்சகம் அமைத்தலும் இன்றியமையாததாயிற்று. 1948 இல் 'அப்பர் அச்சகம்' நிறுவப் பெற்றது. அதனை அந்நாள் சென்னை முதலமைச்சராக விருந்த திரு. ஓ. பி. இராமசாமி ரெட்டியாரவர்கள் திறந்து வைத்தனர். பின் இடமாற்றவேண்டிய இன்றியமையாமை நேர்ந்தது. 1949 இல் இப்பொழுதிருக்கும் பிராட்வே கட்டடத்திற்குமாற்றப் பட்டது. இக்கட்டடத்தைப் பெறுதற்குத் துணையாக விருந்த அந்நாள் முதலமைச்சர் திரு. பி. எஸ். குமாரசாமி ராசாஅவர்கள் நவின்ற நல்லுரை 'தமிழுக்கும் சமயத்திற்கும் இடையறாது தொண்டு செய்து வரும் கழகத்துக்கு உதவி செய்வது என் கடமையே' என்பதாம். இவர்கட்குக் கழகத்தாரின் பெருநன்றி என்றும் உரித்தாகுக.



கழகம் இஞ்ஞான்று ஈடும் எடுப்புமில் பீடுடன் சிறந்து காணப்படுகின்றதற்கு ஆட்சிப் பொறுப்பாளரின் தனிப்பெரும் முயற்சி மட்டுங் காரணமென்று சொல்லுவதற்கில்லை. அம் முயற்சியின் மெய்ம்மையை யுணர்ந்து அதற்கு உறுதுணையாகத் தலைமைப்பாங்கினர் ஆட்சிப் பொறுப்பாளர்களை அதற்குரியராக் குதல் என்னும் முறைப்படிக் கழகச்செயற்குழுத் தலைவர் நன்னேக்குற் றிருந்தமையே காரணமாகும். 1938 ஆம் ஆண்டு நாகர்கோவில் வழக்குரைஞர் திரு. ப. சிதம்பரம் பிள்ளை அவர்கள் கழகச் செயற்குழுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அவர்கள் அந்நிலைக்கு வந்தநாள்முதல் குறிக்கோளாகக் கொண்ட மெய்ம்மறையொன்றுகும். அஃது " இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந், ததனை அவன்கண் விடல்" என்பதாம். இதனை அவர்கள் வாயாரப் புகன்று கணக்கினை ஆயும் நாம் வருவது ஆக்கமா அல்லது போக்கா என்று நோக்குவதே முறைமையாகும். அதனை விடுத்து ஏனைய அலுவல்களின் தலையீட்டாய்வு உலையாமுயற்சிக்கு உலைவுதருவதொன்றுகும் என்று வற்புறுத்தி வந்தனர். அதுவே கழக வளர்ச்சிக்குப் பெருங்காரணமாகும். அவர்கட்குக் கழக வுறுப்பினர்தம் பெருநன்றி என்றும் உரித்தாகுக. அதன்பின்னுள்ள தலைவர்களும் செயற்குழுவினரும் அவ்வாறே நிகழ்த்தி வருவதும் கழக வளர்ச்சிக்கு உறுகாரணமாகும்.

கழகப் பணிகள் பெருகியதன் காரணமாகத் திரு. வ. சு. அவர்களின் மருகனர் திரு. இரா. கலியாணசுந்தரம், பி. எஸ்ஸி.யும் கழகத்தின் பொது மேலாளராக நியமனம் பெற்றுப் பணியாற்றி வருகின்றனர். இத்தகைய கழகப் பணியாளர்களின் உண்மையான உழைப்பாலும் கழகம் வளர்ந்தோங்கி வருகிறது. அனைத்திற்கும் மேலாகத் தற்போது கழகத்தைப் பொறுப்புடன் நடத்தும் ஆட்சியாளர் திரு. வ. சு. அவர்கள் எதனையும் எண்ணித் துணியும் திண்ணிய அறிவுத் திறனும், பணியாளர்களை ஏவல்கொள்ளும் அரிய ஆட்சித்திறனும், நூலெழுதும் புலவர் முதல், ஆணையெழுதும் அரசியல் தலைவர்கள் வரையுள்ள அனைவரையும் தம் வழிப்படுத்தும் தகைமையும், சொல்வன்மையும், எண்ணியது முடிக்கும் திண்மையும் செந்தமிழ்ப் பற்றும் சித்தாந்தச் செந்நெறியார்வமும் பெருகிய தவப்பேறுடையாராய்த்தளராத ஊக்கமுடையாராய்த்திகழ்வது கழக வளர்ச்சிக்கு ஒரு பெருங்காரணமாகும்.

ஓங்குக! கழகம்; உயர்க! அதன் பணிகள்.

# கழக 1008 ஆவது வெளியீட்டு விழாச்

## செயற்குழுக் கூட்டங்கள்

கழக ஆயிரத்தெட்டாவது வெளியீட்டு விழாவைச் சிறப்புறு வகையில் நடத்துவதற்குரிய செயற் குழுவின் கூட்டங்கள் மூன்றும் டாக்டர். அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்களின் தலைமையிலே நடைபெற்றன. கூட்டங்கள் முறையே 2—10—60, 10—6—61, 16—8—61 நாட்களில் நடைபெற்றன. அக் கூட்டங்களில் விழாவுக்குரிய பல குழுக்களையும் அமைத்தனர்.





விழாவையொட்டித் தமிழ்க்கலை, பண்பாடு, மொழிச் சிறப்பு ஆகியவற்றை விளக்கும் நூற் காட்சி யொன்றினையும் நடத்த வேண்டுமென்று முடிவு செய்து அதனை அமைத்தற்குரிய ஆய்வுரை கூறினர். இக் கூட்டங்களில் கலந்துகொண்ட பெருமக்களுக்குக் கழகம் என்றென்றும் நன்றி செலுத்தும்.

ஆவியுலகில் வாழும் அறிஞர் பெருமக்கள்

திருநெல்வேலியிலுள்ள இயக்குநர் திரு. இரா. ந. குற்றாலலிங்கம் பிள்ளை

அவர்கள்வழி உணர்த்தி எழுதியனுப்பிய

# வாழ்த்துக்கள்

## மறைத்திரு மறைமலையடிகள்

மால், அயன், வானவர்கோனும் வந்து வணங்க, அவர்க்கருள் செய்த எம்மிறை, எழில் கொள் சோதி யெம்பிரான், மாதிவர் பாகன், மறை பயின்ற வாசகன், மாமலர் மேய சோதி, கோதில் பரங்கருணை அடியார் குலாவு நீதி குணமாக நல்குமெம் புண்ணியன், மண்ணிடை யிழிந்து வந்து, ஞாலமதனிடை யிழிந்து வந்து, நன்னெறி காட்டி, நலந் திகழுங் கோலமணியணி மாட நீடுகுலாவும், திக்கெலாம் புகழுறும், திருநெல்லையம்பதி தனில், நெல்லையப்பரெனத் திருப்பெயர் கொண்டும், மலையரையன் பொற்பாவை வாள் நுதலாள் பெண் திருவாம் அன்னையவள் காந்திமதியெனத் திருப்பெயர் கொண்டும், கோயில்கொண்ட, அணிமுடி ஆதி அமரர் கோமான், ஆனந்தக் கூத்தன், தொல்லை யிரும்



பிறவிச் சூழுந்தளை நீக்கி அல்லலறுத் தானந்த மாக்கிவரும், திருஞானசம்பந்தர் திறம்படவே பாடிவைத்த, திருநெல்வேலியுறை செல்வர்தந் தானத்தைத் தன் தலைமை கொண்டெழுந்த திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின், வெளியீடாம் நூலெண் ஆயிரத்தெட்டின் நிறைவுறு திரு நாளாம் இந்நாளில், சென்னையம்பதிதனில் குதிகொளும் கழகப் பெருநாளாம் இந்நன் னாளில், கற்பனைக்கெட்டாக் காணுவுலக வாசி மறைமலையடிகள், முன்னாள் கழகவமைச்சர் திரு. திருவரங்கனாரிளையர், இற்றைக் கழக வமைச்சர், திரு. வ. சுப்பையா, தம்முடனியங்கு செயற்குழுச் சார்பிலே, வேண்டி விரும்பியதற் கிணங்கி, வரைந்த வாழ்த்துரை.

கழக விருப்புறு கண்ணினை, நுண்மாண் நுழைபுலம் மீக்கொண்டு வெளியிட விரும்பும், வினைவலி, தன்வலி, மாற்றான்வலி, துணைவலி தூக்கிச் செயலாற்றுந் திறன் கொண்ட திரு வருட்டுணை கொண்ட திறமுடை அமைச்ச!

திருமுறை தன்னைப் பெருமுறையெனக் கொண்டவரும் எளிதிலறிதல் நன்றெனக் கண்டு, நலமுடன் "பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு", எனப் பதிப்பித்து வெளியிட விரும்பும் கழக வெளியீடாம் நூலெண் ஆயிரத்தெட்டென நுவலுதல் நன்றெனக் கண்ட நன்னாளாம் இந்நாள், நானிலம் நன் னயங் கொண்டு அரியதொரு வாய்ப்பெனக் கருதி ஆற்றும் பணியது ஆல்போற்றழைத்து, அறுகுபோல் வேரூன்றி அன்பர் தம் அகத்து அறிவொளி வீசி அல்லலகற்றித் திருவருட் டிறனைத் திறம்பட அறிவதொரு வாய்ப்பென யாமாம் மறைமலை மனத்துட் கொண்டதை மாநிலம் மனத்துட் கொளுமென, மாண்புறு மலரெனக் குறுந்தொகையுடைய குரவர் தம் கூற்றினைக் குவலயம் அறியத் தொகுத்தது முறையே.

வீரமது தான்கொண்ட செயலணியே!

தம் இன்புறு துறையாம் நூற்கள் பதிப் பித்தலென்பது தம்மின் மெலியாரும் தம துடைமை, தம்மின் வலியாரும் தமதுடைமை தக்கதெனத் திறங்கொண்டு விருத்தியுறு வெளியீடாம் நூலெண் ஆயிரத்தெட்டது போல், தரணியதில் தம் கிளவி தாம் கொண்டு பெருமை பெறு பெருநூற்கள், பேரறிஞர் பேருரைகள் பேணித் தொகுத்தெடுத்து, தென் னவன், தென்பாண்டிநாட்டானின் தெருள் தெளிந்த தேவாரத்திரட்டதுவாம் பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டெனப் பாரறியப் பாத் திரட்டி எங்குமுறு ஈசனவன், எல்லார்க் கும் தாயானுன், ஏதமில் பெருமையதைப் பண்

புடனே பதிப்பித்துப் பாரறிய உலவவிடும் திருநாளாம் இந்நாளில், திறமுடனே தாம் கொண்ட திருக்கூத்தன் திருமுறைகள் தீர்க்க முடன் தீந்தமிழில் தித்திக்கும் சுவையமுதைத் தொகுத்திட்ட தொன்மைகொண்ட தோற்றமது தேவாரத் திரட்டெனவே திறமுடன் அறிய வைக்குந் திறன்கண்டு தீதிலாத் திருவிளக் கைத் தீவிருத்தி திகழொளியாய்த் திறன் கொண்டு ஏற்றுவித்த முறையது ஏற்றமென எம் சிந்தைதனிலோர் ஒளி தோன்றிற்று.

எய்தற்கரியது இயைந்தக்கால், செய்தற் கரிய செயலெனச் செவ்வுடன் செம்மை கொண்டு செருக்கற்று விருத்தியெனக் கண்டு வெளியிட விருப்புற்ற விறல்வேங்கை வீரமது தான் கொண்ட, விருத்திகொண்ட விரிநீர் வியனுலகத்துறை வீர வமைச்ச!

தம்மின்புறு பணியாம் பதிப்பித்தல் பண் டையப் பனுவல் தன்னைப் பாரறியவென விழைந்த விழைவினை, வேற்றிடம் புகுந்தும் விருப்புற்றுத் தம்திறன் கொண்ட திறமை தனைத் தான் வியக்க, பனுவலதைத் தான் கண்டு திருக்கூத்தன் திறன் கொண்ட தேவாரத் திரட்டதை வினயமுடன் விருத்தியுற வெளியிடு செய்ததுபோல், பேரறிஞர் பெரு ரையை, பைந்தமிழ்ப் பனுவல்களைப் பாங் குடனே பதிப்பித்து விலக்கெனக் கொள்ளாது விரிவுரைகள் தான் தொகுத்து, எந்நூலும் பதம் பிரித்துப் பாங்குடனே படிப் பவர் தம்மனத்துப் பசுமரத் தாணிபோல் பதியப் பதிப்பிக்குந் திறனைத் தமக்கிய, தம் மின்புறு செயலணிக்கிய,

*அடைந்தார் தம்பாவங்கள் அல்லல் நோய்கள்*
*அருவினைகள் அகற்றுவானை*
*ஆடல்புரிந்த நிலையும், அரையில் அசைத்த*
*அரவும், பாடல் பயின்ற பல்பூதம்*
*பல்லாயிரங் கொள்கருவி நாடற்கரியதோர்*
*கூத்துடையானை,*
*இயல்பாய ஈசனை எந்தை தந்தை என்சிந்தை*
*மேவி யுறைகின்றானை*
*ஈசனை யெவ்வுலகினுக்கும் இறைவன் தன்னை,*
*உள்ளுவார் உள்ளத்தானை.*
*ஊரானை யுலகேழாய் நின்றான் தன்னை,*
*எண்டிசைக்கும் ஒண்சுடராய் நின்றானை,*
*ஏறெப்பானை, என்சிந்தை யுறைவானை,*
*ஐயனை அழகனை, அனலேந்திய கையனை*
*ஒரு சுடரா யுலகேழுமானான் தன்னை,*
*ஓங்குமால்வரை ஏந்தலுற்றான் சிரம் வீங்கி*
*விம்முற ஊன்றிய தாளினானை,*
*ஒளவிய மகற்றுவிக்கும் அருமருந்தை,*
*ஆனந்தக்கூத்தன் தன்னை, அம்மைதன்*
*பங்கன் தன்னை அருள்*
*வெஃகி வணங்குவாம், விளித்தலென்ற*
*தன்மைக்கு*

விரைந்து வந்த வானுலக வாசி வளமுடனே வீறுகொண் டியக்கிவைத்த விண்ணுலகு உறைகின்ற வீரவாகுவின் தன்னருள்கொண்டு தடிந்ததோர் எழிலிபோல, ஏத்துவாம் என்றுமே மறைமலை. வணக்கம்.

20-8-1961 மறைமலை.

---

## உயர்திரு சி. வை. தாமோதரம் பிள்ளை

பல்கதிர் ஞாயிறு பகல் ஆற்றி மலைசேரும் பூமிக்கண் அகல் ஞாலம் விளக்கும் தன் பல் கதிர் வாயாகப் பகல் நுங்கியதுபோலப் படு சுடர் கல்சேரும் பாருலகின்கண், அருள் தீர்ந்த காட்சியார், அறன் நோக்கார், நயம் செய்யார், வெருவுற வாய்த்தவன் நெஞ்சம் போல்வாரும், ஒண்சுடர் கல்சேர உலகரும் தகையது தென்கடல் அழுவத்துத் திரை நீக்கா எழுதரூஉம் தண்கதிர் மதியத்து அணிநிலா நிறைத்தரப் புள்ளினம் இரை மாந்திப் புகல் சேர, ஒலி யான்று வள்ளிதழ் கூம்பிய மணி மருள் இருங்கழி பள்ளிபுக்கது போலும் பரப்பு நீர்த்தோன்றும் நிலமும், அதன் காண்டலிற் றன்னை மறந்து தன்னையும், அனைத்தையும் படைத்தவனின் பெருமையை எண்ணிவியந்து வழிபட்டு வருவோரும், மீக் கூடிய சென்னை மாநில நெய்தற் கரையில் நிறுவியதொரு திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகக் கிளை இடமாம், அதன் கண்ணுறைந்து, தமிழ்ப் பணியாற்றத் தன் தலைவரையும் செயலணியையுந் துணை கொண்டு, திறமுடன் சங்க இலக்கியங்களையும், இலக்கண நூற்களையும் எழிலுறும் வண்ணம் அச்சேற்றித் தமிழன்னைக்குத் தவப்புதல்வர்க ளெனத் தரணியறியப் பெரும் புகழுடன் விளங்கப் பணியாற்றிவரும் சுப்பையா என்ற பண்புடை அமைச்சரே!

தம் கழக நிறுவலுக்கு முன்பே, இவ்வுலக மாம் ஆவிகளுலகை வந்தடைந்தவனும், தம் பூவுலகத் தன்மையினை அறவே அகற்றி அரனின் நினைவிலே சிந்தையைத் திறமுறச் செலுத்தி இருந்தவனுமாகிய, நாமாகிய சி.வை. தாமோதரனர், தம் கழக வெளியீட்டு நாலெண்

ஆயிரத்தெட்டின் அணிபெறு விழாவிற்கு வாழ்த்துரை அளித்தலென்பது கற்பனைக் கெட்டா வொன்றெனத் தாமும், தம் தலைவரும், தம் அணியுறு குழுவும் எண்ணுதலியல்பே! எம் நிலையைச் சீர்திருத்தி எம்மைத் தம் கழக நிலையை அறியச்செய்ய வாய்ப்பளித்த வள்ள லார் அருட்டிரு மறைமலையடிகளென்பதைத் தாமறிதல் திறன்! தம் வெளியீட்டு நூலாம் "பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு", என்ற தொகுப்பினை ஆயுங்கால், தம் இறைநிலை அறியாதார்க்கு அருளொளி காட்டும் அற விளக்கெனக் காண்கின்றோம். தம் கழகத்து வெளியீடுகள் தனித்தமிழ் நடையில் இயங்கு வதையும் அறிதலில் அரும்பெரு அகமகிழ்வு அடைகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகக் குழுவே!

சைவசமயத்தின் சிறப்புறு திருமுறைகளைத் தொகுத்து வெளியீடு செய்ததைப்போற், சைவ சமய சாத்திரங்கள் எல்லாம் தனித்தனி பதிப் பித்துப் பொருள் தெளிவுறப் பதவுரை,



பொழிப்புரை காட்டி வெளியீடு செய்வதுடன், பிற சமயத்தினரின் கொள்கைகளையும், சைவ சமயக் கொள்கைகளையும் நூற்சான்றுகளுடன் ஒப்புமை காட்டுந் துறையில் மட்டிலும் கருத் தைச் செலுத்திப் பிற மதத்தினர் சைவசித்தாந்த நூலின், மெய்கண்ட தேவரின் பன்னிரண்டு சூத்திரங்க ளுடன் ஒப்புமைசெய்து கற்றறியத் தகுந்ததொரு தன்மையில் நூலெண் 1111 (ஆயிரத்து ஒரு நூற்றுப் பதினொன்றாக) வெளியிடல் நன் றென்பது எம் விருப்பம். சங்க இலக்கியங் களையும், காப்பியங்களையும், கம்பனின் கவித் திறன்களையும், எழிலுடன் தனித்தனி நூற் களாக "இலக்கிய நயங்கள்" என்ற தலைப்பிட்டு நூற்கள் தொகுத்து, தமிழன்னையின் தனி வளத்தைத் தரணிக்கு எடுத்துக்காட்டுந் தன் மையில் தெளி பொருளுடன் எடுத்துக்காட்ட லென்பதுவும், தம் எழில்பெறு பணியாக அமையவும் எம் விருப்பம். சங்க இலக்கியங் கள் இன்னின்ன இயைபுடையது என்ற தனிய தொரு நூலுந் திறம்படத் தொகுத்துக் காலத் தின் இயல்புக் கேற்றவாறு, மாணவர்களின் மனத்தில் பதியும்வண்ணந் தொண்டாற்றலுஞ் சாலச் சிறந்தது.

கழகக் கருத்துடைக் குரவனே!

கழகமென்பது பலர் குழுமியதொரு குழுவா யிருப்பினும், அதனைத் திறம்படக் கொண்டு, நேரா நிரந்தவர் நட்பு, இனம்போன்று இனம் அல்லார் கேண்மை, மனத்தின் அமையாதார் அறிவுரை இம் மூன்றும் அகற்றி,

"பகைநட்பாம் காலம் வருங்கால் முகம்நட்டு
அகநட்பு ஒரீஇ விடல்",

என்ற வள்ளுவரின் தமிழ்மறை கண்டறிந் தொழுகி,

"குணம்இலனாய்க், குற்றம் பலவாயின், மாற்றார்க்கு
இனன்இலனாம், ஏமாப்பு உடைத்து"

என்ற மறைநூலின் மறையை யறிந்தொழுகிக் கழகத்தைத் திறம்பட நடத்திக், கற்றறிந்தோர் பலரை யணுகி அவர் தம்மிடம் பண்டைப் பனு வல்களைச் செந்தமிழ்ச் செல்வியின் சீரிளமைத் திறனைப் பறை திருத்தும் பழைய சுவடிகளை வாங்கிக் கருத்தறிந்து, திறம்பட மொழிநயம் அறிந்து, பதிப்பித்துப் பாரறிய உலவவிடுதல் பாங்கெனப் பகர்கின்றேம். என்றுமே எழி லுடன் எம் மொழியிலுள்ள எழிலுறு கவின் களைத் திறம்பட அறிவோரைக் கண்டு, அவரிட மிருந்து பொருட்செறிவுடன் கருத்துக்களை நூற்சான்றுகளுடன் நுவல்வதைக் கொண்டு நந்தமிழன்னையின் வளங்களிற் புதைந்த, கிடைத்தற்கரிய கருவூலங்களைத் தொகுத் தெடுத்து, அப்புதினங்களை, அப் பொருள்களை யொத்தவைகளைக் கண்டறிந்து "பிற இலக்கியம் தமிழிலக்கிய உவமையணி", என்ற தலைப்பில் நூல் யாத்துப் பதிப்பித்தல் நன்று. அத்தன்மை யுடைய நூலினைப் பள்ளி உயர்வுநிலை மாண வர்களுக்குப் பாடத்திட்டமாக்க அரசியலாரை அணுகுவதும் அணியே! பண்டைய இலக்கியங் களின் திறனைப் பயனுறு வழிகளிலெல்லாம் பயன்படுத்த வாய்ப்பளிக்கும்மொழி நம் செந் தமிழ்மொழி யெனத் தன்னேரில்லாத் திற னுடன் கழகத்தின் திறனை வெளிப்படுத்துதல் கழக வமைச்சராம் தம் கடனெனக் கண்டு,

"ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே; ஒல்லாக்
செல்லும்வாய் நோக்கிச் செயல்", [கால்

என்ற செந்நாப்போதாரின் செம்மொழியாம், பொய்யாமொழியைச் செவ்வே யறிந்து செய லாற்றல் நன்று.

கழக எழிலுறு ஏற்றங்களே!

மிகைப்பட மிழற்றினமெனக் கருத்துட் செலுத்தினும், கடனென வுரைத்தனம் என்ற தன்மையின இயைந்ததெனப் பொருள்

கொண்டு திறம்படப் பாரில், தமிழ்மொழியின், தமிழன்னையின் தவப் புதல்வர்களென அறிந்து அன்னையாம் தமிழ்மொழியாம் மென்மை கொண்ட தமிழுக்குத் தொண்டாற்றத் திறன் நல்கத் திறமுறு வகையில் திறம்படக் கழகத் தின்கழறலை,கேட்பார் எவரும் ஏமம் கொள்ளப் பெரும் புகழுடன் பெருவாழ்வு வாழவே, எம் சிந்தையுறை தனிப் பரம்பொருளாம், சிவத் தினை யாம் வணங்கி, நாமனைவரும் குழுமி,

சீருந் திருவும் பொலியச் சிவலோக நாயகன்
சேவடிக்கீழ்
ஆரும் பெருத அறிவு பெற்றேன் பெற்றதார்
பெறுவாருலகில்
ஊரும் உலகும் கழற உழறி உமைமண
வாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும் பரிசுநாம் பல்லாண்டு
கூறுதுமே.

எனச் சேந்தனருரைத்த திருப்பதிகத்தினைக் கருத்துடன் பாடுதல் நன்றெனக் காண்கின்றேம்.

வாழ்க! வளமுடைத் தமிழ்மொழி
வாழ்க! வீறுடைக் கழகக் காவலர்
வாழ்க! கூறுடைக் குரவன்
வாழ்க! நாவுடை நல்லணி
வாழ்க! நாணயச் செயலர்கள்
வாழ்க! வையகம், வளமுடைத் தமிழினம்.

வணக்கம்.

20-8-61 சி. வை. தாமோதரன்

---

## பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்

செந்தமிழ்ச் சீர்நலம்
தீந்தமிழ்ச் சீர்நலம்
பைந்தமிழ்ச் சீர்நலம்
இன்றமிழ்ச் சீர்நலம்
இயற்றமிழ் இன்னலம்
இசைத்தமிழ் எழில்நலம்

நாடகத்தமிழ் நன்னலம், போற்றலே தன் முழு நோக்கெனக்கொண்டு, செறிபொழில் தழுவிய, திருநெல்லைப்பதியுறை செல்வர்தம் தாவளம், தலைமை கொண்டெழுந்த திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வித்திட்ட வேழம், முன்னுள் அமைச்சர் திரு. திருவரங்கம், பேணி வளர்த்த பெரு நலத்தை, அதனினும் சிறப்புறு வழியில், பல மொழி வளங் கொண்டும், தாய்மொழியாம் தன் மொழி தமிழ் வளம் நன்கு பயின்று, அதன் சுவை நிலை கொண்டுணர்ந்து, தனித்தியங்கும் தமிழ் நடையே சாலச் சிறந்ததெனத் தான் கண்டு வீறுடன் சென்னைப்பதி யமர்ந்து, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக இற்றை அமைச்சராம், திரு. வ. சுப்பையா அவர்தம் அணிபெறு அவையுடனியைந்து, கழக நூலெண் வரிசை ஆயிரத்தெட்டின் வெளியீடாம் "பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு", எனப் பாரறிய விழாச் செய்ய விழைந்ததொரு நன்னுளாம் இந்நாளில், செந்தமிழ்த் தெய்வச் சீர்நலம் சிறக்கப் போற்றலே கடனெனக் கொண்டொழுகும் கலை நாளாம் இந்நாளில், "ஆற தேறுஞ் சடையான் அருள் மேவ அவனியர்க்கு வீற தேறுந் தமிழால் வழிகண்ட", சைவக் குரவர்தம் திருமுறைகள் தொகுத்தெடுத்து, வெளியீடு செய்கின்ற வியத்தகு விழாவில் காணுவுலகவாசிகளாம், எம்தம் குழுவிற்கும் ஆங்கோரொளி உண்டென உரைத்த உறுதிமொழி தம்மை உட்கொண்ட உள்ளே, மு. கதிரேசச்செட்டி வாழ்த்துரை கழறத் துணித்தனமெனக் காண்க.

முத்தமிழ் நூல் பதிபடு பாண்டியன், நேமி நிமிர்தோள் நிலவுதார்த் தென்னவன், தண் படா யானைத் தமிழ்நர்பெருமான், இமிழ்திரைக்



கார்க்கடற் கொற்கையார் காவலன், வியன் தமிழ் நாடைந்தின் குலங்காவல் கொண்டொழுகிய கோமான், உரைசால் சிறப்பின் புகழ் சால் மாறன், ஆண்ட பாண்டி நாட்டுப் பழம் பெரும் பதியாம், நெல்லைப்பதியுறை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்

தாந்த நூற்பதிப்புக் கழக, சென்னைப் பகுதிக் கிளையுறை செம்மை சால் அறிவுடை அமைச்ச!

நம் கழக வெளியீட்டு நெட்டெண் ஆயிரத் தெட்டின் அணிபெறு அரங்கேற்றுத் தனி நாளாமித் திருநாளில், பண்புற்ற திருஞான சம்பந்தர், நண்புற்ற நாவரசர், பெண்பெற்ற சுந்தரர், வான்கலந்த மாணிக்கவாசகர், நிருத்த ஞர்க்குத் திருஇசைப்பா உரைத்தவர்கள், விடு முறைகள் விருத்தியுறப் பாடினோர்கள் பதிகங் கள் தொகுத்தெடுத்துப் "பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு" எனப் பாங்குறப் பதிப்பித் துப் பாரறிய உலவவிடும் திருநாளாம் இந் நன்னாளில், தம் சிந்தை தன்னில், செப்பமுடன் செவ்வை கொண்டு, செம்பொருள் செம்மை யறிந்து, செவ்வே யாற்றுஞ் செம்மை சால் செம்மல், வால் அறிவன், நற்றுள் தொழவல் லார்க்கு, வீடுபேரின்பம்,விழுப்பமுடன் விரிநீர் வியனுலகத் துறைவார்க்கு, விருத்தியுற, வேண்டும் விழுப்பமெனத் தாம் கொண்ட தன்மை கண்டு அருந்திறலரசன், ஆனந்த வள்ளலார் தம்பெருமை தரணிக்குத் தகுந்த தெனத் தாம்கண்டு தம்திறனை யாம்கண்டு, தம் நூலெண் ஆயிரத்தெட்டின் அணிகண்டு, கதிரேசன், செத்திடமும், பிறந்திடமும், இனிச் சாவாதிருந்திடமும், அத்தனையும், அறியா தாரை அறிய வைக்கும் அருளொளியே ஆயிரத்தெட்டெனக் களிக்கின்றும், சிரிக்கின் றும், மெச்சுகின்றும், வியக்கின்றும், உவக் கின்றும்.

கழக அணிபெறு அறிவுடை அவையே ;

அழுக்கற்று, அருள் வெஃகி, அறன் நோக்கி, தீயவையஞ்சிக், கைம்மாறு வேண்டாக் கடப்பாடுடையராய், கழகத்தின் நலனை கருத் துட்கொண்டு, புகழ்பட, இயைந்து வாழ்ந்து, அருள் சேர்ந்த நெஞ்சினராய், தம் அமைச்ச ருடன், அணிபெற இயைந்து, மெய்ப்பொரு ளறிந்து, உவப்பத் தலைக்கூடி, செல்வத்துட் செல்வம் கல்விச் செல்வமெனக் கண்டு, உலகு இன்புற உற்றதோர் உள்கொண்டு நுண் மாண் நுழைபுலமுடன் கொண்டு, மூத்த அறி வுடையார் கேண்மைத் திறனறிந்தொழுகிக் கொண்டதுறை இலக்கணமும், அதன் சிறப் பும் ஆய்ந்தறிந்து, எப்பனுவற்கும் தெளி வுரையே சிறந்ததெனக் கொண்டு திறம்படவே, பண்டைப் பனுவல்கள் பதிப்பிக்க உறுதுணை யாய் உம் அமைச்சருடன் இயைந்திருந்து, இன்றதுபோல் என்றுமே, வெளியிடல் நன் றெனவுரைக்கின்றுன் உறுபுலவன் கதிரேசன் நா நலமுடைமை நன்றெனக் கொள்

நற்றிறன் கொண்ட நயமுடை அமைச்ச!

நூலறிவொடு, நுண்ணறிவும் தாம் கொண்டு, வினைமுறையறிந்து, உலகியலதனை உணர்ந்து, நிறைமொழி மாந்தர் மறைமொழி யறிந்து குணமெனுங் குன்றேறி, பண்டைய செந்தமிழ் நூற்களைச் செவ்வனம் ஆய்ந்து, அவை தம்முள்ளுறை நுண்பொருள் தொகுத்து, செந்தமிழ் மொழியினைச் சீருடன் அமைத்து, செந்தமிழ்ச் செல்வியைச் சீருடன் வெளியிட்டு,

"தொகுத்தல் விரித்தல் தொகைவிரி
மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே"

என்று தொல்காப்பியனுருரைத்த உறுபொரு ளைத் தம்முட்கொண்டு, ஆற்றும் பணியதாற்றி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் புகழினைப் பாங்குடன் பரப்பி, செந்தமிழ்த்தேன் பிலிற்றும் பைந்தமிழ்ப் பாடல்களைத் தெளிவுடன் சொல் லுக்குச் சொல் சுவை கொடுத்துப் பொருள் பிரித்துப் பதிப்பித்து, செப்பமிகு இயலமைப் பும், இலக்கணமும், எம்மொழியாம் தம் மொழி யாம் தமிழ் மொழிக்கே உண்டென அறிந்து அன்னையாம் தமிழன்னைக்குத் தொண்டாற்ற அவனியெல்லாம் தமிழன்னை புகழ்பரப்ப, என்றுமே தாம் தம் அணிபெறு அவையுடன், சிறக்க வாழ, எம் சிந்தையுறை

முத்தனை முத்தசோதியை, முக்கண் அப்பனை
கமல நான்முகனுங் கார்முகில் நிறத்துக்
கண்ணனும் நண்ணுதற்கரிய விமலனை,
திண்போர் விடையான், சிவபுரத்தார், போ
ரேறை தக்கன் தன் வேள்வியினில்
சந்திரனைத் தேய்த்தருளி ஞனைச்
செட்டியவன், தனக்கு அருளளிக்கும்
அண்ணல்தன்னை,

அவனுடனுறை யெம் தலைவன், அருளுடை வீரவாகுவின் துணையுடன் துதிப்பாம்.

வணக்கம்.

20-8-1961. மு. கதிரேசன்

## நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார்

... ... ...

ஆடிய கூத்தனைப் பாடிய புகழினைப்
பன்னிரு திருமுறைப் பெருந்திரட் டென
எறிதிரைக் கருங்கடல் கவினுறு ககுபம்
கழகக் காவின் குழுவுடைக் குரவன்
குறிக்குங் குரவன் கொள்ளும் விளியே
செறுநர்த் தேய்த்த தடக்கைச் செவ்வேள்

... ... ...

கழகக் காவின் கிளைத்துறைச் சென்னை
கழகக் கிளைத்துறைக் கருத்துரைக் கனிவில்
கட்டிய காமுறு காவணக் கானலிற்
கழகக் கருத்துடைக் கிலம் நூலென
நாவலர் நாட்டும் நாளும் நூலெண்
நுவலும் ஆயிரத் தெட்டின் கால்கோள்



காண்பு கண்டு களிக்கக் கருத்துடைக்
குரவன் கூறெனக் கழறினர் கடுகுக
காணுக! வாழ்த்துக! வெனவு ரைத்தனர்
கொண்டனம் கொள்கை விரைந்தனம்! கண்டனம்
காசிக் கருவர் கருத்தில் திருத்தத்
தீதிலாத் தவத்தால் திருவுடன் திகழும்
கழகக் கருத்தணிக் காவின் தலைவர்
காசி விசுவ நாதக் குரவன்
சுப்பையா கழகக் கூட்டணித் துணையுடன்
கவினுறு காவாம் காவணத் தருவில்
தோற்றிய அரங்கில் திருவுடைக் கட்டிலிற்
ஏற்புட னிருந்த கருவர்தாள் வணங்கி
கூருடைக் குரவன் கால்கோள் விழாவில்
கடைநிலை சாற்றித் திருவடி வணங்கக்
கழகந் தழைக்கக் கழகக் கருத்தணி
மங்கல நெடுங்கொடி மாணுற ஏந்த
மறுவில் மங்கை மாண்குட மேந்த
பொன்னணி மங்கை பொற்குட மேந்த
தீதிலாத் திருமகள் திருவிளக் கேந்த
மதிமிகு மங்கையர் மங்களம் பாட
மாசிலா மங்கை மணிவிளக் கேந்த
மதிமுக மங்கையர் மலர்மழை தூவ

... ... ...

தண்ணார் தமிழ்மொழி சால்புடன் தழைக்கப்
பண்ணார் பதிகம் பாவலர் பாட
முரசெழுந் தியம்பப் பல்லியம் ஆர்ப்ப
காரிடைக் கமஞ்சூல் கருணை பொழியக்
கருத்துடை ஞாலங் கண்டு களிக்கக்
காசிக் கருவர் கருத்தில் திருத்தக்
கழகக் கருத்தணிக் காவின் தலைவர்
தீதிலாத் தவத்தால் திருவுடன் திகழும்
காசி விசுவ நாதற் றொழுது
கண்ணிடை நவமணி யொழுகக் கனிவுடன்
பன்னிரு திருமுறைப் பெருந்திரட் டதனைத்
திருத்தகு கையாற் றிறம்படப் பொருத்தினன்
கண்டனம்! களித்தனம்! எம்முடைக் குழுவுடன்
வாழ்த்தினம்! வாழ்த்தினம் வருவிதித் திறனுடன்
போற்றினம்! போற்றினம்! புண்ணியன் பெருமையைச்
சாற்றினம்! சாற்றினம்! சால்புடைத் தலைவனை
உவந்தனம்! உள்ளம் களித்தனம்! காண்பு

... ... ...

வாழிய! சைவசித் தாந்தநூற் பதிப்பகம்
வாழிய! சிவஞான முனிவர் நூல் படிப்பகம்
வாழிய! மறைத்திரு மறைமலை நூலகம்
வாழிய! தலைவர் காசிவிசுவ நாதன்
வாழிய! கருத்துடைக் குரவன் சுப்பையா
வாழிய! கழகக் காவின் கூட்டணி
வாழிய! காவின் சீருடைச் செல்வர்கள்
வாழிய! வாழிய! திருவருள் வாழ்க.

20-8-61.

ந. மு. வேங்கடசாமி

# ஐந்து திருக்கோயில்கள்

[டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை]

சொல்லின் செல்வர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை திருநெல்வேலியில் இராசவல்லிபுரம் என்னும்சிற்றூரில் 1896 ஆம் ஆண்டில் தோன்றியவர். பி.ஏ., பி. எல்., பட்டங்கள் பெற்றபின் பச்சையப்பன் கல்லூரியில் ஆசிரியராகச் சிலகாலம் பணியாற்றினர். பின்னர் எட்டாண்டுகள் நெல்லையில் வழக்கறிஞராக விளங்கினர். ஆறுஆண்டுகள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த் தொண்டாற்றிய பின் 1935 இல் சென்னைப் பல்கலைக்கழகப் பணி ஏற்றார். பேராசிரியரவர்கள் தம் எழுத்தாலும் சொல்லாலும் இடையறாது தமிழ்த்தொண்டுபுரிந்து வருகின்றார்கள். அவர் இயற்றிய 'தமிழின்பம்' என்ற நூலுக்கு மத்திய அரசு ரூ. 5,000 பரிசளித்தது. தமிழ் வளர்ச்சிக்காகச் சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்கள் ஒவ்வொன்றிற்கும் ரூ. 25,000 நன்கொடை வழங்கியுள்ளார். அவர்கள் பணியைப் பாராட்டிச் சென்னைப் பல்கலைக் கழகம் அதன் நூற்றாண்டு விழாவில் 'டாக்டர்' பட்டத்தை அளித்தது.



"தென்னாடுடைய சிவனே போற்றி" என்று பாடினர் மாணிக்கவாசகர். பாரத நாட்டின் தென்பாலுள்ள தமிழ்நாட்டில் சிவ வழிபாடு சாலப் பழமை வாய்ந்தது. 'பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைந்துள்ள' பரமசிவனுர்க்குப் பல்லாயிரம் கோயில்கள் தமிழ்நாட்டில் உண்டு. அவற்றுள் தேவாரப் பாமாலை பெற்ற திருக்கோயில்களைப் 'பாடல்பெற்ற தலங்கள்' என்று போற்றுவர் சைவ நன்மக்கள்.

இத்தகைய பெருமைசான்ற திருக்கோயில்களுள் தலைசிறந்தது சிதம்பரம். ஆதியில், அவ்வூர் தில்லை மரங்கள் நிறைந்த காடாக இருந்தது. அதனல் தில்லை என்னும் பெயர் அதற்கு அமைந்தது. சைவ உலகத்தில் எல்லையற்ற பெருமை வாய்ந்தது தில்லையம்பதியாகும். அங்குள்ள திருக்கோயிலைச் சிற்றம்பலம் என்று தேவாரம் பாடிற்று. திருச்சிற்றம்பலம் என்பது சிவனடியார்க்கு ஒரு சிறந்த மந்திரம். தேவாரம் திருவாசகம் முதலிய திருமுறைகளைத் தொடங்கும்பொழுதும் முடிக்கும்பொழுதும் திருச்சிற்றம்பலம் என்ற மறைமொழியை மனமார நினைத்து, நாவார நவிலும் முறை இன்றும் தென்னுட்டிலே உண்டு. திருச்சிற்றம்பலம் என்பது தில்லையம்பலமே. அம்பல வாணன் ஆகிய ஈசன் சேவடியைப் போற்றும் செல்வமே செல்வம் என்று பாடினர் திருஞானசம்பந்தர்.

> "செல்வ நெடுமாடம் சென்று சேண்ஓங்கிச்
> செல்வம் மதிதோயச் செல்வம் உயர்கின்ற
> செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலம்மேய
> செல்வன் கழல்ஏத்தும் செல்வம் செல்வமே."

என்பது அவர் திருவாக்கு.

தில்லைச் சிற்றம்பலத்தை மன்னரும் முனிவரும் அன்பரும் தொழுது தொல்லைவிரும் பிறவியைத் தொலைத்தனர்; திருச்சிற்றம்பலத்தைப் பொன்னல் வேய்ந்து பொன்னம்பலம் ஆக்கினர் தமிழ் மன்னர். அவ் வம்பலத்தில் ஆனந்த நடம்புரியும் அழகிய கூத்தனைக் கண்களிப்பக் கண்டு இன்பவாரியில் மூழ்கினர் மெய்யன்பர்கள். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில் புரியும் அழகிய கூத்தனைக் கண்ணாரக் கண்டு வழிபடும் பேறு கிடைக்குமாயின் 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே' என்று பாடினர் திருநாவுக்கரசர்.

"குனித்த புருவமும் கொவ்வைச்செவ்
வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
பாதமும் காணப்பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவ
தேஇந்த மாநிலத்தே."

என்பது அவர் திருப்பாட்டு.

திருநாவுக்கரசரின் உள்ளங் கவர்ந்த பொற் பாதத்தைப் போற்றிப் பிறவிப் பயனடைந்த அடியார் எண்ணிறந்தவர். அத் திருவடியின் பெருமையை ஊன் கரைந்து உயிர்கரைந்து,

"ஆடிய பாதம்மன் ருடிய பாதம்
பாடிய வேதங்கள் தேடிய பாதம்
தீராத வல்வினை தீர்க்கின்ற பாதம்
தெய்வங்கள் எல்லாம் தெரிசிக்கும் பாதம்"

என்று நடராசப் பெருமானது பொன்னடி போற்றினர் வடலூர்ப் பெரியார்.

சைவ சமயத்தின் புண்ணியக் கண் ணெனத் திகழ்வது தில்லை அம்பலம். திருத்தொண்டர் புராணம் இயற்றப்போந்த சேக்கிழார் பெருமானுக்கு 'உலகெலாம்' என்று அடியெடுத்துக் கொடுத்த மன்றம் தில்லைச் சிற்றம்பலமே. 'தில்லை பாதி திருவாசகத்திலே' என்று உலகம் சொல் லும் வண்ணம் திருவாசகத்தில் ஒரு பாதி வாசகம் பெற்றது தில்லைச் சிற்றம்பலமே. 'கட்டை யிருக்கையில் சிதம்பரம் போய்க் காணவேணும் ஐயே!' என்று திருநாளைப் போவாரைக் கதற வைத்தது தில்லைச் சிற்றம்பலமே! இத்தகைய சீர்மை வாய்ந்த தில்லையின் எல்லையில் இன்று அருந் தமிழ்க்கலை வளர்க்கும் அண்ணமலைப் பல்கலைக்கழகம் நின்று நிலவுவதும் கண்ணுதற் பெருங் கடவுளின் கருணைக்கு ஓர் அடையாளமன்ருே?

இனி, பாண்டி நாட்டின் பழம்பதி யாகிய மதுரையைச் சிறிது பார்ப்போம். சிவநெறியையும் செந்தமிழையும் செம்மை யாகப் பேணி வளர்த்த பெருமை மதுரை மாநகருக்கே உரியதாகும். அந்நகரை ஊற்றுப் பெருக்கால் ஊட்டி வளர்க்கும் வைகை யாற்றையும், அந்நகரிலே வீசு கின்ற மெல்லிய பூங்காற்றையும் தமிழ் மயமாகவே கண்டனர் தமிழ்க் கவிஞர்.

"புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடி."

என்று வைகையாற்றைச் சிலப்பதிகாரம் பாடிற்று. மதுரையம்பதியில் பாண்டிய மன் னர்கள் கண்ணும் கருத்துமாக வளர்த்த தமிழ்ச் சங்கத்தில் ஈசனே தலைமைப் புலவ ஞக அமர்ந்திருந்தான் என்று புராணங்கள் கூறும். "கண்ணு தற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து, பண்ணுறத்தெரிந் தாய்ந்தஇப் பசுந்தமிழ்" என்று பாடினர் ஒரு தமிழ்க்கவிஞர். நான்மாடக் கூடல் என்று தமிழிலக்கியத்தில் குறிக்கப்படு கின்ற மதுரைமாநகரில் அமைந்த திருக்கோயில் 'ஆலவாய்' என்னும் பெயர் பெற்றது.

"மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாள்தொறும் பரவப்
பொங்கழல் உருவன் பூதநா யகன்,நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னெடும் அமர்ந்த
ஆலவாய் ஆவதும் இதுவே!"

என்று பாடியருளினர் திருஞானசம்பந்தர்.

இத் திருப்பாசுரத்தில் அங்கயற் கண்ணியோடு அமர்ந்தருளும் செம்பொரு ளாகிய ஈசன் பெருமையைப் பேசுகின்ருர் திருஞானசம்பந்தர். பாண்டி மன்னனும் பாண்டி நாடும் சமண சமயத்தைப் பற்றி நின்றபோது, ஆலவாய்ப் பெருமானிடம் அயராத அன்புபூண்டு சிவநெறியை ஆதரித்த பாண்டிமா தேவியை மங்கை யர்க்கரசி என்றும், பங்கயச் செல்வி என் றும் பாராட்டினர் திருஞானசம்ப்ந்தர். மங்கையர்க்கரசியின் கருத்தறிந்து சமணர் களோடு கனல்வாதமும் புனல்வாதமும் நிகழ்த்தினர். சைவசமயத்தை மீண்டும் பாண்டி நாட்டில் நிலைநாட்டினர். கருணை யங்கடலாய இறைவன் திருவிளையாடலைக் கண்ட மதுரைமாநகரம் அன்றுமுதல் சிவமணம் கமழும் திருநகராகத் திகழ் கின்றது.

பாண்டிய நாட்டின் தலைநகராக மதுரை மாநகரம் சிறந்து விளங்கிய வண்

ணமே தொண்டை நாட்டின் தலைநகராகத் திகழ்ந்தது காஞ்சி மாநகரம். காஞ்சியின் பெருமை தமிழ்நாட்டில் மட்டுமேயன்றிப் பாரத நாடு முழுவதும் முன்னாளில் பரவியிருந்தது. 'நகரங்களிற் சிறந்தது காஞ்சி' என்னும் பொருளுடைய வாசகம் ஒன்று வடமொழியில் உண்டு. 'கல்வியிற் கரையிலாத காஞ்சி மாநகரம்' என்று தேவாரம் அந்நகரத்தைப் புகழ்ந்து பாடிற்று. காஞ்சி மாநகரிலுள்ள சிவாலயங்களுள் தலைமை சான்றது 'கச்சி ஏகம்பம்' என்னும் திருக்கோயிலாகும். ஏகம்பம் என்பது ஏகாம்பரம் என்ற சொல்லின் சிதைவு என்பர். ஒரு மாமரத்தின்கீழ் ஈசன் கோயில் கொண்டமையால் ஏகாம்பரம் என்னும் பெயர் அதற்கு அமைவதாயிற்று. ஏகம்பத்தில் உள்ள இறைவன் ஏகம்பன் என்று பெயர் பெற்றான். கச்சி ஏகம்பனை ஆன்றோர் பலர் பாமாலை அணிந்து போற்றியுள்ளனர். தேவாரம் பாடிய சுந்தரர் கச்சியிலுள்ள ஏகம்பனைக் கம்பன் என்றே பாடித் தொழுதார்.

"ஆலம் தான்உகந்து அமுதுசெய் தானை
ஆதி யை,அம ரர்தொழுது ஏத்தும்
சீலம் தான்பெரி தும்உடை யானைச்
சிந்திப் பார்அவர் சிந்தையு ளானை
ஏல வார்குழலாள் உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன்எம் மானைக்
காணக் கண் அடி யேன்பெற்ற வாறே."

என்பது அவர் திருப்பாட்டு.

இத் திருப்பதிகத்தில் சுந்தரர் மேலும் பாடும்பொழுது 'நல்ல கம்பன்' என்றும், 'பெரிய கம்பன்' என்றும் கச்சியேகம்பனைப் போற்றுகின்றார். கவியரசனாகிய கம்பன் பெயர், கச்சி ஏகம்பனுடைய பெயராக இருத்தல் கூடுமோ என்பது ஆராய்தற்குரியதாகும்.

இனி, ஈசன் கோயில் கொண்டுள்ள மலைகளுள் ஒன்றைப் பார்ப்போம். தென்னாட்டில் திருஅண்ணாமலை முதலிய பல மலைகள் இருப்பினும் கண்ணப்பன் வழிபட்ட காளத்தி மலை ஒரு தனிச் சிறப்புடையதாகும். கண்ணப்ப நாயனார் பெருமை தேவாரத்திலும் திருவாசகத்திலும் பேசப்படுகின்றது. காளத்தி மலையைப் பாடிய திருஞானசம்பந்தர் கண்ணப்பனது ஒப்பற்ற பத்தியைப் புகழ்ந்து போற்றுகின்றார்.

"வேயனைய தோள்உமையொர்
பாகமது வாகவிடை யேறி,சடைமேல்
தூயமதி சூடி,சுடு காடில்நட மாடி,மலை
தன்னை வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல
ராகும்நயனம்
காய்கணை யினால்இடந்
தீசன்அடி கூடுகா ளத்தி மலையே."

என்பது அவர் அருளிய தேவாரம்.

காளத்தி நாதனை வணங்கிப் பாமாலை சாத்திய திருஞானசம்பந்தர் கும்பிட்ட பயன் காண்பார்போல் அம்மலையில் சிலை வடிவாக நின்ற கண்ணப்பனையும் மனம் கசிந்து வழிபட்டார் என்று சேக்கிழார் மிக உருக்கமாகப் பாடுகின்றார்.

தமிழ் நாட்டின் தென்கோடியில் அமைந்தது திருஇராமேச்சுரம். பாரத நாட்டு மக்களும் இலங்கை நாட்டு மக்களும் பரவி வழிபடும் பெருமை வாய்ந்தது இத் திருக்கோயில். ஈச்சுரம் என்பது ஈசனாகிய சிவபெருமான் உறையும் கோயிலாகும். காவிரிப்பூம்பட்டினத்தில் பல்லவன் ஒருவன் கட்டிய ஈசன் கோயில் பல்லவனேச்சுரம் என்று பெயர் பெற்றது. சோழ நாட்டில் நாகர் தலைவன் ஒருவன் கட்டிய திருக்கோயில் திருநாகேச்சுரம் என்று பெயர் பெற்றது. இவ்வண்ணமே இலங்கையின்மேல் படையெடுத்து இராவணனை வென்று திரும்புங்கால் இராமன் ஈசனுக்குக் கோயில் அமைத்து வழிபாடு செய்த இடம் இராமேச்சுரம் என்று பெயர் பெற்றது என்பர். தேவாரத்தில் இக்கருத்து உணர்த்தப்படுகின்றது.

"தேவியை வவ்விய தென்இலங்
கைத்தச மாமுகன்
பூவியல் லும்முடி பொன்றுவித்
தபழி போய்அற
ஏவிய லும்சிலை அண்ணல்செய்
தஇரா மேச்சுரம்
மேவிய சிந்தையி னார்கள்தம்
மேல்வினை வீடுமே."

என்று பாடினார் திருஞானசம்பந்தர்.

இதுகாறும் கூறியவற்றால் தமிழ் நாட்டிலுள்ள ஐந்து சிவப்பதிகளின் பழமையும் பெருமையும் ஒருவாறு விளங்கும்.

# குறித்த இன்பம்

[திரு. முத்து. இராசாக்கண்ணனார்]



மறைத்திரு ஞானியாரடிகளின் சிறந்த மாணவரான, திரு. முத்து. இராசாக்கண்ணனார் தென்னார்க்காடு மாவட்டம், கரையேறவிட்ட நகரில் 1914 ஆம் ஆண்டு, பா. முத்துலிங்க முதலியாருக்கும் பொன்னம்மாவுக்கும் அருமை மகனாராகத் தோன்றி, அர்ச் ஏசோப் கிளை—உயர்நிலைப் பள்ளிகளில் பயின்றார். மதுரைத் தமிழ்ச்சங்கப் புகுமுகத்தேர்வில் முதல்வராகத் தேறிப் பரிசும் பெற்றுப், பின்னர் வித்துவான் ஆனார். B.O.L., B.O.L. (Hons.) ஆகிய தேர்வுகள் எழுதி M.A. பட்டம் கொண்டார். ஏழாண்டுகள் உயர்நிலைப் பள்ளிகளில் தலைமைத் தமிழாசிரியராகவும், 1942இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாசிரியராகவும், பின்னர், சென்னை; கோவை அரசினர் கலைக் கல்லூரிகளில் தமிழ்த் துறைத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். 1956 ஆம் ஆண்டு, செப்டம்பர் முதல் மலேயாப் பல்கலைக் கழக இந்தியப் பகுதித் தலைவராகப் பதவியேற்றுச் சிறப்புடன் தமிழ்த்தொண்டாற்றி வருகின்றார். சிறந்த நூலாசிரியருமாவர்.

உள்ளத்துணர்வாகிய அகம் பற்றியும் உலகத்துணர்வாகிய புறம் பற்றியும் பண்டைத் தமிழ்ப் பெருமக்கள் தமிழ்ச் செய்யுட்களைப் பிரித்தனர் என்ற உண்மையை நாம் நன்றாக அறிவோம். அக உணர்வு பற்றிய தொகை நூல்கள் நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, அகநானூறு என்பனவாம். இடை இடையே இறை உணர்வை ஊட்டி இன்ப எழுச்சியையும் பாடும் பரிபாடலும், கலித்தொகையும் யாப்பு வகையில் வெவ்வேறாக அமைந்து விட்டன; ஆனால் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு என்பவை யாப்பு வகையில் ஓரினத்தைச் சேர்ந்தவை. இவற்றில் உள்ள பாடல்கள் யாவும் ஆசிரியப் பாக்களாகும். உணர்வு அடிப்படையிலும் யாப்பு அடிப்படையிலும் ஒன்றாக அமைந்த இவற்றை மூன்றாகப் பிரிப்பானேன்? என்ற வினா எழலாம். பனை ஓலையில் எழுதிய பழங்காலத்து மக்கள் ஓலைச்சுவடி பேருருவத்தைப் பெற்றுவிடும் எனும் கருத்தினால் அவற்றைப் பிரித்திருத்தல் கூடும். அவ்வண்ணம் பிரித்த பொழுது அடி வரையறை அடிப்படையிலேயே இதனைச் செய்திருக்கிறார்கள்.

குறுந்தொகை நான்கடிச் சிறுமையும் எட்டடிப் பெருமையும் பெற்றிருக்கின்றது; ஒன்பது அடிச் சிறுமையும் பன்னிரண்டடிப் பெருமையும் பெற்ற பாடல்கள் நற்றிணையில் இடம் பெற்றன. பதின்மூன்றடிச் சிறுமையும் முப்பத்தோரடிப் பெருமையும் உடைய செய்யுட்கள் அடங்கிய தொகைநூல் அகநானூறு என்று அழைக்கப்பட்டது. தொகை, திணை, அகம் என வெவ்வேறு பெயர்களை இந் நூல்களுக்குச் சூட்டியோரின் அறிவின் நுட்பத்தை நாம் போற்றாமலிருக்க முடியாது.

காதல் இருவர் கருத்து ஒருமித்து ஆதரவுபட்ட அக உணர்வாகிய நல்லின்பத்தைப் பேசும் இம்மூன்று தொகை நூல்களுக்குள்ளே அகநானூற்றில் உள்ள ஒரு பாடலின் அழகை இப்பொழுது காண்போம். அந்த அழகைக் காணும் நெறியில் "குறித்த இன்பம்" என்ன என்பது பற்றியும் அறிவோம்.

இப்பாடல் குறிஞ்சித் திணையைச் சேர்ந்தது. 'குறிஞ்சி' என்பது மலையும் மலைசார்ந்த இடமும் என்ற விளக்கத்தினை அறியாதவர் இரார். மலைநாட்டில் நடந்த

நிகழ்ச்சியைத்தான் இப்பாடல் இயம்புகிறது. திணை என்பது நிலத்தைக் குறித்துப் பின்னர் அந்த நிலத்தின் உரிமையாக அமைந்த ஒழுக்க நெறியையும் புலப்படுத்துவது. அந்த முறையில் 'கூடுதல்' என்ற ஒழுக்கத்தினைச் சுற்றி ஓடுவது குறிஞ்சிப் பாடல்.

தலைவன் தலைவியரைப் பற்றிப் பல முறை கேட்டிருக்கின்றீர்கள்; ஆதலின் அவர்களைச் சுற்ருது அவர்கள் வாழ்வில் எந்தப் பகுதியை இப்பாடல் தொட்டுச் சுட்டுகிறது என்பதைப் பார்ப்போம்.

களவில் தலைமக்களாகிய இருவரும் கலந்தனர். அவர்தம் இணையிலா நட்பு வளர்மதி என வளர்கிறது. தலைவன் தொடர்ந்து தலைவியைக் காணத் துணையாகியது தினைப்புனம். இங்குப் பகலிலும் இரவிலும் ஒருவரை ஒருவர் கண்டு கலந்து மகிழ்கின்ருர்கள். இதற்குப் பெறலரும் துணையாகத் தோழி சமைந்துவிடுகின்ருள்.

பகலில் தலைவியை முன்னெல்லாம் கண்ட இடத்திலே காணும் ஆவலுடன் தலைவன் வந்து நிற்கின்ருன். அவன் எண்ணியவாறு அவன் எண்ணத்திலும் நெஞ்சிலும் இடம்பெற்ற ஏந்திழை தலைவியை அங்குக் காணவில்லை. ஆனல் அவளுக்குப் பதிலாக அவளின் உயிர்த் தோழி நிற்கின்ருள். அவள் தலைவனை விளித்துப் பேசுகிருள். 'நாட!' என்றழைக்கின்ருள். 'நாட' என்ருல் நாட்டுக் குரியவனே என்பது பொருள். அந்த நாட்டின் இயற்கை வனப்பை ஒன்பது வரிகளில் வாய்மணக்கச் சொல்கின்ருள். அவள் சொல்வனவற்றை நாமும் கேட்போம்.

"கோழிலை வாழைக் கோள்மிகு பெருங்குலை
ஊழுறு தீங்கனி உண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொடு ஊழ்படு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
அறியாது உண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது
நறுவீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்
குறியா இன்பம் எளிதின் நின்மலைப்
பல்வேறு விலங்கும் எய்தும் நாட!"

இப்பாடலிலே உள்ளன பதினேழு வரிகளே! அவற்றில் ஒன்பது வரிகள் மலைநாட்டழகைப் புலப்படுத்துகின்றன. இந்த வரிகள் இயற்கையின் பேரெழிலை நுகர விரும்பும் எவரையும் கவர்ந்துகொள்ளும் இயல்புடையன. மலைநாட்டு மரம், செடி, கொடி, மலர் இவற்றை மட்டும் விரிவாக விளக்குவனவாக இவ்வரிகள் அமையாது ஆங்கு நடைபெறும் ஒரு நிகழ்ச்சியை அழகுற எடுத்துக் காட்டித் தோழி கூறவந்த கருத்தினையும் குறிப்பாகக் கூறுமாறு செய்துவிடுகின்ருர் பாடலின் ஆசிரியர் கபிலர். இவ்வரிகளில் கோள், ஊழ், தேறல், கடுவன், கறி, சாந்தம், வீ, அடுக்கம் ஆகிய சொற்களே அருஞ்சொற்களாகத் தோன்றும். கோள்-முற்றி நிறைதல்; ஊழ் - முறைமை; தேறல் - தேன், மது; கடுவன் - ஆண் குரங்கு; கறி-மிளகு; சாந்தம்-சந்தன மரம்; வீ-மலர்; அடுக்கம் - பக்கமலை.

இனிப் பொருளைக் காண்போம். வாழையும் பலாவும் பழுத்துக் கனிந்தன. அப்பழங்களிலிருந்து தேன் வழிந்தோடிப் பாறைச் சுனையில் நிறைந்தது. பல கனி உண்டு தேக்கி வறட்சி பெற்ற ஆண் குரங்கு தேனை நீர் என்றெண்ணிக் குடித்தது. குடித்த குரங்கு மயங்கி மரமேறவும் முடியாது மலைச்சாரலில் இயற்கையாக அமைந்த மலர்ப் படுக்கையில் கண்ணுறங்குகின்றது. இவ்வாறு பலவகைப் பட்ட விலங்குகளும் எதிர்பாராத இன்பத்தைப் பெறும் மலைநாட்டின் தலைவனே!

இந்த அளவும் கூறித் தோழி விட்டிருந்தால் அவள் உள்ளக் கிடக்கையை நாம் அறிதல் அருமையாகும். உடன் திடுமெனக் "குறித்த இன்பம் நினக்கெவன் அரிய?" என்று வினவுகின்ருள். 'எவன்' என்பது என்? என்ன? எனும் பொருளைத் தரும்.

தலைவி இன்பத்தை எதிர்பார்த்து வந்த தலைவன் அவளைக் காணுது மயங்கி நிற்கும் வேளையில், "நின் மலைநாட்டு விலங்குகளும் எதிர்பாராது இன்பத்தைப் பெறுகின்றனவே; அந்நாட்டுத் தலைவனுகிய நினக்குக் குறித்த இன்பம் எவ்வாறு அருமையாகும்? எளிமையாகக் கிடைத்தற் குரியதுதானே!" என்று கூறிய நெறியாலே தலைவனின் மயக்கத்தைப் போக்கித் தலைவியைக் காணுமைக்குக் காரணம்

யாதோ ? என்று தலைவனைச் சிந்திக்க வைத்துவிடுகின்றாள் தோழி. அவனின் அச்சிந்தனையில் ஒருவேளை தன்னைத் தலைவி வெறுக்கின்றாள் போலும்! என்பதும் ஓர் அலையாக இருக்கலாம் அல்லவா? அதனைப் போக்கும் அழகுத் திறம் அடுத்துத் தொடர்கின்றது.

"வெறுத்த ஏஎர் வேய்புரை பணைத்தோள்
நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு
இவளும் இனையள்."

தலைவியின் உருவ அழகு அரை வரியில் அடங்கிவிடுகின்றது. 'வெறுத்த ஏஎர்' என்பதே அது. 'செறிந்த அழகு' என்பது அத்தொடரின் பொருள். 'வெறு' என்ற சொல் செறிவு என்னும் பொருண்மையுடையது. இன்று, இச்சொல் 'வெறுத்தல்' என வேறு பொருளைத் தருகிறது. சொற்களின் பொருள் காலத்தால் மாறுவது உயிரோட்டமுள்ள பேச்சு மொழிகளில் காணப்படும் இயல்பு; பேச்சு வழக்கற்ற மொழிகளில் இத்தன்மை காணப்படாது.

இனி, 'நிறைந்த அழகு' என்பதனை விளக்கும் நெறியில் மிக நயமாகவும் நாகரிகமாகவும் 'வேய்புரை பணைத்தோள்' எனத் தோளின் உருண்டு திரண்டு, மென்மையமைந்த நலம் எடுத்துக் கூறப்படுகின்றது. உருவப் பொலிவு பெற்ற இவ்வுயர் நங்கையின் உள்ளம் தலைவனை எண்ணி எண்ணிக் கனல்பட்ட மெழுகாகக் கசிந்து உருகி அவன் வாழும் திசைநோக்கி ஓடுகின்றது என்பதனை 'நிறுப்ப நில்லா நெஞ்சம்' எனும் சொற்கள் கூறுகின்றன. அவ்வளவில் நின்றுவிடவில்லை தோழி. தலைவன் இன்றித் தான் வாழாத தன்மையள் தலைவி என்பதை 'நின்மாட்டு இவளும் இனையள்' என்பதால் சொல்லிவிடுகின்றாள். இம்மூன்று சொற்களும் கரைந்துருகும் தலைவியினிடத்துப் பாகாய் உருகுமாறு தலைவனைச் செய்து விடுகின்றன.

முன்னரே 'நிறுப்ப நில்லா நெஞ்சமொடு' என்றாள். இதுவோ களவியல்! மற்றவர் இருவருக்குமுள்ள நெஞ்சத் தொடர்பினை—நெஞ்சக் கலப்பினை—அறியக்கூடாத காலம். அவ்வேளையில் தலைவனைக் காண முடியாத நிலையில் தனித்திருந்து வருந்தும் தலைவி தன் நெகிழ்ந்த உடலாலும் புலம்பும் உள்ளத்தாலும் தன்னைக் காட்டிக் கொடுத்துவிடக் கூடாதே என்பதற்காகத் தன்னை விட்டுத் தலைவனைத் தேடித்தேடி ஓடி ஓடி நிற்கும் தன் நெஞ்சினைத் தன்வயப்படுத்துவதற்கு முயன்று முயன்று தோல்வி கண்டு துடித்தயர்பவளாகவே ஆகிவிட, அவளின் துயரைத் துடைப்பதும் களவைக் காப்பதும் தோழியின் கடமையாக, அக்கடமையில் அவள் ஊறித் திளைத்த இயல்பையே 'இவளும் இனையள்' எனப் பெருமூச்சுடன் கூறுகின்றாள்.

தலைவன் தலைவியைக் காணுதல் தலைவி சார்பாகவும் தலைவன் சார்பாகவும் மிகத் தேவையானதல்லவா? தலைவியோ வீட்டில் இருத்தப்பட்டாள்; செறிக்கப்பட்டாள்; அவள் பகலில் வெளியே வருதல் இயலாது; அவள் வாழும் வீடோ கட்டுக் காவலுடன் கூடியது; எனவே இரவில் காவலாளர் அறியாவண்ணம் வர முடிந்தால் வருக என்று கூறுவாளாய்,

"......................தந்தை
அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றிக்
கங்குல் வருதலும் உரியை."

என்கின்றாள். பதன் என்பது காலம், வேளை என்னும் பொருள்தரும். காவலாளர் காவலில் கண்ணும் கருத்துமாய் நெகிழ்ச்சி இன்றி இருப்போர் என்பதனை அருமை, கடி எனும் சொற்களால் கூறி அத்தகையோர் ஒருவேளை சோர்ந்திருத்தல் கூடுமாயின் அப்போது வருக எனச் சொல்கின்றாள்.

தலைவியைக் காணலாம் எனும் நம்பிக்கை இப்போது தலைவன் நெஞ்சில் வேரூன்றுகிறது. இந்நேரத்தில் தலைவன் உள்ளத்தில் வேறு ஓர் எண்ணத்திற்கு வித்திடுகின்றாள் தோழி. "களவு போதுமே! கடிமணம் நன்றன்றோ? மணந்துவிட்டால், தனியே வந்து நின்று தயங்க வேண்டியதில்லை; பெரு முயற்சியுடன் தலைவியைக் காணத் தவம் செய்ய வேண்டியதில்லை." இந்த எண்ணத்தை,

"....................பைம்புதல்
வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன
நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே."

என்னும் வரிகள் இசைக்கின்றன.

'வேங்கை மலர்ந்தது; திங்களும்—நிலாவும்—நிறைமதியாய் ஊர் கோள் கொண்டது' என்பது வரிகளின் பொருளாகும். வேங்கை மலர்ந்தால் தினை யறுக்கப்படும்; தினைப்புனங் காத்த மகளிர் வீட்டிற்கு அனுப்பப்படுவர்; எனவே இனித் தனித்துத் தலைவியைக் காண்பது அரிய செயல்; நிறைமதிநாள் திருமணத்திற்குரிய நாளாகப் பண்டையோர் போற்றினர்; ஆதலின், அந்நாளில் பிறர் பெண் பேச வருதலும் கூடும் என்ற நினைவுடன் தலைவன்தான் திருமண முயற்சியை உடன் மேற்கொள்ள வேண்டும் என்பதனை வற்புறுத்திவிட்டாள்.

அழகு பொலியும் இப்பாட்டினை ஒரு முறை முழுவதும் பார்ப்போம்:

"கோழிலை வாழைக் கோள்மிகு பெருங்குலை
ஊழுறு தீங்கனி உண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொடு ஊழ்படு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
அறியாது உண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது
நறுவீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்
குறியா இன்பம் எளிதின் நின்மலைப்
பல்வேறு விலங்கும் எய்தும் நாட!
குறித்த இன்பம் நினக்குஎவன் அரிய?
வெறுத்த ஏஎர் வேய்புரை பணைத்தோள்
நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு
இவளும் இனையள் ஆயின் தந்தை
அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றிக்
கங்குல் வருதலும் உரியை; பைம்புதல்
வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன;
நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே!"

---

# பொல்லாதவழி

தலைவன் வேலிப்புறமாக வந்து நிற்கும்போது அவன் மனம் திருந்தித் திருமண முயற்சியில் முனையும்படியாகத் தோழி தலைவியிடம் பேசத் தொடங்கினாள். தலைவன் வரும் மலைவழி பொல்லாதது என்று அதைக் குறித்து நினைந்து நினைந்து தானும் தலைவியும் வருந்தித் துன்புறுவதாகக் கூறினாள். தன்னால் அவர்கள் இருவரும் துன்புறுவதை அறிந்து தலைவன் நோகும்வகையில் எடுத்துரைத்தாள்.

"கல் நிறைந்த வழிகள் நடப்பவரின் காலைச் சிதைக்கும். மிக்க இருளோ பார்ப்பவரின் கண்ணைக் கெடுக்கும். மலைப்பிளப்பாலாகிய குகையிலே பதுங்கிய கொடிய சினம் கொண்ட புலி, யானையை வருந்தும்படியாகத் தாக்கி, அதன் இரத்தத்தைப் பருகும். பருகியபின், கொழுமையான கன்னத்தை உடைய தன் பெரிய வாயை வேங்கையின் அடிமரத்தில் துடைக்கும். ஓங்கிய மலை நாடனாகிய தலைவன் வரும்வழி இவ்வளவு கொடியதாக உள்ளதே."

கல்அதர் மன்னும் கால்கொல் லும்மே;
கனையிருள் மன்னும் கண்கொல் லும்மே;
விடர்முகைச் செறிந்த வெஞ்சின இரும்புலி
புகர்முக வேழம் புலம்பத் தாக்கிக்
குருதி பருகிய கொழுங்கவுள் கயவாய்
வேங்கை முதலொடு துடைக்கும்
ஓங்குமலை நாடன் வரூஉம் ஆறே.

—டாக்டர் மு. வரதராசனார், "நற்றிணை விருந்து."

---

# சோழர்காலத்து ஆடலும் பாடலும்

(கி. பி. 900—1300)

[டாக்டர் மா. இராசமாணிக்கனார்]

டாக்டர் மா. இராசமாணிக்கனார் 1907 ஆம் ஆண்டு கர்நூலில் பிறந்தார். தந்தை மாணிக்கம் பிள்ளை; தாய் தாயாரம்மாள். ஆரம்ப வகுப்புகளில் தெலுங்கு பயின்று, பின்பு தமிழ் கற்றுப் பள்ளியிறுதித் தேர்வில் பரிசும் பெற்றார். கரந்தைத் தமிழ்ச் சங்க மாணவராயிருந்து, கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளை அவர்களிடம் தமிழ் பயின்றார். 1928 ஆம் ஆண்டு முதல் சென்னையில் இரு பள்ளிகளில் தமிழாசிரியராகவும், விவேகானந்தா கல்லூரியில் விரிவுரை



யாளராகவும், மதுரை, தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகவும் பணியாற்றிய பின்னர், 1959 செப்டம்பர் முதல் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறையில் துணைத் தமிழ்ப் பேராசிரியராகச் சிறந்த தமிழ்த்தொண்டு புரிந்து வருகின்றார். இலக்கியம், ஆராய்ச்சி, வரலாறு, கல்வெட்டு ஆராய்ச்சி முதலிய துறைகளில் ஐம்பதிற்கு மேற்பட்ட நூல்கள் இயற்றியுள்ளார். சைவ சமய வளர்ச்சிக்குத் தொண்டு செய்துவருபவர்.

சங்ககாலத் தமிழர் ஆடல் பாடல்களில் சிறந்திருந்தனர் என்பதற்குரிய சான்றுகள் சங்க நூல்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன. அக்காலத்து ஆடலும் பாடலும் அடைந்திருந்த உயர்ந்த நிலையைச் சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையாலும் அதன் உரையாலும் நன்கு அறியலாம்.

பல்லவர் வாழ்ந்த நாயன்மார்—ஆழ்வார் காலத்தில் ஆடலும் பாடலும் பெற்றிருந்த மேன்மையைத் திருமுறைப் பாக்களைக் கொண்டும், ஆழ்வார் அருட்பாடல்களைக் கொண்டும், பல்லவர் சிற்பங்களைக் கொண்டும், 'மத்த விலாசம்' போன்ற வடமொழி நூல்களைக்கொண்டும் பாங்குற உணரலாம்.

பல்லவர்க்குப் பிற்பட வந்த சோழர்கள் (கி. பி. 900—1300) தென்னாட்டை ஒரு குடைக்கீழ் வைத்து ஆண்டனர்; பாடல்பெற்ற கோவில்களைக் கற்றளிகளாக மாற்றினர்; புதிய கற்கோவில்களை எடுப்பித்தனர்; பெருங் கோவில்களில் ஆடல் மகளிரையும் பாடல் மகளிரையும் பலராக நியமித்தனர்; அவர்களுக்கு வீடும் நிலமும் வழங்கினர்; கோவில்களில் திங்கள் தோறும் ஏதேனும் ஒரு விழா நடைபெற ஏற்பாடு செய்தனர்; எல்லாக் கோவில்களிலும் திருமுறைகள் ஓத வழிசெய்தனர்; இந்த உண்மைகளைக் கல்வெட்டுக்களால் அறிகின்றோம்.

## ஆடலும் பாடலும்

குறிப்பிட்ட நாட்களிலும், விழாக் காலங்களிலும், ஊர்வலத்திலும் ஆடல்—பாடல்கள் நிகழ்ந்தன. இராஜராஜன் தான் கட்டிய பெரிய கோவிலில் தமிழ்நாடு முழுவதிலும் இருந்த பல கோயில்களிலிருந்து ஆடல்—பாடல்களில் வல்ல 400 பேரை ஆடல்—பாடல்கள் நிகழ்த்த வரவழைத்தான் எனின், அவன் காலத்திலேயே கோவில்களில் ஆடலும் பாடலும் உயரிய நிலையில் இருந்தன என்பதை நன்கு அறியலாம்.[1] சோழர்காலத்தில் பெரும்பாலான கோவில்களில் ஆடலிலும் பாடலிலும் வல்ல பெண்கள் இருந்தனர் என்பதைப் பல கல்வெட்டுக்கள் அறிவிக்

1. South Indian Inscriptions, Vol. 2, No. 66.

கின்றன.[1] கோவில்களில் தமிழ்க்கூத்து, ஆரியக்கூத்து (Themes from Sanskrit Puranas), சாக்கைக் கூத்து, சாந்திக் கூத்து என்பன ஆடப்பட்டன.[2] நடனக்கலை ஆசிரியர் கூத்தரான், நிருத்தப் பேரரையன், நட்டுவ ஆசான் எனப் பலவாறு பெயர் பெற்றனர்.[3] அவர்கள் பெற்றிருந்த காணி கூத்தக் காணி, நட்டுவக் காணி எனப்பட்டன.[4] திருவிடைமருதூரில் தளியிலார்க்கும் தேவரடியார்க்கும் பாடல் கற்பிக்கப் பாணன் இருந்தான். அவன் பெற்றிருந்த மானியம் 'பாணப்பேறு' எனப்பட்டது.[5] இராசராசன் I, திருநீலகண்ட யாழ்ப்பாணரது மரபில் வந்த பாணரைக் கொண்டு திருப்பதிகங்கட்குப் பண் வகுக்கச் செய்தான்[6] என்பதைக் காணச், சோழர் காலத்தில் பாணர் இருந்து தமிழ் இசையை வளர்த்து வந்தனர் என்பது தெரிகிறது. திருவொற்றியூர்க் கோவிலில், பதியிலார் என்பவர் 'சொக்கம்' என்பதையும், சந்திக்குணிப்பம் என்பதையும் நடித்துக் காட்டினர். அந் நடிப்புக்கு ரிஷபத்தளியிலார் வாய்ப்பாட்டு வழங்கினர். பின்பு ரிஷபத்தளியிலார் அகமார்க்கம், வரிக்கோலம் என்பவற்றை நடித்துக் காட்டினர்; சிலவகை நடனங்களைத் திருப்பதிகப் பொருளுக்கேற்ப நடித்துக் காட்டினர். சந்திக்குணிப்பம், இடவு, மலைப்பு, அகமார்க்கம், செந்தூக்கு, வரி என்பன அந்நடன வகையுள் சிலவாகும்.[7]

இவ் விவரங்களால் திருமுறைப் பாக்கள் இசையுடனும் நடனத்துடனும் பயிலப்பட்டன என்பதை அறியலாம். ஆடலிலும் பாடலிலும் நன்முறையிற் பயிற்சி பெற்ற இந்த இசைவாணிகள், சமயத்தொடர்பான பாக்களைப்பாடி, அவற்றை நடனத்திலும் அமைத்துக் காட்டினமை மக்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்டிருக்கலாம். மக்கள் உள்ளங்களில் சமயப்பற்றை இவை நன்றாக ஊட்டியிருத்தல் வேண்டும். இந்நடன மங்கையர் சிறந்த அழகிகள்; கண்ணைக் கவரத்தக்க ஆடையணிகளையும் கூந்தல் ஒப்பனையையும் பெற்றவர்கள். அவர்களைப் பற்றி ஓரளவு அறியத் தஞ்சைப் பெரிய கோவில் ஓவியங்கள் துணைபுரியலாம். சோழர் காலத்தில் இருந்த நடன வகைகள் எல்லாம் தில்லைக் கோவிற் கிழக்குக் கோபுரத்திற் சிறக்கக் காணலாம்.[8] அவை அக்கால நடனக்கலையின் உயர்வை நன்கு உணர்த்தவல்லவை.

### நாடகம்

நாடகத்தையே ஒரு பகுதியாகக் கொண்ட தமிழ்மொழி வழங்கும் நாட்டில் நாடகங்கள் நடந்தன எனக் கூறல் மிகை. சோழர் காலத்தில் ஆண்டுதோறும் வைகாசி விழாவில் தஞ்சைப் பெரிய கோவிலில் இராஜ ராஜேசுவர—நாடகம் நடித்துக் காட்டப்பட்டது. நடித்த விஜய ராஜேந்திர ஆசாரியனுக்கு ஆண்டு தோறும் 120 கலம் நெல் தரப்பட்டது. இராஜ ராஜேசுவரம் என்பது தஞ்சையில் இராசராச சோழன் கட்டிய பெரிய கோவிலாகும். அக் கோவிலின் பெயர் நாடகத்திற்கு அமைத்திருத்தலை நோக்க, இராசராசேசுவரம் கட்டப்பெற்றதையே பொருளாகக் கொண்டு இந்நாடகம் அமைந்திருக்கலாம் என்று அறிஞர் கருதுகின்றனர்.[9] விக்கிரமாதித்த ஆசாரியன் என்ற இராசராச நாடகப் பெரியன் என்பவன் பந்தணை நல்லூரில் நட்டுவப்பங்கு, மெய்மட்டிப்பங்கு (நாடகக்காணி!) இவற்றைப் பெற்றவனாய் இருந்தான் என்று அவ்வூர்க் கல்வெட்டுக் கூறுவதால், இராசராச நாடகம் (முதலாம் இராசராசனைப் பற்றியது) என ஒன்று இருந்தது; அந்நாடகம் நடிக்கப்பட்டது என்பன அறியலாம். இந்நூல் அவ்வரசனது வரலாற்றை நாடகமுறையில் எழுதப்பெற்றதாகும்.[10]

1. 116 of 1926, 617 of 1920, 272 of 1923 etc.
2. 120 of 1925, 250 of 1926, 154 of 1895, 254 of 1914; A. R. E. 1924-25, p. 82.
3. 231 of 1895, 255 of 1925, 206 of 1931
4. 206 of 1931, S. I. I. II. 66.
5. 141 of 1895; S. I. I. V. 705.
6. *திருமுறை கண்ட புராணம்*, செ. 31—34.
7. A. R. E. 1913, pp. 118, 127.
8. A. R. E. 1914, pp. 74—83; plates I to IV.
9. S. I. I. II 67.
10. *தமிழ்ப் பொழில்*, 23, பக். 152—3.

முதற் குலோத்துங்கன் காலத்தில் பூம்புலியூர் நாடகம் என்ற ஒன்று செய்யப்பட்டது; அதனைச் செய்தவருக்குப் பரிசு தரப்பட்டது[1] அது திருப்பாதிரிப் புலியூரைப் பற்றியது. அஃது அம்மன் கன்னிகையாக இருந்து சிவனை வழிபட்டமை, அப்பர் சமணராயிருந்தமை, பின் சைவரானமை, சமணருடைய கொடுமைகட்கு ஆளானமை, பிறகு கடலில் மிதந்து கரை சேர்ந்து அவ்வூர்க் கோவிலில் பதிகம் பாடினமை, மகேந்திரன் அங்கிருந்த சமணப் பள்ளியை இடித்துக் குணபர ஈசுவரம் கட்டினமை போன்றவற்றைக் காட்சிகளாகக் கொண்ட நூலாக இருக்கலாம். அது நடிக்கப் பெற்றமைக்குச் சான்று இல்லையாயினும், சமயப்பற்று மிக்கிருந்த அக்காலத்தில் அது நடிக்கப்பட்டதெனக் கருதுதல் தவறாகாது. இங்ஙனம் சைவ அரசர்களையும், நாயன்மார்களையும் பற்றிய நாடகங்கள் சிலவேனும் அக்காலத்தில் நடிக்கப்பட்டன எனக் கொள்ளலாம்.

### தேவரடியார்

கோவில்களில் இருந்து தொண்டாற்றிய மாதருள் தேவரடியார் ஒரு வகையினர். இவர்கள் கோவிலில் திருவலகிடல், திருமெழுக்கிடல், இறைவனுக்குப் படைக்கும் உணவுக்குரிய அரிசியைத் தூய்மையாக்குதல், திருப்பதிகம் பாடல் முதலிய பணிகளைச் செய்து வந்தனர். மேலும் இவர்கள் திருநீற்றுத் தட்டுகளையும் மலர்த் தட்டுகளையும் விழாக் காலங்களில் ஏந்தி நிற்பர்; அம்மனுக்குக் கவரி வீசி நிற்பர்.[2] இப்பெண்கள் கவரிப்பிணா எனப் பெயர் பெற்றனர்.[3] முதற் குலோத்துங்கன் காலத்தில் படைத்தலைவனாக இருந்த அச்சப் பிடாரன் கணபதி நம்பி என்பவன் தன் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் சிலரைத் திருவல்லம் சிவன் கோயிலுக்குத் தேவரடியாராக விடுத்தான். அப்பெண்கள் சூலப்பொறி பொறிக்கப் பெற்றனர்; கோவிலுக்கும் கடவுளுக்கும் தொண்டுகள் செய்ய விடப்பட்டனர்.[4] உயர்நிலைப் பெண்களும் சோழர் காலத்தில் திருக்கோவிலில் திருப்பணிகள் செய்யத் தம்மைத் தியாகம் செய்தனர் என்பதும், தேவரடியார் என்பவர் கலைத்தொண்டிலும் சமயத் தொண்டிலும் ஈடுபட்டிருந்தனர் என்பதும் இதனால் நன்கு விளங்கும். தேவரடியாருள் சிலர் நடனமாடவும் அறிந்திருந்தனர்.[5]

### தளியிலார்

இவர்களை இராசராசன் தளிச்சேரிப் பெண்டுகள் என்று குறிப்பிட்டான். இவர்கள் கோவிலுக்கு வெளியே குடும்பமாக வாழ்ந்தவர்கள்; இசை-நடனங்களில் வல்லவர்கள். இவர்கள் சைவ–வைணவக் கோவில்கள் என்ற வேறுபாடின்றி வேலை செய்தவர்கள்.[6] இவருள் சிவன் கோவிற் பணி செய்தவர் 'இஷபத்தளியிலார்'[7] என்றும் (இடபப்பொறி பொறித்தவர்கள் அல்லது சிவன் கோயிற் பெண்கள் எனப் பொருள் படலாம்), வைணவக் கோவில்களில் இருந்தவர் ஸ்ரீ வைஷ்ணவ மாணிக்கம்[8] எனவும் பெயர் பெற்றனர் என்று கருதக் கல்வெட்டுக்கள் இடந்தருகின்றன. இவர்கள் இராசராசன் காலத்தில் ஆடல்—பாடல்களில் முனைந்திருந்தனர்; பின்னர்த் திருப்பதிகங்கள் பாடவும் தொடங்கினர்; சோழர் ஆட்சியின் இறுதியில் தேவரடியாரைப் போலக் கவரி வீசல் முதலிய பணிகளையும் மேற்கொண்டனர்.[9]

### கோவில்களில் திருமுறைகள்

இராசராசன் திருமுறைகளைச் செம்மைப்படுத்தற்கு முன்பே திருவல்லம், எறும்பியூர், பழுவூர், ஆவடுதுறை, தவத்துறை, ஆத்தூர், குமாரவயலூர், அந்துவநல்லூர் முதலிய சில ஊர்க்கோவில்களில்

1. 129 of 1902. 2. 128, 212 of 1912.
3. 117 of 1910, 149 of 1936; ' பெண்ணும் பிணாவும் மக்கட்குரிய "—தொல். பொருள். சூ. 616.
4. A. R. E. 1922, p. 102; A. R. E. 1913, p. 108, A. R. E. 1925, p. 84.
5. 212 of 1912. 6. S. I. I. II. 66. 7. 212 of 1912. 8. 183 of 1923.
9. S. I. I. II. 66; 141 of 1995; 212 of 1912; A. R. E. 1913, pp. 104, 118 and 127—8.

திருப்பதிகங்கள் ஓதப்பட்டன. [1]இராசராசன் கட்டிய தஞ்சைப் பெரிய கோவிலில் திருப்பதிகம் ஓத 48 பேர் பல கோவில்களிலிருந்தும் வரவழைக்கப்பட்டனர் என்பதால், அவரவர் வந்த கோவிலிலும் முன்னரே திருப்பதிகம் ஓதப்பட்டு வந்ததென்பது புலனுகும். அவை திருவாஞ்சியம், ஆரூர், வாய்மூர், மறைக்காடு, ஐயாறு, திருவிடைமருதூர், ஆனைக்கா, வெண்காடு, தில்லை முதலியன.[2] பிற்பட்ட சோழர் காலத்தில் குஹூர், பிரம்மதேசம் (N.A.Dt.) முதுகுன்றம், வீழிமிழலை, நல்லம், கடைமுடி, மாறன்பாடி, ஒற்றியூர், தென்னேரி, உடையலூர், துக்கச்சி, சோற்றுத்துறை, எல்வானசூர், ஆமாத்தூர், தில்லையாடி, புறவார் பனங்காட்டூர், கழுமலம், இடைவாய், வழுவூர், புகலூர், எண்ணாயிரம், தில்லையாளி நல்லூர் முதலிய ஊர்க் கோவில்களில் திருப்பதிகம், திருச்சாழல் முதலியன ஓதப்பட்டன.[3]

திருப்பதிகங்களைப் பிராமணர்,[4] தேவரடியார்,[5] பிடாரர்[6] (ஓதுவார்) ஓதினர்; உடுக்கை, மத்தளம், தாளம் இவற்றுடன் ஓதினர் சில கோவில்களில் காலையிலும், சிலவற்றில் காலை மாலைகளிலும், வேறு சிலவற்றில் மூன்று வேளையும், விழா நாட்களிலும் ஓதினர். மார்கழி மாதத்தில் திருப்பள்ளி எழுச்சி, திருவெம்பாவை என்பன கோவில்களில் பாடப்பட்டன. சுருங்கக் கூறின், நாயன்மார் பாடிய அருட்பாடல்கள் அவர்கட்குப் பிற்பட்ட சோழர் காலத்தில் பெருஞ் சிறப்புற்றன.

## முடிவுரை

பிற்காலச் சோழர் காலத்தில் ஆடற் கலையும் பாடற்கலையும் அடைந்திருந்த மேன்மை பற்றிய விவரங்களை ஒரு பெரு நூலாக எழுதலாம். இம் முயற்சிக்குச் சோழர் கால ஓவியங்கள், சிற்பங்கள், கல்வெட்டுக்கள், தமிழ் நூல்கள் என்பன பெருந்துணை புரிய வல்லன.

---

## குலோத்துங்கன் இசை நூல்

சோழ அரசர்களில் புகழ்பெற்றவன் குலோத்துங்க சோழன். இவனுக்கு விசயதரன், சயங்கொண்டான் என்னும் சிறப்புப் பெயர்களும் உண்டு. கலிங்கப் போரை வென்றவன் இவனே. அதனல், கலிங்கத்துப்பரணி என்னும் நூல் சயங்கொண்டாரால் பாடப்பெற்றது. இவன் இசைக் கலையில் வல்லவன் என்றும் இசைத்தமிழ் நூல் ஒன்றை இயற்றியவன் என்றும் கலிங்கத்துப் பரணி கூறுகிறது.

"வாழி சோழகுல சேகரன் வகுத்த இசையின்
மதுர வாரியென லாகுமிசை மாதரிதெனு
ஏழு பாருலகொ டேழிசை வளர்க்க வுரியாள்
யானை மீதுபிரி யாதுட னிருந்துவரவே."

"தாள முஞ்செல வும்பிழை யாவகை
தான்வ குத்தன தன்னெதிர் பாடியே
காள முங்களி றும்பெறும் பாணர்தங்
கல்வி யிற்பிழை கண்டனன் கேட்கவே."

இதனல், இவன் இசைக் கலையை நன்கறிந்தவன் என்பதும், இசைக் கலையில் வல்ல பாணர்களின் இசையிலும் பிழைகண்டவன் என்பதும், இசைநூல் ஒன்றை இவன் இயற்றினன் என்பதும், இவன் அமைத்த இசை பாடி இவனிடம் பாணர்கள் பரிசு பெற்றனர் என்பதும் அறியப்படுகின்றன.

—திரு. மயிலை சீனி. வேங்கடசாமி, 'தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்'

---

1. 129 of 1914, 349 of 1918, 139 of 1925, 99 of 1927, 373 of 1903, 149 of 1937; S. I. I. III. 139.
2. S. I. I. II. 65.
3. 275 of 1917, 199 of 1915, 40 of 1918 etc.
4. 99 of 1929.
5. 128 of 1912.
6. S. I I. II. 65.

# திருமாமறையும் திருமாமுறையும்

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாதபிள்ளை]

திருவள்ளுவரகம், ப. இராமநாத பிள்ளை, திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த குலசேகரன்பட்டினத்தில் விழுமிய வேளாண் குலத்தில் கொல்லம் ௧௦௬௯ ஆம் ஆண்டு மாசித்திங்கள் ௨௫ ஆம் நாள் தோன்றியவர். தந்தையார் திருப்பெயர் சு. பரமசிவன் பிள்ளை; தாயார் திருப்பெயர் வீரலக்குமி அம்மாள். தமிழ் நூல்களை முறையாகக் கற்றனர். பின்னர் ஆங்கிலப் பள்ளியில் மூன்றும் படிவம் முடிய ஆங்கிலம் பயின்றனர். பின்பு தந்தையார் நடத்தி



வந்த வணிகத்துறையில் அன்னார்க்கு உதவியாகப் பணியாற்றினர். அருந்தமிழ் நூல் பலவும் திருந்தக் கற்றனர்; கற்பித்தனர். ஆருயிர்த்தோழர் ராம. ப. செந்திலாறுமுகம் பிள்ளையின் அருந்துணையால் 1916 ஆம் ஆண்டு கொழும்பு சென்றனர். அவர் தம் வணிகத்துறையில் பணியாற்றினர். 1946 முதல் கழகப் புலவராய்ப் பணியாற்றி வருகின்றனர். '**சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்**', '**திருமந்திரவுரை**' முதலிய தொண்டுகள் ஆற்றியுள்ளனர்.

திருச்சிற்றம்பலம்

"ஆறதே றுஞ்சடை யானருள்
    மேவ அவனியர்க்கு
வீறதே றுந்தமி ழால்வழி
    கண்டவன் மென்கிளிமாந்
தேறல்கோ தித்தூ று சண்பகந்
    தாவிச் செழுங்கமுகின்
தாறதே றும்பொழிற் சண்பையர்
    காவலன் சம்பந்தனே."

—௧௧. திருச்சண்பை விருத்தம், ௫.

திருமாமறை — செந்தமிழ் வேதம். திருமாமுறை—செந்தமிழாகமம்.

மூவர் ஓதியருளிய மூவா முதல்வன் திருமொழியாம் "தேவாரம்" திருமாமறை எனப்பெறும். அதுபோல் மணிமொழிப் பெருமான் ஓதியருளிய "திருவாசகம்" திருமாமறை முடிபாகும்; "திருச்சிற்றம்பலக்கோவையார்" திருவடிப்பேருகும். திருமூலநாயனர் ஓதியருளிய "திருமந்திரம்" திருமாமுறையாகும். இம்முறை யான் நோக்கின் செம்பொருட் சித்தாந்தச் சிவனெறிக்கு நம்பெரும் முதல்வர் ஐவராவர். முதல்வர் — சமயகுரவர். செந்நெறிக்குரிய செந்தமிழ்த் திருமாமறை திருவைந்தெழுத்தாகும். இதுபோன்று செந்நெறிக்குரவரும் ஐவராயினர். ஒரு புடையொப்பாக இவ்வைவரும் முறையே "சிவயசிவ" என்னும் பொருண்மறை இயைபாவர். இத்திருவைந்தெழுத்து "முந்தைமுதன் மந்திரங்க ளெல்லாந் தோன்று முதலாகு முதல்வனு ரெழுத்தஞ்" செனவும், "ஆதி மந்திர மஞ்செழுத் " தெனவும் ஓதப்பெறும். இவ்வைந்தெழுத்தும் ஐந்து சொற்களின் முதலெழுத்தாகும். இவ்வுண்மை "அந்தியு நண்பகலும் அஞ்சுப தஞ்சொல்லி" (௭. ௮௫ - ௧) எனவும், "பதத்தெழு மந்திரம் அஞ்செழுத் தோதி" (௪ ௧௦௮ - ௨) எனவும் வரும் திருமாமறைகளானுணரலாம். இம்முறை யான் இத் திருவைந்தெழுத்தின் சொல்லை விரிக்குங்கால் முறையே 'சிறப்பி, வனப்பி, யாப்பி, நடப்பி, மறைப்பி' என வரும். இவற்றையே 'சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு' எனவும் வழங்கலாம். இவற்றின் விளக்கத்தை எம்மால் எழுதப்பட்ட "திருவைந்தெழுத்துண்மை" என்னும் நூலிற் காண்க.

இவ்வைம்பொருளுண்மையினை வரும் தமிழாகமமாகிய திருமந்திரத் திருமுறையின்கண் வருமாறு காண்க:

" சிவனரு ளாய சிவன்திரு நாமஞ்
சிவனரு ளான்மாத் திரோதமல மாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவ னாமே.'' —௧௦. ௨௯௯௧.

மேலும் மற்றோர் தமிழ்முறை (ஆகமம்) யாகிய உண்மை விளக்கத்தின்கண் வருவதூஉம் காண்க:

" சிவனரு ளாவி திரோதமலம் ஐந்தும்
அவனெழுத் தஞ்சின் அடைவாம்-இவனின்று
நம்முதலா ஓதினருள் நாடாது நாடுமருள்
சிம்முதலா ஓதுநீ சென்று.'' —௪௧.

இவ் வைந்தெழுத்தின் விரிவே " அண்ணல் அருமறையும் ஆகமமும்" என்ப.

மறைமுறைகளை இறைவன் தன் திருவடி நினைவு நீங்கா மெய்யடியார்களின் உணர்விற்குணர்வாய் உண்ணின்று எழுப்பியருள்வன். இங்ஙனம் எழுப்பும் ஒலியினையே மறை என்ப. இஃது உள் நின்று எழுப்பப்படுதலால் எழுதுமறை என்ப. இதனை எழுத்தோசை எனவுங் கூறுப. மேலும் இது நினைவோசை எனவும், சொற்பிரிவிலா மறை எனவும், பைசந்தி எனவும் கூறப்பெறும். இவ்வுண்மை வரும் திருமாமறையானுணரலாம்:

" சொற்பிரிவி லாதமறை பாடிநட மாடுவர்...''
—௩. ௭௮-௨.

இம் மறையினைப்பெறும் பேறு வாய்ந்த ஆளுடைய பிள்ளையார் முதலிய மெய்யடியார்களின் வாயிலாக வழிமொழிவித்து வெளிப்படுத்துவதே திருவருள் நூல்களாகும். அவ்வுண்மை வருமாறு:

"...பழுதிலிறை யெழுத்துமொழி தமிழ் விரகன் வழிமொழிகள் மொழிதகையவே.'' (௩. ௯௭-௧௨) இவ் வுண்மைகளை நன்கு வலியுறுத்துவன மேலனவே போன்று ஆளுடையபிள்ளையாரருளிய "...எனதுரை தனதுரையாக" என இலம்பையங் கோட்டூர்த் திருப்பதிகத் திருப்பாட்டுக்கள் ஒவ்வொன்றினும் தனித்தனி வரும் தொடர்களாம். செந்தமிழ்த் தொன்னூலாகிய தொல்காப்பியத்தின் கண்ணும் இறைவன் உண்ணின்றுணர்த்துவதே நூன்முதல் என்னும் குறிப்புப் புலனாகும். அது வருமாறு:

" வினையி னீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.''
—தொல். பொருள்-௯௪௯.

கண்டது - அறிந்தது. முதனூலாகும்–நூன்முதலாகும்; முதல்–காரணம்.

தொன்மைச் சிறப்பு வாய்ந்த தமிழ் மொழியோடு வடமொழியையும் தழுவிக் கொண்டனர்; விருந்தாய் வந்ததொன்றாகலின். அதனால் அதற்கு முதன்மை கொடுத்தார்களென்றெண்ணுவது எங்ஙனம் பொருந்தும்? தழுவிய முறையினை வருமாறு காண்க:

"... தமிழ்ச்சொலும் வடசொலும் தாணிழற்சேர''
—௧. ௭௭-௯.

தமிழ்மறையும் வேறு, வடமொழி வேதமும் வேறு என்னும் மெய்ம்மையினை ஆளுடைய பிள்ளையார் அருளுமாறு காண்க:

" பங்கமேறு மதிசேர்சடையார்
விடையார்பலவேதம்
அங்கமாறு மறைநான்கவையு
மானார்மீனாரும்
வங்கமேவு கடல்வாழ்பரதர்
மனைக்கேநுனைமூக்கின்
சங்கமேறி முத்தமீனுஞ்
சண்பைநகராரே.'' —௧. ௯௯-௧.

மற்றோர் திருப்பதிகத்தும் " விண்ணுளார் மறைகள் வேதம் விரித்தோதுவார்" எனவும் ஓதியருளினர். மேலும் இம் மறை "முத்தமிழ் நான்மறை" (௩. ௨-௧௧) எனவும் வழங்கப்பெறும்.

தேவாரத் திருமறைகட்கு முன்பே பண்டைத் தமிழ் நான்மறை யுண்டென்னும் உண்மை "அருமறைகள் திருக்காப்புச் செய்து வைத்த அக்கதவம் திறந்திடவும் மறைகளோதும், பெருகியவன் புடையடியார்" என்னும் சேக்கிழாரடிகளின் திருவாய் மொழியான் உணரலாம்.

செந்தமிழ்த் திருமாமறைக்கு "அங்கம் ஆறாக" இப்பொழுது நாம் கொள்ளக்

கிடப்பன இருவகைய. ஒன்று "நமச்சி வாய வாஅழ்க" என்பது முதல் "இறைவ னடி வாழ்க" என்பது ஈருகவுள்ள ஆறு வாழ்த்துக்களுமாகும். மற்றொன்று பன் னிரு திருமுறைக்கண் விளங்கும் முழுமுதற் சிவபெருமானாகிய அப்பனருளிய "திரு முகப் பாசுரம்" ஒன்று, அப்பெருமான் திருவாய்மொழியாலேயே "அம்மை" என அழைத்தருளப்பட்ட காரைக்காலம்மையார் "திருப்பாடல்கள்" ஒன்று, சேந்தனா ரருளிய "திருப்பல்லாண்டு" ஒன்று, எஞ்சிய "ஒன்பதாந் திருமுறை" ஒன்று, எஞ்சிய பதினொராந் திருமுறை ஒன்று, சேக்கிழாரடிகளருளிய "பன்னிரண்டாந் திருமுறை" ஒன்று ஆகிய ஆறுபகுதிகளு மாகும்.

"வாழ்க" என்னும் மறைமுடிபினைத் தொடர்ந்து வரும் "வெல்க" ஐந்தும் தமிழ் நான்மறையினையும், முறையாகிய தமிழாகமத்தினையும் குறிப்பனவாகும். தமிழாகமமாகிய திருமூலர் திருமந்திரமும் மேலோதியவாறு இறைவன் திருவாய் மொழியாகும். இவ்வுண்மை வருமாறு காண்க :

"நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை அரனடி நாடொறுஞ்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே."
—க0. கஙடு.

மேலும் நம்பிரான்மூலர்தம் பிறப்பே தமிழாகமத்தின் பொருட்டென்பதின் உண்மையினை வரு மந்திரத்தானறிக :

"பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ் செய்யு மாறே."
—க0. கஙு௨.

தமிழ்—ஆகமம்.

ஒருவர்தம் நாட்டம் (சிந்தனை) இறை வன் திருவடிக்கண்ணதாயின் அவர்தம் சொல்லும் செயலும் இறைவனவேயாகும். இவ்வுண்மை வரும் சிவஞானபோதத் திருமாமுறையானுணர்க :

"அவனே தானே யாகிய வந்நெறி
ஏக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே."
—க0.

இந் நூற்பாவின் விளக்கவுரையாக வமைந்த சிவஞான சித்தியார்த் திருமுறை யுங் காண்க. "........சிவனுமிவன் செய்தி யெல்லா மென்செய்தி யென்றும்"—க0. எனவே திருமூலர் திருமந்திரமும் இறை வன் திருவாய் மொழியே என்ப துறுதி. மேலும் ஆளுடைய பிள்ளையார் தம் வழி யாக வெளிப்போந்த திருமாமறையினை இறைவன் திருவாய்மொழியே என்னும் உறுதிப்பாடமைந்த திருவுள்ளத்தா ரென் பது, அமணருடன் சொற்போர் நிகழ்த்தத் தொடங்குங்கால் திருமுறையினை எடுத்துத் திருவுள்ளங்காணத் தம் திருக்கையான் மறித்தருளினர். அப்பொழுது தோன்றி யது திருநள்ளாற்றுப் 'போகமார்த்த' எனத் தொடங்கும் திருப்பதிகம். அத னையே "தளிரிள வளரொளி" எனத் திருப்பதிகம் பாடித் தீயிலிட்டருளினர். அவ் வேடு வேவாது முன்னையினும் பச்சையாயமைந்தது என்னும் நிகழ்ச்சி களானுணரலாம். இவ்வுண்மை வரும் சேக்கிழாரடிகள் திருவாய்மொழியா னுணர்க :

"சாற்று மெய்ப்பொருள் தருந்திரு
முறையினைத் தாமே
நீற்று வண்கையான் மறித்தலும்
வந்துநேர்ந் துளதால்
நாற்ற டம்புயத் தண்ணலார்
மருவுநள் ளாறு
போற்றுமப்பதி கம்போக
மார்த்தபூண் முலையாள்."
—கஉ. சம்பந்தர், எஅஉ.

மேலும் இத் திருமாமறையினைக் கொண்டே வழிபாடனைத்தும் இயற்றுதல் வேண்டும் என்னும் திருவாணை வரும் ஆளுடைய பிள்ளையார் திருமுறையான் உணரலாம் :

"நல்ல புனற்புகலித் தமிழ்ஞான
சம்பந்தன் நல்ல
அல்லி மலர்க்கழனி
ஆரூ ரமர்ந்தானை
வல்லதோ ரிச்சையினால் வழிபாடிவை
பத்தும் வாய்க்கச்
சொல்லுதல் கேட்டல்வல்லார்
துன்பந் துடைப்பாரே."—க. க0ரு-கக.

அருவுமுருவும் ஆணினொடு பெண் ணும் அல்லாச் சிவன் நம்மனோர் பொருட் டுத் தண்ணளியால் அருவாய், அருவுரு

வாய், உருவாய், ஆண் பெண்ணுயத் தோன்றியருள்வன். அதனுல் அம்மூவிடத்து வழிபாடும் அமைவுடையவாயின. அவை மூன்றும் முறையே நெஞ்சத்திடத் தெண்ணும் "சிவசிவ" என்னும் மந்திரமும், நெற்றி முதலிய இடங்களில் சிவாய நம என்றணியும் "திருவெண்ணீறும்," மார்பு முதலிய இடங்களிற் பூணும் "சிவமணியும்" ஆகும். "உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்" எனப்படும் நம் உடம்பகத்து இங்ஙனம் நாளும் இடையருது அகவழிபாடு செய்தல் வேண்டும். இவற்றுக்குரிய தமிழ்மறைகள் முறையே 'சிவசிவ' எனத் தொடங்கும் திருப்பாட்டும், 'மந்திரமாவது நீறு' என்னும் திருப்பாட்டும், 'நெக்குளார்வம்' என்னும் திருப்பாட்டும் ஓதிக்கொள்ளுதல் வேண்டும். இவற்றை ஒரு வெண்பாவால் நினைவுகூரத் தருகின்ருேம் :

*நெஞ்சத் தருவநெற்றி நீறும் அருவுருவம்*
*விஞ்சுமணி மெய்யுருவம் வேண்டுமறை-தஞ்சமுற*
*மன்னும் சிவசிவ மந்திர மாவதோ*
*டுன்னுநெக் குள்ளார்வம் ஓது.*

அகத்தெண்ணும் மாமறை கட்புலனுகாமையான் அருவம் எனவும், திருவெண்ணீறு கட்புலனுயினும் அணிந்த இடத்தோடமைவதால் அருவுருவம் எனவும், சிவமணி பூண்டவிடத்தும் பூசைப் பேழையினும் தங்குவதால் உருவம் எனவும் ஒருபுடையானுைப்பாமாருேர்க.

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும், நன்றே நினைமின்" என ஓதியருளிய செந்தமிழ்த் திருமாமுறையின் சீரிய கொள்கையே பண்டைத் தமிழகத்துத் தெய்வப் பெற்றியாளர் திருவருளால் கண்டொழுகிய செந்நெறிக் கொள்கையாகும். சிவன் ஒருவனே ஐந்தொழில் நடாத்தற் பொருட்டு ஐவேறுருவும் பெயரும் தாங்கியருளுகின்றனன். அவை முறையே 'பிள்ளையார், முருகன், ஆலமர்செல்வன், அம்மை, அருளோன்' (சதாசிவன்) என்ப. தொழில்: 'படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்பன. இவ்வைந்து பேரிடத்தும் மலர்தூவிப் போற்றி நாம் நாளும் வழிபடுதற்குப் 'போற்றித் திருத்தாண்டகம் ஐந்தமைந்துள. இவ்வைந்தொழில் முற்றும் ஒருங்கு அமைந்துள்ள ஒரு திருவடிவம் 'அம்பலவாணர்' ஆகும். இவ்வழிபாட்டிற்குத் தமிழ் மாமறைமுடிபாம் திருவாசகப் 'போற்றித் திருவகவல் வாய்வது ஆகும். இவ்வாற்ருல் இடையருது வழிபட்டும், வழிபடுவித்தும் வருவோமாக.

இதுகாறுங் கூறியவாற்ருல் செந்தமிழகத்துத் தெய்வ வழிபாடுகள் அனைத்தும் தமிழ்த்திருமாமறை திருமாமுறைகளாற் செய்தல்வேண்டு மென்பதும், அங்ஙனம் செய்வதும் சிவம் பெருக்கும் வீடுகள், திருக்கூடங்கள், திருமடங்கள், திருக்கோவில்கள் எங்கணுமா மென்பதும், இதுபோன்று திருமண முதலிய எல்லாச் சடங்குகளும் மேற்போந்த திருவருள் நூற்கள் வாயிலாகவே நிகழ்த்தப்படுதல் வேண்டுமென்பதும், திருவருள் நூற்களனைத்தும் இறைவன் திருவாய்மொழியே என்பதும், செந்நெறிக்குத் திருமாமறை ஐந்தெழுத்தாக அமைந்தமை போன்று சைவசமயக் குரவரும் ஐவராவரென்பதும், வடமொழி வேதமும் தமிழ் மறையும் வெவ்வேரு மென்பதும், வடமொழி வேதங்களைத் தழுவினரேயன்றித் தலைமை கருதினுரல்லர் என்பதும், வழிபாடு தமிழ் மறையினுலேயே நிகழ்த்த வேண்டுமென வலியுறுத்தியருளினர் என்பதும், தமிழ் மறைக்கே தலைமை என்பதும் பிறவுமாம்.

*நால்வரொடு நம்மூலர் நன்னெறியின் முன்முதல்வர்*
*சால்பாம் சிவயசிவ சாற்று.*

செந்தமிழ் வாழ்க! சிவனெறி வாழ்க!
திருநீறு வாழ்க! சிவமணி வாழ்க!
வையக முற்றும் வளம்பெற்று வாழ்க!

"தென்னு டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி."

திருச்சிற்றம்பலம்

# சுந்தரரும் ஒன்பான் சுவைகளும்

[திரு. பூ. ஆலால சுந்தரஞ் செட்டியார், எம். ஏ.]

திரு. பூ. ஆலால சுந்தரஞ் செட்டியார் சென்னையில் 1907 ஆம் ஆண்டில் தோன்றியவர். தந்தையார் பூரிப்பாக்கம் வேலு செட்டியார். தாயார் இராசம்மாள். சைவப் பற்று மிக்கவர். சென்னை, முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியிலும், பச்சையப்பன் கல்லூரியிலும் கல்வி பயின்றபின், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி.ஏ. (ஆனர்சு) படித்துப் பட்டம் பெற்ருர். மூன்ருண்டுகள் சென்னைக் கிறித்துவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி



யாற்றிய பின்னர், 1937 முதல் கிறித்துவக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகவும், 1951 முதல் தமிழ்ப் பேராசிரியராகவும் தொண்டுபுரிந்து வருகின்ருர். இவர் சிறந்த கட்டுரைகள் பல எழுதியுள்ளார். சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களில் சிறப்புச் சொற்பொழிவுகளும் நிகழ்த்தியுள்ளார். கோயில் திருப்பணிகளிலும், சமூகப் பணிகளிலும் மிக்க ஈடுபாடுடையவர். கல்விக் குழுக்கள் பலவற்றில் உறுப்பினராக இருந்து பணியாற்றி வருகின்ருர்.

சைவ சமய குரவருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்தினைப் பலர் தோத்திரக் கண்கொண்டு நோக்குவர்; சிலர் சாத்திரக் கண்கொண்டு காண்பர். ஆனல் ஆளுடைய நம்பி அவர்களின் அருட்பாக்களை இலக்கியக் கண்கொண்டு ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். நவரசம் என்பது ஒன்பான் சுவைகளைக் குறிக்கும். சுவை என்பதனை மெய்ப்பாடு (Emotion) எனவும் கூறலாம். மெய்ப்பாடு என்பதற்கு வாய்பாடு கூறப்போந்த பேராசிரியர் "மெய்ப்பாடு என்பது பொருட்பாடு; அஃதாவது, உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோராற்ருன் வெளிப்படுதல்''[1] எனக் கூறியுள்ளார். இதனை ''மெய்க்கட்டப்பட்டு விளங்கிய தோற்றம்''[2] என்று கூறுவர் வீரசோழிய உரைகாரர். உள்ளத்தில் தோன்றிய உணர்வே புறத்தே வெளிப்படுவதால் சுவைக்கு மெய்ப்பாடு என்ற பெயர் பொருந்துவதாகும். சுவை கொள்ளுதற்கு முதலில் சுவைப்பொருள் வேண்டும். அதன்பின் தோன்றுவது அதனை நுகர்ந்த பொறியுணர்வு. அப்பொறியுணர்வு மனத்துட்பட்டவழி உள்ளத்தில் குறிப்பு நிகழும். பின்னர், குறிப்புக்கள் பிறந்த உள்ளத்தால் கண்ணீர் அரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலாக உடம்பின்கண் வரும் வேறுபாடாகிய மெய்ப்பாடு தோன்றும். வேம்பென்னும் பொருளும் நாவென்ற பொறியுணர்வும் சேர்ந்தாலல்லது கைப்புச்சுவை தோன்ருது. ஒருவன் வேங்கையைக் காண்கின்ருன்; கண்டவுடன் அஞ்சுகின்ருன். உடனே குறிப்புத் தோன்றுகின்றது. ஈண்டுக் குறிப்பு என்பது வேங்கையை நோக்காது வெறுக்கும் உள்ள நிகழ்ச்சி. பிறகு விறல் அல்லது சத்துவமாகிய மெய்ப்பாடு தோன்றுகின்றது. அவனுக்குத் தோன்றும் மெய்ப்பாடுகள் அஞ்சுதலான் உண்டான தலைநடுக்கம், உடல் நடுக்கம் முதலியன. இச்சுவை, கண்வாயிலாக அன்றிச் செவி வாயிலாகவும் நிகழப்பெறும். எடுத்துக்காட்டாகப் பித்தன் ஒருவன் செய்கையைக் கண்ட

1. தொல். மெய்ப்பாடு - சூ. 1.    2. வீரசோழியம், பக்கம் : 102.

போது நமக்கு நகைச்சுவை தோன்றும். இதுவன்றிப் பித்தன் செய்கையை ஒரு புலவன் பாடினுல் அப்பாட்டினைப் படிக்கும் போதும் நகைச்சுவை தோன்றும். இவ்வாறே பிற சுவைகளும் கண்களுக்கும் செவிகளுக்கும் இன்பம் பயப்பனவாம். நாவான் நுகரப்படும் அறுவகைச் சுவையிலும் செவியான் நுகரப்படும் ஒன்பான் சுவைகள் என்றும் நமது உள்ளத்தே நின்று நிலவி இன்பம் பயப்பன.

ஆசிரியர் தொல்காப்பியனர்,

"நகையே யழுகை யிளிவரன் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்(று)
அப்பா லெட்டே மெய்ப்பா டென்ப."[1]

என்ற சூத்திரத்தில் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என எண்வகை மெய்ப்பாடுகளைக் குறிப்பிட்டுள்ளார். நாடக நூலார் இவ் வெட்டனுள் சமநிலை என்பதைச் சேர்த்துச் சுவை ஒன்பதாகக் கூறுவர். தொல்காப்பியர் இச்சுவைகள் ஒவ்வொன்றும் தோன்றுதற்கு நந்நான்கு காரணங்கள் காட்டுகின்ருர்.

"எள்ள லிளமை பேதைமை மடனென்(று)
உள்ளப் பட்ட நகைநான் கென்ப."[2]

என்ற சூத்திரத்தின்படி எள்ளல், இளமை, பேதைமை, மடமை என்ற நான்கு பற்றி நகைச்சுவை தோன்றும் என்பது பெறப்படுகின்றது. "எள்ளல் என்பது தான் பிறரை எள்ளி நகுதலும் பிறரால் எள்ளப்பட்டவழித் தான் நகுதலும் என இரண்டாம். இளமை என்பது தன் இளமையாற் பிறரை நகுதலும் பிறர் இளமை கண்டு தான் நகுதலும் என இரண்டு. பேதைமை என்பது அறிவின்மை. மடமை என்பது பெரும்பான்மையுங் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. இவையுந் தன் பேதைமையான் நகுதலும் பிறன் பேதைமையான் நகுதலும், தன் மடமையான் நகுதலும், பிறன்மடமையான் நகுதலும் என இவ்விரண்டாம்"[3] என்பர் பேராசிரியர். சமயகுரவர் நால்வர் பாடிய திருப்பாடல்களுள் மற்ற மூவரைப் பார்க்கிலும் சுந்தரர் தேவாரத்தில் நகைச்சுவைக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ள பாடல்கள் பல உள்ளன. இனி அதன் காரணத்தை நோக்குவோம்.

இறைவன் திருவருளைப் பெறுதற்குச் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனச் சாதனங்கள் நான்கு என்பர் பெரியோர். இவற்றை வடமொழியாளர் தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனக் கூறுவர். சைவசமய குரவரான நால்வரும் இந்த நான்கு மார்க்கங்களையும் வற்புறுத்தியுள்ளனர். இது அன்னுர் வாழ்க்கை வரலாற்றில் அறியப்படும் உண்மையாகும். எனவே சுந்தரர் சிவபெருமானிடம் வைத்திருந்த தொடர்பு நண்பர் இருவரின் நட்பினைப் போன்றதாகும். ஆகவே ஒத்த நிலையுடைய நண்பர் இருவர் நகைச்சுவை தோன்ற எள்ளி நகையாடல் இயல்பன்ருே?

எள்ளல், இளமை, பேதைமை, மடமை என்ற நான்கு பற்றி நகைச்சுவை தோன்றும் என்பதை முன்னரே குறிப்பிட்டேன். சுந்தரமூர்த்தி நாயனுர் இறைவனை நோக்கி நிந்தாஸ்துதியாகச் சில பாடல்கள் பாடியுள்ளார். அப்பாடல்களில் நகைச்சுவை தோன்றக் காணலாம். காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயிலுக்கு மேற்கில் அரை மைல் தூரத்தில் திருஓணகாந்தன் தளி உள்ளது. இங்குள்ள சிவபெருமானைப் பாடிய சுந்தரர், "பெருமானே! கச்சியம்பதியில் திருக்காமக் கோட்டத்தில் காமாட்சி அம்மையார் 32 அறங்கள் செய்துவரத் தாங்கள் ஊரார் இடும் பிச்சைகொள்வதன் காரணம் யாது" என்ற கருத்தில்,

'வாரிருங்குழல் வாள்நெடுங்கண்
மலைமகள்மது விம்முகொன்றைத்
தாரிருந்தட(ம்) மார்புநீங்காத்
தையலாள்உல குய்யவைத்த
காரிரும்பொழிற் கச்சிமூதூர்க்
காமக்கோட்டம் உண்டாக நீர்போய்
ஊரிடும்பிச்சை கொள்வதென்னை
ஓணகாந்தன் தளியுளீரே.'[4]

1. தொல். மெய்ப்பாட். 3.
2. தொல். மெய்ப்பாட். 4.
3. தொல். மெய்ப்பாட். பக்கம் - 791.
4. திருஓணகாந்தன் தளி, பண் : இந்தளம் - 6. (கனகசபாபதி பிள்ளை பதிப்பு.)

எனப் பாடியுள்ளார். இறைவி அறங்கள் செய்ய இறைவன் இரத்தல் முறையாமோ? எனக் கூறுவதில் நகைச்சுவை தோன்றுதல் காண்க. இப்பாடல் எள்ளல் காரணமாக வந்த நகைச்சுவைக்கு எடுத்துக் காட்டாகும்.

இனி, பேதைமை காரணமாகத் தோன்றும் நகைச்சுவைக்குச் சுந்தரர் திருப்பாட்டில் சில உதாரணங்களைக் காண்போம். இறைவனைப் பித்தன் என்றே பாடியவர் சுந்தரர் என்பதை நாம் அவரது வரலாற்றால் அறிகின்றோம். சிவபெருமான் திருப்பாற்கடலில் தோன்றிய ஆலகால விஷத்தை உண்டதால், திருச்சோற்றுத் துறைத் திருப்பதிகத்தில் நம்பியாரூரர் சிவபெருமானை நஞ்சு உண்டிட்ட பேதைப் பெருமான் என்றே பாடியுள்ளார். இதனைக் கீழ்க்காணும் திருப்பாடலில் காண்க :

''ஓதக் கடல்நஞ் சினையுண் டிட்ட
பேதைப் பெருமான் பேணும் பதியாம்
சீதப் புனலுண் டெரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே.''[1]

இச் செய்யுள் பேதைமைபற்றி வந்த நகைச்சுவைக்கு எடுத்துக்காட்டாகும்.

அழுகை :

இனி அவலச்சுவையினை ஆராய்வோம்.

'' இளிவே யிழவே யசைவே வறுமையென
விளிவில் கொள்கை யழுகை நான்கே.''[2]

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின்படி இளிவு, இழவு, அசைவு, வறுமை ஆகிய இந்நான்கு பொருள்பற்றி அவலச்சுவை தோன்றும் என்பது போதரும். இளிவு என்பது பிறரான் இகழப்பட்டு எளியனாதல். இழவு என்பது தந்தை தாய் முதலிய சுற்றத்தாரையும், இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலாயவற்றையும் இழத்தல். அசைவு என்பது பண்டை நிலைமை கெட்டு வேறொருவாறாகி வருந்துதல். வறுமை என்பது 'போகந் துய்க்கப்பெறாத பற்றுள்ளம்' என்பர் பேராசிரியர்.[3] சுந்தரமூர்த்தி சுவாமிகள் சங்கிலியாருக்குத் தாம் முன்பு அளித்தவாக்கு உறுதி தவறித் திருவொற்றியூரின் எல்லையைக் கடந்தபோது அவரின் கண்கள் ஒளி மறைந்தன. கண் இழந்த சுவாமிகள் திருவெண்பாக்கம் இறைவனிடம் முறையிடும் பாக்கள் அவலச்சுவையோடு அமைந்துள்ளன.

''பிழையுளன பொறுத்திடுவ
ரென்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே
படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா
கோயில்உளா யேஎன்ன
உழையுடையான் உள்ளிருந்(து)
உளோம்போகீர் என்றானே.''[4]

இப்பாட்டு அசைவுபற்றித் தோன்றிய அவலச்சுவைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றது.

இளிவரல் :

இனி இளிவரல் சுவையினைக் காண்போம் :

''மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு
யாப்புற வந்த விளிவரல் நான்கே.''[5]

என்ற சூத்திரத்தின்படி மூப்பு, பிணி, வருத்தம், மென்மை என்ற நான்கு பொருள்பற்றி இளிவரல் தோன்றும் என்பது பெறப்படுகின்றது. இளிவரல் என்பது பிறரால் இகழப்பட்டு எளியனாய் நிற்றல். சுந்தரர் கண் இழந்தபோது திருவொற்றியூர்ப் பெருமானிடம் முறையிடும் பாக்கள் இளிவரல் சுவைக்கு உதாரணங்களாக விளங்குகின்றன.

''மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய்
மைந்த னேமணி யேமண வாளா
அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னால்
அழையேற் போகுரு டாஎனத் தரியேன்
முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்வேன்
முக்க ணாமுறை யோமறை யோதீ
உகைக்குந் தண்கடல் ஓதம்வந் துலவும்
ஒற்றியூரெனும் ஊருறை வானே.''[6]

1. திருச்சோற்றுத்துறை, பண்: கௌசிகம்-6.
3. தொல். மெய்ப்பாட். உரை : பக்கம் - 794,
5, தொல். மெய்ப்பாட். 6.
2. தொல். மெய்ப்பாட். 5.
4. திருவெண்பாக்கம், பண் : சீகாமரம் - 1.
6. திருவொற்றியூர், பண் : தக்கேசி - 9,

அதில் "அகத்திற் பெண்டுகள் நான் ஒன்று சொன்னால் அழையேல் போ குருடா எனத் தரியேன்" என்ற வரியில் இளிவரல் சுவையினைக் காணலாம். இப் பாட்டில் மென்மைபற்றியும் வருத்தம் பற்றியும் வந்துள்ள இளிவரல் சுவையினைக் காண்க.

**மருட்கை :**

*''புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு*
*மதிமை சாலா மருட்கை நான்கே.''* [1]

என்ற சூத்திரத்தின்படி புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் என்ற நான்குபற்றி மருட்கை தோன்றும் என்பது புலப்படுகின்றது. இதுவரை காணாத நிகழ்ச்சியைக் காணும்போது அது நமக்குப் புதுமையாகத் தோன்றும். மிகப் பெரிய பொருளையும், மிகச் சிறிய பொருளையும் பார்க்குந்தோறும் வியப்புத் தோன்றுதல் இயல்பு. ஆக்கம் என்பது ஒரு பொருள் மற்றொன்றாக மாறுதல். மெழுகினால் செய்யப்பட்ட ஒரு பதுமையைப் பார்க்கும்போது வியப்புச்சுவை தோன்றுமன்றோ? மேலே காட்டிய மூன்று சுவைகளைப்போல் மருட்கையும் தன்கட் டோன்றுவனவும் பிறன்கட் டோன்றுவனவும் என எட்டு வகையாதலும் உண்டு; சுந்தரர் திருக்கூடலையாற்றூருக்குச் சென்று அங்குள்ள இறைவனை வணங்காது திருமுதுகுன்றம் நோக்கிச் சென்றார். சிவபெருமான் வேதியர் வடிவங்கொண்டு சுந்தரர் முன்னே வர, சுந்தரர் அவ்வேதியரைத் திருமுதுகுன்றம் போவதற்கு வழி கேட்க, அவர் "இது கூடலையாற்றூருக்குப் போகும் வழி" என்று கூறித் தாமும் உடன் சென்றார். ஊருக்கு அருகாமையில் மறையவராக வந்த சிவபெருமான் திடீரென்று மறைந்து விட்டார். அதுபோழ்து நாயனார் உடன்வந்தவரைக் காணாது வியப்புற்று, வழித்துணையாக வந்தவர் சிவபெருமானே என உணர்ந்து,

*''வடிவுடை மழுவேந்தி*
*மதகரி உரிபோர்த்துப்*
*பொடியணி திருமேனிப்*
*புரிகுழல் உமையோடும்*
*கொடியணி நெடுமாடக்*
*கூடலை யாற்றூரில்*
*அடிகளிவ் வழிபோந்த*
*அதிசயம் அறியேனே.''* [2]

எனப் பாடினார். இத் திருப்பாட்டில் ''அடிகள் போந்த அதிசயம் அறியேனே'' என்ற வரியில் புதுமை காரணமாக வந்த மருட்கைச் சுவை தோன்றுதல் காண்க.

**அச்சம் :**

அணங்கு, விலங்கு, கள்வர், இறைவராயினர் என இந்நான்கு பகுதியான் அச்சச்சுவை தோன்றும்.

*''அணங்கே விலங்கே கள்வர்த மிறையெனப்*
*பிணங்கல் சாலா வச்ச நான்கே.''* [3]

என்பது தொல்காப்பியம். அணங்கு என்பன பேய், பூதம், பாம்பு முதலியன. அரிமா முதலிய அஞ்சத்தக்கன விலங்காம். கள்வர் என்பார் தீத்தொழில் புரிவோர். இறையெனப்படுவோர் தாய் தந்தை அரசன் ஆசிரியன் முதலாயினோர். ''பிணங்கல் சாலா அச்சம்'' என்றதால் இவை பிறிது பொருள்பற்றி வரும். அஞ்சாத நெஞ்சம்படைத்த சுந்தரர் எப்பொருளுக்கும் அஞ்சார் என்பதே நாம் அவரது வரலாற்றால் அறிகின்றோம். ஆனால் சுந்தரர் தேவாரத்தில் அச்சச்சுவைக்கு உதாரணம் காட்டுதற்கு உரையாசிரியரின் உரை, துணை செய்கின்றது. கள்வர் என்பதற்குப் பேராசிரியர் தீத்தொழில் புரிவோர் எனப் பொருள் கண்டார். பணிவுடைமையின்றிப் பொருளால் செருக்குற்று, இரப்பவர்க்கு ஈயாது நரகத்தில் செல்லும் அறிவிலிகளின் நிலைக்குச் சுந்தரர் அஞ்சுகின்றார் என்பது அவரது பாடலால் அறியலாகும்.

*''தாழ்வெனுந் தன்மை விட்டுத்*
*தனத்தையே மனத்தில் வைத்து*
*வாழ்வதே கருதித் தொண்டர்*
*மறுமைக்கொன் றீய கில்லார்*
*ஆழ்குழிப் பட்ட போது*
*அலக்கணி லொருவர்க் காவர்*
*யாழ்முயன் றிருக்கும் ஆரு*
*ரப்பனே அஞ்சி னேனே.''*

1. தொல். மெய்ப்பாட். 7.
2. திருக்கூடலையாற்றூர், பண் : புறநீர்மை-1.
3. தொல். மெய்ப்பாட். 8.
4. திருவாரூர், பண் : இந்தளம் - 7.

தாழ்வு என்பது பணிவு. தாழ்வு என்பது சைவத்திற்கு அடிப்படையான கொள்கையாகும்.

"தாழ்வெனும் தன்மையோடும்
சைவமாம் சமயம் சாரும்
ஊழ்பெற லரிது."[1]

என்பது சிவஞான சித்தியார். பிறர் பாபத்திற்குத் தாம் இரங்குதல் பெரியோரது இயல்பாகும்.

"தம்மை யிகழ்ந்தமை
தாம்பொறுப்ப தன்றிமற்(று)
எம்மை யிகழ்ந்த
வினைப்பயத்தா—லும்மை
யெரிவாய் நிரயத்து
வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர்
கடன்."[2]

என்னும் நாலடியார்ச் செய்யுள் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. எனவே, பிறர் பாபச் செயலுக்குச் சுந்தரர் அஞ்சினர் என்பது போதரும். இவ்வாறே மணிவாசகப் பெருந்தகையாரும் இறைவனை ஏத்தி அவனது திருவருளைப் பெருத அன்பற்றவர் நிலைக்கு இரங்குகின்றார் என்பது அவரது பாடலால் அறியலாகும்.

"வன்புலால் வேலும் அஞ்சேன்
வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்
என்பெலாம் உருக நோக்கி
அம்பலத் தாடு கின்ற
என்பொலா மணியை ஏத்தி
இனிதருள் பருக மாட்டா
அன்பிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே."[3]

## பெருமிதம் :

பெருமிதம் என்பது வீரம். கல்வி, தறுகண், இசைமை, கொடை என்னும் நான்குபற்றிப் பெருமிதச்சுவை தோன்றும். 'கல்வி என்பது தவம் முதலிய விச்சை. தறுகண் என்பது அஞ்சுதக்கன கண்ட இடத்து அஞ்சாமை. இசைமை என்பது இன்பமும் பொருளும் இறப்பப் பயப்பினும் பழியொடு வருவன செய்யாமை. கொடை என்பது உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப் பொருளும் கொடுத்தல்' என்பர் பேராசிரியர்.[4] சுந்தரமூர்த்தி நாயனர் திருநாட்டியத்தான்குடி என்னும் திருப்பதிக்குச் சென்று இறைவனைப் பாடும் பாட்டில் பெருமிதச் சுவை காணலாகும்.

"பூண்நா ணுவதோர் அரவங்கண் டஞ்சேன்
புறங்காட் டாடல்கண் டிகழேன்
பேணீ ராகிலும் பெருமையை யுணர்வேன்
பிறவே னுகிலும் மறவேன்
காணீ ராகிலுங் காண்பனென் மனத்தாற்
கருதீ ராகிலுங் கருதி
நானே லும்மடி பாடுத லொழியேன்
நாட்டியத் தான்குடி நம்பீ."[5]

இச் செய்யுள் தறுகண்பற்றி வந்த பெருமிதச்சுவைக்கு எடுத்துக்காட்டாகும்.

"அஞ்சா தேயுமக் காட்செய வல்லேன்
யாதினுக் காசைப் படுகேன்."[6]

இவ்வரிகள் இசைமைபற்றி வந்த பெருமிதச் சுவைக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன.

## வெகுளி :

"உறுப்பறை குடிகோ ளலைகொலை யென்ற
வெறுப்பின் வந்த வெகுளி நான்கே."[7]

என்ற சூத்திரத்தின்படி உறுப்பறை, குடிகோள், அலை, கொலை என்னும் நான்கு பற்றி வெகுளிச்சுவை தோன்றும். 'உறுப்பறை என்பது கைகுறைத்தல், கண்குறைத்தல் முதலாயின. குடிகோள் என்பது தாரமும் சுற்றமும் குடிப்பிறப்பும் முதலாய வற்றுக்குக் கேடு சூழ்தல்; அலை என்பது கோல் கொண்டலைத்தல் முதலாயின. கொலை யென்பது அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத்தல்' என்பர் உரையாசிரியர்.[8] காஞ்சிபுரத்தில் இடக்கண் பெற்ற நம்பியாரூரர் பல பதிகளைத் தரிசித்துப் பின்னர், திருவாரூர் சென்று

1. சிவஞான சித்தியார், சுபக்கம் - 91.
2. நாலடியார், துறவு - 8.
3. திருவாசகம், அச்சப்பத்து - 3.
4. பேராசிரியர் உரை, மெய்ப்பாடு : சூ - 1.
5. திருநாட்டியத்தான். பண் : தக்கராகம் - 1.
6. திருநாட்டியத்தான். பண் : தக்கராகம் - 1.
7. தொல். மெய்ப்பாடு - 10.
8. தொல். மெய்ப்பாடு. 10 - உரை.

வன்மீகநாதரைப் பணிந்து வலக்கண் தரும்படி வேண்டினர். அப்போது அவர் பாடிய பாக்கள் வெகுளிச்சுவையுடன் விளங்குதல் காண்க.

"மீளா அடிமை உமக்கே
ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே
கனன்று முகத்தால் மிகவாடி
ஆளா யிருக்கும் அடியார்
தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா
ரூரீர் வாழ்ந்து போதீரே."[1]

"எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர்
நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால்
வாழ்ந்து போதீரே."[2]

இவை உறுப்பறை காரணமாக வந்த வெகுளிச் சுவைக்கு உதாரணங்களாக விளங்குகின்றன.

**உவகை :**

செல்வம், அறிவுடைமை, புணர்ச்சி, விளையாட்டு என்ற இவைபற்றி உவகைச் சுவை தோன்றும். இதனை,

"செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்(று)
அல்ல னீத்த வுவகை நான்கே."[3]

என்பதனல் அறிக. ஈண்டுச் "செல்வம் என்பது நுகர்ச்சி. புலன் என்பது கல்விப் பயனாகிய அறிவுடைமை; புணர்வு என்பது காமப்புணர்ச்சி முதலாயின. விளையாட்டு என்பது 'யாறுங் குளனுங் காவு மாடிப் பதியிகந்து வருதல்' முதலாயின" என்பர் பேராசிரியர்.[4] சுந்தரமூர்த்தி சுவாமிகள் யானைமீது இவர்ந்து கைலாயத்திற்குச் சென்றபோது பாடிய,

"தானெனை முன்படைத்தா
னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ
நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர்கொள்ள
மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான்
நொடித்தான்மலை யுத்தமனே."[5]

என்ற திருப்பாடல் செல்வம் என்ற நுகர்ச்சி காரணமாக வந்த உவகைச் சுவைக்கு உதாரணமாகும்.

**சமநிலை :**

சமநிலை என்பது சாந்தம். அஃதாவது ஐம்பொறியினையும் அடக்கி, பிறர் வையினும் வாழ்த்தினும், வாளால் வெட்டவரினும், தாளில் வணங்கினும் மனம் மாருது அவற்றைச் சமமாக ஏற்றுக் கொண்டு நிற்கும் நிலைமையாகும். அஃது உலகியல் நீங்கினர் தன்மையாகலின் ஏனைய எட்டுமே காவியங்களில் பயின்று வருவன. இச்சுவைக்கும் சுந்தரர் தேவாரத்தில் இடம் உள்ளது. நம்பியாரூரரின் வரலாற்றினைப் படிக்கும்போது அவர் இறைவனை வேண்டியது தவநெறியாகிய சமநிலையே என்பது போதரும். திருவெண்ணெய்நல்லூரில் சிவபெருமானல் ஆட்கொள்ளப்பட்ட நம்பியாரூரர் திருத்துறையூர் சென்று இறைவனை வேண்டிய பொருள் தவநெறியாகும் என்பது அவரது வாக்கால் உணரலாம்.

"மத்தம் மதயானை
யின்வெண் மருப்புந்தி
முத்தங் கொணர்ந்தெற்றி
யொர்பெண்ணை வடபால்
பத்தர் பயின்றேத்திப்
பரவுந் துறையூர்
அத்தா உனைவேண்டிக்
கொள்வேன் தவநெறியே."[6]

சிவபெருமான் சங்கிலியார் கனவில் தோன்றி,

"சாருந் தவத்துச் சங்கிலிகேள்
சால என்பால் அன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட
தவத்தான் வெண்ணெய் நல்லூரில்

1. திருவாரூர், பண் : செந்துருத்தி - 1.
2. திருவாரூர், பண் : செந்துருத்தி - 2.
3. தொல். மெய்ப்பாடு - 11.
4. தொல். மெய்ப்பாடு - உரை.
5. திருநொடித்தான்மலை, பண் : பஞ்சமம் 1.
6. திருத்துறையூர், பண் : தக்கராகம்-2.

யாரும் அறிய யான்ஆள
உரியான் உன்னை எனைஇரந்தான்
வார்கொள் முலையாய் நீஅவனை
மணத்தால் அணைவாய் மகிழ்ந்தென்றார்.''[1]

என்று சுந்தரரின் தவநெறியைப் பாராட்டிக் கூறியது ஒப்புநோக்கத்தக்கது. இரு பெண்களை மணந்தாரேனும் சுந்தரர் வேண்டிய நெறி சமநிலையாகிய தவ நெறியே என்பது பெறப்படுகின்றது.

இதுகாறுங் கூறியவாற்றால் ஆசிரியர் தொல்காப்பியனார் காட்டிய ஒன்பான் சுவைகளுக்கும் சுந்தரர் தேவாரத்தில் உதாரணங்களைக் கண்டோம். இவ்வாறே பிற தோத்திரப் பாக்களையும் இலக்கியக் கண்கொண்டு நோக்கி அவைகளில் அரிதிற் காணக்கிடக்கும் ஒன்பான் சுவை களை அறிஞர் படித்து இன்புறுவாராக.

---

## தேவார ஆராய்ச்சி

"ஆளுடைய நம்பி இந்நிலவுலகத்திலே தோன்றியது பரவையார் சங்கிலியார் என்னும் பெண்மணிகளோடு இல்லறம் நடாத்துதற் பொருட்டே என்பது பெரியபுராணத்தால் இனிது விளங்கும். இந்நிலவுலகில் அன்னோர் போகம் நுகர்ந்து ஒழித்த பின்னர், அவாவற்று இடைவிடாது சிவபோகந் திளைக்கும் பெருநிலை எய்தினர்.

'இன்பம் இடையரு தீண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்,'

என்றவண்ணம் அவாவற்றவிடத்தே இடையருத இன்பந் தலைப்படுமாதலின், சிறிதவாவின் பொருட்டாக நமது நாயனார்க் கமைந்த வினைப்போகம் ஒழிந்தவுடன் இடையருது சிவபோகமே விளைவதாயிற்று. இதுபற்றியே 'முடிவி லாத சிவபோகம் முதிர்ந்து முறுகி விளைந்ததால்' என்றார், ஆசிரியர் சேக்கிழார். திருப்புக்கொளியூரில் முதலைவாய்ப் பிள்ளையை அழைத்தது பெரியதோர் இரக்கத்தால் நிகழ்ந்த அருட்பெருஞ் செயலாகும். இறைவன் சிவஞானிகள் வேண்டியதை வேண்டியவாறே ஈந்தருள்வன். சிவஞானிகள் தம்பொருட்டு எதனையும் வேண்டார். புகழ் நாட்டுங் கருத்துடன் அவர்கள் அற்புதங்கள் செய்வதில்லை. திருவருள்வழிநின்று உயிர்கள்மாட்டு வைத்த பெருங்கருணையினாலே அவர்கள் அற்புதச் செயல் நிகழ்த்துவர். முத்தர் சித்தர் என்ற இருதிறத்தாருட் சிவஞானிகளென்பார் முத்தர். சித்தரினும் முத்தர் சிறந்தவர் என்பது தெளிவு...நம்பியாரூரர் சீவன்முத்தராதலின் ஈண்டுக் குறித்த அற்புதச் செயலை இறைவனருளால் நிகழ்த்துதல் இயலாததொன்றன்று. ஊழின் வலியும் திருவருள்வழி நிற்பாரைத் தடைசெய்யவொண்ணாது. இறந்த மைந்தனை மீளப்பெறும் நல்வினையுடைமை பற்றியே அம்மைந்தனின் பெற்றோர்கள் நாயனாரைக் கண்டு வணங்கவும் அவருடைய இரக்கத்திற்கு உரியராகவும் பெற்றனர்.''

—பேராசிரியர், கா. சுப்பிரமணிய பிள்ளை. "சுந்தரர் வரலாறு" பக்கம் கசுரு, ச.

---

1. பெரியபுராணம், ஏயர்கோன்: 239.

# ஒலித்துணை உகரம்

[திரு. டாக்டர் மு. வரதராசனார்]

டாக்டர் மு. வரதராசனார், 1912 ஆம் ஆண்டு வடஆர்க்காட்டைச் சார்ந்த திருப்பத்தூரில் முனிசாமி முதலியார், அம்மாக் கண்ணு அம்மையார் ஆகியோருக்குத் திருமகனாராய்த் தோன்றினார். 1935 ஆம் ஆண்டு வித்துவான் தேர்வில் முதல்வராகத் தேறி ஓராயிர ரூபா பரிசு பெற்றார். எம். ஏ. பட்டமும் ஆராய்ச்சிப் பட்டங்களான எம். ஓ. எல்., பிஎச். டி. பட்டங்களும் பெற்றுள்ளார். 1939 முதல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறையில்



தொண்டாற்றி, இன்று அதன் தலைவராகத் திகழ்கின்றார். பல் கலைக் கழகக் குழுக்கள் பலவற்றில் உறுப்பினராகவுள்ளார். ஆராய்ச்சி, கட்டுரை, புதினம் முதலான துறைகளில் சிறந்த நூல்களியற்றியுள்ளார். அவற்றுள் சில சென்னை அரசினராலும், தமிழ்வளர்ச்சிக்கழகத்தாராலும் பாராட்டும் பரிசும் பெற்றன. உரிமைப்போராட்ட நூற்றாண்டு விழாவை ஒட்டிச் சென்னை அரசினர் 1957இல் தமிழ் இயற்றுறை வல்லாரெனப் பாராட்டிப் பொற்பதக்கமளித்தனர்.

எல்லா மரங்களும் வெயிலை நாடியே வளர்கின்றன. ஆனால் ஒரு வேறுபாடு உள்ளது. தென்னை முதலியவற்றின் மடல்கள் நாற்புறமும் வளரும் முறை வேறு. ஆல் வேம்பு முதலியவற்றின் கிளைகள் வளரும் முறை வேறு. ஒரு தோட்டத்தில் கிழக்குப் பகுதியில் வெயில் படுதல் குறைவு என்றும், மேற்குப் பகுதியில் வெயில் படுதல் மிகுதி என்றும் வைத்துக் கொள்வோம். அங்கு ஒரு தென்னையும் ஒரு வேம்பும் அடுத்தடுத்து வளர்கின்றன. தென்னை மேற்குப் புறமாகச் சாயும்; சாய்ந்தே வளரும். ஆயினும் மேற்குப் புறமாக விடும் மடல்கள் எவ்வளவோ அவ்வளவு மடல்கள் கிழக்குப் புறமாகவும் விடும். மேற்கு நோக்கிய மடல்கள் எவ்வளவு வளமாக வளருமோ அவ்வளவு வளமாகக் கிழக்கு நோக்கிய மடல்களும் வளரும். அவற்றின் நீளமும் அகலமும் அவ்வளவாகவே அமையும். வெயில் படும் பகுதியில் மிகுதியாகவும் வெயில் குறைந்த பகுதியில் குறைவாகவும் வளர்ச்சி பெறுவதில்லை. வேம்பு அத்தன்மையானது அன்று. வெயில் படும் பகுதியில் வேம்பு மிகப் பல கிளைகள் விடும்; அவை செழித்தும் வளரும்; இலைகளும் அடர்ந்திருக்கும். வெயில் குறைந்த பகுதியை நோக்கி அவ்வளவு கிளைகள் தோன்றுவதில்லை; அவை அவ்வளவு செழித்துத் தழைத்தலும் இல்லை.

இது இயற்கையின் விந்தைகளுள் ஒன்று; இத்தகைய விந்தைகள் இயற்கையில் மிகப் பல உண்டு.

மொழி மனிதரின் படைப்பே; ஆதலின் முழுதும் இயற்கை என்று கூற முடியாதது. ஆயின் மனிதரின் இயற்கையான சில ஆற்றல்களால் தோன்றி வளர்ந்து நிலவுவது மொழி; ஆதலின் மொழியின் வளர்ச்சியிலும், இயற்கையின் விந்தைகள் சிலவற்றைக் காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| ஆடு | பாடு | ஓது | ஏகு |
| ஆடினேன் | பாடினேன் | ஓதினேன | ஏகினேன் |
| ஆடினோம் | பாடினோம் | ஓதினோம் | ஏகினோம் |
| ஆடுகிறாய் | பாடுகிறாய் | ஓதுகிறாய் | ஏகுகிறாய் |
| ஆடுகிறீர் | பாடுகிறீர் | ஓதுகிறீர் | ஏகுகிறீர் |
| ஆடுவான் | பாடுவான் | ஓதுவான் | ஏகுவான் |
| ஆடுவாள் | பாடுவாள் | ஓதுவாள் | ஏகுவாள் |
| ஆடுவார் | பாடுவார் | ஓதுவார் | ஏகுவார் |
| ஆடிற்று | பாடிற்று | ஓதிற்று | ஏகிற்று |
| ஆடின | பாடின | ஓதின | ஏகின |
| ஆடும் | பாடும் | ஓதும் | ஏகும் |
| ஆடிய | பாடிய | ஓதிய | ஏகிய |
| ஆடி | பாடி | ஓதி | ஏகி |
| ஆட | பாட | ஓத | ஏக |

இருதிணை ஐம்பால் மூவிடங்களின் வினைமுற்றுக்களிலும் பெயரெச்ச வினையெச்சங்களிலும் மூவகைக் காலங்களிலும் ஆடு பாடு ஓது ஏகு என்னும் வினையடிகளிலிருந்து பிறக்கும் வினைச்சொற்கள் ஒரே வகையாக அமைதலைக் காணலாம். ஓடு தேடு, நாடு, ஏசு முதலிய மற்ற நெடிற்றொடர்க் குற்றுகர ஈற்று வினையடிகளிலிருந்து பிறக்கும் வினைச்சொற்களும் மேற்கூறியவாறு ஒரே வகையாக அமைதலைக் காணலாம். (ஓடினேன், தேடுகிறாள், நாடின, ஏச முதலியன )

இவைபோன்ற அளவுடைய முற்றுகர ஈற்றுச் சொற்களான நீவு, தூவு, ஏவு, சீவு முதலியவைகளிலிருந்து வினைச் சொற்கள் அமையும்போதும் மேற்கூறியவாறு ஒரே முறை இருத்தல் காணலாம். (நீவினேன், தூவுகிறாள், ஏவின, சீவ முதலியன.)

போக்கு, காய்ச்சு, மாட்டு, ஏத்து, தூற்று முதலான வன்றொடர்க் குற்றுகர ஈற்று வினையடிகளிலிருந்து வினைச் சொற்கள் அமையும் முறையும் ஒரு தன்மையாகவே உள்ளது.

| | |
|---|---|
| போக்கு | காய்ச்சு |
| போக்கினேன் | காய்ச்சினேன் |
| போக்குகிறாய் | காய்ச்சுகிறாய் |
| போக்குவார் | காய்ச்சுவார் |
| போக்கின | காய்ச்சின |
| போக்கும் | காய்ச்சும் |
| போக்கி | காய்ச்சி |
| போக்க | காய்ச்ச |

| | | |
|---|---|---|
| மாட்டு | ஏத்து | தூற்று |
| மாட்டினேன் | ஏத்தினேன் | தூற்றினேன் |
| மாட்டுகிறாய் | ஏத்துகிறாய் | தூற்றுகிறாய் |
| மாட்டுவார் | ஏத்துவார் | தூற்றுவார் |
| மாட்டின | ஏத்தின | தூற்றின |
| மாட்டும் | ஏக்தும் | தூற்றும் |
| மாட்டி | ஏத்தி | தூற்றி |
| மாட்ட | ஏத்த | தூற்ற |

தூங்கு, அஞ்சு, சுரண்டு, உந்து, ஓம்பு, தோன்று முதலான மென்றொடர்க் குற்றுகர ஈற்று வினையடிகளிலிருந்து வினைச் சொற்கள் அமைதலும் ஒரேவகையாக உள்ளது.

| | | |
|---|---|---|
| தூங்கு | அஞ்சு | சுரண்டு |
| தூங்கினேன் | அஞ்சினேன் | சுரண்டினேன் |
| தூங்குகிறாய் | அஞ்சுகிறாய் | சுரண்டுகிறாய் |
| தூங்குவார் | அஞ்சுவார் | சுரண்டுவார் |
| தூங்கின | அஞ்சின | சுரண்டின |
| தூங்கும் | அஞ்சும் | சுரண்டும் |
| தூங்கி | அஞ்சி | சுரண்டி |
| தூங்க | அஞ்ச | சுரண்ட |
| உந்து | ஓம்பு | தோன்று |
| உந்தினேன் | ஓம்பினேன் | தோன்றினேன் |
| உந்துகிறாய் | ஓம்புகிறாய் | தோன்றுகிறாய் |
| உந்துவார் | ஓம்புவார் | தோன்றுவார் |
| உந்தின | ஓம்பின | தோன்றின |
| உந்தும் | ஓம்பும் | தோன்றும் |
| உந்தி | ஓம்பி | தோன்றி |
| உந்த | ஓம்ப | தோன்ற |

உருகு, வருடு, விசிறு முதலான உயிர்த்தொடர்க் குற்றுகர ஈற்று வினையடிகளிலிருந்து வினைமுற்றுக்களும் எச்சங்களும் அமைதலும் மேற்கண்டவாறு ஒரு வகையாகவே உள்ளது.

| | | |
|---|---|---|
| உருகு | வருடு | விசிறு |
| உருகினேன் | வருடினேன் | விசிறினேன் |
| உருகுகிறாய் | வருடுகிறாய் | விசிறுகிறாய் |
| உருகுவார் | வருடுவார் | விசிறுவார் |
| உருகின | வருடின | விசிறின |
| உருகும் | வருடும் | விசிறும் |
| உருகி | வருடி | விசிறி |
| உருக | வருட | விசிற |

ஆய்தத்தொடர்க் குற்றுகர ஈற்று வினையடிகளிலும் இந்த ஒழுங்கையே காணலாம். (அஃகு, அஃகினார், அஃகி முதலியன.) மாழ்கு, மாழ்கினான், மாழ்குவார் முதலிய இடைத்தொடர்க் குற்றுகர ஈற்று வினையடியிலிருந்து பிறந்த வினைச் சொற்களிலும் இதைக் காணலாம்.

பரவு, பரவினேன், பரவி, விரவு, விரவி முதலான சில முற்றுகர ஈற்று வினையடிகளில் பிறந்த சொற்களிலும் இந்த ஒழுங்கைக் காணலாம். இவை முற்றுகர ஈறு உடையன ஆயினும் குற்றுகர ஈற்றுச் சொற்கள்போலவே இருத்தலால், இந்த ஒழுங்கு அமைந்தது எனலாம்.

ஆயின், புகு, விடு, அறு முதலான முற்றுகர ஈற்று வினையடிகளிலிருந்து வினைச்சொற்கள் அமையும்போது வேறுபட்ட முறையைக் காண்கிறோம். அந்த வேறுபாடும் நிகழ்காலம் எதிர்காலம் பற்றிய சொற்களில் அவ்வளவாக இல்லை. இறந்தகாலச் சொற்களில் மட்டுமே மிகுதியாக உள்ளது.

| | | | |
|---|---|---|---|
| புகு | விடு | அறு | எடு |
| புக்கேன் | விட்டேன் | அற்றேன் | எடுத்தேன் |
| புகுந்தேன் | விடுத்தேன் | அறுத்தேன் | — |
| புக்கன | விட்டன | அற்றன | எடுத்தன |
| புகுந்தன | விடுத்தன | அறுந்தன | — |
| புக்கு | விட்டு | அற்று | எடுத்து |
| புகுந்து | விடுத்து | அறுந்து | — |
| புகுகிறாய் | விடுகிறாய் | அறுகிறாய் | எடுக்கிறாய் |
| புகுவார் | விடுவார் | அறுவார் | எடுப்பார் |
| புகும் | விடும் | அறும் | எடுக்கும் |
| புக | விட | அற | எடுக்க |

குற்றுகர ஈற்று வினையடிகளோடு சேர்ந்த இறந்தகால இடைநிலை 'இன்' என்பதே ஆகும். (னகரம் கெட்டு இகரம் மட்டும் நின்ற நிலையின ஆடி, ஓடி முதலியன.) புகு முதலிய முற்றுகர ஈற்று வினையடிகளோடு சேர்ந்த இறந்தகால இடைநிலை 'இன்' அன்று. தகர இடைநிலை சேர்ந்திருத்தல் காணலாம். புக்கேன் முதலிய சொற்களில் பகுதி இரட்டித்து இறந்தகாலம் காட்டிற்று என்பர் இலக்கண நூலார். அவ்வாறன்றி, அவற்றிலும் தகர மெய் சேர்ந்தே இறந்தகாலம் உணர்த்திற்று என்பர் மொழியியலார். எவ்வாறாயினும் ஆகுக; இவற்றில் கால இடைநிலை வேறுபட்டிருத்தல் காணலாம்.

குற்றுகர ஈற்று வினையடிகளில் ஒழுங்கான முறையும், முற்றுகர ஈற்று வினையடிகளில் ஒழுங்கின்மையும் கண்டோம். உகர ஈற்றை விட்டு, மற்ற உயிரீறாக வரும் வினையடிகளை ஆராய்ந்தாலும் ஒழுங்கின்மையே காணப்படுகிறது.

| நட | குடி | போ | சா |
|---|---|---|---|
| நடந்தான் | குடித்தான் | போனான் | செத்தான் |
| நடந்தார் | குடித்தார் | போனார் | செத்தார் |
| நடக்கிறாள் | குடிக்கிறாள் | போகிறாள் | சாகிறாள் |
| நடப்பார் | குடிப்பார் | போவார் | சாவார் |

இவற்றில் இறந்த காலத்திலும் எதிர் காலத்திலும் வேறுபாடு நேர்தலையும், நிகழ் காலத்தில் ஒரேவகையாக அமைதலையும் காணலாம்.

இனி, மெய்யீறாக உள்ள வினையடிகளை ஆராய்வோம்.

| உண் | தின் | செய் | சொல் |
|---|---|---|---|
| உண்டான் | தின்றான் | செய்தான் | சொன்னான் |
| உண்கிறார் | தின்கிறார் | செய்கிறார் | சொல்கிறார் |
| உண்பார் | தின்பார் | செய்வார் | சொல்வார் |

இவற்றிலும், இறந்தகாலச் சொற்களும் எதிர்காலச் சொற்களும் அமையும் முறை வேறுபடுதலும், நிகழ்காலச் சொற்களின் முறை வேறுபடாமையும் காணலாம்.

இவற்றிலிருந்து அறியக் கூடியவை என்ன?

குற்றுகர ஈற்று வினையடிகள் (ஆடு, வருடு முதலியவை) வினைச் சொற்களாக அமையும் முறை ஒரு தன்மையாக ஒழுங்காக இருக்கின்றது. மற்ற வினையடிகளின் முறை ஒழுங்காக இல்லை; பலவகையான வேறுபாடு காணப்படுகின்றது. குற்றுகர ஈற்றுச் சொற்களில் தென்னையின் ஒழுங்கு உள்ளது; அவை ஒழுங்குடன் வளரும் மடல்கள் போன்றவை. மற்றச் சொற்களில் வேம்பின் ஒழுங்கின்மை உள்ளது; அவை கதிரவன் ஒளிக்கு ஏற்பச் சாய்ந்தும் நீண்டும் வளைந்தும் பலவாறு வேறுபடும் கிளைகள் போன்றவை.

தென்னையிலும் சாய்வு உள்ளது; சாய்வுக்கு இடையே ஒழுங்கு உள்ளது. வேம்பின் வளர்ச்சியிலும் ஒழுங்கு உள்ளது; ஆயினும் வேறுபாடும் திரிபுமே பலவாக உள்ளன. குற்றுகர ஈற்று வினையடிகளிலும் மற்ற ஈற்று வினையடிகளிலும் இத்தகைய நிலைகளைக் காணலாம்.

தென்னைக்கும் வேம்புக்கும் உள்ள வளர்ச்சி வேறுபாடு இயற்கையின் விந்தைகளுள் ஒன்று. அவற்றில் முறையே புறத்திலும் அகத்திலும் காழ் அமைந்திருத்தலை ஒருவகைக் காரணமாகக் கூறலாம்.

குற்றுகர ஈற்றுச் சொற்களுக்கும் மற்றச் சொற்களுக்கும் உள்ள வேறுபாடும் ஒருவகையில் இயற்கையின் விந்தையே; ஒலியுறுப்புக்களின் இயக்கத்தில் நிகழும் விந்தை இது.

இந்த வேறுபாட்டுக்குக் காரணம் என்ன? ஆடு, பாடு முதலியவற்றின் ஈற்றில் உள்ள உகரம் ஒலித்துணையாக வருவது என்பது கால்டுவெல் முதலிய மொழிநூலறிஞரின் கருத்து. அந்த உகரம் ஒலித்துணையாக வருவதோடு அல்லாமல், வேறுபட்ட திரிபுகள் நேராதவாறு தடுத்துக் காக்கும் ஒலித்தடையாகவும் உள்ளது.

இந்த உகரம் தடையாக நிற்றல் அவ்வளவாக ஆராயப்படவில்லை. ஆனால் துணையாக நிற்றல் மட்டும் நன்கு ஆராயப்

பட்டுள்ளது. உயிரொலிகளுள் இந்தத் துணையொலியான குற்றுகரமே மிகச் சிறியது என்றும், எளிதில் மாய்வது என்றும் கால்டுவெல் கருதினர். "Short u is of all vowels the weakest and lightest, and is largely used, especially at the end of words, for emphonic purposes, or as a help to enunciation "[1]

தூங்கு முதலிய குற்றுகர ஈற்றுச் சொற்களின் இயல்பே தூவு முதலிய சில முற்றுகர ஈற்றுச் சொற்களுக்கும் பொருந்துவதாக உள்ளது ஆராயத்தக்கது. இதனை உணர்ந்த நன்னூலார், குற்றுகர ஈற்றுச் சொற்களுக்குப் புணர்ச்சி விதி ஓதியவிடத்து,

> உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்;
> யவ்வரின் இய்யாம்; முற்றும்அற்று ஒரோவழி[2]

என முற்றுகர ஈற்றுச் சொற்களுக்கும் ஒரோவழி அவ்விதி பொருந்துமாறு உணர்த்தினர்.

ஆயின், தொல்காப்பியனர் காலத்தே இவ்வாறு முற்றுகர ஈற்றுச் சொற்கள் அமையவில்லை. தூங்கு என்னும் வினையடி தூங்கி என்னும் வினையெச்சமாக அமைந்தாற்போல், தூ என்னும் வினையடி தூவி என்னும் வினையெச்சமாக அமையவில்லை. தூய் என்பதே அக்காலத்து இறந்தகால வினையெச்ச வடிவு. அதுபோன்றே, கனவு, இரவு முதலிய முற்றுகர ஈற்றுச் சொற்களும் அக்காலத்தே பலவாக இல்லை. கனு, இரா, நிலா என்பனவே அக்காலச் சொற்கள். அவை கன, இர, நில எனக் குறுகி வழங்குதல் உண்டு.

> இராவென் கிளவிக்கு அகரம் இல்லை[3]
> நிலாவென் கிளவி அத்தொடு சிவணும்[4]

என்னும் நூற்பாக்களால், அக்காலத்து இரா நிலா முதலியன ஆகார ஈற்றுச் சொற்களாக வழங்குதலே பெரும்பான்மை என்பது அறியப்படும். விளா என இக்காலத்து வழங்கும் சொல்லுக்கு விள என அகர ஈருக வழங்கும் இயல்பைக் கற்பித்துள்ளார் நச்சினர்க்கினியர்.

> விளஎன மெய் முதலும் உயிரீறுமாம்[5]

எனக் குறித்துள்ளார்.

அன்றியும், நன்னூலார் காலத்தே 'முற்றும் அற்று ஒரோவழி' என்ற விதிப்படி,

> சுறவு+எறிமீன்—சுறவெறிமீன்

எனப் புணர்த்த வேண்டியதையே, நச்சினர்க்கினியர்,

> சுற+எறிமீன்—சுறவெறி மீன்

என்று பகுத்துப்புணர்த்து, 'இவை உகரம் பெருமல் வந்தன' என்ற குறிப்பும் பொறித்துள்ளார்.[6] சுறவு என்று முற்றுகர ஈருகக்கொண்டு பின்னர் உயிர்வர அவ்வுகரம் கெட்டதாகக் கருதுவர் நன்னூலார்.

> கதவு+அழகிது—கதவழகிது
> செலவு+அழகிது—செலவழகிது

என்பன உரையாசிரியர் அதற்குக் காட்டும் எடுத்துக்காட்டுக்களாகும்.[7] அவை போன்ற சொற்களையே நச்சினர்க்கினியர் முற்றுகர ஈற்றனவாகக் கருதாமல் அகர ஈற்றனவாகக் கருதியுள்ளார். அதனாலேயே சுற+எறி—சுறவெறி எனப் பகுத்து விதி உணர்த்தியுள்ளார். அவர்தம் கொள்கைக்குச் சான்ருக,

> இரவழங்கு சிறுநெறி[8]

என்ற பழம்பாட்டின் அடி உள்ளது. அத்தொடரில் இரவு என்று பகுத்தற்கே இடமில்லை. ஆகவே, கனு, இரா, நிலா, விளா, முழா, அரா என்பனவே சொல் வடிவங்கள் என்றும், நெடிலீறு குறுகிக் கன, இர, நில, விள, முழ, அர என நிற்றல் உண்டு என்றும் அக்காலத்தவர் கொண்ட

1. Caldwell's A Comparative Grammar, p. 134.
2. நன்னூல், எழுத். 164.
3. தொல். எழுத். 227.
4. தொல். எழுத். 228.
5. தொல். எழுத். 103 - நச்சினர்க்கினியர்.
6. தொல். எழுத். 483, நச்சினர்க்கினியர்.
7. நன்னூல் - எழுத். 164, விருத்தியுரை.
8. அகநானூறு, 318.
9. சுறவுயர் கொடி, அரவுயர் கொடி, முழவுறழ்தோள் என இவை குறியதன் இறுதிச் சினை கெட்டு வருமொழி உயிர் முதன்மொழியாய் வருதலின் வகர உடம்படுமெய் பெற்று உகரம் பெருது முடிந்தன என்பர் நச்சினர்க்கினியர்—தொல். எழுத். 234.

னர்.[9] கனவு, இரவு, நிலவு, விளவு முதலிய வடிவங்கள் இல்லாமற் போகவில்லை. அவ்வடிவங்கள் செய்யுட்கு உரியன என்பது தொல்காப்பியனாரின் கருத்து.

*குறியதன் இறுதிச் சினைகெட உகரம்*
*அறிய வருதல் செய்யுளுள் உரித்தே.*[1]

உகரம் புலப்படும் வகையான் வரும் என்று உணர்த்தும் பொருட்டே, 'அறிய வருதல்' என்றார். அவ்வுகரம் சொல்லின் உறுப்பு அன்று என்பதும், புணர்ச்சியுள் வரும் சாரியைபோல் வந்தமைந்த ஒலித்துணையே என்பதும் அவர் கருத்துப் போலும்.

*இறவுப்புறத் தன்ன பிணர்படு தடவு முதல்*
*சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை ..*[2]
*புறவுப்புறத் தன்ன புன்காய் உகாய்...*[3]

என்னும் செய்யுளடிகளையே உரையாசிரியர்களும் எடுத்துக்காட்டுக்களாகக் குறித்துள்ளனர். இக்காலத்தே இவ்வாறு அமைந்த சொற்கள் பல பேச்சு வழக்கிலும் உள்ளன. கனவு, இரவு முதலிய இவ்வடிவங்களே பெரு வழக்காகவும் உள்ளன.

எவ்வாறாயினும் ஆகுக; ஆகார ஈற்றுச் சொற்கள் சில அகர ஈறாய்க் குறுகிய பின்னர் உகரம் பெற்று வருதல் உண்டு என்பதைத் தொல்காப்பியனார் உணர்த்தியுள்ளார். அவ்வுகரத்தை முற்றுகரம் என்றே பிற்காலத்தார் கொண்டனர். 'உகரம் அறிய வருதல்' என்று தொல்காப்பியனார் கூறிய குறிப்போ, அவ்வுகரம் ஒலித்துணை போன்றது என உய்த்துணர இடந்தருகின்றது. ஆகவே, நன்னூலார் 'முற்றும் அற்று ஒரோவழி' என விதி வகுத்ததும், உரையாசிரியர்கள், 'கதவழகிது, செலவழகிது' என்பவற்றை எடுத்துக்காட்டாகக் காட்டியதும் ஒருவாறு பொருந்துவனவே ஆகும். ஆயின், கதவு, செலவு என்பவற்றின் ஈற்றில் உள்ள உகரம், எடு தபு என்பவற்றின் ஈற்றில் உள்ள உகரம்போல் முற்றுகரமே எனக் கொள்ளும் கொள்கை பொருந்துமா என்பது ஆராயத்தக்கது. ஒலிக்கும் அளவில் தூங்கு, வரகு முதலியவற்றின் ஈற்றில் உள்ள உகரத்திற்கும், கதவு, செலவு என்பவற்றின் உகரத்திற்கும் வேறுபாடு உள்ளதா என்பதும் ஆராயத்தக்கது. ஒரு நெறியில் நெடுங்காலம் நடந்துவந்து பழகியவர்களுக்கு அதில் உள்ள சிறுகுறை புலப்படாது. ஒரு நாட்டு மக்களுக்கு அந்நாட்டின் பழக்க வழக்கங்களில் உள்ள குறை விளங்காது. அவ்வாறே, ஒருவகை இலக்கண மரபை நெடுங்காலமாகப் போற்றிவந்தவர்களுக்கு, அதில் சிறுகுறை இருப்பினும் புலப்படாது. பலவகை இலக்கணங்களையும், அவற்றோடு பலவகை மொழிகளின் வளர்ச்சியையும் ஒப்பிட்டு ஆராயவல்லவர்க்கே அக்குறை புலனாகும். மொழியியல்துறை இவ்வகையில் போற்றத்தக்க உதவி நல்குவதாக உள்ளது.

அறிஞர் கால்டுவெல், ஒலித்துணையாக வரும் குற்றுகரத்தைப் பற்றி விளக்குமிடத்து, தெலுங்கு மொழியில் மெய்யீற்றுச் சொற்கள் எல்லாம் உகரம் பெற்று முடிவதை எடுத்துக் காட்டியுள்ளார். கன்னடத்தில், சில அகர ஈற்றுச் சொற்களும் உகரம் பெற்று முடிவதைச் சுட்டி, சில—செலவு என்றும், பல—பலவு என்றும் அமைந்த சொற்களைக் காட்டியுள்ளார். இன்றைய பேச்சுத் தமிழிலும் தெலுங்கில் உள்ளவாறே, பல மெய்யீற்றுச் சொற்கள் (மெல்லின இடையின மெய்யீற்றுச் சொற்கள்) உகரத்துடன் ஒலிக்கப்படுவதைக் (கண்ணு, பொன்னு, நெல்லு, புல்லு) காட்டியுள்ளார்.[4] சொல்லு முதலிய உகர ஈறுபெற்ற சொற்கள் இலக்கியத்தில் இடம் பெற்று வழங்குதலைக் குறித்தும் கூறியுள்ளார்.

இவ்வாறு ஈற்றில் அமையும் உகரத்தை முற்றுகரம் எனக் கொள்வது பொருந்துவதாக இல்லை. காரணம்: முதலாவது, இவற்றின் ஒலியளவு முற்றுகரத்தின் அளவினதாக இல்லை. தெலுங்கில் ஒவ்வொரு மெய்யீற்றுச் சொல்லுடனும் உகரம் சேர்த்து எழுதப்படினும், அது ஒலிக்கப்படுவதில்லை எனக் கால்டு

1. தொல். எழுத். 234. 2. நற்றிணை - 19. 3. குறுந்தொகை - 274.
4. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 135.

வெல் குறித்துள்ளார்.[1] தமிழில் அது ஒலிக்கப்படினும் முற்றுகரம் போல் ஒலிக்கப் படுவதில்லை. உலகு என்ற சொல்லின் முதலுகரத்திற்கும் ஈற்றுகரத்திற்கும் உள்ள அவ்வளவு வேறுபாடு, உறவு என்ற சொல்லின் முதலுகரத்திற்கும் ஈற்றுகரத்திற்கும் உள்ளது. ஆகவே, உறவு என்ற சொல்லின் முதலில் உள்ள உகரம் முற்றுகரம் எனின், ஈற்றில் உள்ளது ஒலித்துணையான உகரம்—தொல்காப்பியனாரின் குறிப்பின்படி 'அறியவரும் உகரம்' — என லாம். இரண்டாம் காரணம்: குற்றுகர ஈற்று வினையடிகள் வினைச்சொற்களாக அமைதல் போலவே, இந்த உகர ஒலித்துணை பெற்ற வினையடிகளும் வினைச்சொற்களாக அமையும்போது ஒழுங்கு முறை காணப்படுகிறது. ஆகவே அளவில் மட்டும் அல்லாமல், பயன்படும் வகையிலும் அது வேறுபடுகிறது.

| குற்றுகர ஈற்று வினையடிகளால் அமைந்தன | ஒலித்துணை உகர ஈற்று வினையடிகளால் அமைந்தன | ஒலித்துணை பெறாத வினையடிகளால் அமைந்தன |
|---|---|---|
| தூங்குவான் | சொல்லுவான் | சொல்வான் |
| ஆடுவாள் | காணுவாள் | காண்பாள் |
| பாடுவன | உண்ணுவன | உண்பன |
| ஏத்துவது | தின்னுவது | தின்பது |
| தூற்றுவது | கொள்ளுவது | கொள்வது |

இவற்றில் ஒலித்துணையாக உகரம் பெற்ற வினையடிகளில் குற்றுகர ஈற்றுச் சொற்களில் காணப்படும் ஒழுங்குமுறை இருத்தலைக் காணலாம். தென்னையின் மடல்கள் போன்ற ஒழுங்கான வளர்ச்சிக்கு இந்த உகரம் பயன்படுதலைக் காணலாம்.

எண், உரிஞ், முதலான சில வினையடிகள், வினைச்சொற்களாக அமையும் போது—நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும்—ஒலித்துணையான உகரம் இன்றியமையாததாக இருத்தலும் இங்குக் கருதத்தக்கது.

எண்ணுகிறார்
எண்ணுகிறேன்
எண்ணுவார்
எண்ணுவன

எனச் சொற்கள் அமைதல் உண்டே அல்லாமல், உகரம் இன்றி, எண்கிறார், எண்கிறேன், எண்வார், எண்வன என அமைதல் இல்லை.

ஆகவே, தொல்காப்பியனார் 'அறிய வரும்' உகரம் எனக் கண்ட இந்த ஒலித்துணை, அவர்காலத்தில் செய்யுட்கு உரியதாய் வழங்கி, பின்னர் ஏனையிடத்தும் வழங்குவதாயிற்று என்று உணரலாம்; அவ்வாறு வழங்கத் தொடங்கிய பின்னர், ஒலித்துணையாக நின்றதோடு அல்லாமல், ஒலித்திரிபுகள் பல நேராமல் தடுக்கும் தடையாகவும் விளங்கியது என்றும், சில சொற்களில் இன்றியமையாததாய் நின்றது என்றும் உணரலாம். தென்னை முதலியவற்றின் மடல்களின் வளர்ச்சியில் காணப்படும் ஒழுங்கிற்கு அவற்றின் புறக்காழ் காரணமாக நிற்றல்போல், சொற்களின் அமைப்பில் பிற்காலத்தில் நேர்ந்த ஒழுங்கிறகு இந்த ஒலித்துணை உகரம் (குற்றுகரமும் 'அறிய வரும்' உகரமும்) காரணமாக நிற்றலை உணரலாம்.

---

## தமிழின் கூட்டொலித் தனிச் சிறப்பு

"கூட்டொலிகளைத் தனியெழுத்துக்களாக மற்றைய மொழிகள் எண்ணுவது போலத் தமிழ் தாடலை தெரியாது எண்ணுவதில்லை. மற்றைய மொழிகள் போலாது கூட்டல் குறைத்தல் இயலாதவர்க்கு முயற்சியாலாகும் எழுத்தொலிகளிவை யென்றும், முயற்சி வேற்றுமையாலாகக் கூடிய எண்ணிறந்த எழுத்தொலிகளிவை யென்றும் தமிழ் பாகுபடுத்தி உணர்த்துகின்றது."

—பா. வே. மாணிக்க நாயக்கர்

---

1. Though this u is always written, it is often dropped in pronunciation, Ibid.

# சுந்தரரும் கல்வெட்டுக்களும்

[வித்துவான் திரு. கே. எம். வேங்கடராமையா, M.A., B.O.L.]

இவர் சென்னைக்கருகில் உள்ள காரம்பாக்கம் என்னும் சிற்றூரில் ஆத்திரைய அந்தணர் குலத்தில் 4-4-1911 இல் பிறந்தார். உயர்நிலைப் பள்ளிக் கல்வியைப் பூவிருந்தவல்லியில் பெற்ருர். சென்னை லயோலாக் கல்லூரியில் பயின்று B. A. பட்டம் பெற்ருர். பின்னர் வித்துவான், B.O.L., M.A. என்ற பட்டங்களைப் பெற்ருர். 1937 இலிருந்து 1945 வரை செங்கற்பட்டு கொலம்பா உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றினர். 1945 முதல் திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரி முதல்வராக விளங்குகின்ருர். சைவ சமயப் பற்று மிக்குடைய இவர் சமயச் சொற்பொழிவுகள் ஆற்றுவதில் வல்லவர். இவர் தொண்டைப் பாராட்டி மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீன மகாசன்னிதானம் அவர்கள் "சிவநெறிச்செல்வர்" என்ற பட்டம் அளித்துள்ளனர். திருப்பனந்தாளில் உள்ள சில பள்ளிகளின் நிர்வாகக் குழுக்களிலும் குமரகுருபரன் என்ற திங்களிதழாசிரியர் குழுவிலும் பணிசெய் உறுப்பினராவர்.



## முன்னுரை

சொற்கோவும், தோணிபுரத் தோன்றலும், சுந்தரரும் திருநெறிய மெய்ஞ்ஞானத் தமிழ் பாடிச் சைவம் பரப்பியவராவர். இம் மூவரும் பல்லவப் பேரரசு நிகழ்ந்த காலத்தில் திகழ்ந்தவர்கள். சுந்தரர் தம்நாளிலும் தமக்கு முன்னும் இருந்த அடியார்களைத் திருத்தொண்டத்தொகையால் துதித்தார். அந்நாள்முதல் பெரிய புராணம் பாடப்பெற்றது வரையிலும், அதற்குப் பின்னும், செந்தமிழ் நாட்டுச் சான்ருேர் அளவிலாத பெருமையுடைய அடியார்களை அமயம் வாய்ப்புழி யெல்லாம் போற்றியுள்ளனர் என்பது கல்லெழுத்துக்களால் அறியப்படுவதாம். சுந்தரரைக் குறித்துக் கல்லெழுத்துக்களினின்று அறியப்படுவனவற்றுள் சிலவற்றை இனிக் காண்போம்.

## ஆலாலசுந்தரர்

ஆலால சுந்தரர் என்பது சுந்தரர் திருக்கயிலையில் இருந்தபொழுது கொண்ட திருப்பெயர் ஆகும். இது திருவொற்றியூர்க் கோயிலில் உள்ள கல்வெட்டொன்றில் ஒரு விளாகத்துக்குப் பெயராயமைந்திருந்தது:-[1]

"ராஜ நாராயண சம்புவராயர்க்கு யாண்டு ஏழாவது........சிவத்துரோகிகளை ஆராய்ந்து........இவர்கள் மனையும் காணியுமாய்ச் சண்டேசுவரப் பெருவிலையாக விற்று அம்மனைகள் நீக்கி நின்ற மனைகளும் காணியுமாய்க் கல்வெட்டினவிடத்தில்........ நங்காம்புலமான ஆலாலசுந்தர விளாகம் மூன்றில் ஒன்று........"[2]

அன்றியும் திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணுடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்தில் வீராபிஷேகம் செய்தருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவரின் 17ஆம் ஆட்சியாண்டில் (கி. பி. 1233-ல்) திருநெல்வேலியில் ஆலாலசுந்தரர் திருமடம் என்று ஒரு மடம் குறிக்கப்பெற்றுள்ளது.[3] எனவே ஆலாலசுந்தரர் என்ற பெயர் போற்றப்பெற்றமை தெளிவு.

## இசைஞானியார்

இவர் சுந்தரரின் தாய். இவ்வம்மையாரின் பெயர் இரண்டாம் குலோத்துங்க

1. தென்னிந்திய கோயிற் சாசனங்கள், பாகம் I சாஸனம் 523; 203 of 1912.
2. இக் கல்வெட்டில் திறக்கப் பாடுவார் மனை, திருநாளைப் போவான் விளாகம் முதலியவை குறிக்கப்பெற்றன.
3. S. I. I. Vol. V, No. 422; 133 of 1894.

சோழருடைய (1133–1150) திருவாரூர் வடமொழிக் கல்வெட்டினின்றறியலாம்.[1] "ஆளுடையநம்பி மாதாக்கள் இசை ஞானியார்" என்ற பகுதி தமிழ் எழுத்துக்களில் உள்ளன. இக்கல்லெழுத்தில், சுந்தரர் ஆளுடைய நம்பி என்று குறிக்கப்பெறுதலையும், அவர் தாயார் பெயர் இசை ஞானியார் என்பதும், அவ்வம்மையார் ஞானசிவாசாரியார் என்பவருடைய மகள் என்பதும், சைவ கௌதம கோத்திரத்தில் அவ்வம்மையார் பிறந்தார் என்பதும் அறிதற்பாலனவாம்.

## நம்பியாரூரர்

ஆளுடைய நம்பி என்றமைபோல, நம்பியாரூரர் என்றும் சுந்தரர் குறிக்கப் பெறுகிறார். இதனை வீரபாண்டிய தேவரது திருநெல்வேலிக் கல்லெழுத்தினின்றும்,[2] ராசராசனது தஞ்சை ராசராசேச்சரத்துக் கல்லெழுத்துக்களினின்றும்[3] அறிகிறோம். முதல் இராசேந்திரனின் 20ஆம் ஆட்சிக்குரிய திருமழபாடிக் கல்வெட்டு, நம்பியாரூரனார் படிவத்தைத் திருப்பள்ளித் தாமப் பிச்சன் எழுந்தருளுவித்து நிலம் அளித்ததாகக் கூறுகிறது.[4] முதல் இராசராசனின் பத்தாம் ஆட்சியாண்டுக் கல்லெழுத்துக் கூகூர்க் கோயிலில் நம்பியாரூரர் கோவிலில் சித்திரைத் திருவிழா நடத்த நிபந்தம் அளித்ததை அறிவிக்கிறது.[5] இராசராசன் திருப்பதியம் ஓத நியமித்த 48 பிடாரர்களில் இருவர்க்கு ஆரூரர் என்ற பெயரும், இன்னும் இருவர்க்கு நம்பியாரூரர் என்ற பெயரும் அமைந்திருந்தமை அறிகிறோம்.[6]

## தடுத்தாட்கொண்டருளிய நாயனார்

சுந்தரர்க்குத் திருமணம் நிகழவிருக்கையில், சிவபெருமான் கயிலையில் அருளிய வண்ணம் தடுத்தாட்கொள்வான் வேண்டிக் கிழவனாராக வந்து, சுந்தரரை நோக்கித் தமக்கு அடிமை செய்யவேண்டும் என்றார். இருவர்க்கும் வாது நிகழ்ந்தது. திருவெண்ணெய் நல்லூரில் இவ்வழக்கு விசாரிக்கப்பெற்றது. கிழவனாரே வென்று பணி செயவேண்டுமென்றார். இங்ஙனம் சிவபெருமான் தடுத்தாட்கொண்டமையின், "தடுத்தாட் கொண்டருளிய நாயனார்" என்றும், வழக்கில் வென்றமையின், "விரைந்து வெல்லும் பெருமாள்" என்றும், வழங்கப்பெற்றார். இவ்வழக்கு அரிய வழக்கு என்பதை நாம் அறிவோம். இவ்வரிய வழக்கினை வென்றமையின் சிவபெருமான் "அரியவான வழக்கு வென்ற பெருமாள்" எனப் பெறுதல் பொருந்தும். இதனை நினைவு கூரும் நிலையில் திருவெண்ணெய் நல்லூர்க்கு அருகில் ஓரூர், "அரியவான வழக்கு வென்ற பெருமாள் நல்லூர்" எனப்பெற்றது. மேற்கூறியன யாவும் ராசராசச் சம்புவராயனது கல்லெழுத்தொன்றால் அறியலாம்.[7] மூன்றாம் குலோத்துங்கனது மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டும்,[8] ஏழாம் ஆண்டுக் கல்வெட்டும்[9] இறைவனை ஆட்கொண்டதேவர் என்று சிறப்பிக்கின்றன. 'சொற்றமிழ் பாடுக' என்றார் தூமறை பாடும் வாயார்; 'யாதினை அறிந்து என் சொல்லிப் பாடுகேன்' என்றார் சுந்தரர்; 'முன்பெனைப் பித்தன் என்றமையின் பித்தன் என்றே பாடுக' என்றார் பரமனார். இதனை நினைப்பிக்கிறது ஒரு கல்லெழுத்து. உதயன் ஸ்ரீ கயிலாயமுடையான் என்ற ஒருவர் "பிச்சன் என்று பாடச் சொன்னான்" என்று பெயரிட்ட காளங்களை வழங்கியதாகக் கோப்பெருஞ் சிங்கனது 27ஆம் ஆண்டுக் கல்லெழுத்து நுவல்கிறது. (431 of 1921.)

## வன்றொண்டர்

சுந்தரர் வன்மைகள் பேசியபின் வன்றொண்டர் எனப் பெற்றார். இவ்வன்றொண்டப் பெயர் பூண்டவர் திருநெல்வேலித் தெற்கில் மடத்துக் கீழை மடஸ்தானத்து இருந்தனர் என்று கோனேரின்மை கொண்டான் கல்லெழுத்தினின்றும்,[10] ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர் கல்லெழுத்தினின்றும்[11] அறிகிறோம்.

1. S. I. I. Vol. IV, No. 397; 73 of 1890.
2. S. I. I. Vol. V, No. 418; 129 of 1894.
3. S. I. I. Vol. II, Part II No. 38.
4. 37 of 1920.
5. 299 of 1907.
6. S. I. I, Vol. II, Part III, No. 65.
7. *தென்னிந்திய கோயிற் சாஸனங்கள், பாகம்* I, *சாஸனம்* 85.
8. 477 of 1921.
9. 310 of 1902; S. I. I. Vol. VII, No. 939.
10. S. I. I. Vol. V. No. 420.
11. S. I. I. Vol. V. No. 421.

## நங்கை பரவையார்

சுந்தரர், பரவையாரைத் திருவாரூரில் வாழ்க்கைத் துணையாக்கொண்டார். நங்கை பரவையாரது திருவுருவமும் நம்பியாரூரரது திருவுருவமும், தஞ்சை ராசராசேச்சரத்தில் எழுந்தருளுவிக்கப் பெற்றதென்று ஒரு கல்லெழுத்துக் கூறுகிறது.[1] நங்கை பரவையார்க்குத் திருவையாற்றுக் கோயிலில் விளக்கு எரிக்க நிலம் விடப்பெற்றிருந்த செய்தி "நங்கை பரவையார் திருவிளக்குச் செய்" என்ற கல்லெழுத்துப் பகுதி[2] அறிவிக்கிறது. இரண்டாம்குலோத்துங்க சோழனது 7ஆம் ஆண்டுக்குரிய திருவாரூர்க் கல்வெட்டு,[3] திருவாரூர்க் கோயிலில் எழுந்தருளுவிக்கப்பெற்ற ஆளுடையநம்பி, பரவைநாச்சியார் படிவங்களுக்கு அநபாய நல்லூர் என்ற ஊர் அளிக்கப் பெற்றதாகக் கூறுகிறது. முதல் இராசேந்திரனது 20ஆம் ஆண்டுக் கல்வெட்டினின்று[4] இராசேந்திரனது அணுக்கியார் பரவை நங்கையார் என்று இப் பரவையார் பெயரைப் பூண்டிருந்தனர் என்று அறிகிறோம்.

## திருத்தொண்டத்தொகை[5]

"ஈசன் அடியார் பெருமையினை எல்லாவுயிரும் தொழவெடுத்துத் தேச முய்யத் திருத்தொண்டத்தொகை" பாடினார் சுந்தரர். இப்பதிகம் பெரிய புராணத்துக்குப் பதிகமாக விளங்குவது. இது மக்கள் மனத்தைப் பெரிதும் கவர்ந்தது என்று கல்லெழுத்துக்களினின்றறிகிறோம். திருத்தொண்டத்தொகை நினைவாகத் திருவிடை வாயிலில் திருத்தொண்டத்தொகையான் குகை என்று ஒரு குகை இருந்ததென மூன்றும் இராசேந்திரனுடைய 4ஆம் ஆண்டு (கி. பி. 1250)க்குரிய கல்லெழுத்துக் கூறுகிறது.[6] இக்குகையுள் திருமுறைகள் வைக்கப்பட்டிருந்தன. திருச்சி ஜில்லா கோவந்தபுத்தூரில் மூன்றும் இராசேந்திர சோழனது 2ஆம் ஆண்டு (கி. பி. 1248)க்குரிய கல்லெழுத்து,[7] திருத்தொண்டத்தொகையான் திருமடம் என்று ஒரு மடத்தைக் குறித்துச் சில செய்திகளைச் சொல்லுகிறது. சிதம்பரம் நடராசப் பெருமான் திருக்கோயிலின் வடக்குக் கோபுரத்தை யடுத்துத் "திருத்தொண்டத்தொகை யீச்சரம்" என்ற ஒரு திருக்கோயிலில் தொகையடியார்கள் சிவலிங்கத் திருமேனி வாயிலாக வழிபடப் பெற்றனர் என அறிகிறோம். இவ்வாலயம் நவலிங்கம் கோயில் என இந்நாளில் வழங்குகிறது. இக்கோயிலில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவுருவமும் அமைக்கப் பெற்று இருந்தது எனக் கல்வெட்டுக்கள் புகல்கின்றன.[8] மூன்றுங் குலோத்துங்க சோழனது இரண்டாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு இத் திருக்கோயிலைக் குறிக்கிறது.[9] இனிச் சிதம்பரத்திலுள்ள இராசேந்திர சோழனது 24ஆம் ஆட்சியாண்டுக் கல்லெழுத்தொன்று தில்லையில் "திரு மாசித்திருநாளில் திருத்தொண்டத் தொகை விண்ணப்பஞ் செய்வார்க்குக் காசு ஐஞ்சு" நிபந்தமாக அளித்ததாகப் பகர்கின்றது.[10]

## பொன்னார்மேனியன்[11]

சுந்தரர் திருமழபாடியில் பாடியருளிய திருப்பதிகம் "பொன்னார் மேனியன்" என்ற தொடக்கமுடையது. பொன்னார்மேனியன் என்ற தொடர் 11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு சேனாபதியின் மனத்தைக் கவர்ந்தது. அவர் சேனாபதி அரையன் கடக்கங்கொண்ட சோழன் அணிமுரி நாடாழ்வான் எனப் பெற்றார். அவர் திருமழபாடிக் கோயிலில் செம்புதராவால் பொன்னார் மேனியன் என்ற திருமேனியை எழுந்தருள்வித்து, அதற்கு நாள்வழிபாட்டிற்கு நிபந்தம் அளித்ததோடு சில அணிகலன்களையும் அளித்ததாக

1. விரிவைப் பொய்கை நாடுகிழவன் என்ற என் கட்டுரை பார்க்க. (ஞானசம்பந்தம் மலர் 15, இதழ் 12, பக்கம் 922—23).
2. S. I. I. Vol. V, No. 533.
3. S. I. I. Vol. VII, No. 485; 269 of 1901.
4. 680 of 1919.
5. குமரகுருபரன் திங்களிதழ் மலர் 7, இதழ் 12, பக்கம் 715-720 காண்க.
6. 10 of 1918.
7. 192 of 1929.
8. சிதம்பரம் - தருமபுர ஆதீன வெளியீடு—பக்கம் 44.
9. 262 of 1913.
10. S. I. I. Vol. IV, No. 223; 118 of 1888.
11. குமரகுருபரன் திங்களிதழ் மலர் 8, இதழ் 7, பக்கம் 418-422 காண்க.

இரண்டாம் இராசேந்திரனுடைய கல்லெழுத்து உரைக்கின்றது.[1] இனி இச்சொற்றொடர் பொன்னூர் மேனிபட்டர் என்று ஒரு பட்டர் பெயரில் அமைந்ததாகச் சுந்தர பாண்டியனது கல்லெழுத்து[2] உரைக்கின்றது. அன்றியும் மூன்றும் குலோத்துங்க சோழரது 34ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டினின்று[3] ஊரின் உட்பகுதியொன்று "பொன்னூர் மேனி விளாகம்" என்று பெயரிடப்பெற்றிருந்ததாகக் கூறப் பெறுகிறோம்.

### கிழிபெற்றது

சுந்தரர் திருப்பாச்சிலாச்சிராமத்தில் பொற்கிழி பெற்றார்; மூன்றும் இராசராசனது 27ஆம் ஆண்டுக் கல்லெழுத்தில்; "கிழி கொடுத்தருளிய திருவாசல்" என்று ஒருவாசல் குறிக்கப் பெறுகிறது.

### உளோம்போகீர்

சுந்தரர் திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்து, பின்னர்த் திருவாரூர்க்கு வரப் புறப்பட்டார்; சூள் பொய்த்தமையின் இரு கண்களையும் இழந்தார்; கண்ணிழந்து செல்பவர் திருவெண்பாக்கத்துக்கு வந்தார்; சிவபெருமானை நோக்கிக் கண் வேண்டித் திருக்கோயிலில் உள்ளீரோ என்று பாடினார். இறைவன் "உளோம் போகீர்" என்று கூறினர். இதனை நினைவு கூரும் நிலையில் திருவெண்பாக்கம் என்னும் திருத்தலத்துக்கு அண்மையில் திருவுளம்பூதூர் என்ற ஓரூர் உளோம் போகீர்புரம்[4] என்று அழைக்கப்பெற்றதெனச் சொல்லப்படுகின்றது.

### சேரமான்பெருமாள்

சேரமான் பெருமாணயனார் சுந்தரருடைய உற்ற நண்பர். ஆகவே சுந்தரரைச் சேரமான் தோழர் எனல் பொருந்தும். ஸ்ரீ வீரபாண்டியதேவரது 3ஆம் ஆண்டுக் கல்வெட்டில்[5] கையொப்பமிட்டவர் ஒருவர் சேரமான் தோழர் என்று இப் பெயரைப் பூண்டிருந்தார். ராஜ நாராயணச் சம்புவராயரது காஞ்சிபுரத்துக் கல்வெட்டு,[6] உடையார் ஏகாம்பரநாதர்க்குரிய திருத்தோப்புக்களில் ஒன்று சேரமான் பெருமாள் திருத்தோப்பு என்ற பெயரால் அமைந்திருந்ததென அறிவிக்கிறது.

### அவிநாசியில்

சுந்தரர் அவிநாசியில் நிகழ்த்திய அற்புதம் முதலையுண்ட பாலனை அழைத்ததாகும். வீரபாண்டிய தேவரது அவிநாசியில் உள்ள 14ஆம் ஆண்டுக்கல்வெட்டு[7] தென்பள்ளியிலிருந்த சுந்தர நாயனூர்க்கு அமுது அளிப்பதற்காகப் பாப்பாரப் பூண்டியாகிய வீரராசேந்திர நல்லூர் அளிக்கப்பெற்றதெனப் பகர்கின்றது. இக் கல்லெழுத்தில் கையொப்பமிட்டவர்களில் ஒருவர் தபபிரான் தோழர் என்ற பெயருடையவர் என்று அறிகிறோம். தம்பிரான் தோழர் என்பது சுந்தரருடைய பெயர்களில் ஒன்று. தம்பிரான் தோழர் மானக் கஞ்சாறர் என்று ஒருவரைக் குறித்துத் திருமுட்டம் கோயிலில் உள்ள அவர் படிவத்தின்கீழ் உள்ள கல்லெழுத்தினின்றறியப் பெறுகின்றது.[8] இங்ஙனம் தம்பிரான் தோழர் என்ற சுந்தரத் திருப்பெயர் மக்கட் பெயராயமைந்து போற்றப் பெற்றமை அறிந்து இன்புறுவோமாக!

இனிச் சுந்தரபாண்டிய தேவரது 21 ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று[9] திருப்புக் கொளியூர்க் குளக்கரையில் சுந்தரர் திருமேனி அரசனால் எழுந்தருளுவிக்கப்பெற்றது என்றும், அதற்குப் பாண்டி மண்டலத்து வியாபாரி அழகிய பாண்டியதேவர் நிபந்தமாக 220 வராகன் புள்ளிக் குளிகை அளித்தார் என்றும் கூறுகிறது. குளக்கரையில் சுந்தரர் திருமேனியை எழுந்தருளச் செய்தமை முதலையுண்ட பாலனை அழைத்த அற்புதத்தை

1. S. I. I. Vol. V, No. 644. 2. S. I. I. Vol. V, No. 649. 3. S. I. I. Vol. V, No. 632.
4. பெரிய புராண விரிவுரை, C. K. சுப்பிரமணிய முதலியார்-ஏயர்கோன் கலிக்காமர் புராணம் திருவெண்பாக்கம் தலக்குறிப்பு. 5. S. I. I. Vol. V, No. 433.
6. தென்னிந்திய கோயிற் சாசனங்கள் எண் 345; 604 of 1919.
7. ,, ,, எண் 191; 187 of 1909.
8. சாஸனத் தமிழ்க்கவி சரிதம்—பக்கம்-29.
9. தென்னிந்திய கோயிற் சாஸனங்கள் எண் 200; 181 of 1909.

நினைவுகூர்தல் பொருட்டேயாம் என்பது ஊகித்தறிதற்பாற்று.

### ஆளுடையநம்பி ஸ்ரீபுராணம்

இரண்டாம் இராசாதி ராசனுடைய 9ஆம் ஆட்சியாண்டுக்குரிய திருவொற்றியூர்க் கல்லெழுத்து,[1] "இவ்வரசன் படம்பக்கநாயக தேவர் திருமகிழின்கீழ் திருவோலக்கம் செய்தருளியிருந்து ஆளுடையநம்பி ஸ்ரீபுராணம் கேட்டருளா நின்றார்" என்று கூறுகிறது. மகிழமரத்தின்கீழ் சுந்தரருக்கும் சங்கிலியார்க்கும் திருமணம் நடந்த செய்தி இங்கு நினைவுக்கு வரும். மகிழின் கீழ் படிக்கப்பெற்ற ஸ்ரீபுராணம் பெரிய புராணமாதல் தகும் என்று ஆராய்ச்சியாளர் கருதுவர்.

### தாராசுரத்துச் சிற்பங்கள்

கும்பகோணத்துக்கு அண்மையிலுள்ள தாராசுரத்துக் கோயில் இரண்டாம் இராசராசனால் கட்டப்பெற்றது. இக் கோயில் இறையகத்துச் சுற்றியுள்ள பகுதியில் நாயன்மார் சரிதங்களை விளக்கும்சிற்பங்கள் உள்ளன. அச் சிற்பங்களின்மேல் அச் சிற்பத்தை விளக்கும் சொற்றொடர்கள் காணப்படுகின்றன. சுந்தரருடைய வரலாற்றைக் குறிக்கும் சொற்றொடர்கள் பின் வருமாறு[2]:—

1. *உடையநம்பி எழுந்தருளுகிறார்;*
2. *ஆவணவோலை காட்டினபடி;*
3. *உடைய நம்பிக்கு ஓலை வென்றருளினபடி;*[3]
4. *ஏயர்கோன் கலிக்காமாண்டார்;*
5. *உடைய நம்பி வேடர் வழிபறித்தபடி;*
6. *திருமுருகன் பூண்டியில் பெற்றபடி;*
7. *அவினாசியாண்டார் முதலைவாய்ப் பிள்ளை;*
8. *சேரமான் பெருமாள் காதை.*

### முடிப்புரை

இதுகாறும் கூறியவாற்றான் சுந்தரர் வரலாறு தமிழ் மக்களால் பெரிதும் போற்றப்பெற்றமை தெள்ளிதின் விளங்கும். இங்ஙனமே இனியும் சைவ நன்னெறிப் படர்குவார் யாவரும் போற்றியுய்க!

வாழி திருநாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி!

---

## கல்வெட்டுக்கள் மெய்வரலாற்றுக் கருவூலங்கள்

"கல் வெட்டுக்களில் காணப்படும் செய்திகள் எல்லாம் வெறும் கற்பனைச் செய்திகள் அல்ல; பயனற்ற செய்திகளுமல்ல. அவை அனைத்தும் நம் முன்னோர்களுடைய உண்மை வரலாறுகளை யுணர்த்தும் பழைய வெளியீடுகளே. சேர, சோழ, பாண்டியராகிய முடியுடைத் தமிழ் வேந்தரும், பல்லவரும், குறுநில மன்னரும், பிற தலைவர்களும் செய்த அறச் செயல்களும், வீரச் செயல்களும் அன்னோர் செய்துகொண்ட உடன்படிக்கைகளும், பழைய தலைவர்களைப் பற்றிய செய்திகளும் மண்டலம்—வளநாடு—கோட்டம்—நாடு—கூற்றம் என்பவற்றின் வரலாறுகளும், பல ஊர்களின் உண்மைப் பெயர்களும், முற்கால வழக்கங்களும், சமய நிலையும், மற்றும் பல அரிய நிகழ்ச்சிகளும் நம் நாட்டுக் கல்வெட்டுக்களாலும், செப்பேடுகளாலும் நன்கு அறியக் கிடக்கின்றன. சுருங்கச் சொல்லுமிடத்து நமது நாட்டின் பழைய சரிதங்களை உள்ளவாறு உணர்ந்துகொள்வதற்குத்தக்க கருவியாயிருப்பன கல்வெட்டுக்களும் செப்பேடுகளுமே யாம்."

—டி. வி. சதாசிவ பண்டாரத்தார், 'புறநானூறும் கல்வெட்டுக்களும்'

---

1. S. I. I. Vol. V, No. 1358; K. A. N. Cholas Part II P. 481.
2. திரு. ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை—பெரிய புராண ஆங்கில மொழிபெயர்ப்பு, திரு. ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளையவர்கள் பதிப்பு.
3. 'ஓலை வென்றருளினபடி' என்ற இடத்தில் 'ஓல் லென்றருளினபடி' என்றே பாடம் காணப் பெறுகிறது.

# நாடகமும் பேசும்படமும்

[பம்மல் ப. சம்பந்த முதலியார்]

தமிழ்நாடகத் தந்தை பம்மல் சம்பந்த முதலியார் 1-2-1873 இல் பிறந்தவர். சென்னைப்பச்சையப்பன் கல்லூரியிலும், மாகாணக் கல்லூரியிலும் பயின்று 1893 ஆம் ஆண்டு பி. ஏ., தேர்வில் முதல் வகுப்பில் தேறினர். பின்னர் பி.எல், பட்டம் பெற்ருர். கல்லூரி வாழ்க்கையில் பல பரிசுகள் பெற்ருர். 1998 இல் வழக்கறிஞராகத் தொழில் நடத்தி 1924 இல் நகர் நீதி மன்ற நடுவராகப் பணியாற்றி, நகர்நீதிமன்றத் தலைமை நடுவரானர். 1891 இல் சுகுண



விலாச சபையை நிறுவி, பல நாடகங்களைத் தாமே எழுதியும் நடித்தும் நாடகத்துறைக்குச் சீரும்சிறப்பும் நல்கிவந்தார் இது வரை 85 நாடகங்களையும், சைவ சமய நூல்களையும் கதை கட்டுரைகளையும் எழுதியுள்ளார். உரிமைப் போராட்ட நூற்ருண்டு விழாவை யொட்டிச் சென்னை அரசியலார் தமிழ் நாடகத்துறை வல்லாரெனப் பாராட்டிப் பொற்பதக்கமளித்துச் சிறப்புச் செய்தனர். மைய அரசு 'பத்ம பூடணம்' என்ற பட்டத்தை அளித்துள்ளது.

நாடகமும் பேசும் படமும் வெவ்வேறு கலைகள் என்று பலர் நினைக்கின்றனர்; எனது அபிப்பிராயம் அவைகள் இரண்டும் ஏறக்குறைய ஒரே கலைதான் என்பதாம். ஒரு விதத்தில் பேசும்படம் நாடகத்திலிருந்து பிறந்தது என்பேன். நாடகமானது தாய். பேசும் படமானது அவள் வயிற்றில் உதித்த பெண்.

இவைகளின் ஒற்றுமைகளை முதலில் கவனிப்போம். நாடகமானது மேடையின் மீது ஆடப்படுகிறது. பேசும் படமும் முதலில் ஸ்டுடியோ (Studio)வில் ஆடப்படுகிறது. இவைகள் இரண்டிலும் நடிக்கும் நடிகர்களுடைய நடிப்புக்கலை ஒன்றேதான். இதில் கொஞ்சமேனும் வித்தியாசமில்லை என்றே கூறலாம். இவைகள் இரண்டிலும் நடிகர்கள் ஒரே மாதிரி வேஷம் தரிக்க வேண்டியவர்களாய் இருக்கிருர்கள். இவைகள் இரண்டிலும் சங்கீதம் ஒன்றே. நாடக மேடையில் நேராக நடிகர்கள் பாடுகிருர்கள். பேசும் படத்தில் அப் பாட்டுக்களை ரிகார்டு செய்து பிறகு அந்த ரிகார்டுகள் மூலமாகப் பாட்டுக்கள் வெளியாகின்றன.

இனி இவைகள் இரண்டிற்கும் உள்ள சில பேதங்களைக் கவனிப்போம்—முதலாவது நாடக மேடையில் எல்லாக் காட்சிகளும் திரைகளால் காட்டப்படும். பேசும் படத்தில் வெகுவாய் இயற்கைக் காட்சிகளிலேயே கதை நடத்தப்படும். காடுகளிலும் சமுத்திரக் கரையிலும் தோட்டங்களிலும் நடிகர்களை நடிக்கச் செய்து படம் பிடிப்பார்கள். அரண்மனை, வீடுகள் முதலிய இடங்களில் கதை நடப்பதானல் அரண்மனையைப் போலவும் வீடுகளைப் போலவும் கட்டிடங்களைக் கட்டிக் காட்சிகளைப் பிடிப்பார்கள். இரண்டாவது நாடக மேடையில் நடிகர்கள் நேராகப் பாடுகிருர்கள். பேசும் படங்களில் நடிகர்கள் பாடும் பாட்டு ரிகார்டு (Record) செய்யப்பட்டுச் சங்கீதமானது அவைகளினின்றும் வருகின்றது. மூன்ருவது ஒரு நாடகத்தை ஆடுவதற்கு ஓர் இரவு காலம் பிடித்தால் பேசும் படத்தைப் பிடிப்பதற்குப் பல நாட்கள் மாதங்கள் தற்காலம் வருடங்களும் ஆகின்றன. நான்காவது ஒரு நாடகம் ஆடுவதற்கு 1000 ரூபாய் செலவானல் பேசும்படம் பிடிப்பதற்கு ஆரம்பத்தில் பல பல்லாயிரம் ரூபாய்கள் செலவாயிருந்தன. தற்காலம் லட்சக்கணக்காய்ச் செலவாகின்றன.

இப்படி இருந்தும் ஆரம்பத்தில் பல வருடங்கள் பேசும்படங்கள் நாடக

மேடையைக் கீழே அமிழ்த்தியது என்பது எல்லோரும் அறிந்த விஷயமே; பலர் இனிமேல் நாடக மேடையே இராது என்றே எண்ணிய காலமும் உண்டு. இதற்குக் காரணம் என்னவென்று இனி யோசிப்போம். இதற்கு ஒரு முக்கியமான காரணம் மனித சுபாவத்தில் பழகியதை விட்டுப் புதியது ஒன்றை விரும்புவதே யாம் என்றுதான் கூறுவேன். ஆகவே நாடகங்களைப் பல வருடங்களாகப் பார்த் திருந்தவர்களுக்குப் புதிதாக இந்தப் பேசும் படம் வரவே அதன்மீது விருப்பமும் ஆச்சரியமும் உண்டாகியது சுபாவமே யாம். அன்றியும் மொத்தத்தில் பார்க்கு மிடத்து நாடகத்தைவிடப் பேசும்படங்கள் நடிகர்களுக்கும் அதிக லாபத்தைத் தந்தன; அதை எடுப்பவர்களுக்கும் லாபத்தைத் தந்தன. இஃது எப்படி? பேசும்படத்தை எடுப்பதற்கு அதிகச் செலவு பிடிக்கிறதே என்று நீங்கள் கேட்கலாம். ஓர் உதார ணத்தை எடுத்துக் கொள்வோம். ஒரு நாடகத்தை ஆடுவதற்கு எல்லாச் செலவு களையும் சேர்த்து 1000 ரூபாய் பிடிக்கிறது என்று வைத்துக்கொள்வோம்; அதே நாடகத்தைப் பேசும்படமாகப் பிடிக்க ஒரு லட்சம் ரூபாய் ஆகிறது என்று வைத்துக் கொள்வோம்; இருந்தபோதிலும் ஒரு முறை ஆடிய நாடகத்தை மறுநாள் ஆட வேண்டும் என்றால் சற்றேறக்குறைய அதே செலவுதான் பிடிக்கிறது. ஒருமுறை எடுத்த பேசும்படத்தைப் பிறகு எத்தனை நாட்கள் வேண்டும் என்றாலும் காட்டலாம். அன்றியும் பல இடங்களில் ஒரே காலத்தில் ஜனங்களுக்குக் காண்பிக்கலாம். முதலில் பிடித்த பெரும் செலவு தவிரப் பிறகு அதைப் பன்முறை காண்பிப்பதற்குச் செலவு மிக மிகக் கொஞ்சமாகும்; மேற் சொன்னபடி ஒரு பேசும்படத்தை நமது தேசமெங்கும் வருடக் கணக்காகக் காட்டிப் பணம் சம்பாதிக்கலாம்; நாடகத்தில் அவ் வாறு செய்யமுடியாது. ஆகவே மொத்தத் தில் நாடகத்தை 'கண்டிராக்ட்' (Contract) எடுப்பவர்களுக்குப் பேசும்படம் எடுப்பவர் களுக்கு வருவதைப்போல் அவ்வளவு லாபம் கிடைக்காது.

அன்றியும் நடிகர்களுக்கு ஒரு நாடகத் தில் நடிப்பதற்குக் கிடைக்கும் ஊதியத்தை விடப் பேசும்படத்தில் நடித்தால் பதின் மடங்கு நூறு மடங்கு அதிகமாய்க் கிடைக் கிறது. இத்தகைய காரணங்களால் பேசும் படங்கள் ஜனங்களால் மிகவும் மதிக்கப் பட்டுப் பரவலாயின. நாட்டில் இருந்த நாடகமேடைகள் எல்லாம் பெரும் வருவா யைத் தரத்தக்க பேசும்படங்கள் காட்டப் படும் கட்டிடங்களாக மாறின. நாடக மேடையே ஒருவேளை மேற்சொன்னபடி அழிந்து போகுமோ என்னவோ என்ற சந்தேகத்திற்கே இடம் கொடுத்தது. ஆயினும் தெய்வாதீனமாக அப்படிப்பட்ட கெடுதி நாடக மேடைக்கு வாய்க்கவில்லை.

கொஞ்சம் கொஞ்சமாக நாடக மேடை மறுபடியும் தலையெடுக்க ஆரம்பித்தது. இஃது ஓர் ஆச்சரியமன்று. முக்கியமாக நாடகங்களுக்குப் போடப்பட்டிருந்த வரி வசூல் அரசாங்கத்தாரால் எடுத்துவிடப் பட்டதே. இதுவரையில் கழுத்தில் கட்டிய உரலைப்போல் நாடக மேடையை அமுக்கிக் கொண்டிருந்த மேற்சொன்ன வரி நீங்கவே பல பழைய நாடகக் கம்பெனிகள் மறுபடி யும் துளிர்க்க ஆரம்பித்தன; மேலும் விநோதத்திற்காக ஆடும் பல 'அமெச் சூர்' சபைகளும் உண்டாயின. இவைகளை யெல்லாம்விட நாடகமேடை உயர்ந்த தற்கு ஒரு சிறந்த காரணத்தை இங்குக் கூறு கின்றேன். எவ்வளவுதான் அழகாகப் பேசும்படங்கள் தயாரிக்கப்பட்ட போதிலும் அவைகள் படங்கள்தாமே! ஒரு நடிகனைப் படத்தில் பார்ப்பதைவிட நேராக நாடக மேடையில் அவன் உயிருடன் ஆடுவதைப் பார்க்கக் கலை அபிமானிகள் விரும்புவது சகசமே. இதை இன்னோர் உதாரணத்தைக் கொண்டு நிரூபணம் செய்கிறேன். ஒரு நடிகை நன்றாய்ப் பாடுபவள் சில பாட்டுக் களைக் கிராமபோன் ரிகார்டுகளாகச் செய்து வைக்கிறாள். அந்த ரிகார்டுகளைக் கேட்பதை விட அதே நடிகை நாடகமேடையில் பாடு வதை எல்லோரும் மிக ஆவலாய்க் கேட்க விரும்புவார்கள் அல்லவா? இத்தகைய கார ணங்களால் பல வருடங்களாகக் கீழே மூழ்கி இருந்த நாடகமேடை மேலே வந்து சனங்கள் மனதைக் கவரலாயிற்று.

நாடகமேடை எப்போதும் நசித்துப் போகாது என்பதற்கு இன்னொரு முக்கிய காரணம் பெரும்பாலும் நாடக மேடையில்

பெயர் பெற்ற நடிகர்களைத்தான் பேசும் படம் எடுக்கும் முதலாளிகள் தங்கள் படங்களில் நடிக்க வேண்டுமென்று விரும்புகின்றார்கள்; நடிகைகள் விஷயத்திலும் அப்படியே.

ஐரோப்பா, அமெரிக்கா கண்டங்களில் உள்ள சிறந்த நடிகர்கள் மேடையைவிட்டு, இரண்டு மூன்று வருடங்கள் பேசும்படங்களிலேயே நடித்தபோதிலும் அத்தொழிலைக் கொஞ்சம் நிறுத்திவிட்டு மறுபடியும் நாடக மேடையில் போய்ச் சேர்ந்து சில மாதங்களாவது தங்கள் நடிப்புக்கலையை அபிவிருத்தி செய்துகொண்டு திரும்பவும் போய்ப் பேசும்படங்களில் நடிக்க ஆரம்பிக்கிறார்கள். இதற்கு முக்கிய காரணம் உண்டு. நாடகத்தில் நடிக்கும்போது ஒரே நாளில் ஒரு நாடகம் முடிவடைவதால் ஆரம்பம் முதல் கடைசி வரையில் ஒரு நடிகன் தான் மேற்கொண்ட பாத்திரத்திற்கு ஏற்றபடி நடித்தல் சுலபமாய் இருக்கிறது. பேசும்படத்திலோ அப்படி இல்லை; இன்றைக்கு முதல் காட்சியில் ஒரு பங்கு படம் பிடிப்பார்கள். கொஞ்சம் நாள் கழித்து கடைசிக் காட்சி பிடிக்கப்படும். இவ்வாறு மற்றக் காட்சிகளும் வரிசைக் கிரமமாகப் பிடிக்கப்படாது. ஜோடித்திருக்கும் காட்சிகளுக்காகவும், வெளியில் படம் பிடிக்கும் காட்சிகளுக்காகவும் இன்னும் இதர காரணங்களுக்காகவும் படம் பிடிக்கும் டைரக்டர் (Director) தம் சௌகரியப்படி காட்சிகளை மாற்றி மாற்றிப் பிடிப்பார். இப்படிச் செய்வதினால் ஒரு நடிகன் தன் பாத்திரத்தை ஒரே கோவையாக நடிக்கும் திறமே மங்கிப்போகிறது என்று கூறலாம். ஆகவே சிறந்த நடிகர்கள் மறுபடியும் நாடக மேடைக்குப்போய் நாடகங்களைக் கோவையாக நடித்துத் தங்கள் நடிப்புக் கலையைத் 'துலக்கி'க்கொள்கிறார்கள்.

இச் சிற்றுரையை முடிப்பதன் முன் இன்னொரு விஷயத்தைப் பற்றி எழுத விரும்புகிறேன். பேசும்படங்கள் நமது நாட்டுக்கு வந்த பிறகு, நாடக மேடையில் ஆடப்பட்ட நாடகங்களைப் பேசும்படங்களாக மாற்றுவதானால் அவைகளை அதிகமாக மாற்றி, சினேரியோ(Scenario) எழுத வேண்டும் என்று ஓர் அபிப்பிராயம் பிரபலமாய் இருக்கிறது. நாடகமேடை நாடகங்களுக்குச் சினேரியோ எழுதுவதில் கதையின் தொடர்ச்சிக்காகவும் காட்சிகளை மாற்றுவதற்காகவும் கொஞ்சம் மாற்றி எழுத வேண்டியது அவசியம் என்று நான் ஒப்புக்கொள்கிறேன்; ஆயினும் நாடகக் கதையின் போக்கை மாற்றலாகாது. நாடக பாத்திரங்களின் குணதிசயங்களை மாற்றி எழுதலாகாது என்பது என்னுடைய தீர்மானமான அபிப்பிராயம்; முக்கியமாக நாடகங்களில் உள்ள ரசமான கட்டங்களை மாற்றவே கூடாது என்பதற்குச் சந்தேகமில்லை. அப்படி மாற்றினால் அந் நாடகத்தைப் பார்த்த ரசிகர்கள் அவைகளை எல்லாம் மாற்றி ஏன் ரசாபாசமாகப் பேசும் படத்தைத் தயாரிக்கிறார்கள் என்று குறை கூறுவது திண்ணம்.

மேற்கண்ட எனது அபிப்பிராயத்தை ஊர்ஜிதப்படுத்தச் சில வருடங்களுக்கு முன் அமெரிக்காவிலிருந்து வந்த ஒரு பேசும்படத்தை நான் கண்டேன். அவ்வருடம் அமெரிக்கா முழுவதிலும் எடுக்கப்பட்ட பேசும்படங்களுள் மிகச் சிறந்ததற்கு ஒரு பெரும் பரிசு கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்தபோது பரீட்சகர்கள் 'லாரன்ஸ் ஆலிவியர்' (Laurence Olivier) என்பவர் நடித்த மகா நாடக கவி ஷேக்ஸ்பியர் எழுதிய உலகம் புகழ் 'ஹாம்லெட்' (Hamlet) என்னும் பேசும்படத்திற்கு அப்பரிசை ஏகமனதாய் வழங்கினார்கள். அவர் ஹாம்லெட் வசனத்தை ஆங்காங்கு சினேரியோவில் குறைத்து எழுதினாரே ஒழிய ஒரு வார்த்தையையும் மாற்றவும் இல்லை; அதிகமாக எழுதவும் இல்லை. அப்படி இருந்தும் அதற்கே பரிசு கொடுக்கப்பட்டது என்பதைப் பேசும்படம் தயாரிக்கும் எல்லோரும் இனியாவது கவனிப்பார்களாக.

---

# மொழிக்கலை

[டாக்டர், அ. சிதம்பரநாதச் செட்டியார், எம். ஏ. எம்., எல். சி.]

டாக்டர். அ. சிதம்பரநாதன், எம்.ஏ., எம் எல்.சி, அவர்கள் 3-4-1907 இல் கும்பகோணத்தில் தோன்றியவர். எம்.ஏ., தேர்வில் முதல்வராகத் தேறினர். தமிழ்ச்செய்யுள் வரலாறு பற்றி ஆராய்ச்சிக்காக டாக்டர் பட்டம் பெற்ருர். சென்னைப் பல்கலைக் கழக டாக்டர் போப் தங்கப் பதக்கத்தையும் தமிழிற் புலமைக்காகப்பெறும் பேறு பெற்ருர். தருமையாதினத்தாரால் ''செந்தமிழ்க்காவலர்'' என்ற சிறப்புப் பட்டம் சூட்டப்பெற்றவர். இலங்கை, சிங்கப்பூர்,



மலாயா முதலிய நாடுகளில் எல்லாம் தமிழ் பரப்பும் திருத்தொண்டாற்றியவர். பிரித்தன் பல்கலைக் கழக நடைமுறைகளை நேரிற் கண்டறிந்தவர். அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றியுள்ளார். தற்பொழுது ஆங்கிலம் - தமிழ் அகராதிக் குழுவிற்குத் தலைமை ஆசிரியராவர். செந்தமிழ்ச் செல்வி இதழாசிரியர் குழுத் தலைவர். இவர் சென்னை மேல் சட்ட மன்ற உறுப்பினராகச் சிறப்பொடு விளங்கி வருகின்ருர். சிறந்த எழுத்தாளரும், இனிய பேச்சாளருமாவர்.

உலகத்தில் உள்ள பல மொழிகளைப் பற்றி ஆராய்ச்சி செய்வதென்பது ஒரு கலைபோல இப்பொழுது வளர்ந்துள்ளது. இதனை மொழிக்கலை என்றும் கூறலாம். மொழிக்கலையினை ஒப்பியல் மொழிநூல், மொழிநூல், பன்மொழி ஆராய்ச்சி என்று பல பெயர்கள் கொடுத்து வழங்குவார்கள். பல மொழிகளையும் ஆராய வேண்டுமென்ற எண்ணம் நெடுங்காலமாக உலகத்தில் இருந்து வந்துள்ளது. கிராட்டிலெஸ் (Cratylus) என்னும் உறழ்நடை நூலில் பிளாட்டோ (Plato) (கி. மு. 427–347) கிரேக்க மொழியின் ஒலி இலக்கணம் பற்றிய செய்திகளை முற்காலத்தில் தெரிந்த அளவுக்கு வகைப்படுத்தி எழுதியுள்ளார். தமிழ் மொழிபற்றித் தொல்காப்பியரும், சமஸ்கிருதம் பற்றிப் பாணினியும் எழுதிய வற்ருல் அவர்கட்கு இருந்த மொழிநூற் புலமை ஒருவாறு அறியப்படும். பிறகும், தம் மொழியை அன்றி மற்ற மொழிகளையும் ஆராய்ந்து தம் மொழியோடு ஒப்புமைப்படுத்தி ஒற்றுமைகளையும், வேறுபாடுகளையும் கண்டறிய வேண்டும் எனும் விழைவு மக்களிடையே வளரத் தலைப்பட்டது.

தேசம் விட்டுத் தேசம்போன ஸ்பானியப் பாதிரிமார் சிலர் பதினரும் நூற்ருண்டில் பன்மொழிச் சொற்கள் சில திரட்டி வந்தனர். அமெரிக்க மொழிகள் பலவற்றைப் பற்றியும் பிலிப்பைன் மொழிகளைப்பற்றியும் அவர்கள் பல குறிப்புக்கள் திரட்டினர். பதியெழுதலாலும், புலம் பெயர்தலாலும், வாணிகத் தொடர்பு கொள்ளுதலாலும் சிலர் தாம் புதுவதாகக் கண்ட மொழிகள்பற்றிய சொல்லட்டவணைகளும், இலக்கணங்களும் தொகுக்கத் தலைப்பட்டனர். 1786 இல் இரஷ்ஷியா தேசத்துப் பேரரசி கேத்தரைன் என்பார் ஒரு சொல்லகராதி இயற்றுமாறு பாலஸ் (Pallas) (1741–1811) என்பவரைப் பணித்தார். அதில், இருநூறு மொழிகளிற் காணப்படும் 285 சொல் வடிவங்கள் பற்றிய குறிப்புக்கள் இருந்தன. 1806 க்கும் 1817 க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் அதிலுங் (Adelung), வேடர் (J. S. Vater) என்பவர்கள் ''மித்ரிடேட்ஸ்'' (Mithridates) என்ற தலைப்பில் நான்கு சம்புடங்கள் யாத்தனர். அவற்றுள், ஏசுநாதர் இயற்றிய வழிபாட்டுரை (Lord's Prayer) ஐந்நூறு மொழிகளில் பெயர்த்தெழுதப் பட்டிருந்தது.

ஆயினும், ஒவ்வொரு கூட்டத்தவரும் ஒவ்வொரு மொழி பேசும் மக்களும் தத்தம் மொழியே சாலச் சிறந்தது என்று

எண்ணிக்கொண்டு, மற்ற மொழிகளைத் தம்முடைய மொழியில் இருந்து தோன்றியன என்று சொல்லக்கூடிய மனப்பான்மை பெற்றவர்களாகிவிட்டார்கள். உதாரணமாக, எபிரேய மொழியில் இருந்துதான் உலகில் ஏனைய மொழிகள் எல்லாம் கிளைத்தன என்று சிலர் சொல்லிக் கொண்டிருந்தார்கள். பெக்கானஸ் (Baccanus) என்பவர் எல்லா மொழிகளும் டச்சு மொழியிலிருந்து வந்தன என்றார். வேறு சிலர் கிரேக்க மொழியில் இருந்து மற்ற மொழிகள் கிளைத்தன என்றும், சமஸ்கிருத மொழியில் இருந்து மற்றவையெல்லாம் கிளைத்தன என்றும் சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஆயினும், சர். வில்லியம் ஜோன்ஸ் (Sir William Jones) என்பவர் 1786 ஆம் ஆண்டில் முதன் முதலாக ஓர் அழகிய கருத்தினைத் தெரிவித்தார். அஃதாவது, சமஸ்கிருதம், கிரேக்கம், லத்தீன் போன்ற மொழிகளிடையே ஒப்புமைகள் காணப்பட்டால், அக் காரணத்தால் ஒன்றினின்று மற்றொரு மொழி பிறந்தது எனக் கூறுதல் பொருந்தாது என்றும், இவ்வாறு ஒப்புமை உள்ள மொழிகள் பல ஏதோ ஒரு மூல மொழியினின்று உண்டாயின என்று கூறுதல்தான் பொருந்தும் என்றும் அவர் கூறினர். எனவே, ஒரு மொழி மற்ற மொழிக்குத் தாய் என்று கூறுவதைக் காட்டிலும் சில வேளைகளில் தொடர்புள்ள மொழிகள் பல உடன்பிறந்த நங்கைகள் என்றவாறு உருவகித்துச் சொல்லுதல் பொருந்தும் என்பது அவர் கருத்து. அப்படியானல் கிரேக்கம், லத்தீன், சமஸ்கிருதம் போன்றவை தம்முள் பல ஒத்த இயல்புகள் பெற்றிருக்கின்றமையால் அவையெல்லாம் ஒன்றுக்கொன்று தமக்கை—தங்கை முறையில் உள்ளன என்றும், இவற்றிற்குத் தாய்போன்ற நிலையில் ஏதோ ஒரு மொழி தொடக்கத்தில் இருந்திருக்கவேண்டும் என்பதும் அவரால் கூறப்பட்டன. அவ்வாறு தொடக்கத்தில் இருந்த மொழியின் பெயர் இன்னது எனக் கண்டறிதல் இயலாது என்பதும், அந்த உத்தேச மூல மொழியின் பெயராகப் புராதன "இந்திய-ஐரோப்பிய மொழி" என்பதைக் கூறுதல் கூடும் என்பதும் அவர் கருத்து. இது பன்மொழி ஆராய்ச்சியிலேயே ஒரு பெரும் கிளர்ச்சியை உண்டாக்கிவிட்டது. அதற்கு முந்திய காலத்தில் அறிஞர்கள் பலர் ஒரு மொழியினின்று மற்ற மொழிகள் கிளைத்தன என்ற விதத்தில் கூறிச் சென்றாராக, அவரே "ஒன்று தாய், மற்றன எல்லாம் மக்கள் என்று கொள்ளவேண்டும் என்பதில்லை; அஃதன்றி, ஏதோ ஒன்று தாயாக இருந்தது; அஃது இன்னது என்பது நமக்கு இப்பொழுது தெரியாது. அதன் அடிப்படையில் எழுந்த மொழிகள்தாம் இப்பொழுது உள்ளன. அவை ஒருவேளை ஒன்றினுக்கு ஒன்று உடன்பிறந்த நிலையில் இருத்தல் கூடும்" என்றார். இந்தக் கருத்து அறிவுடை மக்கள் எல்லாராலும் இப்பொழுது ஒப்புக்கொள்ளப்படுகிறது.

மொழி ஆராய்ச்சியை நான்கு வகையாகப் பிரிக்கலாம்: ஒருவகை ஆராய்ச்சி விரித்துரை முறை (descriptive method) எனப்படும். இதன்படி ஏதாவது ஒரு குறிப்பிட்ட மொழியை எடுத்துக்கொண்டு, ஏதாவது ஒரு குறிப்பிட்ட காலத்தில் அம் மொழியின் நிலை எவ்வாறு இருந்தது என்பது ஆராயப்படும். இவ்வாராய்ச்சி ஏதாவது ஒரு நூற்றுண்டினைப் பொறுத்ததாக இருக்கலாம், அல்லது ஒரு பத்தாண்டினைப் பொறுத்ததாக இருக்கலாம், அல்லது ஓராண்டினைப் பொறுத்ததாக இருந்தாலும் இருக்கக்கூடும். காட்டாக, பத்தாவது நூற்றுண்டில் தமிழ்மொழி இருந்தவாறு யாது என ஆராயலாம்; அல்லது இருபதாம் நூற்றுண்டில் 1920 முதல் 1930 வரை தமிழ் எவ்வாறு இருந்தது என்று ஆராயலாம்; அல்லது 1955 இல் தமிழ் எவ்வாறு இருந்தது என்று ஆராயலாம். இவ்வாறு ஆராய்கின்ற ஆராய்ச்சிகள் எல்லாம் விரித்துரை முறையின்பாற்படும்.

இரண்டாவது வகை ஆராய்ச்சி வரலாற்று முறை (historical method) ஆராய்ச்சி எனப்படும். இதன்படி, ஒரு குறிப்பிட்ட காலத்தில் இருந்து வேறு குறிப்பிட்ட காலம்வரை ஒரு மொழியினுடைய வளர்ச்சியைப்பற்றி ஆராய்ச்சி செய்யப்படும். இவ்வரலாற்று ஆராய்ச்சி ஒரு மொழியினுடைய தொடக்கக்காலம் முதல் இன்றுவரை உள்ளதாக இயற்றப்படலாம். அன்றி, குறிப்பிட்ட ஒரு கால

வரையறையினுள் அகப்படுத்தி இயற்றப் படலாம். உதாரணமாக, 1800 ஆண்டுக்கு முன் இருந்து இன்றுவரை தமிழ் அடைந் துள்ள நிலையையும் மாறுதல்களையும் தொடர்ச்சியாக ஆராய்வதும் வரலாற்று முறை ஆராய்ச்சிதான். கி. பி. 18 ஆம் நூற்றாண்டு முதல் 20 ஆம் நூற்றாண்டு வரை உள்ள மொழியின் நிலையை ஆராய்வதும் வரலாற்று முறை ஆராய்ச்சி தான். அன்றி, 20ஆம் நூற்றாண்டில் 1940 முதல் 1950 வரை தமிழ் இருந்த நிலையைப் பற்றியும் வளர்ந்த விதத்தைப் பற்றியும் ஆராய்வதும் வரலாற்று முறை ஆராய்ச்சியே.

மூன்றாவது முறை ஒப்பியல் முறை (comparative method) எனப்படும் இவ் வகை யாராய்ச்சி பல மொழிகளைக் குறித் துச் செய்யப்படுவது. எனினும், ஒன்றோடு ஒன்று தொடர்புடைய மொழிகள் என முன்னரே தெரிந்துள்ள மொழிகளைப்பற்றி இது நடைபெறும். அஃதாவது ஓரின மொழிகள் அல்லது ஒரு குடும்பத்து மொழி கள் எனக் கருதப்படுகின்ற சில மொழிகள் தம்முள்ளே இருக்கின்ற சொற்களையும், சொல் வடிவங்களையும் தொடர் இலக் கணத்தையும்பற்றி ஆராய்வது இதன் நோக்கமாக இருக்கும். நாள்தோறும், நாழிகைதோறும் மக்கள் வழங்கக் கடமை யுடைய சொற்களாக உள்ள முறைப்பெயர் கள், இடப்பெயர்கள், உடல் உறுப்புப் பெயர்கள் முதலியவற்றின் பொதுத் தன்மைகளாலும், இலக்கணவகை ஒப் புமைகளாலும் சில மொழிகள் தம்முள் ஒத்த ஓர் இனத்தனவாய் உள்ளன என்பது முன்னரே முடிவு செய்யப்பட்டிருக்கும். அவ்வாறு இந்திய-ஐரோப்பிய மொழிக் குடும்பம் எனவும், செமிட்டிக் மொழிக் குடும்பம் எனவும் சில குடும்பங்கள் வரை யறை செய்யப்பட்டுள்ளன. அக்குடும்பங் களில் அமைந்த மொழிகளைப்பற்றி ஆராய்ச்சி செய்வதை ஒப்புமை முறைப்படி ஆராய்ச்சி செய்தல் என்பது வழக்கம்.

இந்திய-ஐரோப்பிய மொழி இனத் தைச் சமஸ்கிருதம், லத்தீன், கிரேக்கம், காதிக், இங்கிலீஷ் ஆகிய மொழிகள் சார்ந் தவை. காட்டாகத் தந்தை என்ற பொரு ளில்: இம்மொழிகள், முறையே பிதா, பேட்டர், பேட்டர், பஃதார், பாதர் என்றும் வழங்குகின்றன. தாய் என்ற பொருளில் மாதா, மேட்டர், மேட்டர், மொஃதார், மதர் என வழங்குகின் றன. பத்து என்னும் பொருளில் தசா, தேகிம், தேக், தைஹன், டென் என்று வழங்குகின்றன. குதிரை என்ற பொருளில் அஸ்வஸ், ஈகுவஸ், ஹிப்போ, ஆர்ஸ் முதலியன வழங்குகின்றன. இச்சொற் களில், குதிரை என்ற சொல்லின் சமஸ் கிருத வடிவமாகிய அஸ்வஸ் என்பதி லிருந்து மற்ற வடிவங்கள் தோன்றியன போல ஒரு காலத்தில் மதிக்கப்பட்டன. ஆனாலும், சமஸ்கிருத அஸ்வஸ் என்பது பழைய இந்திய-ஐரோப்பிய "அக்லஸ்" என்பதனுடைய திரிபு என உறுதிசெய்யப் பட்டுள்ளது. எனவே, பழைய "அக்லஸ்" இப்பொழுது பேசப்படுகின்ற எந்த மொழி யிலேயும் இல்லை என்பதும் ஒவ்வொரு மொழியிலேயும் பழைய "அக்லஸ்" சிறிது சிறிது மாறி இருக்கிறது என்பதும் அறி யப்படும். ஒன்று முதலிய எண்ணுப் பெயர்கள் இங்கிலீஷ், லத்தீன், பிரெஞ்சு, இட்டாலியன் ஆகிய மொழிகளில் ஒத்து இருப்பது அறியப்படும். ஒன்று: ஆங்கி லத்தில் ஒன் என்றும், லத்தீனில் யூனஸ் என்றும், பிரெஞ்சில் உன் என்றும், இட்டாலியில் யூனே என்றும் வழங்கக் காண்கிறோம். இதுபோலவே மற்ற எண் ணுப் பெயர்களும் ஒத்திருத்தலை அறி கிறோம். ஆதலாலும், இவை போன்ற பல்வேறு ஒற்றுமைகள் காட்டப்பட்டு இருப்பதாலும், இம் மொழிகள் எல்லாம் ஓர் இனத்தன என்பது முன்னரே வரை யறை செய்யப்பட்டுள்ளது. அவ்வாறே, செமிட்டிக் மொழி இனத்தில் அடங்கும் அரெபிக், ஹியூபுரு, எதியோபியன் போன்ற மொழிகளில் ஒற்றுமை இருக் கின்றது. என்னுடைய எனும் பொருளில் "இய" என்று அராபிக்கிலும், "இ" என்று ஹியூபுருவிலும், "ய" என்று எதியோபிய மொழியிலும் வழங்குவதை அறிகிறோம். இத்தகைய ஒப்புமைகள் பல உண்டு. அதனால், இவற்றை ஒரு குடும்பம் என முன்னரே வரையறை செய் திருக்கிறார்கள். அவ்வாறே, பாலினரஷி யன் என்று இன்னொரு குடும்பம் வரை யறை செய்யப்பட்டுள்ளது. திராவிட

மொழிக்குடும்பம் என்பது தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், குடகு, துளு முதலிய மொழிகளை உள்ளடக்கியது. இம் மொழிகளின் இடையேயும் பல்வேறு ஒற்றுமைகள் முன்னரே காணப்பட்டுள் ளன. காட்டாக, தமிழில் நான் என்பது தெலுங்கில் நேனு என்றும், மலையாளத் தில் ஞான் என்றும், கன்னடத்தில் நானு என்றும் வழங்குதலைக் காண்கிறோம். தமிழில் எட்டு என்பது தெலுங்கில் எனிமிதி என்றும், மலையாளத்தில் எட்டு என்றும், கன்னடத்தில் எண்டு என்றும் வழங்குதலை அறிகிறோம் தமிழில் ஐந்து என்பது தெலுங்கிலும், கன்னடத்திலும் ஐது என்றும், மலையாளத்தில் அஞ்சு என்றும் வழங்குகின்றது. அஞ்சு என்ற வழக்கு தமிழ்ப்பேச்சு வழக்குமாகும். வா, இரு, போ போன்ற வினைச் சொற்கள் எல்லாம் இம் மொழிகளில் ஒத்திருத்தலை அறிகிறோம். அதனால் இம் மொழிகள் ஒரு மொழிக்குடும்பமென உறுதி செய்யப்பட் டுள்ளன. இவ்வாறு உறுதி செய்யப்பட் டுள்ள மொழிகளைப் பற்றி ஆராய்ச்சி செய்தலை ஒப்பியல் பற்றிய ஆராய்ச்சி என்போம்.

மற்றொரு முறை (typological method) என்பது. இம்முறையில் உலகில் ஒன்றினுக்கொன்று தொடர்பு படுத்தப் படாத பல்வேறு மொழிகளைப் பற்றி ஆராய்ச்சி செய்யப்படும். மூன்றாவது முறை யென மேலே சொல்லப்பட்ட பொது முறையிலும் ஒன்றிற்கு மேற்பட்ட மொழி களைப் பற்றி ஆராய்ச்சி நடைபெறும் என் றாலும், ஒப்பியல் முறை ஒத்த இனத்தைச் சேர்ந்த மொழிகளைப் பற்றிய ஆராய்ச்சி எனவும், பொதுமுறை என்பது தொடர்பு உறுதி செய்யப்பட்ட பல மொழிகளைப் பற்றிய ஆராய்ச்சி எனவும் மதிக்கப்பட்டு வருகின்றன. முதல் முறை ஆகிய விரித் துரை முறை, இரண்டாவது முறை எனக் கூறப்பட்ட வரலாற்று முறை ஆகியவை எடுத்துக்கொள்ளப்படும் ஒரே மொழியைப் பற்றிய ஆராய்ச்சியாகும். இவ்வாறு மொழிக்கலையை நான்கு பிரிவுகளாக இக் காலத்து மொழிநூல் அறிஞர்கள் பிரிக் கிறார்கள். ஒவ்வொரு மொழியும் பல வகை களில் மாறுதல்கள் அடைவது உண்டு. அம் மாறுதல்களைச் சில தலைப்புக்களின் கீழ் அடக்குதல் மரபு. அவற்றின் பெயர் ஒலி யியல் வகை (Phonology), சொல் இயல் வகை (Etymology), பொருள் இயல் வகை (Semantics), ஒப்புமை வகை (Analogy), கடன் வாங்கும் வகை (Borrowing) என்பன. ஒலியியல் வகை இரண்டு உட்பிரிவுகள் உடையது. ஒரு மொழியின்கண் அமைந்துள்ள ஒலிகளை விளக்குவது ஒலியியல் வகை ஆராய்ச்சி எனப்படும். காட்டாக, தமிழில் உள்ள க், ச், ட் என்பன எங்கெங்கே பிறக்கின்றன என்று வரையறை செய்து காட்டுதல் போன்றவை ஒலியியல் ஆராய்ச்சியில் அடங்கும். க் அடி நாவினால் அடி அண்ணத் தைத் தொட உண்டாகின்றது என்பது போலச் சொல்வது, ஒலியியல் பற்றிய செய்தியாகும். ஆனால், ஒலிய இயல் வகை ஆராய்ச்சி (Phonemics) என்ற மற்றொரு உட்பிரிவு இதனின் வேறு பட்டது. எல்லா மொழிகட்கும் உள்ள பொதுவான ஒலிவிதங்களைப் பேசுவது "ஒலி இயல் ஆராய்ச்சி" (Phonetics) என்றும், குறிப்பிட்ட ஒரு மொழி ஒலிகளை எவ்வாறு பயன்படுத்திக் கொண்டுள்ளது எனும் ஆராய்ச்சி "ஒலியவகை" என்றும் கூறப்படும். காட்டாக, க என்பது வெவ் வேறு விதமாகத் தமிழில் உச்சரிக்கப்படு கிறது. கட்டு என்ற இடத்தில் வருகிற "க"வைப்போலவே, அகம் எனும்பொழுது உச்சரிக்கப்படுதல் இல்லை. அஃகம் (அஹம்) என்றும் அஃம் என்றும் வெவ் வேறு முறையில் உச்சரிக்கப்படலாம். இவை பொருள் வேறுபாட்டினை உண் டாக்குவன அல்ல. அகஃம் என்றால் வீடு என்றும், அகம் என்றால் மனைவி என்றும், அகம் என்றால் குழந்தை என்றும் வெவ் வேறு பொருள் இருப்பதாக வைத்துக் கொண்டால், நம்முடைய மொழியில் க-ஹ-க போன்ற ஒலிகள் எழுத்தில் அவசியமாக எழுதிக்கொள்ளத்தக்க நிலை யில் உள்ளன என்று ஆகும். அவ்வாறு இருந்தால், அவை ஒலிய வகைவேறுபாடு உடையன எனப்படும். அவ்வாறு இல்லை என்பது வெளிப்படை. எனவே "க"வை வெவ்வேறு விதமாக உச்சரிப்பதால் ஒலி இயல் வகை வேறுபாடு (க-ஹ-க.) தமிழில் உண்டு. ஆனாலும், ஒலிய வகை வேறு பாடு இல்லை என்பது கருத்து.

சொல் இயல் வகை என்பது ஒரு சொல்லின் அடிவேர் பற்றிய ஆராய்ச்சி ஆகும். வாழ்கிறான் என்ற சொல்லில் "வாழ்" அடி இருக்கிறது என்றும், கற்றார்கள் என்பதில் "கல்" என்ற அடிவேர் இருக்கிறது என்றும், இவை போலப் பிற சொற்களில் பிற அடிவேர்கள் இருக்கின்றன என்றும் இவ்வகை ஆராய்ச்சியில் காட்டப்படும்.

பொருள் இயல் வகையென்பது ஒரு மொழியின்கண் உள்ள சொற்கள் காலந்தோறும் வெவ்வேறு பொருளில் வேறுபட்டு இப்பொழுது அவ்வந்நிலைகள் அடைந்திருக்கின்றன என்பதைக் காட்டுவதாகும். தொல்காப்பியர் காலத்தில், அஃதாவது இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர்ப் "பாட்டி" என்ற சொல் பெண் நாயினையே குறிக்க வழங்கிற்று. இப்பொழுது "பாட்டி" என்பதைத் தந்தையின் தாயார் அல்லது தாயின் தாயார் என்ற பொருளில் வழங்குகிறோம். "நாற்றம்" என்ற சொல் முன்னர்ப் பொதுவாக மணத்தைக் காட்டிற்று. இப்பொழுதோ அது கெட்ட மணத்தைக் குறிப்பதாக உள்ளது. இம்மாதிரி ஒவ்வொரு மொழியிலும் சொற்கள் பொருளில் உயர்ந்தோ தாழ்ந்தோ மாறுதல் அடைதல் உண்டு. பொருளில் உயர்வு பெற்றால் உயர்பொருள் நியமம் (Elevation) எனப்படும். பொருளில் தாழ்வு ஏற்படின், இழிபொருள் நியமம் (Deterioration) எனப்படும். அவ்வாறே களி என்ற சொல் கள் குடித்தவனை முற்காலத்தில் காட்டியது. இப்பொழுது மகிழ்ச்சி எனும் உயர் பொருளில் களி என்பது வழங்குகிறது. சில வேளைகளில் ஏதாவது ஓர் இனத்திற்கு உரிய பொதுச் சொல்லாக வழங்குவதொன்று குறிப்பிட்ட ஒரு பொருளையே தெரிவிக்கும் சிறப்புச் சொல்லாக மாறிவிடுதல் உண்டு. நெய் என்பது நெய்ப்பு அல்லது பசை உடைய எந்தப் பொருளையும் பொதுவாகக் குறித்துக்கொண்டிருந்தது. இப்பொழுது வெண்ணெயினின்று எடுக்கப்படும் ஒன்றை மாத்திரம் குறிக்கிறது. இவ்வாறு வழங்கும் சொற்களைச் சிறப்புப்படை நியமத்தின் (Restriction) காரணமாக எழுந்தன என்போம். பொதுப்படை நியமம் (Broadening) என்றும் ஒன்று உண்டு. அதன்படி, ஏதாவது ஒரு பொருளையே குறிக்க வழங்கிய சொல் நாளடைவிற் பொருளில் விரிந்து கொடுத்து ஓரினத்தையே தெரிவிப்பதாக அமைதல் உண்டு. எண்ணெய் என்ற சொல் ஒரு காலத்தில் எள்ளினின்று எடுக்கப்பட்ட நெய்யை மாத்திரம் குறித்தது. இப்பொழுதோ அவ்வாறன்றி நெய்ப்புடைய பொதுப் பொருளில் வழங்குகிறது. அதனால், அதை ஆமணக்கு எண்ணெய், தேங்காய் எண்ணெய் என்ற இடங்களிற் கூட்டி வழங்குகிறோம். ஆமணக்கு எண்ணெயிலும் தேங்காய் எண்ணெயிலும் எள் என்பது எள்ளளவு கூடக் கிடையாது. எண்ணெய் என்பது எள் நெய் என்ற சிறப்புப் பொருளைத் தராமல் நெய் என்ற பொதுப் பொருளைத் தரத் தலைப்பட்ட காரணத்தால் எள் எண்ணெய் என்ற வழக்குக்கூட சில இடங்களில் தோன்றிவிட்டது. இவ்வாறு உண்டாகும் சொற்கள் எல்லாம் பொதுப்படை நியமம் என்பவற்றுள் அடங்கும். அன்றியும், சில வேளைகளில் மக்கள் உடம்பின் உறுப்புக்கள் சிலவற்றை ஒன்றினுக்கொன்றாக வழங்குதலை நாம் காண்டல் இயலும். அவ்வாறு நெற்றி என்பதற்குப் பதில் தலை என்றோ, கொங்கை என்பதற்குப் பதில் மார்பு என்றோ, அடி என்பதற்குப் பதில் கால் என்றோ வழங்குவோம். ஆனால், அவ்விடங்களில் இடம் பெயர்தல் (Displacement) என்ற நியமம் உள்ளதாகக் கருதுவோம். இவை போல்வன எல்லாம் பொருள் இயல் வகை பற்றிய ஆராய்ச்சிகளாகும்.

ஒப்புமை வகை என்பது மக்கள் ஏதாவது அறிந்த ஒரு விதத்தின் கீழே ஏனை விதங்களையும் ஒப்புமை காரணமாகக் கொண்டுவந்து சேர்க்க முயலுதல் என்ற காரணத்தால் ஏற்படுகிறது. ஒருவன், ஒருத்தி என்ற சொற்கள்தாம் இலக்கண மரபு ஒட்டியன என்று கூறப்படுகின்றன. ஆயினும், ஒரு என்ற பகுதியான அடியும் அன் என்ற விகுதியுஞ் சேர்ந்து ஒருவன் ஆதல் போல, ஒரு என்ற பகுதியான அடியும் அள் என்ற விகுதியும் சேர்ந்து ஒருவள் என்றும் வழங்குவது பிழையில்லை என்பது

புலப்படும். அதனால், ஆயிரக் கணக்கான மக்கள் உள்ளத்தில் ஒருவன் என்பதற்கு ஏற்பப் பெண்பாலில் ஒருவள் என்ற சொல் தோன்றிவிடுகிறது. ஒருத்தி என்பதுதான் ஒப்புக்கொள்ளக்கூடியது என்பது பறையறை செய்யப்பட்டாலும், ஒப்புமை வகை காரணமாக மக்கள் ஒருவள் என்பதையும் உண்டாக்கி விடுகிறார்கள். இவ்வாறு உண்டாக்கப்படுகின்றவை ஒப்பியல் வகை காரணமாக ஏற்படும் மாறுதல்கள் எனச் சொல்லப்படும். பெறுதி என்றால் இலாபம் என்றும், இறுதி என்றால் நஷ்டம் என்றும் இச்சொற்கள் பழங்காலத்தில் பெறு என்பதன் அடியாகவும் இறு என்பதன் அடியாகவும் பிறந்தன. வானோர் எனப்படுபவர்கள் வானுலகத்தில் உள்ளவர்கள் என்ற பொருளில் ஒரு சொல் தோன்ற, அதற்கு எதிரே ஈனோர் என்ற சொல் இவ்விடத்தில் உள்ளவர்கள் என்ற பொருளில் கிளைத்து விட்டது. இவ்வாறு தோன்றுஞ் சொற்கள் ஒப்புமை காரணமாகத் தோன்றுபவை எனப்படும்.

இவை அல்லாமல், சில வேளைகளில் ஒருவர் ஒரு மொழியினின்றோ, வேறு பல மொழிகளிலே இருந்தோ கடன் வாங்குதல் உண்டு. மொழிக்கலை ஆராய்ச்சிக்கு இவ்வறிவும் வேண்டும். அஃதாவது, எவ்வெச் சொற்கள் குறிப்பிட்ட மொழியின்கண் தொன்றுதொட்டுத் தோன்றியுள்ளன வென்றும், எவ்வெச்சொற்கள் பிற பிற மொழிகளில் இருந்து கடன்வாங்கப்பட்டு இருக்கின்றன என்றும் ஒருவர் அறிதல் வேண்டும். மேலே குறிப்பிட்ட ஒலி இயல் வகை, ஒலிய வகை, பொருள் இயல் வகை, ஒப்பியல் வகை ஆகிய இவற்றை ஒருவர் தமது மொழியறிவு கொண்டே விளக்கிவிடலாம். ஆனால், இன்னின்ன சொற்கள் பிற மொழியிலிருந்து கடன் வாங்கப்பட்டன என்பதை அறியப் பிற மொழி அறிவும் வேண்டும். மொழிகள் மேலே கூறிய ஐந்து வகைகளில் மாறுதல் அடைகின்றன என்பதை ஒருவர் அறிந்து அவற்றிற்கேற்பத் தமது ஆராய்ச்சியை நிகழ்த்துவாரானால், அவ்வாராய்ச்சி நல்ல பயன் விளைப்பதாகும்.

எனவே, மொழிக்கலை ஆராய்ச்சி என்பது நிகழ்த்தப்பட வேண்டிய முறைகளிற் சில எடுத்துக்காட்டப்பட்டன.

---

## மொழி வளர்ந்து பெருகிய முறைமை

மொழியானது இந் நாட்டிற் பொதுவாய்க் கருதப்படுகிறபடி, இறைவனாற் படைக்கப்பட்டதுமன்று; இயற்கையாய் உள்ளதுமன்று; மாந்தனால் ஆக்கப் பெற்றதே. ஆயின், ஒருவனால் மட்டுமன்று; கழிபலவூழிகளாகக் கணக்கற்ற தலைமுறையாளரால் சிறிது சிறிதாய் ஆக்கப்பெற்றதாகும். இங்ஙனம் ஆக்கப் பெற்ற மொழிகள் உண்மையில் ஒரு சிலவே. அச் சிலவே, அவற்றின் பல்வேறு நிலைகளில் நிகழ்ந்த திரிபு, சுருக்கம், பெருக்கம், கூட்டு, கலப்பு என்னும் ஐம்முறைகளால்; ஏறத்தாழ மூவாயிரம் மொழிகளாகக் கிளைத்து உலகமெங்கும் பரவியிருக்கின்றன. அம் மூலமொழிகளுள் முதன்மையானது தமிழே. அது தோன்றிய இடம் மாந்தன் பிறந்தகமாகிய குமரி நாடே.

—ஞா. தேவநேயன், 'முதல் தாய்மொழி'

---

# தொல்காப்பியத்தில் ஒரு சூத்திரம்

[வித்துவான் திரு. மு. அருணாசலம் பிள்ளை அவர்கள்]

நெல்லைமாவட்டம், இராயகிரியில் முத்துப் பிள்ளைக்கும் செல்லம்மாளுக்கும் 26-3-1903 இல் திருமகனாராய்த் தோன்றினர். தம் சிறிய தந்தையார் அருணாசலக் கவிராயரிடம் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்றார். மேலைச் சிவபுரிக் கணேசர் செந்தமிழ்க் கல்லூரியிற் பயின்று, மதுரைத் தமிழ்ச்சங்கப் பாலபண்டிதத் தேர்வில் தேர்ச்சி பெற்று, அக் கல்லூரியில் ஐந்தாண்டுகள் தலைமை யாசிரியரா யிருந்து, 1934இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழாசிரியராகச் சேர்ந்தார். 1938 இல் சென்னைப் பல்கலைக் கழகத் தனித்தமிழ் வித்துவான் தேர்வில் முதல்வராகத்தேறி ஆயிரம் வெண்பொற்காசுகள் பரிசு பெற்றார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகின்றார். செட்டிநாட்டரசர், அண்ணாமலைச் செட்டியார் அவர்களைக் குறித்துத் "தமிழ்ப் பெரு வள்ளல்" என்ற நூலை இயற்றியுள்ளார். தமிழில் ஆராய்ச்சிக் கட்டுரைகளும் எழுதி வருகின்றார்.



பழந்தமிழ்ப் பெருநூலாகிய தொல்காப்பியச் செய்யுளியலில் தொடை வகைகளைத் தொகுத்துக் கூறும் சூத்திரம்,

"மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூற்
றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே"
(சூ. கஎ)

என்பதாகும்.

இதற்கு இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் எழுதிய உரைகள் கிடைத்திருக்கின்றன. வேறு சிலரும் உரை செய்திருந்தனர் என்பது பேராசிரியர், நச்சினார்க்கினியர் உரைகளால் தெரிகின்றது.

இதன்கண், 'ஐயீ ராயிரத்து ஆறு ஐஞ்ஞூறு' என்பதற்கு, பதின்மூவாயிரம் எனப் பொருள் செய்வதில் யார்க்கும் கருத்து வேற்றுமையில்லை. பின் இரண்டடிகளிலே தான் பாட வேறுபாடும் பொருள் வேறுபாடும் கொள்கின்றனர்.

இச் சூத்திரங் கூறும் தொடை வகைகள், பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பதாம்(13,699) என்பர் இளம்பூரணர். இவர்,

"தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூறு
ஒன்றும் என்ப."

எனப் பாடங்கொண்டிருத்தல் வேண்டும். அங்ஙனங் கொண்டாலன்றிப் பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது ஆமாறில்லை. எங்ஙனமெனின், ஐயீராயிரத்து ஆறு ஐஞ்ஞூறு - பதின்மூவாயிரம். பத்துக்குறை எழுநூறு - அறுநூற்றுத் தொண்ணூறு. அதனோடு தொண்டு தலையிட்டால்—ஒன்பதைக் கூட்டினால், அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பதாகும். 'ஒன்றும்' என்பது முற்றுவினைச் சொல். ஆகவே, பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது ஆம் என்பது அவர் கருத்து.

சங்கயாப்பு என்னும் நூலுடையாரும் இக் கருத்து உடையவரே என்பதை,

"முந்திய மோனை யெதுகை யளபெடை
அந்தமில் முரணே செந்தொடை யியைபே
பொழிப்பே யொரூஉ வேயிரட்டையென்னும்
இயற்படு தொடைகள் இவைமுத லாகப்
பதின்மூ வாயிரத் தறுநா றன்றியும்
தொண் ணூற் றொன்பதென் றெண்ணினர்
புலவர்."

என்னும் அவரது சூத்திரத்தால் உணரலாம்.

இனி, பேராசிரியர், ஐயீராயிரத்து ஆறு ஐஞ்ஞூற்ருெடு – பதின்மூவாயிரத் தோடு; பத்துக்குறை எழுநூற்ருென்பது; அறுநூற்றுத் தொண்ணூற்ருென்பது. அதனோடு தொண்டு தலையிட–ஒன்பதைக் கூட்ட, எழுநூற்று எட்டாகும். எனவே, பதின்மூவாயிரத்து எழுநூற்றெட்டாம் (13,708) என்பர்.

நச்சினுர்க்கினியர், பத்துக்குறை எழு நூற்ருென்பது-அறுநூற்றுத்தொண்ணூற் ருென்பது; தொண்டு தலையிடலாவது - ஒன்பதாற் பெருக்குதல். அறுநூற்றுத் தொண்ணூற்ருென்பதை ஒன்பதாற் பெருக்கினுல், ஆருயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்ருென்ருகும். இதனை, ஐயீ ராயிரத்து ஆறைஞ்ஞூற்ருெடு கூட்ட, பத் தொன்பதினுயிரத்து இருநூற்றுத் தொண் ணூற்ருென்று(19,291) ஆயிற்றென்பர்.

தமிழ்விடு தூது என்னும் நூலாசிரி யர், நச்சினுர்க்கினியர் கருத்தைத் தழுவிய வர் என்பதை,

"பண்ணிய பத்தொன் பதினு யிரத்திருநூற்
றெண்ணியதொண் ணூற்ருென் றெனுந்
தொடையாய்."

என்னும் அந்நூற் பகுதி(113)யால் அறிய லாம்.

மேலும், தொண்டு தலையிட்ட பத்து– பத்தொன்பது. அது குறைந்த எழுநூற் ருென்பது – அறுநூற்றுத் தொண்ணூறு. இவ்வறுநூற்றுத் தொண்ணூறை, மேலுள்ள பதின்மூவாயிரத்துடன் கூட்டி, பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண் ணூறு எனப் பொருள் செய்தாரும் உளர் என்பர் நச்சினுர்க்கினியர்.

இனி, "பத்துக்குறை யெழுநூற், ருென்றும்" எனப் பாடம் ஓதி, 'ஒன்றும்' என்பதனை, எண்ணுப் பெயர் முற்றும்மை பெற்றதாகக் கொண்டு பொருள் செய்தா ரும் உண்டு என்பது பேராசிரியர் உரை யால் தெரிகின்றது.

இங்ஙனம் உரையாசிரியர் பலரும் இச் சூத்திரத்திற்குப் பொருள் செய்வதில் தம்முள் மாறுபடுவாராயினர். அவை நிற்க.

இளம்பூரணர் தம் கருத்தை நிலை நாட்டுதற்குக் காட்டியுள்ள விளக்கங்களை இனிக் காண்போம்.

**தொடை வகை**

1. மோனைத்தொடை—ஆயிரத்துப்பத்தொன்பது
2. எதுகைத்தொடை—இரண்டாயிரத்து நானூற்று எழுபத்து மூன்று
3. முரண்டொடை —இரண்டு
4. இயைபுத்தொடை—நூற்றெண்பத்திரண்டு
5. அளபெடைத் தொடை--நூற்றைம்பத்தொன்பது

ஆகத் தொடைவகை – மூவாயிரத்து எண்ணூற்று முப்பத்தைந்து.

1. பொழிப்புத்தொடை

மோனைப்பொழிப்பு —தொண்ணூற்று மூன்று
எதுகைப்பொழிப்பு —இருநூற்று இருபத் தொன்பது
முரண்பொழிப்பு —இரண்டு
இயைபுப்பொழிப்பு—நூற்றெண்பத்திரண்டு
அளபெடைப் பொழிப்பு—நூற்று நாற்பத்தெட்டு

ஆகப் பொழிப்புத் தொடை - அறு நூற்று ஐம்பத்து நான்கு.

2. ஒரூஉத்தொடை

ஒரூஉத்தொடையும் பொழிப்பிற்குக் கூறிய வாறே, அறுநூற்று ஐம்பத்து நான்காம்.

3. செந்தொடை

எண்ணுயிரத்து ஐந்நூற்று ஐம்பத்தாறு.

ஆகத் தொடைவகை – ஒன்பதினு யிரத்து எண்ணூற்று அறுபத்து நான்கு.

இவ்விருவகைத்தொடையும்(3835-ம், 9864-ம்) கூட்டப் பதின்மூவாயிரத்து அறு நூற்றுத்தொண்ணூற்ருென்பது (13699) தொடை விகற்பமாம் என்பர்.

இவற்றுள், மோனைத்தொடை முதலி யன இன்னின்ன ஏதுக்களால் இத்துணைய வாயின என விளக்கமுங் காட்டியுள்ளார். அவற்றுள், இயைபுத்தொடை, அள பெடைத் தொடைகளுக்குக் காட்டிய விளக் கங்கள் தவிர, ஏனையவெல்லாம் தெளிவாக உள்ளன ஆதலின், அவற்றைவிடுத்து, இயைபுத்தொடை, அளபெடைத்தொடை களுக்குக் காட்டிய விளக்கவுரைகளை மாத் திரம் இங்கே காண்போம்:

மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பாக 1917 இல் வெளிவந்த தொல்காப்பியச்

செய்யுளியல் நச்சினார்க்கினியர் உரைப் புத்தகத்தின் அடிக்குறிப்பில், இச் சூத்திரத்திற்கு இளம்பூரணர் எழுதிய உரையும் எடுத்துக்காட்டப்பெற்றுள்ளது. அதில், இயைபுத் தொடை பற்றிய விளக்கம் பின் வருமாறுள்ளது:

"உயிரெழுத்து மொழியீற்றின்கண் உயிர்மெய்யே வருதலின் அவையாகா. உயிர்மெய் இருநூற்றெருபத்தாறினும் இறுதிக்கண் வாராததாம் ஙகரவுயிர்மெய் பன்னிரண்டும், அகரம் பதினேழும், இகரம் பதினாலும், உகரம் இரண்டும், எகரம் ஒன்றும், ஒகரம் ஒன்றும் இவையொழிந்து நின்ற எழுத்து நூற்றறுபத்தைந்தும், ஞண நமன யரல வழள என்னும் புள்ளியிறுதி பதினொன்றும், குற்றியலுகரம் ஓராறும் ஆக இயைபுத்தொடை நூற்றெண்பத்திரண்டு பாகுபாடாம்."

இனி, வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் 1935-36 இல் பதிப்பித்து வெளிப்படுத்திய இளம்பூரணத்தில், மேலே காட்டிய உரையே சில சொற்கள் திருத்த முற்ற அளவிற் காணப்படுகிறது.

இப் பதிப்பிலுள்ள சிறப்பாவது, பாடபேதமாகக் கீழ்க் குறிப்பு ஒன்று காட்டியிருப்பதாகும். அதனைப் பின்னர்க் காண்போம்.

அணிமையில் (1956) வெளிவந்த சை. சி. நூ. ப. கழகப் பதிப்பில் அக் கீழ்க் குறிப்பு நீக்கப்பட்டு, மேலே காட்டியவாறு உள்ள விளக்கம் மட்டுமே காணப்படுகிறது.

இளம்பூரணர் உரையென வெளிவந்திருக்கும் மூன்று பதிப்புக்களிலும் உள்ள விளக்கவுரைகள், அவ்விளம்பூரணர் கருத்தை விளக்குகின்றனவா, விலக்குகின்றனவா? அவை அவரால் எழுதப்பட்டவைதாமா? என்பவற்றைச் சிறிது ஆராய்தல் வேண்டும்.

## இயைபுத்தொடை விளக்கம்

தமிழ் நெடுங் கணக்கில் காணப்படும் எழுத்துக்கள், உயிர் பன்னிரண்டு, மெய் பதினெட்டு, ஆய்தம் ஒன்று, உயிர்மெய் இருநூற்றுப் பதினாறு ஆக இருநூற்று நாற்பத்தேழு எழுத்துக்களாம். அவற்றுள், வல்லெழுத்து ஆறும் ஙகரமெய்யும் ஆய்தமும் ஆகிய எட்டெழுத்துக்களும் மொழிக்கு ஈறுகாவென (தொல்-எழுத். சூ. எஅ) முன்பே விலக்கப்பட்டன. எஞ்சிய இருநூற்று முப்பத்தொன்பது எழுத்துக்களுடன் குற்றுகரம் ஆறும் கூட்ட எழுத்துக்கள் இருநூற்று நாற்பத்தைந்தாம். அவற்றுள் நூற்றெண்பத்திரண்டு எழுத்துக்களே இயைபுத் தொடைக்கு வரும். ஏனைய அறுபத்து மூன்றெழுத்துக்களும் வாரா என வரையறை செய்து, அவ்வறுபத்து மூன்றெழுத்துக்கள் இவையெனவும், அவை வாராமைக்குக் காரணம் இன்னின்ன வெனவும், வெளிப்படையாகவும் உய்த்துணருமாறும் விளக்கந் தருகின்றார் இளம்பூரணர்.

உயிர்பன்னிரண்டும் உயிர்மெய்யாயல்லது மொழியீற்றின்கண் வாரா. உயிர்மெய்யெழுத்துக்கள் இருநூற்றுப் பதினாறில் ஙகரவருக்கத்து உயிர்மெய் பன்னிரண்டும் மொழிக்கு ஈறாகா. ஆகலின் இவ்விருபத்து நான்கு எழுத்துக்களும் இயைபுத்தொடைக்கு விலக்கப்பட்டன என்றார். இது பொருத்தமே.

இனி, எஞ்சிய முப்பத்தொன்பது எழுத்துக்களைப் பற்றிய விளக்கம் வேண்டும்.

அவ்விளக்கம்: "அகரம் பதினேழு, இகரம் பதினாலு, உகரம் இரண்டு, எகரம் ஒன்று, ஒகரம் ஒன்று" என்னும் முப்பத்தைந்து எழுத்துக்கள் விலக்கப்படுதற்கு உரியனவாக மூன்று பதிப்புக்களிலும் காட்டப்பட்டுள்ளன. இவை ஏன் விலக்கப்படவேண்டும் என்பதற்குக் காரணமும், இன்னும் நான்கெழுத்துக்கள் யாவையென்பதும் அவற்றில் இல்லை. ஆகவே இவ்வுரைகள் உண்மைகாணுதற்கு உதவுவனவாகா என்பது தெளிவாகின்றது.

இப் பதிப்புக்களாற் புறக்கணிக்கப்பட்டும் விலக்கப்பட்டும், சிதம்பரம் பிள்ளையவர்கள் பதிப்பில் மட்டும் ஒதுக்கிடம் பெற்று, அடிக்குறிப்பில் பாடபேதமாகக் காட்டப்பட்டுள்ள சிறு பகுதியே உண்மையைப் புலப்படுத்தி இளம்பூரணர் உரைக்கு உயிர் கொடுத்து நிற்கிறது.

அது: "எகரம் பதினேழு, ஒகரம் பதினாறு, உகரம் இரண்டு, ஊகாரம் இரண்டு, ஏகாரம் ஒன்று, ஓகாரம் ஒன்று" என்பதாம்.

இதன்கண், எகரம் பதினேழு என்பது முதலாக எண்ணப்பட்ட எழுத்துக்கள் முப்பத்தொன்பது. இவற்றுடன் ஙகர வருக்கத்து உயிர்மெய் பன்னிரண்டுங் கூட்டினால், ஐம்பத்தோரெழுத்தாகும். உயிர்மெய் இருநூற்றுப் பதினாறில் இவ் வைம்பத்தொன்று நீங்கலாக உள்ள எழுத்துக்கள் நூற்று அறுபத்தைந்து. இது, இளம்பூரணர் மேலே காட்டிய வரையறையுடன் ஒத்து வருகின்றது.

இனி, உயிர் பன்னிரண்டும் ஙகர உயிர்மெய் பன்னிரண்டும் இயைபுத் தொடையில் வாராமைக்குக் காரணங் காட்டியது போல், இம் முப்பத்தொன்பது எழுத்துக்களும் அத் தொடையில் வாரா மைக்கு உரிய காரணம், இக் கீழ்க் குறிப் பிலும் காட்டப்படவில்லை. ஆயினும், இவை இன்னின்ன காரணங்களால் விலக்கப்பட்டன என அறிந்துகொள்ள இடம் இருக்கிறது.

பன்னிரண்டு உயிரும் பதினெட்டு மெய்யின் மேலும் தனித்தனி ஏறிவருத லால் ஒவ்வோருயிரும் பதினெட்டு உயிர் மெய்யாய் நிற்கும். அவற்றுள், ஙகர வருக்கத்து உயிர்மெய் பன்னிரண்டும் மொழிக்கு ஈறுதல் இல்லையாகலின் இயைபுத்தொடையில் வாரா என விலக்கப் பட்டன. இனி, ஏனைய மெய் பதினேழன் மேலும் பன்னிரண்டுயிரும் ஏறி ஒவ் வொன்றும் பதினேழு உயிர்மெய்யாய் நிற்கும். அவற்றுள் விலக்கப்படுவன இவையெனக் காட்டுகின்றது இக் கீழ்க் குறிப்பு.

'எஎன வரும்உயிர் மெய்யீறு காது.'

(எழுத். சூ. எக)

என்றமையால், எகரம் எம்மெய்யுடனுங் கூடி உயிர் மெய்யாய் மொழிக்கு ஈறுகாது ஆகலின், எகரம் பதினேழும் விலக்கப் பட்டன.

'ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே'

(எழுத். சூ. எ௨)

என்னும் விதியால் ஒகரம் நகரமெய் ஒன் றுடன் கூடி ஈறும் ஆதலின் 'நொ' என்னும் அஃதொழிந்த பதினாறும் விலக்கப்பட்டன.

'உஊ காரம் நவவொடு நவிலா.'

(எழுத். சூ. எச)

என்பதனால், நகர வகரங்களுடன் கூடிய உகரம் இரண்டும் ஊகாரம் இரண்டும் விலக்கப்பட்டன.

'ஏஒ எனுமுயிர் ஞகாரத் தில்லை'

(எழுத். சூ. எ௩)

என்றதனால் ஏகாரம் ஒன்றும் ஓகாரம் ஒன்றும் விலக்கப்பட்டன என அறிந்து கொள்ளலாம்.

எனவே உண்மையை அறிய உத வியது இக் கீழ்க் குறிப்பு. இதுவே இளம் பூரணர் உரை. இஃது ஒதுக்கப்பட்டது; மறைக்கப்பட்டும் போயிற்று. இதற்கு மாறாக "அகரம் பதினேழு, இகரம் பதினாலு, உகரம் இரண்டு, எகரம் ஒன்று, ஒகரம் ஒன்று" என்னும் பிழைபட்ட உரை எல்லாப் பதிப்புக்களிலும் முதலிடம் பெற்று விளங்குகிறது. இது வருந்தத் தக்கதே.

இனி, அளபெடைத் தொடைக்குக் காட்டிய விளக்கவுரையிலும் பிழை காணப் படுகிறது.

அளபெடைத்தொடை விளக்கம்

"மொழி முதலாகும் உயிரளபெடை ஏழு. கதநபம என்னும் உயிர்மெய்யள பெடை முப்பத்தைந்து. சகர அளபெடை ஐந்து. வகர அளபெடை ஐந்து. யகர அளபெடை இரண்டு. இவை ஐம்பத்து நான்கில் உயிரளபெடை தனிநிலையாம். ஏனையவற்றை முதனிலை இடைநிலை இறுதிநிலை யென உறழ, நூற்று நாற்பத் தொன்றும். ஒற்றுக்களுள் வல்லெழுத்து ஆறும் மகரமும் ழகரமும் ஒழித்து ஏனைய பதினொன்றும் அளபெடுக்க ஒற்றளபெடை பதினொன்றும். இவ்வகையினால் அள பெடைத் தொடை நூற்றைம்பத் தொன்பது வகையாம்." என்றே எல்லாப் பதிப்புக்களிலும் அளபெடைத் தொடை பற்றிய விளக்கம் காணப்படுகிறது.

கதநபம என்னும் ஐந்தும், பன்னிரண்டு உயிரோடுங் கூடி மொழிக்கு முதலாம் ஆதலின், அவற்றுள் ஒவ்வொன்றும் ஏழு நெடிலுடன் கூடியிருத்தலால் 35 அளபெடையாம். சகரம் ஐகார ஔகாரங்களோடும், வகரம் ஊகார ஓகாரங்களோடும் கூடி மொழிக்கு முதலாகா (எழுத்-சூத். சுஉ-சுங) என விலக்கப்பட்டமையால் சகர வகரங்களில், ஐவைந்து அளபெடையாம் என்றது பொருந்தும்.

இதன்கண், 'யகர அளபெடை இரண்டு' என்றிருப்பது தவறு.

யகர வருக்கத்தில் 'யா' என்னும் ஒன்றே மொழிக்கு முதலாம் என்பது, "ஆவோ டல்லது யகரமுத லாது" (சூ-சுரு) என்பதாற் பெறப்படுதலின் அதன்கண் இரண்டு அளபெடையில்லை.

"ஆஎ, ஒஎனும் மூவுயிர் ஞகாரத் துரிய,"
(எழுத். சூ சுச)

என்ற விதியால், ஞகர வருக்கத்தில் ஆகார வுயிர் ஏறிய 'ஞா' என்னும் நெட்டெழுத்து அளபெடுக்குமாதலின் ஞகர அளபெடை ஒன்று என்று காட்டியிருத்தல் வேண்டும். அது விடுபட்டது. ஆகவே, "யகர அளபெடை இரண்டு" என்றிருப்பது, ஞகர அளபெடை ஒன்று; யகர அளபெடை ஒன்று என்றிருக்கவேண்டும்.

இன்னும், மேற்காட்டிய விளக்கவுரையில், "ஒற்றுக்களுள் வல்லெழுத்துக்கள் ஆறும் மகரமும் ழகரமும் ஒழித்து.... ஒற்றளபெடை பதினொன்றும்" என்று காணப்படுகிறது.

அளபெடுக்க வாராத ஒற்றுக்கள், மொழிக்கு இறுதியில் வாராத வல்லெழுத்துக்கள் ஆறும், குறிற்கீழ் ஒற்றாக வாரா எனப்பட்ட ரகரமும் ழகரமுமேயாம். மகரம் அன்று ஆதலின் இவ்வுரை,

"ஒற்றுக்களுள் வல்லெழுத்துக்கள் ஆறும் ரகரமும் ழகரமும் ஒழித்து...... ஒற்றளபெடை பதினொன்றும்" என்றிருக்க வேண்டும்.

இதுபோல் தொல்காப்பியச் சூத்திரங்களிலும் உரைகளிலும் பிழைபட்ட இடங்கள் பல இருத்தல் கூடும். ஏடெழுதுபவர், அச்செழுத்துக்களைக் கோப்பவர், பதிப்பிப்பவர் ஆகிய எல்லோரும் எல்லாந் தெரிந்தவராயிருத்தல் இயலாதாகலின், அவருள் யாரையும் குறைகூறுமலும் நம்பாமலும் ஒவ்வொருவரும் உண்மைகாண முயலவேண்டும்.

---

## தொல்காப்பியத்தின் தனிப்பெருஞ் சிறப்பு

தொன்மைத் தமிழின்கண் தொன்மை வாய்ந்ததாக இப்பொழுது கிடைத்திருக்கும் நூல் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியம் ஒன்றுமேயாம். உலகத்தில் வழங்கும் பல்லாயிரக்கணக்கான மொழிகளுள் இலக்கண இலக்கியவளம் பெற்று விளங்குவன சிலவேயாம். அவற்றுள்ளும் இலக்கணச் செம்மைபெற்றிலங்குவது, மிகச் சிலவேயாம்.

பெரும்பாலான மொழிகள் எழுத்துஞ், சொல்லும், யாப்பும், அணியும் என்னும் இலக்கணங்களைக்கொண்டு திகழ்கின்றன. உலகிடை எம்மொழிக்குமில்லாத தனிச்சிறப்பு வாய்ந்ததாக நம் தமிழ் மொழிக்கண் 'பொருளதிகாரம்' என்னும் பெயருடன் வாழ்க்கை வரலாற்று நுட்பங்களை மிகச்செம்மையாகவும் விரிவாகவும் விளக்கும் பகுதி ஒன்று மிளிர்கின்றது. அதன்கண் காணப்படும் 'அகத்திணை, புறத்திணை, களவு, கற்பு, பொருள், மெய்ப்பாடு, மரபு என்னும் ஏழும் எங்கும் இல்லாதன. எஞ்சிய உவமம், செய்யுள் என்னும் இரண்டும் ஏனைய மொழிகளிலும் உள்ளன. இவற்றைக்கொண்டு திகழ்வதே அதன் தனிப்பெருஞ் சிறப்பாகும்.

—திரு. ப. இராமநாதன்.

# செந்தமிழன்னையின் – – திருவடிக்கொரு காணிக்கை

(ஒரு தீந்தமிழ்ச் சொல்லோவியம்)

[பெருமழைப்புலவர், பொ. வெ. சோமசுந்தரனார்]

தஞ்சைமாவட்டத்திலுள்ள மேலப்பெருமழை என்ற ஊரில் 1909 இல் பிறந்த திரு. பொ. வே. சோமசுந்தரனார் நுண்மாண் நுழைபுலம் மிக்கவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்க்கல்வி பெற்றார். புலவர் தேர்வில் முதன்மையுறவென்றார். தாம் பிறந்த ஊரிலேயே தம் வாழ்நாள் முழுவதையும் கழித்து வருகின்றார். கல்வியறிவும் கேள்வியறிவும் மிக்க இவர் உழவுத் தொழிலைக் கண்காணித்துக்கொண்டு மேலும் கற்பதிலேயே தம் ஆயுளைச் செலவிடுகின்றார். இவருடைய கல்விச் செல்வத்தை அறிந்த கழகம் இவரைக்கொண்டு எட்டுத் தொகையுள் குறுந்தொகை, பரிபாடல் என்ற இரண்டிற்கும் பத்துப்பாட்டு முழுமைக்கும், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற இன்ன பிற நூல்களுக்கும் விரிவான முறையில் விளக்க உரை எழுதுவித்து வெளியிட்டுள்ளது. உரை நூல்களல்லாது உரைநடை நூல்களும் நாடக நூல்களும் எழுதியுள்ளார். இவர், சொற்பொழிவாற்றுவதிலும் திறன் மிக்குடையர்.



செந்தமிழன்னாய்! தெய்வத்திருவே! சிந்தாதேவி! செழுங்கலை நியமத்து நந்தா விளக்கே! நாமிசைப் பாவாய்! ஆதி அந்தம் அற்ற மெய்ப்பொருளே! சோதியுட் சோதியாஞ் சுடரே போற்றி! கண்ணே! போற்றி! கருத்தே போற்றி! எண்ணே போற்றி! எழுத்தே போற்றி! பண்ணே போற்றி! பாடலே போற்றி! பண்கெழு பாடற் பயனே போற்றி! பயன்றரு சுவையே! பைந்தமிழன்னாய்! போற்றி போற்றி நின் பொன்னடி போற்றி!

நீயே நின் அகத்தினில், அன்பு காட்டினை; இன்பமூட்டினை; புறத்தினில் மறங் காட்டிப் பொருள் ஈட்டி அறம் நாட்டினை! எம்பெருமாட்டி! நின் தொன்மைதான் யாராலும் தெரிவரிதென்பான் ஒரு நல்லிசைப்புலவன் "என்றுமுள தென்றமிழ்" என்றினிதினேத்தி நின் இணையடி பணிந்தான். நீதான் கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே மாண்போடு முன்தோன்றி மூத்தனை எனினும் என்றென்றும் மூவா முதல்வி நீ! நிலம் நிலைபெற்றிருக்குங் காலமெல்லாம் நீயும் நிலைபெறுவை! அறம் நிலைபெற்றிருக்கும் காலமெல்லாம் நின் அகவைக்காலமேயாகும். என்றென்றும் கட்டிளமை மாறாத கன்னித் தெய்வம் நீ. நினக்குப் பின் தோன்றிய நின்னனைய மொழிமடந்தையர் பற்பலர் மாண்டொழிந்து மறைந்தே போயினர். மூவாமையும் சாவாமையும் நினக்கு இறைவனாற் றரப்பட்ட பேறுகளாம். வாழ்க தாயே! தமிழ்த்தாயே! வாழிய! வாழிய! ஊழிதோறூழி உலகோடொருங்கு.

'கண்ணாவா ரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணாவார் நட்பை மதியேன் தமிழ்த்தாயே!'

பொதிய மாமலைப் பொன்மயிலே! பூந்தென்றலுடன் பிறந்தோயே! பண்டொரு கால் நின்சீர்த்தி திசையெலாம் பரவித் திகழ்ந்தது. நின்னுடைய வெற்றித் திருக்கொடி இமவான் சிமையத்தே ஏற்றப்பட்டிருந்தது. அக்காலத்தே நின் ஆற்றல் அறியாத ஆரிய அரசர் பாலகுமரன் மக்கள் காவா நாவிற் கனகவிசயர் இகழ்ந்தமையை

நீ நின் ஒற்றுச் செவியாலே உணர்ந்தனை; அவ்வளவில் உயிர்ப்பலியுண்ணும் உரு முக்குரல் முழக்கத்து மயிர்க்கண் முரச மொடு மாதிரம் அதிரச் சிலைத்தோளாடவர், செருவேற் றடக்கையர், கறைத்தோல் மறவர், கடுந்தேரூருநர், வெண்கோட்டி யானையர், விரைபரிக் குதிரையர் என்னும் நினது நாற்பெரும் படையும் காற்றெனக் கடுகி அவர்மேற் சென்றது. அந்தோ! வாய் காவா அம் மன்னரின் மணிமுடி மேலே இமயக்கல்லை ஏற்றிச் சுமப்பித் துக் கொணர்ந்தது. நின் மறப்பண்பு அத்தகையதாயிருந்தது.

திறலின் திறலே! தெளிவின் தெளிவே! மறத்தின் மறமே! அறத்தின் அறமே! அழியா மெய்யே! அருளின் கடலே! போற்றி! போற்றி! நின் பொன் னடி போற்றி! அன்னாய்! நீ பிறமொழி மங்கையர் போன்று நாடோடியல்லை! நீ பிறர் உதவியை என்றும் நாடிச் சென்ற தில்லை! செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் பண்புடைய நின்னருள் வேண்டியே காலந்தோறும் அயல்மொழி யாளர் நின் திருநாட்டில் வந்து வந்து நின் குடிமக்களாயினர். அவரையெல்லாம் நீ, முகனமர்ந்து ஈரம் அளைஇய இன்சொலால் வரவேற்று ஓம்பா நின்றனை. அவருட் சிலர் நின் பொன்மேனியை அழுக்குப் படுத்தினருமுளர். எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும் அப்பொருளின் மாசகற் றித் தூய்மை செய்து ஏற்றுக்கோடல் நின் னியல்பு. யாறுகள் தாம்தாம் பிறந்த நிலத் தியல்பானே நிறந்திரிந்து வந்து கடலிலே புகுவனவாயினும் கடலோ அவற்றை ஏற் றுக்கொண்டு அவை கொணர்ந்த நீர்க்குத் தன்னிறத்தையே ஊட்டித் தழுவிக் கொள் கின்றதன்றே, அவ்வண்ணமே எம்பெரு மாட்டி! அயல்நாட்டினின்றும் வந்தமொழி களின் பண்பை நீ ஏற்றுக்கொள்கின்று யில்லை; அவைகொணர்ந்த நலங்களை ஏற்று அவற்றிற்கும் நினக்கே சிறந்துரிமை யுடைய பண்புகளை ஏற்றித் தழுவிக் கொள் கின்றனை. இது நினக்கியல்பாக அமைந்த தொரு தெய்வப் பண்பு. இக்காரணத்தால் நீ என்றென்றும் நிறந்திரியாமே, பண்பு கெடாமே நிலைபெரு நின்றனை! தீந்தமிழ்த் தெய்வமே நின்னுடைய இத்தெய்வப் பண்பினைக் கருதியே ஒரு நல்லிசைப் புலவன்,

'பல்லுயிரும் பலவுலகும்
படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன்
னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும்
கவின்மலையாளமுந் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே
ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக்
கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து
செயல்மறந்து வாழ்த்துதுமே'
—மனோன்மணீயம் - கடவுள் வாழ்த்து.

என்று நெஞ்சுருகி வாழ்த்தினன்

தாயே! பண்டு நீ தந்த தெய்வத் திருக்குறளே நினது தெய்வத் திருவுளத் தின் ஒரு பிழம்பாக இருக்கின்றது. அந் நூல்வாயிலாய் நீ நினது நெஞ்சத்தையே திறந்து காட்டியுள்ளனை. இற்றை நாள் வரை அத் திருக்குறட்கு ஒப்பாக ஒரு நூல் இப் பேருலகத்தே யாண்டும் தோன்றிய தாகத் தெரிந்திலது. அந்நூல் மனிதனை இம் மண்ணுலகத்திலேயே வானவனாக மாற்றிவைக்கும் நினது திருவருட் பிழம்பே யன்றிப் பிறிதில்லை. அதன் சிறப்பை அயன்மொழியாளர் எல்லாம் தம் முடி யாலே வணங்கிப் போற்றாநின்றனர். உண்மையைக் கற்பனையாலே மூடி மறைத்து விடுகின்ற அயன்மொழிக்குள்ள பேதைமை நின்னிடம் ஒரு சிறிதும் இல்லை. நீயோ அறிதற்கரிய நுண் பொருளையும் எண்பொருளாக உணர்த்தும் மேற்கோளுடையை. அவ் வியல்புக் கேற் பவே நின் அருள் வெளிப்பாடுகளாகிய நூல்களெல்லாம் சுருக்கமும், தெளிவும், ஒண்மையும், நுண்மையும், திண்மையும் உடையனவாகத் திகழா நின்றன.

நினது திருவாசகமும், திருவாய் மொழியும், மானிட மனத்தை உருக்கி அதன் மாசு போக்கி வானவர் மனமாக வார்த்துவிடுகின்றன. நினது இராமாவ தாரமும், திருத்தொண்டர் புராணமும், இன்னோரன்ன பிறவும் உயிராகிய தலை மகள் இறைவனாகிய தலைமகனோடு களவுப்

புணர்ச்சி நிகழ்த்தற் கிடமான தெய்வப் பூம்பொழில்களே ஆகின்றன. நினது பாட்டும், தொகையும் தெவிட்டாதனவும், சாவாமையும், மூவாமையும் ஆகிய தெய் வப் பண்புகளை நல்குவனவும் ஆகிய தீவிய செவிநுகர் கற்பகக் கனிகளே காண்! இவற்றை ஆக்கித்தந்த நின் திருவருட்கு எளியேம் யாது கைம்மாறு செய்யவல் லேம்! வாழ்க நின் அருள் !

எம்மோய்! நின் திருவருட் கிலக்காகா தார் மனிதராய்ப் பிறந்து வைத்தும் வல் விலங்குகளே யாவார். அவர் அவியினும் வாழினும் என் ? மக்கள் வாழ்க்கைக்குரிய மாண்பயன் அவர் வாழ்வில் ஒரு சிறிதும் உண்டாகமாட்டாது; இது திண்ணம். இறைவீ ! நின் இன்னருளில் ஒரு சிறிது பெறுந் திருவுடையோர் இம் மண்ணுலகத் திருந்தேயும் வானவர் போன்று மகிழ்ந்து வாழ்தல் ஒருதலை. அவர் வாழ்க்கையி னூடே,

'ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந்
தெண்ணில் கேள்வி
ஆகம் முதற்றிண் பணைபோக்கி
யருந்த வத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித்தரு
மம்ம லர்ந்து
போகங் கனியொன்று
பழுத்து'

பேரின்பம் நல்குதல் ஒருதலை.

தேவீ ! நின் திருவருட் காளானோர் திருமகளை ஒரு பொருளாக மதியார். புல் லிய வயிற்றுப் பசிக்கும் ஒல்கார்; உனது கடைக்கண் வீச்சொன்றே அவர்க்கு ஊழி பலவும் கழித்தற்கு உறுதுணையாக அமைவ தாம். தெளிவுத் திருவே! தெய்வத்தின் தெய்வமே! முன்னை முன்னைப் பிறவி களில் என்னதவம் செய்தேனோ எளியேன் நின்னுடைய திருவருட் பெருமையை ஒரு சிறிது உணரும் பேறுபெற்றுள்ளேன். உனது திருவருள் ஒன்றனையே எளியேன் பற்றுக்கோடாகக் கொண்டு வாழ்ந்து வரு கின்றேன். நின் திருவருட்கு ஆளாதற் கேலாத புன்மையும் என்னெஞ்சத்தே மிக்குளது; அச் சிறுமை கருதாது எளி யேனை நீ ஆட்கொண்டது நின் திருவரு ளின் பெற்றிமையாற் போலும். ஒருவ னுக்கு ஆகூழ் வந்துற்றபோது வந்தெய்தி அணைத்துக்கொண்டு, போகூழ் வந்துற்ற போது நல்லான் நயவன் என்றுமிரங்காதே காலால் உதைத் துருட்டிவிட்டுக் கழிந்து போகும் திருமகள் போல்பவள் அல்லை நீ ! ஏதோ ஒரு தகுதி நோக்கி நீ ஒரு சிலரை மட்டும் நின் அருள் எல்லைக்குள் இழுத்து அமைத்துக் கொள்கின்றனை. நின் திருவரு ளாட்சியில் நீ ஏற்றுக்கொண்ட ஒருவனை எக்காரணத்தாலும் பின்னர் நீ ஒருபொழு தும் கைவிடுவதில்லை. இப் பெருந்தன்மை நினக்கேஉரியது. அவனைப் பிறவிதோறும் ஆட்கொண்டு மெல்ல மெல்ல உயர்த் துவை; தூயனுக்குவை; அவனை வரன் என்னும் வைப்பிற்கோர் வித்தாக்கியே விடுவை. இஃது என்னெஞ்சறிந்த வாய் மையே கண்டாய்.

வயிற்றை நோக்கி அதன்பொருட்டே நின்னை வழிபடுவாரும் இவ்வுலகிற் சாலப் பலர் உளர். அவர் நெஞ்சத்தே ஓர் எள் ளளவும் நின் திருவருளின்பத்தைக் காட்டு கின்றுயில்லை அவரெல்லாம் பானைத் தேனில் அகப்பையையே பெரிதும் ஒக்கின் றார். தாயே! நினது திருமகன் கம்ப நாடனுடைய தெய்வமொழிதானும் அத் தகையோர் கண்களில் ஒருதுளி இன்பக் கண்ணீரையேனும் சுரப்பிக்கமாட்டாது எனிற் பின் பேசுவானேன் !

அன்புசால் பெரியோய்! எளியேன் நின் திருவருளாட்சியி னமைந்த திருநாட் டில் ஒரு பெருந் தகுதியை எய்தியிருக்க வில்லை எனினும் யான் நின் திருநாட்டில் ஓர் ஏழை; ஓர் ஒற்றை ஏருழவனே ஆயி னும் எனக்கிப்பேறே போதும்; இத் துணைக்கே யான் செம்மாந்து திரிகின் றேன்! அம்மம்ம! இன்னும் நின் திரு நாட்டரசியற் பதவியையே நின்னால் அளிக்கப்பட்ட வள்ளுவரும், இளங்கோ வும், திருத்தக்க முனிவரும், கம்பநாடரும் எய்திய இன்பந்தான் எத்தன்மைத்தோ ! மேலும் திருப்பாற்கடலில் தேன் மாரியும் பெய்தாற் போன்று நின்னுடைய திருவரு ளோடே இறைவன் இன்னருளையும் ஒருங்கே பெற்றிருந்த திருநாவுக்கரசர் முதலியோரும் ஆழ்வார்களும் மணிவாசா கப் பெருந்தகையாரும் வடலூர் அடிகளா ரும் தாயுமானாரும் இன்னோரன்ன சான்

ரோர் இவ்வுலகத்திலேயே வீட்டின்பம் கைவரப்பெற்ருேர் ஆவர் என்பதில் எளியேனுக்கு ஐயம் ஒருசிறிதும் இல்லே!

மணியிடை ஒளியே! மாசறு பொன்னே! யாழிடைப் பிறந்த இசையிடை யிருப்போய்! மாசறு முனிவர் மன மலர் உறைவோய்! தேசுடை யுணர்வே! வணக்கம்! வணக்கம்! நின் திருவடிமலரை எளியேன் பன்மாணும் வணங்குகின்றேன்! ஏழையாகிய என்னுடைய தாழ்ந்த விண்ணப்பமிது கேள்! எளியேன் கல்வி மாட்சிமையில்லாத எளிய உழவர்தம் சிறு குடிலிலேதான் பிறந்தேன். யான் என்னே யறியாத இளம் பருவத்திலேயே நீ என்னே ஆட்கொண்டுவிட்டாய். என்னேடு பிறந்து என்னேடு வளர்ந்தோர் பலர் பொருளே நாடி உழன்று பெரும்பொருளீட்டியுள்ளனர். அடியேன் நெஞ்சம் அந்நெறிப் படர்ந்திலது. நின்னேயே நாடி நெடுநாள் திரிந்தேன். நின்னே என் உலக வாழ்க்கைக்குக் கருவியாக்கிக்கொள்ள அன்றென்பது நீயும் அறிவை. பொருளாட்சி போற்ருதார்க்கில்லே என்னும் விதிக்கிணங்க அடியேன் இலம்பாட்டாளன் ஆயினேன். நல்குரவுப்பேயின் கொடுங்கோல் ஆட்சியிற் பட்டேன். அவளுடைய நாடெல்லாம் நான் நடந்து அறிந்துள்ளேன். இக் கொடுமையால் எளியேன் ஆற்ருமையால் சிற்சில ஈனர்பாற் சென்றதுண்டு அன்ருய்! அவ் வல்லற்காலத்தும் நீயே அன்னேயினும் தயையுடையையாய் என் உள்ளிருந்தே என்னேத் தேற்றி ஆட்கொண்டருளினே. இத் திருவருளே எளியேன் ஏழேழ் பிறப்பும் மறக்கமுடியாது.



யான் எய்திய துன்பத்தையே எடுத்துக்காட்டாகக் கொண்டு எளியேற்கு நீ ஓரளவு மெய்யுணர்ச்சி யுண்டாக்கினே. இவ்வுதவியைக் கருதின் உற்ற துன்பமெல்லாம் எனக்குயர்வையே நல்கின ஆதலே யான் மனந்தெளியத் தெளிய உணர்ந்து வருகின்றேன். மெய்யுணர்வுக்கருவூலமே! நீயே எனக்குப் பண்டும் இன்றும் என்றும் துணேயாதலே யான் நன்கு உணர்ந்து விட்டேன். இனி யான் இப் புல்லிய உலக மயக்கத்திற் புக்குழலமாட்டேன். செல்வம் வருக! வறுமையே வருக!!

'யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்ருே ரன்ன
சாதலும் புதுவதன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே .........
..................................
................... என்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தனம்' (புறம் - ககூ௨)

எனத் தன் திருவுடையுள்ளந் தோன்ற உரைத்த கணியன் பூங்குன்றனுக்கு அமைந்திருந்த உரனுடைய உள்ளம் போன்ற ஒன்றனே நீ நின் திருவருளாலே எளியேனுக்கும் சமைத்துவிட்டனே. அதனுல், அவன் போலவே யானும் வாழ முயன்று வருகின்றேன். எம்பெருமாட்டியே! இவ் வுள்ளத்தையே பின்னும் உரனுடையதாக்கித் தருக! இஃது எளியேன் நெஞ்சத்தின் ஆழத்திலிருந்து வருகின்ற விண்ணப்பங்காண்! திருவருள் புரிக!



எனது தனிப்பட்ட வேண்டுகோளிதனே நீ முன்னரும் அறிந்துள்ளனே. இது கிடக்க; தாயே! பண்டைக்காலத்தே வீறுபெற் றுயர்ந்த முடிமன்னர்களாலே போற்றப்பட்டிருந்த நீ, இடைக்காலத்தே மாக்களாலே புறக்கணிக்கப்பட்டிருந்தனே. உயர்ந்தவர் தாழ்வர் என்னும் இயற்கை நியதிக்கேற்பத் தமிழ் மாந்தர் அறிவில் வலியிலராய், அழுக்காறும் மடியும் காரணமாக இழிநிலே எய்திவிட்டனர். தம் ஒன்ருர்க்கு அடிமைபுக்கனர். மக்கள் என்று, நீ என்று இரண்டில்லேயாகலான் யாங்கள் எய்திய இழிநிலே யனேத்தும் நினக்கும் எய்தின. யாங்கள் முடியிழந்தோம்! நீயும் முடியிழந்தாய். யாங்கள் அடிமை புகுந்தோம்! நீயும் அடிமையாயினே. யாங்கள் மடிகொண்டோம்! நினக்கும் மடிமை வந்தெய்தியது. யாங்கள் வறுமையுற்ருேம்! நீயும் வறுமையால் வாடிப்போயினே. அம்மையே! இவ் விழிவெல்லாம் நின்னே யாங்கள் புறக்கணித்தமையால் நினக்கு வந்தெய்தியனவேகாண். எம்பிழை பொறுத்தருள்க. காலம் மாறுமியல்புடையதன்ருே. இப்பொழுது நமக்கு ஆகூழ் வருங்காலம் வந்தெய்தியது. அதற்கான அறிகுறிகள் எல்லாம் தென்படுகின்றன. எம்முயிரினும் மேலாக இனி நின்னே யாங்கள் போற்றுவேங்காண்!

இழிதகை யடிமை ஒருவாறு தீர்ந் தொழிந்தது. மழைவிட்டும் தூவானம் இன்னும் விட்டபாடில்லை. நின் திருநாட் டிலே பிறந்துவைத்தும், நின் திருவரு ளாகிய மொழியே பயின்றிருந்தும், இன் னும் நின்தகவும், பெருமையும் அறிய மாட்டாத புல்லர் ஒருசிலர் இக்காலத்தும் இருக்கவே இருக்கின்றனர். அவர்க்கெல் லாம் நீயே நல்லறிவு வழங்குதல் வேண் டும்! இக்காலத்தே நின்னை அரியணை ஏற்றி நின் திருவருளாட்சியில் இனிது வீற்றிருக்க விரும்பும் நல்லோரும் சாலப் பலர் உளர். நீ அரியணை ஏறின் நின் மக்களாகிய யாங்கள் அனைவரும் அரியணை ஏறியவர்கள் ஆவோம். நின் கையிலேந் தும் செங்கோல் யாங்கள் அனைவரும் தனித்தனியே ஏந்தும் செங்கோலே ஆகும். நீ உயர்ந்தாலல்லது எங்கட்கு உயர்ச்சி வரவியலாது என்று இன்று உலகம் உணர்ந்து வருகின்றது. ஆதலால், அறிவுக்கடலே! அருள்மலையே! எங்கள் நோக்கம் நிறைவேறத் திருவருள் புரிக.

*'நல்லாண்மை என்ப தொருவற்குத் தான்பிறந்த*
*இல்லாண்மை யாக்கிக் கொளல்'* (குறள்-க௦உசு)

என்னும் அறத்தின் சிறப்பினை எங்கட்கு நீ பல்லாண்டுகட்கு முன்னரே அறிவுறுத்தி விட்டாய்; எனினும் எம் பேதைமையாலே அதன் சிறப்பை யாங்கள் அறியாது போயி னேம். இப்பொழுது அத்தகைய நின் திருவறங்களின் சிறப்பைப் படிப்படியாக உணர்ந்து வருகின்றோம். இவ் வுலகப் பெருநாடுகளில் ஒரு நாடாக நம் நாட்டை உயர்த்தி யாம் தலையுயர்த்து நிற்றல் வேண்டும் என்று எண்ணுகின்றோம். அவ் வழி முயலவும் முயல்கின்றோம். தெய்வத் திருவே இம் முயற்சிக்கு நீயும் மடிதற்று முந்துறுவாய் என்றும் நம்புகின்றோம்.

நந்தமிழகத்தின் தலைநகரமாகிய இப் பெரிய சென்னையில் எம் மருமைச் செந் தமிழ்ச் செல்வியே! நமது பழம்பெருமை யோடே நாம் உயர்வதற்கு முயலும் முயற்சியிலே நீ தமியளாகவே நின்று முயல் கின்றனை. நீயுரைத்த,

*'அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்*
*பெருமை முயற்சி தரும்'* (குறள்-சுகக)

என்னும் நுண்ணிய அறிவுரைக்கு நீயே எடுத்துக்காட்டாக நின்று மாந்தர் முன் னேற்றத் திருப்பணியில் ஒன்றுக உயர்ந்த சிறப்புடைய இலக்கியத் திருப்பணியை நீமட்டுமே புரிந்து வருகின்றனை. இன் னும் இவ்வுலகம், இலக்கியம் மக்கள் முன்னேற்றத்திற்கு எத்துணை இன்றி யமையாதது என்பதனை உணர்ந்து கொள்ளவில்லை. அன்னாய்! இவ் வரும் பெரும் பணியில் நீ முப்பத்தாருண்டுகளாக விடாது முயன்று வந்தனை. இம் முயற்சி யால் இத் தமிழுலகம் நினது அருமை யைப் படிப்படியாக உணர்ந்து வருகின் றது. நினது மக்களின் மதிப்பு நாடோ றும் உயர்ந்து வருகிறது.

அளவிலா ஆற்றலுடையோய்! நின் முயற்சி வெல்க! நின் திருக்குறிப்பு நிறை வேறுக! வாழ்க நீ பல்லாண்டு! பல்லாண்டு வாழ்க! என்று எளியேம் முடிதாழ்த்து நின் மலரடியை வாழ்த்தி வணங்குகின் றோம். எம் வணக்கத்தை ஏற்றுக்கொள்க!

வணக்கம்! வணக்கம்! வணக்கம்!

---

## பணிகுவாம்

வைய மீன்றதொன் மக்க ளுளத்தினைக்
கையி னுலுரை கால மிரிந்திடப்
பைய நாவை யசைத்த பழந்தமிழ்
ஐயை தாடலைக் கொண்டு பணிகுவாம்.

# ஆய்தம்

[ஞா. தேவநேயன்]

தேவநேயப் பாவாணரவர்கள் 7—2—1902 இல் சங்கரநயினர் கோவிலிற் பிறந்தார். வட ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த ஆம்பூரில் நடுநிலைப் பள்ளியொன்றில் கல்விகற்கத் தொடங்கிப் பாளையங்கோட்டையில் பள்ளியிறுதிப் படிப்பை முடித்துப், பின்னர்த் தமிழணங்கை வணங்கித் தாமே இலக்கண இலக்கியங்கள் பயின்று 24 ஆம் அகவையில் தமிழ்ச் சங்கப் பண்டிதர் தேர்வில் தேறி, தமிழாசிரியர் பணி மேற்கொண்டு 23 ஆண்டுகள் உயர்நிலைப்பள்ளியிலும், 12



ஆண்டுகள் கல்லூரியிலும் பணியாற்றியுள்ளார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் எம். ஏ. பட்டம் பெற்றுப் பேராசிரியராகத் திகழும் இவர், தற்போது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சித் துறையில் வாசகராக (Reader)ப் பணியாற்றி வருகிறார். கடந்த முப்பது ஆண்டுகளாக மொழியாராய்ச்சியில் ஈடுபட்டுள்ள இவர், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகராதியின் வழூஉக்களைக் களைந்து வருவதோடு, தனித்தமிழுக்கு அளித்து வரும் ஆக்கமும் அளப்பரிது.

## ஆய்த எழுத்துவகைமை

'எழுத்தெனப்படுப
அகர முதல னகர விறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே'

'அவைதாம்
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன'

என்னும் தொல்காப்பிய நூற்பாக்களால் (நூன்மரபு, 1, 2) முதலெழுத்து முப்பதென்பதும், சார்பெழுத்து மூன்றென்பதும், இவற்றுள் முன்னையவே சிறந்தனவென்பதும் பெறப்படும்.

"முன்னின்ற சூத்திரத்தாற் சார்ந்துவரன் மரபின் மூன்றலங்கடையே எழுத்தெனப்படுப முப்பஃதென்ப எனவே, சார்ந்துவரன் மரபின் மூன்றுமே சிறந்தன; ஏனைய முப்பதும் அவ்வாறு சிறந்திலவெனவும் பொருடந்து நிற்றலின், அதனை விலக்கிச் சிறந்த முப்பது எழுத்தோடு இவையும் ஒப்ப வழங்கு மென்றற்கு, எழுத்தோரன்ன என்றார்" என்று நச்சினார்க்கினியர் கூறுதல் காண்க.

இனி, "இப் பெயர்களே பெயர். இம்முறையே முறை. தொகையும் மூன்றே" என்று நச்சினார்க்கினியர் தேற்றேகாரமிட்டுக் கூறுவதாலும், நன்னூலார் சார்பெனக் கூறிய பத்து எழுத்துக்களுள் ஏனைய வேழும் தொல்காப்பியர் காலத்திலுமிருந்தமையாலும், தொல்காப்பியர்க்கும் நச்சினார்க்கினியர்க்கும் நன்னூலார் கொள்கை யிருந்ததில்லை யென்பது தெளிவாம்.

## ஆய்தப்பெயரும் ஒலியும்

தொல்காப்பியர் ஆய்தத்தைக் குறிக்கும்போதே முப்பாற்புள்ளி என அதற்கு மற்றுமொரு பெயர் கொடுத்தார். பிற்காலத் தாசிரியர் வேறுஞ் சில பெயரிட்டு வழங்கினர். "ஆய்தம் என்பது அஃகேனம். அஃகேனமெனினும் ஆய்தமெனினும் தனிநிலை யெனினும் புள்ளி யெனினும் ஒற்றெனினும் ஒக்கும். என்னை?

'அஃகேன மாய்தந் தனிநிலை புள்ளி
யொற்றிப் பால வைந்து மிதற்கே'

என்றார் மயேச்சுரர்" என்று காரிகையுரையாசிரியரான குணசாகரரும், "ஆய்தம் எனினும், அக்கேனம் எனினும், தனி

நிலை எனினும், புள்ளி எனினும், ஒற்று எனினும் ஒக்கும். என்னை ?

'அக்கேன மாய்தந் தனிநிலை புள்ளி
யொற்றிப் பால வைந்து மிதற்கே'

என்றார் அவிநயனார்'' என்று யாப்பருங் கலவிருத்திகாரரும் கூறுவது காண்க.

அவிநய நூற்பாவில் அக்கேனமென்பது ஏட்டுப் பிழையாயிருத்தல் வேண்டும். பழைய திண்ணைப் பள்ளிப் பாட முறையில் ஆய்தப்பெயர் அதன் ஒலி வடிவொட்டி அஃஃகன்னு என வழங்கிற்று.

ஆய்தவொலி

ஏனையிரு சார்பெழுத்துப் போன்றே, ஆய்தமும் ஒரு முதலெழுத்தின் திரிபென்பது, "இதற்கு (ஆய்தத்திற்கு) வடிவு கூறினர், ஏனையொற்றுக்கள் போல உயிரேறாது ஓசை விகாரமாய் நிற்பதொன்றாகலின்," என்னும் நச்சினார்க்கினியர் உரையாலும்,

'சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்துவெளிப் படுத்த ஏனை மூன்றும்
தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி
யொத்த காட்சியிற் றம்மியல் பியலும்'

என்னும் தொல்காப்பிய நூற்பாவாலும் (பிறப்பியல், 19), சார்பெழுத்து என்னும் பெயராலும், அறியப்படும். ஆயின், எவ்வெழுத்தின் திரிபெனின், ககரத்தின் திரிபாம் என்க.

ஆய்தம் தொன்றுதொட்டு மெல்லிய ககரமாகவே ஒலிக்கப்பட்டு வருவதாலும், ஏனச் சாரியை பெற்றக்கால் அஃகேனம் எனக் ககரத்தோ டியைந்தே வழங்குவதாலும், பண்டையேட் டரிச்சுவடிகளில் க—ஃ என்று எழுதப்பெற்றமையாலும் உயிருக்கும் மெய்க்கும் இடையில் வைக்கப்பட்டிருப்பினும் ககரத்தை யடுத்திருப்பதாலும், போப்பையர் தம் தமிழிலக்கணத்தில் 'The Guttural' என்றும், கால்டுவெல் தம் ஒப்பியலிலக்கணத்தில் "guttural 'h'" என்றும் குறித்திருப்பதாலும், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதியில் அதன் அமைப்பு முறையை விளக்குமிடத்து 'The aspirate aytam' என்று குறித்திருப்பினும், வரிபெயர்ப்பில் (Transliteration) ḵ என்னுங் குறியை ஆள்வதாலும் ஆய்தவெழுத்து ககரத்தின் திரிபே யெனத் தெற்றென வறிக.

ஆரிய வன்மை சான்ற வல்லெழுத்துக்கள் தமிழுக்கின்மையின், ஆய்தத்தை வடமொழி ஹகரம் (h) போன்ற மூச்சொலியாகக் கொள்வது முற்றும் தவரும். இனி வடமொழி விசர்க்கம் (.) போன்ற ஒலியெனக் கொள்ளின், ஒலியளவில் விசர்க்கம் ஆய்தத்தை யொத்திருப்பினும், அதில் அகரக் கூறும் கலந்திருப்பதால், அதுவும் பொருந்தாதென்க. ஆய்தம் எவ்வகையினும் உயிரேறப்பெரு எழுத்தாம். "குறியதன் முன்ன ராய்தப் புள்ளி" என்னும் நூற்பா வுரையில், "ஆய்தமான புள்ளி, 'ஆய்தப்புள்ளி' என்றார், இதனையும் ஒற்றின்பாற் சார்த்துதற் கென்க. ஒற்றேல் உயிரேறப் பெறல் வேண்டுமெனின், சார்பெழுத்தாதலின் உயிரேறப் பெருதெனக் கொள்க'' என மயிலைநாதர் உரைத்திருப்பதைக் காண்க.

"ஆய்தம் ("அற்றாலளவறிந் துண்கு வஃதுடம்பு'' முதலிய இடங்களில் உயிர் போல அலகு பெற்றும், "தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்'' முதலிய இடங்களில் மெய்போல அலகு பெருமலும் உயிர்மெய்களை ஒருபுடை யொத்து) உயிருமாகாமல் மெய்யுமாகாமல் (அலிபோலத்) தனிநிற்றலால், 'தனிநிலை' எனப்பட்டது'' என்றார் நன்னூற் காண்டிகை யுரைகாரராகிய சடகோபராமானுசாச்சாரியார். "அற்றாலளவறிந் துண்க வஃதுடம்பு'' என்னும் பாடத்திற்கு ஆய்தம் அலகு பெறல் வேண்டாமையானும், அவ்வாச்சாரியாரே "உயிரும் மெய்யும் தம்மிற் கலத்தல் போல ஆய்தம் ஓரெழுத்தோடுங் கலத்தலின்றித் தனி நிற்றலால் தனிநிலை யெனப்பட்டதென்றலு மொன்று,'' எனக் கூறியிருத்தலானும் அவ்வுரை பொருந்தாதென்க. ஆய்தம் ககரத்தின்பாற்பட்ட ஒரு நுண்ணிய வொலியாயிருத்தல் பற்றியே அப்பெயர் பெற்றதென் றறிக.

'ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்'

என்பது தொல்காப்பியம் (உரியியல், 32). ஆய்தப் பெயர்க்காரணங் கூறுமிடத்து,

"that which is subtle, minute" என்றார் கால்டுவெலும்.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழக ராதி, தான் கொண்ட குறிக்கோட்கொப்ப, தமிழ்ச் சொற்களைத் தமிழ்வழி ஆராயாது, ஆய்தம் என்னும் தென்சொல்லைச் சார்ந் திருக்கை யென்று பொருள்படும் ஆசிரிதம் என்னும் வடசொற் றிரிபா யிருக்கலா மெனக் கருதி மயங்குகின்றது. குற்றிய லுகரம் குற்றியலிகரம் ஆய்தம் எனச் சார் பெழுத்து மூன்றாயிருக்க, அவற்றுள் ஒன்றிற்கு மட்டும் சார்ந்திருக்கைப் பொருட் சொல் எங்ஙனம் பெயரா யமைந்திருத்தல் கூடும்? வடமொழியைத் தமிழுக்கடிப்படை யாய் வைத்து, ஒலி முறைச் சொல்லியல் (Sound Etymology) பற்றித் தென் சொற்கள் பலவற்றை வடசொல்லெனக் கூறுவது, வடமொழியாளர்க்குத் தொன்று தொட்ட வழக்கமாயிருந்து வருகின்றது.

இனி, ஆய்தம் என்னும் தென் சொல்லை ஆயுதம் என்னும் வடசொல் லொடு மயக்கி, அடுப்புக்கூட்டும் கேடகம் மூவிலைச் சூலம் ஆகிய படைக்கலமும் போல் வரிவடிவு கொண்டிருப்பதால் ஆய் தம் எனப் பெயர்பெற்றது எனக் காரணங் காட்டுவாரும் உளர். ஆய்தம் என்னும் சொல் ஓரிடத்தும் ஆயுதம் என எழுதப் படாமையையும், ஆயுதம் என்னும் சொல் லும் ஆய்தம் என எழுதப்படாமையையும், நோக்குக. ஆரியர் நாவலந் தேயத்திற்கு வருமுன்னரே, ஆய்தவெழுத்தும் அதன் பெயரும் குமரிநாட்டில் தோன்றிவிட்டன என்னும் உண்மையையும் அறிந்து கொள்க.

இனி, யாப்பருங்கலவிருத்தி யுரை காரர் "உயிரே மெய்யே" என்னும் நூற்பா வுரையில்,

"சார்பிற் றேன்றும் தன்மைய" என்று மிகுத்துச் சொல்லிய வதனால், அகரத்தொடு யகரவொற்று வந்தும் ஆய் தம் வந்தும் ஐகாரத்தின் பயத்தவாய் நிற்கும்......................

'ஆய்தமும் யவ்வு மவ்வொடு வரினே
ஐயெனெழுத்தொடு மெய்பெறத் தோன்றும்'

என்றார் அவிநயனார்.

"வரலாறு....... ..........கஃசு, கஃதம், கஃசம் என அகரத்தொடு ஆய்தம் வந்து கைசு, கைதம், கைசம் என ஐகாரத்தின் பயத்தவாயினவாறு....... ..............." என உரைத்திருப்பது, ஆய்தத்தைப் பொறுத்த மட்டில் உத்திக்குப் பொருந்துவதன்று. கஃசு முதலிய மூன்றும் கைசு முதலிய மூன்றாகத் திரிந்திருக்கலாமேயன்றி, ஆய் தம் யகரமெய் யொத்தொலித் திருத்தல் முடியாது. ஒருகால், கள் என்பது கஃசு முதலியவற்றின் அடியாகலின், அது கய் எனத் திரிந்திருக்கலாம். ஒப்புநோக்க : தொள் - தொய், பொள் - பொய்.

### ஆய்தப் பிறப்பு

"சார்ந்துவரி னல்லது" என்னும் சார்பெழுத்துப் பிறப்பு நூற்பாவின் ஆற்றொழுக்கைக் கொண்டுகூட்டாகச் சிதைத்து, இருகூறாக்கி, "சில எழுத்துக் களைச் சார்ந்து தோன்றினல்லது தமக் கெனத்தோன்றுதற்கு ஓரியல்பிலவென்று, ஆராய்ந்து வெளிப்படுக்கப்பட்ட எழுத் துக்கள் தம்முடைய பிறப்பியல்பு மூன்றினை யுங் கூறுங்கால், தத்தமக்கு உரிய சார் பாகிய மெய்களது சிறப்புப் பிறப்பிடத்தே பிறத்தலோடு பொருந்தி நடக்கும்" என் றும், "ஒழிந்த ஆய்தந் தமக்குப் பொருந் தின நெஞ்சு வளியாற் பிறக்கும்" என்றும் உரைத்தனர் நச்சினார்க்கினியர்.

இந் நூற்பா முழுவதையும் ஒரே கூற்றாகக் கொண்டு, 'சில எழுத்துக்களைச் சார்ந்துவரினல்லது தமக்கெனத் தனி யியல்பில்லாதனவென ஆராய்ந்து வெளிப்படுத்தப்பட்ட (குற்றியலுகரமும் குற்றியலிகரமும் ஆய்தமுமாகிய) மற்ற மூன்று எழுத்துக்களும், தத்தம் முதலெழுத் துக்களின் பிறப்பொடுபொருந்தி அவற்றே டொருபுடை யொத்த தோற்றத்தினவாய்த் தத்தம் சிறப்புத் தன்மையுடன் நடக்கும்' என்றுரைப்பதே பொருத்தமாம்.

"இனி ஆய்தந் தலைவளியானும் மிடற்றுவளியானும் பிறக்குமென்பாரும் உளர்" என நச்சினார்க்கினியர் கூறியிருப் பது கவனிக்கத்தக்கது.

### ஆய்தச் சாரியை

'காரமுங் கரமுங் கானெடு சிவணி
நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை'

என்னும் எழுத்துச்சாரியை நூற்பாவில் (புணரியல், 32) ஆய்தவெழுத்திற்குரிய சாரியையை ஆசிரியர் கூருவிடினும், "நேரத்தோன்றும் எனவே நேரத்தோன்ரு தனவும் உளவாயின. அவை ஆனம், ஏனம், ஓனம் என்க. இவை சிதைந்த வழக்கேனுங் கடியலாகாவாயின" என்று உரையாசிரியர் (நச்சினுர்க்கினியர்) கூறி யிருப்பது கவனிக்கத்தக்கது. தொல்காப்பிய நூலிற் கூறப்படாத சில இலக்கணங்கள் உரையாசிரியராற் கொள்ளப்பட்டுள்ளன. அவற்றுள் ஆய்தவெழுத்துச் சாரியையும் ஒன்று. இது உரையிற் கோடல் என்னும் உத்திபற்றியது.

## ஆய்தச் சார்பு

ஆய்தம், குறிலுக்கு முன்னும் வல்லின வுயிர்மெய்க்குப் பின்னுமாக அவ்விரண் டிற்குமிடையில் வருவதே இயல்பாம்.

> 'குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
> உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே'

என்ருர் தொல்காப்பியனுர் (மொழிமரபு, 5).

> 'ஆய்தந் தானே குறியதன் கிழ்த்தாய்
> வலியதன் மேல்வந் தியலு மென்ப'

என்ருர் கையனுர்.

இவ்விதிக்கு, எஃகு, கஃசு, கஃடு, கஃது, கஃபு, கஃறு, அஃது, இஃது, உஃது என நச்சினுர்க்கினியரும்; அஃகம், வெஃகா, எஃகு, கஃசு, கஃடு, கஃது, கஃபு, கஃறு என யாப்பருங்கல விருத்தியுரையாசிரி யரும்; எஃகு, கஃசு, கஃடு, கஃது, கஃபு, கஃறு எனக் குணசாகரரும்; எஃகு, கஃசு, கஃடு, கஃது, கஃபு, கஃறு என மயிலை நாதரும் எடுத்துக்காட்டினர் இவை தனிச் சொற்கள். அஃறிணை, முஃடீது, அஃகடிய என்பன தொடர்ச்சொற்கள்.

> 'விலஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாத
> ரிலஃஃகு முத்தி னினம்'

என இவ்வாறு குறிலிணைக் கீழும் ஆய்தம் வருமாலோவெனின், அன்ன இயல் பாகவே ஆய்தமாய் நிற்பனவல்ல. ஓசை நிறைத்தறபொருட்டு ஒற்றின்வழி ஒற்ருக் குதலின், ஈண்டு ஆய்தமும் ஒற்ருய் வரு மெனக் கொள்க" என்று மயிலைநாதர் கூறியிருப்பது இங்குக் கவனிக்கத்தக்கது.

"லளஃகான்" (நூன்மரபு, 24) "ணனஃகான்" (ஷை 26) எனத் தொல்காப் பியத்தில் வந்திருப்பவை உம்மைத் தொடர்களாதலின், குறிலிணைக்கீழ்வந்தன வாகா. ஆயின். "இளஃகுமே" எனச் சிந்தாமணியில் (149) வந்திருப்பது விதிக்கு மாருதலின், இதனையும் ஒற்றில் வழி யொற்றெனவே கொள்ளல் வேண்டும்.

## ஆய்தம் தோன்றும் வகை

லகரத்திரிபு, வகரத்திரிபு, ளகரத்திரிபு, ஒற்றில் வழியொற்று, சாரியைப்புணர்ப்பு என ஆய்தம் தோன்றும் வகை ஐந்தாம்.

> 'தகரம் வருவழி யாய்த நிலையலும்
> புகரின் றென்மனுர் புலமை யோரே'
> (புள்ளிமயங்கியல், 74)

என்பது லகரத்திரிபு. கஃறீது, கற்றீது என்பன எடுத்துக்காட்டு. இவை உறழ்ச்சி. அஃறிணை பஃறுளி என்பன உறழ்ச்சி யில்லாதன.

> 'வேற்றுமை யல்வழி யாய்த மாகும்' (பு.ம.84)

என்பது வகரத்திரிபு. "அஃகடிய, இஃகடிய, உஃகடிய, சிறிய, தீய, பெரிய" என்பன எடுத்துக்காட்டு.

> 'ஆய்த நிலையலும் வரைநிலை யின்றே
> தகரம் வரூஉங் காலை யான' (பு. ம. 104)

என்பது ளகரத்திரிபு. முஃடீது, முட்டீது என்பன எடுத்துக்காட்டு. இவை உறழ்ச்சி.

ஒற்றில் வழியொற்று முன்னர்க் காட் டப்பெற்றது.

அஃகான், மஃகான், வஃகான் என்பன சாரியைப் புணர்ப்பு.

'அஃது' என்பதன் குறுக்கமே 'அது' எனத் தெரிதலின், 'செய்வஃது' என்பது 'செய்வது' என்பதன் விரித்தல் திரிபெனக் கொள்வது சரியன்று.

வகரத்திரிபும் சாரியைப் புணர்ப்பும் ஒத்தியலமைவு (Assimilation) என்னும் நெறிமுறை பற்றியன.

## ஆய்தம் வரும் தனிச்சொற்கள்

ஆய்தச் சார்பையும் ஆய்தந் தோன் றும் வகையையும் துணைக்கொண்டு ஆய்

தம் வரும் தனிச்சொற்களை ஆய்ந்து பார்ப்பின், அவற்றுட் பெரும்பாலன லகர ளகரத் திரிபாகவே போதரும். இத் திரிபு குமரிநாட்டின் ஒரு மருங்கு தோன்றி யிருக்கலாம்.

எ - டு :

**அஃகு**

அல்குதல்=சுருங்குதல், குன்றுதல், நுணுகுதல்.

அல்கு>அஃகு.

**அஃது, இஃது, உஃது, எஃது**

இவை, அல்+து,இல்+து,உல்+து, எல்+து என்னும் புணர்ச்சியாகத் தோன்றுகின்றன. அன்று இன்று என்று என்னும் காலச் சுட்டுவினைச் சொற்களின் அடிகளும், அல் இல் எல் என்பனவே. இவற்றை, அல்லி இல்லி எல்லி என்னும் கன்னட இடச்சுட்டு வினைச்சொற்களொடும், அன்று (அல்+து) இன்று (இல்+து) நன்று (நல்+து) என்னும் ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்றுச் சொற்களொடும், ஒப்புநோக்குக.

அல் + து = அஃது > அத்து > அது. இங்ஙனமே ஏனையவும்.

" அத்தொடு நின்றது அலைச்சல், கொட்டொடு நின்றது குலைச்சல்," "எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" என்பன பழமொழிகள்.

**பஃது**

பல்+து=பஃது>பத்து>பது.

பல்>பன்=பத்து. ஒ. நோ: ஆல்> ஆன், வெல்>வென்.

பன்+இரண்டு=பன்னிரண்டு.

பன்>பான்=பத்து. இருபான் முப்பான் முதலிய எண்ணுப் பெயர்களை நோக்குக.

முதன் முதலாகத் தோன்றிய ஒன்று முதற் பத்து வரைப்பட்ட எண்ணுப்பெயர்களுள், ஒன்பதிற்கு மேற்பட்ட எண்ணைப் பல என்னும் கருத்துப்பற்றிப் பல் என்னும் அடியினின்று அமைத்ததாகத் தெரிகின்றது.

**எஃகு**

இள்(>இள>இளகு)>எள்>எள்கு> எஃகு=உருக்கு, அதாவது இளகின தாது (உலோகம்). எஃகு — எஃகம் = உருக்கினாற் செய்த வேல்.

**பஃறி**

பல்+தி=பஃறி (பன்றி)=பன்றி வடிவான ஒருவகைப் படகு. இதிற் சரக்கேற்றிச் செல்வதை இன்றும் கூவம் முதலிய ஆறுகளிற் பார்க்கலாம்.

**வெஃகு**

பிள் — பிண்—பிணு—பிணவு — பிணவல். பிணு—பிணை.

பிள்—பெள்—பெண் — பேண்—பேடு —பேடை

பெள்—பெட்டை—பெடை.

பெள்—பெட்பு=விருப்பம்.

பெள் — வெள் — வெய் — வெய்ம்மை —வெம்மை=வேண்டல்.

வெள்—வேள்—வேண்—வேண்டு.

வெள்—வெள்கு—வெஃகு.

வெஃகுதல்=பிறன்பொருளை விரும்புதல்.

**கஃறு**

கல்—கால்=கருமை.

"கால்தோய் மேனிக் கண்டகர்"

(கம்பரா. வானர. 21)

கல்—கள்—காள்—காளம்=கருமை.

கள்+து =கஃறு (கருமை)

"கஃஃறென்னுங் கல்லதரத்தம்"

(தொல். எழுத். 40, உரை)

கஃசு, கஃடு, கஃது, கஃபு முதலிய பிற ஆய்தச் சொற்களின் வேர்ப்பொருள்கள் மறைந்துபோயிற்றென்க.

**ஆய்த வரிவடிவு**

ஆய்தவொலி, அடுப்பில் நெருப்பை அணைக்கும்போது உண்டாகும் ஓசையை ஒருபுடை ஒத்திருப்பதால், ஒருகால், அதன் வரிவடிவு அடுப்புக் கூட்டுப்போல் முப்புள்ளி வடிவாய் அமைக்கப்பட்டிருக்கலாம்.

முடிபு

இதுகாறும் கூறியவற்ருல், ஆய்தம் தமிழெழுத்தென்றும், அது லகர ளகர வகரத் திரிபான நுண் ககர மெய்யென்றும், ஒன்ருயிருத்தலும் உயிரேருமையும் பற்றித் தனிநிலையெனப் பட்டதென்றும், அறிந்து கொள்க. இனி ஆய்தவெழுத்தைத் தமிழெழுத்துக்களின் முன்னும் பின்னும் இட்டு, ஜ, ஷ, F, Z, முதலிய பிறமொழியெழுத்துக்களை இக்காலத்துச் சிலர் குறிப்பது, தமிழியல்பிற்கு மாருனதும் தொல்லாசிரியர் கட்டளைக்கு முரணுனதுமாகு மென்றும், பிறமொழிச் சொற்களையெல லாம் "எழுத்தொடுபுணர்ந்த" சொல்லாகவே திரித்தெழுதல் வேண்டுமென்றும், அல்லாக்கால் தமிழ் நாளடைவில் வேறு மொழியாக மாறிவிடுமென்றும், அறிந்து கடைப்பிடிக்க. மேலும், ஆய்தவொலிக்கு அயன் மொழி யொலிகளைக் குறிக்கும் ஆற்றலில்லையென்றும், ஆய்த வரிவடி வெழுதுவதும் அயன் மொழி வரிவடி வெழுதுவதும் ஒன்றே யென்றும் எழுத்தென்பது உண்மையில் ஒலியேயன்றி வரிவடிவன்றென்றும், தெற்றெனத் தெரிந்துகொள்க.

---

## ஆய்தம் வழங்கப்பட்டமை

வடமொழியில் உள்ள ஹ தமிழில் இல்லை எனினும், அதனினும் நுட்பமான ஒலியைத் தமிழில் ஆய்தம் தர வல்லது. ஆய்தம் என்ருல் நுண்ணியது என்பது பொருள். ஆய்தம் மிகுந்த வண்ணத்தைத் தொல்காப்பியனுர் நலிபு வண்ணம் என்பார். வல்லின மெய்கள் நலிந்து - நுண்மையுற்று - ஒலித்தற்கு ஆய்தம் வருகிறது எனலாம்.

ஆய்தம் தொடக்கத்தில் ஒரு தனி யொலியாகவும் (Phoneme) தனி வடிவெழுத்து (Grapheme) உடையதாகவும் இருந்திருத்தல் இயலாது. க ச ட த ப ற என்னும் ஆறு வல்லொலிகளையும் மெல்லொலிகளாக்க அது வழங்கியிருத்தல் கூடும். காலப்போக்கில் அதன் இயல்பை உணராமல், தொல்காப்பியனுர் அதனைச் சார்பெழுத்து எனக் குறிப்பிட்டதையும் கருதாமல் அதற்கு ஒரு தனி வடிவம் தந்து எழுதத் தொடங்கியிருக்கலாம். அவ்வாருயின், உயிரெழுத்துக்கள் முதலொலிகளாக (Phonemes) வழங்க, அவற்றுள் முன்னண்ண உயிர்களின் (இ ஈ எ ஏ ஆகியவற்றின்) சார்பொலியாகக் (Allophone) குற்றியலிகரமும், பின்னண்ண உயிர்களின் (உ ஊ ஒ ஓ ஆகியவற்றின்) சார்பொலியாகக் குற்றியலுகரமும் அமைந்ததுபோல், மெய்களுள் வல்லினமாகிய ஆறு முதலொலிகளுக்கும் (Phonemes) சார்பொலிகளாக (Allophones) வருவனவற்றை உணர்த்த ஆய்தம் வழங்கப்பட்டிருக்கவேண்டும் எனக் கொள்ளலாம்.

இது வடமொழி விஸர்க்கத்தோடொத்தது என்றும், இலக்கணக்காரரின் படைப்பு எனச் சிலர் கூறுவர் என்றும் கால்டுவெல் எழுதியுள்ளார். அவை உண்மை அல்ல. தொல்காப்பியனுர் இதனைச் சார்பெழுத்து எனக் கூறுவதனுலும், புள்ளி வடிவிற்று என்பதனுலும், இலக்கிய வழக்கில் பயின்று இடம் பெற்றிருத்தலினுலும் இது தமிழ்க்கு உரிய ஒலியே ஆகும்.

—டாக்டர், மு. வரதராசனுர், "மொழி நூல்",

# அமைதியும் இன்பமும்

[திரு. க. கோவிந்தராசனார்]

*சென்னை, மாநிலக் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராகத் தொண்டாற்றி வரும் இவர், தென்னார்க்காடு மாவட்டம், தில்லைக்கருகிலுள்ள மெய்யாத்தூரில் 15-9-1913 இல் தோன்றினார். இவருடைய பெற்றோர் கணபதியா பிள்ளையும் இரத்தினத்தாச்சியும் ஆவர். கார்காத்த வேளாளர் குலத்தினர். தில்லையிலுள்ள இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப் பள்ளியிலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் முறையாகப் பாடம் பயின்று 1936 ஆம் ஆண்டு*



*தமிழில் எம். ஏ. பட்டம் பெற்றனர். 1939 முதல் சென்னை மாநில அரசினர் கல்லூரிகளிலும், சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியிலும் தமிழ்த் துறைத் தலைவராகப் பணியாற்றி வந்துள்ளார். சிங்கப்பூர், மலேயா முதலிய நாடுகளிலெல்லாம் தமிழ் பரப்பும் தொண்டாற்றியவர். மாணவருளம் உவக்கும் வண்ணம் பாடஞ்சொல்வதில் வல்லவர். தமிழ்ச் செய்யுட்களை இசையோடு பாடிக் கேட்டார்ப் பிணிக்கும் தன்மையர். சிறந்த எழுத்தாளர்.*

பாரோர் ஏத்துஞ் செல்வமும் இன்பமும் எப்போதும் இணைந்திருக்கும் என்பதற்கில்லை. இவ்வுலக இன்பவாழ்க்கைக்கு வேண்டுவன எல்லாம் ஒருங்கே பெற்றிருந்தும் அலைகடல் துரும்பென அமைதியற்று அவலமும் கவலையும் மிக்குக் கையற்று ஏங்கிக் கண்ணீர்க்கடல் மூழ்கிக் காலங்கழிக்கும் மாந்தர் பலராவர். இயற்கையன்னை ஒருவனது இவ்வுலக இன்பவாழ்விற்கு வேண்டிய பொருள்கள் பலவற்றை உவந்தளித்துள்ளாள்; எனினும் பேராசையுற்று மனவமைதியற்று உழலும் ஒருவனுக்கு அவளும் உதவ வல்லளோ! அமைதியை அவனே ஆக்கிக் கொள்ளவேண்டும். இவ் வுலகத்துள் கவலையும் துன்பமுமாம் எருவின்றித் தழையின்றி விளையும் வெற்றிகளும் உண்டோ !

நீலத்திரைக்கடலும், செக்கச்சிவந்த செவ்வானமும், வகைவகையான வண்ணங்கள் நிறைந்த வானவில்லும், மைஞ்சு தழுவிய மாமலைகளும், பாடிவரும் யாறுகளும், நாடிடும் நாட்டங்களை வஞ்சித்திடும் தீஞ்சுவைத் தெண்ணீர்ச் சுனைகளும், ஆசைபெற விழிக்கு மான்களுமென இயற்கையின் அழகு பலவகையில் வேறுபட்டுத் தோன்றும். இவை எல்லாம் ஒருவனை மகிழ்ச்சியுறச் செய்யும் என்று உறுதியாகச் சொல்வதற்கில்லை. ''சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்'' என்றது போல் மகிழ்ச்சியும் மனப் பழக்கத்தால் அமையும்.

தன்னைப் பற்றியே ஒருவன் தினமும் மிகுதியாக எண்ணுதல் ஆகாது; தனக்காகவே இவ்வுலகம் என்பதும் தகாது. பிறரும் இவ்வுலகத்து உண்டு என்ற எண்ணம் வேண்டும். கானலை நீர் என்று எண்ணி, ஓடி எய்த்து ஒழியும் மான்போல் இன்பம் நாடி, இருக்கும் இடம் அறியாது ஓடி அலைந்து அழியவேண்டாம். இருந்த இடத்தேயே இருந்தபடி இருந்து இன்ப வாழ்வு வாழத் தயாராக இருக்கவேண்டும்.

சிரித்து வாழத் தெரியவேண்டும். மனிதனுக்குத்தான் சிரிக்கத் தெரியும்; மற்ற விலங்கினங்கள் முதலியவற்றிற்குச் சிரிக்கத் தெரியாது. விலாப்புடைக்கச் சிரிக்கும்போது எழும் இன்ப ஓசையைக் காட்டிலும் செவிக்கும் சிந்தனைக்கும் இன்பம் தருவது வேறு என்? உள்ளத்தே அழுந்திக்கிடக்கும் பெருஞ்சுமையை நீக்க வல்லது நகையாகும். எனவேதான் வள்ளுவரும்,

'இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல்'

என்றார்.

மக்களுள் சிலர் எப்போதும் எதிலும் குறையினையே கண்டு முணுமுணுத்துக் கொண்டு இருப்பர். பூவார் பைஞ் சோலையே யன்றிப் பாலைவனத்தேயும் மகிழ்ந்திருப்பர் சிலர்; இராமன் இருக்கு மிடமே அயோத்தி என அதனை ஆக்கிக் கொள்வர்.

கருங்கடல் திரைகிழித்து எழும் செஞ் ஞாயிற்றின் வருகை கண்டு உலகம் உவப் படையும், பூங்கொடிகள் பூத்து அதனை வரவேற்கின்றன. கதிரவன் வருகையால் காய்களும் கனிந்து கனியாகின்றன. நிகழ் வன எல்லாம் நன்மைக்கே என்று கொண்டு எதையும் புன்முறுவல் பூத்த முகத்துடன் ஏற்று மகிழும் பண்பு வேண் டும். இத்தகைய அரிய பண்பினை இராமன் பால் கண்ட கம்பநாடரும் தம் காவியத் தில் சீதை வாயிலாக வெளியிடுகின்றார். இதனை,

'மெய்த்தி ருப்பதம் மேவென்ற போதினும்
இத்தி ருத்துறந் தேகென்ற போதினும்
சித்தி ரத்தி னலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருக்கு முகத்தினை உன்னுவாள்'

இவ்வடிகளால் உணரலாம்.

இத்தகைய பண்பு ஒருவன்பால் இயல் பாக அமைந்துளது எனின் அது பிற நற் பண்புகள் எல்லாவற்றையும் நன்கு வளர்க்கவல்லது. முல்லைச்சிரிப்பால் மனைவியையும் மக்களையும் மற்றவரையும் மகிழச்செய்வது ஒவ்வொருவரது கடமை யாகும். சிலருடைய குறுநகையும், குரல் ஒலியும், தோற்றப் பொலிவும், கூடிக் குலவி யிருக்கும் எல்லோரையும், செங்கதிரோன் தன் கதிர்த்தொகை, பட்ட எல்லாவற்றை யும் பொன்போல் விளங்கச்செய்வது போல், மகிழ்ச்சியின் எழில் உருவங்களாக மாற்றிவிடுவதைக் காணலாம். வாளால் அறுத்துச் சுட்டு மருந்திடுகின்றான் மருத் துவன்; எனினும் அம் மருத்துவன்பால் நோயாளன் மீளாத காதல் கொள்வது ஏன்? இடும் மருந்தைவிட அவனது கருணைகூர் உள்ளமும், இன்சொல்லும், புன்முறுவல் பூத்து விளங்கும் முகமும் அப் புண்ணை ஆற்றும் ஆற்றல்வாய்ந்தன அல்லவோ!

சிலர், நல்லன அல்லன எல்லாவற் றிற்கும் நகைத்தல் என்பது அறியாமை யாகுமென்பர். நகைப்பவர்க்கு எண்ணிப் பார்க்கத் தெரியாது என்பதில்லை. எண்ணிப்பார்த்தால் நன்கு சிந்தித்துத் தெளியவல்லார்க்கே நன்றாக நகைக்கத் தெரியும் என்பது புலனாம். சிலருக்கு அவர்கள் பிறப்பே ஒரு தண்டனைபோல் அமைகிறது. இவர் துன்பமே யன்றி இன்பம் ஒருநாளும் தமக்கில்லை என ஏங்கு வர். இத்தகைய மனநிலை, உண்ண உண வின்றி உடுக்க உடையின்றித் தங்க நிழ லின்றி வாடும் வறியவர்க்கே உண்டாம் என்பதில்லை. இன்பத்திற்கேதுவாம் என எண்ணும் பொருளும், எழிலும், ஓயாத துன்பத்திற்கும் ஏதுவாகும். தோற்றமுண் டேல் மரணமுண்டு; இன்பமுண்டேல் துன்பமும் உண்டு. உலகத்துப் பிறந்த தால் பிறந்த துன்பம் பெருங்கடல் அனையது. பெறும் இன்பம் நீர்ப்புள்ளி யனையது. தினையளவு துன்பத்தையும் சிலர் பனையளவாகக் கருதிப், பெரிதும் வருந்துவர். தம்முடலில் சிறுபுண் படி னும், ஈச்சிறகன்ன தோலறினும் உயிர் நீக்கக்கூடிய பெரும்புண் எனக் கருதிச் சாவை எதிர்நோக்கி நிற்பாரும் உண்டு. காலம் பெருவலி படைத்தது; உற்ற புண்ணையும் ஆற்றவல்லது. காலம் புண்ணையே அன்றித் துன்பத்தையும் ஆற்றவல்லது. உற்ற நண்பர் பெரும் பிரிவுற்றார் என்ற செய்திகேட்டு எழுந்த துன்பம் நாளாக ஆகக் குறைந்து பின் இல்லையாம்.

நெஞ்சில் கனல்மணக்கும் பூக்களையும், பல விந்தைச் சுவையுடைய கனிகளை ஏந்தி நிற்கும் மரங்களையும், எங்குப் பார்க்கினும் நீளக்கிடக்கும் இலைக்கடல்களையும், சான் றோர் உள்ளமெனத் தெளிந்த நீருடைய ஆறுகளையும் பிறவற்றையும் கொண்டு விளங்கும் இவ்வுலகத்தே தான் வாழ்கின் றோமெனினும் அமைதியான உள்ளமும், இன்முகமும், குமிழ்சிரிப்பும், இன்சொல்லும் உடையோர்க்கே இயற்கை, இன்பந்தரும் வற்றா ஊற்றாய்த் தோன்றும். கத்துங்

கடல் அலைபோல் கொந்தளிக்கும் எண்ண அலைகளால் அலைப்புற்று உழல்வார்க்கும், அவர், உள்ள அமைதியை விரும்பி இயற்கை அன்னையை நாடின், அவள் ஆறுதல் அளித்து அல்லலைப் போக்கி அமைதியை அளிப்பாள்.

இசையினை உண்மையாக அனுபவித்துப் பாராட்ட வேண்டுமென்றால் இசையைப் பற்றிய அடிப்படையான அறிவு ஓரளவு வேண்டும். அதேபோன்று அழகினைப் பாராட்டவேண்டு மென்றால் அழகினைப் பற்றிய அடிப்படை அறிவு வேண்டும்; பழக்கமும் வேண்டும்.

நாய்களும், யானைகளும் கூரிய அறிவுடையன என்பர். கொலை செய்த ஒருவனைக் கண்டு பிடிப்பதில் நாய்களும் நம் காவலர்க்கு உதவுவதை நாம் அறிவோம் இத்தகைய விலங்குகளும் காலையில் கருங் கடலில் முளைத்தெழும் கதிரவனையும், செக்கர் வானத்தையும் மாலை மதியத்தையும் கண்டு மகிழ்வதில்லை.

சிலர் சிலபோது சோம்பலாக இருப்பதாகக் கூறுவர்; வாழ்க்கையில் உற்சாகமின்றிச், செய்வதற்கு ஒன்றுந் தோன்றவில்லை என்று சோம்பி இருப்பர். நல்ல உடல்நலத்தையும் வளத்தையும், கூரிய பார்வையை யுடைய கண்களையும், நுண்ணிய செவிகளையும், எஃகு நரம்புடைய கைகளையும், நல்ல ஓய்வினையும் ஆண்டவன் அளித்திருந்தும் செய்வதற்கு ஒன்றுமில்லை என்று சொல்லுவார் அவைகளைப் பெற்றிருந்தும் பெறாதவரே யாவர்.

செல்வமோ அன்றிப் பதவியோ ஒருவனுக்கு மகிழ்ச்சியினைத் தேடித் தரும் என்று சொல்வதற்கில்லை. குபேரனைப் போன்ற செல்வம் உடையவனும், கூற்றுவன் போன்ற வலியுடையவனும் ஒருவன் உளன் எனினும், அன்புடைய நெஞ்சும், அருளொழுகு கண்ணும் அமைதியுடைய உள்ளமும் பெறான் எனின் அவனுக்கு வாழ்வில் இன்பம் என்பதேது?

வாழ்க்கை இன்பத்தை முற்றிலும் அனுபவிக்க வேண்டுமென்றால் மனவடக்கம் வேண்டும். இதனையே வள்ளுவரும்,

*'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்*
*அதனின் அதனின் இலன்'*

என்றார்.

இற்றைய உலகம் சொல்லமுடியாத வேகத்தில் ஓடிக்கொண்டிருக்கிறது. உற்றுப்பெற்ற தாய்க்கும் தன் குழந்தையைப் பரிந்தெடுத்துப் பால் நினைந்தூட்ட நேரமும் இல்லை. குழந்தை எழுமுன்னர்த் தாமெழுந்து வேலைக்குச் செல்லும் பெற்றோர் இரவில் குழந்தை உண்டு உறங்கிய பின்னர் வீடு திரும்புவர். வானைக் காணாது வாழும் பயிர்போல் தாய்முகம் காணாது வளரும் குழந்தைகளும் உண்டு. பொருளாசை பிடித்தலையும் பெற்றோர் நிலை இது. எனவே இன்றைய உலகத்திற்குத் தேவையானது நல்ல ஓய்வு நேரமாகும். அவசர வேலை அரைவேலை யாகும். நல்ல வேலைக்கு நேரம் வேண்டும்; நன்கு அது பற்றிச் சிந்திக்க வேண்டும்; சிந்திப்பதற்கு அமைதியான உள்ளம் வேண்டும்.

அமைதி என்று குறிப்பிடுவது புறவமைதியை யன்று; அக வமைதியையாம். குறிப்பாக மூளைக்கும் உள்ளத்திற்கும் அமைதி வேண்டும். இன்பம் எங்கே எங்கே என்று உலகில் எங்கும் தேடித் திரியவேண்டாம். இன்பம் அங்கே இல்லை; இங்கேதான் உளது. அதாவது அகத்தே தான் அமைந்துளது. மனவமைதியே இன்பமாம். தன் குறையைத் தானறிந்து நீக்க முயல்பவனே மனிதருள் மாணிக்கமாம்; தன் குறையைத் தான் அறிந்து நீக்குவதை உணர்பவனே மனிதருள் சிறந்த வாழ்க்கை இன்பத்தை அனுபவிப்பவன் என்று கூறலாம்.

—

# புத்துயிர் ததும்பும் தமிழ்நாடும் - - புத்தகாலயங்களின் ஊழியமும்

[பத்மஸ்ரீ டாக்டர் எஸ் ஆர் ரங்கநாதன்]

*இவர் 1892 இல் சீர்காழியில் ராமாமிருத ஐயரின் தவப் புதல்வராய்த் தோன்றினார். சென்னைக் கிறித்துவக் கல்லூரியிலும் லண்டன் பல்கலைக்கழகக் கல்லூரியிலும் பயின்றார். 1924 முதல் இருபது ஆண்டுகள் சென்னைப் பல்கலைக்கழக நூலகத்தின் முதல் நூலகராகப் பணியாற்றியபின் இரண்டாண்டுகள் காசிப் பல்கலைக் கழகத்திலும் எட்டாண்டுகள் டெல்லிப் பல்கலைக்கழகத்திலும் நூலகத்துறைப் பேராசிரியராக விளங்கினார். 'இந்திய நூலக*



*இயக்கத்தின் தந்தை' எனப் போற்றப்படும் இவர், 1958 இல் அனைத்துலகப் பதிவுச் சங்கத்தின் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். உலகமெங்கும் பாராட்டப் பெறுகின்ற 'கோலன் வகுப்பு முறை' யைக் கண்டுபிடித்தவர். நூலக இயல் பற்றி ஐம்பதுக்கு மேற்பட்ட அரிய பெரிய நூல்களை இயற்றியுள்ளார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் நூலக இயல்துறையைத் தனியே நிறுவுவதற்கு ஓர் இலட்ச ரூபாய் நன்கொடையாக அளித்துள்ளார்.*

*(வெளிநாட்டுப் புத்தகாலய அனுபவம் - முதல் மந்திரி சுப்பராயன் புத்தகாலய இயக்கத்திற்குச் செய்த பண உதவி - சென்னைப் புத்தகாலயச் சங்கத்தின் தொண்டு - மந்திரி அவிநாசிலிங்கம் புத்தகாலயச் சட்டத்திற்குச் செய்த உதவி - மந்திரி கிருஷ்ணராவ் உத்தேசித்தது - பரிசீலனைக் குழுப் பற்றி முதல் மந்திரி காமராஜ் நாடாருக்கும் கல்வி மந்திரி சுப்பிரமணியத்திற்கும் வேண்டுகோள்.)*

## 1 வெளிநாட்டு அனுபவம்

1924 இல் கிரேட் பிரிட்டனில் ஊர் ஊராகச் சென்று பார்த்தேன். 120 ஊர்கள். அவற்றில் சில பெரிய நகரங்கள் சில சிறிய பட்டணங்கள். ஒவ்வோர் ஊரிலும் புத்தகாலயம் இருந்தது. பெரிய ஊர்களில் பல புத்தகாலயங்கள் இருந்தன. ஒவ்வொரு புத்தகாலயத்திலும் திரள் திரளான கூட்டம். வருகிற ஒவ்வொருவரையும் புன்முறுவலுடன் வரவேற்கும் ஊழியர்கள். மத்தியான வேளைகளில், பெண் மக்களுக்குச் சொற்பொழிவும் புத்தக விநியோகமும். மாலையில் அதுபோலவே சிறுவர்களுக்கு. சனிக்கிழமை மாலையில் முதியோரான ஆண் மக்களுக்கும் அப்படியே. அநேக கிராமங்களுக்குச் சென்றேன். அங்கேயும் புத்தகவசதி. மாதம் ஒரு முறை புத்தக வண்டிகளின் வருகை; சொற்பொழிவு; புத்தக விநியோகம்.

## 11 தமிழ் நாட்டைப் பற்றி ஏக்கம்

மனம் தமிழ்நாடு சென்றது. நம் தாய் நாட்டில் எப்பொழுது இவ்விதப் புத்தக வசதி ஏற்படும்? புத்தகாலயங்கள் ஏற்படும்? என்ற இந்த எண்ணம்–ஏக்கம் உண்டாயிற்று. சில சிநேகிதர்களுக்குக் கடிதம் எழுதினேன். ஒருவர் பதில்: "இதை நம் நாட்டார் நம்பமாட்டார்கள். சில புகைப்படங்கள் தயாரித்து வாருங்கள்," என்பது. அப்படியே செய்தேன்.

## 2 முதன் மந்திரி சுப்பராயன் உதவி

1925 இல் தாய்நாடு திரும்பினேன். டிசம்பரில் ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. கல்வி இலாகா ஊழியர் சங்கத்தின் (Non-Gazetted Educational Officer's Association) வருஷக் கூட்டம். அதன் அமைச்சர் எம் எஸ் சுந்தரேசன் என்னை அழைத்து அக் கூட்டத்தில் பேசச்

சொன்னார். முதல் மந்திரி டாக்டர் சுப்பராயன் தலைமை வகித்தார். அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் நடைபெறும் புத்தகாலயச் சேவையைப் புள்ளி விவரங்களுடன் வர்ணித்தேன்.

### 21 சுப்பராயன் கேள்வி

"உங்கள் புத்தகாலயத்தின் (சென்னை சர்வகலாசாலைப் புத்தகாலயம்) வருஷ வருமானம் என்ன?",

"15,000 ரூபாய்கள்",

"இது, ஒரு சிறிய ஊரின் புத்தகாலயத்திற்குக்கூடப் போதாதே".

"உண்மை. இதை அதிகம் செய்ய வழி ஒன்றும் தென்படவில்லை."

"மெஸ்டன் திட்டப்படி நம் நாட்டிற்குச் சில கோடி ரூபாய்கள் டில்லியிலிருந்து கிடைத்திருக்கின்றன. இன்னும் ஒரு வாரத்திற்குள் மனுக்கொடுங்கள். பணம் கிடைக்கும்".

### 22 வருமானம்

மனுப் போடப்பட்டது. இதன் மூலம் அன்று முதல் இன்று வரையில் சென்னைப் புத்தகாலயத்திற்குச் சுமார் 25 லக்ஷ ரூபாய் கிடைத்திருக்கிறது. இது தவிரக் கட்டடத்திற்கு 12லக்ஷ ரூபாய் கிடைத்தது. 2லக்ஷம் புத்தகங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. வருஷாந்திர உதவியைச் சட்டத்திலேயே சுப்பராயன் சேர்த்துவிட்டார். இந்தப் பண உதவி கிடைத்ததும், உற்சாகம் முளைத்தது; வளர்ந்தது; பெருகிற்று. ஒரு தீர்மானம் மனத்தில் உதித்தது. "நம் நாட்டுமக்களுக்குப் புத்தகாலய அனுபவம் இல்லை. அதை நடத்த வேண்டிய முறையும் தெரியாது. இந்த வருமானத்தைக் கொண்டு, சர்வகலாசாலைப் புத்தகாலயத்தை நல்ல வழியில் நடத்தவேண்டும். நம் நாட்டிற்கு இது ஒரு வழிகாட்டியாய் ஆகவேண்டும்" என்ற தீர்மானம் அது.

### 23 கடவுள் அருள்

இத் தீர்மானத்தைக் கடவுள் அருள் நிறைவேற்றி வைத்தது. முதலில் அமர்த்தப்பட்ட ஊழியர்கள் விடாமுயற்சியாலும் உற்சாகத்தாலும் அளவில்லாத உதவி புரிந்தார்கள். புத்தகாலயத்தின் சேவையை மக்களும் உற்சாகத்துடன் ஏற்றுக்கொண்டார்கள். இது புத்தகாலய சேவையை மேன்மேலும் அதிகரிக்க முடிந்தது. தவிர, நூல் ஆலய இயல் சம்பந்தமாக அநேக புத்தகங்கள் எழுத முடிந்தது. அவை இப்பொழுது 55 வரையில் எட்டியிருக்கின்றன. உலகப் பிரசித்தியும் அடைந்துள்ளன. இவ்வளவுக்கும் எருவாக இருந்தது, முதல் மந்திரி சுப்பராயன் தாமாகவே தூண்டிக்கொடுத்த நிரந்தரமான சர்க்கார் பண உதவியே.

### 3 சென்னைப் புத்தகாலயச் சங்கம்

ஆதிமுதல் இருந்து வந்த ஏக்கம், "பொது மக்களுக்கு எப்படிப் புத்தகாலய வசதி ஏற்படுத்துவது", என்பது. இதை அகற்றவும் சீக்கிரமாய்க் கடவுள் அருள் புரிந்தார். 1927 டிசம்பரில், கட்டவிழ்த்த சிங்கம்போல் கே வி கிருஷ்ணசாமி அய்யர் புத்தகாலய இயக்கத்தினுள் பாய்ந்தார். சென்னைப் புத்தகாலயச் சங்கம் 1928 ஜனவரி 30 இல் ஸ்தாபிக்கப்பட்டது. நூற்றுக் கணக்கான அங்கத்தினர்களைக் கிருஷ்ணசாமி அய்யர் சேர்த்தார். அன்று முதல் இடைவிடாமல் புத்தகாலயச் சேவையின் அனுகூலங்களும் அவசியமும் மக்களிடம் விளம்பப்பட்டன எஸ் எம் பாஸில், சிவராம மேனன், சத்யமூர்த்தி, நரஸிம்ம ராவ் முதலியோர்களும் நானும் பிரசாரத்தில் ஈடுபட்டோம் ஜில்லாக்கள் தோறும் சென்றோம். தாலுக்காக்கள் தோறும் சென்றோம் நகரங்கள் தோறும் சென்றோம். இதற்காக ஏற்பட்ட பொதுக்கூட்டங்களில் எடுத்துச் சொல்லவேண்டிய விஷயங்களை ஒரு புத்தகமாய் எழுதி வெளியிட்டேன். அதன் பெயர் "Five Laws of Library Science". இந்தப் புத்தகந்தான் மற்ற 55 புத்தகங்களுக்கும் வித்து.

### 31 புத்தகாலயச் சட்டத்திற்குக் கோரிக்கை

இந்தப் பிரசாரத்தின் காரணமாய் ஏற்பட்ட பொதுக்கூட்டங்களில் ஓர் அற்புதம் கண்டேன். அதுதான் தொண்டைக் கதிர் போல் மக்களிடையில் விளங்கின புத்துயிர். இந்தப் புத்துயிர் உற்சாகத்தை வளர்த்தது. எல்லாச் ஜில்லாப் போர்டுகளும்,

எல்லாத் தாலுக்காப் போர்டுகளும் எல்லா முனிசிபாலிடிகளும் எல்லாப் பஞ்சாயத்துக் களும் ''பொது மக்கள் புத்தகாலய மசோதா வேண்டும்'', என்று தீர்மானங் கள் மூலமாய்க் கோரினர்கள். மகாத்மா காந்தியின் உதவியால், தொண்டைக் கதிராய் இருந்த புத்துயிர் வெளிவந்தது. பழுக்க ஆரம்பித்தது. நாடு மக்கள் -ஆட்சி பெற்றது.

### 4 மந்திரி அவிநாசிலிங்கத்தின் உதவி

1946, ஜூலை மாதத்தில் கல்வி மந்திரி அவிநாசிலிங்கத்துடன் பேச நேர்ந்தது. அந்தப் பேச்சில் செய்த முடிவுகள் பின் வருமாறு :—

1 மக்கள் ஆட்சி சரிவர நடக்க, மக்க ளுக்குப் புத்தகாலய சேவை அவசியம்.

2 பள்ளிக்கூடங்களில் செலவு செய்யவேண்டி வரும் கோடிக் கணக்கான ரூபாய்களுக்குச் சரியான வருமானம் நாட்டுக்குக் கிடைக்கவேண்டுமானல், மக்க ளுக்குப் புத்தகாலய சேவை அவசியம்;

3 நாட்டில் புதிது புதிதான முறை யில் ஏற்படப்போகும் தொழிற்சாலைகள் சரிவர நடந்து, நாட்டிற்கு நலம் உண்டாக, மக்களுக்குப் புத்தகாலய சேவை அவசியம்.

4 நாட்டில் ஏற்படப் போகும் முன்னேற்றத்தால் மக்களுக்கு ஏற்படப் போகும் ஒழிவு நேரம் நல்ல வழியில் உபயோகப்பட, மக்களுக்குப் புத்தகாலய சேவை அவசியம்.

5 நாட்டில் வெளியாயிருக்கும் புத் துயிர் மேன்மேலும் வளர்ந்து எல்லா மக்களும் மகிழ்ச்சியையும், அன்பையும், மனச்சாந்தியையும் அடைய, மக்களுக்குப் புத்தகாலய சேவை அவசியம்;

6 மக்களுக்குப் புத்தகாலய சேவை ஏற்படுத்த, புத்தகாலயச் சட்டம் அவசியம்; என்ற முடிவுகள்.

### 41 சென்னைப் புத்தகாலயச் சட்டம்

இந்த முடிவிற்கு வந்ததும், மந்திரி அவிநாசிலிங்கத்தினிடம், என்னிடமிருந்த இரண்டு குறிப்புக்களைக் கொடுத்தேன். அவை,

1 சென்னைப் பொதுமக்கள் புத்த காலய மசோதாவின் குறிப்பு (Madras Public Library Bill).

2 சென்னை ராஜ்ஜியத்திற்காக எழு தப்பட்ட ''30 வருஷப் புத்தகாலய வளர்ச் சித் திட்டம்''.

இந்த இரண்டு குறிப்புக்களையும், மந்திரி அவிநாசிலிங்கம் உற்சாகத்துடன் ஏற்றுக்கொண்டார். 1948 ஆவது வருஷத் தில் புத்தகாலயச் சட்டத்தைச் சட்டசபை யில் நிறைவேற்றினர். ஆனல், அதன் பிறகு சீக்கிரத்தில் அவிநாசிலிங்கம் மந்திரி பதவியை விட்டு விலகினர். தாய்ப்பால் இல்லாத குழந்தைபோல், புத்தகாலய வளர்ச்சி தேர்ச்சி அடையாமல் இருந்தது.

### 5 மந்திரி கிருஷ்ணராவ்

1952 அக்டோபர் கல்வி மந்திரி கிருஷ்ணராவ் புத்தகாலய வளர்ச்சி குன்றி இருப்பதை உணர்ந்தார். வளர்ச்சியை ஊட்ட, ஊக்கம் கொண்டார். இது காரண மாய், படமடலங்காவில் ஒரு கூட்டம் ஏற்படுத்தினர். இதற்குச் சில்லாப் புத்த காலயக் கமிட்டி அங்கத்தினர்களை வர வழைத்தார். என்னையும் டில்லியிலிருந்து வரும்படி அழைத்தார்.

புத்தகாலய சேவை வளராமல் செய் யும் காரணங்களை அலசிப் பார்த்தோம். சட்டத்திலும், ரூல்களிலும் உள்ள பிழை களைப் பரிசோதித்தோம். சட்டத்தை அனுட்டிக்கும் முறையில் உள்ள பிழைகளை யும் சோதித்தோம்.

### 51 ஸெமினர் யோசனை

படமடலங்காவில் கடைசியாகச் செய்த முடிவுகள் பின்வருமாறு :—

1 1953-வது வருஷத்தில் ஒரு புத்தகாலய ஸெமினர் நடத்தவேண்டும்.

2 அதைக் கூட்டமில்லாத சௌகரிய மான ஊரில் நடத்தவேண்டும்.

3 ஒவ்வொரு சில்லாப் புத்தகாலயக் கமிட்டியிலிருந்தும் இரண்டு பிரதிநிதிகளை அழைக்க வேண்டும்.

4 தவிர, ஒவ்வொரு சில்லாவின் புத்தகாலய அதிகாரியையும், மாகாணத்தின் புத்தகாலய அதிகாரியையும் அழைக்க வேண்டும்;

5 அதை நான் நடத்தவேண்டும்;

6 இந்த ஸெமினரில் விசாரணை செய்யவேண்டிய விஷயங்களைப் பற்றியும், இந்த ஸெமினருக்குச் சில்லாப்பிரதிநிதிகள் சேகரித்து வரவேண்டிய குறிப்புக்களைப்பற்றியும், முன்னதாகவே நான் ஒரு புத்தகத்தைத் தயாரிக்கவேண்டும்.

## 52 ஸெமினர் நடைபெறாதது

அதன்படியே நான் புத்தகத்தை எழுதி முடித்தேன் அதன் பெயர் "Library Legislation: Handbook to Madras Library Act", 1953 ஆவது ஆண்டில் சென்னைப் புத்தகாலயச் சங்கத்தால் அது வெளியிடப்பட்டது. ஆனால் சென்னை மாகாணத்தின் பிரிவினை ஏற்பட்டது. ஆகையால் உத்தேசித்தபடி அந்த ஸெமினர் நடைபெறவில்லை.

## 6 புத்தகாலயச் சங்கத்தின் முயற்சி

1956 ஆவது வருஷம் முதல் ஒவ்வொருவருஷமும் பொதுப் புத்தகாலயங்களின் வளர்ச்சியையும், அதில் உள்ள குறைகளையும், ஆனால் மக்களிடத்தில் வளர்ந்து வரும் உற்சாகத்தையும் சென்னைப் புத்தகாலயச் சங்கம் விசாரணை செய்துவருகிறது. அதன் வருஷ அறிக்கையில் அந்த விசாரணையில் தெரிந்தெடுக்கப்பட்ட விஷயங்களைப் புள்ளிமூலமாயும், வேண்டுகோள் மூலமாயும் பிரசுரித்து வருகிறது. சர்க்காருக்குச் செய்யவேண்டிய விஷயங்களை நினைவூட்டி வருகிறது. முக்கியமான விஷயங்கள் பின்வருமாறு:—

1 புத்தகாலய மசோதா 12 வருஷ காலமாய் அமுலில் இருந்து வருகிறது.

2 அதன்மூலம் பல லக்ஷக்கணக்கான ரூபாய் மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்டு வருகிறது.

3 பல புத்தகாலயங்கள் நடந்து வருகின்றன.

4 ஆனால் அவை உயர்ந்தமுறையில் நடைபெறவில்லை.

5 அவை உயர்ந்த வழியில் நடைபெறுவதற்கு வேண்டிய முறைகளைக் கண்டுபிடிக்க வேண்டும்.

6 பணம் முழுவதும் புத்தகாலய சேவையாக மாற்றப்படவேண்டும்.

7 இதற்கு விரோதமான இடையூறுகளைக் கண்டுபிடித்து, அவைகளை அகற்றும் முறை தேடவேண்டும்.

8 சட்டத்திலும் ரூல்களிலும் உள்ள இடையூறுகளையும் அகற்ற வேண்டும்.

9 இவைகளைப் பொதுமக்களே நேரில் உணர்ந்து கேட்பது கஷ்டம்.

10 ஆகையால் தக்க புத்தகாலயங்கள் இயலிலும், புத்தகாலய நடையிலும் தேர்ச்சியும் அனுபவமும் உள்ள சிலர் சேர்ந்த ஓர் ஆய்வுக் குழுவை நியமிக்கவேண்டும்.

11 அந்த ஆய்வுக்குழு ஒரு வருஷத்திற்குள் தன் சிபார்சுகளைத் தெரிவிக்க வேண்டும்.

12 அது செய்யும் சிபார்சுகளை அமுலுக்குக் கொண்டு வரவேண்டும்.

## 61 முதல் மந்திரி காமராஜ நாடாரின் ஆமோதிப்பு

இது விஷயமாகச் சென்னைப் புத்தகாலயச் சங்கத்தார் முதல் மந்திரி காமராஜ் நாடாரை இருமுறை கண்டு பேசி இருக்கிறார்கள். இம்மாதிரி ஆய்வுக் குழுவை நியமித்து, அதன் சிபார்சு பிரசாரம் புத்தகாலய சேவையைச் சீர்திருத்த வேண்டியது அவசியந்தான் என்று காமராஜ நாடார் ஆமோதித்திருக்கிறார்.

## 62 கல்வி மந்திரி சுப்பிரமணியம்

புத்தகாலயச் சங்கத்தார் இது விஷயமாய்ப் பலதடவை கல்வி மந்திரி சுப்பிரமணியத்திற்கு எழுதி இருக்கிறார்கள். அவரை நேரில் கண்டும் சொல்லி இருக்கிறார்கள். அவர் இந்த விஷயத்தைக் கவனிப்பதாய்ச் சொல்லியிருக்கிறார்.

## 63 வேண்டுகோள்

இனித் தாமதம் இல்லாமல் ஆய்வுக் குழுவை நியமிக்கவேண்டும். சீக்கிரத்தில்

சீர்திருத்தங்களைச் செய்யவேண்டும். புத்தகாலய சேவை உயர்நிலை அடையவேண்டும். மக்கள் சார்பாக இது என் வேண்டுகோள். மந்திரிமார்கள் இதைக் கவனிக்க வேண்டும்.

### 7 பள்ளிகளுக்குக் கூட்டுறவுப் புத்தகாலயங்கள்

இது தவிரப் பள்ளிக்கூடங்களில் புத்தகாலய சேவையைச் சரிவர ஏற்படுத்த வேண்டும். பிரதி பள்ளிக்கூடத்திலும் தனிப்பட்ட புத்தகாலயம் ஏற்படுத்துவது சரி இல்லை. ஒவ்வொரு சில்லாவிலும் உள்ள பள்ளிக்கூடங்களும், கூட்டுறவு முறையில் ஒன்று சேர்ந்து, ஒரு "சில்லாப் பள்ளிக்கூடப் புத்தகாலயம்", நடத்த வேண்டும். இதிலிருந்து, ஒவ்வொரு பள்ளிக்கூடமும் அதிகமான, விதவிதமான புத்தகங்களைப் பெறலாம். இதுதான் லாபமான முறை. இந்த முறை பணப் பெருக்குள்ள நாடுகளில் கூட அமுலுக்கு வந்து கொண்டிருக்கிறது. நம் நாட்டிற்கு இந்த முறை மிகவும் அவசியம். ஆய்வுக் குழு இந்த விஷயத்தையும் கவனிக்கவேண்டும்.

### 8 புத்தக வளர்ப்பு

மேலும் தமிழ் நாட்டில் புத்துயிருக்கு மற்ருேர் அறிகுறி தென்படுகிறது. தமிழில் புத்தகங்கள் எழுதச் சக்தி உள்ளவர்கள் அநேகர் தோன்றி வருகிருர்கள். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் போன்ற அநேக பிரசுராலயங்களும் வளர்ந்து வருகின்றன. புத்தகாலயங்களும், பிரசுராலயங்களும், சென்னைப் புத்தகாலயச் சங்கமும் பிரசுரத் திட்டம் ஒன்றைத் தீர்மானிக்கவேண்டும். அத் திட்டத்தின் நோக்கம் சரியான முறையில் ஏராளமான தமிழ்ப் புத்தகங்களை வெளியிடுவதாகத் தான் இருக்கவேண்டும். எல்லாத் துறைகளிலும், எல்லா நடைகளிலும், பாலர்களுக்கும் முதியோர்களுக்கும், அதிகம் படித்தோர்களுக்கும் மிதப்படிப்புள்ளோருக்கும் புதிதாய்ப் படிக்க ஆரம்பிக்கிறவர்களுக்கும் விதம் விதமாய், எல்லாவித இயல்களிலும், கலைகளிலும், புத்தகங்கள் வெளியாகவேண்டும். குடியரசு வந்துள்ள தமிழ்நாட்டில் சர்க்காரும் இதில் ஈடுபட வேண்டும் ஆய்வுக் குழு இந்த விஷயத்தையும் கவனிக்கவேண்டும்.

### 9 புத்துயிர் வளர்ச்சி

அப்படிச் செய்தால், தமிழ்நாட்டில புத்தகசாலை சேவை நல்ல முறையில் வளரும். நன்மை செய்யும். தமிழ்நாட்டில் ததும்பும் புத்துயிர் ஓங்கி வளரும். மக்களிடத்தில் ஊக்கம் ஏற்படும். அறிவு வளரும். உற்சாகம் ஏற்படும். ஆனந்தம் உண்டாகும் சாந்தம் பரவும். இதுவே மக்கள் எதிர்பார்ப்பது. இதுவே சென்னைப் புத்தகாலயச் சங்கம் கோருவது. இதற்காகவே கழகமும் உழைத்து வருகிறது. கடவுள் அருள் இதைச் சாதித்துக் கொடுக்க வேண்டும். இது என் பிரார்த்தனை. மக்களின் பிரார்த்தனை.

---

## நூலக இயலின் ஐந்து விதிகள்

1. நூல்கள் பலவும் பயில்வதற்கே
2. படிப்போர்க் கேற்ற நூல்கள்
3. நூல்கட் கேற்ற படிப்போர்
4. படிப்பவர் நேரம் பேணு
5. நூலகம் என்றும் ஓங்கிவளர்வதே

---

# பொருளாதாரத் திட்டம் – – – – அல்லது முன்னேற்றப் பாதை

[திரு. ஓ. இரா. கிருட்டிணசாமி]

கோவை மாவட்டம், ஒரைக்கால் பாளையத்தில் 4-7-1928 இல் பிறந்த இவரின் பெற்றோர் ஓ.கா. இராமசாமி, குழந்தையம்மாள் ஆவர். எம். ஏ., எம். காம்., சென்னை மையக் கூட்டுறவு நிலையத்தேர்வு ஆகியவற்றில் தேர்ந்து பட்டம் பெற்றுள்ளார். தஞ்சைக் கூட்டுறவுப் பயிற்சி நிலையத்தில் கூட்டுறவு, தணிக்கை விரிவுரையாளராகவும், 1952 முதல் '54 வரை சென்னை, சர். தியாகராயர் கல்லூரியில்வணிகவியற்றுறைத் தலைவராகவும் செவ்வனே பணியாற்றியுள்ளார். 1954 முதல்



சென்னையில், தமிழ்க் கலைக் களஞ்சிய அரசியல், பொருளாதார, வரலாற்றுத்துறை ஆசிரியராகத் தொண்டாற்றி வருகின்றார். 'சர்வதேசப் பொருளாதார உறவுகள்' என்ற நூலையும், சென்னைக் கல்லூரித் தமிழ்க் குழுவினரின் சார்பில் 'தொழிலமைப்பும் நிருவாகமும்' என்ற நூலையும் தமிழாக்கித் தந்துள்ளார். ஆங்கிலத்திலும் தமிழிலும் பல நூல்களை இயற்றியுள்ள இவர் மறைத்திரு, மறைமலையடிகளாரின் தமிழ்த் தொண்டு வழிநிற்பவர்.

நாடு என்பது மக்கள் பலர் வாழும் இடம். ஆனால் மின்னுவதெல்லாம் பொன்னாகாது, வெளுத்ததெல்லாம் பாலாகாது என்பதுபோல் மக்கள் உறையும் இடங்களெல்லாம் நாடாகா. மக்கள் இனிது வாழ்வதற்கு-வாழ்வாங்கு வாழ்வதற்கு-ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்க்கை இயல்பொடு வாழ்வதற்கு-வேண்டிய உணவு, உடை, உறைவிடம் முதலியவைகளை வரையாது வழங்கும் நாடே நாடு எனப்படும். பசி, பசியென்று வாடும்படியான வறுமையும் ஓயாத துன்பந்தரும் தீராத நோயும் இல்லறமாம் நல்லற வாழ்க்கையின் அமைதியை அழிக்கும் பகையும் இல்லாத நாடே நாடு எனப்படும்.

> 'உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
> சேராது இயல்வது நாடு'

என்பது வள்ளுவர் வாய்மொழி. இம் மாபெரு மண்ணுலகில் இவ்விலக்கணத்துக்கு எடுத்துக்காட்டாக விளங்கக்கூடிய நாடுகள் உளவோ வென்றால் இல்லையென்றுதான் சொல்லவேண்டும். நாடுகள் தோறும் வறுமைப்பசி மக்களை வாட்டுகின்றது; தீராத தொற்று நோய்கள் ஓயாத தொல்லை தருகின்றன ; போதாக் குறைக்குச் செறுபகையும் சேர்ந்துவிட்டது. இத்துணை இடர்கள் இருக்கும்போது மக்கள் மக்களாக வாழமுடியுமா? நாடுகள் நாடா வளந்தரும் நாடாகத் திகழ முடியுமா? முடியாது. ஏன் இந்த இழிநிலை ? இந்த இழிநிலைக்கு மூல காரணம் பொருள் வளக் குறைவு-பற்றுக்குறை. மக்களின் தேவைகள் மிகுதி. அவைகளையொட்டிப் பார்க்குமிடத்துத் தேவைகளை நிறைவேற்றும் பொருள்களை ஆக்குவதற்குரிய நிலவளம், நீர்வளம், தாது வளம் முதலிய இயற்கை வளங்கள் குறைவு. ஆகையால் மக்களின் அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்குப் போதுமான பொருள்கள் இல்லை. போதிய பொருளின்மையே பசியெனும் பேய் தாண்டவம் ஆடுவதற்கும், ஓவாப் பிணி பீடிப்பதற்கும் செறுபகை வந்து சேர்வதற்கும் ஏதுவாகும். பொருளில்லையேல் பூவுலக வாழ்க்கையே

கிடையாது. இதனாலன்றே 'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' யென்றார் திருவள்ளுவர்.

பொருள்போதாக் குறையைப் போக்கும் பொருள்செயல்வகையே பொருளாதாரத் திட்டம். பற்றுக்குறை ஒரு கடல் என்றால் பொருளாதாரத்திட்டம் அதைக் கடக்கவுள்ள கப்பலாம். இக்கப்பல் சூறை வளிக்காற்றால் சுழற்றி யடிக்கப்படும் வெறும் பாய்மரக் கப்பலன்று; கொந்தளிக்கும் கடலிலும் நிலைபிறழாது விரைந்தோடும் நீராவிக்கப்பல். இக் கப்பலில் சென்றாலன்றிப் பற்றுக்குறைக் கடலைக் கடக்கவே முடியாது.

இயற்கை அன்னை பல்பயன் நல்கும் பல்வளங்களை வழங்கியுள்ளாள். வண்ண மலர்ச் செடிகளும் இனிய நற்கனி தரும் மரங்களும் கலங்களும் பிறபொருள்களும் விளைவதற்கு ஏற்ற மண் வளம் பொருந்திய பரந்த நிலப்பரப்பு! சிறு துளி பெரு வெள்ளமாய்த் திரண்டு நிறைந்த நீர் வளம் நல்கும் ஆறுகள்! சோலைகளைப் பேணும் தாயகமாய்த் திகழ்கின்ற ஆறுகளைப் பெற்றெடுக்கும் ஆரணங்காய் விளங்குகின்ற தவழ்ந்து வரும் மேகக் கூட்டங்களைத் தாங்கி அணைத்து ஆனந்தக் கண்ணீரென மழையைப் பொழிவிக்கின்ற நெடுமலைகள்! ஆழ்ந்து அகன்று பரந்த கடல்கள்! கடல்படு செல்வங்கள்! காடுபடு செல்வங்கள்! நீர்த்திறன்! மின்திறன்! காற்றுத்திறன்! நிலத்துள் மண்டிக் கிடக்கும் தாதுப்பொருள்கள்! இவை யெல்லாவற்றிற்கும் மேலாக மக்களின் உழைப்பு என்னும் உயர்ந்த செல்வம்!— இவையாவும் இயற்கை தந்த பயன்தரு வளங்கள். இவ்வளங்களையெல்லாம் அளவிட்டு அறிந்து, இவைகளை நன்கு பயன்படுத்துவதற்குரிய வழியே திட்டம் எனப்படும்.

திட்டம் என்பது இருக்கும் வளங்களை முழுக்கப் பயன்படுத்துவதுமட்டுமன்று; அடையவேண்டியகுறிக்கோள்களை அமைத்துக்கொண்டு அவைகளுக்கேற்ப வளங்களை வகைப்படுத்திப் பயன்படுத்துவதுமாகும். நிலவளம், நீர்வளம், தாதுப் பொருள்வளம் போன்ற வளங்களையெல்லாம் கணக்கிட்டறிவது எளிது. புள்ளியியல், புவியியல், புவியடுக்கியல் போன்ற அறிவியல்களின் அரிய துணை இருக்கும் போது வளங்களை அறிவது அரிய தாகுமோ? ஆகாது. ஆனால் அடைய வேண்டிய குறிக்கோள்களை வகுப்பது அவ்வளவு எளிதன்று.

நாட்டின் அரசியலமைப்பு, சமூக அமைப்பு, பண்பாடு, விஞ்ஞான அறிவு, பொருளாதார முறை, கல்வி நிலை, மக்களின் வாழ்க்கைநிலை, ஆட்சித்திறன், சமூகக்கருத்து முதலிய பல்வேறு பொருள்களையும் பொறுத்தே குறிக்கோள்களை முடிவு செய்யமுடியும். அண்மைக்காலத்தில் சமூகக் கருத்துக்கள் வளர்ச்சியடைந்துள்ளன. எல்லோரும் வறுமையின்றி வாழவேண்டும், எல்லோருக்கும் பாதுகாப்பு வேண்டும், எல்லோருக்கும் சம வாய்ப்பு வழங்கப்படவேண்டும், மக்கள் என்ற முறையில் எல்லோரும் சமம் என்ற கருத்துக்கள் ஓங்கியுள்ளன. இக்கருத்துக்களை உலகமே ஏற்றுக்கொண்டுள்ளது. இதற்கேற்பப் பொருளாதாரக் கருத்தும் மாறுபட்டு வருகிறது. பொருள்களை உற்பத்தி செய்யும் துறைகளை வளப்படுத்துவது மட்டும் இக்காலத்தில் முன்னேற்றம் என்று கருதக்கூடாது. பொது மக்களுக்குத் தேவையான கல்வி, மருத்துவம் முதலிய எல்லா வகையான சமூக வசதிகளையும் ஏற்படுத்தித் தரவேண்டும்; உழைப்பதற்குரிய வாய்ப்புக்களைப் பெருக்க வேண்டும்; வேலையின்மையைப் போக்க வேண்டும்; சமூக சமத்துவமும் நீதியும் நிலவவேண்டும். இவ்வளவும் இருந்தால் தான் முன்னேற்றம் ஏற்பட்டது என்று கருதப்படும். திட்டமிட்டுப் பணியாற்றாமல் இத்தகைய முழு முன்னேற்றம் ஏற்படாது. எனவே பொருளாதாரத் திட்டமே சமூக முன்னேற்றத்திற்குரிய வழியாகும்.

நாட்டின் பொருளாதார, சமூகச் சிக்கல்களை நன்கு பகுத்தறிந்தால் முன்னேற்றப் பாதையை அமைப்பதற்குரிய வழி வகைகள் புலனாகும். நாட்டின் பொருளாதாரத்தைத் தன்போக்கில் விட்டு விட்டால் எல்லாம் ஒழுங்காகவே நடைபெறும் என்ற கருத்து உளுத்துப்போய் விட்டது. பொருளாதாரத்தைத் தன் போக்கில் விட்டதின் காரணமாகத்தான்

குறையே உருவெடுத்து வந்ததெனத் தோன்றும் இன்றைய சமூகம் உருவாகியுள்ளது. இன்றைய சமூகம் மேடும் பள்ளமுமானது. ஒரு சிலர் எல்லாவகையான வசதிகளோடு ஆடம்பரமாக வாழ்கின்றனர். பலர் வறுமையால் வாடுகின்றனர். தக்க வாய்ப்பும் துணிவும் சூழ்திறனும் உள்ளவர்கள் உயர்ந்துவிட்டனர். அவையற்ற அப்பாவிகள் சமூகத்தின் அடியாழத்தில் ஆழ்ந்து கிடக்கின்றனர். வெள்ளம் பள்ளத்தை நோக்கி ஓடுவதுபோல் சமூகத்தின் செல்வம் மற்றவர்களின் காலடியில் பள்ளம் பறிக்கும் பகற் கொள்ளைக்காரர்களின் காலடியில் சென்று குவிகின்றது. இவ்வாறு குவிவதைத் தடுத்து அது பரவலாகச் சென்று பலரிடமும் சேரும்படி செய்ய வழியே இல்லையா? உண்டு. பள்ளத்தை நோக்கிப் பாய்ந்தோடும் ஆற்று நீரை மேட்டு நிலத்திற்கும் எவ்வாறு பயன்படுத்துகின்றோம்? ஆற்றின் குறுக்கே அணையொன்றை அமைத்து நீரைத்தேக்கி அதை வேண்டிய இடத்திற்கு வேண்டிய அளவில் செலுத்துகின்றோம் அல்லவா? அதுபோல் திட்டம் என்னும் அணையால் செல்வத்தின் போக்கையும் திருத்தியமைக்க முடியும்! இதைத் தொழில் முன்னேற்ற நாடுகளில் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். இங்கிலாந்து போன்ற நாடுகளில் தொழில் வளம் பெருகியுள்ளது; தொழில் முன்னேற்றத்தால் செல்வம் குவிந்துள்ளது. குவிந்த செல்வத்தின் பயனை ஒரு சிலர் மட்டும் நுகராமல் சமூகம் முழுவதுமே நுகரும்படி செய்யத் திட்டமிட்டு அத்திட்டத்திற்கேற்பப் பொருளாதாரச் சமூகச் செயல்களை அந்நாடுகள் நடத்திச் செல்லுகின்றன. ஆகவே தொழில் வளமிக்க நாடுகளில் பொருளாதாரத் திட்டமானது தனிமுயற்சி (Private enterprise) முறையால் ஏற்பட்ட சில குறைபாடுகளைக் களைந்து பொருளாதார முன்னேற்றத்தின் பயனை நியாயமான முறையில் பலருக்கும் பங்கிட்டு வழங்குவதற்குக் கருவியாகப் பயன்படுகிறது.

தொழில் முன்னேற்றம் இல்லாத இந்தியா போன்ற நாடுகளின் நிலை வேறு. முதற்கண் செல்வத்தைப் பெருக்கியாக வேண்டும். வெறுங் கையால் முழம்போட முடியுமா? செல்வம் இருந்தால்தானே அதைப் பலரும் அடைந்து பயன்பெற முடியும். செல்வத்தைப் பெருக்க இதுகாறும் பயன்படுத்தப்படாத இயற்கை வளங்களை முழுக்கப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்கவேண்டும். ஆனால் வெறும் உற்பத்திப் பெருக்கத்தால் மட்டும் சமூகம் முன்னேறிவிடாது. பெருகிய உற்பத்தியைத் தன்னலம் தனக்கே உரிமையாக்கிக் கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். உற்பத்தியின் பயன் நாட்டின் மக்களிடையே நியாயமான அடிப்படையில் பகிர்ந்து வழங்கப்பட வேண்டும். பாகுபாட்டு முறையிலே பழுது இருந்தால் கைக்கெட்டியது வாய்க்கு எட்டாத கதையாக முடியும். எனவே உற்பத்திப் பெருக்கம், நியாயமான பாகுபாட்டு முறை இவ்விரண்டையும் ஏற்படுத்துவதே பொருளாதாரத் திட்டத்தின் நோக்கமாகும்.

இவ்வாறுகச் சமூகத்தின் முழு முன்னேற்றத்தையும் ஒருமுகமாக நாடுவதே தன் நோக்கமாகக் கொண்ட பொருளாதாரத் திட்டம் ஒரு நாள் வேலையன்று; இருநாள் வேலையன்று; தொடர்ந்து நிகழக்கூடியது. ஐந்தாண்டு, பத்தாண்டு என்று ஒரு குறிப்பிட்ட காலத்தை ஒட்டியதாக இருக்கலாம். எனினும் அதனுடைய முழுப் பயனையும் அந்தக் குறிப்பிட்ட காலமுடிவிலேயே அடைந்துவிட முடியாது. திட்டக் காலத்திற்குப் பின்னரும் அதன் பயன் இருந்துகொண்டே வரும்.

பொருளாதாரத் திட்டத்தை வகுத்துவிட்டால் மட்டும் போதாது; அதைச் செவ்வனே செயல்படுத்தினால்தான் அதன் பயனை அடைய முடியும். திட்டம் வெற்றி பெற மக்களிடையே திட்டத்தின் நோக்கம் பற்றிக் கருத்தொற்றுமை நிலவவேண்டும்; திட்டத்துக்கு மக்களின் பேராதரவும் ஒத்துழைப்பும் இருக்கவேண்டும்; சிக்கன முறையைக் கையாண்டு முதலைப் (Capital) பெருக்கி அதை நாட்டின் ஆக்கத்துறைகளில் முதலீடு (Investment) செய்ய வேண்டும். திட்டத்தை நடத்துவதற்குரிய திறமையும் தன்மையும் நேர்மையுமுள்ள நிருவாக ஊழியர்கள் வேண்டும். திட்டத்தின் நோக்கம் பற்றிக் கருத்துவேறுபாடு நிலவுமேல் மக்களுடைய ஒருமுக

மான ஆதரவையும் ஒத்துழைப்பையும் பெறமுடியாது. திட்டம் மக்களுடைய நலனுக்காக மக்களால் நடத்தப்பெறுவது. ஆகவே அவர்களுடைய ஆதரவு திட்டத்தின் வெற்றிக்கு இன்றியமையாதது. மக்களுடைய ஆதரவு மட்டும் இருந்தால் போதாது. மக்களின் ஆதரவைப் பயன்படுத்தித் திட்டத்தைச் செயல்படுத்துவதற்குத் தக்க தகுதியும் திறமையும் நேர்மையும் உள்ள ஊழியர்களும் வேண்டும். எனவே தக்கவர்களின் சேவை, உற்பத்திப் பெருக்கம், செல்வம் ஆகிய இம் மூன்றும் ஒன்றையொன்று சார்ந்தவை.

*" தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு."*

சர்வாதிகார நாட்டினும் குடியாட்சி (ஜனநாயகம்) நாட்டிலே பொருளாதாரத் திட்டத்தை வகுப்பதும் செயல்படுத்துவதும் கடினமான வேலை. முன்னதில் திட்டத்தின் முழுப் பொறுப்பும் சர்வாதிகார மத்திய ஆட்சிக்குழுவின் கையில் இருக்கிறது. அக்குழு தன் விருப்பம்போல் திட்டத்தை வகுக்கலாம்; குடிகளின்மேல் அதைக் கட்டாயமாகத் திணிக்கலாம்; எளிதில் நிறைவேற்றிவிடலாம். ஆனால் அதன் பயன் நீடிக்காது. கட்டாயத்தின் பேரில் உண்டாக்கப்படும் முன்னேற்றம் உறுதியான அடிப்படையில்லாக் கட்டடம் போல் வெகுவிரைவில் சரிந்துவிடும். குடியாட்சித் திட்டம் கடினமான வேலையெனினும் அதுவே சிறந்தது; நீடித்த பயனை அளிக்கக் கூடியது; நிலைபெறக் கூடியது. செயற்கரிய செய்வதுதானே பெருஞ்செயல்? குடியாட்சித் திட்டம் மக்கள் திட்டம்; மக்களுக்காக நடைபெறும் திட்டம்; மக்களால் நடத்தப்படும் திட்டம். எனவே, குடிமக்களின் ஒருமுகமான ஆதரவும் கூட்டுறவும் குடியாட்சித் திட்டத்தின் உயிர்நாடியாகும். குடிமக்கள் எல்லோரும் திட்டத்தின் நோக்கத்தை வரவேற்பதற்கும், எதிர்கால முன்னேற்றத்தைக் குறிக்கோளாகக்கொண்டு திட்ட காலத்தில் ஏற்படும் தொல்லைகளைப் பொறுத்துக் கொண்டு செலவைக் குறைத்துப் பணத்தைச் சேமித்து முதலைப் பெருக்க முன்வருவதற்கும் மக்களின் முழு ஆதரவும் ஒத்துழைப்பும் வேண்டுமல்லவா?

*" துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை."*

---

## பொருளியல் விதிகள்

பொருள்களை ஆக்குவதற்கு இன்றியமையாக் கருவிகளாகவிருக்கும் கருப்பொருள்களாகிய நிலம், கனி, நீர்வீழ்ச்சி, போக்குவரத்து வசதிகள், சமூகத்தின் நலன்கள் இவைகளைப் பொதுமுதலாக்கிச் சமூகத்தின் பாதுகாப்பில் வைத்தல் வேண்டும்.

கைத்தொழிலாலும் விவசாயத்தாலும் உண்டாக்கப்படும் பொருள்கள் சன சமூகத்தின் தேவையின் அளவைப் பொறுத்திருக்க வேண்டுமேயன்றித் தனிப்பட்ட பொருள் உடைமையாளரின் செல்வ அவாவைச் சார்ந்து நிற்றலாகாது. ஆக்கப்படும் பொருள்கள் சன சமூகத்தின் தேவையை ஒட்டியும், அவைகளுக்கு ஏற்படும் விலை அவைகளை ஆக்குவதற்கு ஆகும் செலவையும் சமூகத்தின் பொதுப்பொருள் நிலைமையைச் சார்ந்தும் ஏற்படல் வேண்டும். இப்போதைய பொருளீட்டும் நோக்கத்தால் சன சமூகத்திடையில் பொதுநலங் கருதாச் செய்கைக்கு இடமில்லாமல் இருப்பதை நீக்கி, மக்களினத்தார்க்கே நன்மைதரும் தலைநோக்கோடு தொழில்முறை நிலைநாட்டப்படல் வேண்டும்.

—P. S. நடராச பிள்ளை, " அரசியல் விளக்கம் ".

---

# மாணிக்கவாசகர் காலம்

[ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. தி. வை. சதாசிவபண்டாரத்தார்]

சோழவளநாட்டில் திருப்புறம்பயம் என்னும் திருவூரில் விழுமிய வேளாண் குலத்தில் 15-8-1892 இல் தோன்றிய இவர் தம் தந்தையார் வைத்தியலிங்கப் பண்டாரத்தார்; தாயார் மீனாட்சியம்மையார். குடந்தை நகர உயர்நிலைப் பள்ளியில் பயின்றனர். 1916 இல் 'குடந்தை வாணாதுறை உயர்நிலைப் பள்ளி'யில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியேற்றுத் தொடர்ந்து இருபத்தைந்தாண்டுகள் சிறக்கப் பணிபுரிந்தனர். 1942இல் அண்ணாமலைப்பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சிக் குழுவில் பணியாற்றும் வாய்ப்பு எய்திய போது சிறந்த பல நூல்களை இயற்றித் தந்தனர். மதுரைத் திருவள்ளுவர் கழகத்தார் பொன்னாடை போர்த்தி, 'ஆராய்ச்சிப் பேரறிஞர்' என்னும் அரிய பட்டத்தை வழங்கினர். சென்னை எழுத்தாளர் சங்கம் இவர் தமிழ்ப் பணியைப் பாராட்டிக்கேடயம் வழங்கியது. 'சமன் செய்து சீர்தூக்குங் கோல் போலமைந்து' தமிழாராய்ச்சிப் பணிபுரிந்த இவர், 2-1-1960 இல் இறைவன் திருவடி நீழலை எய்தினர்.



சைவசமய குரவருள் ஒருவராகிய மணிவாச்கப்பெருமான் நிலவிய காலம் யாது என்பதை ஆராய்ந்து எழுதியுள்ள பேரறிஞர் பலர் ஆவர். அவர்கள் கி. பி. முதல் நூற்றாண்டு முதல் பதின்மூன்றாம் நூற்றாண்டு வரையில் வெவ்வேறு காலப் பகுதிகளை இவ்வடிகளின் காலமாகக் குறித்துள்ளனர். எனவே, தமிழ் இலக்கிய வரலாற்றில் இவ்வடிகள் காலத்தைப் போல் மயக்கத்தை உண்டு பண்ணியது வேறு ஒன்றும் இல்லை எனலாம். அடிகள் பால் கொண்ட ஒருவகையான அன்பினாலும் வேறு சில காரணங்களாலும் அவர்கள் கூறும் பலதிறப்பட்ட முடிபுகள் உண்மையை உணர்த்துவனவாயில்லை. தமிழ் இலக்கிய வரலாற்றை ஆராய்பவர்களுக்கு இத்தகைய நிலை பெரியதோர் இடர்ப்பாட்டைத்தான் தருகின்றது.

ஒருமொழியின் இலக்கிய வரலாற்றால்தான் அம்மொழியின் பழமையையும் பெருமையையும் பலரும் நன்குணர்ந்து கொள்ளமுடியும். அறிஞர்கள் மதிக்கத்தக்க சிறந்த முறையில் இலக்கிய வரலாறு அமையவேண்டுமாயின், முதலில் நூலாசிரியர்கள் வாழ்ந்த காலங்களைச் சமயச் சார்புபற்றி நடுவு நிலைமை திறம்பாமல் உண்மையை உணரும் உயர்ந்த குறிக்கோளுடன் ஆராய்ந்து வரையறை செய்வது இன்றியமையாததாகும். நூல்களில் காணப்படும் அகச்சான்றுகளையும் மதிப்பிற்குரிய புறச் சான்றுகளையும் தக்க ஆதாரங்களாகக் கொள்ளவேண்டும். செவிவழிச் செய்திகளைச் சிறந்த ஆதாரங்களின்றி ஏற்றுக்கொள்ளுதல் கூடாது. ஆதாரமற்ற கற்பனைச் செய்திகளை முற்றிலும் விலக்குதலும் வேண்டும். இக் கருத்துக்களை உளத்திற்கொண்டு எழுதப்பெற்ற கால ஆராய்ச்சியே நேர்மையான இலக்கிய வரலாற்றிற்கு உறுதுணையாகும் என்பது தேற்றம்.

இனி, மாணிக்கவாசகர் காலத்தை ஆராய்ந்து முடிவு கண்ட அறிஞர்கள் இருவகைப்பட்ட கொள்கைகளையுடையவராயிருத்தல் காணலாம். அவற்றுள் ஒன்று, இவ்வடிகள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள் ஆகிய சமய குரவர் மூவர்க்கும் முற்பட்டவர் என்பது; மற்றொன்று அவர்கட்குப் பிற்பட்டவர் என்பது. அடிகள் மூவர்க்கும் முந்தியவர் என்பதற்குக் காட்டப்படும் ஆதாரங்களை முதலில் ஆராய்ந்து பார்ப்போம்.

திருநாவுக்கரசர் திருவாரூர்ப்பதிகத்தில் 'நரியைக் குதிரை செய்வானும்' எனவும், திருவிசயமங்கைப் பதிகத்தில் 'குசையும் அங்கையிற் கோசமுங்கொண்டவ்—வசையின் மங்கலவாசகர் வாழ்த்தவே' எனவும், திருப்பூவணப்பதிகத்தில் 'வையைத் திருக்கோட்டில் நின்றதோர் திறமுந்தோன்றும்' எனவும், தனித் திருத்தாண்டகத்தில் 'குடமுழநந்தீசனை வாசகனுக்கொண்டார்' எனவும் கூறியிருப்பவை மாணிக்கவாசகர் வரலாற்றுப் பகுதிகளையுணர்த்தும் என்பது அவர்களது முடிபாகும்.

திருவாரூர்ப்பதிகத்தில் திருநாவுக்கரசர் தம் காலத்திற்குமுன் நிகழ்ந்ததோர் அரிய நிகழ்ச்சியை உணர்த்துவதாயிருந்தால் 'நரியைக்குதிரை செய்வானும்' என்று கூருமல் 'நரியைக் குதிரை செய்தானும்' என்றுரைப்பதோடு மணிவாசகப் பெருமானது பெருமை புலப்படுமாறு அடிகளது பெயரையும் கூறியிருப்பர். அங்ஙனம் சொல்லாமையால் 'நரியைக் குதிரை செய்வானும் நரகரைத்தேவு செய்வானும்' என்பன முதலாக அத் திருப்பாட்டில் கூறப்பெற்றவை எல்லாம் திருவாரூர்ப்பெருமானது முடிவிலாற்றலுடைமையை உணர்த்துவனவேயன்றி நிகழ்ந்த வரலாறுகளை எடுத்துரைப்பன அல்ல என்பது தேற்றம். எனவே, அத் தொடர் அடிகளைக் குறிக்கவில்லை என்பது தெள்ளிது.

திருவிசயமங்கைப் பதிகத்திலுள்ள 'மங்கலவாசகர்' என்ற தொடர் மாணிக்கவாசகரைக் குறிக்கும் எனல் பொருந்தாது. மங்கலவாசகர் 'குசையும் அங்கையிற் கோசமுங்கொண்டவர்' என்பது திருநாவுக்கரசரது திருவாக்கினுல் அறியப்படுகிறது. அடிகள் அவற்றை அங்கையிற் கொண்டவர் என்பதற்குச் சான்றில்லை. அன்றியும், மங்கலவாசகரை மாணிக்கவாசகர் என்று கொள்வது எங்ஙனம் ஏற்புடைத்தாகும். மாணிக்கவாசகர் என்ற பெயர் வழக்கே கி. பி. 13 ஆம் நூற்ருண்டில்தான் முதலில் காணப்படுகின்றது. அதற்கு முன்னர் அடிகள் பெருந்துறைப் பிள்ளை, திருவாதவூர்ச் சிவபாத்தியன், திருவாதவூராளியார், திருவாதவூர்த்தேவர், திருவாதவூரடிகள் என்றே வழங்கப்பெற்றுள்ளனர். ஆதலால் மங்கலவாசகர் என்ற தொடர் அடிகளை உணர்த்தாது என்பது திண்ணம்.

திருப்பூவணப்பதிகத்தில் 'வையைத் திருக்கோட்டில் நின்றதோர் திறமுந்தோன்றும்' எனத் திருநாவுக்கரசர் கூறியிருப்பது, திருப்பூவணத்தில் வையையாற்றங்கரையில் திருக்கோயில் கொண்டு சிவபெருமான் எழுந்தருளியிருப்பதை உணர்த்துவதேயாகும். மதுரைமாநகரில் வையையாற்றங்கரையில் சோமசுந்தரக் கடவுள் பிட்டுக்கு மண் சுமந்த வரலாற்றை அஃது உணர்த்துவதாயிருந்தால் அச் செய்தி தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கும் என்பது ஒருதலை. ஆதலால், அடிகள் வரலாற்ருேடு அதனை இணைத்துப் பொருள் காண்பது சிறிதும் பொருந்துவதன்று.

திருநாவுக்கரசரது தனித் திருத்தாண்டகத்திலுள்ள 'குடமுழநந்தீசனை வாசகனுக்கொண்டார்' என்ற தொடருக்கு நந்தியம் பெருமான் மாணிக்கவாசகராகத் தோன்றினர் என்று பொருள் கொள்வது எவ்வாற்ருனும் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. இதிலுள்ள வாசகன் என்ற சொல் மாணிக்கவாசகரென எங்ஙனம் பொருள்படும்? மாணிக்கவாசகர் என்ற பெயர் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டிலிருந்துதான் வழங்கத் தொடங்கியது என்பதும் அறிதற்குரியதாகும். மாணிக்கவாசகர் வரலாறு கூறும் பழைய தமிழ் நூல்கள் எல்லாம் நந்திதேவர் அடிகளாக அவதரித்தனர் என்று கூறவில்லை; ஆனல், கணநாதர் ஒருவர் அங்ஙனம் தோன்றினர் என்று கூறுகின்றன. எனவே, நந்திதேவர் மாணிக்கவாசகராக அவதரிக்கவில்லை என்பது நன்கு தெளியப்படும். ஆகவே, திருநாவுக்கரசர் தம் பதிகங்களில் மாணிக்கவாசகரைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை என்பது தெளிவாகப் புலப்படுதல் காண்க.

சுந்தரமூர்த்திகள் தம் திருத்தொண்டத்தொகையில் 'பொய்யடிமையில்லாப்புலவர்' என மாணிக்கவாசகரைக் குறித்துள்ளனர் என்பது அன்னேர் எடுத்துக்காட்டும் ஒரு சான்ருகும். பொய்யடிமையில்லாப் புலவரை மாணிக்கவாசகர்

என்று ஏற்றுக்கொண்டால் தனியடியார் அறுபத்து மூவரையும் அறுபத்து நால்வர் எனவும் தொகையடியார் ஒன்பதின்மரை யும் எண்மர் எனவும் கொள்ளவேண்டிய நிலைமை ஏற்படும். அவ்வாறு கொள்வது, சிவாநுபூதிச் செல்வர்களும் புலவர் பெரு மக்களும் ஆகிய நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார், உமாபதி சிவாசாரியர் என்போர், தம் அருள் நூல்களில் கூறி யுள்ள வரலாற்றுண்மைக்கு முற்றிலும் முரண்பட்டிருத்தல் காணலாம்; அன்றியும், தொன்றுதொட்டு வழங்கிவரும் முறைக்கும் மாறுபடுகின்றது. நம்பியாண்டார் நம்பி முதலாகவுள்ள மூவரும் பொய்யடிமை யில்லாப் புலவரை மாணிக்கவாசகர் என் றுதல் திருவாதவூரர் என்றுதல் யாண்டும் குறிப்பிடாமை அறியத்தக்கது. அவர்களுள் காலத்தால் முற்பட்டவராய், கி. பி. ஒன்ப தாம் நூற்றுண்டின் இறுதியிலும் பத்தாம் நூற்றுண்டின் முதற்பகுதியிலும் விளங்கிய நம்பியாண்டார் நம்பி, அத்தொடர் சங்கப் புலவர்களைக் குறிப்பதாகக் கருதியுள்ளமை அவரது திருத்தொண்டர் திருவந்தாதியால் நன்கறியப்படும் செய்தியாகும். எனவே, சுந்தரமூர்த்திகள் கூறியுள்ள பொய்யடிமை யில்லாப் புலவர் மாணிக்கவாசகர் அல்லர் என்பது நன்கு துணியப்படும்.

மாணிக்கவாசகர் திருஞான சம்பந்த ருக்கு முந்தியவர் என்பது பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடற் புராணத் தாலும் பரஞ்சோதி முனிவரது திருவிளை யாடற் புராணத்தாலும் அறியக்கிடக் கின்றது என்பர். இவ்விருபுராணங்களும் சிறந்த தமிழ் நூல்களே ; ஆனல் சரித்திர ஆராய்ச்சிக்குத் தக்க ஆதாரங்களாக அறி ஞர்களால் ஏற்றுக்கொள்ளப்படுவன அல்ல என்பதுபலரும்அறிந்ததேயாம். இவற்றை ஆதாரங்களாகக் கொண்டால் திருஞான சம்பந்தருக்குப் பல தலைமுறைகட்கு முந்திய வர் சுந்தரமூர்த்திகள் என்ற முடிபிற்கு வர வேண்டியிருத்தல் உணரற்பாலதொன்றும். இதுகாறும் விளக்கியவாற்ருல் மாணிக்க வாசகர் மூவருக்கு முந்தியவரல்லர் என் பது தெள்ளிதிற் புலப்படுதல் காண்க.

இனி, மாணிக்கவாசகர் மூவருக்கும் பிந்தியவர் என்பதற்குக் கிடைக்கும் ஆதாரங்களை ஆராய்ந்து பார்ப்போம்.

அடிகள் தம் போற்றித்திருவகவலில் 'சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி' எனவும், 'கலையார் அரிகே சரியாய் போற்றி' எனவும் கூறியுள்ளமை காண லாம். இவற்றுள், சிராப்பள்ளி என்பது 'சிரா' என்ற சமண முனிவரது தவப் பள்ளியாகக் கி. பி. 5, 6 ஆம் நூற்றுண்டு களில் இருந்தது என்பது அக் குன்றின் மேல் வரையப் பெற்றுள்ள கல்வெட்டால் அறியப்படுகின்றது. திருநாவுக்கரசர் பொருட்டுச் சிவபெருமான் நிகழ்த்தியரு ளிய அரிய நிகழ்ச்சிகளை யுணர்ந்து சமண சமயத்தை வெறுத்துச் சைவனுக மாறிய முதல் மகேந்திரவர்மன் என்ற பல்லவ வேந்தன் (கி. பி. 600-630) அச்சமணப் பள்ளியை இடித்து அங்குச் சிவன்கோயில் அமைத்தான் என்று தெரிகிறது. அக் கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமா னுக்கு வணக்கம் கூறியுள்ள மாணிக்க வாசகர், திருநாவுக்கரசருக்குப் பிந்தியவரா யிருத்தல் வேண்டும் என்பது திண்ணம்.

இனி, 'கலையார் அரிகே சரியாய் போற்றி' என்று பாண்டிநாட்டில் அரி கேசரி நல்லூரில் எழுந்தருளியுள்ள இறைவனுக்கு வணக்கம் கூறியுள்ள அடிகள், அவ்வூர் அப்பெயர் எய்திய பின்னரே இருந்தவராதல் வேண்டும். அது பாண்டிய அரசன் ஒருவன், தன் பெயர் அமைத்து வழங்கியதோர் ஊராகும். கடைச்சங்க காலத்தில் அரிகேசரி என்ற பெயர் வழங்கவில்லை. அக்காலத்திற்குப் பிறகு பாண்டி நாட்டில் களப்பிரர் என்ற அன்னியரது ஆட்சி நடைபெற்றது ; பின்னர், கி. பி. 575 முதல் 900 வரையில் பாண்டியரது முதற்பேரரசு சிறந்து விளங்கியது. அக்காலப் பகுதியில் பாண்டி நாட்டில் அரசாண்ட பாண்டி வேந்தர்கள் யாவர் என்பது வேள்விக்குடிச் செப்பேடு களாலும் சின்னமனூர்ச் செப்பேடுகளா லும் நன்கறியக்கிடக்கின்றது. அவற்றின் துணைகொண்டு ஆராயுமிடத்துச் செழியன், சேந்தன் என்பவனுடைய மகன் அரி கேசரி என்ற பெயருடையவன் என்று தெரிகிறது. இவன் கி. பி. 640 முதல் 670 வரையில் பாண்டி நாட்டில் ஆட்சி புரிந் தவன் ; திருஞான சம்பந்தரால் சைவ னுக்கப் பெற்றவன் ; 'நெல்வேலி வென்ற

நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்' என்று திருத்தொண்டத் தொகையில் சுந்தரமூர்த்திகளால் பாராட்டப்பெற்றவன். இவனது ஆட்சிக் காலத்தில் இவன் பெயரால் வழங்கப்பட்டதே அரிகேசரி நல்லூர் என்பது. எனவே, அவ்வூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்குத் தம் போற்றித் திருவகவலில் வணக்கம் கூறியுள்ள மாணிக்கவாசகர், இவ்வேந்தன் காலத்தினரான திருஞானசம்பந்தருக்குப் பிந்தியவர் என்பது நன்கு புலனுதல் காண்க.

இனி, சுந்தரமூர்த்திகள் தம் திருத்தொண்டத் தொகையில் திருவாதவூரடிகளைக் குறிப்பிடாமையொன்றே, அடிகள், அவர்கட்குக் காலத்தால் பிற்பட்டவர் என்பதைத் தெளிவாகப் புலப்படுத்துவதாகும்.

ஒட்டுடன்பற்றின்றி உலகைத்துறந்த செல்வராகிய பட்டினத்தடிகள் தம் திருவிடை மருதூர் மும்மணிக்கோவையில்,

'வித்தகப் பாடல் முத்திறத் தடியரும்
திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்'

என்று சமயகுரவர் மூவர்க்குப் பின்னரே மாணிக்கவாசகரைக் கூறியிருப்பது, அடிகள் மூவர்க்குப் பிந்தியவர் என்பதை வலியுறுத்துதல் காணலாம். அன்றியும், சமயகுரவர்களில் அடிகள் நான்காமவராக இறுதியில் வைத்துப் போற்றப்பெற்று வருவதும் மூவர்க்குப் பிந்தியவர் என்பதை யுணர்த்தும் என்பது சான்றோர்களது கருத்து.

இதுகாறும் விளக்கியவாற்ருல் மாணிக்கவாசகர் சமயகுரவர் மூவர்க்கும் பிந்தியவர் என்பது நன்கு துணியப்படும்.

இனி, மாணிக்கவாசகர் நிலவிய காலம் யாது என்பதை ஆராய்வாம். அடிகள் தாம் இயற்றியருளிய திருச்சிற்றம்பலக்கோவையாரில் 306, 327 ஆம் பாடல்களில் முறையே 'வரகுணனுந் தென்னவன் ஏத்து சிற்றம்பலத்தான்' எனவும், 'புயலோங் கலர்சடையேற்றவன் சிற்றம்பலம் புகழும்—மயலோங்கிருங்களி யானை வரகுணன்' எனவும் வரகுண பாண்டியனைப் பாராட்டியிருத்தலால் அவ் வேந்தன் காலத்தவராயிருத்தல் வேண்டும். கடைச்சங்ககாலத்தில் வரகுணன் என்ற பெயருடைய பாண்டியன் ஒருவனும் இல்லை. அக்காலத்திற்குப் பிறகு கி. பி. 575 வரையில் பாண்டி நாட்டில் நடைபெற்ற களப்பிரர் ஆட்சிக்காலத்தில் அடிகளால் கூறப்பெற்ற பெரும் புகழ்படைத்த வரகுணபாண்டியன் இருந்தனன் எனல் சிறிதும் ஏற்புடைத்தன்று. எனவே, அதற்குப் பின்னர் நிகழ்ந்த பாண்டியரது முதற்பேரரசில்தான் அடிகள் குறித்துள்ள வரகுணபாண்டியன் இருந்தனனுதல் வேண்டும். அப்பேரரசும் கி. பி. 575 முதல் 900 வரையில் நிலைபெற்றிருந்தது என்பது செப்பேடுகளாலும் கல்வெட்டுக்களாலும் அறியப்படுகின்றது. அக்காலப்பகுதியில் வரகுணன் என்ற பெயருடைய பாண்டியர் இருவர், பாட்டனும் பேரனுமாக இருந்தனர் என்பது சின்னமனூர்ச் செப்பேடுகளால் புலப்படுகின்றது. அவர்களுள் கி. பி. 862 முதல் 880 வரை அரசாண்ட இரண்டாம் வரகுணபாண்டியன் காலத்தில் மாணிக்கவாசகர் இருந்திருத்தல் வேண்டும் என்பது சிலர் கொள்கை. இதனை ஏற்றுக்கொள்வதில் சில தடைகள் உள்ளமையால், இதனையும் ஈண்டு ஆராய்தல் இன்றியமையாததாகும்.

அடிகளால் பாராட்டப்பெற்ற வரகுணபாண்டியன் காலத்தில் சோழநாடு அவனது பேரரசுக்கு உட்பட்டிருந்தது என்பது திருச்சிற்றம்பலக் கோவையாராலும் பட்டினத்தடிகளது திருவிடைமருதூர் மும்மணிக்கோவையாலும் அறியக்கிடக்கின்றது. இரண்டாம் வரகுணன் தந்தையாகிய சீமாறன் சீவல்லபன் என்பான் தன் ஆட்சியின் இறுதியில் கி. பி. 862 இல் நடந்த அரிசிற் கரைப் போரில் தோல்வி எய்திச் சோழநாட்டை இழந்துவிட்டான். அவனுக்குப் பிறகு அவ்வாண்டில் முடிசூடிய இரண்டாம் வரகுணன் தன்தந்தை இழந்த சோழநாட்டை மீண்டும் பெறும்பொருட்டுப் பெரும் படையுடன் சென்று, கி. பி. 880 ஆண்டின் தொடக்கத்தில் திருவிடைமருதூர்க்கு வடக்கே மண்ணி நாட்டிலுள்ளதும் தன் பாட்டன் முதல் வரகுண பாண்டியனது அரண்மனை இருந்தது

மாகிய இடவை நகரையும் அதனைச் சூழ்ந்த பகுதியையும் கைப்பற்றினன். அவன் சோழநாட்டில் ஒரு பகுதியைக் கைப்பற்றியதை அறிந்த பல்லவ அரசன் அபராஜிதவர்மனும் சோழமன்னன் முதல் ஆதித்தனும் கங்கநாட்டு வேந்தனாகிய முதல் பிருதிவிபதியின் துணைகொண்டு இரண்டாம் வரகுண பாண்டியனாகிய அவனை எதிர்த்துப் போர்புரிந்தனர். இறுதியில் கும்பகோணத்திற்கு வட மேற்கே ஐந்து மைலில் மண்ணியாற்றங் கரையிலுள்ள திருப்புறம்பயத்தில் கி. பி. 880 இல் நிகழ்ந்த பெரும்போரில் வரகுணன் தோல்வியுற்றுச் சோழநாட்டில் தான் கைப்பற்றிய பகுதியை இழந்து தன் நாட்டிற்குத் திரும்புமாறு நேர்ந்தது. இந் நிகழ்ச்சியை நோக்குங்கால் இரண்டாம் வரகுணன் காலத்தில் சோழநாடு பாண்டியரது ஆட்சிக்கு உட்பட்டிருக்கவில்லை என்பது தெள்ளிது. ஆகவே, மாணிக்க வாசகர் அப்பாண்டியன் காலத்தவரல்லர் என்பது தேற்றம். எனவே அடிகள் முதல் வரகுண பாண்டியன் காலத்திலிருந்தவ ராதல் வேண்டும்.

அவ்வேந்தன் கி. பி. 792 முதல் 835 வரையில் பாண்டி நாட்டில் அரசாண்டவன்; சோழநாடு, திருமுனைப்பாடி நாடு, தொண்டை நாட்டின் தென்பகுதி ஆகிய வற்றைக் கைப்பற்றித் தன் ஆட்சிக்கு உட்படுத்திய பேரரசன்; அவன் தொண்டை நாட்டில் பெண்ணையாற்றங் கரையிலுள்ள அரசூரில் தங்கியிருந்த போது திருநெல்வேலி மாவட்டம் அம்பா சமுத்திரத்துச் சிவன்கோயிலுக்கு நாள் வழிபாட்டிற்கு நிவந்தமாக 290 பொற்காசு வழங்கிய செய்தி அவ்வூர்க் கல்வெட்டொன்றில் காணப்படுகிறது. ஆகவே, அவனது ஆட்சிக்காலத்தில் பாண்டியரது பேரரசு மிக்க உயர்நிலையில் இருந்தது என்பது திண்ணம். எனவே, அவனைத் தான் மாணிக்கவாசகர் திருச்சிற்றம்பலக் கோவையாரில் பாராட்டியிருத்தல் வேண்டும் என்பது தெள்ளிது. பட்டினத் தடிகளும் நம்பியாண்டார் நம்பியும் முறையே தம் திருவிடை மருதூர் மும்மணிக்கோவையிலும் கோயிற்றிருப் பண்ணியர் விருத்தத்திலும் அவனது சிவ பத்தியின் பெருமையினை விளக்கியிருத்தல் காணலாம்.

இனி, மாணிக்கவாசகர் தம் போற்றித் திருவகவலில் 'மிண்டிய மாயா வாத மென்னுஞ் — சண்டமாருதஞ் சுழித்தடித் தாஅர்த்து' என்று கூறியிருப்பது, அடிகள் ஆதிசங்கரர் காலத்தில் இருந்தவர் என் பதை உணர்த்துகின்றது.

வேதாந்த சூத்திரத்திற்குச் சங்கர பாடியம் என்ற பேருரை வரைந்து அச் சமயத்தை யாண்டும் பரப்பிய ஆதிசங்கரர் கி. பி. 788 முதல் 820 வரையில் இருந்தவ ரென்பது வடமொழியிலக்கிய வரலாற்றை ஆராய்ந்த அறிஞர்களது கருத்தாகும். எனவே ஆதிசங்கரரும் அடிகளும் ஒரே காலப்பகுதியில் இருந்தவர்களென்பது வலியுறுதல் அறியத்தக்கது.

இதுகாறும் விளக்கியவாற்றால் முதல் வரகுணபாண்டியன் ஆட்சிக்காலத்தில் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதி யிலும் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி யிலும் மாணிக்கவாசகர் இருந்திருத்தல் வேண்டுமென்பது நன்கு புலப்படுதல் காண்க.

---

குறிப்பு: அடிகள் மூவருக்கும் முற்பட்டவர் என்பதை நன்கு வலியுறுத்துவதாக அப்பர் பெருமானார் அருளிய,

" எரிய ரைிறை யாரிடு காட்டிடை
நரியி னார்பரி யாமகிழ் கின்றதோர்
பெரிய னார்தம் பிறப்பொடு சாதலை
விரியி னார்தொழும் வீழி மிழலையே"

என்னும் இத் திருப்பாட்டு அமைந்திருக்கின்றதென்பர். இஃது அறிஞர்களால் ஆராயப்படத்தக்கது.

# ஆசீவகரும் சம்பந்தரும்

[திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்]

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராக நாளும் தமிழ்த் தொண்டாற்றிவரும் இவர் 8-1-1901 இல் தோன்றினுர். பி.ஏ., பி.எல்., எம்.ஏ., எம்.ஓ.எல். ஆகிய பட்டங்கள் பெற்றுள்ளார். 1933 இல் வித்துவான் தேர்வில் சென்னை மாநிலத்திலேயே முதல்வராகவெற்றிபெற்றுர். தருமபுரம், குன்றக்குடி ஆகிய மடங்கள் இவருடைய பெருமையை யுணர்ந்து, முறையே 'பல்கலைச்செல்வர்', 'பன்மொழிப்புலவர்' என்னும்



பட்டங்களை வழங்கிச் சிறப்பித்துள்ளன. இவருக்குத் தமிழ், ஆங்கிலம், பிரெஞ்சு, சர்மன், இந்தி, கன்னடம், மலையாளம், தெலுங்கு, வடமொழி முதலான பலமொழிப் புலமை உண்டு. சென்னை உயர்நீதி மன்றத்தின் வழக்கறிஞராகத் திறம்படத் தொழில் நடத்திவந்த இவர், சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். அரசியலாரின் பரிசுக்கும், அறிஞர்களின் பாராட்டிற்கும் உரித்தான பல நூல்களை இயற்றித் தந்துள்ளார்.

ஆசீவகம் என்பது தனி ஒரு சமயம். இதனைப் பின் பற்றியவர்கள் ஆசீவகர்கள். இவர்கள் துறவினை வற்புறுத்தியவர்கள்; (திகம்பரராய்) ஆடையில்லாராய்த் திரிந்தவர்கள். புத்தர் காலத்தும் மகாவீரர் காலத்தும் அவர்களோடு ஒருங்கு வாழ்ந்த ஒருவரே இம்மதத்தினைக் கண்டவர். இவர் பெயரை மஸ்கரிபுத்திரர் என்றும் முக்கலி புத்திரர் என்றும் சமண பௌத்த நூல்கள் கூறும். மற்கலி என்பது தமிழ்நாட்டில் வழங்கிய பெயர். நவகதிர் என்பது அவர்களுடைய மறைநூல்.

இவர்கள் கொள்கையைச் சுருக்கிக் கூறலாம்: நிலம், நீர், தீ, காற்று, உயிர் என்ற ஐந்துவகை அணுக்களும் (மூர்த்தத் திரவியங்கள்) வடிவுடை அடிப்படைப் பொருள்கள்; இவற்றின் கூட்டமே உலகம்; உள்ளது போகாது இல்லது வாராது. தோற்றம் என்பது உள்ளாழ்ந்தது மேல் வந்து மிதப்பதாம். அழிவது என்பது மேல் மிதந்தது, புலப்படாது, கீழ் ஆழ்ந்து போவதாம், பொருள்கள் எல்லாம் மாறுத நிலைபேறுடையவை; காலத்தைப் பற்றிப் பேசினுலும் காலம் என்பது ஒரு தத்துவம் அன்று; வெறும் வழக்கே ஆம்; மேலே கூறிய ஐந்து பொருள்களும் தத்தமக் கேற்ற இயல்புடையவேனும், குணம் என ஒன்ருே, காரணம் என ஒன்ருே, உள்ளவை அல்ல; இவையே உள்ள பொருள்கள்; காலம், குணம், காரணம் என்பவை வெறும் சொல்லே. குணமில்லர் (5812) என்று தேவாரம் கூறுவது குணம் என ஒரு தத்துவம் அல்லது உள்பொருள் இயைபு அல்லது தன்மையினும் வேருக இருப்பதனை ஒவ்வாத ஆசீவகக் கொள்கையினைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

ஆசீவகர் என்ற பெயரே இவர்களை இழிவாகக் கருதியவர் இட்ட பெயர் என்பதனை விளக்குகின்றது; துறவினை வயிற்றுப் பிழைப்பாகக் கைக்கொண்டவர்கள் என்ற இழிவுப் பொருளில் முதலில் பௌத்தர் முதலானேர் வழங்கினர். மகாவீரர், ஆசீவகர்களைப் பழிக்கும் இடம் ஒன்றில் ''பெண்ணெடு கூடினுலும் துறவி தீங்கொன்றும் செய்தவன் ஆகான்'' என்பது ஆசீவகர் கொள்கை எனச் சுட்டுகின்ருர். நீலகேசி ''அலப்பா தொழியேனிவ் ஆசீவகனை; அருகிருந்தார் தாமறிய ஆசீவகனை'' (687) என்று கூறுவதும் அதற்கேற்ப அதன் உரை ''அலப்பா தொழியேன்: அலையா தொழியேன், அருகிருந்தார் தாமறிய ஆசீவகனை;

எல்லாரு மறியத் தொழில் செய்து ஜீவிக் கின்றனை—தொழிலாவன. கர்ப்பநியாயம் (கருத்தரிக்கச்செய்தல்)முதலாயின'' என்று கூறுதலுங் காண்க.

''கணிகை நோன்பினர்'' என ஒரு வரைச் சம்பந்தர் குறிக்கின்ருர். க்ஷணிகத் யானத்தைக் குறிக்குமானல் இது பௌத் தர்களைச் சுட்டும். ''துறவியானலும் பிரம சரியம் காவாது பெண்ணேடு சேர்ந் தொழுகல் ஓர் அறம் எனக் கொள்வர்'' என ஆசீவகரைப் பற்றிப் பிறர் கூறுவது உண்மையானல், கணிகையாரோடு சேர் வதனையேநோன்பாகக்கொண்ட ஆசீவகர் எனப் பொருள் கூறலும் ஆம். சாதியில் நீங்கிய அத் தவத்தார் (74) என்பதும் இவர்களைக் குறிக்கலாம். ஆசீவகர்கள் கொல்லாமை, உண்மை, கள்ளாமை, வெஃகாமை என்ற நான்கையே கொண்டு பிரமசரியத்தைத் துறவின் அடிப்படை யாகக் கொள்ளாதவர்கள் என்று பலர் கொள்கின்றனர். இவ்வாறு சமணர், பௌத்தரும், ஆசீவகர் என்பார் ஒருவரை ஒருவர் பழிப்பது கொண்டே ஞான சம்பந்தர் எல்லோரையும் ஒருங்கு வைத் துப் பழிக்கின்ருர்.

ஆசீவகரும் சமணர்களும் திகம்பர ராய்த் திரிந்ததால் இருவரையும் ஒன் றெனப் பலர் மயங்கியதும் உண்டு. அடிப்படையில், ஆசீவகர்கள் "உண் டில்லை'' எனும் சமணர்போலக் கூருதவர்; அநேகாந்த வாதிகள். சைனர் "அயலியர் தாமல்லவாசீவகர்கள்: என்பதற்கு திகம் பரத்வமொப்பினும் அநேகாந்த வாதிகளா கிய நிர்க்கிரந்த ரல்லர் ஆசீவகர்'' என்று நீலகேசி உரை கூறுவது காண்க. சம்பந்தர் இவர்கள் எல்லோரையும் ஒருங்கு வைத் துக் கூறுவதும் இந்தக் கண்ணேட்டத்தில் எழுந்தது ஆகலாம்.

ஆச்சியப் பேய்கள்(1291)என்று ஞான சம்பந்தர் குறிப்பிடுகின்ருர். ''ஆச்சியம் கொண்டு'' என்பதற்கு ஹாஸ்யம் எனப் பொருள் கொண்டு, நகையை விளைவிக்கும் பேய்க்கோலத்தார் என்று பொருள் கூறு கிறது சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அக ராதி (Tamil Lexicon). ஆச்சியம் என்பது ஆசிவகத்தின் மருஉ ஆகலாம். ''ஆச்சியப் பேய்களோ டமணர் குண்டர் பேச்சிவை நெறியல்ல பேணுமின்கள் (1291)" என்ற பாட்டில் எதுகையை நோக்குதல் வேண்டும். இரண்டாவது அடியில் நான் காவது எழுத்து வகரமாக வருதலின் முதல் அடியிலும் நான்காவது எழுத்து வகரமாகக் கொள்ளுதல் கூடும். ஆசீவகர் என்பதில் இடையில் வரும் சகரம் இப்போதுபோல் அன்றி, முன் காலத்தில், இப்போது இரட்டித்த சகரம் ஒலிப்பது போலவே, ஒலித்து வந்தது என்று எண்ண இடம் உண்டு. அப்படியானல் இடையில் சகரம் விரித்தல் விகாரமாய் வருதற்கும் இடம் உண்டு. ஆச்சாரியர் என்பது முதலிய இடங்களிலும் சகரம் இரட்டித்தல் காண்க. சம்பந்தர் பாடும் இந்தப் பாட்டின் சந்தத்தில் முதற் சீரும் இரண்டாஞ்சீரும் பெரும்பான்மை யும் காய்ச்சீராக வருவதால் ''ஆச்சிவகப் பேய்களோடு'' என இருந்திருப்பினும் சீர் கெடாதாம். இவ்வாருனல் ஆசீவகர் களைச் சம்பந்தர் குறிக்கின்ருர் எனலாம். அவர்களை அமணரினின்றும் 'ஒடு'க் கொடுத்துப்பிரித்துப் பின் அமணர்களோடு ஒன்ருக்கிக்குண்டரின் நின்றும் வேறு பிரிக் கின்ருர் என்று கொள்ளலாம். அப்போது குண்டர் பௌத்தர்களைக் குறிப்பதாம். ''குண்டர்களோடு அரைக்கூறை இல்லா'' (53)என வருமிடங்களில் குண்டர் புத்தரைக் குறித்தல் காண்க. பல்சமண் என்று (43) சமணரைப்பலகூறு படுத்துக் கூறுவதால், அம்மணமாய்த் திரிவார் என்ற பொருளில் ஆசீவகர்களும் அவர்களில் ஒருவராய் அமணராதல் காண்க.

அசோகருடைய கல்வெட்டுக்கள், துறவிகளைக் கண்காணிப்பதற்கென அசோகன் சிலரை ஏற்படுத்தியதைக் கூறும்போது, ஆசீவகத் துறவிகளையும் குறிக்கின்றன. ஆசீவகர்களுக்குக் குகை ஒன்றும் அவன் தந்துள்ளான். இவர்கள் ஏகதண்டிகளாய் வாழ்ந்தார்கள். ஆதலின் ''தொடித்தலை விழுத்தண்டினர்'' என்ற சங்கப் புலவர் ஆசீவகராகலாம் என இத னல் திரு நீ. கந்தசாமிப் பிள்ளையவர்கள் கருதுகிருர்.

சிலப்பதிகாரத்தில் மாதவி பௌத்த மதத் துறவியாக, கண்ணகியின் தந்தை யும் கோவலனின் தந்தையும் முறையே

சைனத் துறவியும் ஆசீவகத் துறவியும் ஆகின்றார்கள். ஒவ்வொரு மதத்திற்கு ஒவ் வொருவராகப் பங்கிடுகின்றார் இளங்கோ அடிகள். மணிமேகலை சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதையில் சமணர் கொள்கைகளை அறிவதற்குமுன் ஆசீவகக் கொள்கையையே அறிகின்றாள். ''வானிடு வில்லின் வரவறியா'' எனவரும் நாலடி யாரின் அடியையே ஆசீவகத் தலைவனை விளக்கக் குறிப்பிடுவதை நீலகேசியிற் காண்கிறோம்.

ஆறுவது நூற்றாண்டினரான வராஹ மிஹிரர் ஆசீவகர்களைக் குறிக்கின்றார். ஏழாவது நூற்றாண்டில் ஹர்ஷ சரித்திரம் எழுதிய பாணர் மஸ்கரி (ஆசீவகர்) என்ற துறவிகளைக் கூறுகின்றார். தண்டெடுத்துச் சென்றதன் காரணமாகத் திருமாலின் அடி யாரான துறவிகளோடு இவர்களும் ஒன் றுவர் எனப் பிறர் மயங்கினர் என்பதனை வராஹ மிஹிர நூலுக்கு உரை எழுதிய பட்டோத்பலர் ஆசீவகர்களை ஏகதண்டிகள் என்றும், (நாராயணன்) திருமால் அடியார் என்றும் கூறுதலால் அறியலாம். இவர் கள் இருப்பிடத்தை குக்குட நகர் அல்லது உறையூருக்கு அருகிருந்த சமதண்டம் என்ற ஊராக நீலகேசி கூறும். சிவஞான சித்தியாரும் 13 ஆம் நூற்றாண்டில் ஆசீவக வாதத்தை மறுத்துக் கூறுகிறது. இவர்கள் அம்மணமாய் நின்ற நிலையால் ஒரு சிலர் இவர்களை அமணரோடு மயங்கிய மயக் கத்தை முன்னரே குறித்தோம். ஆசீவகர் கள் என்பது துறவையே வயிற்றுப் பிழைப்புக்கு வழியாகக் கொண்ட போலித் துறவிகளுக்கெல்லாம் பொதுப்பெயராய் வழங்கியது. இதன் காரணமாக அத் தகையார்களைக் கண்காணித்து ஆசுவ கடமை என்றதொரு வரிவகையினைத் தமிழரசர்கள் பிற்காலத்தே வாங்கிவந் தனர் என 13 ஆம் நூற்றாண்டு கல் வெட்டுக்கள் (S.I.I. Vol. 1 No. 88, 92, 108) நமக்குத் தெரிவிக்கின்றன. கி. பி. ஆறும் நூற்றாண்டில் இருந்து ஆசீவகர் இவ் வாறு பிறரொடு மயங்கி, முடிவில், மறைந் தனர் என்று கொள்ளுதல் வேண்டும்.

எனவே, சம்பந்தர் பாடல்கள் சமணர் களைப் பழிப்பது, சைனர்களை மட்டும் பழிப் பதாக அமையவில்லை என்று கொள்ளு தல் கூடும்.

ஏழாம் நூற்றாண்டிற்குப் பின் ஆசீ வகர்கள் கொள்கையால் வேறுபட்டுச் சிறந்து வாழ்ந்ததாகத் தெரியவில்லை. ஆனால், பழங் கொள்கையை ஆராயும் போது அப் பெயரைக் குறிப்பிடுவது 13 ஆம் நூற்றாண்டுவரை வழக்கமாக இருந்தது எனலாம்.

---

## ஆசீவக மதத் தோற்றம்

மக்கலி அல்லது மற்கலி என்பவர், ஆருகத மதத்தையுண்டாக்கிய மகா வீரரும், பௌத்த மதத்தை யுண்டாக்கிய கௌதம புத்தரும் உயிர் வாழ்ந்திருந்த அதே காலத்தில் இருந்தவர். மகாவீரர் ஆருகத மதக் கொள்கையை உலகத் தாருக்குப் போதித்து வந்த காலத்தில், அவரது புகழையும் செல்வாக்கையும் கேள்வியுற்ற மற்கலி அவரிடம் சென்று அவரைச் சார்ந்திருக்க விரும்பினர். ஆனால், மற்கலியின் மாறுபட்ட ஒழுக்கங்களையும் குணங்களையும் அறிந்த மகா வீரர், அவர் தம்மைச் சார்ந்திருக்க உடன்படவில்லை. ஆயினும், மற்கலி எவ் வாறே மகா வீரரின் உடன்பாடு பெற்று, அவருடன் சில ஆண்டு தங்கியிருந்தார். பின்னர், அவருடன் மாறுபட்டுத் தனியே பிரிந்துபோய், ஒரு புதிய மதத்தை உண்டாக்கினர். அதுதான் 'ஆசீவக மதம்' அல்லது 'ஆஜீவக மதம்' என்பது. ஆருகத மதக் கொள்கைகள் சிலவற்றையும், தாம் உண்மை என்று கண்ட கொள் கைகளையும் திரட்டி, மற்கலி இந்த மதத்தை உண்டாக்கினரென்று சொல்லப் படுகின்றது.

—மயிலை. சீனி வேங்கடசாமி, ''பௌத்தமும் தமிழும்''.

---

# இந்திய இசை

[இசைமணி, திரு. கா. சங்கரனார்]

திருநெல்வேலிவாழும் இவர் கடந்த இருபத்தைந்தாண்டுகளாகச் சிறந்த தமிழிசைத் தொண்டாற்றி வருகின்றார். இவர்தம் பணியைப் பாராட்டி 18-5-45 அன்று நெல்லையில் நடைபெற்ற கலைவிழாவில் இவருக்குப் பொற்பதக்கம் வழங்கப்பட்டது. 1946 இல் சென்னை மாநிலத் தமிழர் பன்னிரண்டாவது புலவர் மாநாடு நடைபெற்ற ஞான்று 'இசைமணி' என்ற பட்டம் தரப்பட்டது. 1956 ஆம் ஆண்டு, தென் திருவிதாங்கூர், நாகர்கோவில் இந்துக்கல்லூரி, மெய்கண்ட



குருகுல ஆதரவில் நடந்தேறிய சமய வளர்ச்சி மாநாட்டில் இவரால் நிகழ்த்தப்பெற்ற 'திருவாசக நிருத்த நாட்டிய'த்தைப் பாராட்டி 'முத்தமிழ் ஆசான்' என்ற பட்டம் வழங்கப்பெற்றுப் பொன்னாடையும் போர்த்தப் பட்டது. திருவாசக-திருப்பாவை நடனகலா நிகழ்ச்சிகளும், சிலம்பு, குறவஞ்சி ஆகியவற்றின் சில பகுதிகளைக்கொண்டு தயாரிக்கப்பெற்ற இலக்கிய நடனங்களும், இன்னிசை விருந்தும் இவரால் நிகழ்த்தப்பட்டு வருகின்றன.

பிற நாட்டின் படையெடுப்பாலும், சமயங்களாலும், இந்திய நாட்டின் பழைய பண்பாடு, நாகரிகம், மாறுபட்டும், மொழி, கலைத் துறைகளில் கலப்பும் சிதைவும் ஏற்பட்டன. உள்நாட்டுப் போராலும் பல மாற்றங்கள் அடைந்துள்ளன. இவற்றால் நன்மையும், தீமையும், உண்டு. இவற்றுள் இசையின்நிலை பற்றி அமைவது இக் கட்டுரை.

உணர்ச்சிகளையும், எண்ணங்களையும் வெளியிட்டு மகிழ்வது மனிதனின் இயல்பு; அவா. எண்ணத்தின் இனிமையை இலக்கிய வாயிலாக—உணர்வின் இனிமையை இசையின் வாயிலாக—மெய்க்குரிய செயலின் இனிமையைக் கூத்தின் வாயிலாக—பண்டைத் தமிழர் புலப்படுத்தினர்.

மனத்திலெழுந்த எண்ணத்தை வெளிப்படுத்துவது மொழி. மொழியின் பொருளினை, மெய்யின் வாயிலாகப் புலப்படுத்துவது செயல். ஆதலின் மனம், மொழி, மெய்யென்ற மூன்றும் ஒன்றோடொன்று தொடர்புடையன. எனவே அவற்றின் பயனாகிய முத்தமிழும் ஒன்றோடொன்று தொடர்புடையன.

மனம் நல்ல முறையிலியங்கி மக்கட் பண்புவளர—அறிவு, உணர்ச்சி, முயற்சி யெனக் கூறிய உளக் கூறுகள் மூன்றும் ஒன்றைவிட்டு ஒன்று நீங்காமல் இயங்க வேண்டும். இயலால் அறிவுக் கூறும், இசையால் உணர்ச்சிக் கூறும், இயலும் இசையும் சேர்ந்து பிறக்கின்ற நாடகத்தால் முயற்சிக் கூறும் வளர்ச்சியடைகின்றன. இவை ஒன்றுபட்டு இயங்கவே முத்தமிழை வகுத்தனர்.

## இசை

இனிய உணர்வு தரும் ஓசைத் தொகுதிகளே இசை. பல இயற்பாக்களுடன் நிறத்தை (இராகம்) இசைத்தலால் இசையென வழங்கப்பட்டது.

"பாவோ டணைதலால்
இசையென்றார் பண்ணென்றார்"

"பாடலும் பாணியும்[1] தூக்கும்[2]
கூடிய நெறியே இசை."

1. பாணி: தாளம்.
2. தூக்கு: தாள உறுப்புக்களிடையே நிகழும் கால அளவு.

ஆடல், பாடல், கருவி, ஆகிய மூன்றும் சேர்ந்தது இசை.

"கொட் டாட்டுப் பாட்டு"

"கொட் டாட்டுப் பாட்டாகி நின்ருனை"

என்பன போன்றவற்றைத் தேவாரங் களில் காண்கிருேம்.




இசை யென்பதைப் பொதுவாகச் "சங்கீதம்" என்றே இந்திய நாடு முழுவதும் அழைக்கின்றனர். இந்தியாவில் வழங்கும் இசையை மேற்கிசை, வட இசை, தென்னிசை என மூன்று பிரிவாகப் பிரிக்கலாம்.

### மேற்கிசை

ஆங்கிலேயர் இந்தியாவை ஆளத் தொடங்கிய காலத்தில்—"ஆங்கிலமும், கிறித்துவமும்" இந்தியாவில் பரவின. அதோடு கட்டிடக் கலையும், இசையும் சிறிதளவு பரவின. மொழி, நாகரிகம் பரவிய அளவிற்குக் கலைகள் பரவவில்லை யென்று சொல்லலாம். கிறித்துவ ஆலயங்கள் (சர்ச்சுகள்) மேற்கு நாட்டுக் கட்டிடப் போக்கிலெழுந்தன. ஓவியமும் மேற்கு முறைப் பயிற்சியால் இங்குத் தீட்டுகிருேம். இந்தியக் கிறித்துவர்கள் இறைவழிபாட்டிற்கு மேற்கிசை பயின்று சர்ச்சுகளில் பாடிவருகின்றனர். போர்க்கள இசைகளும் மேற்கிசையைப் பின் பற்றின. ஆங்கிலேயர் ஆட்சிமுதல் இந்தியாவில் மேற்கிசை பரவியது என்று கருதலாம். கடந்த சில ஆண்டுகளாகத் தமிழ்நாட்டுச் சர்ச்சுகளில் கர்நாடக இசையைக் கூடும் வகையால் பாடி வருகின்றனர். இந்தியப் பிற பகுதிகளில் எப்படியோ!

### இந்துஸ்தானி இசை

மகமதியர் படையெடுப்பிற்குப் பின்னுல், இந்திய இசை—வடஇசை, தென்னிசை யெனப் பிரிந்தது என்று கருதப் படுகிறது. மகமதியர் ஆளத் தொடங்கிய காலம், வடஇசையின் வளர்ச்சிக்கு ஆரம்ப காலம் என்று சொல்லலாம். மகமதியர் ஆட்சியால் அவர்கள் மதம், மொழி, நாகரிகம் ஆகியவை பரவின. இந்திய முஸ்லீம்கள், மகமதியர் பழக்க வழக்கங்களை அப்படியே பின்பற்றினர். இந்திய நாட்டில் கட்டிய இஸ்லாமியப் பள்ளிகள், மகமதியர் ஆலயப் போக்கிலே எழுந்தன. மகமதியர் ஆட்சியில் இசை வளர்த்த மன்னர்கள் இருந்தனர். தங்கள் ஆட்சிக்குழுவிலே இசைப் புலவர்களுக்கும் இடமளித்து, இசையையும் போற்றி வளர்த்தனர். அவர்களுள் அலாவுதீனும் ஒருவர். இவர் ஆட்சியில் அமீர்குசுரூ என்பவர் அவையின் இசைப் புலவராயிருந்தார். இவர் அரசியல் அறிஞர். பெர்ஷிய இசையை நன்கு பயின்றவர். ஒரே தன்மையாயிருந்த இந்திய இசையோடு பெர்ஷிய இசையை இணைத்தவர், "அமீர்குசுரூ." இவர் இணைத்த முறைதான் இந்துஸ்தானி இசை யென்ருயிற்று. இவர் காலந் தொட்டு "இந்துஸ்தானி—கர்நாடகம்"—என இசை பிரிவுற்றது என்று சொல்லலாம்.

### கர்நாடக இசை

தமிழ்நாடு இந்தியா முழுவதும் சுமாத்திரா, ஜாவா முதலிய தீவுகளை உள்ளடக்கிய பெருநிலப் பரப்புமாயிருந்து, குமரிநாடு என வழங்கப்பட்ட காலத்தில் இசைத்தமிழ் இந்திய நாடு முழுவதும் பரவியிருந்தது என்பது வரலாறு. விந்திய மலைக்குத் தெற்கேயுள்ள நிலப் பரப்பை இந்தியத் தென்பகுதி என்றழைத்தனர். தென்பகுதி இசையே, "கர்நாடக சங்கீதம்".

### கர்நாடகம்

தென் இந்தியா மூன்று பக்கங்களும் கடலால் சூழப்பட்டமையால் "கரை நாடு அகம்" என்று பெயர் பெற்றது.

"படு திரை வையம்"

"ஒல்லெனத் திரை பிறழிய இரும் பௌவத்து"

'குணஅது கரைபொரு தொடுகடல்
குடாஅது தொன்று முதிர் பௌவத்தின் குடக்கு'

"இமிழ்கடல் வரைப்பில் தமிழகம் அறிய"

"நீலத்திரைக் கடல் ஓரம்..."

என்றெல்லாம் செந்தமிழ் நாட்டைக் கரை சூழ்ந்த நாடு என்று அழைத்தனர். கரை சூழ்ந்த இடமாதலால் "கரை நாடு அக" மென்ருயிற்று. பின் கர்நாடகம் எனத் திரிந்து—கரை நாட்டு இசையும் "கர்நாடக சங்கீதம்" என மாறியது.

வடநாட்டினின்றும் தென்ஞடு வந்தவருள் இசையறிவு பெற்றவர் இங்குள்ள இசையைக் கற்றனர். இவர்களால் கொண்டுபோகப்பட்ட கர்நாடக இசை, அவரவர் மொழி இட வேறுபாடு அறிவு நிலைகளுக்கேற்பச் சில மாறுபாடுடன் வழங்கலாயிற்று. தென்ஞட்டினின்றும் பல நாடு சென்ற இசை, மாறுபாடுடன் இந்நாடு வந்தபோது, இங்குள்ளவர், தம் பொருள் திரும்பி வந்தது என்று அறியாதவர் போலாகி வழங்கி வந்த இசையினும் வந்ததை வரவேற்று மதித்தனர்; கற்றனர்.

### சங்க காலத்தில்!

ஏறக்குறையக் கி. மு. ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முன் முதற்சங்கம் நிலவியதாக ஆராய்ச்சியாளரின் கருத்து. முதற்சங்க காலத்தில்–"பெருநாரை" "பெருங்குருகு" என்ற பேரிசை நூல்கள் வளர்ந்திருந்தன.

கி. மு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இடைச் சங்க காலம். இக்காலத்தில் "இசை நுணுக்கம்" என்ற இசைநூல் சிறந்து விளங்கியது. இடைச்சங்க நூலாகிய தொல்காப்பியத்துள் "நரம்பின் மறை" என்ற பெயரால் இசை நூல் குறிக்கப் பெற்றுள்ளது.

கி. மு. முந்நூறு ஆண்டுகளுக்கு முன் கடைச் சங்கம் நிலவியது. இக்காலத்து நூலாகிய சிலப்பதிகாரத்தில் ஆடல், பாடல், யாழ், குழல், முழவு-பற்றிய குறிப்புக்களும், முறையே ஆடுநர், பாடுநர், வாசிப்பவர், அறிந்துகொள்ள வேண்டிய முறைகளும், ஒருநிலையில் (ஸ்தாயி) உள்ள நரம்பு (சுரம்)களும், அலகு (அளவு) களும், திறங் (கிளை இராகம்) களும், பண் (தாய் இராகம்)களும், மற்றும் பிற இசை நுணுக்கங்களும் காணப்படுகின்றன.



### இசைக்கலைச் சொற்கள்

பண்டை இசை நூல்கள் - இருந்து, மறைந்தன என்பதை, அடியார்க்கு நல்லார் உரையின் வாயிலாக அறிகிருேம். மறைந்த இசையின் வழிநின்று இசைத் தமிழ் இயற்றப்பட்டும், பயிலப்பட்டும், வந்தன என்பது: சோழனவையில் நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து, ஆடிய மாதவியின் சிறப்பும், ஆடலாசிரியன், பாடலாசிரியன், கவிஞன், தண்ணுமை, குழல், யாழ் முதலிய ஆசிரியரின் அமைதியும் சிலப்பதிகார அரங்கேற்று காதையால் அறியலாம். இவற்றைக் குறிக்குஞ் சொற்கள் தமிழ்ச் சொற்களே!

இன்றைய வழக்கத்தில் இருந்து வருகிற பரதர் முதலியோரின் இசை நூல்கள் தோன்றுவதற்கு முன்பே சிலப்பதிகாரம் தோன்றியது. சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட இசைக்கலைச் சொற்கள்—ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இசைத் தமிழில் வழங்கிய சொற்கள்.

பண்டைத் தமிழர் பயின்றும் வழங்கியும் வந்த கலைச் சொற்கள் வருமாறு:—

கேள்வி: இது இப்பொழுது "சுருதி" என்று வழங்கப்படுகிறது. ஏழிசையைத் தொடங்குவதற்கான அடிப்படை ஒலி கேள்வி என்பது. இவ்வொலி உந்தி முதல் உச்சிவரை மேலும் கீழும் நிலவி அவரவர்கள் குரலுக் கேற்பக் கழுத்தில் நின்று ஒலிப்பது கேள்வி.

ஏழிசை: "நரம்பு" என்பதும் இது தான். "சுரம்' என்பது இன்றைய வழக்கு. ஏழிசையின் வரிசையைக் "கோவை" என்றழைத்தனர்.

### ஏழிசைப் பெயர்களும் குறியீடுகளும்

| | தமிழ்ப் பெயர்கள் | குறியீடு | தற்காலம் வழங்கும் பெயர்கள் | குறியீடு | மேற்கிசை குறியீடு |
|---|---|---|---|---|---|
| 1 | குரல் | ஆ | சட்ஜம் | ச | DO |
| 2 | துத்தம் | ஈ | ரிஷபம் | ரி | RE |
| 3 | கைக்கிளை | ஊ | காந்தாரம் | க | MI |
| 4 | உழை | ஏ | மத்யமம் | ம | FA |
| 5 | கிளி | ஐ | பஞ்சமம் | ப | SOL |
| 6 | விளரி | ஓ | தைவதம் | த | LA |
| 7 | தாரம் | ஔ | நிஷாதம் | நி | SI |

இவ் வேழிசையை ஒலிப்பதற்குக் கருவியாகக் கொள்ளப்பட்ட எழுத்துக்கள் நெட்டுயிர். இவைதாம் குறியீடு எனப் பெறும்.

"ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ வெனும்
இவ்வே ழெழுத்தும் ஏழிசைக் குரிய"
(திவாகரம்)

நெட்டுயிர் ஏழினையும் கருவியாக, குறியீடாகக்கொண்டு இசை பயின்றனர்; பாடினர். நெட்டுயிரேழும் "ச ரி க ம ப த நி" என்ற குறியீட்டால் இக்காலம் வழங்கப்படுகிறது. இவற்றை மேற்கிசையில் முறையே "DO-RE-MI-FA SOL-LA-SI" என்றழைக்கின்றனர்.

### பண்

"பண்" என்பது "இராகம்." ஏழிசையில் பிறக்கும் ஒலிகள் பல மாறுதலடைகின்றன. இவற்றைக் கேட்பதால் உண்டாகு மின்ப உணர்வே "பண்". இனிய மென்மையான ஓசைத் தொகுதிகளே பண். இது பண் - திறம் - என இரு வகைப்படும்.

"நிறை நரம்பிற்றே பண்ணென லாகும்
குறை நரம்பிற்றே திறமெனப் படுமே"
(திவாகரம்)

ஏழு நரம்பு (சுரம்)களை உடையது பண். இது இராகாங்கம் - ஜனக - மேளகர்த்தா தாய்இராகம் என வழங்கப்படுகிறது. ஏழிற்குக் குறைவான நரம்புகளை உடையது "திறம். இது உபாங்கம் - ஜன்யம் - கிளைஇராகம்" என்று வழங்கப்படுகிறது.

பண் பாடும் முறை ஆளத்தி என்பது. இந்த ஆளத்திதான் "ஆலப்தி - ஆட்சிப்திக" என மாறியது. இராக ஆலாபனை என்பதும் இதுதான்.

### பண்களிற் சில

| தமிழ்ப்பெயர் | தற்காலம் வழங்கும் பெயர் |
|---|---|
| 1. செம்பாலைப்பண் | தீரசங்கராபரணம் |
| 2. படுமலைப் பாலைப்பண் | கரஹரப்பிரியா |
| 3. அரும்பாலை | கல்யாணி |

### திறம் (கிளை)

| | |
|---|---|
| 1. புற நீர்மை | பூபாளம் |
| 2. தக்கேசி | காம்போஜி |
| 3. கௌசிகம் | பைரவி |

### இசைத் தமிழ் ஏன் அழிந்தது

நாட்டிலே நிகழ்ந்த பிறநாட்டுப் படையெடுப்பு - மதமாற்றம் - ஆகியவற்றால் பண்பாடு - நாகரிகம் - மொழி - கவின்கலைகள் - இசைக்கருவிகள் மறைந்திருக்கலாம். தென்னாட்டின் உள்நாட்டுப் போராலும் நகரங்கள், அம்பலங்கள் அழிந்துபட்டன.

கூத்தர் முழவொடு யாழிசை கேட்டு மகிழ்ந்த மன்றங்களில், நரிகள் ஊளையிட, அழுங்குரல் கூப்பிடும் கூகையோடு, கோட்டானுங் கூவ—ஆண்பேய்களோடு, பிணந்தின்னும் பெண்பேய்கள் கூடிக் களித்த அச்ச நிலையை,

"அருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின்
முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த
திரிபுரி நரம்பின் தீந்தொடை யோர்க்கும்
பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்துச்
சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி
யழல்வா யோரி யஞ்சிவரக் கதிர்ப்பவும்
அழுகுரல் கூகையோ டாண்டலை விளிப்பவுங்
கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப்
பிணந்தின் யாக்கைப் பேய்மக டுவன்றவும்"

என்று பட்டினப் பாலையால் அறிகிறோம். எனவே தமிழகத்தில் நிகழ்ந்த உள் நாட்டுப் போரால் நகரங்கள், அம்பலங்கள், கலைமன்றங்கள், இசைக்கருவிகள் மற்றும் பலவும் பாழ்பட்டிருக்கின்றன.

போர்வெறிச் செயலால் மடிந்த கூத்தர், பாணர் எத்தனை யெத்தனையோ! கூத்தர் பாணர், அழிவால் அவர்கள் அரிது பெற்ற இசை நுணுக்கங்கள், கையாண்ட கருவிகள், வழிவழியாய்ப் பெற்ற பிற உண்மைகளைப் பின் உள்ளவர்கள் அறிவதற்கு இயலாது போயிருக்கலாம்.

### கர்நாடக சங்கீதம் வழங்கும் பகுதிகள்

இந்தியாவின் வடபகுதியில், இந்துஸ்தானி இசை வழங்குவதுபோல—தமிழ், மலையாளம், கன்னடம், ஆந்திரம் உள்ளிட்ட தென்பகுதியில் கர்நாடக இசை

கையாளப்படுகிறது. கன்னடமுங் களி தெலுங்கும், கவின் மலையாளமும் துளுவும், தமிழ் உதரத்தே யெழுந்து ஒன்று பல ஆயிடினும், தொன்று தொட்டு வந்த இசைத்தமிழ் "கர்நாடக சங்கீதம்" என்ற பெயரால் அவரவர்களின் மொழிக்கேற்ப இன்றும் நின்று நிலவி வருகிறது.

பழந் தமிழ் மக்கள் இசையில் மிகுந்த ஆற்றலும், அவாவும் உடையவரா யிருந்து, இசைத்தமிழைக் காத்தனர். பல அரசியல், சமய, இடையூறுகள் ஏற்பட்டும், மூவரும், ஆழ்வார்களும் இசையைக் காத்தனர். இவர்களுக்குப் பின் தோன்றிய அருணகிரியார், முத்துத் தாண்டவர், அருணசலக் கவிராயர் போன்றவர்களும் இசைத் தமிழை வளர்த்தனர். இவர் களுக்குப் பின் தோன்றிய சங்கீத திரு மூர்த்திகள் என்று சொல்லப்படும் தியாகய்யா, சாத்திரிகள்–தீக்ஷிதர் ஆகியோ ரால் தமிழிசை வளர்ச்சி சிறிது குன்றியது.

தமிழராய்ப் பிறந்தவரும், தனக்குப் பால் நினைந்தூட்டிய தாயை மறந்தனர். தாயினுஞ் சிறந்தவளாக, பிறமொழித் தாயிடம் அன்பு கொண்டனர். பிறமொழியி லிசை நூல்களும், உருக்களும் உண்டு பண்ணினர். இவர்களியற்றிய இசை நூல் களும் உருப்படிகளும், பண்டைய இசைத் தமிழைத் தழுவி ஆக்கப்பட்டன. நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் அருட்பணி நின்றது. இசையரங்கு, நாட்டிய அரங்கு, யாவற்றிலும், பெரும்பாலும் தமிழிசைப் பாடல்கள், பதங்கள், பாடுவதும் நின்றது. தேவாரம், திருப்புகழ் போன்ற இன் னிசைப் பாக்கள் "துக்கடா"வாக ஒதுக்கப் பட்டன. தமிழில் இசை கிடையாது, தமிழ்ச் சொற்கள் இசைக்கு இனிமை பயக்கா என்ற போலி உரைகள் மாநாடு கூட்டிப் பேசும் அளவிற்கு இடம் பெற்றது. இப்போது தமிழிசை முன்னேற் றத்திற்குக் காரணம் அரசர் அண்ணமலை யார் தொடங்கிவைத்த தமிழிசை இயக்க மேயாம்.

தமிழ்நாட்டுக் கலை அரங்கங்களில், பிற மொழி ஆதிக்கத்தைக் கண்ட அரசர் அண்ணமலையாருக்கு உள்ளத்திலே கவலை எழுந்தது. தமிழிசை மாநாடு கூட்டினர். மாநாட்டிலே தக்க இசைவாணர்களைக் கொண்டு, தமிழ்ப் பாடல்களையே முழு வதும் பாடுவதற்கான நிலையை உண்டு பண்ணினர். சில்லரை, துக்கடா எனப் பின் ஒதுக்கப்பட்ட தமிழிசைப் பாடல்கள் முன்னிடம் பெற்றன.

இசையை வளர்க்கிரேம் என்று சொல்லித் திரிகின்ற சில சங்கங்கள், இந்துத்தானியை முழுவதும் பாடுகின்ற வர்களுக்கு இடங்கொடுத்தாலும், தமிழிசை பாடுகின்றவர்களுக்கு இடம் அளிப்ப தில்லை. இந்த நிலை நீங்கவேண்டும். எங் கணும் தமிழிசை முழக்கம் கேட்கவேண்டும்.

தமிழனை ஆட்சி நடத்தும் நற்காலம் வந்துவிட்டது; செந்தமிழ்த் தாயை முத் தமிழால் அணி புனைந்து அழகொழுகப் பார்ப்போமாக. தமிழிசை தெருவெல்லாம் செழித்து - வீடெல்லாம் செழித்து, வானெலியில் செழித்து, கலை மன்றமெல் லாம் செழித்து வளரச் செய்வோம். வாழிய முத்தமிழ்.

---

## சுந்தரர் தேவாரம்

"ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமா யான்செய்யுந் துரிசுகளுக் குடனுகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என்னாரு ரிறைவனையே".

—எ. நிக-கo.

குறிப்பு: துரிசுகளுக்குடனுத லென்பது வினைப்பயன்களைத் துய்ப்பித்தற் பொருட்டுப் புரியும்போதே தடுத்துவிடாது புரியவிட்டு ஒறுத்துப் பொறுத்தல். துரிசு-குற்றம்.

# தமிழ் இலக்கணச் சிறப்பு

[பண்டித வித்துவான், திரு. தி. சங்குப் புலவர்]

இவர் நெல்லை மாவட்டம், கருவைநல்லூரையடுத்த எட்டி சேரி என்னும் ஊரில் 31-8-1893 இல் தோன்றினர். தந்தையார் திருமலை வேற்கவிராயர்; தாயார் வீரம்மாள். தந்தையாரிடத்தி லேயே தமிழ் இலக்கண இலக்கி யங்களைக் கற்ருர். சில காலம் கூலவாணிகம் நடத்தினர். 1926 இல் சென்னை மாநிலத்தி லேயே மதுரைத் தமிழ்ச் சங்கப் பாலபண்டிதத் தேர்வில் முதல்வ ராகத் தேர்ந்து தங்கப் பதக்கத் தையும், 1929 இல் பண்டிதத் தேர்விலும் தேர்ந்து தங்கத்



தோடாவையும், 1936 இல் வித்து வான் தேர்விலும் முதல்வராகத் தேறி ஆயிரம் வெண்பொற்காசு களையும் பரிசிலாகப்பெற் ருர். சிதம்பரம் மீனுட்சி ஓரியண் டல் பயிற்சிக் கல்லூரியிலும் பயின்று நற்சான்றிதழ் பெற் றுள்ளார். மதுரை மாவட்டங் களின் கழக உயர்நிலைப் பள்ளி களில் தமிழாசிரியராக முப்ப தாண்டுகள் சிறந்த தமிழ்ப்பணி புரிந்துள்ளார். திருச்சி, தமிழகப் புலவர் குழுவில் ஒருவராக இருக்கின்ருர். இப்போது கழகப் புலவராக இருந்து வருகிருர்.

## முன்னுரை

மலர்தலையுலகின் வழங்கிய மொழிகள் பல. வழங்குகின்ற மொழிகள் பல. இனி மேல் வழங்குவதற்கு வரும் மொழிகளும் பலவாம். இவற்றுள் உலக வழக்கில் மட் டும் இப்போது உலவுவன சில; செய்யுள் வழக்கில் மட்டும் சேர்ந்து நிற்பன சில; உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் ஒருங்கு நின்று நிலவுவன சில; புதிதாகத் தோன்றிய சில; பழமையாகிப் பெயரளவில் மறைந்து நிற்பன சில. இளமையில் இறந்தன சில. முதுமையில் முடிந்தன சில; மொழி வரலாறு ஆராய்வார்க்குப் புதுமையும் பெருமையுந் தோற்றி மதி மருட்கை விளைக்கும். மக்கள் வாழ்க்கை போல ஒரு வரையறையின்றிப் பிறப்பும் இறப்பும் பெற்றுப் பல்வேறு நாட்டிற் பல்வேறு மொழிகள் வழங்குகின்றன எனக் காண்கின்ரேம். அங்ஙனம் வழங்கு மொழிகளில் நமது இந்திய நாட்டு மொழி களாக எண்ணப்படுவன பல. அவற்றுட் சிறப்புடையன ஆரியமும் தமிழும் ஆம். ஆரியம் வடக்கே வழங்கியதால் வட மொழி எனவும், தமிழ் தெற்கே வழங்கிய தால் தென்மொழி எனவும் பெயர்பெற் றன. வடமொழி உலக வழக்கில் உல வாது, செய்யுள் வழக்கில் மட்டும் சிறந்து நின்று சீர்கேடு அடைந்தது. தமிழ் மொழியோ உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் ஒப்பநின்று, குன்ருததாய், என்றும் நின்று நிலவி உலவுகின்றது. முன்னைப் பழம்பொருட்கு முன்னைப்பழம் பொருளாய்ப், பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனுய், ஆதியும் அந்த மும் இல்லா அரும்பெருஞ் சோதியாய் இறைவன் நிற்பதுபோல, நமது தாய் மொழியாகிய தமிழும், முதுமையும் புதுமையும் உள்ளதாய், முதலும் முடிவும் இல்லாததாய், எங்கும் ஒளிவீசி, உயர் தனிச் செம்மொழியாக வளர்ந்து வருவது தமிழர் செய்த தவப்பேறேயாம். பொதியம் என்னும் பொருப்பிற் பிறந்தது. பாண்டிய மன்னர் புகழில் வளர்ந்தது; சங்கத்தில் தங்கியிருந்தது; நெருப்பிலும் வேகாது நின்றது; நீரிலும் எதிரேறிச் சென்றது; கற்றவர் உள்ளம் கனியநடந்தது; பூமகள் மருங்கிற் பொருந்தி வளர்கின்றது செந் தமிழ் என்னும் செல்வக்குழவி. இதனைத் தெய்வத் தன்மையுடையது எனச் செப்பு வது தக்கதன்ருே? இத்தகைய பெருமை வாய்ந்த தமிழ்மொழியின் இலக்கணங் களும் மிகச் சிறந்தனவே. என் சிற்றறிவிற்

கெட்டிய சிறப்பியல் சில செப்புகின்றேன்.

### இலக்கண நூல்களும் அவற்றின் சிறப்பும்

நமது தமிழ் மொழி இலக்கண நூல்களிற் கடல்கோளாற் கெட்டனவும் கரையான்வாய்ப் பட்டனவும் நீங்க எஞ்சி நிற்பன சிலவே. அவை தொல்காப்பியம், பன்னிரு பாட்டியல், இறையனுரகப் பொருள், நன்னூல், நம்பியகப் பொருள், புறப்பொருள் வெண்பா மாலை, யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம், நேமிநாதம், வீரசோழியம், தொன்னூல் விளக்கம், இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கம், சிதம்பரப் பாட்டியல், வெண்பாப் பாட்டியல் ஆகிய நூல்களே. இவற்றுள் எளிதாகக் கற்கப் பயன்படும் நூல்கள், நன்னூல், நம்பியகப் பொருள், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம் என்பன. தொல்காப்பியம் எல்லாவற்றிற்கும் துணையாக நின்று பண்டைத் தமிழர் பெருமையை எடுத்துக் காட்டுதற்கு ஏதுவாய் இலங்குகின்றது. பன்னிரு பாட்டியலும் பழமை வாய்ந்த நூலாகத் தமிழ்ப் பெருமையை விளக்கி நிற்கின்றது. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென ஐவகையாகப் பகுத்தனர் ஆன்ருேர். தமிழ் மொழியிலக்கணம் தனிச் சிறப்புடையது. மற்றை மொழிகளின் இலக்கணம் போன்றதன்று. எழுத்தின் ஒலி நுட்பம் உணர்ந்து இன்ன இன்ன இடத்தில் இன்ன இன்ன எழுத்துப் பிறக்கும் எனப் பிறப்பிலக்கணம் கூறியிருப்பதும், அதற்குப் பொருத்தமாகப் புணர்ச்சியிலக்கணம் விரித்துக் கூறியிருப்பதும் அதன் சிறப்பைப் புலப்படுத்தும். அன்றியும் சொல்லில் வினைக்குறிப்பு, அன்மொழித்தொகை, ஆகுபெயர் இவற்றின் இலக்கணமும், பொருளில் அகப்பொருள், புறப்பொருள் எனப் பகுத்துத் தமிழர் காதலும், வீரமும் வண்மையும் விளக்கியிருப்பதும், யாப்பில் வெண்பா முதலிய நாற்பாவும் இனங்களும் பாடுமுறையை விதித்திருப்பதும், அணியில் புதிய அணிகள் பல புனைந்து கூறியிருப்பதும் நூலாசிரியரது நுண்மாண் நுழைபுலத்தை நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. ''பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல'' என்ற முறைப்படி சில இலக்கணங்கள் கழிந்தன; சில இலக்கணங்கள் புகுந்தன எனினும் அவற்றை மரபுநிலை திரியாத மாட்சியாக வகுத்த பெருமை வழிநூல் ஆசிரியர் பலர்க்கும் சார்ந்ததே. எழுத்துக்களின் பிறப்புச் சிறப்பை இனிப் பேசுவோம்.

### எழுத்துக்களின் பிறப்பு

மக்கள் உந்தியிலிருந்து ஒரு காற்று எழுகின்றது; அதற்கு உதானன் என்பது பெயர்; அக் காற்று மார்பிலும் மிடற்றிலும் மூக்கிலும் தங்கி நிற்கும்; மார்பினின்ற காற்று வெளிவரும்போதுதான் வல்லினமாகிய க ச ட த ப ற என்ற ஆறும் பிறக்கும்; மிடற்றில் நின்ற காற்று வெளிவரும்போது உயிரெழுத்துப் பன்னிரண்டும், இடையினமாகிய ய ர ல வ ழ ள என்ற ஆறும் பிறக்கும்; மூக்கில் நின்ற காற்று வெளிவரும்போது மெல்லினமாகிய ங ஞ ண ந ம ன என்ற ஆறும் பிறக்கும் என்று இடப் பிறப்பை எடுத்துரைத்தனர் இலக்கண நூலாசிரியர். ஒலிவரும் இயற்கையை யுணர்ந்து கூறினரா? உணராமலே கூறினரா? என ஐயம் எழும் பலர்க்கு. அதனை நீக்குதற்கு மூக்கறையன் ஒருவனை யழைத்து மெல்லினத்தை யுச்சரித்துக் காட்டும்படி செய்தாற்போதும். மெல்லின வொலி தோன்ருமல் மறைவது வெள்ளிடைமலை. இவ்வொலி நுட்பத்தை முதலிற் கண்டு கூறியவர் தெய்வத் தன்மையுடையவரெனச் செப்பவும் வேண்டுமோ? வாயைத் திறக்கு முயற்சியால் அ, ஆ என்ற உயிர் எழுத்துப் பிறக்கும்; வாயைத் திறக்கு முயற்சியுடன் மேல்வாய்ப் பல்லின் அடியை நாக்கின் நுனி பொருந்திஞல் இ, ஈ, எ, ஏ, ஐ பிறக்கும்; உதடு குவிதலால் உ, ஊ, ஒ, ஓ, ஔ இவை பிறக்கும் என்று, எல்லாவெழுத்துக்களின் முயற்சிப்பிறப்பு முறையே கூறியது வியக்கத்தக்கதன்ருே?

### புணர்ச்சி யிலக்கணம்

புணர்ச்சி என்ற சொற்குப் பொருள் ''ஒன்ருேடு ஒன்று சேர்வது'' என்று கூற வேண்டும். புணர்ச்சி என்றவுடன் ஆண் பெண்ணுடன் கூடுவதையே குறிக்கும்

எனப் பலரும் கருதுவர். அமையம் நோக்கி அச்சொல் ஒன்ருகச் சேர்வதை யெல்லாம் உணர்த்தும். இலக்கணத்திற் புணர்ச்சி என வந்தால் ஓர் எழுத்தின் ஒலி மற்ருேர் எழுத்தின் ஒலியுடன் கலந்து ஒலிப்பது எனக் கொள்ளவேண்டும். அதைத்தான் புணர்ச்சியிலக்கணம் எனப் புகன்றனர் புலவர். இயற்கையாக ஒன்று படும் ஒலியுடைய எழுத்துக்கள் கூடும் போது இயல்பு புணர்ச்சியாம் எனவும், வேறுபட்ட ஒலியுடைய எழுத்துக்கள் கூடினுல் ஒலி வேறுபட்டு விகாரப் புணர்ச்சி யாம் எனவும், இயற்கையை யுணர்ந்து, பொருத்தம் அறிந்து, இன்ன இன்ன எழுத்துடன் இன்ன இன்ன எழுத்துத் தான் புணர்ந்து நிற்கும் என இலக்கணம் கூறினர். இயற்கைதான் இலக்கணம்; இலக்கணம்தான் இயற்கை; கூர்ந்து நோக்குங்கள். எழுத்துக்களின் ஒலி பிறக்கு முயற்சியை யாராய்ந்தால் அதன் உண்மை விளங்கும். மெய்யெழுத்துக்கள் மக்கள் உடம்பை யொப்பன; உயிரெழுத்துக்கள் அவ்வுடம்பில் உள்ள உயிரை யொப்பன. உடம்பில் உயிர் நின்ருல் இயங்கும்; இல்லையெனில் இயங்காது. அது போலவே உயிரெழுத்துக்களோடு கூடி னுல்தான் மெய்யெழுத்துக்கள் இயங்கும் எனக் கண்டனர். மெய்யெழுத்துக்கள் ஏன் தனித்தியங்கா என ஆய்வோம். மெய்யெழுத்துக்களின் முயற்சிப் பிறப்பு வாயின் உள்ளிடமே. வாயைத் திறக்கு முயற்சியால் ஒரு மெய்யுந் தோன்ருது. வாயைத் திறக்கு முயற்சியாற் பிறப்பன உயிர் எழுத்துக்களே. வாயைத் திறந் தால்தானே ஒலியின் வேறுபாடு தோன் றும். வாயைத் திறவாதபோது ஒலியும் பிறர்க்குச் செவியில் ஏருது. ஆதலால் மெய்கள் உயிரின் உதவியின்றி இயங்கா எனக் கண்டு, "உயிர் மெய்" என்பது ஓர் எழுத்தாகவே ஒலிக்கும்; மெய்யையும் உயிரையும் சேர்த்து ஓர் எழுத்தாகவே எழுதிக் காட்ட வேண்டும்; அதுதான் இயற்கையென விதித்தனர். ஒரு சொல் மற்ருெரு சொல்லோடு புணரும்போதும் நிலைமொழியீற்றில் மெய்நிற்க வருமொழி முதலில் உயிர் நின்ருல் மெய்யும் உயிருங் கலந்து உயிர்மெய்யாகவே ஒலிக்கும் எனக் கண்டு "உடன்மே லுயிர்வந் தொன்றுவதியல்பே" எனத் தெளிவாகக் கூறினர். வண்ணம் + அல்ல, கண்ணன் + இருந்தான் - இச்சொற்களைக் கூட்டி விரை வாக ஒலித்துக் காணுங்கள். வண்ணமல்ல, கண்ணனிருந்தான் என ஓரொலியாய்த் தான் வெளிப்படும். நிலைமொழியைத் தனியாக ஒலித்து வருமொழியைப் பின் ஒலித்தால் ஒலிபிரிந்து தோன்றும். விரை வாகப் பேசும்போது ஒலி ஒன்ருேடொன்று கலந்துதானே எழும்! அதுதானே இயற்கை; மாற்ற இயலுமோ? பொன் + அழகு, கண் + இரண்டு இவற்றைக் கூட்டி யுச்சரித்துக் காணுங்கள். இரட்டுமொலி எழுகின்றது. பொன்னழகு, கண்ணிரண்டு என எழுதுகின்ருேம். மான் + ஓடினது, தேன் + இருந்தது என்ற சொற்களை விரைவாக உச்சரித்துப் பார்த்தால் இரட்டுமொலி எழாமல் மானேடினது, தேனிருந்தது என ஒரு மெய் யொலி எழு வதைக் காணலாம். இதனை யாய்ந்துதான் "தனிக்குறின் முன்னெற் றுயிர்வரி னிரட்டும்" என இலக்கணம் கூறினர். முற் காலத்துப் புலவர்கள் உரைநடையிலும் புணர்ச்சியிலக்கணம் பொருந்த வரைந்து வந்தனர். இக்காலத்துப் புலவர் செய்யுள் நடையிலும் பிரித்து வரையத் துணிவு கொண்டனர். அவரவர் பாடுஞ் செய்யுளைப் பிரித்துக் காட்டுவதும் அன்றி முன்னேர் பாடிப் புணர்ச்சியிலக்கணத்திற்குப் பொருத்தமாக ஏட்டில் வரைந்திருக்கும் கவிகளையும் பிரித்து அச்சிற் பதித்துப் பொருளீட்ட ஆசை கொண்டனர். ஆங்கில நாட்டு நாகரிகத்தால் வந்த பெருங்கேடு இது. ஆங்கில நாட்டு உடையும் நடையும் உயர்வெனக் கொள் வதுபோல ஆங்கில மொழியின் இலக் கணத்தைத் தழுவித் தமிழ்ச் சொல்லைத் தனித்தனியாகப் பிரித்து வரைவது உயர்வு என மதிக்கின்றனர். செய்யுளையாவது சிதையாதிருந்தால் தமிழ்மொழி உயர்வு குன்ருது எனக் கருதுகின்றேன்.

## புணர்ச்சியின்பம்

உலகத்துத் தோன்றிய உயிர்கள் எல்லாம் ஆணும் பெண்ணும் கூடிய போது இன்பத்தையடைகின்றன. அதனைப் புணர்ச்சியின்பம் எனப் புகல் கின்ருேம். ஆண் பெண் கூடாமல்

உலகம் இயங்காது. இஃது உலகியற்கை. எழுத்துக்களும் ஒன்றேடொன்று கூடிய போதுதான் சொல்லின்பம், பொருளின்பந் தோன்றுவதைக் காண்கிறேம். சொற்களைக் கட்டுவதால் யாப்பு எனவும், சொற்கள் தொடர்ந்து நிற்பதால் தொடர்பு எனவும், பரந்துபட்ட ஓசையுடைமையால் பா எனவும் பெயர் பெற்றது செய்யுள். எழுவகைத் தாதுக்களால் மனிதனது உடம்பு உயிருக்கிடமாக அமைந்திருப்பது போல எழுத்து, அசை, சீர், தளை முதலிய உறுப்புக்களால் பொருளுக்கிடமாக அமைந்திருப்பது பாட்டு. உடம்பிற்கு யாக்கை யென்பது பெயர்; பாட்டிற்கு யாப்பு என்பது பெயர்; ஒற்றுமை காண்க. சொற்களைத் தனித் தனியாகப் பிரித்தால் செய்யுளை இசையுடன் படிக்க இயலுமா? சீர்தளை செம்மையாக நிற்குமா? சந்தக் கவி என எந்தக் கவியைச் சொல்வது? சிலேடையமைந்திருந்தால் இருபொருள் கூற இயலுமா? எதுகை மோனை முதலிய தொடைகளை எடுத்துக் காட்டத் தகுமா? இசையுடன் படிப்பதற்கும், சீர்தளை சிதையாது நிற்பதற்கும், சந்தம் வகுப்பதற்கும், சிலேடை யமைப்பதற்கும், இருபொருள் கூறுவதற்கும், எதுகை மோனை முதலிய தொடைகளை எடுத்துக் காட்டுவதற்கும் புணர்ச்சியே துணையாகும். எழுத்துப் புணர்ச்சி, சொற் புணர்ச்சி யில்லையெனில் சொல்லின்பமும் பொருளின்பமும் அமைத்துப் பாட இயலாது. திருவள்ளுவர் குறள் வெண்பாவில் நீதியை யமைத்துக் காட்டுவதற்குப் புணர்ச்சி யிலக்கணமே போதிய துணையாயிருந்தது. "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு மொண்டொடி கண்ணேயுள." இக்குறள் வெண்பாவில் கண்டு + கேட்டு + உண்டு + உயிர்த்து + உற்று + அறியும் + ஐந்து + புலனும் + ஒண்மை + தொடி + கண்ணே + உள இத் துணைச் சொற்கள் புணர்ந்திருக்கின்றன வல்லவா? இவற்றைப் பிரித்தால் சீர், தளை சிதைந்து செப்பலோசைகெட்டுப் பாட்டாகத் தோன்றுதல்லவா? ''குற்றிய லுகரம் உயிர்வரிற் கெடும்'' என்ற புணர்ச்சி யிலக்கணத்தைத் துணையாகக் கொண்டல்லவா இப் பாவை யாத்திருக்கின்றனர் வள்ளுவர்? கற்றவரேயன்றி மற்றவரும் எளிதிற் பொருள் உணர்ந்து நீதியறிந்து நல்லொழுக்கத்தைக் கடைப் பிடித்து வாழ்வதற்காகவே வள்ளுவர் குறளையும் பிரித்துக் காட்ட உள்ளுவர் சில புலவர். என்னே இவரது நுண்ணறிவு! பிரித்தாலும் பிரியாவிடினும் எளிதிற் பொருள் விளங்கும் சில குறட்பாக்கள் இருக்கின்றன. புலவராலும் பொருள் காணமுடியாத நூல்தான் திருக்குறள். அப் பாக்களைப் பிரித்துக் காட்டுவதால் பயன் யாது? எல்லார்க்கும் பயன்படவேண்டுமெனில் எளிய உரை நடையிற் பொருளை விளக்கமாக எழுதவேண்டும்; அல்லது சொல்லவேண்டும். பல இடங்களிற் பல காலங்களிற் பயின்றுவரும் குறட்பாக்களின் பொருள் மட்டும் எல்லார்க்கும் எளிதில் விளங்கும். ஆதலால் புணர்ச்சி யின்பத்தையே புலவர் யாவரும் போற்றல் வேண்டும்.

### புணர்ச்சி எல்லாம் இயற்கையே

நிலைமொழி யீற்றில் நின்ற குற்றிய லுகரம் வருமொழி முதலில் உயிர் நின்றால் கெடும் என இலக்கணம் கூறினர். இஃது இயற்கைதான் என்பதைக் காட்டுகின்றேன். குற்றியலுகரம் என்பது குறுகிய ஒலியையுடைய உ என்ற எழுத்து. உ என்ற எழுத்து உதடு குவிதலாகிய முயற்சியாற் பிறப்பது. குறுகிய ஒலியுடையதாதலால் அது அரை மாத்திரை ஒலிக்கும். உதட்டைக் குவித்து உகரத்தை உச்சரிக்கும் போது வாயைத் திறந்து உயிர் எழுத்துக்களை உச்சரிக்க முயன்றால் குவிதலால் எழுந்த உகரவொலி மறைந்து திறத்தலால் எழுந்த உயிர்ஒலி தானே வெளிப்பட்டு நிற்கும் இதுதானே இயற்கை. உலக வழக்கிலும் பஞ்சணை, கொக்கிறகு, பந்தெறிந்தான், கண்டெடுத்தான் என்று உகரவொலி தோன்றமல் மறைந்து வருமொழி முதல் உயிர் ஒலித்து நிற்பதைக் காண்கின்றேம். பஞ்சு அணை என்று யாரும் பிரித்துப் பேச மாட்டார்கள். பாட்டில் இதைப் பிரித்துக் காட்டுவதற்குக் காரணம் என்னை? இனி நிலைமொழி யீற்றில் உயிர் நிற்க வருமொழி முதலில் உயிர் வந்தால் இடையே உடம்படுமெய் தோன்றும் என்றும், யகரமும் வகரமும் என இரண்டு மெய்கள்தாம் என்றும், இன்னஇன்ன உயிர்களின் பின் யகரம் வரும் என்றும், இன்னஇன்ன

உயிர்களின் பின் வகரம் வரும் என்றும் இலக்கணம் வகுத்தனர். இதனைக் கற்பார்க்கு இரண்டு மெய் வேண்டுமா? ஒன்று போதாதா? யகரத்தை மட்டும் வைத்துக்கொண்டால் என்ன? வகரத்தை மட்டும் வைத்துக்கொண்டால் என்ன? என்ற வினாக்கள் எழும். அதற்கு விடை இயற்கை கண்டு இலக்கணம் கூறினர் என்பதுதான். இயற்கையை யாய்வோம். நிலைமொழி யீற்றில் நின்ற இ, ஈ, ஐ என்ற எழுத்துக்களின் ஒலி தோன்றுவதற்கு வாயைத் திறந்து மேல்வாய்ப் பல்லடியை நாக்கு நுனிபொருந்தச் செய்யவேண்டும். அவ்வொலியை யடுத்து வருமொழி முதலில் நின்ற உயிர் எழுத்துக்களின் ஒலி தோன்றுவதற்கு மீண்டும் வாயைத் திறக்க வேண்டும். அவ்வாறு வாய் திறக்கமுயலும் போது மேற் பல்லடியிற் பொருந்தியிருந்த நாக்குநுனி பெயர்ந்து அடிநாக்கு அடி யண்ணத்தைப் பொருந்துகிறது. பின் வாய் திறக்கிறது. அடிநாக்கு அடி யண்ணத்தைத் தொடும்போது யகர மெய் ஒலி தோன்றுவதை நீங்கள் காணலாம். ஆதலால் இ ஈ ஐ என்ற உயிர்களின்பின் உயிர் வந்தால் யகரம் உடம்படு மெய்யாக வருவது இயற்கையே. அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ என்ற உயிர் எழுத்துக்கள் வாயைத் திறப்பதாலும் உதடுகுவிதலாலும் பிறப்பன. அவ்வொலி தோன்றுவதற்கு வாயைத் திறக்கவேண்டும். உதட்டைக் குவிக்கவேண்டும் அவ்வொலியை யடுத்து வருமொழி முதலில் நிற்கும் உயிர் எழுத்துக்களின் ஒலி தோன்றுவதற்காக மீண்டும் வாயைத் திறக்கவேண்டும். திறந்தமட்டில் முயற்சியிருந்தால் வேறு உயிர் ஒலி தோன்ருது. வாயை மூடித்திறந்தால்தான் தோன்றும். மூடித்திறக்க முயலும்போது மேற்பல் கீழ்உதட்டிற் படுகிறது. பின் வாய் திறக்கிறது. மேற்பல் உதட்டிற் பொருந்தும்போது வகரமெய் யொலி தோன்றுகிறது. ஆதலால் அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ என்ற உயிர்களின் பின் உயிர் வந்தால் வகரமெய் தோன்றுவதும் இயற்கைதான். உச்சரித்து உண்மை காண்க. இன்ன எழுத்தின்முன் இன்ன எழுத்து மயங்காது என்பதும் மற்ருேர் எழுத்தாகத் திரியும் என்பதும், கெடும் என்பதும் ஒலி நுட்பத்தை ஆய்ந்து கூறிய இலக்கணமே. ஒலியைக் காட்டுவதுதானே வரிவடிவம்.

## வினைக்குறிப்பு, அன்மொழி, ஆகுபெயர்.

சொல்லில் "வினைக்குறிப்பு" என ஒருசொல் உள்ளது என்றும், அது பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற அறுவகைப் பெயரின் அடியாகத் தோன்றும் என்றும், முற்ருகவும் பெயரெச்சம் ஆகவும் வினையெச்சமாகவும் பொருள் தந்து நிற்கும் என்றும், குறிப்பு வினையைக் குறிப்பாக அறியும்படி இலக்கணம் வகுத்திருப்பது நம்மொழியிலன்றி வேறு எம்மொழியினும் இல்லை என்பது துணிவு. சொற்ருெடரின் இடையில் ஏதேனும் மறைந்து நிற்பது தொகை என்றும், அஃது அறுவகைப்படும் என்றும், வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை என்ற ஐந்து தொகையின்மேல் அல்லாத மொழிகள் மறைந்து நிற்க வருவது அன்மொழித் தொகை என்றும் தொகையிலக்கணம் கூறியிருப்பது மற்றை மொழிக்கில்லா மாண்பாகும். யாவரும் வியக்கத்தக்கதே இனி ஆகுபெயர்க் கிளவி என ஒருசொல் உள்ளது என்றும், அது சினையறிகிளவி, முதலறி கிளவி, பிறந்தவழிக்கூறல், பண்புகொள் பெயர், இயன்றது மொழிதல், இருபெய ரொட்டு, வினை முதலுரைக்குங்கிளவி எனத் தொல்காப்பியர் பகுத்துக்காட்டியிருக்கும் பண்பும் உரையாசிரியர்கள் உதாரணங் காட்டி விளக்கியிருப்பதும் வேறு எம் மொழியிற் காணமுடியும்? இதுபோன்ற இலக்கண நுட்பம் தமிழ்மொழிக்கே உரிமை யுடையது.

ஆகுபெயரும் அன்மொழியும் இயற் பெயர்ப் பொருளையுணர்த்தாது வேறு பெயர்ப்பொருளை யுணர்த்துவதில் ஒப் புடையது என்றும், அன்மொழித் தொகை இருபெயருந் தொக்க தொகையாற்றலால் அப்பெயரோடு இயைபில்லாத வேறு பெயர்ப்பொருளை யுணர்த்திச் செய்யுள் செய்யும் புலவன் தன் கூற்ருக வேனும் பிறர் கூற்ருக வேனும் கூறுமிடத்து வரும் என்றும், ஆகுபெயர் ஒருமொழியாய் நின்று தனக்கு இயைபுடைய வேறு பெயர்ப் பொருளை யுணர்த்திப் பழமையாக

வரும் என்றும் ஒற்றுமை வேற்றுமை காட்டிய உரையாசிரியர் மதிநுட்பத்தை எங்ஙனம் வியவாதிருப்பது ?

## அகப்பொருள்

தமிழ்நாட்டில் பலகலைகற்று உலகியல்பு உணர்ந்து நல்லொழுக்கமுடன் வாழ்கின்ற ஆடவர் பெண்டிர் என்ற இருபாலாரும் தாம் கூடித் துய்த்த காமவின்பத்தினை இவ்வாறு இருந்தது எனப் பிறர்க்குக் கூறமாட்டார்; அவரவர் அகத்துள் அடக்கி வெளிப்படாதவாறு வாழ்வார்; இக் காமவின்பம் வெளிப்படையாகப் பிறர்க்குக் கூறத்தகாதது என இயற்கையுணர்ந்து அகத்தே நிகழும் ஒழுக்கத்திற்கு அகம் எனப் பெயர் இடுவது தகுதியெனக் கண்டு அகம் எனப் பெயர் அமைத்தனர். தலைவனும் தலைவியும் கூடி ஒருவரும் அறியாமல் ஒழுகிய களவொழுக்கத்தை வெளிப்படையாகக் கூறுவதற்கு "அறத்தொடு நிற்றல்" எனப் பெயரிட்டனர். உண்மையுரைப்பதுதானே அறம்; பொய்யுரைப்பது அறமாகுமா? ஆதலால் அப்பெயர் தகுதியுடைய தன்றோ? களவு மணம், கற்புமணம் எனப் பகுத்திருப்பதும், அவ்வக்காலத்திற் கூற்று நிகழ்த்துவார் இன்னார் இன்னார் என வரையறுத்திருப்பதும் "தலைவன் தலைவியோடு நற்றாய் கூறுள்" எனச் சிறப்பு விதி கூறியிருப்பதும் ஆய்ந்தால் பண்டைத் தமிழர் பண்பாட்டைக் கண்டு கூறியதாகவே துணிவு கொள்ளலாம். வாழ்வுக்கு வழி காட்டுவது அகப்பொருளிலக்கணமே.

## புறப்பொருள்

பண்டைக் காலத்து வாழ்ந்த குறுநில மன்னர், பெருநில மன்னர், மறவர் வேடர் முதலிய குலத்தினரிற் சிறந்த வள்ளல்கள் இயற்கையை எடுத்துக் காட்டுவதுதான் புறப்பொருள். ஒருவர் நாட்டிலுள்ள பசுக் கூட்டங்களை மற்றொருவர் நாட்டிற்குக் கொண்டுவரப் புறப்படுவோர் வெட்சி மலர் சூடுவர்; அங்ஙனம் கொண்டு செல்லும் பசுக்கூட்டங்களை மீட்பதற்கு வருவோர் கரந்தைப்பூச் சூடுவர்; ஒரு வேந்தன் ஆளும் நாட்டைக் கவர நினைத்துப் புறப்படுவோர் வஞ்சிப்பூச் சூடுவர்; அவ்வேந்தனை எதிர்த்துப் போர்செய்ய வருவோர் காஞ்சி சூடுவர்; மதிலை முற்றுகையிடுவோர் உழிஞை என்னும் மலர் சூடுவர்; உள்ளிருந்து மதிலைக் காப்போர் நொச்சி சூடுவர்; குறித்த இடத்தில் வந்து போர் புரிவோர் தும்பை சூடுவர்; வெற்றி பெற்றவர் வாகை சூடுவர் என முற்காலத்தில் வாழ்ந்த மக்கள் இயற்கை கண்டு அதனையே இலக்கணமாக வகுத்தனர் முன்னோர். இவ்விலக்கணத்தால் பசுக்களைக் காப்பதும், நாட்டைப் புரப்பதும், வீரமுடைய மன்னர் போர்க்களத்துச் சென்று போர் புரிந்து புறங்கொடாது நாட்டு நலனுக்காக உயிரைக் கொடுப்பதும், வெற்றிபெற்ற வேந்தர் பிற நாட்டிற் கவர்ந்த பொருள்களையெல்லாம் பொருநர், பாணர், கூத்தர், விறலியர், புலவர் ஆகிய இரவலர்க்கு வாரிவழங்குவதும் கொடையிலும் வீரத்திலும் சிறந்தவர் எனப் புகழ்பெற்று வாழ்வதும் பெருமையெனப் பேணி வந்தனர் தமிழ் நாட்டு மக்கள் என்பதை யுணரலாம். காதல், வீரம், கொடை என்ற நற்பண்புகட்கு இலக்கணம் வகுத்தவர் நம்நாட்டினரே. இது நமது நாட்டின் சிறப்பை எடுத்துக் காட்டுமன்றோ?

## மெய்ப்பாடு

ஒரு தலைவன் தனியிடத்துத் தலைவியைக் கண்டால் முதலில் விருப்பமாக உற்று நோக்குவன். அவன் விருப்பமான நோக்கத்தைத் தலைவி யறிவாள். பின் விருப்பமாக அவளும் நோக்குவள். காதலுணர்ச்சி தோன்றும். நெற்றியில் வேர்வை யரும்பும். குறுஞ்சிரிப்பு வரும். அதனை மறைப்பாள்; மனமயங்கும். மயக்கத்தைப் பிறர் அறியாமல் மறைப்பாள். தலைவிக்கு முதலில் நிகழும் மெய்ப்பாடுகள் இவை எனக் கண்டு "புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல், நகுநய மறைத்தல் சிதைவு பிறர்க்கின்மையொடு தகுமுறை நான்கே ஒன்றென மொழிப" என்று சூத்திரம் யாத்தனர் தொல்காப்பியர். இரண்டாவது மெய்ப்பாடு கூழை விரித்தல் முதலிய நான்கு என்றும், மூன்றாவது மெய்ப்பாடு "அல்குல் தைவரல்" முதலிய நான்கு என்றும், நான்காவது மெய்ப்பாடு "பாராட்டெடுத்தல்" முதலிய

நான்கு என்றும், ஐந்தாவது மெய்ப்பாடு ''தெரிந்துடம்படுதல்'' முதலிய நான்கு என்றும், ஆருவது மெய்ப்பாடு ''புறஞ் செயச்சிதைதல்'' முதலிய நான்கு என்றும் இருபத்து நான்கு மெய்ப்பாட்டினையும் எடுத்துக் கூறியிருப்பது வியப்பினும் வியப் பன்றே? முனிவர் எனப் பெயர் படைத்த தொல்காப்பியர், தலைவன் தலைவியைக் களவிற் கண்டு புணரும் இயற்கைப் புணர்ச்சி நிகழும்போது இத்துணை மெய்ப் பாடும் நிகழும் எனக் கண்டு கூறினர் என்றால் அவரது நுண்ணறிவும் நூலறி வும் போற்றத் தக்கதன்றே?

### யாப்பு

யாப்பிலக்கணத்தில் வெண்பா இலக் கணமே சிறந்தது. வெண்பாவில் இயற் சீரும் வெண்பாவுரிச்சீருமே வரும்; நாற்சீர் கொண்ட வடியே பெறும்; ஈற்றடி முச்சீரடியாக இருத்தல்வேண்டும்; அவ் வடியின் இறுதிச்சீர் ஓரசைச் சீராகவும் குற்றியலுகரம் வந்தால் ஈரசைச் சீராகவும் இருத்தல்வேண்டும். இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை பெற்றுத்தான் நிற்கும் என வரையறை கூறியிருப்பது மக்கள் மனத்தை மயங்கச் செய்கின்றது. இவ்விதிப்படி வெண்பாப் பாட இயலுமோ என்று அறிஞரும் அஞ்சுகின்றனர். இதனையறிந்த ஒளவையார் 'மற்றெல்லாப் புலவர்க்கும் வெண்பாப் புலி'' என்று விதந்து கூறினர். ஒரு புலவர் மற்றொரு புலவரது புலமைத் திறங்காண விழைந் தால் ஓர் ஈற்றடி கொடுத்து ''வெண்பாப் பாடுக'' எனப் பணிப்பது அன்றும் இன்றும் உள்ள ஒன்றுதான். வெண்பாப் பாட முடியாமல் விழிக்கும் புலவர் இன்றும் உள்ளனர். கட்டளைக் கலித் துறையும் வரையறையுடையதே; எழுத் தெண்ணிப் பாடவேண்டிய செய்யுள் அது. பாவின் வேறுபாடு பாவினங்களின் வேறு பாடு முழுவதும் உணர்ந்து பாடுபவனே புலவன் எனப் போற்றினர் முன்னோர். இந்நாளில் அந்நிலை மாறி இலக்கணம் அறியாத ஒருவனும் பாடஎண்ணும் இயல் பின் நிற்கின்றது தமிழ்நாடு. தமிழ்மொழி தமிழ்நாட்டில் உள்ள மக்கட்கெல்லாம் உரி யதுதானே! அதன் இலக்கணமும் உரியது தானே! இலக்கணத்தைக் கற்கவேண்டும் என்னும் ஆர்வம் மக்கள் மனத்தில் எழக் கண்டிலம். பாட்டுப் பாடவிரும்புகின்றனர். மேடையேறி உரையாட விரும்புகின்றனர். கால மாறுபாடு இது.

### அணி

அணிகளில் தொல்காப்பியர் காலத்தில் இருந்தது உவமையணி ஒன்று தான். அது பல பிரிவாகப் பிரிந்து நிற்கக் காண்கிறோம். உள்ளுறையுவமையும் இறைச்சியும் அக்காலத்தில் இருந்த அணி தான். வழிநூல் ஆசிரியர் ஆகிய தண்டி யாசிரியர் தன்மை, உவமை, உருவகம் முதலாக முப்பத்தைந்து அணிகள் காட் டினர். ''அணியியல்'' என ஓர் இலக் கணம் இருந்தது என்றும் அது நமக்கு முழுவதும் புலப்படாமல் மறைந்தது என்றும் அறிகின்றோம். வடமொழியிலக் கணத்தைக் கொண்டே தண்டியாசிரியர் அணிகளை வகுத்தனர் என்று காண்கின் றோம். அவர்க்குப் பின்வந்த ஆசிரியரும் வடமொழியிலக்கணத்தைத் தழுவியே நூறு அணிகள் காட்டினர். இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணமாகப் பின்வந்த ஆசிரியர்கள் அணிகளை நூற்றுக்குமேலும் தோற்றமாக ஏற்றமுறச் சாற்றிப் போற்றி வருகின்றனர். தமிழ் இலக்கணச் சிறப்பும் அதனைப் புலவர்கள் போற்றி வந்த முறை யும் உணர்க. இக்காலத்து இளைஞர் இலக் கணத்தைப் போற்றுமல் தமிழ் ஆர்வம் உடையவராய்ப் பாடவும் உரையாடவும் எண்ணுகின்றனர். இது பண்பாகுமோ?

### முடிவுரை

செந்தமிழ் நாட்டுச் செல்வர்களே! தமிழ் இலக்கண வரம்பு கடக்க எண்ணு தீர்கள். அயல்நாட்டு மொழியை நம் மொழியுடன் கலக்கும்படி உரையாடுவதை யொழித்துவிடுங்கள். இன்றியமையாத மொழியாயிருப்பின் அதனைத் தமிழ் இலக் கணத்திற்குப் பொருந்துமாறு முதனிலை, இறுதிநிலை, மயக்கம் இவற்றை ஆராய்ந்து அமைத்துக்கொள்ளுங்கள். இலக்கணவழு வின்றிப் பேசவும் எழுதவும் பயிலுங்கள். இலக்கணங்களை எல்லாரும் கற்று அறிஞ ராக வரமுயலுங்கள். புணர்ச்சியிலக்கணம் இயற்கையாகப் பொருந்தும் எனக்

காணுங்கள். புணர்ச்சி யிலக்கணத்தைப் பொருத்தியே உரையாடவும் எழுதவும் பயிலுங்கள். பொருள் விளங்காது எனத் தெரிந்தால் மட்டும் பிரித்துக் கூறுங்கள்; பிரித்து எழுதுங்கள். உரைநடையை மட்டும் பிரித்துப் பொருள் விளங்க எழுதுங்கள். செய்யுளைப் பிரிக்கச் சிந்தனை செய்யாதீர். செய்யுள் பாடும் புலவர்களும் புணர்ச்சி விதிப்படி சொற்களை யமைத்துப் பாடுங்கள். செய்யுள் வடிவைச் சிதைப்பது சீரல்ல. அதனை உங்கட்கு நன்கு விளக்கு கின்றேன்.

செய்யுள் வடிவைச் சிதைத்தால் சீரா, தளையா, தொடையா, எதுகையா, மோனையா எதுவுங் காணவியலாது. இத் துணைச்சீர் இன்ன பாட்டு என்று காணுதற் கும் வழியில்லாமல் வறிதே நிற்கும். ஓசை யும் கெடும். உய்த்துணர்ந்து நோக்குங்கள். புலவன் எத்துணைப் பாடு பட்டுச் சொற் களைத் தேடி யடுக்குமுறையில் அடுக்கிச் சீர், தளை, அடி, தொடை ஓசைக்கியையப் புணர்த்துப் பாடியிருப்பான்! அவன் பட்ட பாடு பயனின்றிப் பாழ்படும் அன்றோ? பாட்டுப் பாடுவது எவ்வளவு அருமையான செயல்! அதனைச் சிதைப்பது எவ்வளவு எளிமையான செயல்! 'பாண்டங்கள் வனையுங் குயவனுக்குப் பலநாள் வேலை; உடைத்து நொறுக்கும் தடியடிக்காரனுக்கு ஒரு நொடிவேலை' என்ற பழமொழிபோல இருக்கிறது பாட்டைச் சிதைக்கும் செயல். ஒவ்வொரு மொழியாகப் பிரித்துத் தனியாக எழுதிவிட்டால் அது பாட்டாகுமா? பாட் டுப் பாடுவதற்காகத்தானே புணர்ச்சியிலக் கணம் வகுத்தனர் நம் முன்னோர்? அவற்றைக் கற்று அறிவிற் சிறந்த புலவர் அவ்விலக்கணப்படி யெழுதியிருக்கும் பாட்டைச் சிதைப்பது எவ்வளவு பேதைமை! பாட்டைச்சிதைத்தால் அது இன்ன பாட்டு எனக் காண்பது எப்படி? இசையறுத்துப் படிப்பது எப்படி? வரை யறை யில்லையெனில் எவரும் பாட்டுப் பாடலாமன்றோ? 'வாயைக் கோணவைத் தாற் பாட்டு, காலைக் கோணவைத்தால் ஆட்டு' என்ற பழமொழிபோல எல்லாம் பாட்டாகி எங்கும் வெளிவருமே! இலக் கணம், இலக்கியம் கற்பது வீண் அன்றோ?

பாட்டிலுள்ள பொருள் எல்லார்க்கும் எளிதில் விளங்கவேண்டும் என்றால் செய்யுளை எழுதி அதன்கீழ் ஒவ்வொரு சொல்லாகப் பிரித்துக் காட்டுங்கள். அவ்வாறு பிரித்துக் காட்டினாலும் பொருள் விளங்காது என்று தெரிந்தால் உரை யெழுதிக்காட்டுங்கள். உரையெழுதிக் காட் டினும் பொருள் விளங்காது என்று தெரிந்தால் அவர்களுக்கு அப் பாட்டைப் படித்து விரிவுரை கூறுங்கள். இதுவே புலவர்கள் தமிழ்நாட்டிற்குச் செய்யும் தனிப்பெருந் தொண்டாகும். தமிழ்மொழி வளர்க்கும் ஆர்வம் தமிழ் நாட்டார் உள் ளத்திற் பெருகுக! வளர்க தமிழ்! வாழ்க தமிழ்நாடு!

---

## மொழிச் செல்வம்

ஒரு நாட்டுச் செல்வங்களுள் மொழியும் ஒன்றாகும். மொழித்துணையின்றி ஒரு நாட்டார் நாகரிகமாகவும் வசதியாகவும் வாழ்வதரிது. முன்னோர் அரும் பாடுபட் டீட்டிய அறிவுச் செல்வமெல்லாம், மொழிவாயிலாகவே போற்றப்பட்டு வருகின்றது. எத்துணைச் சொற்கள் சேர்ந்து ஒரு பெருமொழியும் அதன் இலக்கியமும் அமைகின்றன! முன்னோர் வைத்துப்போன சின்னஞ்சிறு பொருள் களைக்கூடப் பொன்னேபோல் போற்றுவது மக்கள் வழக்கமாயிருக்க, தொன்று தொட்டு இன்றுகாறும் கணக்கற்ற தலைமுறைகளாய்த் தொடர்ந்தும் திரண்டும் வரும் அரும்பெருஞ் செல்வத்திரட்டாகிய மொழியை, எத்துணைக் கவனமாகவும் கண்ணியமாகவும் பேணுதல் வேண்டும்!

—ஞா. தேவநேயப்பாவாணர், "சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்."

---

# கோசிக மாணி

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனார்]

திருப்பாதிரிப் புலியூருக் கடுத்த புதுவண்டிப் பாளையம் என்னும் ஊரில் துந்துபி ஆண்டு, கார்த்திகைத் திங்கள் 21 ஆம் நாள் ஆறுமுக முதலியார் பொன்னம்மா ஆகிய பெற்றோருக்குத் திருமகனாய்த்தோன்றினார். திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளின் மாணவர். திருவையாறு அரசர் கல்லூரியிற் பயின்று 1940 இல் வித்துவான் பட்டம் பெற்றார். திருநெல்வேலி, வீரவநல்லூர், இந்து நடுநிலைப் பள்ளியில் ஓராண்டுவரை தமிழாசிரியராகப் பணியாற்றிய பின்னர்,



1942 ஆம் ஆண்டுமுதல் மயிலம் தமிழ்க் கல்லூரியில் விரிவுரையாளராகத் தமிழ்த் தொண்டாற்றி வருகின்றார். மதுரை ஆதீனத் தலைவரால் 'சிவநெறிப் புலவர்' எனப் பட்டம் சூட்டப் பெற்றுள்ளார். அகத்தியர்கள், கட்டுரைப் பூங்கா, பெரிய புராணப் பெண்மணிகள், புறநானூற்றுக் கட்டுரைகள், தமிழ் நாட்டு மூவேந்தர், துறைமங்கலம் சிவப்பிரகாசர், சிலம்புக் கட்டுரைகள் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். இவர் மயிலம் பொம்மபுர ஆதீனப் புலவர்.

கோசிகமாணி என்பவன் சிலப்பதிகாரத்தில் ஓரிடத்தில் வந்துபோன ஓர் அந்தணன். கோசிகன் என்பது இவன் இயற்பெயர். கோசிக கோத்திரத்தைச் சார்ந்தவன் என்றும் கூறப்படுகிறான். 'மாணி' என்ற சொல் இல்லறத்திற் புகுதற்கு முன்னைய நிலையில் உள்ளவனைக் குறிக்கும். அது மாணவன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகலாம். எனவே, அவன் பிரமசரியன் என்னலாம். பிரமசரியன் என்றாலும் அதற்குரிய ஒழுக்கத்தினன் அல்லன். காமுகனாக இருந்தவன். அந்தணன் என்பதற்குரிய ஒழுக்கம் அவனிடம் இல்லை. அவனை இளங்கோவடிகள் "தீத்திறம் புரிந்தோன்" என்றார். சிலப்பதிகார உரையாசிரியர்கள் தீத்திறத்தை விளக்கினார்கள் இல்லை. அவனை உயர்ந்த ஒழுக்கத்தினன் என்று அடிகள் எங்கும் குறிக்காமையால் 'தீத்திறம்' என்பதற்குத் 'தீய செயல்கள்' என்றே பொருள் கொள்ளவேண்டும். எனவே அவன் தீய செயல்களை விரும்பியவன் என்னலாம். சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் அவனை "மாதவி கடையாயினான் ஓர் அந்தணன்" என்றார். தான் பிறந்த குலஒழுக்கத்தை விட்டு மணம் இன்றி மாதவியின் வீட்டு வாயிலில் கிடந்தான். கிடந்தானாயினும் மாதவியால் அடிவணங்கும் அளவில் வயதில் மூத்தவனாகவே இருந்தான். "இணையடி தொழுதேன்" என்று அவள் கூறியதாகக் கோசிகன் ஓரிடத்துக் கூறியுள்ளான். வயதில் முதிர்ந்தவன் என்பதற்கு இளங்கோவடிகள் வாக்கும் சான்று பகரும். ஒருகால் கோவலனைக் கோவலன்தானா என்றறிந்து கொள்ள அவனால் இயலாமைக்குக் "கட்புல மயக்கம்" காரணம் என்றார். அரும்பதவுரைகாரர், "கண்ணிற் பிரபை யற்றதாதலால்" அறிந்துகொள்ள வில்லை யென்றார். எனவே கண்பார்வை மங்கிய முதிர்ந்த வயதினன் என்னலாம். இத்தகையோன் பரத்தையர் சேரியனாகவே காலம் கழித்தான்.

மாதவியின் குடும்பத்துள் ஒருவனாகவும் ஏவலனாகவும் இருந்தான் என்பதை, "மாதவி கடையாயினான் ஓர் அந்தணன்" என்ற தொடர் அறிவிக்கும். மாதவியைத் துன்புறாதபடி குறிக்கொண்டு காத்து வந்தான். ஒருகால் கோவலன் பிரிவால் மாதவியின் துயர் கேட்டுத் தான் வருந்தி ஆறுதல் கூறச் சென்றான்.

"வீழ்துய ருற்றோள் விழுமம் கேட்டுத்
தாழ்துய ரெய்தித் தான்சென் றிருந்ததும்"
(சிலப். கங. எக, எஉ)

என்னும் அடிகளைக் காண்க.

சிலப்பதிகாரத்தில் அவனுக்குள்ள பொறுப்பு ஒன்றே ஒன்றுதான். கோவலனிடம் மாதவி கொடுத்த ஓலையைக் கொடுத்து வருவதே அது. அதற்கு அவன் மேற்கொண்ட செயலும் சொல்லும் அவன் அறிவாற்றலை விளக்குவனவாக உள்ளன.

கானல் வரி காரணமாக மாதவியைப் பிரிந்த கோவலன், கண்ணகியுடனும் கவுந்தியடிகளுடனும் மதுரை நாடு நோக்கி வந்தபோது, இடை வழியில், ஓர் ஊரில் ஒரு நல்லவர் வீட்டில் அவ்விருவரையும் விட்டு நீர்தேடிச் சென்றான். அப்போது மாதவி தந்த ஓலை கொண்டு கோவலனைத் தேடிப் பல ஊர்களிலும் சென்று வந்த கோசிகன் அங்கு வந்து சேர்ந்தான். சற்றுத் தொலைவில் கோவலனைக் கண்டான். அவனைக் கோவலன்தானே என ஐயுற்றான். காரணம் அவன் கண் நன்றாகத் தெரியாதவன். அன்றியும், கண்ணகியுடன் காட்டுவழி வந்தமைக்கு வருந்தியமையால் உடல் மாறிக் காணப்பட்டான் கோவலன். இதனாலும் அவனால் கோவலனை யறிந்து கொள்ள முடியவில்லை. மாதவி வீட்டில் கிடந்த காலங்களிலெல்லாம் அவனுடன் சிரித்துப் பேசி நகையாடியிருப்பான் கோவலன். மாதவியுடன் இருந்த காலத்தில் பாணர்களுடனும் தூர்த்தர்களுடனும் திரிந்தான் அவன்.

> "குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
> திரிதரு மரபிற் கோவலன்"
>
> (சிலப். ௫. ௨௦௦, ௨௦௧)

என்றார் இளங்கோவடிகள். திரிதல் மரபாயிற்று அவனுக்கு. எனவே பல்காலும் திரிந்தான் என்க. அவ்வாறு திரிந்தவன் கோசிகனிடமும் பழகியே யிருப்பான். அப்படிப் பழகிய அவனைக் கோவலனே என்று ஐயுற்றபோது நேரில் அருகிற் சென்று காணலாம். அவ்வாறு காணாமல் ஒரு புது வழியைத்—தந்திரத்தை மேற்கொண்டான். ஏன்?

மாதவியிடம் வெறுப்புக்கொண்டு பிரிந்தவன் கோவலன். "மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள்'—'சலதி' என்றெல்லாம் பேசி வெறுத்தவன். அவன் அவளை வெறுத்ததோடன்றி அவளைச் சார்ந்தோரையும் வெறுத்தே யிருப்பான். அவன் வெறுத்தானோ இல்லையோ, மாதவியைச் சார்ந்த கோசிகன் அப்படித்தான் நினைக்க முடியும். அந்த நினைப்பால், "கோவலன் தன்னை வெறுத்தானாயின் தன்னொடு பேசமாட்டான்; பேசானாயின் மாதவி ஓலையைக் காட்டமுடியாது; மாதவியைப்பற்றி அவன் மனநிலை இப்போது எவ்வாறுளது என்று அறியவேண்டுவது இன்றியமையாதது" என்று எண்ணினான். தந்திரமும் மேற்கொண்டான். அதற்கு வாய்ப்புக் கொடுத்தது ஒருகாட்சி.

அவன் எதிரே ஒரு குருக்கத்திக் கொடி ஒரு மரத்தில் படர்ந்திருந்தது. அக்கொடிக்கு மாதவி என்றும் ஒரு பெயர் உண்டு. இளவேனிற் காலத்தில் பூத்து முதுவேனிற் காலத்தில் பூவின்றிப் பச்சிலைகளுடன் இருப்பது அது. இந்தக் காலம் முதுவேனிற் காலம்; ஆதலின் அக்கொடி பூக்களின்றிக் காணப்பட்டது. அதன் நிலையைத் தன் மாதவிநல்லாளின் நிலையுடன் ஒத்திட்டுக் கண்டான். கோவலன் பிரிவால் மாதவி மலர் களைந்தாள். இளவேனிற் பிரிவால் குருக்கத்தியும் மலர் களைந்தது. மாதவி பிரிவுத்துயர் சுட வருந்தி வாடினாள். குருக்கத்தி முதுவேனில் வெயிற் கொடுமையால் வருந்தியது. மாதவி என்ற பெயருடன் இவ்வொப்புக்களையும் உணர்ந்த அவன், கோவலனை ஐயம் நீக்கித் தெளிவதற்கு அது பற்றிச் சொல்லிக் காண்பதே வழி என்று துணிந்து வாய்விட்டுச் சொல்லலானான்.

> "கோவலன் பிரியக் கொடுந்துய ரெய்திய
> மாமலர் நெடுங்கண் மாதவி போன்றிவ்
> வருந்திறல் வேனிற்கு அலர்களைந் துடனே
> வருந்தினை போலும்நீ மாதவி"
>
> (சிலப். ௧௩. ௪௮ - ௫௧)

என்றான். சற்றுத் தொலைவில் இருந்த கோவலனுக்கு இவன் பேச்சுக் கேட்குமாறு கூறிக்கொண்டே அக்கொடி படர்ந்த ஒரு மரநிழலில் சென்று தங்கினான். அவன் மேற்கொண்ட வழி பயன் தருவதாகவே யமைந்தது.

அவன் கூறியவை கேட்ட கோவலன் அவன் அருகில் வந்து, "நீ இப்போது இங்குக் கூறியதற்குக் கருத்து என்ன"

என்று ஒன்றும் அறியாதவன்போல் நகையாடி (பரிகசித்து)க் கேட்டான். இவ் விடத்தில் இளங்கோவடிகள் "யாது நீ கூறிய உரையீது ஈங்கு" எனக் கேட்ட தாகக் கூறினரேயன்றி நகையாடிக் கேட்ட தாகக் கூறவில்லை. உரையாசிரியர் அடியார்க்கு நல்லார், "நீயிங்குக் கூறிய இக் கூற்றிற்குப் பொருள் யாதென அசதி யாட" என உரையெழுதினர். கோவலன் அசதியாடினமையால்தான் கோசிகன், "தீதிலன் கண்டேன்" என்று கூறி அவன் அருகிற் சென்றான். அசதியாடாமல் நொதுமலன்போலப் பொருள் விளங் காமற் கேட்டிருப்பானாயின் அவன் கோவ லனைக் கோவலனாகத் தெளிந்திருக்க மாட்டான். கோவலன், தானே வந்து தன்னை யின்னான் என்று கூறினால்தான் தெரிந்திருப்பான். பேச்சொலி கண்டு தெரிவதோடு உருவம் மாறுபட்டிருத்த லின் மிக அண்மையில் வந்தால்தான் உருவம் கண்டு தெளியமுடியும். ஆதலின் இளங்கோவடிகள் சொல்லாவிட்டாலும் உரையாசிரியர் சமயம் உணர்ந்து அசதி யாடிக் கேட்டதாகக் கூறியது மிகப் பெரிதும் நலம் பயப்பதொன்றாம். கோவ லனை யறிய அவன் மேற்கொண்ட செயல்—வழி அவன் அறிவின் திறத்தை வெளிப் படுத்துகின்றதன்றோ?

இங்குப் பிறிதொன்றும் காணவேண்டி யுள்ளது. அசதியாடிய காரணத்தால் கோவலன் மாதவியை வெறுத்து வந்திருந்தாலும் அவளைப்பற்றிய செய்தி களைக் கேட்கவும் உடன்பட்டான் என் பதையும் காணுகின்றோம். அதனையும் உணர்ந்தமையால் மேலே பேசத் தொடங் கினான் கோசிகன்.

அசதியாடிப் பேசினாலும் கோவல னிடம் அச்சம் கொண்டான் அவன். அதனால் அவனிடம் மாதவியைப் பற்றியோ அவள் தந்த ஓலையைப்பற்றியோ முதலில் கூறவில்லை. கோவலன் தந்தை மாசாத்துவானும் தாயும் அவன் பிரிவால் "நன்மணியிழந்த நாகம்போல" வாடினர் என்பதை முதலில் கூறினான். அவன் மனதை மாதவிபால் திருப்பின் பழைய நினைவில் மீண்டும் சினம் கொள்ளல் கூடும் ஆதலின் முதலில் பெற்றோர்பால் திருப்பினான். பெற்றோரை நினைப்பித்தால் தன் சொல்லைத் தொடர்ந்து கேட்க விரும்புவான் என்பது அவன் எண்ணம். அவன் எண்ணம் பழுதுபடவில்லை. அடுத்துச் சுற்றத்தாரை நினைப்பித்தான். "இன்னுயிர் இழந்த யாக்கை யென்னத் துன்னிய சுற்றம் துயர்க்கடல் வீழ்ந்த" செய்தியைக் கூறினான். கோவலன் சுற்றத் தார்க்கு உயிர்போல் விளங்கினான். "செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" அன்றோ? எனவே செல்வனாகிய அவன் பிரியவே கிளைகள் வாழ வகையின்றி அல்ல லுற்றன. தன் பிரிவால் பலர் துயர் உறுகின்றனர் என்பது கேட்ட கோவலன் மேலும் கேட்க அவாவுடையவனானான். பெற்றோரும் சுற்றமும் அவன் பிரிந்த பின்னர் வருந்தி வாளா அமைந்தனரோ என்ற ஐயத்தைப் போக்குவான்போல "ஏவலாளர் யாங்கணும் தேடி வருக" என்று போக்கினர்; அவர்கள் வாளா பெயர்ந்தனர்" என்றான். பெற்றோர்க்கும் சுற்றத்தார்க்கும் மட்டுமே உரியவன் அல்லன் கோவலன்; ஊருக்கே உரியவன். செல்லாச் செல்வனாயிருந்தான் ஆதலின் இல்லோர் செம்மலாக விளங்கினான். எனவே ஊர் அடைந்த நிலையை, இராமன் பிரிந்த காலத்தில் துயருற்ற அயோத்தி யின் நிலைபோன்றது என்றான் கோசிகன்.

பெற்றோர், சுற்றம், ஊரார் பட்ட துயரினைக் கூறி வந்தபோது அவன் தன்னை மறந்து வருத்த மேலிட்டுக் கேட்டு வந்தமையால், மாதவியைப்பற்றி இனிக் கூறின் வெகுளான் என்று உணர்ந்து மாதவியின் துயரைக் கூறத் தொடங் கினான். தொடங்கும் போதே, 'மாதவி அவன் நினைத்ததுபோல் அவனை வெறுத் தவள் அல்லள்; மாறுக் காதலுடையவளே' என்பதைக் கூறாமற் கூற எண்ணினான். அதனையும் ஒரு நிகழ்ச்சியை நினைப்பிக்கு முகத்தால் அவனே உணர்ந்து கொள்ளு மாறு கூற நினைத்தான்.

கோவலன் கானல்வரிப் பாட்டின் காரணமாகப் பிரிந்தபோது உடனே மாதவி வசந்தமாலை என்பவளிடம் ஒரு முடங்கல் தீட்டிக் கொடுத்தனுப்பினாள். அவள் அதனைக் கடைத்தெருவில் கோவ லனைச் சந்தித்துக் கொடுத்தாள். அவன்

அதனைப் பார்த்து வெறுத்து நீங்கினன். இந்நிகழ்ச்சியை நினைவுபடுத்தி அவள் மாருக் காதலளே என்றுணர்த்த எண்ணி னன். அதனல், "வசந்தமாலை மூலம் நீ வாராமை கேட்டுப் பசந்த மேனியளாய் அணைமிசை வீழ்ந்தாள் மாதவி" என்ருன். மாதவி கொடுத்த ஓலையை உடனே நீட்ட வில்லை. வசந்தமாலை முன் கொண்டுவந்த ஓலை பயனற்றுப்போனமை அறிவான். அதனல் பேச்சை நீட்டினன். மாதவி துயர் கேட்டுத் தான் சென்று ஆறுதல் கூறிய தாகவும், அப்போது மாதவி, தன் இணையடி தொழுது என் துயர் நீக்குக என்று வேண்டி, "என் கண்மணியனை யாற்குக் காட்டுக" என்று தன் மலர்க் கையால் எழுதிய ஓலையைக் கொடுத்த தாகவும், அது கொண்டு பல ஊர்களிலும் சென்று தேடிக் காணது வந்ததாகவும் கூறினன். பின்னரே மாதவி ஓலையைக் கொடுத்தான். அவன் சொல்லின் ஆற்றல், வாங்கிய ஓலையைக் கைவிடாது படிக்கத் தூண்டியது கோவலனை.

ஓலையின் பொருளை நன்ருக உணர்ந் தான். மாதவி 'தீதிலள்' என்று உணர்ந் தான். தன் தீது உண்மையும் உணர்ந் தான். அவ்வோலையின் சொற்ருெடர்கள் தன் தந்தைக்குத் தான் எழுத ஏற்றன வாக அமைந்திருந்தன. அவ்வோலையைக் கோசிகன் கையிற் கொடுத்து, "இதன் பொருள் உரை என் தந்தைக்கும் ஏற்பன வாகும்; ஆதலின், இதனைக் கொண்டு சென்று அவர்க்குக் காட்டுக; அவர் நல்லகம் உற்ற இடுக்கண் களைதற்கு விரைக" என்று போக்கினன். இவ்விடத்து இளங்கோவடிகள்,

"நடுக்கம் களைந்தவர் நல்லகம் பொருந்திய
இடுக்கண் களைதற்கு ஈண்டுஎனப் போக்கி"
(சிலப். கந. ௧00 - ௧)

என்ருர். "நடுக்கம் களைந்து" என்பதற்கு அடியார்க்கு நல்லார் "என்(கோவலன்) பொருட்டாக அவர் நடுங்கும் நடுக்கத் தைப் போக்கி" என்ருர். அரும்பதவுரை காரரோ "நீ நடுங்கும் நடுக்கத்தைவிட்டு" என்ருர். பின்னவர் கூற்று ஏற்புடைத் தாகும்.

அசதியாடிய கோவலனிடம் பேசி ஞலும் அவன் குணம் அறிந்தவனதலின், மாதவி ஓலைக்குத் தக்க பதில் வருமோ என்ற ஐயத்தோடு கூடிய அச்சம் கோசிகன் உள்ளத்தில் இருந்தே வந்த தாதலின் நடுங்கியே இருந்தான். ஓலை யைப் படித்த கோவலன் மாதவிக்குரியது கூருமல் அதனையே தன் தந்தைக்குரிய தாக்கிக் 'கொடுக்கப்போ' என்று போக்கிய காலத்தில் கோசிகனுக்கு நடுக்கம் இருக்கத் தான் செய்தது. அங்ஙனம் நடுங்கிய வனைப் பார்த்துக் கோவலன் "நீ நடுங்கும் நடுக்கத்தைக் களைந்துபோக" என்ருன் என்பதே சிறக்குமன்ருே? "போக்கி" என்ற சொல், தான் கொண்டுவந்த ஓலைக்குத் தக்க பதில் பெருது போக மன மில்லாதிருந்த கோசிகனை வலியப்போகச் செய்தான் கோவலன் என்பதைத் தெரி விக்கும். மாதவி ஓலையைக் கோவலனிடம் சேர்ப்பித்த மகிழ்ச்சியளவில் சென்ருன் அவன்.

மாதவியை வெறுத்துப் பிரிந்த கோவலன் அவளைப்பற்றி நல்லவள் – தீதில்லாதவள் என்றெண்ண வேண்டும். அதற்குக் கோசிகனைத் துணையாகக் கொண்டார் இளங்கோவடிகள். அவனை அறிவாற்றலுள்ளவனுக்கினர். மாதவிக் கொடிக் காட்சியைப் பயன்படுத்தினர். கோவலன் உருவம் திரிந்தமை கூறினர். கோசிகனுக்குக் கட்புல மயக்கம் உண் டென்று அரண் செய்து கொண்டார். கோசிகனை ஒரு சிற்றுறுப்பினனுக்கினும் சிலம்பு நாடகத்திற்கு ஓர் இன்றியமை யாத உறுப்பினனுகவும் ஆக்கிவிட்டார் இளங்கோ. மாதவி தீதில்லாதவள் என்ப தைக் கோவலன் உணரவேண்டிய இன்றி யமையாத பகுதியை நிறைவு செய்த பெருமை கோசிகனுக் குரிய தாக்கின ரல்லரோ அடிகள்?

# நற்றிணையும் நல்லறமும்

[வித்துவான், திரு. சொ. சிங்காரவேலனார்]

இவர் 25-11-1933இல், தஞ்சை மாவட்டம், மாயூரம் தாலுகாவைச் சேர்ந்த திருச்சிற்றம்பலத்தில் பழந்தமிழ்ப்புலவர் மரபினரான சொக்கலிங்க தேசிகர் எனும் தமிழ்ப் புலவர்க்கும் காயாம்பூ ஆச்சிக்கும் அருமை மகனாராய்ப் பிறந்தார். தருமையாதீனத்துப் பல்கலைக் கல்லூரியில் பயின்று வித்துவான் பட்டத் தேர்வில் சென்னை மாநிலத்திலேயே முதல்வராகத்தேறி ஆயிரம் வெண்பொற் காசுகளைப் பரிசிலாகப் பெற்றார். பி. ஏ பட்டமும் பெற்றுள்ளார்.



கற்பனைத் திறத்தோடு சொல்வளம், பொருள்வளம் நிரம்பிய எழுத்தோவியங்களைத் தீட்டுவதில் வல்லவர். தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருகின்றார். தருமையாதீனத்துத் தமிழாராய்ச்சிக் கழகத்திலே தமிழை ஆராயும் பெருவாய்ப்பினைப் பெற்றுள்ளார். எட்டிகுடி முருகன்மீது அந்தாதி ஒன்றுபாடி வெளியிட்டுள்ளார். எளியநடையில், இனிய தமிழில்நாடகங்களையும், கவிதைகளையும் இயற்றியுள்ளார்.

## அறம் என்பது

அறமாவது யாது? இதற்கு விடை காண்பது எளிதன்று. வாழ்வில் நன்குக ஊறி, இன்பதுன்பங்களில் ஈடுபட்டு, உலகியலில் தேர்ந்தவர்களே இதற்கு விடை காண இயலும். வரையறுக்கப்பட்ட ஓர் ஒழுங்குமுறை அறம்; பண்பின் அடிப்படையிலே எழுந்தோங்கும் இனிய மாட்சி அறம்; இயற்கை விதித்த இனிய விதியிலே எள்ளளவும் வழுவாது வாழும் நெறியே அறம். திருவள்ளுவர் 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' என்றும் (௩௪) 'அழுக்காறு அவா வெகுளி இன்னாச் சொல் நான்கும் இழுக்காவியன்றது அறம்' என்றும் (௩௫) 'இன்சொலினதே அறம்' என்றும் (௯௩) இதன் பெற்றியை விளக்கியிருத்தல் நாம் அறிந்ததே யாகும். ஆனால் பரிமேலழகர், 'அறமாவது, மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம்; அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும்' என்று தம் உரைப்பாயிரத்தே எழுதியுள்ளனர். 'உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக்கொருநீதி' என்ற பேராசிரியர் சுந்தரம்பிள்ளையின் கவிமொழி ஒருகுலத்து நீதியே மனுநீதி என்று விளக்கியிருக்கின்றது. எனவே ஒருகுலத்துநீதியாகிய மனுமுறையே அறம் என்று கூறுதல் பொருந்தாமை தெளியலாம். அறம் உலகிற்குப் பொது; அது சாதி, நாடு, இனம், மொழி, நிறம் முதலிய கட்டுப்பாடுகளின் நீங்கிப் பரந்து விரிந்து மனித மனமாம் வானத்தே திரியும் வானம்பாடி போல்வது எனலாம். அதைக் குறுகிய கட்டுப்பாட்டில் கொணர்தல் பேதைமை; அறியாமை. திருவள்ளுவர் உலக அறத்தையன்றோ ஓதுகின்றார்! 'அறத்தான் வருவதே இன்பம்' என்ற மாநில உண்மையை எடுத்தியம்புகின்றார். நற்றிணை இவ்வழியில் சீரிய அறம்பற்றிய செய்திகளை எப்படிச் செந்தமிழ் உலகிற்கு வழங்கியிருக்கிறது என்று சிந்தனை புரிவதே இக் கட்டுரையின் கருப்பொருள்.

## அறத்தின் தலைமை

உண்மை, நம்பிக்கை, அறம் என்ற முப்பெரும் பண்புகளில் மிகச்சிறந்தது அறம் ஒன்றே என்று விவிலிய நூல் விளம்புகின்றது.

"And now abideth faith, hope, charity, these three; but the greatest of these is charity"

New Testament XIII - 13.

இவ்வறத்தையே தலைசிறந்ததெனத் தமிழகமும் கருதி வந்திருக்கிறது. சங்க காலத்தும், அதற்கு முந்திய காலத்தும் வாழ்ந்த நம் முன்னோர் அறம் பற்றிய திறத்தை நன்கு உணர்ந்திருந்தனர். நம் இலக்கியங்கள் இத் துறைச் செய்திகளை நமக்கு இனிதே வழங்குகின்றன. ஒரு தலைவனும் தலைவியும் காதல் கொண்ட செய்தியை அத் தலைவி தன்னுயிர்த் தோழியினிடத்தே உரைப்பள். தோழி செவிலிபால்; செவிலி நற்றாயினிடத்து; நற்றாய் தந்தை தன்னையரிடத்தே நவில்வாள். இம்முறையை நமது அகப்பொருள் இலக்கணம் 'அறத்தொடு நிற்றல்' என்று மொழியும்.

*'சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்;*
*அறந்தலை பிரியா ஆறுமற் றதுவே'*

என்ற பாலைக்கலிப்பகுதி அறப்பாதை இன்னதென அறிவுறுத்துகிறது. நற்றிணைப் புலவர்கள் நல்கியுள்ள பாடல்களிலே இந் நல்லறம் பொங்கி வழிகிறது; புதுமணம் வீசுகின்றது.

## வழிபடு தெய்வம்

உடன்போக்கின்போது தலைவன் தலைவியை நோக்கி உரைக்கின்றான்: 'என் துயரங் கெட நின் தோளை அடையப் பெற்றேன்! இஃது எதனைப் போன்றது தெரியுமா? நெஞ்சு அழிவின்றித் தவநெறியாகிய அறம் தலைப்படுவர் நல்லோர். அத் தவத்தின் பயனால் வழிபடு தெய்வத்தை அவர்கள் தம் கண்முன்னே காண்பர்; அதனைப் போலவே நான் நின்னை அடையப்பெற்றேன்; நனிமகிழ்ந்தேன்' என்கின்றான் அவன். இவ்விடத்தே பாலை பாடிய பெருங்கடுங்கோ மிகச் சிறந்த செய்தியை உவமையாக்கி யுரைத்துள்ளமை உள்ளுந்தொறும் உவகை பயப்பதொன்றாகும் (௯).

## பொருள் நிலையாது

பொருள் நிலையில்லாது ஒழிவது என்ற உண்மையை யாவரும் உணர்வர். 'கூத்தாட்டு அவையில் மக்கள் ஒருவர்பின் ஒருவராகக் கூடுவர். ஆட்டம் முடிந்த விடத்து அனைவரும் ஒன்றாக விரைந்தேகுவர். இதைப் போன்றதே பெருஞ் செல்வம். சேருங்கால் ஒன்றொன்றாகச் சேரும்; ஒழியுங்கால் எல்லாம் உடனொழியும்' என்று திருவள்ளுவர் இதன் நிலையாமையை இனிது விளக்குவர். சிறைக்குடியாந்தையார் என்ற செந்தமிழ்ப் பாவலர், 'பொருள் நிலையற்றது; வாடாத மலரையுடைய பொய்கையிலே ஓடுகின்ற மீன் செல்லும் வழி எப்படிக் கணநேரமும் நில்லாதோ, அதைப்போல விரைந்து கெடுவது' என்று உரைத்துள்ளார். (௫)

## எது செல்வம்?

மிளைகிழான் நல்வேட்டனார் செல்வம் எது என்பதை விளக்கினார்; அரசரால் பெறப்படும் மாராயம் முதலியனவே செல்வம் எனலும் பிழை; தேர், யானை, குதிரை முதலியவற்றை ஊர்தல்தான் செல்வம் என்று கருதுதலும் பிழை; இவை செய்யும் வினைப்பயனால் விளைவனவே யன்றி வேறில்லை. சான்றோர் இவற்றையெல்லாம் செல்வமென்று கொள்ளார்; தம்மை அடைக்கலமாகச் சேர்ந்தோரது துன்பத்திற்கு அஞ்சி அத் துன்பத்தைப் போக்கி அவர்களை இன்பமாகக் காக்கும் இனிய பண்புச் செல்வமே செல்வமாகும் என்பது அப் புலவர்பிரான் கருத்தாகும். (உ௧0). செல்வத்தைத் தேடுதலிலேயே காலத்தைக் கழித்துப் பண்பு நலம் தேடாதிருத்தல் எவ்வளவு பேதைமை என்று இடித்துரைக்கின்றது இவர்தம் இன்மொழி.[1]

## உயிரா? நாணமா?

நாணம் சிறந்ததா? உயிர் சிறந்ததா?— எடையிடுகின்றார் நொச்சி நியமங்கிழார் என்ற புலவர். மானம் சிறந்ததா? உயிர் சிறந்ததா? என்று வினாக்குறியிட்ட திருவள்ளுவர் 'உயிர்நீப்பர் மானம் வரின்'

1. 'Put not your trust in money; But put your money in trust'. — O. W. Holmes

என்று மானம் உயிரினும் மதிப்புடைத்தாதலை விளக்கியுள்ளமையை இங்குக் கருத்தூன்றி நோக்க வேண்டும்.

'உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று'

என்பது தமிழர் வாழ்வியல் அல்லவா? 'உயிரினும் சிறந்த நாணும்' (ஏஏ) என்று பண்புநலம் உயிரினும் சிறந்ததாதலை இப்பாவலர் புலப்படுத்தி யுள்ளமை எண்ணுந்தொறும் இனிமை உடையதாகும்.

### பொய்ச்சான்று கூடாது

ஒரு வழக்கு என்றால் அது பொய்ச்சான்று சொல்வோரை உடைத்தாயிருத்தலாகாது. கையூட்டுப் பெற்றுக் கொண்டு பொய்ச்சான்று சொல்வோர் பலரை இக்கால அறமன்றங்களிற் காண்கின்றோம் அல்லமோ? அறிந்த சான்றைப் பொய்த்து அவ்வாறு புகறல் தீது பயப்பதொன்றாகலின் ஆன்றோர் அதனை நாடார்.

'அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கில்லை'

அல்லவா? மழையறுக்கும் கோள்களில் 'உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரையும்' ஒன்றாக்கித் திரிகடுகம் கூறியிருத்தல் உணரத்தக்கது. வெள்ளைக்குடி நாகனார் என்ற விழுமிய புலவர் தலைவியின் கூற்றாகத் திங்களை நோக்கி 'அறிகரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே' (கஅசு) என்று வினவும் பகுதி நம் முன்னோர் அற வாழ்வின் நுணுகியிருந்த சிறப்பை இனிது விளக்குவதாகும்.

### அற உள்ளம்

மருத்துவம் புரிவோரின் அறமனப் பாங்கை நற்றங்கொற்றனார் நன்கு நவின்றுள்ளார் (கந௬). 'பிணியாளர் விரும்பியவைகளையெல்லாம் மருத்துவன் கொடான். அவனுக்குத் தெரியும், பிணியாளனது பிணிக்கு மாறுவன இன்னவென. தான் கொடுக்கும் மருந்துகளை ஆய்ந்து கொடுப்பானே ஒழியப் பிணியாளன் விரும்புவனவற்றையெல்லாம் கொடுக்காத அவன் தன்மைபோலத் தந்தை சிறு வளையாகத் தனக்குச் செய்தளித்தான்; அது தலைவன் பிரிந்ததால் இளைத்த உடலொடு கழலாது கிடத்தலால் நொதுமலர் அறிந்திலர்' என்றனள் தலைவி. இங்கே மருத்துவனின் மனம் அறத்தின் அடிப்படையில்-நடுவுநிலைமை பிறழாது இருத்தல் இனிது விளக்கப் பெற்றமை தெளியலாம்.

### வாழ்வின் குறிக்கோள்

தலைவர் தத்தம் அன்புக்குரிய தலைவியரைப் பிரிகின்ற செய்தி நம் இலக்கியத்தில் பயின்று வருதலைக் காணலாம். காதலைவிட அறத்தைப் பெரிதாய் எண்ணுவர் நம் முன்னோர். உலகியல் நெறியிலே மனையறம் வழுவாமை இயற்றுதல் ஆடவர்க்குற்ற கடமை; அதனை உணர்ந்து அவரொடு வாழ்க்கைத் துணையாதல் மகளிர் கடமை. இருபாலாரும் இதனைப் புரிந்திருந்தனர். இதுவன்றோ இனிய வாழ்வு! கருவூர்க் கோசனார் என்ற கவிஞர் நற்றிணையிலே இத்திறத்தை நன்கு விளக்கியுள்ளார். 'இம்மைக்குரிய புகழ், இருமை யின்பம், அதனை விளைக்கும் ஈகை என்னும் மூன்றும் தத்தம் இல்லங்களில் சோம்பி யிருந்தார் பெறல் இயலாது; ஆள்வினைத் திறத்தோடு அயல்நாடு சென்று பொருள் திரட்டிவருவோரே இம் மனையறம் பேணற்கு உரியர்' என்று (உகச) கவிஞர் பேசுதல் அக்கால முன்னோர் அறம் பேணும் 'ஆர்வமாக்களாக' இருந்தமையைத் தெளிவுபடுத்துவதாகும். காமக் கணிப்பசலையார் என்ற பெண்பாற் பாவலர்,

'பொருள்வயிற்
பிரிதல் ஆடவர்க்கியல் பெனின்
அரிதுமன் றம்ம அறத்தினும் பொருளே'(உசா)

என்று இக்கருத்தையொட்டியே பாடுதல் ஒப்புநோக்கி மகிழற்குரியது. களிற்று யானை ஒன்று விரைந்த செலவை யுடைய தாய்க் குன்றம் ஒன்றில் தோன்றுகின்றது; நன்கு செருக்கிய சிந்தையோடு தோன்றும் அவ்வேழத்தைக் கூர்ந்து நோக்கினால் அதன்பால் குன்றாத ஒரு பொலிவு தோன்றுகின்றது. அப்பொலிவுக்கு ஓர் உவமை உரைக்கின்றார் அதனைப் படைக்கும் பாவலர் கபிலர் (உகஎ). புகழ்பட வாழ்பவர் செல்வம்போல அவ்வேழம் பொலிகின்றது என்பது அவர் கருத்து. எவ்வளவு அழகிய கருத்து!

'இசைபட வாழ்பவர் செல்வம் போலக்
காண்டொறும் பொலியும் கதழ்வாய் வேழம்.'

## அறமும் அரசும்

அரசன் குடிகளிடத்து வரி பெற்றுத் தன் அரசாங்கத்தை நடத்துவான். 'பிறர் இன்மையின் தானேவந்து சேரும் பொருளும், வரிப்பொருளும், பகைவரைக் கொன்று வரும் பொருளுமாகியவையே ஒரு மன்னன் பொருளாக இருக்கும்' என்றார் திருவள்ளுவர்.

'உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்'

வரி கொள்ளுங்கால் அரசன் செங்கோன்மை தவறலாகாது; அவ்வாறு தவறி அவன் குடிகளை வருத்திக் கொள்ளக் கருதுவானாயின் அது 'வேலொடு நின்றான் இடு என்றது போலும்' கொடுமை உடையது. யானைபுக்க புலம்போல அவன் நாடு கெட்டுவிடும் என்பது புறநானூற்றுப் புலவர் நிறைமொழியுமாகும். "கொள் பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தன் மழையறுக்கும் கோள்" என்பது திரிகடுகம். இந்நெறியில், நற்றிணைப் புலவராகிய கணி புன் குன்றனார் நமக்கோர் அறம் உரைக்கின்றார்: குடிகளுடைய செல்வமெல்லாம் குறைபடும் வண்ணம் அரசன் வருத்தி வரிப்பொருள் கொள்ளலாகாது என்பது அது; அதுவன்றோ நல்லறம்! அவ்வாறே மருந்துக்குப் பயன்படும் ஒருமரத்தை அடியோடு வெட்டமாட்டார்கள் மக்கள். பிற் பயன் கருதி அதனை முற்றும் கொள்வாரல்லர். அவ்வண்ணமே, தம் வலிமை முற்றவும் கெடுமாறு தவம்புரியார் துறவியர்; 'அழிவிலமுயலும் ஆர்வமாக்கள்'. இம்மூன்று உவமைகளையும் எடுத்துக் காட்டித் தலைவர் பொருள்தேடப் புக்கது இன்ப நுகர்ச்சிக்குத்தானே! அதற்கடிப் படையான நான் உயிரிழந்துபடின் இன்ப நுகர்வுதானெங்கே? மருந்து மரத்தை முற்றுங் கொள்ளும் மாந்தர் செயலாக அல்லவா உள்ளது காதலர் நிலை என்கிறாள் தலைவி. இம்மூன்று உவமைகளையும் பொருளாழம் பொதிந்தவையாய்க் கவிதையுட் கூட்டி அளிக்கும் கணிபுன்குன்றனரின் புலமைத்திறந்தான் என்னே!

'மரஞ்சாம் மருந்தும் கொள்ளார் மாந்தர்
உரஞ்சாச் செய்யார் உயர்தவம் வளங்கெடப்
பொன்னுங் கொள்ளார் மன்னர்' (உ௨௬)

## சான்றோர் செல்வழி.

அஞ்சிலாந்தையார் என்ற செஞ்சொற் கவிஞர் முன்னோர் சென்ற முது நெறி தலைப்படுதலே சால்பு தழையும் பெருவழி என்பதனைக் குறிக்கின்றார். தானே புதுவழி தேர்ந்து புகுவனாயின் கல்லும் முள்ளும், புதரும் இடர்புரிவன அன்றோ? அன்புடைய நெஞ்சிலே அருள் பொருந்தி ஆன்றோர் செல்லும் நெறியிலே வாழ்தல் வேண்டும்; அதுவே சான்றோனாதற்கு உறுவதாகும் (உ௩௪) என்று அவர் கூறும் அறிவுரை அனைவர்க்கும் பொது. அன்பும், அருளும் சால்புமே நன்னெறிக்கு அடிப்படை என்ற கருத்துச் சிந்தனைக்குரிய சிறப்பாகப் பொலிகின்றது.

## சொல்தவறாமை

சொல்லியசொல் பிறழாமையே ஒரு பேரறமாகும். மொழிபிறழ்தலைப் போன்ற கொடுமை வேறில்லை. இவ்வுலகமே தலைகீழாக மாறினாலும் சொல்லிய சொற்புடைபெயரார் காதலர் என்று மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தங்குமரனார் பாடும் பகுதி (உ௮௬) இவ்வறத்தின் திறத்துக்கோர் எடுத்துக் காட்டாகும்.

'அம்ம வாழி தோழி காதலர்
நிலம்புடை பெயர்வ தாயினும் கூறிய
சொற்புடை பெயர்தலோ இலரே' (உ௮௬)

இந்தநிலை மக்களினத்துக்கு வந்தெய்துங்கால் வாழ்வு பெரிதும் சிறப்பதாகும். கணத்துக் கொரு பேச்சாகிக் குணத்திற் றிரிந்து எங்கோ செல்லும் இக்கால மக்களினத்துக்கு இதுவொரு நல்லறமேயன்றோ? இதனை நற்றிணை நல்குகிறது.

## வினைசெயல்வகை

தேய்புரிப் பழங்கயிற்றினார் என்ற தெள்ளுதமிழ்ப் பாவலர் முயற்சியின் பெருமையை எடுத்துவிளக்குகிறார். ஆள்வினைத் திறத்தால் செய்யும் செயலைத் தூய்மையும் வாய்மையும் உடையனவாகச் செய்தல் வேண்டும் என்பது அவர் அறிவுரை.

'செய்வினை முடியாது எவ்வம் செய்தல்
எய்யா மையோடு இளிவு தலைத்தரும்' (நஅச)

எத்துணைச் சீரிய அறவுரை இது! அறியாமையும் இகழ்ச்சியும் கொடுப்பது செய்யும் வினையை ஆள்வினைத் திறத்தால் முற்றச் செய்யாது இடர் தருவதாகும். தொடங்கும் வினையை முற்றச் செய்தால் அதில் விளையும் இன்பமே தனிப்பட்டது அன்றோ? 'உள்ளிய வினை முடித்தன்ன இனியோள்' என்று தலைவியைக் கூடுதலின் இனிமைக்கு அவ்வினிமையை ஒப்புமை கூறுதலும் உணரத்தக்கது வினை செயல் வகை அறத்தின் ஒரு கூறல்லவா?

## தொகுப்புரை

இதுகாறும் கூறியவற்றால் நற்றிணை நல்லறக் கருத்துக்களைத் தன்பால் கெழுமியுள்ளதென்பதும், அவை நல்வாழ்விற்கு அடிப்படையாகும் நலஞ்சான்றன என்பதும், அறவுணர்ச்சியும், வாழ்வுணர்ச்சியும் அந்நாளைய மக்களாலும் பின்பற்றப் பெற்றன என்பதும், இன்றைய உலகம் எதிர்நோக்கும் அவ்வறக் கோட்பாட்டைத் தனிச்சிறப்பொடு தாங்கி மிளிரும் நன்னூல் நற்றிணையாகும் என்பதும் இனிது பெறப்படும்.

---

# அன்பு வாழ்க்கை

அன்பு என்றால் வெறுங் காதலல்ல. உணர்வும் அறிவும் உணர்ச்சியும் இயைந்ததொரு நிலை; அன்பாயினர் ஒன்றுகின்ற நிலை. நிலத்திலே பொழிந்த மழைநீர் அந்த நிலத்தின் நிறமும் சுவையும் பெற, நிலமும் நீரின் தன்மை பெற்று நெகிழ்ந்து குழைகிறது. காதலனும் காதலியும் அவ்வாறு ஒன்று படுகின்றனர் எனச் செம்புலப் பெயல் நீரை ஒரு புலவர் உவமை கூறினர். அவ்வுவமையினும் இன்சுவை மிக்கதும் நறுமணங் கமழ்வதுமான ஒருவமையைக் கபிலர் பெருமான் நற்றிணையிற் (பாடல்-க) கூறுகின்றார். தாமரை எங்கோ நீரில் பூக்கின்றது. அதன் தேன் அம் மணமும் இனிமையும் பெற்றது. சந்தனமரம் எங்கோ காட்டில் வளர்கின்றது. இயற்கை இவ்விரண்டின் தாதையும் ஒருங்கு கமழ வைத்துச் சந்தன மரத்தில் தேன் கூடு கட்டுதல் அமைகின்றது. சந்தனத்தின் நறுமணமே தேனின் மணமாகிறது; ஆனால் சுவையோ தேனின் சுவையே. இவ்வாறு இயற்கை வழியே தலைவனும் தலைவியும் ஒன்றாகி ஒருவர் இயல்பு ஒருவரதாக இருவரும் ஒருவராகின்றனர். ஒருவரை விட்டு ஒருவர் வாழ்தல் எங்ஙனம் கூடும்?

"நின்ற சொல்லர் நீடுதோன்(று) இனியர்
என்றும் என்தோள் பிரிபறி யலரே
தாமரைத் தண்தா(து) ஊதி மீமிசைச்
சாந்தில் தொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை
நீரின் றமையா உலகம் போலத்
தம்மின்(று) அமையா நம்நயந் தருளி
நறுநுதல் பசத்தல் அஞ்சிச்
சிறுமை யுறுபவோ செய்பறி யலரே."

இத்தகைய வாழ்க்கை இக்காலத்திற்கும் உகந்தது அல்லவா?

—தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், "நற்றிணைச் சொற்பொழிவுகள்.

# சைவ வைணவ பௌத்த சமண சிற்பங்கள்

## சிற்ப உருவங்களின் அமைப்பு

[திரு. மயிலை. சீனி. வேங்கடசாமி]

*சென்னை, மயிலாப்பூரில் 1900இல் பிறந்த இவர், தமிழை முறையாகத் தம் தமையனாராகிய, மயிலை, சீனி. கோவிந்தராசனாரிடத்திலும், பேராசிரியர், ச. த. சற்குணரிடத்திலும் பயின்றுள்ளார். ஆரவாரமேதுமின்றி அடக்கமாகத் தமிழ்த் தொண்டு செய்துவருகின்றார். சிறந்த ஆராய்ச்சிப்புலமை வாய்ந்தவராவார். தமிழின் தொன்மையையும் சிறப்பையும் தம்முடைய நூல்கள் வாயிலாகத் தெள்ளத் தெளிய விளக்கிக் காட்டும் இவர் தம் நுண்மாண் நுழைபுலம்*



*பாராட்டற்குரியது. இவருடைய நூல்களுள், 'கிறித்துவமும் தமிழும்', 'பௌத்தமும் தமிழும்', 'சமணமும் தமிழும்', 'தமிழர் வளர்த்த அழகுக்கலைகள்', 'இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்', 'இறையனார் அகப்பொருள் ஆராய்ச்சி', 'மறைந்து போன தமிழ் நூல்கள்' முதலியன குறிப்பிடத் தக்கனவாகும். இவற்றுள் சில அரசியலார், தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் ஆகியோரின் பாராட்டையும் பரிசையும் பெற்றுள்ளன. பல மன்றங்களில் உரை நிகழ்த்தியும் வருகின்ருர்.*

நமது நாட்டிலே சைவம் வைணவம் பௌத்தம் சமணம் என்னும் நான்கு மதங்களும் தொன்றுதொட்டுள்ள பழைய மதங்களாகும். இந்த நான்கு சமயத்தாரும் தத்தமக்கென்று கோயில்கள் அமைத்து அக்கோயில்களில் தத்தம் தெய்வ உருவங்களைச் சிற்பத்திலும் ஓவியத்திலும் அமைத்து வணங்கினுர்கள். இந்தத் தெய்வங்களின் உருவ அமைப்பிலே சிறப்பாகச் சில வேறுபாடுகள் உண்டு. சிற்பக் கலைகளை ஆராய்வோர் அந்த வேறுபாடுகளை அறிய வேண்டும். இந்த நான்கு சமயங்களில், சைவ வைணவ சமயங்கள் ஒருவகையில் ஒத்த தன்மையுடையன; பௌத்த சமண சமயங்கள் ஒரு சார்புடையன. மற்றெரு வகையில், சைவ சமண சமயமும் வைணவ பௌத்த சமயமும் ஒற்றுமையுடையன. இக்காலத்தில் நமது நாட்டில் சிறப்பாக உள்ள சமயங்கள் சைவமும் வைணவமுமே. பௌத்த மதம் அடியோடு மறைந்து போயிற்று; சமண சமயம் (ஜைன மதம்) குன்றிக் குறைந்துவிட்டது. ஆயினும், பௌத்த ஜைன சமயத்து உருவச்சிலைகளையும் சிற்ப உருவங்களையும் நமது நாட்டில் ஆங்காங்கே கண்டு வருகிறோம்.

சைவ சமயத்தின் முதல் தெய்வமாகிய சிவபெருமான் திருவுருவம் நின்ற வண்ணமாகவும் இருந்த (அமர்ந்த) வண்ணமாகவும் அமைக்கப் படுகிறது. கிடந்த (படுத்த) வண்ணமாக அமைக்கப்படுவது இல்லை. அதுபோலவே சமண (ஜைன) சமயத்தின் தெய்வமாகிய அருகப்பெருமான் திருவுருவமும் நின்ற வண்ணமாகவும் இருந்த வண்ணமாகவும் அமைக்கப்படுகிறது; கிடந்த வண்ணமாக அமைக்கப்படுவது இல்லை. இதில் இவ்விரண்டு சமயங்களுக்கும் பொருத்தம் உண்டு.

வைணவ சமயத்தின் முதல் தெய்வமாகிய திருமாலின் சிற்ப உருவம், நின்ற வண்ணமாகவும் இருந்த வண்ணமாகவும் கிடந்த வண்ணமாகவும் அமைக்கப்படுகின்றது. அதுபோலவே, பௌத்த சமயத் தெய்வமாகிய புத்தர் பிரானுடைய திருவுருவமும் நின்ற, இருந்த, கிடந்தவண்ணமாக அமைக்கப்படுகின்றது. இந்த மூவகையமைப்பை நின்ருன் இருந்தான் கிடந்தான் என்று கூறுவர். இந்த அமைப்பு முறையில் வைணவ சமயமும் பௌத்த மதமும் பொருத்தம் உடையன.

சிவபெருமான் திருவுருவமும் திருமால் திருவுருவமும் கூத்தாடும் உருவமாக அமைக்கப்படுவதும் உண்டு. அவற்றை நடராசர் மூர்த்தத்திலும், குடக்கூத்து காளிங்கமர்த்தனம் முதலிய மூர்த்தத்திலும் காணலாம். ஆனால், அருகர் புத்தர் உருவங்கள் கூத்தாடும் கோலமாக அமைக்கப்படுவது இல்லை. நிற்க.

இந்தக் கட்டுரையில் சிறப்பாகக் கூற வந்தது வேறு ஒன்றைப்பற்றியே. அது என்னவென்றால், இந்த நான்கு சமயத் தெய்வ உருவங்களின் கையமைப்பில் காணப்படும் சிறப்பியல்புகள்தாம். சிவபெருமான் திருவுருவத்திலும் திருமால் திருவுருவத்திலும் பொதுவாக நான்கு கைகள் அமைக்கப்படுகின்றன. சில சமயங்களில் எட்டு அல்லது பதினறு கைகள் அமைக்கப்படுவதும் உண்டு. இரண்டு கைகள் மட்டும் உள்ள சிவபெருமான் திருமால் திருவுருவங்களைக் காணமுடியாது.[1]

சிவபெருமானுக்கு உள்ள நான்கு திருக்கைகளில் இரண்டுகைகள் வரத அபயக்கைகளாகவும், மற்ற இரண்டு கைகள் மான் மழு ஏந்திய கைகளாகவும் அமைக்கப்படுகின்றன. எட்டு, பதினறு கைகள் அமைத்திருந்தால் அக் கைகள் ஒவ்வொன்றிலும் வெவ்வேறு ஆயுதங்களை ஏந்தியிருப்பன போல அமைக்கப்படுகின்றன. திருமாலின் நான்கு திருக்கைகளில் இரண்டு வரதஅபயக்கரங்களாகவும், மற்ற இரண்டு கைகள் சங்கு சக்கரம் ஏந்திய கைகளாகவும் அமைக்கப்படுகின்றன. எட்டு, பதினறு கைகள் அமைக்கப்பட்டால், அக் கைகள் வெவ்வேறு ஆயுதங்களைத் தாங்கியிருப்பன போன்று அமைக்கப்படுகின்றன.

சிவபெருமானின் சக்தியாகிய அம்மன் திருவுருவம் சிவபெருமானுக்குப் பக்கத்தில் அமைக்கப்படும்போது, அம்மன் சிவபெருமானுக்கு ஆற்றலில் குறைந்தவர் என்பதைக் காட்டும் பொருட்டு, அவ்வுருவத்திற்கு இரண்டு கைகள் மட்டும் அமைக்கப்படுகின்றன. ஆனல், அம்மன் திருவுருவம் தனியாக அமைக்கப்படும்போது, நான்கு கைகளையுடையதாக அமைக்கப்படுகின்றது. அதுபோலவே, திருமாலின் சக்தியாகிய தாயார் (இலக்குமி) திருவுருவம் திருமாலுக்குப் பக்கத்தில் அமைக்கப்படும்போது, திருமாலின் ஆற்றலுக்குக் குறைந்த ஆற்றலுள்ளவர் என்பதைக் காட்டுவதற்காக, திருமகளுக்கு இரண்டு கைகள் மட்டும் அமைக்கப்படுகின்றன. திருமகள் திருவுருவம் தனிமையாக அமைக்கும்போது நான்கு கைகளையுடையதாக அமைக்கப்படுகிறது.

சைவ வைணவ சமயத்துச் சிறு தெய்வங்களும் நாயன்மார்களும் ஆழ்வார்களும் இரண்டு கைகளை மட்டும் உடையவர்களாக அமைக்கப்படுகிருர்கள். இதற்கு நேர்மாருக, பௌத்த சமண சமயங்களின் முதல் தெய்வங்களாகிய புத்தர் அருகர் திருவுருவங்களுக்கு இரண்டு கைகள் மட்டும் உள்ளன. அந்தத் தெய்வங்களுக்கு நான்கு கைகள் அமைக்கப்படுவது இல்லை. ஆனல், அந்தச் சமயங்களின் சிறு தெய்வங்களுக்கு மட்டும் நான்கு கைகளும் எட்டுக் கைகளும் அமைக்கப்படுகின்றன. உதாரணமாகப் பௌத்த மதத்தின் சிறு தெய்வமாகிய போதிசத்துவர் எனப்படும் அவலோகிதருக்கு நான்கு அல்லது எட்டுக் கைகளும், தாராதேவிக்கு நான்கு கைகளும் உள்ளன. ஜைன சமயத்துச் சிறு தெய்வமாகிய பிரமயக்ஷன், ஜுவாலாமாலினி முதலியவர்களுக்கு நான்கு, எட்டுக் கைகள் உள்ளன. எதிரிலுள்ள படத்தைக் காண்க.

அஃதாவது, சைவ வைணவ சமயங்களின் பெரிய தெய்வங்களுக்கு நான்கு கைகளும் சிறு தெய்வங்களுக்கு இரண்டு கைகளும் சிற்ப உருவத்தில் அமைக்கப்படுகின்றன. இதற்கு நேர்மாருகச் சமண பௌத்த சமயங்களின் பெரிய தெய்வங்களுக்கு இரண்டு கைகளும், சிறு தெய்வங்களுக்கு நான்கு கைகளும் சிற்ப உருவத்தில் அமைக்கப்படுகின்றன.

சைவ வைணவ சமண பௌத்த சமயங்களுக்கு எல்லாம் பொதுவான சிறு தெய்வம் இந்திரன். ஆனல், இந்திரன்

1. மிகப் பழைமையான சிவபெருமான் திருமால் திருவுருவங்களுக்கு, மிக அரிதாக இரண்டு திருக்கைகள் மட்டும் உள்ளன. அவை விதிவிலக்கானவை.

உருவத்தைச் சிற்ப உருவமாக அமைக்கும் போது, சிவனுக்கும் திருமாலுக்கும் கீழ்ப் பட்டவன் இந்திரன் என்பதைக் காட்ட அவனுக்கு இரண்டு கைகளை அமைத்துக்



போதிசத்துவர்

(சென்னை அரசுச் செய்தித்துறை இயக்குநர் ஒப்புதல் பெற்றது.)

காட்டுகிறார்கள் சைவ வைணவ சமயத் தார்கள். இதற்கு மாருகப், புத்தருக்கும் ஜினனுக்கும் கீழ்ப்பட்டவன் இந்திரன் என்பதைக் காட்டுவதற்காகப் பௌத்தரும் சமணரும் இந்திரனுக்கு நான்கு கைகள் அமைத்துக் காட்டுகிறார்கள்.

திருமால் சிவபெருமான் திருவுருவங் களுக்கு இரண்டு கைகளை அமைக்காமல் ஏன் நான்கு அல்லது எட்டுக் கைகளை அமைக்கிறார்கள்? ஜினனுக்கும் புத்த னுக்கும் நான்கு கைகள் அமைக்காமல் ஏன் இரண்டு கைகளை மட்டும் அமைக் கிறார்கள்? இதற்குக் காரணம் என்ன? இந்தச் சமயங்களின் கொள்கைகளே, தத்துவங்களே இதற்குக் காரணமாகும். அப்படியானல் அந்தத் தத்துவங்கள் எவை? அவற்றை விளக்குவோம்.

சைவர் வணங்கும் சிவபெருமானும் வைணவர் வணங்கும் திருமாலும் உருவம் இல்லாத கடவுள்கள். உருவம் இல்லாத இந்தக் கடவுளர்க்கு, உருவத்தைக் கற்பித் தார்கள் பண்டைக் காலத்துப் பெரியோர் கள். எல்லாப் பிறப்புக்களிலும் மனிதப் பிறப்பே பலவகையிலும் சிறந்து காணப் படுகிறபடியால், கடவுளுக்கு உருவத்தைக் கற்பனை செய்தபோது, அவருக்கு மனித உடம்பையே கற்பித்தார்கள். மனித உடம்பைக் கற்பித்தபோதிலும் கடவுள் ஆகாயத்தையே உடலாகக் கொண்டவர் என்றும், திசைகளையே கைகளாக உடை யவர் என்றும் கற்பனை செய்தார்கள். இதற்குச் சைவ வைணவ நூல்களே சான்று கூறுகின்றன.

சிவபெருமானுக்கு உடம்பாக இருப் பது ஆகாசம் என்று சைவ நூல்கள் கூறு கின்றன. ஆகாசமாம் உடல் என்று திரு மந்திரம் கூறுகிறது. விசும்பே உடம்பு என்று சேரமான் பெருமாள் தமது பொன் வண்ணத்தந்தாதியில் (19) கூறுகிறார்.

"விண்ணவர் முதலா வேறோர் இடமாக்
கொண்டுறை விசும்பே, கோல! நின் ஆகம்"

என்று பட்டினத்துப் பிள்ளையார் தமது ஒருபா ஒருபஃதில் கூறுகிறார். திசைகள் எட்டும் திருக்கைகள் என்று திருமந்திரம் கூறுகிறது. பத்துத் திசைகளும் பத்துக் கைகளாகும் என்று காமிகாகமம், அர்ச்சனு விதிப் படலம் 335 ஆம் சுலோகம், கூறு கிறது. திசைதோள் என்று சேரமான் பெருமாள் நாயனர் தமது பொன்வண் ணத்தந்தாதியில் (19) கூறுகிறார். எண்டிசை

எண்டோள் என்று பட்டினத்தடிகள் தமது ஒருபா ஒருபஃதில் கூறுகிருர். திருமாலின் திருவுருவத்தையும் இவ்வாறே மிக அழகாகப் பாடுகிருர், நற்றிணைக்குக் கடவுள் வாழ்த்துப் பாடிய பெருந்தேவனுர்.

"மாநிலம் சேவடி யாகத், தூநீர்
வளைநரல் பெளவம் உடுக்கை யாக,
விசும்பு மெய்யாகத், திசை கை யாகப்,
பசுங்கதிர் மதியமொடு சுடர் கண்ணுக
இயன்ற எல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வன் என்ப
தீதற விளங்கிய திகிரி யோனே"

என்று, உருவமற்ற திருமாலுக்குப் பண்டைக் காலத்துப் பெரியோர் உருவம் கற்பித்ததைச் சொல்லோவியமாகக் காட்டுகிருர் பெருந்தேவனுர். இதனுல், திருமாலும் சிவபெருமானும் ஆகாயத்தைத் திருமேனியாகவும் திசைகளைக் கைகளாகவும் கொண்டவர் என்பது தெரிகிறது. இவர்களுக்குத் திசைகள் கைகளாக அமைந்தன என்ருல், இவர்களின் கைகள் நான்காகத்தானே இருக்கவேண்டும்? திசைகளை எட்டாகவும், பதினுருகவும் கொள்ளும்போது கைகளும் இவர்களுக்கு எட்டும் பதினுறுமாகத்தானே அமைய வேண்டும்? திசைகளே கைகள் என்று கூறிவிட்டு, உருவம் அமைக்கும்போது இரண்டு கைகளை அமைத்தால் பொருந்தாதல்லவா? திசைகள் இரண்டல்லவே; நான்குதானே. இதனுல்தான், சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் அமைக்கப்படும் திருவுருவங்களில் கைகள் நான்காகவும், எட்டாகவும் பதினுருகவும் அமைக்கப்படுகின்றன.

ஆனுல், பௌத்த சமண சமயங்களின் தத்துவக்கொள்கை சைவ வைணவ சமயத்தைப் போன்றதல்ல. அருகப்பெருமானும் புத்தர் பெருமானும் மனிதராக இருந்து தமது தவத்தினுலும் ஒழுக்கத்தினுலும் அருகப் பதவியையும் புத்தப் பதவியையும் பெற்றவர்கள். மனிதப் பிறப்பில்தான் அருகநிலையையும் புத்த நிலையையும் அடையலாமே தவிர, மற்றத் தேவர் நரகர் விலங்கு முதலிய பிறவிகளில் அப்பதவிகளை அடைய முடியாது என்று அந்த மத நூல்கள் கூறுகின்றன. எனவே, மனித நிலையிலிருந்து உயர்ந்த நிலையடைந்த புத்த அருகத் தெய்வங்களுக்கு இரண்டு கைகள்தானே இருக்கவேண்டும்? மானசாரம் முதலிய சிற்பக்கலை நூல்களும், ஜினனுக்கும் (அருகக் கடவுளுக்கும்) புத்தனுக்கும் இரண்டு கைகளும் இரண்டு கண்களுந்தான் அமைக்க வேண்டும் என்று கூறுகின்றன.

பௌத்த ஜைன மதங்களின் சிறு தெய்வங்களுக்கு மட்டும், நான்கு எட்டுக் கைகளை ஏன் கற்பித்தார்கள் என்பது விளங்கவில்லை. புத்தர் அருகர்களைப் போலவே இச்சிறு தெய்வங்களுக்கும் இரண்டு கைகள் இருந்தால் பெரிய தெய்வங்களுக்கும் சிறு தெய்வங்களுக்கும் வேற்றுமை தெரியாமற் போகும் என்பதைக் கருதிப், பிரித்தறிவதற்காக இவ்வாறு கற்பித்தார்கள் போலும்.

சைவ வைணவ பௌத்த சமண சமயங்களின் சிற்ப உருவங்களிலும் ஓவியப் படங்களிலும் இத்தகைய வேறுபாடுகள் காணப்படுகின்றன. நமது நாட்டுச் சிற்பக்கலை ஓவியக் கலைகளை ஆராய்வோர் இவற்றையெல்லாம் அறிய வேண்டும். நமது நாட்டிலே கணக்கற்ற அழகான சைவ வைணவ பௌத்த ஜைன உருவச் சிலைகள் கல்லிலும் செம்பிலும் அமைக்கப்பட்டுள்ளன. அவையெல்லாம் அங்கங்கே பல இடங்களில் சிதறிக்கிடக்கின்றன. அவற்றைக் காணும்போது அவை நமது உள்ளத்திலே ஏதேதோ உணர்ச்சிகளை ஊட்டுகின்றன. சிற்பக் கலைச் செல்வங்களை பொன்னேபோல் போற்றிப் பாதுகாக்கவேண்டும். உடைந்து போன அல்லது சிதைந்துபோன சிற்பங்களாக இருந்தாலும் அவற்றைப் போற்றி வைக்க வேண்டும்.

இக்காலத்தில் சிற்பக்கலை ஆர்வமும், அக்கலை ஆராய்ச்சியும் பெரும்பான்மையோருக்கு இல்லை. நூற்றில் தொண்ணூற்றென்பது பேருக்கு இல்லையென்று சொல்லலாம். சிற்பக்கலையைச் சிறப்பாக வளர்த்த நம் நாட்டின் இன்றைய நிலை இது! புத்த உருவச்சிலைக்கும் ஜைன உருவச்சிலைக்கும் வேற்றுமை தெரியாதவர்கள், கணக்கற்றவர் நமது நாட்டில் இன்றும் இருக்கிருர்கள்! படித்தவர்களி

லேயே இப்படி என்ருல், வரலாறே தெரியாத படிக்காத பாமரர்களைப் பற்றிக் கூற வேண்டியதில்லையே.

சில ஆண்டுகளுக்கு முன்பு ஓர் ஊரில் சில செம்புச் சிற்ப உருவங்கள் பூமியிலிருந்து அகழ்ந்து எடுக்கப்பட்டன. அவை நடராஜர் சிவகாம சுந்தரி, இராமர் இலக்குமணர் சீதாலக்ஷ்மி என்னும் உருவங்களாகும் இந்த அழகான செம்பு உருவங்களை ஒரு கோவிலில் வைத்து வணங்குகிருர்களாம். வைத்தவர்கள் நடராஜர் பக்கத்தில் சீதை உருவத்தையும் இராமர் பக்கத்தில் சிவகாமியின் உருவத்தையும் மாற்றிவைத்திருக்கிருர்களாம்! நடராசரின் தாண்டவத்தைக் கண்டு மகிழவேண்டிய சிவகாமி இராமன் பக்கத்தில் சீதையின் இடத்திலிருப்பதும், இராமர் பக்கத்தில் இருக்க வேண்டிய சீதை நடராசர் பக்கத்தில் இருப்பதும் எதைக் காட்டுகின்றன? சீதையின் உருவத்துக்கும் சிவகாமியின் உருவத்துக்கும் வேறுபாடு அறியாதபடி சிற்பக்கலை அறிவு மழுங்கிப் போய்விட்டதைக் காட்டுகிறதல்லவா?

சிற்பக்கலை சிறந்த அழகுக் கலை; அழகிய நுண்கலை. ஏனைய அழகுக்கலைகள் உள்ளத்திற்கு உணர்ச்சியையும் மகிழ்ச்சியையும் ஊட்டுவதுபோலவே இந்தச் சிற்பக்கலையும் உணர்ச்சியையும் மகிழ்ச்சியையும் அளிக்கவல்லது. சிற்ப உருவங்களில் கலையின்பத்தைக் காணலாம். நம் முன்னேர் வளர்த்த சிற்பக் கலையை நாம் கைவிடுவது பேதைமைத்தனமாகும். இந்தக் கலைச் செல்வத்தைப் போற்றிப் பாதுகாக்க வேண்டியது நமது கடமையாகும். எத்தனையோ இடங்களில் எத்தனையோ சிற்ப உருவங்களைக் காண்கிருேம். எல்லாச் சிற்பங்களும் கலையழகு நிரம்பியவை என்று கூறமுடியாது. கலையழகுள்ளவற்றையும் அல்லாதவற்றையும் ஆராய்ந்து அறியவேண்டும்.

---

## *சிற்பச் சிறப்பு*

பல்லவரை உலகம் புகழவைத்த பெருமை ஓவிய-சிற்பப் புலவர்கட்கே உரித்தானது. உயிருள்ள சித்தன்ன வாசல் ஓவியங்கள், மாமல்லபுரம், வைகுந்தப் பெருமாள் கோவில், கைலாசநாதர் கோவில் இவற்றில் உள்ள வியப்பூட்டும் சிற்பங்கள் இன்ன பிறவும் இயற்றிய பெருமக்கள் கலை அறிவை நாம் என்னெனப் புகழ்வது?

ஓவியம் வரைதலும் சிற்பம் பொறித்தலும் எளிய செயல்கள் அல்ல. பல்லவர் கால ஓவிய சிற்பங்கள் இற்றைக்கு 1300 ஆண்டுகட்கு முற்பட்டவை. ஆயினும் இன்று செய்தாற் போலக் காட்சி அளிப்பவை எனின், இவற்றில் அமைந்துள்ள வேலைத் திறனை என்னென்பது! காவியம் படித்துணர்வது; ஓவியமும் சிற்பமும் பார்த்து உணர்பவை. இவை காவியத்தையே கண்முன் காட்டுபவை அல்லவா? எனவே, இவற்றில் வல்ல பெருமக்கள் முதலிற் காவிய உணர்ச்சி உடையராதல் வேண்டும்; அத்துடன் சிறந்த ஒழுக்கமும் பக்தி முதிர்ந்த உள்ளமும் உடையராதல் வேண்டும். மாசற்ற அகத்தூய்மை உடையவர்தாம் இவற்றைச் செய்துமுடித்தல் கூடும்.

—டாக்டர், மா. இராசமாணிக்கனுர், ''பல்லவர் வரலாறு''.

---

# வள்ளுவர் செய்த புரட்சி

[பேராசிரியர், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., பி. எல்.]

திருநெல்வேலி, சிந்துபூந்துறையில் 1906 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் இவர் பிறந்தார். தந்தையார் பெயர் சு. கோமதி நாயகம் பிள்ளை. சைவ வேளாள மரபினைச் சேர்ந்தவர். வித்துவான், எம்.ஏ., பி.எல். ஆகிய பட்டத்தேர்வுகளில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் தலைமைப் பேராசிரியராகத் தனிப்பெருந் தொண்டாற்றி வருகின்றார். 'சித்தாந்தச் செந்நாவலர்' என்னும் சிறப்புப் பட்டம் பெற்றவர். சைவமும் தமிழும் தழைக்கப் பணிபுரிபவர். இசையோடு பாடல்களைப் பாடி இனிய முறையில் எல்லாருடைய உள்ளங்களையும் கவரும் வண்ணம் சொற்பொழிவாற்றுவதில் வல்லவர். சிறந்த நூலாசிரியருமாவார். இவர்தம் நூல்கள் 'முத்தமிழ் முழக்கம்', 'துள்ளி வருகுது வேல்', 'எத்தன் ஏகாம்பரம்', 'தமிழ் உள்ளம்', 'வெண்ணிலவில்', 'வள்ளுவர் விருந்து', 'அப்பர் விருந்து', 'புதுமணப் பரிசு', 'கவி இன்பம்' முதலியனவாகும்.



சிந்தனை யுலகிலே, அறிவுத்துறையிலே செந்நாப் போதார் செய்து போந்த புரட்சிகள் பலவாகும். அவற்றுள் தலை சிறந்தது வாய்மையைப் பற்றியது. மெய்ந் நூல்கள் பலவற்றையும் வள்ளுவர் துருவி ஆராய்ந்த பொழுது, வாய்மையின் மிக்கதோர் அறம் வேறு ஒன்று இல்லை என்பதைத் தெளிந்து கண்டார்:—

> "யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்
> வாய்மையி னல்ல பிற" [தொன்றும்

என்பது திருக்குறள். ஆனால், எது வாய்மை? என்பதுதான் விளக்கமுறுமலிருந்தது. உள்ளதை உள்ளபடி கூறுவதுதான் வாய்மை என்று பலரும் கருதினர். உள்ளதை மறைத்துக் கூறுவது தான் பொய் என்னப்பட்டது. பிறர்க்கு மனமொழிமெய்களால் எவ்வாற்றானும் தீமை பயத்தலாகாது என்ற அடிப்படையிலே எழுந்தது திருக்குறள். ஆதலால் வாய்மை யென்பது கலப்பற்ற நலத்தைத் தன்னகத்தே கொண்ட ஒரு தூய்மையான வாய்மொழியாக இருக்கவேண்டும் என்று வள்ளுவர் கொண்டார். அத்தகைய வாய்மொழி எவ்விதத்திலும் பிறருக்குத் தீங்கு விளைப்பதாய் இருக்க முடியாது. அப்படித் தீங்கு விளைப்பதாய் இருந்தால் அது வாய்மையாகாது. ஒருசொல் உண்மையாக இருந்து அது பிறருக்கு ஊறு விளைப்பதாய் இருக்குமானால், அதனை வாய்மையென்று கொள்ள அவர் உள்ளம் ஒருப்படவில்லை. ஆனால் பிறரெல்லாம், ஊறு விளைப்பதாயிருந்தாலும் உள்ளதை உள்ளபடி உற்றுரைப்பதுதான் வாய்மையென்று கூறினர். பிற உயிர்களின் நோயையும் தன் நோய்போற் போற்றும் தலையாய அறிவின் தலைமுகட்டிலே நின்ற வள்ளுவர் அதனை ஒப்பவில்லை. ஆகவே ஒரு புதியமுறையிலே வாய்மையின் இயல்பை யெடுத்து உலகிற்கு விளக்கினர்!—

> "வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்
> தீமை யிலாத சொலல்" [றும்

மெய்ம்மை யென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென்று வினவின், அது பிறிதோருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதல் என்பது இக்குறளின் பொருள். 'யாதொன்றும் தீமையிலாத சொலல் வாய்மை' எனவே, தீமையுள்ளன, நிகழ்ந்தன வாயினும், சொல்லப்படுவனவல்ல என்று ஓதினர் திருவள்ளுவர். இங்ஙனம் யாதொன்றும் தீமையில்லாதனவற்றையே ஒருவன் சொல்வது என்று மேற்கொண்டால்,

தீமையுள்ளனவாய உண்மைகளைக் கூருது விடுதல் பொய்ம்மையாகுமே என்ற கேள்வி எழா நிற்கும். பொய் சொல்லலாமா? என்று ஒருவன் திருவள்ளுவரிடம் கேட்டு விட்டான். உடனே திருவள்ளுவர் சிறிதும் தயங்காது, "பொய்யும் சொல்லலாம், அது குற்றமில்லாத நன்மையை விளைப்ப தாய் இருந்தால்" என்று கூறினர்:—

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்."

குற்றம் தீர்ந்த நன்மையே அறம். அறப்பயனை விளைவிக்கும் பொய்யும் மெய் யேயாம். பொய் அறப்பயனை எவ்வாறு தரமுடியும்? என்பது அடுத்த கேள்வி. ஓர் உயிருக்குப் பெருங்கேடு அல்லது சாவு ஏற்படக் கூடிய தறுவாயில் அது துன்பம் நீங்கி இன்புறும்படி செய்வதாயிருந்தால், பொய்யும் சொல்லலாம். அது மெய் யாகவே கொள்ளப்படும். அப்படியாயின், ஒரு கொலையாளி தூக்குத்தண்டனை பெறு வதைத் தவிர்க்க நம் சொல்லாலே மறைத் துத் தப்புவிக்கச் செய்வது வாய்மை யாகுமா? என்ற ஐயம் நிகழக்கூடும். அது சட்டப்படி குற்றமாகும். ஆகையால், அது போன்றவற்றை நீக்கவே, 'புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்' என்று வள்ளுவர் அளந்து கூறினர். அஃது எவ்வாறு நிகழக் கூடுமெனின், ஓர் எடுத்துக் காட்டால் விளக்கலாம். உயிரோடு போராடிக்கொண் டிருக்கும் நோயாளி ஒருவன், தான் பிழைக்க முடியாதோ என்ற ஏக்கத்தில், அருகில் உள்ளவர்களை வினவும் பொழுது, உண்மையைக் கூறின் அவன் நோய்மிகும் என்று அஞ்சிக் கூறும் பொய்ம் மைகள் பொய்யாகாவாய் வாய்மையே யாகும். இவ்வாறு நன்மை பயக்கும் நிக ழாதது கூறலும், தீங்கு பயவாத நிகழ்ந் தது கூறலும் வாய்மையெனவும், நன்மை பயவாத நிகழாதது கூறலும், தீமை பயக்கும் நிகழ்ந்தது கூறலும் பொய்ம்மை யெனவும் துணிந்து கூறினர் திருவள் ளுவர். இதனல் பொய்ம்மையைத் திரு வள்ளுவர் போற்றுகிருர் என்று கொள்ள லாகாது. அக்குறளின் சொற்களை நன்கு நோக்குதல் வேண்டும். பொய் ஒருநாளும் வாய்மையாகிவிட முடியாது. வாய்மை யிடத்த என்றுதான் கூறினர். பின்பு அதன் இயல்புக்குக் கூடாத ஒன்றும் அதன்கண் இருக்கவேண்டும் என்ருர். அஃதாவது, அது நன்மையைக் கொடுக்கவேண்டும் என்ருர். அந்த நன்மையும் சாதாரண நன்மையாயிருத்தல் போதாது. புரை தீர்ந்த நன்மையாய் இருக்கவேண்டும் என்ருர். இவ்வளவு இருந்தாலும் அது வாய்மைக்கு வலத்தில் கூடவரமுடியாது; இடப்பக்கத்தில்தான் இருத்தக் கூடிய தாகும் என்ற பொருளும்பட, 'வாய்மை யிடத்த' என்ருர்.

இது பொய்ம்மைக்கும் வாய்மைக்கும் புதியதோர் இலக்கணமாகவே அமைந் தது. திருவள்ளுவர் கருத்தை விளக்கு வதுபோல், சிவப்பிரகாசர் திருவெங்கைக் கோவையில் ஒரு பாடல் பாடியுள்ளார். அஃது ஈண்டைக்கு நோக்கத்தகும். இரவுக் குறியின்கண் தலைவன் தலைவியர் கூட்டத் திற்கு இடையூருகச் சேவல் கூவியது. அஃது உண்மையிலேயே பொழுது விடிந்த தைக் கூறுவதாக இருந்தும், அதன்குரல் காதலர்களுக்குப் பிரிவுத் துயராகிய தீமை யைக் கொடுத்ததால், சேவல் கூவியது வாய்மையாகாது பொய்ம்மையே யாகும் என்று தலைவிகூறியதாக வரும் பாடல்:—

"வாய்மை யெனினும் புலரியைக்
கூறுதல் வாரணங்காள்
சேய்மை யறுநம் கொழுநர்தம்
கூட்டஞ் சிதைத்தெமக்குத்
தீமை புரிந்தமை யால்வெங்கை
நாயகர் செய்தஅறத்
தூய்மை யுணர்ந்தவர் வாய்மையன்
ருமெனச் சொல்லுவரே."

இதனல், அறத்தூய்மையின் அடிப் படையிலே வாய்மையை வகுத்துக் கூறி ஞர் திருவள்ளுவர் என்பது நன்கு விளங்கும். அறத்திற்கு மாருக வாய் மையே வந்தாலும் அதனைப் புறத்தே வீசி யெறிந்தார் திருவள்ளுவர். அறத்திற்கு உதவும் விதத்திலே பொய்ம்மையே வந் தாலும் அதனை அஞ்சாமல் விரும்பி ஏற் றுக்கொண்டார். சத்தியம் என்ருல் என்ன என்பதை வள்ளுவர்போல் எவரும் விளக் கியதில்லை. வள்ளுவரின் விளக்கம் ஒரு புரட்சியாகவே இருந்தது. ஆயினும் அஃது அறிவுக்கும் அறத்திற்கும் பழக்கத்

திற்கும் ஒப்ப முடிந்ததோர் உயர்ந்த கருத்து என்பதை யாவரும் உணர்வர்.

இதுபோன்று பொறுமையைப் பற்றி வள்ளுவர் கூறிய கருத்துக்களும் பலருக்குப் புரட்சியாகவே தோன்றும். இக்காலத்திலுங்கூடப், பழிக்குப்பழி வாங்குபவனை வீரன் என்றும் மானவன் என்றும் பாராட்டுவர். A tooth for a tooth and a nail for a nail என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி. அதன்படி, பல்லுக்குப் பல்லும் நகத்திற்கு நகமும் எனப் பழி வாங்குதல் பொருந்தும். சிலர் வஞ்சினம் கூறும் பொழுது, 'என் நிழலை மிதித்தால் உன் தலையை மிதித்துவிடுவேன்' என்று பலர் மெச்சக் கூறுவர். தற்காப்புக்காக (Self defence) ஒருவன் எதுவேண்டுமானலும் செய்யலாம் என்பது சட்டவரம்புக்குட்பட்ட ஒரு நியதியாகும். நஞ்சு போன்று கொடியவர்களையும் நன்றிகெட்டவர்களையும், வாக்குத் தவறியவர்களையும் கொன்ருல் அது பாவமாகாது என்று மனுதர்ம சாத்திரத்தில், இராச தருமம் கூறும் ஏழாவது அத்தியாயத்தில் தண்டப் பிரசம்ஸையிற் காணப்படுகிறது. அதனை இராமன் மேற்கோள் காட்டிக் கூறியதாகக் கிட்கிந்தா காண்டத்தில் கம்பர் பாடியுள்ளார். கார்காலம் கழித்துப் படைகளுடன் வருவதாகச் சொல்லிப்போன சுக்கிரீவன் அவ்வாறு வரவில்லை. இராமன் வாலியைக் கொன்று தனக்குப் பட்டம் அளித்துள்ள நன்றியையும் அவன் மறந்து, மதுமயக்கத்தில் பெண்கள் கூட்டத்தனுய் இன்ப வாழ்க்கையில் ஆழ்ந்து விட்டான். இராமனுக்கு அளவுகடந்த சீற்றம் பிறந்தது. வாலியைக் காலிசெய்த கோலினுல் அப்போலிப் பதரையும் தீர்த்துக் கட்டுவேன் என்று கொதித்தெழுந்து இலக்குவனை அவன்பால் அனுப்பினுன். அப்பொழுது தம்பியிடம் அவன் கூறியதாவது :—

*"நஞ்ச மன்னவ ரைநலிந் தாலது*
*வஞ்ச மன்று மனுவழக் காதலால்*
*அஞ்சி லைம்பதி லொன் றறி யாதவன்*
*நெஞ்சி னின்று நிலாவ நிறுத்துவாய்"*

இவ்வாறு பழிக்குப் பழிவாங்குவது மனுதருமத்தில் கூறப்படும் ஒரு நீதியேயானுலும், சான்ருேராகிய வள்ளுவருக்கு அது ஏன்றதாக இல்லை.

*"எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்*
*தாணு செய்யாமை தலை"* [தானும்

என்ற தூய உள்ளம் கொண்டவர் வள்ளுவப் பெருந்தகையார். பழிவாங்கும் மனப்பான்மை அறக்கழிவுடையது என்பதை அறிவாற் கண்டார். தனக்குக்கேடு செய்தவர்களுக்கும் திருப்பித் தீங்கு புரியா திருப்பதுவே அறிவாளியின் செயல் எனக் கொண்டார். "தனக்குத் தீங்கு புரிந்தவனைச் சும்மா விடலாமா? அஃது அறிவாகுமா? அது மடமை யல்லவா?" என்று ஒருவன் கேட்டான். "பழிவாங்கா திருப்பதா மடமை? தமக்குத் தீங்குகளை வேண்டுமென்று செய்கிறவர்களுக்கும் தீங்குபுரியா திருத்தலைத் தமக்குறுதி நாடும் அறிவுகளெல்லாவற்றுள்ளும் தலைசிறந்த அறிவென்று நல்லோர் சொல்லுவர்" என்று வள்ளுவர் கூறினுர் :—

*"அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய*
*செறுவார்க்குஞ் செய்யா விடல்"*

இது பலருக்கும் மறுக்கம் விளைவித்தது. ஒருவன் கேட்கலுற்ருன்: "நம்மைக் கொல்ல வருபவனை நாம் கொல்லாமல் விடுவதா ? அப்படி விடுவதானுல் அவன் நம்மைக் கொன்றுவிடுவானே," என்ருன். பாவம் கொலையுண்டவழித் தேய்தலையும் கொன்றவழி வளர்தலையும் நோக்கிய வள்ளுவர்,—

*"தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி*
*தின்னுயிர் நீக்கும் வினை"*

என்று விடையிறுத்தார். அப்படியானுல் தனக்குத் தீங்குசெய்யும் ஒருவனை எப்படித் தான் தண்டிப்பது? என்று ஒருவன் கேட்டான். அதற்குத் திருவள்ளுவர், "உனக்குத் தீங்கு செய்தவரை நீ தண்டிப்பது எவ்வாறெனில், தீங்கு செய்தவர்கள் நாணும்படி அவர்களுக்கு நன்மையைச் செய்து, அவர் செய்த தீங்கையும் அது பற்றி அவரைத் தண்டிக்கும் கருத்தையும் ஒருங்கே மறந்து விடுதலாகும்," என்ருர்:-

*"இன்னா செய்தாரை யொறுத்தல் அவர்நாண*
*நன்னயஞ் செய்து விடல்"*

இதைக் கேட்டுக்கொண்டிருந்தவன் வள்ளுவரை நோக்கி, "ஐயா! தாங்கள் அவன்செய்த தீங்கை மறந்துவிட

வேண்டும் என்று சொல்வதே ஒரு புரட்சியாக இருக்கிறது. அதற்குமேலும், தாங்கள் அவனுக்கு நன்மையையும் செய்ய வேண்டும் என்று சொல்கின்றீர்களே, அஃது ஏன் ?" என்று கேட்டான். அதற்கு வள்ளுவர், ''தீங்கு செய்தவனுக்கும் நன்மையைச் செய்யாது போனல் ஒருவன் சால்புடையவனுதல் எப்படி? தீங்குசெய்தவனுக்கு அவனைத் திருத்தும்விதத்தில் நன்மையைச் செய்யாது, நீயும் தீங்கு செய்யத் தொடங்கினல், உனக்கும் அவனுக்கும் என்ன வேற்றுமை இருக்கிறது ? நீயும் அவனும் ஒன்று என்று ஆகிவிடுவீரே. நீ அவனைவிட மேலானவன், பெருந்தன்மையுள்ளவன், சான்ரோேன் என்பது எவ்வாறு விளங்கும்? ஒருநாய் கடித்துவிட்டால் அதனைத் திருப்பிக் கடிப்பவர்கள் உண்டா? தீங்கிழைப்பவனுக்கும் நன்மை செய்வதல்லவா நீ கொண்ட சால்பின் பயன்?'' என்று பதில் வினவினர்:—

*'' இன்னுசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்*
*என்ன பயத்ததோ சால்பு.''*

இதனைக் கேட்டவன் திருவள்ளுவரிடம், ''அறமுடைய நல்லவர்க்கு நாம் அன்பு செலுத்துவது பொருந்தும்; மறமுடைய தீயவர்க்கும் தாம் அன்பு காட்டுதல் ஒக்குமா ?'' என்று கேட்டான். உடனே அவன் திடுக்கிடும்படியாகப் பதில் வந்தது:—

*'' அறத்திற்கே அன்புசார் பென்பர் அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை.''*

திருவள்ளுவரை விடாது மீண்டும் அவன் வினவலுற்ருன்: ''நமக்குத் தீங்கு செய்தவனுக்கு நாமும் ஒரு தீங்கைச் செய்து அவனை வருத்தப்படுத்தினல், நம் மனம் ஆறுதல் அடைகின்றது. அஃது ஒருதனி இன்பத்தைக் கொடுக்கிறது என்பதை யாவரும் அறிவார்களே. தாங்கள் ஏன் அதனைக் கூடாது என்று கூற வேண்டும்?'' என்று கேட்டான். அதற்குத் திருவள்ளுவர் ''பழிக்குப்பழி வாங்குவதால் உண்டாகும் இன்பம் ஒரு நாளைக்குத் தோன்றிப் பின் மறைந்துவிடும். ஆனல் ஒருவன் செய்த தீங்கை நீ பொறுத்துக் கொண்டு பதிலுக்குத் தீங்கு செய்யாதிருந்தால், உன் ஆயுள் உள்ளமட்டும் உனக்கு அது பெரும்புகழை விளைத்து இன்பூட்டிக் கொண்டிருக்கும் என்பதை உணர்ந்து கொள்" என்று கூறினர்:—

*'' ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்*
*பொன்றுந் துணையும் புகழ் '' [குப்*

பின்னும் விடாது தொடர்ந்து அவன் திருவள்ளுவரைக் கேட்கலுற்ருன்: ''ஒருவன் நெருப்பைக் கொண்டுவந்து நம்மீது கொட்டினலும் நாம் பொறுத்துக்கொண்டிருப்பதா? அவனுக்கு ஒரு கெடுதலும் செய்யக் கூடாதா?" என்ருன். ''சுவாலைவிட்டு எரிகிற நெருப்பிலே தோய்விப்பது போன்ற கொடிய தீங்கை ஒருவன் இழைத்தானயினும், அவன் ஒருகால் உன்னுழை வர நேர்ந்தால், அவனுக்கு நீ மலர்ந்த முகத்துடன் வேண்டுங் குறைகளை முடித்துக் கொடுத்து நல்லவனுய் நடந்து கொள்ள வேண்டும்'' என்று கூறினர் திருவள்ளுவர்:—

*'' இணரெரி தோய்வன்ன இன்னு செயினும்*
*புணரின் வெகுளாமை நன்று.''*

''வெகுளவும் கூடாதா?'' என்று முணுமுணுத்தான் கேட்டவன். ''வெகுள்வது கூடாது என்பது மட்டும் இல்லை. செய்யத்தகாத கொடியவற்றைச் செய்த அவன் அவற்ருல் துன்பத்திற்கு ஆளாவானே என்று பரிந்து, அவனுக்காக நீ இரங்கவும் வேண்டும். அதுதான் மனிதத் தன்மைக்கு நல்லது'' என்றும் கூறினர் வள்ளுவர்:—

*'' திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்*
*தறனல்ல செய்யாமை நன்று.''*

இவ்வருமைக் குறளின் பொருளை விளக்கி நாலடியாரிலும் ஒரு பாடல் வந்துள்ளது:—

*'' தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்*
*றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை*
*எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று*
*பரிவதூஉம் சான்ரோர் கடன்.''*

தகாத செய்தொழுகும் கொடியோருடைய அறியாமை நோக்கி நாம் அளியராக வேண்டும் என்று சிலப்பதிகாரமும் கூறுகிறது:—

*'' நெறியி னீங்கியோர் நீரல கூறினும்*
*அறியா மையென் றறிதல் வேண்டும்.''*

திருவள்ளுவர் வகுத்த இவ்விலக் கணத்திற்குச் சிறந்த இலக்கியமாகத் திகழ்ந்தவர் இயேசுநாதர். அவரைச் சிலு வையிலே ஆணியால் அழுத்தியபோது அவர் உடலம் நடுங்கிக்கொண்டிருந்தது. அப்பொழுது ஒரு கொடியவன் ஒரு வேற் படையை அவர் வயிற்றிற் பாய்ச்சினன். குருதி பொங்கி வடிந்தது உடல் துடித் தது. அந்த நிலையிலும் இயேசுவானவர் தமக்கு இன்னல் இழைத்தவர்களை யாதும் சினந்து கூறவில்லை. அவர்களின் அறியா மைக்காகப் பரிந்து உருகினர். தம்மை மிறைப்படுக்கும் செயலுக்குப் பின்னர் குறைப்படுவார்களே என்று குழைந்தார். "ஆண்டவனே! அவர்கள் செய்வது அறி யாது செய்கின்றனர். அவர்களை மன் னித்துவிடு!" என்று வேண்டினர். மனிதர் இயேசு அமரராகிவிட்டார். அதுபோல் ஒவ்வொரு மனிதனும் அமரனாக இம் மண்ணில் வாழவேண்டும் என்பது வள் ளுவரின் ஆசை. பகைத்தவர்களையும் நட் பாக்கி நல்வழிப்படுத்துவது ஓர் உயர்ந்த எல்லை. அவ்வெல்லையை அடையும் பொழுதுதான் மனிதன் தேவனாக மாறு கிறான். வள்ளுவரின் கனவு இயேசு வாழ்க்கையில் நனவாக மலர்ந்தது. இந்த ஒரு பண்புக்கு மனிதனைப் பிறந்த எவனும் இயேசுவைத் தொழாமலிருக்க முடியாது. அத்தகைய பொறுமையின் சிறப்பினைப் பல கோணங்களில் நமக்கு எடுத்துக் காட்டிப் பல குறள்களை வள்ளுவர் நமக்கு அளித்துள்ளார். அவற்றுள் சில வரு மாறு:—

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

செய்யாமற் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும்.

ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

பேராண்மை யென்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு.

பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை.

இகலானாம் இன்னாத வெல்லாம் நகலானாம்
நன்னயம் என்னும் செருக்கு.

பகைநட்பாக்கொண் டொழுகும் பண்புடையாளன்
தகைமைக்கட் டங்கிற் றுலகு.

நகையுள்ளும் இன்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

நண்பாற்றா ராகி நயமிலவே செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று.

இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறை [யுடைமை
போற்றி யொழுகப் படும்.

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.

துறந்தாரிற் றூய்மை யுடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்.

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரிற் பின்.

இவை போன்று பல குறள்களிற் பழி வாங்கும் பொல்லாங்கைத் தவிர்த்துப் புரட்சிகரமாக அறிவு புகட்டியுள்ளார் திரு வள்ளுவர். வேறு எப்பொருளைக் குறித் தும் வள்ளுவர் இத்தனை குறள்கள் செய்த தில்லை. இதனால் பொறுமையைப் பற்றிய அவரின் உறுதிப்பாடு நன்கு புலனாகும்.

பழிக்குப் பழிவாங்கப் பாரதப்படுகளத் தில் பார்த்தனுக்குப் பரந்தாமன் பாரித் துரைத்தது பகவத்கீதை. அதனை இன் றும் பல்லாயிரவர் பரவிப் பாராட்டுவர். வள்ளுவரும் அதனைப் பார்த்திருக்கிறார்

படித்துவேர்த்திருக்கிருர். அதில், செய்ய வேண்டுவன இவை இவை யென்ற வரை யறை காணப்படும். ஒரு குலத்துக்கொரு நீதியென வெவ்வேறு வருணங்களுக்கு வெவ்வேறு நீதிகள் புகலப்படும். நன்மை களையும் கடமைகளையும் அவ்வாறு வரை யறை செய்துவிடமுடியாது என்பதை வள்ளுவர் கண்டார். அதற்கும் ஒரு புரட்சி செய்தார். நல்லன எல்லாவற்றையும் எல்லா மனிதரும் ஒல்லும்வாயெல்லாம் செய்து முடிப்பது கடமையாகும் என்று முழங்கினர். பகவத்கீதை ஒவ்வொருவ ருடைய சாதிக்குமுரிய கடமைதான் கடமை என்று அறுதியிட்டுக் கூறுகிறது. திருக் குறள் எது நன்மையோ அதைச் செய் வதுதான் கடமை என்று கூறுகிறது :—

> " கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து
> சான்ருண்மை மேற்கொள் பவர்க்கு.''

> " ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
> செல்லும்வாய் எல்லாம் செயல்.''

இன்றும் வாஜபேயம் முதலிய வேள்வி களை வளர்க்கின்றனர். உயிர்ப்பலி கொடுக் கின்றனர். ஊன்மிச்சிலை மிசைகின்றனர். திருவருட்பிரசாதம் என்று அசைபோடு கின்றனர். வேதம் ஓதி, உயிர்களைக்காதி, வேள்விகளை ஊதிப் பலரும் வழிபடும் இம்முறை கண்டு வள்ளுவர் உள்ளம் வெதும்பினர். எண்ணில் உயிர்களைக் கொன்று குவித்துத் தீயிலிட்டுப் புண் ணியம் தேடுவதைவிட, ஓர் உயிரையாயி னும் கொன்று தின்னுதிருந்தால் பெரும் புண்ணியம் கிட்டுமே. வேதத்தின் உட் பொருள் காணுது ஏதத்தில் விழுந்து ஏமாறுகின்றனரே என்று ஏங்கினர். வேள்விகளை எதிர்த்துப் புரட்சி செய்தார்:—

> " அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
> உயிர்செகுத் துண்ணுமை நன்று.''

இவ்வாறு வள்ளுவர் செய்த புரட்சி கள் பல. அவை உண்மையில் புரட்சிகள் அல்ல; பெருஞ் சீர்திருத்தங்கள்; மக்களைத் தேவராக்கும் மாண்புமிக்க மாற்றங்கள். வள்ளுவர் வகுத்தது பொய்தீர் ஒழுக்க விழுப்பநெறி.

---

## திருக்குறள் - பொதுநூல்

வடமொழியில் வழங்கும் நீதி நூல்களுக்கும் வள்ளுவர் நீதி நூலுக்கும் பெரிதும் வேற்றுமை காணப்படுகின்றது. வடமொழி நீதி நூல்கள் பெரும்பாலும் சாதி வேற்றுமையை அடிப்படையாகக் கொண்டு, வழக்கு, தண்டம் முதலிய துறைக்ளில் ஒரு சாதிக்கொரு நீதியாகவும், ஒரு குலத்துக்கொரு நீதியாகவும் அமைத்துக் கூறுகின்றன. அறங்கூறவையத் தலைவனுன நீதியாளன், குற்றம் செய்தான் ஒருவனது குலத்தை அறிந்தே அதற்கேற்ற தண்டனை விதிக்க வேண்டும். ஒரு குற்றத்தை உயர்குலத்தானெருவன் செய்தால் எளிய தண்டனையும், தாழ்குலத்தானெருவன் செய்தால் கடிய தண்டனையும் விதிக்கப் பட்டிருத்தலை மநுநீதி முதலாய நீதி நூல்களிற் காணலாம். ஆனுல் திரு வள்ளுவர் நீதி நூலில் சமன் செய்து சீர்தூக்கும் கோல்போன்ற நடுநிலை வழுவாத பொதுநீதியே போற்றப் பட்டுள்ளது.

> '' வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
> உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி ''.

—டாக்டர், ரா. பி. சேதுப் பிள்ளை, '' திருவள்ளுவர் நூல்நயம் ''.

# உரைநடை வளர்ச்சி

[திரு. சு. அ. இராமசாமிப் புலவர்]

சோழவள நாட்டிலே, தஞ்சை மாவட்டத்திலே, திருத்தருப்பூண்டிப் பிரிவிலே, திருமறைக் காட்டுக்கு அண்மையில் உள்ள ஆயக்காரன்புலம் என்னும் சிற்றூரில் 8-3-1907 இல் இவர் பிறந்தார். தந்தையார் பெயர் சதாசிவபிள்ளை; தாயார் பெயர் இரத்தினம் ஆச்சி. இளம் பருவத்தில் இல்லத்தை விட்டுப் புறப்பட்ட இவர் பல தமிழறிஞர்களிடங் கல்வி கற்றுப் புலமை பெற்றார். பாரத நாடெங்கும் பயணஞ்செய்துள்ளார். தமிழகத்தின் மூலைமுடுக்குகளுக்கெல்லாம் சென்று, பொது நூலகங்களிலும், தனிப்பட்டோர் நூலகங்களிலும் சேர்த்துவைக்கப் பெற்றுள்ள அரிய தமிழ் நூல்களையெல்லாம் படித்தாய்ந்து நூற்றுக்கு மேற்பட்ட உரை நடை நூல்களையும் செய்யுள் நூல்களையும் எழுதியுள்ளார். தமிழ்ப்புலவர்வரிசை (24 பகுதிகள்) முதலிய அறுபதுக்கு மேற்பட்ட நூல்கள் கழக வெளியீடுகளாக வெளிவந்துள்ளன. ஆழ்ந்தகன்ற நூற்புலமையுடன் தமிழ்ப் பணிபுரியும் இவர் தகைமை போற்றுதலுக்குரியது.



உலகிற் காணலுறும் எல்லாப் பொருள்களுமே வளர்ச்சியின் பாற்பட்டன. உயிருடைப் பொருள்களே அன்றி உயிரில் பொருள்களும் வளர்ச்சியின் பாற்பட்டவையாய் விளங்கும் புதுமையை எல்லோரும் நன்கு உணர்ந்திருக்கலாம். மலர்தலை உலகம் வளர்ச்சியைத் தன்னகத்துக் கொண்டதாக இரவியின் நாளடைவிற் குன்றிப் பொன்றி மறைந்தொழியும்.

இங்கு நான் ஆராயப்புகுவது உலகத்துப் பொருள்கள் எல்லாவற்றையும் பற்றிய வளர்ச்சியன்று. தமிழ்மொழியின் உரை நடைபற்றிய வளர்ச்சி ஒன்றினையே இங்கு நான் கூற விரும்புகிறேன். நந்தமிழ் மொழியின் பண்டைக்கால உரைநடை எவ்வாறிருந்தது? அஃது இந்நாளில் எவ்வாறு இருக்கின்றது; என்பதனை ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ளுதல் தமது உரைநடையினை மேலும் சீரிய தாக்கிப் புகழ்பெறற்குத் தக்கதாம்.

மக்கட் படைப்பு உலகில் தோன்றிய காலத்தில் அவர்தம் அறிவு சிறிது விளங்கியது. அந்நாளில் இருந்தே உரைநடையுந் தோன்றி வளர்ந்து கொண்டு வருகிறது. தொல்காப்பியர் காலத்தில் உரை நடை நூல்கள் எவையும் இருந்தனவாகத் தெரியவில்லை. பண்டைத் தமிழாசிரியர்கள் தாம் மக்கட்குணர்த்துவான் எடுத்துக் கொண்ட பொருளைப் பா வடிவானே யாத்துவைத்தனர். அவர்கள் உரைநடை வடிவில் நூல்களைச் செய்யாமல் செய்யுள் வடிவாகவே செய்தமைக்குக் காரணம் கற்பார் அவைகளை உளங்கொளற்கு எளிதாக இருக்கும் என்னும் திண்ணமான எண்ணமேயாம். மேலும் உரைநடையில் நூலைச் செய்யப்புகின் மிகுவிரைவாகப் பரந்து செல்லும். ஆனால் நூற்பா முதலிய பாக்களிலே அமைக்கப்புகினோ, சில்வகை எழுத்திற் பல்வகைப் பொருளைச் செவ்வனடியிற் செறித்தினிது விளக்கித் திட்பமும் நுட்பமும் அமைந்தனவாகச் செய்துவிடலாம். சூத்திரமென்னும் பெயர்ப் பொருளும் இதனை நன்கு விளக்கும். இதனாற்றான் பண்டை யாசிரியர்கள் உரைநடை நூல்களிற் கருத்துச் செலுத்தாது செய்யுள் நூல்களிலேயே சிந்தையைச் செலுத்துவாராயினர்கள்.

உரைநடை இயற்கையாகவே அமைவது. செய்யுளோ கருத்தூன்றிச் செய்யப்பெற வேண்டுவது. உரைநடைப் பொருள்களை எல்லோரும் எளிதாக உணரலாம். செய்யுட் பொருள்களையோ அங்ஙனம்

உணர்தல் இயலாது. கற்ருர் வாயிலாகவே கேட்டுணரவேண்டியதாக இருக்கும். நூல்கள் உரைநடையாகவே அமையின் அதனைக் கற்க விரும்பியோர் தாமே கற்றதோடமைந்துவிடுவர். ஆசிரியர் மாட்டுக் கேட்டுணரற்பாலனவாய பல பொருள்கள் கேட்டுணரப் பெருமலே போகும். இதனல் எத்தனையோ நுண் பொருள்கள் அறிந்துணர்தற்கு வாய்ப்பில்லாமலே மறைந்தொழியும்.

பிற்றை நாளில் நக்கீரர் சேனவரையர், இளப்பூரணர், பேராசிரியர், நச்சினர்க்கினியர் முதலிய பல பேராசிரியர்கள் சூத்திரவடிவில் உள்ள நூல்கட்கு உரை வரைந்து தாம் உணர்ந்த அரும்பொருள்களை உலகிற் குணர்த்துவான் புக்கபின்னரே உரைநடை நூல்கள் தோன்றுதற்கும் வளர்தற்கும் வாய்ப்பு ஏற்பட்டன. சூத்திரத்திற்கு உரை கூறுவதேயன்றி அதற்குவிரிவுரை கூறத்தொடங்கி எழுதிய உரைநடைகளே பின்னர் உரைநடை நூல்கள் தோன்றுதற்கு வழிகாட்டியாயின.

இங்ஙனந் தோன்றிய உரைநடைகளைக் கண்ட சிலர் தமக்குச் செய்யுள் செய்யும் ஆற்றல் இன்மையானே, அன்றிக் கூறப்புகும் பொருளைச் செம்மையாய் விளக்குவான் கருதியோ, உரைநடை நூல்களை எழுதலாயினர்.

வடமொழிமாட்டுக் கழிபெருங்காதல் கொண்ட ஒரு சிலர் உரைநடைக்கு வசனம் எனப் பெயரிட்டு வடமொழிச் சொற்களை மிகுதியாகப் பெய்து உரைநடை நூல்களை மணிப்பிரவாளமாக இயற்றலாயினர். இங்ஙனம் மிகுதிப்படத் தொடங்கிய உரைநடை வளர்ச்சியில் முன்னேருது வெகு காலம் வரையிலும் தட்டுத்தடுமாறி முட்டுக்கட்டைபோடப் பெற்றதைப் போன்று வளர்ச்சியுருது நின்றது.

இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுணர்ந்த யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் தாம் செய்யுள் பாடுந் திறமை மிக்காராக இருந்தும் உரைநடை வளர்ச்சி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு உரைநடை நூல்கள் பலவற்றை இயற்றுவாராயினர். இவர் அளவுகடந்த வட சொற்களைக் கையாளாமல் தூயசெந்தமிழில் தமது உரைநடையை எழுதியிருப்பராயின் எவ்வளவோ சீர்த்தி இவருக்குரியதாகியிருக்கும். பண்டைக் காலத்துப் பேராசிரியர்களின் உரைநடையில் இருந்து இன்றைவரைக்கும் உரைநடை வளர்ந்துகொண்டு வருதலை இங்குப் பார்ப்போம்.

## முற்கால உரைநடைகள்

### இளம்பூரணர்

"இச் சூத்திரத்துள் பாடலுட் பயின்ற பொருள் மூன்றென ஓதி அவற்றுள் உரிப்பொருள் என ஒன்றை ஓதினமையால், புறப்பொருளும் உரிப்பொருளாகியவாறு கண்டு கொள்க முறைமையாற் சிறத்தலாவது, யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் வரின், முதற்பொருளால் திணையாகு மென்பதூஉம், உரிப்பொருள் தானேவரின் அதனல் திணையாகு மென்பதூஉமாம். அவையாமாறு முன்னர்க் காணப்படும்" (தொல். பொருள். அகத். ந)

### சேனவரையர்

"ஒக்குமென்னும் சொல்லன்றே ஒப்புமை யுணர்த்துவது; அச்சொல் ஆண்டின்மையான், ஒப்புமை தோன்ருமையான், ஒப்பில் வழியாலென்ருர். உவமையொடு பொருட்கு ஒப்பில்லை யென்ருரல்லரென்பது. ஒக்குமென்னுஞ் சொல்லை ஒப்பென்ருரென்பாரு முளர். ஒப்பில்வழியாற் பொருள் செய்குநவாவன, அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப என்பன முதலாகப் பொருளதிகாரத்துக்கூறப்பட்ட முப்பத்தாறனுள் ஒக்குமென்ப தொழிய ஏனையவாம்" (தொல். சொல். இடை. உ)

### நச்சினர்க்கினியர்

"தொடர்மொழி, இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் என இரு வகைப்படும். அவை தொடருங்கால் பயனிலை வகையானும் தொகைநிலை வகையானும் எண்ணுநிலை வகையானும் தொடரும். இனி வடநூலார் கூறியவாறே அவாய்நிலையானும் தகுதியானும் தொடரும் என்றலுமாம்." (தொல். சொல். கிள. க)

### அடியார்க்கு நல்லார்

''அதுகேட்டுக் கடலை அகழாகவுடைய இலங்காபுரத்துக் கயவாகு வென்று பெயர் கூறப்பட்ட அரசன் நங்கைக்கு அங்ஙனம் நாடோறும் பலிகொள்ளுதலையுடைய பலி பீடத்தை முந்தச் செய்து பின்பு கோட்டமு மமைத்து முற்கூறிய துன்பங்களைக் கெடுத்து நமக்கு வேண்டும் வரங்களை இவள் தருமென்று துணிந்து ஆடித்திங்க ளிடத்தே ஆட்டை விழாவாகத் தன்னகர வீதிதோறும் உலாச்செய்விக்க மழைகுறை வின்றி நிலைபெறுதலானே அன்றே பொய் யாது விளையும் விளைவினையுடைய நாடா யிற்று அவனுடு" (சிலப்பதிகார உரை)

### நக்கீரர்

"இனிப் புகழ் பொருள் நட்பு அற னென்னும் நான்கினையும் பயக்கும் இது வல்லவனாக; என்னை? கற்றுவல்லன் என்பதனின் மிக்கபுகழ் இல்லை. உலகத் தாரானும் சமயத்தாரானும் ஒருங்கு புகழப் படுமாகலான் என்பது. இனிப் பொருளும் பயக்கும்; என்னை? பொருளுடையாரும் பொருள் கொடுத்துக் கற்பவாகலின் என் பது. இனி நட்பும் பயக்கும்; என்னை? கற் றுரைச் சார்ந்து ஒழுகவே நமக்கு அறிவு பெருகும் என்று பலருஞ் சார்ந்து ஒழுக லின் என்பது இனி அறனும் பயக்கும்; என்னை? ஞானத்தின் மிக்க கொடை இன் மையான் என்பது, இதுபயன்'' (கள வியலுரை)

### பரிமேலழகர்

''தத்தம் வருணத்திற்கும் நிலைக்கு முரிய ஒழுக்கங்களை வழுவாதொழுக அறம் வளரும். அறம்வளரப் பாவந்தேயும். பாவந்தேய அறியாமை நீங்கும். அறி யாமை நீங்க நித்த வநித்தங்களது வேறு பாட்டுணர்வும் அழிதன் மாலையவாய இம்மை மறுமை யின்பங்களி னுவர்ப்பும் பிறவித் துன்பங்களுந் தோன்றும். அவை தோன்ற வீட்டின்க ணாசையுண்டாம். அஃ துண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய பய னின் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட் டிற்குக் காரணமாகிய யோகமுயற்சி யுண் டாம்'' (குறளுரை)

### பேராசிரியர்

''கருங்குன்ற வெண்ணிறமென்பது பாடமாயின் நுண்களபத்தொளி பரப்ப அவ்வொளி நும்மூர்க் கருங்குன்றத்திற் கிட்ட வெண்ணிறக் கஞ்சுகத் தோடொக்கு மென்றுரைக்க. ஈண்டுரைத்த வாற்றால் தலைமகன் மிக்கோனுதல் வேண்டும், வேண்டவே ஒப்பு என்னை பொருந்துமா றெனின், 'மிக்கோனாயினுங் கடிவரை யின்றே' என்பதோத்தாகலிற் பொருந்து மென்க. வற்புறுத்தி—வலியுறுத்தி இட மணித் தென்றலை வற்புறுத்தலாக வுரைப் பினு மமையும். மெய்ப்பாடு-பெருமிதம். பயன்-இடமணித் தென்று வற்புறுத்தல்'' (திருக்கோவையார் உரை)

## பிற்கால உரைநடைகள்

பண்டைக்கால உரையாசிரியர்கள் பெரும்பாலும் முற்கூறிய போக்கிலேயே தம் உரைகளை எழுதிச் சென்றனர். காலத்திற்குக் காலம் உரைநடை மாறு பாட்டை யடைந்து வந்திருக்கின்றது. ஹென்ரிஹார்க்னெஸ் துரை என்பவ ராலும் வேங்கடாசல முதலியார் என்பவ ராலும் இயற்றப் பெற்று கஅஉஎ ஆம் ஆண்டு, சென்னைக் கல்விச் சங்கத்து அச் சிற் பதிப்பிக்கப்பெற்ற அரிச்சுவடி என் னும் நூலிற் கீழ்க்கண்ட உரைநடைகள் காணப்பெறுகின்றன. துரையும் முதலி யாருஞ் சேர்ந்து தமிழ் உரைநடையை எவ்வாறு கொலைசெய் திருக்கின்றன ரென்று பாருங்கள்:

''ஒரு நசுக்கான் பையன்— எனக்கு தோள்மட்டுக்கும் வருவான் உசத்தியிலே —அவனை பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி னூர்கள் அவன் அப்பனும் அம்மாளும். அன்றைய விடியற்காலம் வெகுவேடிக்கை உள்ளதாய் இருந்தது—சூரியபகவான் குளிர்ந்து பிரகாசித்தான். மரங்களின் பேரில் பக்ஷிகள் பாடினதுகள். அப்புறம் இச்சிறு பையன் தான்சுவடியை விரும்ப இல்லை — ஏனென்றால் அவன் கூர் மையோ இல்லாத ஒரு சின்ன பையன்— மேலே நான் சொன்னபடிக்கு. நான் பாணிக்கிறேன் அவன் ஒரு பெரிய பையன் ஆயிருந்தால் அவன் அதிக புத்திசாலி

ஆயிருப்பான் என்று—ஆனல் அவனுக்கு ஒரு பெரிய மனசு இருந்தது பள்ளிக்குப் போகாமல் விளையாட.''

## ஆறுமுக நாவலர்

''திருவருள் வடிவாகிய தடாதகைப் பிராட்டி அரசு செய்துகொண்டிருக்கும் நாளிலே அவளுக்குத் திருக்கல்யாணஞ் செய்யும் பருவம் வந்தடுப்ப, அது கண்டு மாதாவாகிய காஞ்சனமாலை எம்பெருமாட்டியை நோக்கி, உனக்குக் கன்னிப் பருவம் வந்தும் இன்னமும் விவாகம் இல்லையே என்று துன்பமுற்ருள். தடாதகைப் பிராட்டி ''தாயே! நீ நினைந்த எண்ணம் ஆம்பொழுது ஆகும்; நீ இரங்கவேண்டாம்; நான்போய் இப் பூமண்டலத்திலும் எண்டிசைகளிலும் என்வெற்றியை நாட்டி மீளுவேன்; நீ இங்கே இரு'' என்ருள். (திருவிளையாடற் புராணவசனம்)

## மறைமலையடிகள்

''இனித் திருநாவுக்கரசு நாயனுர்பாற் கரைகடந்த மெய்யன்பு பூண்டு, அவ்வன் பின் பெருக்கால் தம் புதல்வர்க்கெல்லாம் திருநாவுக்கரசு நாயனுரது திருப்பெயரையே வைத்து அழைத்தும், தாம் அறத்திற்காக வழிநடையில் அமைத்த அழகிய தண்ணீர்ப்பந்தருக்கும் அப் பெயரையே சூட்டியும் ஒழுகிய அந்தணரான அப்பூதியடிகள், திருநாவுக்கரசு நாயனுர் தமதில்லத்திற்கு எழுந்தருளக் காண்டலும் தம்மவருடன் சென்று அவர்தம் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அவரோடு அருகிருந்து உணவுகொண்ட அன்பின் திறங்களெல்லாம் அன்பின் வழிப்படும் நல்லார்க்கு நினையுந்தோறும் அகம்நெகிழ்ந் துருகச் செய்யும் இயல்பினவாமன்ரே?" (சாதி வேற்றுமையும் போலிச் சைவரும்)

## திரு. வி. க.

''காப்பியும், தேயிலையும், கொக்கோவும் வெம்மை நாட்டு மக்களை எப்படி அரிக்கும் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. நாட்டில் காசம், க்ஷயம், நீரிழிவு முதலிய நோய்களைக் காப்பி முதலிய குடிகள் பெருக்கி வருகின்றன. கொடிய நோய்கட்கு இரையாகியும், அக்குடிகளை ஒழிக்க நம்மவர்கள் துணிகிருர்கள் இல்லை. க்ஷயத்தால் பீடிக்கப்பட்டு உடல் மெலிந்த பின்னர் ''டாக்டர்'' அறிவுறுத்திய பிறகு வேண்டா வெறுப்பாக அக் கொடிய குடிகளை அகற்ற நம்மவர்கள் முயல்கிருர்கள். இஃதென்ன அறியாமை? இளமை தொட்டே அப்பானங்களை நீக்கிவந்திருந்தால், காசத்துக்கும் க்ஷயத்துக்கும் மக்கள் இரையாக வேண்டுவதில்லை. கண்ணிருந்தும் குழியில் விழுகிருர்கள் நம்மவர்கள்" (பெண்ணின் பெருமை)

## செகவீர பாண்டியர்

''உலகில் தோன்றியுள்ள பொருள்களுக் கெல்லாம் பெயர்கள் தோன்றியுள்ளன. எங்கே உருவம் தெரிகின்றதோ அங்கே அதற்குப் பெயரும் மருவிநிற்கின்றது. பேர்களாலேதான் யாவும் பேர்த்துச் சொல்லப்படுகின்றன. உருவமும் நாமமும் ஒருவாநிலையில் ஒருமுகமாய் மருவியுள்ளமையால் உலகம் முழுவதும் இந்த இருவகையில் அடங்கியுளது என மேலோர் துணிந்திருக்கின்றனர். நாமரூபங்கள் என வடமொழியாளர் இவற்றைக் குறித்துவருகின்றனர். பெயர்கள் இடுகுறி காரணம் என இரண்டு பிரிவாயிசைந்து வந்துள்ளன. குறிப்பும் ஏதுவும் கூர்ந்த நோக்கால் நேர்ந்தன.

''நூல் என்பது காரணப்பெயர். நூற்றலால் விளைந்தது என வினைக்குறிப்பால் வந்துள்ளது. பஞ்சிலிருந்து உண்டாகின்ற மெல்லிய இழையை நூல் என்று சொல்லுகிறேம். உலகநிலையிலுள்ள இந்த நூலை நூற்றற்கு ஒரு பெண்ணும் பஞ்சும் இராட்டினமும் கதிர் முதலியனவும் வேண்டும்; அதுபோல் கலைநிலையிலுள்ள கல்வி நூலை நூற்பதற்கு ஒரு கவிஞனும், சொல்லும், அறிவு முதலியனவும் வேண்டும். அந்த உபகரணங்கள் உரிமையோடு ஈண்டு உணர வந்தன'' (கல்விநிலை)

இங்ஙனம் உரைநடை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து இனிது திகழ்கின்றது. இவ் விருபதாம் நூற்ருண்டை உரைநடை நூற்ருண்டு என்றலும் சாலும். செய்யுட்கள் சிறுபான்மையாக வழக்காற்றி லிருப்பினும் அவைகள் தலையெடுக்கத் தக்க வகையில்

இல்லை. எல்லோருடைய உள்ளத்தையுங் கவரும் ஆற்றல் பெற்றுக் கற்பார் உள்ளத்தைக் கவரும் பான்மை பெற்றிருந்தாலன்றோ செய்யுட்கள் அழியாப் புகழ் பெற்றுத் திகழும்? அத்தகைய தகவமைந்த செய்யுட்கள் இக் காலத்தில் தோன்றக் காண்டல் அருமையினும் அருமையாக இருக்கின்றதே.

இக்கால மக்கள் வடமொழிக் கலப்பு மிகுந்து விளங்கும் உரைநடைகளை முற்றும் வெறுக்கின்றனர். தூய தனித்தமிழ் உரைநடையையே பெரிதும் விரும்புகின்றனர். இவ்விருபதாம் நூற்றாண்டிலே சிறந்த உரைநடையைத் தூய தனித்தமிழில் இலக்கணப் பிழையின்றிச் சீரிய முறையில் பண்டைக் காலத்திய உரைநடைகளை யெல்லாம் தூக்கியடிக்கத் தக்கவாறு சிறந்த முறையில் இக்காலத்திற்கு ஏற்றவாறு எழுதியவர் தமிழ் மன்னராகவும் உரைநடை மன்னராகவும் விளங்கி அண்மைக் காலத்திற் காலஞ்சென்ற மறைத்திரு. மறைமலை யடிகளாரே யாவர். அவர்தம் உரைநடை கற்றற்கு எவ்வளவு இனிமையாக விளங்குகின்ற தென்பதை எல்லோரும் உணர்வர்.

காலமான்து எல்லாவற்றையும் வளர்த்துக்கொண்டு செல்லும் பெற்றியமைந்ததாக விளங்குகின்றது. இக்கால மக்கள் விரும்புந் துறையில் உரைநடைகளை யெழுதித் தமிழ்த்தொண்டு புரிந்து தமிழன்னையின் திருவருளைப் பெற்றுய்வோமாக.

*தூயதமிழ்ச் சொல்லதனால்*
*தோன்றுசிறு சிறுதொடராய்*
*ஆயஉரை நடையதுவே*
*அழகிதெனச் சாற்றுவமே.* (க)

*வடமொழியை ஈங்கிழுத்து*
*வண்டமிழைக் கெடுக்காமல்*
*திடமுடைய தென்மொழியே*
*சேர்த்தெழுதிப் போற்றுவமே.* (உ)

*எழுவாயும் பயனிலையும்*
*இயைந்துநனி பொருந்திநிற்க*
*வழுவாயே இல்லாமல்*
*மாண்பமைய எழுதுவமே.* (ங)

*உரைநடையை மக்களெலாம்*
*உவந்துநனி கற்றிடவே*
*புரையிலறி வோடதனைப்*
*பொறித்துநனி வழுத்துவமே.* (ச)

---

## இலக்கண நூல்கள்

இலக்கண நூல்களைப் பண்படுத்திச் செவ்வையாக எழுதி மொழிகளை ஒரு வரம்பிற்குட்பட்ட நிலை நிறுத்துவதற்கு மக்களின் நாகரிகமும் இன்றியமையாது வேண்டப்படுகின்றது. எவ்வாறெனின், ஆரியர் தமக்கென ஊர் ஒன்றின்றி ஊணும் உடையுமின்றி ஊர் ஊராய்த் திரிந்து துன்புற்றமையின், அவர்கள் இடரின்றி ஓர் ஊரில் அமர்ந்து அமைதியோடு ஆராய்ந்து, தம் முன்னோர் வகுத்த சொற்களையும் சொற்றொடர்களையும் ஒப்பிட்டு நோக்கிப் பார்த்து இலக்கண நூல்கள் எழுதுவதற்கு நேரமும், செல்வமும், கல்வியும் போதாமையின், ஆரியமொழியில் அவ்வக் காலத்து வேறுபட்ட அவ்வத் திரிபுகளுக்கு ஏற்ப இலக்கிய இலக்கணங்கள் எழுதுவாராயினர். அதனால், அவ் வாரியமொழி ஒவ்வொருகாலத்தும் ஒவ்வொரு மொழியாய் வேறுவேறு திரிந்து ஒன்றற்கொன்றியைபின்றிக் கடைசியில் இறந்துபட்டது.

—தி. நீலாம்பிகையம்மையார், ''தனித்தமிழ்க் கட்டுரைகள்''.

---

# சித்த மருத்துவம்

[பேராசிரியர், திரு. ந. சேதுரகுநாதன்]

*'தோகைக்காவின் துளு நாடு' என்று அறிஞர்களால் பாராட்டப்பெற்ற துளுவநாட்டைக் கி. பி. 1500 முதல் கி. பி. 1763 வரை அரசு புரிந்த வேளிர் குலத்துத் தமிழ்க் குடும்பத்தைச் சார்ந்தவர் இவர். தென்காசிப் பக்கத்திலுள்ள வீரப்ப நாயகர் அச்சம்பட்டியென்னும் ஊரிற் பிறந்தார். தந்தையார் ரெ. நல்லமுத்து; தாயார் சிவஞானம். முதன்முதலில் இவருக்குத் தமிழ் கற்பித்தவர் ஊர்மேனியழகியான், அ. சுப்பிரமணிய நாயகர். 1941 ஆம் ஆண்டு வித்துவான் தேர்வில் முதல் வகுப்பில் வெற்றிபெற்ருர். திருநெல்வேலியில் தமிழாசிரியராக 1941 முதல் 1947 வரை திறம்படப் பணியாற்றியுள்ளார். 1948 முதல் விருதுநகர், செந்திக்குமார நாடார் கல்லூரித் தமிழ்த்துறையில் பேராசிரியராகத் தொண்டாற்றி வருகின்ருர். ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியும், அரிய கருத்துக்களடங்கிய நூல்களியற்றியும் தமிழுலகில் பெரும் புகழடைந்துள்ளார். சித்த மருத்துவத்துறை பற்றி ஆராய்ச்சி நடத்திவருகின்ருர்.*



இறைவன் அருள்நூல் இனிதாம் வழிநூல்
துறைநன் முறையறிந்து தூய—நிறைவுடனே
ஆய்ந்துணர்ந்த சித்த மருத்துவத்தை ஆராய்ந்து
தேர்ந்துணர்வீர் வாழி திகழ்ந்து.

உலகின் கண்ணுள்ள அறிவியல், இலக்கியம், மருத்துவம், கணிதம், இசை, கூத்து முதலிய கலைச்செல்வங்களெல்லாம் இருவகையாகத் தோன்றி வளர்ந்திருக்கின்றன. ஒன்று மக்களின் முயற்சியால் அறிந்து ஆராய்ந்த கலைச்செல்வம். மற்ருென்று வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனாகிய இறைவனாலும் அவனையடைந்த தவப்பெரு முனிவர்களாலும் ஆக்கப்பட்ட பெருங்கலைச் செல்வமாகும். மொழியினை மக்களின் ஆக்கப்பொருள் என்று கூறுவது உண்மையாயினும் இறைவனருளிய அருள்நூல்களின் கருத்துக்களும் வரம்புகளும் அளவளாவிக் கலந்து மெய்ம்மையாக மிளிரும் போதே கலைச் செல்வங்கள் மேம்படுகின்றன.

சித்தமருத்துவ நூல்கள் இறைவனாலும் தவப்பெரு முனிவர்களாகிய திருமூலர், அகத்தியர் முதலிய பெருமக்களாலும் முருகக்கடவுள், தென்முகக்கடவுள் முதலிய தெய்வங்களாலும் நந்தியம் பெருமானாலும், இறைவியினாலும் இயம்பப் பெற்று வந்த அரும்பெரு நூல்கள். இவற்றின் தொகை, "துறைகோடி தொந்தங்கோடி" என்பது உண்மை. தமிழ்ப் பெருமக்களின் அறிவியற் கருவூலமாகச் சாகாக் கல்வியின் பெருங்கலை நூல்களாக இலங்குவன சித்தர் நூல்களேயாகும். தமிழர்களின் மேன்மையை நிலைநாட்டற்குத் தொல்காப்பியம், திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு முதலிய நூல்களும், பெருங்காப்பியங்களும் எவ்வளவு துணைபுரிகின்றனவோ அவற்றிற்கு மேலான துணையைச் சித்தர் நூல்கள் புரியுமென்பது அவற்றை நோக்குவோர்க்குப் புலனாகும். "நிலத்திற் குளித்து நெடுவிசும்பேறிச் சலத்திற் றிரியுமோர் சாரணன்" என்பது இப்பொழுது நமக்கு வெறும் இலக்கியக் கல்வி. ஆனால் திருமூலர் அகத்தியர் முதலியவர்கள் நிலத்திற் குளித்தும் நெடுவிசும்பேறியும் நீர்மேல் நடந்தும் இரும்பு முதலிய உலோகங்களைப் பொன்னாக்கியும், சாகாநிலையில் "எண்ணிலி கோடியுகமிருந்தேனே" என்று சொல்லும் வண்ணம் இருந்தார்கள். இரசம் என்னும் சூதத்தை மணியாக்கி வாயில் ஒதுக்கிக் கொண்டு

விண்ணிற் பறக்கும் முறைமை சித்தர் நூல்களில் நன்கு இயம்பப்பெற்றுளது. தகுந்த செய்சாலையும் பொருள் உதவியும் இல்லாமையால் இத்தகைய அரும்பெருங்கலை ஆராயப் பெருமலும் செய்யப்பெருமலும் வறிதே நிற்பது வருந்துவதற்கு உரிய தொன்ருகும். சித்தர்கள் அறிவியற்கலையிலும் (விஞ்ஞானம்) மிகவும் பெரியவர்கள். அகத்தியர் ''கமலினி'' என்ற குளிகையின் துணையால் கடல்நீரை முழுதும் உறிஞ்சியவர். மீண்டும் உயிர்களுக்கு இரங்கி, ''சுரபி'' என்ற குளிகையின் துணையால் உறிஞ்சிய நீர்முழுவதும் சுரக்கச் செய்தவர். ''இலக்க சௌமியசாகரம்'' என்ற அரும்பெரு நூல் ஒன்று இருக்கின்றது. சிவபெருமான் உமையம்மைக்குக் கூறியருளிய நூலே ''சௌமியசாகரம்.'' அந்நூல் மறைந்துவிட அதன்பொருள் முழுதும் உணர்ந்த அகத்தியரை இறைவன், ''யான் இயம்பிய நூலை முழுதும் பாடு'' என்று கட்டளையிட அகத்தியர் நடுங்கி, ''புகழ்ந்திட்ட சவுமியத்தைப் புவியிற் பாடப் புகல்சீரு மறிகிலனே புகல்வீர்'' என்று நிற்க, இறைவன் அண்டமொடு புவிநடுங்க ''அணு'' என்று ஒலித்து முதற்சொல்லெடுத்துக் கொடுக்க அகத்தியர் அந்நூலைப் பாடிமுடித்தார். (மருத்துவ நூல்களின் பெயர்களையும் அவற்றிற் கூறப்பெறும் பொருள்களையும் பற்றி எழுதத் தொடங்கினல் அவை அளவு படாமையின் பொதுவாகவே எழுதுகின்றேன்.) இத்தகைய பெருநூல்களைத் தமிழ்ப் பெருமக்கள் கல்லாதுவிடுவது வருந்துதற்கு உரியது. இலக்கிய வரலாற்று நூல்களிலேனும் மருத்துவ நூல்களைப்பற்றிக் குறிப்பும் வகைகளும் எழுதப் பெருமல் இருப்பது இன்னும் வருந்துவதற்கு உரியது.

அறுவை மருத்துவம் தமிழில் மேலோங்கி யிருந்தது. ''உடம்பிடைத் தோன்றிற் றென்றை அறுத்ததன் உதிரம் ஊற்றிச், சுடலுறச் சுட்டு வேருேர் மருந்தினல் துயரம்தீர்வர்'' என்ற கம்பருக்கு அது தெரியும். ''வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால், மாளாத காதல் நோயாளன்போல்'' என்று உவமை கூறிய குலசேகரப் பெருமாளுக்கு அது தெரியும். ஆனல் தமிழர்கள் தங்கள் பழம் பெருங்கலைச் செல்வத்தை மறந்திருக்கின்றுர்களே! ''அகத்தியர் இரணவைத்தியம்'' என்ற நூலின் அருமையும் தமிழர் உணரவில்லை. ''அகத்தியர் நயனவிதி ஐந்நூறு'' என்றநூலில் கண்ணில்வரும் தொண்ணூற்ருறு நோய்களின் பெயர்களும் அவற்றை நீக்குவதற்கு மருந்தும் கூறி அறுவை முறைகளையும், மருந்து கண்ணில் ஒழுக்கும் முறைகளையும் தெளிவுறுத்தியிருப்பதையும் பார்த்தால் தமிழர்களின் கலைச் செல்வத்தின் பெருமையை அறிந்து திகைத்துப் பெருமூச்சுவிட வேண்டிய அளவுக்கு நமது நிலைமையை உணரலாம். ''நாகமுனிவர் நயனவிதி இருநூறு'' என்பதன் தெளிவு கண்டால் பண்டையோர் செய்த உதவியினை அறியலாம்.

அகத்தியர் அருளிய அறுவை மருத்துவக் கருவிகள் இருபத்தாறின் இலக்கணமும் ஒவ்வொன்றின் நிறையும், அவற்றின் வடிவங்கட்குக் கூறிய உவமைவகைகளும் கற்போருக்குக் கலையின் நிலைமையை அறிவுறுத்தும். அகத்தியர் அருளிய பன்னீராயிரம் அச்சிடப் பெருமல் சுவடியாகவே சிலரிடம் இருந்துவிட்டது. இனி அது வெளிவருமோ என்று ஐயுறவேண்டியதிருக்கின்றது. திருமூலர் அருளிய எண்ணாயிரமும் வெளிவரவில்லை. மருத்துவச் சுவடிகள் ஆங்காங்கே தங்கியிருக்கின்றன. அவற்றை யெல்லாம் அழியவிடாமற் பேணிக் காத்து அச்சிட்டுப் போற்றுவது அரசினர் கடமை எனினும் சைவ சித்தாந்தக் கழக ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களின் ''நுண்மாண் நுழைபுல''ப் பேராற்றல் சிறிது உதவுமெனின் தமிழ் மருத்துவ நூல்களும் நல்லமுறையில் வெளிவந்து நிலைபெறும். உலகமெல்லாம் போற்றும் ஒப்பற்ற நூல்களைக் கல்லாதவர்களின் கையில் விட்டுவிட்டுக் கற்ருேர் ஒதுங்கினர். அதனல் அவைகளிற் பல மறைந்தன. இப்போது உள்ள நூல்களும் பல நூற்றுக் கணக்கிலுள்ளன. அவற்றையெல்லாம் ஆராய்ந்து நல்ல வழியிற் பயன்படுத்தல் வேண்டும். அகத்தியர் அருளிய ''பஞ்சகாவிய நிகண்டு'' ''போகர் நிகண்டு'' முதலிய நிகண்டுகளும் தமிழ்ப் புலவர்களைப் பாராமல் இருக்கின்றன. செடிகொடி கிழங்கு

முதலிய ஒவ்வொன்றிற்கும் எட்டுப் பெயர் கூறியிருக்கின்ருர், அகத்தியர். தமிழ் நிலத்திற் ருேன்றிய மரம், செடி, கொடி, ஊர்வன, நீர்வாழ்வன முதலியவற்றின் பெயர்களே யெல்லாம் தமிழர்கள் மறக்கலாமா? கொட்டிக் கிழங்கு கடையிலுளது; தமிழ் மருத்துவர் அறிவர். பாடலேமட்டும் படிப்பவர் அறியார். கொட்டிப்பூ, ஆம்பற்பூ, நெய்தற் பூக்களெல்லாம் மருத்துவ முறையிற் பயன் தருகின்றன. அவற்றின் அழகுகளே அறியாமலே நூலிற் பயில்வது தெளிவு தருவதில்லே.

பாடாணங்கள் முதலிய சூச வகைப் பொருள்களேயும் தூயனவாக்கி மருந்து செய்யும் முறைகளே, ஏனைய நாடுகள் எழுத்தறியும் முன்பே தமிழ் நிலத்து முனிவர்கள் செய்துவந் திருக்கின்ருர்கள். உலகில் மருத்துவக்கலே முதன்முதலிற் ருேன்றியது தமிழ்நிலத்திலே. எல்லா நாட்டிற்கும் தமிழ்நாட்டு மருத்துவக்கலே சென்று பரவியிருக்கின்றது. சித்தர் மருந்து ஒப்பற்ற மருந்து செய்ம்முறையும் வழங்கும் முறையும் தெளிந்து நோயின் கூறும் உடற்கூறும் அறிந்து மருத்துவஞ் செய்தால் சித்தர் மருத்துவமுறையோடு ஒப்பக் கூற வேறு மருத்துவமுறை இன்றைக்கு உலகில் இல்லே. அவற்றுள் பல மருந்துகள் கைம்மணக்க, மெய்ம்மணக்க அமிழ்தமாகப் பாகுபோலும் இனிமையாகத் தெவிட்டாத சுவையுடையனவாக விளங்குகின்றன. வானவெளியை அளக்க முயன்ருலும் அதுகூடும். வானவெளியிற் பறந்து உலகெலாம் உணர்ந்த சித்தர் நூல்களின் பெருமையை அளவிட்டுக் கூற இயலாது. இனியேனும் தமிழ்ப் பெருமக்கள் விழிப்படைந்து தங்கள் முன்னேர் தந்த கலேச் செல்வங்களேப் பேணுவாராக. வாழிய செந்தமிழ்! மலர்க தமிழகம்.

---

## காயசித்தி உபாயம்

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே.

உடம்பினே முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினே யானிருந் தோம்புகின் றேனே.

அண்டஞ் சுருங்கில் அதற்கோ ரழிவில்லே
பிண்டஞ் சுருங்கில் பிராணன் நிலேபெறும்
உண்டி சுருங்கில் உபாயம் பலவுள
கண்டங் கறுத்த கபாலியு மாமே.

—திருமூலர், ''திருமந்திரம்''.

---

# வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன்

[திரு. அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.]



சான்ருேருடைய தொண்டை நாட்டைச் சார்ந்த செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள அங்கம்பாக்கம் என்னும் ஊரில் 5-7-1914-ல் இவர் தோன்றினர். பள்ளியிலும், தனிப்பட்ட முறையிலும் கல்வி பயின்று தேர்ந்து, பி. ஓ. எல்., எம். ஏ., எம். லிட். ஆகிய பட்டங்கள் பெற்ருர். காஞ்சிபுரம், ஆண்டர்சன் பள்ளியில் தமிழாசிரியராக 8 ஆண்டுகள் பணியாற்றினர். 1944 ஆம் ஆண்டிலிருந்து சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் துணைத் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருகின்ருர். இலங்கை, மலேயா, வட இந்தியா ஆகிய பகுதிகளுக்குச் சென்று, தமிழர் கலை, வாழ்வு, சமயம் பற்றிய சிறந்த சொற்பொழிவுகளாற்றியுள்ளார். இருபதுக்கு மேற்பட்ட இனிய தமிழ் நூல்களை இயற்றியுள்ளார். வயது வந்தோர் கல்விபற்றிய 'கூடி வாழ்' என்னும் இவருடைய நூலுக்கு இந்திய அரசினர் பரிசு வழங்கியுள்ளனர். 'தமிழ்க்கலை' இதழின் ஆசிரியராகத் தொண்டாற்றியுள்ளார். 1937-42 இல் செங்கற்பட்டு மாவட்டக் கழக உறுப்பினராகவு மிருந்துள்ளார்.

இருபதாம் நூற்ருண்டின் இடையில் வாழ்கின்ற நாம் எத்தனையோ வேறுபாடுகளை நமக்கிடையில் கற்பித்துக் கொண்டு வாழ்கின்ருேம். நமது நில உருண்டை அண்ட கோள எல்லையில் ஓர் அணு. நமது காலம் நீண்ட அண்ட கோள வாழ்வில் ஒரு நொடி. இந்தச் சிறு அளவில் வாழ்கின்ற நாம் எத்தனையோ வேறுபாடுகளை நமக்குள்ளே வளர்த்துவிட்டோம். ஆனல் எண்ணிப் பார்த்தால் நமது தவறு புலப்படும். பழங்கால மனிதனை நம்முன் நிறுத்தினல்—நாம் வளர்ந்த வரலாற்றை நினைத்துப் பார்த்தால்—பலப் பல உண்மைகள் நமக்குப் புலனுவதோடு நாம் வேறுபாடுகளை வளர்ப்பது வீண் என்பதும் தெரியும். அந்தப் பழங்கால மனிதனை—வரலாற்றுக்கு முற்பட்ட மனிதனைப் பற்றிக் காண்போம்.

மனிதன் உலகில் என்று தோன்றினன் எனத் திட்டமாக ஒருவரும் வரையறுக்கவில்லை. இவ்வுலகம் தோன்றிய நாளையே வரையறுக்க வழியில்லை. எனினும் மேலைநாட்டு விஞ்ஞானிகள் தம் இடைவிடா முயற்சியின் பயனல் ஏதோ ஓர் எல்லையை உலகத் தோற்றத்துக்கு வரையறுக்கின்றனர். அதுபோன்றே மனிதனின் தோற்றத்தைப் பல மேலைநாட்டுப் பேரறிஞர்கள் ஒருவாறு கணக்கிட்டிருக்கின்றனர்.

மனிதன் விலங்கிலிருந்து தோன்றினன் என்பது இன்று ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மையாகிவிட்டது. அவ் விலங்கினம் குரங்கு என்பதும் அனைவராலும் ஒத்துக் கொள்ளப்படுகின்றது. அத்தகைய குரங்கினம் இன்றைக்கு ௬0, 000, 000 ஆண்டுகளுக்குமுன் உலகில் தோன்றியிருக்கக் கூடும் என்று ஆராய்ந்துள்ளனர். எனினும் அதன் வழித் தோன்றிய மனிதன் இன்றைக்கு ௬00, 000 ஆண்டுக்கும் ௫0,000 ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் இவ்வுலகில் தோன்றினன் என்பர் அறிஞர். ஆம்! அந்த முதல் மனிதன் தோன்றிய காலத்து இமயமும் தென்னடும் கடலால் பிரிக்கப்பட்டிருந்த தென்பர். அத்துணை மிகப் பழங்காலத்தில் விலங்கினத்திலிருந்து மனிதன் தோன்றிப் படிப்படியே வளரலானன்.

வரலாறு என்பது கடந்ததைக் கணக்கிட்டுக் காண்குவது. அண்ட கோளத்தில் அளவிட முடியாத ஆண்டுகளிலே நடைபெற்ற நிகழ்ச்சிகளை யெல்லாம் கூடு

மாயின் வரலாறு வழிக் காணலாம். ஆனால் சிற்றறிவினனாகிய மனிதன் அத்துணைப் பேராற்றலைப் பெறவில்லை. விஞ்ஞானத் துணைக் கருவிகள் மூலம் பலப் பல உண்மைகளைக் காணுகின்றானேனும், பரந்த எல்லை வெளியில் நடைபெறும் அத்தனையும் அவனால் அறுதியிட்டு உரைக்கமுடியாதன. எனவே அவனது வரலாறு ஓர் எல்லைக்கு உட்பட்ட ஒன்று. உலக வரலாற்றிலும் பரந்த பாரதநாட்டு வரலாற்றிலும் தமிழக வரலாற்றிலும் எத்தனையோ பகுதிகள் நம் அறிவுக்கு அப்பால் நடந்து கழிந்து விட்டன எனலாம். தமிழக வரலாறு என்னும்போது தொல்காப்பியமும், கடைச் சங்கமும் தான் தெரியும். கி. பி.க்குச் சற்று முன்பின்னாக அவற்றின் கால எல்லைகளை அமைத்துக் கொள்வர். இந்திய வரலாற்றிலேயே மௌரியர் ஆட்சியும் அலெக்சாந்தர் படையெடுப்பும்தாம் வரலாற்று எல்லைகளாக அமைகின்றன. அப்படி உலக வரலாற்றிலும் மனிதன் காணும் எல்லை உண்டு. அந்த எல்லை எவ்வளவு தாண்டினும் இன்றைக்கு ௭000 ஆண்டுகளுக்கு முன்னே செல்வதில்லை.

௭000 ஆண்டுகளுக்குமுன் வரலாறு தெரியவில்லையே ஒழிய அக்காலத்தில் மனிதனும், விலங்குகளும், பிற உயிர்களும் வாழவில்லை என்று யாராவது முடிவுகட்டுவார்களா? எப்படிக் கட்டமுடியும்? வரலாற்றுத் தொடக்கத்தில் மனிதன் இன்றைய மனிதனைப்போல் வாழ்ந்தான் என்பதைக் காண்கின்றோம். ஆனால் அதற்குமுன் இந்த வாழும் வழியைப் பெற அவன் எத்தனை எத்தனை ஆண்டுகள் முயன்று முன்னேறி யிருக்கவேண்டும்? விலங்கினத்திலிருந்து வேறுபட்ட மனிதன் பலப்பல ஆயிரமாயிரமாண்டுகள் வலிந்தும் நலிந்தும் அல்லலுற்றும் அவதி ஏற்றும் இன்ப துன்ப நிகழ்ச்சிகளுக்கு இடையிலே வரலாற்று மனிதனாக வரும்வரையில் வாழ்ந்து வளர்ந்து வந்த வரலாற்றை ஓரளவு காண முயல்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

விலங்கினத்திலிருந்து மனிதன் வேறுபட்டான் என்றால் ஒருநாள் திடீரென்று விலங்கினங்களை விட்டுப் பிரிந்து வேறாகக் குடிசை கட்டிக்கொண்டு வாழத் தொடங்கி விட்டான் என்று கூறமுடியாது. விலங்கொடு விலங்காக வாழ்ந்து சிறுகச் சிறுகவே அவன் மாறுபட்டான். உயிர்த் தோற்ற வளர்ச்சியில் இன்று உச்சியில் இருப்பவன் மனிதன் மீனாய் ஊர்வனவாய் விலங்காய்ப் பின் மனிதனாய் வந்தான் என்பர். நிலை உயர உயரத் தோற்றநிலையின் எண்ணிக்கை குறைவுபடுகிறது. மீனும் அதை ஒத்த உயிரினமும் பல ஆயிரக்கணக்கான முட்டைகளை ஈன, அவற்றுள் ஒரு சிலதான் பிழைக்கின்றன. மீன்கள் இடும் முட்டைகள் அத்தனையும் குஞ்சுகளானால் என்றோ கடல் முழுதும் மீன் நிறைந்து வற்றியிருக்கும். அதற்கடுத்த ஊர்வன பறப்பன வெல்லாம் பல முட்டைகள் இடச் சில வாழ்கின்றன. விலங்கினத்தும் அப்படியே. எங்கோ யானை போன்ற ஓரிருவிலங்குகள் ஒரே கான்முளையைப் பெறுகின்றன. மனிதன் அந்த நிலையில் ஒரு மகவைப் பெறுகின்றான். எனவே மகப்பெறு நிலையில் அவன் குறைந்த எண்ணிக்கையான ஒன்றினைப் பெற்று வளர்க்கக் கற்றுக் கொண்டது முதல் மாறுதல் எனலாம்.

முதல் மனிதன் இன்றைய மனிதனினும் முற்றிலும் மாறுபட்டே வாழ்ந்திருப்பான். வெம்மைக்கும் குளிருக்கும் தடுப்புச் சாதனங்கள் அவனிடம் கிடையா. பக்குவ உணவும் படுக்கும் இடங்களும் அவனுக்குப் புரியாதன. விலங்குகளைப் போன்ற இயற்கையான பருத்த தோலும் திண்ணிய மயிர் ஒழுங்கும் அவன் பெற்றிருக்கவில்லை. எனவே அவன் வாழ்வு கடினமானது. விலங்குகளினின்று தன்னைக் காப்பாற்றிக் கொள்வது ஒரு புறமிருக்க, இயற்கைச் சுழலுக்கு ஏற்பத் தன் வாழ்வை அமைத்துக்கொள்ள அவன் பெரும்பாடு பட்டிருப்பான். அந்தப் பெரும் தொல்லைகளை எடுத்துக் கூறக்கூட அவனுக்கு அன்று பேசும் மொழியும் கிடையாது.

விலங்கொடு விலங்காகக் கண்டதைத் தின்று குகைகளிலும் முழைகளிலும் மரக் கிளைகளிலும் தன் வாழ்வை ஆதிமனிதன் கழித்திருக்கவேண்டும். ஒரே சமயத்தில் பல மனிதர்கள் தோன்றினார்களா அன்றி 'ஆதாமும் ஈவாளும்' போன்று முதல் முதல் ஒருவனும் ஒருத்தியும் தான் தோன்றி

ளுர்களா என்று திட்டமாகச் சொல்ல முடியாது. அன்று அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் தனக்கு உணவு தேடிக் கொள்ளவும் அவன் பற்களையும், நகத்தையும், பலத்தையும் தான் பயன் படுத்திக் கொண்டிருந்திருப்பான். மனிதன் பிறவற்றினின்றும் வேறுபட்ட தன்மை யாளனுனதோடு, அவனுக்குப் பிறவற்றிற்கு இல்லாததோர் அறிவும் அக் காலத்தே உண்டாயிருக்க வேண்டும். அந்த அறிவே தான் அவன் வளர்ச்சிக்குத் துணையாய் அமைந்தது.

தனித்து வாழ்ந்த மனிதன் காய் கனிகளை உண்டு, பச்சை மாமிசத்தைப் பிற விலங்குகளோடு விலங்காய் உண்டபின் எப்படியோ நெருப்பின் பயனை அவன் கற்றுக்கொண்டிருக்கவேண்டும். விலங்குகளிட மிருந்தும் பிறவற்றினிட மிருந்தும் அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளக் கல்லையும் முள்ளையும் எலும்பையும் பிற பொருள்களையும் ஆயுதங்களாக அவன் உபயோகித் திருப்பான். அவன் உபயோகித்த பொருள்களைக் கொண்டேதான் வரலாற்று ஆசிரியர்கள் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தை ஒருவாறு எண்ணிக் கணக்கிடுகிருர்கள். எலும்புக்காலம், கற்காலம், செம்புக்காலம், இரும்புக்காலம், இரண்டாம் கற்காலம் என இப்படி எத்தனையோ காலங்கள் வரலாற்றுக்குமுன் கழிகின்றன. அவையெல்லாம் மனிதன் உபயோகித்த பொருள்களைக் கொண்டு—ஆழ்ந்து தோண்டப்படுமிடத்தில் அவற்றைக் கண்டு பிடிப்பதைக் கொண்டு—வரையறுக்கப்பட்டனவே!

முதல் மனிதன் விலங்கினங்களைக் காட்டிலும் எத்தனையோ வகையில் தாழ்ந்தவனுகத்தான் இருந்திருப்பான். ஆயினும் நாளாக ஆக அவனது அறிவைக் கொண்டு சிறுகச் சிறுக வாழ்க்கையில் முன்னேறிக் கொள்ளக் கற்றுக்கொண்டான். வெயிலுக்கும் மழைக்கும் ஒதுங்கி வாழவும், சிங்கம் புலிகளின் கொடுமைகளுக்குத் தப்பித்துக் கொள்ளவும் அவன் வழி தேடி இருப்பான். அந்த வழித்துறைகளுக்கெல்லாம் அவன் அறிவு—மூளை—அவனுக்குப் பெரிதும் உதவி இருக்கும். அவன் தேவையும் அனுபவமும் அவனை நாளுக்கு நாள் வளரச் செய்தன எனலாம். அவனது அறிவும் நரம்பு உணர்வும் மூளையின் வேலையும் பலப்பல தேவைகளையும் சிறுகச் சிறுக நிறைவேற்றிக் கொள்ள அவனுக்கு உதவின.

மனிதன் வளர்ச்சி பிற விலங்கு வளர்ச்சியைக் காட்டிலும் வேறுபட்டிருக்கும். விலங்குகள் ஒன்றை ஒன்று கண்டே பலவற்றைத் தெரிந்து கொண்டன. மனிதனே காண்பதனுல் மட்டு மல்லாது கற்றும் கேட்டும் பலவற்றைத் தெரிந்து கொள்ளுகிருன். அந்தப் பழங் காலத்தில் எழுத்தும் படிப்பும் இன்றேனும், இயற்கையும் சுற்றுச் சூழல்களும் அவனுக்குப் பலவற்றைக் கற்றுத்தந்தன. மனிதன் பேசக் கற்றுக்கொண்டதும் அவன் கேள்விமூலம் பற்பல வகையான விளக்கங்களை அறிந்து கொண்டான். இப்படி விலங்கினத்தினின்றும் தோன்றிய மனிதன் நாளுக்கு நாள் அவ்விலங்கினத்திலிருந்து வேறுபட்டு வாழ்வினை வளமாக்கிக் கொண்டே வந்தான்.

முதல் மனிதன் எப்படித் தொடக்கத்தில் மனைவிமக்களோடு வாழும் குடும்ப வாழ்க்கையை மேற்கொண்டான் என்பது தெரியாத ஒன்று. எனினும் அவன் தேவையும் அறிவும் அவனைக் குடும்பத்தனுக்கின என்றல் மிகையாகாது. தனியாக வாழ்ந்த மனிதன் கூடிவாழக் கற்றுக்கொண்டான். அக் காலத்தில் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள அவன் கூரிய கற்களை உபயோகித்திருப்பான். அந்தக் கல் ஆயுதங்களைக் கொண்டே வரலாற்று ஆசிரியர்கள் 'கல் காலம்' என்ற ஒரு மைல்கல்லை அவ்வாழ்வுப் பாதையில் நட்டு விட்டார்கள் எனலாம். இக் கற்காலத்துக்குமுன் எலும்புக் காலம் ஒன்று கழிந்திருக்கவேண்டுமென்று அண்மையில் ஆராய்ச்சியாளர் முடிவுசெய்துள்ளனர்.

தனிக்குடும்ப வாழ்க்கை சமுதாயக் குடும்ப வாழ்க்கையாக மலர நெடுங்காலம் சென்றிருக்கும். அக் காலத்தில்தான் ஏறக்குறைய வரலாற்று மனிதனின் வாழ்வு உருவாகியிருக்கும். ஆனல் அந்தக் காலத்துக்கும் வரலாற்றுக் காலத்துக்கும் நெடுந் தூரம் இடைவெளி உண்டு. எங்கெங்கோ காடுமேடுகளிலும் மூலை முடுக்குகளிலும்

வாழ்ந்த மனிதன் கூடிவாழக் கற்றுக் கொண்ட அந்தக் காலத்தில்தான் ஊர்கள் உண்டாயின. அப்படி ஊர்கள் அமைக்கு முன்னமே மனிதன் தனக்கென மக்களை உறவு கொண்டதோடு, தன் வாழ்வுக் கெனப் பல விலங்குகளையும் பழக்கப் படுத்தி வைத்துக் கொண்டான். மாடு, ஆடு, நாய், பூனை முதலிய விலங்குகள் அவ்வாறு அவ னோடு ஒன்றிக் கலந்து வாழத் தொடங் கின.

ஊரும் நாடும் தேர்ந்தெடுக்குமுன் மனிதன் ஒரே இடத்தில் தங்கி இருந்தான் என்று சொல்ல முடியாது. எங்கோ ஓரி டத்திலோ—அன்றி ஒரு சில இடங்களி லோதான் ஆதி மனிதன் தோன்றி இருக் கக் கூடும். பின் அவன் சமுதாயமாக வளர வளரப் பல்வேறு திசைகளில் பிரிந்து சென்றிருப்பான். பிரிந்து சென்ற மக்கட் கூட்டங்கள் சென்ற சென்ற திக்குகளில் தனித் தனியாக அமைந்து வாழக் கற்றுக் கொண்டன. அந்தத் தனிச்சமுதாய வாழ்க் கைகளே மக்கள் பாகுபாட்டையும் அவர் வழிப் பின்னால் ஏற்பட்ட மொழி, வாழ்க்கை முறை, பண்பாடு ஆகியவற்றின் வேறு பாடுகளையும் பெருக்கி இன்றைய மனித னைப் பல்வேறு வெறிச் செயல்களுக்கு ஆளாக்கின எனலாம்.

நாடும் நகரும் காண நினைப்பதன்முன் மனிதன் செம்புக் காலம், இரும்புக் காலம் முதலியவற்றைக் கடந்து விட்டான். கற்காலத்தில் மனிதன் தனியாக வாழ்ந் திருக்க முடியும். யாருடைய உதவியும் இல்லாமல் மனிதன் கூரிய கற்களைத் தன் ஆயுதமாக வைத்துக்கொண்டு பாது காப்பைத் தேடிக்கொண்டான். குடிசை அமைக்காமலேயே குகைகளில் வாழவும் பழகியிருந்தான். ஆனால் குடிசை வாழ்வும் செம்பு ஆயுதங்களும் அவனைச் சமூக வாழ்வில் செலுத்தின என்னலாம். செம்பை உருக்கி அவனுக்கு ஆயுதம் செய்துதர ஒருவனுக்கு மேற்பட்டார் இருந்து உதவி இருக்கவேண்டும். அதே போன்று குடிசை அமைக்கவும், பிற தேவைகளை நிறைவு செய்யவும் சில ருடைய உதவி தேவைப்பட்டிருக்கும். அந்தத் தேவையேதான் கூட்டுவாழ்வை அவனுக்கு அளித்தன.

இயற்கையான உணவினை உண்டு கொண்டிருந்த மனிதன், அவ்வுணவினை நெருப்பிலிட்டு உண்ணக் கற்றுக்கொண் டான் என்று கண்டோம். அந்த நிலையில் அவன் நெருப்பை எப்படி உண்டாக் கினான்? காட்டில் மரங்கள் உராய்வதால் உண்டாகும் நெருப்பு, அவனுக்குத் தன் வழியைக் கற்றுக்கொடுத்திருக்கும். இவ் வாறு உணவினைப் பொசுக்கக் கற்றுக் கொண்டபின் அவன் விவசாயம் செய் யவும் கற்றுக்கொண்டான் என்பது பொருந்தும். செம்புக்காலமும் இரும்புக் காலமும் அவனைப் பெரிய விஞ்ஞானியாக மாற்றுவிட்டாலும், அவ்விஞ்ஞான அடிப் படை தான் அவனுக்கு உலோகங்களால் ஆயுதங்களையும் பாண்டங்களையும் செய்து தந்தன எனலாம்.

திடீரென ஒருநாள் அவன் உழக் கற்றுக்கொண்டான் என்று அறுதியிட முடியாது. இயற்கையாக விளைந்த நெல் லும் கோதுமையும் பிறவும் அவனுக்கு உணவாக அமைந்திருக்கும். ஓரிடத்தில் கூடித் தங்கிவாழக் கற்ற அவனுக்கு அவற்றின் வளர்ச்சி ஓரளவு புரிந்திருக்கும். முற்றிய கதிர்களிலிருந்து தான் எடுத்தது போக, மீதி பூமியில் வீழ்ந்து முளைத்ததை அவன் கண்டிருப்பான். அது நிலத்துக்கு ஏற்பப் பருத்தும் சிறுத்தும் கதிர் விளைவ தைக் கண்டிருப்பான். அவற்றின் வழி அவன் விவசாயத்தைக் கைவரப்பெற்றான். இவ்வாறு ஓர் இடத்தில் நிலைத்த பின்னரே அவன் விவசாயத்தை மேற்கொண்டான் என்பது பொருந்தும். ஏறக்குறைய அக் காலத்திலேயே அவன் மட்பாண்டங் களையும் பிற தேவைகளையும் நன்கு அறிந்து கற்றுக்கொண்டான் எனக் கூறுவர் வர லாற்று ஆராய்ச்சியாளர். ஆம்! அவ் வாறு கற்றுக்கொண்ட மனிதன் உலகில் எவ்வெப்பகுதிகளில் வாழ்ந்து வந்தான்?

முதல் ஊர் அல்லது நகரம் எங்குத் தோன்றிற்று என்பது திட்டமாகத் தெரியா விட்டாலும் மனிதன் தன் கூட்டுவாழ்க் கையை ஆற்றங்கரைகளில் அமைத்துக் கொண்டான் என்பது மட்டும் ஓரளவு உண்மையாகிறது. நைல்நதி நாகரிகம், மெசபொடேமியன் நாகரிகம், சிந்துவெளி நாகரிகம், காவிரிக்கரை நாகரிகம், சீனத்து

நாகரிகம் ஆகிய பலவும் இந்த அடிப் படையிலேயே அமைந்தன எனலாம். இன்று அவற்றுள் பல நிலைகெட்டிருப்பி னும் அவையே மனித வரலாற்றையும் உலகவரலாற்றையும் ஆய்ந்துகாண உறு துணையாயிருக்கின்றன என்பதை மறுப் பார் யார்?

கூட்டு வாழ்க்கையில் நாடு நகரங்கள் அமைத்துக் கொண்ட பின்னும் அதற்குச் சற்று முன்னும் மனிதன் எத்தனையோ வகையான தேவைகளைக் கண்டு அவற்றை அடையவும் முயன்று ஓரளவு வெற்றியும் பெற்று விட்டான் எனலாம். மண்ணால் பாண்டம் செய்து அதில் தன் திறனைக் காட்டினான் மனிதன்; விலங் கினத்தைத் தனக்கு வேண்டியதைத் தரப் பழக்கிக் கொண்டு தன் வாழ்வை வளப் படுத்தினான் மனிதன்; பயிரிடவும் பழகி விட்டான் மனிதன் என்று கண்டோம். ஆனால் பயிர்த்தொழிலோடேயே அவன் பயின்றன பல. பயிரிடப் பல ஆயுதங்கள் வேண்டும். அவற்றைச் செய்யக் கற்றுக் கொண்டான். 'பருவத்தே பயிர்செய்' என்பது நமது நாட்டுப் பழமொழி. ஆகவே பயிர் செய்யப் பருவம் பார்த்தல் வேண்டும். அப்பருவத்தைப் பார்த்தறிதல் எளிதன்று. வானவீதியே வாயிலாகத்தான் பருவங் களும் ஆண்டும் மதியும் நாளும் அறுதி யிடப்படுகின்றன. அவற்றின் எல்லையில் நின்றுதான் மனிதன் பயிர்த் தொழிலைச் செய்கின்றான். அன்றைய மனிதனும் அவற்றையெல்லாம் நிச்சயம் அறிந் திருந்தவனாகத்தான் இருந்திருப்பான். அன்றேல் எப்படி நன்கு பயிரிட முடியும்? பருவங்களின் தோற்ற ஒடுக்கங்களும் அவை தரும் நலக்கேடுகளும் அறிந்தே அவன் பயிர்செய்தான். வானவீதியில் செல்லும் ஞாயிறும் திங்களும் விண்மீன் களும் அன்றே அவனுக்குப் பல கணக்குக் களைச் சொல்லித் தந்தனவாதல் வேண்டும். அவற்றின் துணைகொண்டு தான் அவன் பயிர்த்தொழிலைச் செய்தான். எனவே அன்றைய மனிதன் வானாராய்ச்சி யில் வல்லவன் அல்லன் எனினும் வான் கணக்கை ஓரளவு அறிந்தவனாகத்தான் இருந்தான் என்பது மறுக்க முடியாத உண்மை. இந்த ஆய்வுக் காலத்தினை வர லாற்று ஆசிரியர்கள் ஓரளவு கணக்கிட்டு கி. மு ௬௦௦௦ க்கும் ௫௦௦௦ க்கும் இடைப் பட்டகாலமே இது என்று கூறுகின் றனர்.

ஏறக்குறைய அதே காலத்தில் மனித னுக்கு மற்றோர் உணர்வும் தோன்றி யிருக்கக் கூடும். அதுதான் கடவுள் உணர்வு. அக் கடவுள் உணர்ச்சி அச்சத் தாலும் அன்பாலும் உண்டாயிற்று என்பர். அந்தக் காலத்திலே கடவுள் உணர்வு உண்டாயிருக்க வேண்டுமென மேலை நாட்டு வரலாற்று ஆசிரியர்கள் அனைவ ருமே ஒத்துக்கொள்ளுகின்றனர். ஆனால் கடவுள் உணர்வு சமய வெறியாக இன்று மாறியுள்ள அந்த அளவுக்கு அன்று அவர்கள் வெறிகொண்டு வாழ்ந்தார்கள் என்று கூறமுடியாது. தமிழ்நாட்டு வர லாறே பழந்தமிழ்க் கடவுள் உணர்வு மாறு பாடற்ற ஓர் உயர்நிலையில் இருந்ததைக் காட்டுகிறது. எனவே பழங்காலக் கடவுள் உணர்வு ஒருமை வாழ்வுக்கு வழிகோ லியதேயன்றி, வெறிகொண்டு வேற்றுமை உணர்வை வளர்க்கவில்லை எனலாம். இன்று கடவுள் மனிதனைப் படைத்தானா மனிதன் கடவுளைப் படைத்தானா என்று ஐயம் கொள்ளும் அளவுக்குக் கடவுளர் நாள்தோறும் வளர்ந்து கொண்டே போகின்றனர். அவற்றின் வழியும் அவற்றை ஆக்கிய தலைவர் வழியும் உலகில் வேறுபாடுகள் தாம் வளர்கின்றன.

வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன் கடவுள் உணர்வைப் பெற்றிருந்தான் எனி னும் அவன் இத்தனை வேறுபாடுகளை வளர்க்கவில்லை. ஒன்றுக்கு மேற்பட்ட கட வுளர் இருந்திருக்கலாம். கடவுளர் வாழும் கோயில்கள் ஊர்தொறும் நன்கு போற்றப் பட்டன. அக்கோயில்களைத் தங்கள் வாழ் வின் மையமாக வைத்துக்கொண்டு மக்கள் வாழ்ந்தார்கள் என்பர். கடவுளைப் பெருஞ் செல்வராக்கி, தாம்பெறும் செல்வங்களை அவருக்கு உரிமையாக்கி, தாம் பொருள் வேண்டும்போது அக் கோயிலிலிருந்து பெற்றுக்கொண்டு வாழ்ந்தார்கள் என வர லாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். தமிழ் நாட்டு வரலாற்றில் இடைக்காலத்தில் நாம் கோயில்களைப் பார்க்கின்றோம். ஏறக் குறைய அந்த நிலையில் பழங்கால மனிதன்

கோயிலை நிலைக்களனாகக்கொண்டு வாழ்ந் தான் எனலாம். அவன் கும்பிட்ட தெய்வத்தின் பெயரும் பிறவும் அறிய இயலாவிடினும் அவன் கடவுள் உணர் வொடு வாழ்ந்தான் என்பதில் ஐயமில்லை. அக் கடவுள் யாவனேயாயினும் அவன் அன்றைய மனிதன் வாழ்வை உயர்த்த உறுதுணையாயிருந்தான் என்பது ஒரு தலை.

இனி, அன்றைய மனிதன் எம்மொழி யைப் பேசினன் என்றும் கூறமுடியாது. இந்த மொழி வேறுபாடே இன்று நாட்டை நலிவுறுத்துகின்றது. மொழியும் பண் பாடும் நாடுதொறும் வேறுபட்டிருக்கலாம், கடவுள் நெறியைப்போல. ஆனல் அவற் றின் வேறுபாட்டுக்கிடையில் ஒற்றுமை காண வேண்டிய மனித சமுதாயம் அவ் வேறுபாடுகளைக் கொண்டே தன்னை அழிவுப் பாதைக்கு அழைத்துச் செல்லு கிறது. எப்படியோ அன்றைய மனிதன் பேசினன். பேசிப் பேசி நெடுங்காலம் கழிந்த பிறகு வரிவடிவில் எழுத்துக்கள் தோன்றியிருக்கக் கூடும். அவ்வெழுத்துக் களும் அவற்றின்வழி எழுந்த மொழிகளும் இன்று மனிதனைப் பலவகையில் பிரிக் கின்றன. வரலாற்றுக்கு முற்பட்ட மனி தன்தான் தன் தேவைக்குப் பேசியும் எழு தியும் மொழியினைக் கண்டான். இன்று வழக்கிலிருக்கும் பல மொழிகளும் அவற் றின் எழுத்துக்களும் வரலாற்று எல்லைக்கு உட்பட்டனவே என்பர் ஆய்வாளர். எப் படியாயினும் அன்றைய மனிதன் ஏதாவது ஒரு மொழியைப் பேசித்தான் கூடி வாழ்ந் தான் என்பதை யாரும் மறுக்கமுடியாது. இனப் போராட்டமும் கடவுள் வெறிப் போராட்டமும், மொழிப் போராட்டமும் மனிதனை இன்றைய கொடிய பாதையில் அழைத்துச் செல்லும் என அந்த முந்திய மனிதன் அறிந்திருக்க நியாயமில்லை. ஒரு வேளை அறிந்திருந்தால் இவற்றை உண் டாக்காமலேயே இருந்திருப்பான்.

இவ்வாறு ஒவ்வொரு துறையிலும் வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன் வளர்ந்த வரலாற்றை ஆராய்ந்து கொண்டே போக லாம். விரிப்பின் பெருகும். நம் இந்திய நாட்டில் கண்டெடுத்த சிந்துவெளி நாகரி கத்தில் வாழ்ந்த மனிதனை வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன் என்றுதான் கொள்வர் ஆய்வாளர். எப்படியாயினும் வரலாற் றுக்கு முற்பட்ட மனிதன் வள்ளுவர் கூறிய படி 'வையத்துள் வாழ்வாங்கு வாழ'க் கற் றுக்கொண்ட மனிதனாக இருந்தானே யன்றி வெறும் காட்டுமிராண்டியாக இருக்க வில்லை என்பது துணிபு. வரலாற்றுக்குப் பின் தான் கற்றிருந்த கலை, தொழில், செயல் முதலியவற்றாலும், பெற்றிருந்த பண்பாடு, மொழி, வாழ்வின் அமைதி முத லியவற்றாலும் தன் சமுதாயத்தையும் அதன்வழி உலக நலத்தையும் ஓம்பி வளர்த்தான் என்பதுதான் நாம் காணும் இன்றைய வரலாறு என்பதை அனைவரும் அறிவர். எனவே இன்றைய மனிதனு டைய செம்மையான வாழ்வுக்கு, முன் நின்று பல இன்னல்களை ஏற்று வாடி வதங்கி, ஒன்றினுக்கும் உளையாது சிறிது சிறிதாக முன்னேறி வழிகாட்டியாக நின்ற அந்த வரலாற்றுக்கு முற்பட்ட மனிதனை நாம் என்றும் மறக்க முடியாது. ஆம்! மறக்க முடியாத வகையிலேதான் இன் றைய வரலாற்று ஆசிரியர்கள் அவனைப் பற்றி ஆய்ந்து ஆய்ந்து புத்தம் புதிய உண்மைகளைக் கண்டு வெளியிட்டுக் கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் பணி சிறக்க என நாமும் வாழ்த்துவோம்.

இவ்வாறு பல்லாயிர மாண்டுகளாக வளர்ச்சியடைந்த மனிதன் இந்தக் கி. பி. இருபதாம் நூற்றாண்டுக்கு இடையில் விரைந்து தன் முடிவைத் தேடிக்கொண்டு செல்கின்றான். வாழ வழிகாண்பதை விடுத்து, அறிவியல் துணையால் அழிவை நோக்கிச் சென்றுகொண்டே இருக்கிறான். இந்த முறையால் ஒருவேளை மனிதனின் அழிவு அண்மையில் நேரினும் நேரும். அன்றி நெடிது வாழினும் உலகம் மனித வாழ்வுக்கு இடமளிக்காத வகையில் மாறும் போது அவன் அழியத்தான் வேண்டும். அந்தக் கடைசிக் காலத்தில்—ஆயிரமாயிர மாண்டுகளாக வாழ்ந்த மனிதன் அழியும் காலத்தில்—மிகச் சிலர்தாம், தோன்றிய வாறேபோல், சிற்சில இடங்களில் வாழ நேரும். சூரியன் இல்லையாகும் காலம் வருமுன்பே நிலம் வாழ்வுக்கு ஏற்றதற்ற தாகிவிடும். அன்று வாழும் மனிதன் பாவம்—அழிந்த நாகரிகங்கள்—நகரங்கள்

—பிற சிறப்புக்கள்—இவற்றை எல்லாம் எண்ணி எண்ணி ஏங்குவன். ஒருவேளை அவன் எண்ணத்தில் வாழாத அளவில் இவை அனைத்தும் வெகுகாலத்துக்கு முன்பே அழியினும் அழிவுறும். அந்தக் கடைசிக் காலத்து மனிதன் நமது விஞ்ஞான அறிவையும் ஆற்றலையும், அணு சக்தியையும், ஏன்—அவனது பழைய வரலாற்றையும் கூட அறியமாட்டான். அவனுக்கு உற்ருரும் மற்ருரும் அற்றநிலையில் அறமும் மறமும் அன்பும் வன்பும் அறியாப் பொருள்களாகிவிடும். இன்றைய கலையும் வாழ்வும் கலாசாரமும் அவன் கனவிற்கும் எட்டாத பொருள்களாகிவிடும். பாவம்! அவன் அமைதியே வடிவமாகி—விண்ணையும் மண்ணையும் நோக்கி—பேசவும் கேட்கவும் முடியாத நிலையில் நீண்டு வளர்ந்த மனித சமுதாயத்தில் இறுதி மூச்சாக நின்று நிலவுவான். ஆம்! அந்த இறுதியை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் இன்றைய மனித சமுதாயம் சென்றதையும் வருவதையும் எண்ணிச் சீர்தூக்கி ஆராய்ந்து, வாழும் நாளில் மற்றவரை ஒத்து நோக்கி எல்லாரும் இன்புற்றிருக்கும் வகையில் நலம்புரியுமாயின் நல்லதாகும். அந்த நல்ல நெறியை நோக்கி மனித சமுதாயம் செல்ல வேண்டுமென்பது என் அவா!

இக் கட்டுரை அந்நெறியை விளக்க ஓரளவாவது உதவுமாயின் அதுவே இதன் பயன் என அமைவுறுவேன்!

---

## திராவிட நாகரிகம்

வரலாற்றுக்கு முற்பட்ட தமிழின நாகரிகத்தின் வளர்ச்சி முகட்டை நாம் வரலாற்று வாயிலில் காண்கிறோம். தமிழகக் கோயில்களின் மிக உயர்ந்த மிக வீறமைந்த கட்டட அமைப்பை நாம் இன்று அதன் வாயிற் கோபுரத்திலேயே பார்க்க முடிகிறது. இதுபோலவே, சிந்துவெளியில் கண்டு வெளிப்படுத்தப் பட்டுள்ள நாகரிகம் தமிழின நாகரிகத்தின் பாரிய, சீரிய முகப்புக் கோபுரமாக நமக்குக் காட்சியளிக்கின்றது.

இந்திய நாகரிகத்தின் வரலாறு, மனித இன நாகரிகத்தின் தோற்றம் ஆகியவை பற்றி இருபதாம் நூற்ருண்டின் தொடக்கம் வரை நிலவியிருந்த கருத்துக்கள் அத்தனையிலும் சிந்துவெளிப் புதைபொருளாராய்ச்சி புரட்சிகரமான பெருத்த மாறுபாடுகளை உண்டுபண்ணியுள்ளது. கிரேக்க நாகரிகத்தின் பழமையும் இருக்கு வேத ஆரியரின் பழமையும் இப்போது நேற்றைய, இடைக்காலப் புதுமைகளாய் விட்டன. கிரேக்க, சால்டிய, சுமேரிய நாகரிகங்கள் இவற்றுக்கு ஆயிரக் கணக்கான ஆண்டு முற்பட்ட பழமையும் பெருமையும் உடையன. தமிழின நாகரிகத்தின் மூலவடிவமான திராவிட நாகரிகமோ இத் தொல் பழ நாகரிகங்களின் தலைமூத்த நாகரிகமாய், அவற்றிலும் ஆயிர பதினுயிரக்கணக்கான ஆண்டுப் பழம்பெருமையுடையதென்பதை இன்றைய அறிஞருலகம் திட்டவட்டமாக எடுத்துக்காட்டுகிறது. இந்தியாவின் அரசியல், சமுதாய, சமயப்பண்பாடுகள் அத்தனைக்கும் மூல முதல் கருநிலையை இப்போது யாரும் இருக்கு வேதத்திலோ புராண இதிகாசங்களிலோ தடவித் தேட வேண்டியதில்லை. ஏனெனில் திராவிட நாகரிகத்தில் அவையெல்லாவற்றின் மூல முதலை மட்டுமன்றி, உலக நாகரிகத்தின் மூல முதலையே தேடிக் காணலாம்.

—கா. அப்பாத்துரை, எம்.ஏ., எல்.டி., ''தமிழக வரலாறு''.

---

# நாடகக்கலை

[திருவாட்டி மேரி மாசிலாமணி அம்மையார்]

தமிழகப் புலவர் குழுவின் தகைசான்ற புலவர்களுள் ஒருவராகத் தமிழ்ப் பெரும் பணிபுரியும் பேறுபெற்ற இவ் வம்மையார் வித்துவான், எம்.ஏ., எல்.டி. ஆகியபட்டங்கள் பெற்றுள்ளார். சென்னை, மகளிர் கிறித்துவக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியராகக் கடந்த இருபதாண்டுகளாகத் தொண்டாற்றி வருகின்றார். இங்கிலாந்து, பிரான்சு, சுவிட்சர்லாந்து, சர்மனி முதலிய வெளிநாடுகளில் சுமார் ஒன்றரையாண்டுகள் சுற்றுப்பயணம் செய்து தமிழ்மணம் பரப்பிவந்துள்ளார்.



இலங்கைத் திருக்குறள் மாநாட்டிலும், கழகத்தின் பதிற்றுப்பத்து மாநாட்டிலும் சொற்பொழிவாற்றிய பெருமையுடையவர். 'அம்புஜத்தின் ரகசியம்,' 'தழைத்த மல்லிகை,' 'அகஸ்தீன் அடிகள்,' 'நான்கண்ட உலகம்,' 'பாரி மகளிர்' ஆகிய அருமையான நூல்களை இயற்றியுள்ளார். அவ்வப்போது 'செந்தமிழ்ச்செல்வி' முதலான உயரிய தமிழ்ச் செய்தியிதழ்களில் பல்வேறு பொருள்கள்பற்றித் தண்டமிழ்ச் சுவை ததும்பும் கட்டுரைகள் வரைந்து வருகின்றார்.

இலக்கியத் துறையில், அறிவிற் சிறந்த மக்கள் உருவாக்கும் கவிதை, கட்டுரை, நவீனம், சிறுகதை, நாடகம் முதலிய எல்லாவற்றுள்ளும் பண்டிதர் முதல் பாமரர் வரை யாவருக்கும் விருந்தளிப்பது நாடகமே. உணர்ச்சி வயப்பட்டிருக்கும் காதலிக்கும், வீரவெறி கொண்ட காதலனுக்கும், கூத்தாடும் கோமாளிக்கும், கொலு வீற்றிருக்கும் கோமகனுக்கும், அழுக்காறு அவா வெகுளியில் அழிவுறும் தீயோனுக்கும், அன்பும் அருளும் பெருக்கும் அறிவுடையோனுக்குமாக நாடகத்தில் அவரவர்க்கு உரியதொரு தனித்த இடமுண்டு. பண்டைத் தமிழர்கள் கண்ட தெருக்கூத்திலும், தற்கால மக்கள் பல்வகைப் புதுமுறைகளையும் பயன்படுத்தி நடத்தும் நாடகத்திலும்—எத்தகைய நடிப்பிலும், சூழ்நிலையிலும்—மக்கட்குச் சுவையூட்டும் கூறுகளிருக்கின்றன.

நாடகங்களின் தன்மையை அறிதற்கு, மேல்நாட்டு இலக்கிய நூல்களுள் மிகவும் பயன்பட்டநூல் கிரேக்க அறிஞர் அரிஸ்டாட்டில் எழுதிய 'கவிதைக் கட்டளை' (Poetics) என்னும் நூலே. இந்நூலை ஓரளவில் திறனாய்வுக்கலை நூலாகக் கொள்ளலாம். இதில், ஆசிரியர், நாடகம் காப்பியம் என்னும் இருவகை இலக்கியங்களை ஆராய்கிறார். நாடகத்தைக் குறித்துக் கூறுகையில் பெரும்பாலும் துன்ப நாடகத்தையே குறிக்கிறார். கிரேக்கர்கள் இன்பநாடகங்களைச் சிறிது கீழ்த்தர நாடகங்களாகவே கருதினர். கி. மு. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த அரிஸ்டாட்டில், இந்நூலை எழுதுதற்குமுன், கிரேக்க நாட்டில், ஏசக்லீஸ் (Aeschylus) சோபக்லீஸ் (Sophocles) யூரிப்பிடிஸ் (Euripides) என்ற முப்பெரும் புலவர்கள் துன்ப நாடகம் எழுதுதலில் பெயர் பெற்றிருந்தனர். இவ்வாசிரியர்களின் நாடகங்களை நன்கு ஆராய்ந்து அவைகளினின்றும் பொதுவிதிகளை வடித்தெடுத்தார் அரிஸ்டாட்டில். இவர் எழுதிய நூல், மேல்நாட்டு நாடக, காப்பிய ஆசிரியர்களுக்குப் பல நூற்றாண்டுகளாக வழிகாட்டியாயிருந்தது.

இயற்கையில் இருப்பதொன்றை எழிலொழுகும் முறையில் சித்திரித்துக் காட்டுவன கவிதை, நாடகம் முதலிய கலைகள். ரோம நாட்டைச் சேர்ந்த ஸிஸரோ (Cicero) எனும் அறிஞர், 'நாடகம் உலக வாழ்க்கையின் படம்; மக்கட் சமுதாயத்தின் பழக்க வழக்கங்களை உள்ளவாறே எடுத்துக் கூறும் கலை; உலகியலின் உண்மை நிலையைப் பிரதிவிம்பிக்கும் கண்ணாடி'

என்று கூறி வைத்ததில் பெரியதொரு கருத்துக் காணலாம். கலை என்பது இயற்கையில் உள்ளதைப் படம் பிடித்துக் காட்டுதலே; ஆனால் படம் பிடித்த லென்றால் புகைப்படத்தில் கண்டவாறு உள்ளதை அப்படியே அப்பிவைத்துக் காண்பதா? இவ்வாறுதான் பல நூற்றாண்டுகளாகக் கலைகளைக் குறித்து மக்கள் கருதிவந்தனர். இக் கொள்கை தவறு என்பதைப் பல்லாண்டுகளுக்குப் பின்புதான் உணர்ந்தனர். வாழ்க்கையைப் புகைப் படம் எடுத்தவாறு எழுதிக் காட்டினால், அப்படத்தைப் பார்ப்பவருக்குச் சலிப்பு ஏற்பட்டுவிடும் என்று கண்டனர். மக்களின் வாழ்க்கை வரலாற்றை நிரல்படக் கூறும் வரலாற்றாசிரியர்கள் இம்முறையைப் பயன் படுத்தலாம். ஆனால் நாடகத்திலோ, ஓர் உண்மை நிகழ்ச்சியை எடுத்துக் கூறுங்கால், நாடகத்தைப் படிப்போரும் காண்போரும் ரசிகர்களாயிருத்தலால், நிகழ்ச்சியின் ஒரு கோணத்தைச் சிறிது உயர்த்தி, அதற்கு முதன்மை யளித்தும், மற்றொரு கோணத்திற்குச் சிறிது மெருகு கொடுத்தும், மற்றொரு கோணத்திற்குச் சிறிது வர்ணம் ஊட்டியும் இவ்வாறு உருவாக்க வேண்டும். இவ்வாறு செய்வதாலேயே, அந்நிகழ்ச்சியின் உண்மைத் தத்துவத்தையும், ஆசிரியன் மனத்துள்ள கொள்கையையும், படிப்பவருக்கும் நடிப்பவருக்கும், நாடகம் பார்ப்பவருக்கும் எடுத்துக் கூற வியலும். ஆங்கிலக் கவிதை ஆசிரியர் கோல்ரிட்ஜ் என்பார், ‘நாடகம் உலக இயற்கையை மாதிரியாக வைத்து உருவாக்கும் கலையேயன்றி, உலக இயற்கையின் படமன்று’ என்கிறார். ஆகவே, உலக இயற்கையில் காணும் சுவையுள்ள தொரு நிகழ்ச்சியையோ, உண்மையையோ எடுத்துக்கொண்டு, அது மக்கள் மனத்தையும் உணர்ச்சியையும் பரவசப்படுத்தக் கூடிய ஒரு நிலைக்கு அதை உயர்த்துவதே நாடகம். சித்திரக்கலையில், ஒருவன் வர்ணங்களாலும் கோடுகளாலும் தன் எண்ணங்களை வெளியிடுகிறான். சிற்பக்கலையில் ஒருவன், செம்பிலும் கல்லிலும் கட்டையிலும் உருவங்களைச் செதுக்கித் தன் கருத்துக்களை உணர்த்துகிறான். கவிதையில் கவிஞன் எதுகை, மோனை, சந்தம் முதலிய யாப்பிலக்கண விதிகளின் உதவிகொண்டு தன் கற்பனையைப் பாட்டால் வழங்குகிறான். நாடகக் கலையோ, கூடியிருக்கும் மக்களுக்கு நாடக முறைப்படி கதையைச் சொல்வது மட்டுமன்று. நாடக ஆசிரியனின் குறிக்கோளையும், கதையின் தொடர்பையும் மனத்தில் கொண்டு, அவைகள் கூடியிருக்கும் மக்களின் உணர்ச்சியையும் அறிவையும் ஈர்க்குமாறு நாடகப் பாத்திரங்கள் விளக்கிக் காட்டுதல் வேண்டும். காண்பதற்கு மக்கட் கூட்டமில்லையேல், நடித்தல் என்னும் கலைக்கு இடமில்லை. இவ்வகையில் நாடகக்கலை ஏனைய கலைகளினின்றும் வேறுபடுகின்றது.

ஏனைய கலைகளைப்போல், நாடகக் கலைக்கும் சிற்சில சம்பிரதாயங்களிருக்கின்றன. அவை ஒவ்வொரு நாட்டிற்கும், காலத்திற்கும், நாடக வகைக்கும் ஏற்றனவா யிருக்கின்றன. மேல்நாடுகளில், நாடகக் கலையைத் துவக்கி வைத்த கிரேக்கர்கள் கற்பித்துக் கூறிய சம்பிரதாயங்களில் சில, வழக்கிலிருந்தன. கிரேக்க நாடக எழுத்தாளர்கள் துன்ப நாடகங்களில், இசைக்குழு (chorus) ஒன்றைப் புகுத்தி, அக்குழு, நாடக அரங்கிலிருந்து கொண்டு, இடையிடையே ஒன்று சேர்ந்து சோகச் சுவை யூட்டுதற்குரிய சொற்களைச் சொல்லிக்கொண்டிருக்குமாறு செய்தனர். இஃதொரு சம்பிரதாயம். மேலும் அவர்கள் மூன்று ஒருமைப்பாடுகளைக் (the three unities) கற்பித்தனர். கால ஒருமை (unity of time) என்பது குறிப்பிட்ட ஒரு சிறிய காலத்திற்குள் நடக்கக் கூடிய நிகழ்ச்சியை, நாடகத்தில் சில மணிநேரத்தில் நடித்தலாகும். இட ஒருமை (unity of place) என்பது, நாடக நிகழ்ச்சிகள் பல்வேறிடங்களுக்கு மாறிக்கொண்டிராமல், ஒரேயிடத்தில் நிகழுமாறு அமைத்தலாகும். நிகழ்ச்சி ஒருமை (unity of action) என்பது துன்ப நாடகத்தில், பக்கக் கதைகளையோ, கோமாளிக் கூத்துக்களையோ புகுத்தாது, சோகச் சுவையையே மிகுதிப் படுத்துதலாகும். இச் சம்பிரதாயங்கள் ஓரளவில் பயனளித்தனவெனினும், நாளடைவில் மக்கள் இவற்றை ஒழித்தனர். ஏனெனில் காலம், இடம், நிகழ்ச்சி இவற்றில் கட்டுப்பாடுகளைப் புகுத்துவதால், ஒரு நாடகம், உயிரும் உணர்ச்சியும்

சுவையு மற்றுப் போகுமென மக்கள் உணர்ந்தனர். எனினும் துன்ப நாடகங்களில் இச் சம்பிரதாயங்கள் ஒருவாறு பயனளிக்கின்றன என்றே கொள்ளல் வேண்டும். நாடக இயல்புகள் பொருந்தி நிற்கும் தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில் இட ஒருமையைக் காண்கின்ருேம். புகார் நிகழ்ச்சிகளைத் தொகுத்துப் புகார்க் காண்டமென்றும், மதுரை நிகழ்ச்சிகளைத் தொகுத்து மதுரைக் காண்டமென்றும், இறுதி நிகழ்ச்சிகளைத் தொகுத்து வஞ்சிக் காண்டமென்றும் கூறி வைத்ததால், நம் மனத்தின் எண்ணங்களை ஒரே நேரத்தில் பல்வேறிடங்களில் சிதறவிடாது ஒரேயிடத்தில் பதியும்படி வைத்து, புகார்க் காண்டத்தில் இன்பச் சுவையையும், மதுரைக் காண்டத்தில் அவலச் சுவையையும் வஞ்சிக் காண்டத்தில் வீரச்சுவையையும் நாம் சுவைக்குமாறு வைத்து விடுகிருர் ஆசிரியர் இளங்கோ. இந்த அவரது நாடகத்திறமும் கவிதைத்திறமும் பெரிதும் போற்றற் பாலன.

மேற்கூறப்பட்ட மூவகை ஒருமைகளைக் காட்டிலும் உணர்ச்சி ஒருமையையே (unity of emotion) ஒரு நாடகத்தில் நாம் அதிகமாய் எதிர் பார்க்கிருேம் எனலாம். ஒரே நாடகத்தில் கண்ணீரும் நகையும் கலந்திருக்கலாம்; இவ்வாறு உலக இயற்கையிலும் காண்கிருேம். வீரமும் பயமும் ஒன்றி வரலாம். இதனையும் உலக இயல்பில் காண்கிருேம். வடமொழிப் புலவர்கள் எடுத்துக் கூறிய ஒன்பது சுவைகளாகிய சிருங்காரம், வீரம், கருணை, கோபம், நகை, பயம், வெறுப்பு, அற்புதம், சாந்தம் என்பனவற்றுள், ஒன்றுக்கு மேற்பட்ட சுவைகளும், அவைகளின் உட்பிரிவான எத்தனையோ உணர்ச்சிகளும் ஒரு நாடகத்தில் வரலாம். எனினும் ஒரேயொரு உணர்ச்சியே ஈற்றில் நம்மனத்தில் பொங்கி யெழவேண்டும். பல சுவைகளிருப்பினும் தலையானதும் முடிவானதுமான ஒருசுவை யுணர்ச்சிக்கே நம் மனம் அடிப்படவேண்டும். இதுவே உணர்ச்சி ஒருமையாகும். நாடகத்தின் பயன், இன்பம் அளிப்பதும், மக்கள் வாழ்க்கை நெறியைத் திருத்துவதுமே என்பது ஒருசாரார் கொள்கை. மற்றொரு சாரார், அவ்வாறன்று; மக்களுக்கு இன்பமளித்து அவர்களை மகிழ்விப்பதொன்றே நாடகத்தின் தலையாயபயன் என்பர். முன்னைய கூற்றில் ஒரு சிறிது உண்மையிருந்த போதிலும், நாடகம் மக்களை மகிழ்விப்பதற் கெழுந்தது என்று கொள்தலே சிறந்தது. தமிழில் சம்பந்த முதலியார் இயற்றிய சபாபதி, வேதாள உலகம் முதலிய நாடகங்கள் நகைச் சுவையையே பெரும்பாலும் ஊட்டி நம்மை மகிழ்விக்கின்றன. உடலும் மனமும் களைத்துப் போய்வரும் மக்களுக்கு நகைச்சுவை நாடகங்கள் அரிய விருந்தாயமைகின்றன. துன்ப நாடகங்கள் பெரும்பாலும் மக்கள் வாழ்க்கையின் ஆராய்ச்சிகளாக விளங்குகின்றன. ஷேக்ஸ்பியர் இயற்றிய துன்ப நாடகங்களான ஒதெல்லோ, ஹாம்லெத், லீயர் அரசர், மாக்பெத் போன்றவற்றை, நாம் காண்கையில் நாடகத்தின் அவலச்சுவையை மாத்திரம் நாம் அனுபவிப்பதில்லை; நமது உள்ளத்தில் பற்பல பிரச்னைகள் எழுகின்றன. சிக்கல்கள் நிறைந்த நம் வாழ்க்கையை, நாடகக்கண் கொண்டு பார்த்து, வாழ்க்கையின் குறிக்கோள், மனித இயல்பின் உயர்நிலை முதலிய உண்மைகள்மீது நம் கருத்தைச் செலுத்துகிருேம். எனினும், நாடகத்தைப் பார்த்துச் சுவைக்க வேண்டுமென்று இந் நாடகங்களுக்குச் செல்கிருேமேயன்றி, வாழ்க்கையைத் திருத்திக்கொள்வதற்காக வன்று.

பண்டைத் தமிழர்கள், வாழ்க்கையின் இன்பியலையே ஈற்றில் சொல்லி மக்களை மகிழ்விக்கும் நோக்கங் கொண்டனர் போலும். நாடகக் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில் வஞ்சிக்காண்ட நிகழ்ச்சிகளைப் புகுத்தித் துன்பக் காப்பியத்தை இன்பக் காப்பியமாக்க முயல்கின்ருர் இளங்கோ. எனினும், கண்ணகி, கோவலன், மாதவி என்பாரின் துன்பக்கதையே நம் மனத்தில் நின்று உறுத்துகிறது.

துன்ப நாடகத்திற்குத் தொடர்ச்சியானதொரு கதை பெரிதும் உதவுகிறது. மக்கள் கவனத்தை நாடகம் முடியும்வரை ஈர்ப்பதற்கு அத்தகைய கதை பயன்படுகிறது. இன்ப நாடகத்திலோ தொடர்ச்சியானதொரு கதையில்லாவிடினும், நகைச் சுவைதரும் பல வழிவகைகளைக் கை

யாண்டு, எழுத்தாளன் மக்களை மகிழ்விக்கிருன். நகைச்சுவை நாடகத்தில் எத்தனையோ வகையுண்டு. தற்காலத்தில் சமூக நாடகங்களில் பெரும்பாலன இப்பகுதியைச் சார்ந்தன.

நடிகரின் சமத்காரமான வார்த்தைகள், செயல்கள், உலகியலைப் பற்றிய குறிப்புக்கள் இவைகள் மூலமாய் வரும் நகைச்சுவை ஒருபுறம்; மக்களிடத்துக் காணப்படும் அறிவீனம், மூடப் பழக்க வழக்கங்கள், நகைக்குரிய சொற்ருெடர்கள் இவைகளைக் காட்டி நடிகர் அளிக்கும் நகைச்சுவை மற்ருெருபுறம்; மக்கள் வாழ்க்கையில் மறைந்து கிடக்கும் இயல்புகளை நாடக அரங்கில் வெட்டவெளியாக்குவதால் வரும் நகைச்சுவை ஒருவகை; மக்கள் வாழ்க்கையில் இயல்பாய் நடைபெறும் வேடிக்கையான சம்பவங்களை உள்ளவாறே விரித்துக் காட்டிச் சிரிக்க வைக்கும் நகைச்சுவை மற்ருெரு முறை; ஒரு கூட்டத்தாரின் உணவு, உடை, பேச்சு, பழக்க வழக்கங்கள் இவற்றைப் பகடி பண்ணிச் சிரிக்க வைப்பது ஒருவகை; எளிய நகைச்சுவைபோல் முதலில் காட்டி மக்கள் சமுதாயத்துக்குக் குத்துக் கொடுப்பது மற்ருெரு வகை; கோமாளியால் வரும் நகை, நடிகரின் உடல் சேஷ்டையால் வரும் நகை, மக்கள் வாழ்க்கையில் காணும் முரண்பாடுகளைக் காட்டுவதால் வரும் நகை, இவ்வாறு எண்ணில. மக்கள் வாழ்க்கையில் தற்காலத்தில் நகைச்சுவை நாடகங்களுக்கு மிகுதியான சலுகையுண்டு. நகைச்சுவை நாடகங்கள், சமூக ஊழல்களையும், பழக்க வழக்கங்களையும் எடுத்துக் காட்டிச் சமூகச் சீர்திருத்தத்திற்குப் பயனளிக்கின்றன!

ஆகவே நாடகக்கலை, சமுதாயத்தைச் சீர்திருத்தப் பயன்படுமெனினும், மக்கட் கூட்டத்திற்கு மகிழ்ச்சி யூட்டுவதே அதன் உண்மைக் குறிக்கோளாகும்.

வாசித்து இன்புறுதற்கு இலக்கியச் சுவையுடையதாயும் கூடியிருப்பவர் சுவைக்குமாறு நடிக்க ஏற்றதாயுமுள்ள நாடகம் இயற்றுதல் ஓர் அரும்பெரும் எழுத்தாளனுக்கே இயலும். மேல்நாட்டு ஆசிரியர்களுள்—ஆங்கில எழுத்தாளருள் ஷேக்ஸ்பியரும், பிரெஞ்சு எழுத்தாளருள் மோலியருமே முற்காலத்தில் இத்தகைய நாடகங்கள் எழுதியதாகவும், பெர்னுட்ஷா என்பவர் சமீபகாலத்தில் இவ்வகை நாடகங்கள் எழுதியதாகவும் கூறப்படுகிறது.

பண்டைய காலத்திலேயே, இந்திய நாட்டில், காளிதாசன், பவபூதி, பாசர் முதலிய சிறந்த வடமொழி நாடக எழுத்தாளர்கள் தோன்றிச் சாகுந்தலம் போன்ற அழியா நாடகங்கள் எழுதிவைத்துப் போயினரெனினும், தமிழ் நாட்டின் நாடக வளர்ச்சிக்கு இந் நாடகங்கள் ஏனே உதவி புரியவில்லை. இலக்கணம், கவிதை போன்ற துறைகளில் தமிழ்மொழி சிறந்த நூல்களைத் தோற்றுவித்ததுபோல், நாடகத் துறையில் தோற்றுவிக்கவில்லை. படிப்பதற்கும் நடிப்பதற்கும் ஏற்ற நாடகங்கள் பல தமிழ் நாட்டில் இன்றும் வரவில்லையெனினும் தமிழ் நாடகக் கலைக்குப் புத்துயிரளித்தவர்களாக, சுந்தரம் பிள்ளையவர்களையும், சம்பந்த முதலியாரையும் எடுத்துக் கூற வேண்டும். சுந்தரம் பிள்ளையவர்கள் நடிப்பதற்கென்றெழுதாது, படித்துச் சுவைத்தற்கென்றெழுதிய 'மனேன்மணீயம்' என்னும் நாடகம், யாவர் பாராட்டுக்கு முரியது. ஆங்கிலப் புலவர் ஷேக்ஸ்பியர் இயற்றிய நாடகங்களில் பயின்று, அந் நாடகங்களை மேல்வரிச் சட்டமாய் வைத்து எளிய செய்யுள் நடையில் எழுதப்பெற்ற இந் நாடகம், தமிழுலகில் புதியதொரு முறையைத் துவக்கிவைத்தது என்னலாம். நாடகங்கள் நடிப்பதற்கும் மக்களை மகிழ்விப்பதற்குமே யென்ற கருத்தைத் தமிழுலகுக்குக் காட்டியவர் சம்பந்த முதலியார். இவர் ஆங்கில நாடக முறையை ஒட்டி, மக்கள் பேசும் எளிய வசன நடையில் நாடகங்கள் எழுதித் தமிழ் நாடகக் கலைக்குப் புத்துயிரளித்தார். செய்யுட்களைக் கலந்தெழுதாமல், எளிய நடையில் நடிப்பதற்கு ஏற்றவாறு நாடகங்கள் எழுதுதல் ஒரு தனிக்கலை என்பது இவர் நாடகங்களிலிருந்து தெற்றெனப் புலப்படும்.

---

*இக்கட்டுரையில் ஏ. நிக்கல் என்பார் எழுதிய 'நாடகக் கலையின் கோட்பாடுகள்' என்னும் நூலிலிருந்து சில கருத்துக்கள் கூறியிருக்கிறேன்.*

# ஆடற்கலை

[திரு. க. வெள்ளைவாரணன்]

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருநாகேச்சுரத்தில் 14-1-1917 இல் இவர் தோன்றினார். தந்தையார் பெயர் மெ. கந்தசாமி முதலியார். திருப்பெருந்துறை திருவாசகப் பாடசாலை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஆகியவற்றில் பயின்று 1935 ஆம் ஆண்டு வித்துவான் தேர்வில் முதல்வராகத்தேறினார். 'யாழ்நூல்' ஆசிரியர் விபுலாநந்த அடிகளாரின் அருமந்த மாணவர். கரந்தைப் புலவர் கல்லூரியில் 1938-43 இல் தமிழ் விரிவுரையாளராகப்பணியாற்றியுள்ளார்.



1943 இலிருந்து அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறை விரிவுரையாளராகச்சிறப்புப் பணி புரிந்து வருகின்றார். 'சங்ககாலத் தமிழ் மக்கள்', 'குறிஞ்சிப் பாட்டாராய்ச்சி', 'தமிழ் இலக்கிய வரலாறு-தொல்காப்பியம்-ஆய்வு நூல்' ஆகிய நூல்களினாசிரியர். 'பரத சங்கிரகம்', 'அரபத்த நாவலர் பரதம்', 'தேவாரத் திருமுறைத் தொகுப்பு' ஆகியவற்றின் பதிப்பாசிரியர். 'சித்தாந்தச் செம்மல்' 'திருமுறைத் தமிழ்மணி' ஆகிய பட்டங்கள் பெற்றவர்.

உள்ளத்திற்கு உவகையளிக்கும் கவின் கலைகளுள் ஆடற்கலையாகிய கூத்தும் ஒன்றாகும். தமிழ் முனிவராகிய அகத்தியர், இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழுக்கும் உரிய இலக்கணமாக அகத்தியம் என்ற இலக்கண நூலை இயற்றியுதவினார் என்பது வரலாறு. இயற்றமிழிலக்கணமாகிய தொல்காப்பியத்திலும், பத்துப் பாட்டும் எட்டுத் தொகையுமாகிய சங்க இலக்கியத்திலும், சிலப்பதிகாரம் மணிமேகலை பெருங்கதை சீவகசிந்தாமணியாகிய செந்தமிழ்க்காப்பியங்களிலும் இசைக்கும் நாடகத்திற்கும் உரிய குறிப்புக்கள் பல ஆங்காங்கே காணப்படுகின்றன. அவற்றைக் கூர்ந்து நோக்குங்கால் இசை நாடகமாகிய இக்கலைத்துறைகளை எழில் பெற வளர்த்த கலைஞர்கள் கூத்தர், பாணர், பொருநர், விறலியென்னும் இந்நால்வகையோராவர் என்பது நன்கு புலனாம்.

இவர்களுள், கூத்தர் என்பார் எண்வகைச் சுவையும் மனத்தின்கண் பொருந்திய குறிப்புக்களும் புறத்துப்போந்து புலப்படும்படி ஆடவல்லவராவர். இவர்களையொத்து விறல்பட ஆடுவாள் விறலியென அழைக்கப் பெற்றாள். 'பொருந்' என்பது ஒத்து நடித்தல் என்ற பொருளில் வழங்கும் சொல்லாகும். ஒருவரைப்போன்று கோலம்புனைந்து நடிக்கவல்ல நாடக மாந்தர்கள் பொருநர் என அழைக்கப் பெற்றனர். நோக்கினார் கண்ணிடத்தே தமது ஆடற்பொலிவு என்றும் நிலை பெற்றுத் தோன்றும்படி நடித்துக்காட்டுதல் கூத்தர் பொருநர் ஆகிய இக்கலைஞர்களது இயல்பாகும். இவ்வியல்பு நோக்கி இவர்களைக் 'கண்ணுளர்' எனவும் 'கண்ணுளாளர்' எனவும் பண்டைத் தமிழ்ச் சான்றோர் பெயரிட்டு அழைத்துள்ளார்கள்.

இவர்களால் மேற்கொள்ளப்பெற்ற ஆடற்கலையானது, அகக்கூத்து, புறக்கூத்து, பதினோராடல்கள் எனப் பல்வேறு பகுதிகளாக வளர்க்கப்பெற்றது. ஏதாவதொரு கதையினைத் தழுவி நடிக்கப்பெறும் கூத்தினை நாடகம் என்றும், கதை தழுவாது பாட்டினது பொருளுக்கேற்பக் கைகாட்டி வல்லபஞ் செய்யும் சுவையும் மெய்ப்பாடும் பொருந்திய அவிநயக் கூத்தினை நாட்டியம் எனல் மரபு.

நாட்டியமாவது, ஆடல் பாடல் அழகு என்னும் மூவகை நலங்களையும் ஒருங்கு பெற்ற நாடகமகளிரால் தமது உள்ளக் குறிப்பு உடம்பில் தோன்றும் மெய்ப்பாடுகளால் புலப்படும்படி சுவைபெற நடிக்கப் பெறுவதாகும். இதன் இலக்கணத்தினை விரித்துரைப்பது நாட்டிய நூல். ஆடல்

பாடல் அழகு என்னும் இம்மூன்று திறத்தாலும் குறைவின்றி நிரம்பிய நாடகக் கணிகையாகிய மாதவி என்பாள், ஐந்தாம் ஆண்டு தொடங்கிப் பன்னிரண்டாம் ஆண்டு வரை ஏழாண்டுகள் ஆடலாசிரியன்பால் நாட்டிய நூலை நன்குபயின்று சோழமன்னன் பேரவையிலே திறம்பெற ஆடினாள் என்ற செய்தி சிலப்பதிகார அரங்கேற்று காதையாற் புலனாம்.

முத்தமிழுள் ஒன்றாகிய நாடகத்தின் இலக்கணத்தினை விளக்குதல் வேண்டிப் பரதமுனிவர் இயற்றிய நாடகத்தமிழ் நூல் பரதம் என்ற பெயரால் வழங்கப்பெற்றதென்பது, 'நாடகத்தமிழ் நூலாகிய பரதம்' என அடியார்க்கு நல்லார் கூறுதலாற் புலனாம். பரதராற் செய்யப்பட்டது என்ற பொருளில் வழங்கிய பரதம் என்ற நூற்பெயரானது, அந்நூலிற் சொல்லப்பட்ட சிறப்புடைய நாட்டியமாகிய கலைத்திறத்தைக் குறிக்கும் பெயராகவும் பிற்காலத்தில் வழங்கப்பெறுவதாயிற்று.

தமிழ் நாட்டில் தொன்று தொட்டுப் பயிலப் பெற்றுவரும் ஆடற்கலையாகிய இதன் இயல்பும், இதனைப் பயின்று ஆடவல்ல கூத்தியராகிய நாடகமகளிரின் இயல்பும், இம்மகளிர்க்கு நாட்டியக் கலையைக் கற்பிக்கவல்ல ஆடலாசிரியனது இலக்கணமும், நாடகத்திற்கும் இசைக்கும் உரிய இசைப் பாடல்களை இயற்றித்தரும் கவிஞனது இயல்பும், இசையினை அளவு பெற நிறுத்தவல்ல தண்ணுமையாசிரியன் வேய்ங்குழலூதுவோன் யாழாசிரியன் முதலியோர் இயல்புகளும், நாடக அரங்கின் அமைப்பும், அவ்வரங்கிலே புகுந்து ஆடுகின்ற முறையும் பிறநுட்பங்களும் சிலப்பதிகார அரங்கேற்றுகாதையிலே தெளிவாக விளக்கப் பெற்றுள்ளன. இக்குறிப்புக்களை யெல்லாம் ஒப்பவைத்து நோக்குங்கால் இளங்கோவடிகள் வாழ்ந்த காலமாகிய கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே நம் தமிழ்நாட்டில் ஆடற்கலையானது காண்போர் கண்ணையுங் கருத்தையுங் கவரும் பொலிவும் நுட்பமும் உடையதாய்ச் சிறந்த முறையில் வளர்ச்சி பெற்றிருந்த தென்பதும், இக்கலையின் நுட்பத்தைக் கற்பிக்கவல்ல ஆடலாசிரியர் பலர் வாழ்ந்தார்களென்பதும் விளங்கும்.

சிலப்பதிகார அரங்கேற்றுகாதையில் ஆடலாசிரியனது இலக்கணம் வருமாறுணர்த்தப்பட்டமை காண்க.

'இருவகைக் கூத்தின் இலக்கண மறிந்து
பலவகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்
பதினொ ராடலும் பாட்டும் கொட்டும்'

ஆகியவற்றின் நுட்பங்களை விளங்க அறிந்திருத்தல் வேண்டுமென விதித்துள்ளார். இருவகைக் கூத்தாவன :—வசைக்கூத்து, புகழ்க்கூத்து ; வேத்தியல், பொதுவியல் ; வரிக்கூத்து, வரிச்சாந்திக் கூத்து ; சாந்திக் கூத்து, விநோதக்கூத்து ; ஆரியம், தமிழ் ; இயல்புக்கூத்து, தேசிக்கூத்து என இவ்வாறு இரண்டிரண்டு பகுதிகளாக வகைப்படுத்துரைக்கத் தக்க கூத்து விகற்பங்கள் எனவும், ஈண்டு இருவகைக்கூத்தெனக் குறிக்கப்பட்டவை சாந்திக்கூத்தும் விநோதக்கூத்தும் ஆகிய இரண்டுமேயெனவும் அடியார்க்கு நல்லார் குறிப்பிடுவர். எனினும் இளங்கோவடிகளால் 'இருவகைக்கூத்து' எனக் குறிக்கப்பட்டவை வேத்தியல், பொதுவியல் என்னும் இரண்டுமேயாம் என்பது,

"வேத்தியல் பொதுவியல் என்றிரு திறத்தின்
நாட்டிய நன்னூல் நன்குகடைப் பிடித்து"
(அரங்கேற்—௩௬, ௪0)

எனவரும் சிலப்பதிகாரத் தொடராலும்,

"வேத்தியல் பொதுவியல் என்றிரு திறத்துக்
கூத்தும் பாட்டும் தூக்கும் துணிவும்"
(ஊரலர்—௧௮, ௧௬)

எனவரும் மணிமேகலையடிகளாலும் நன்கு துணியப்படும். சான்றோர் குழுமிய மன்னனது பேரவையிலே நடித்தற்கேற்ற நுட்பமும் சிறப்பும் வாய்ந்த கூத்து வேத்தியல் எனப்படும். கற்றோர் கல்லாதார் ஆகிய பொதுமக்கள் அனைவரும் கண்டு களித்தற்கேற்ற எளிமை நிலையில் நிகழுங்கூத்து பொதுவியல் எனப்படும். வேத்தியலை அகக் கூத்தென்ப. பொதுவியலைப் புறக் கூத்தென்ப.

இனி, சாந்திக் கூத்தாவது தலைவன் சாந்தமாக ஆடிய கூத்தெனவும், அது சொக்கம், மெய்க்கூத்து, அவிநயம், நாடகம் என நால்வகைப்படுமெனவும் கூறுவர். இவற்றுள், சொக்கம் என்பது

சுத்த நிருத்தம். அது நூற்றெட்டுக் கரண முடைய தென்பர். உடம்பாகிய மெய்யின் தொழில் நலம் விளங்க நடிக்கப்பெறுங் கூத்து மெய்த்தொழிற் கூத்தாகும். அது தேசி, வடுகு, சிங்களம் என மூவகைப் படும். இவை மனத்தகத்தே தோன்றும் இராசதம் தாமதம் சாத்துவிகம் என்னும் அகச்சுவை பற்றித் தோன்றுவனவாத லால் அகமார்க்கம் எனக் கூறப்படும். அவிநயக் கூத்தாவது கதை தழுவாது பாட்டினது பொருளுக்குக் கைகாட்டி வல்லபஞ் செய்வது என்பதும், நாடக மாவது கதை தழுவிவரும் கூத்தென்பதும் முன்னர்க் கூறப்பட்டன. இவ்வாறு நால்வகைப்படப் பகுத்துரைக்கப்பட்ட இக்கூத்துக்கள் யாவும் உலகமக்கள் தீமை நீங்கி நன்மை பெற்றுயர்க என நிகழ்த்தப் படுவனவாதலின் சாந்திக் கூத்து எனப் பெயர் பெறுவனவாயின.

இனி, விநோதக்கூத்தாவன குரவைக் கூத்து, கழாய்க் கூத்து, குடக் கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவைக்கூத்து முதலியனவாம். இவை மக்கள் உள்ளத் திற்கு மகிழ்ச்சிதரும் பொழுதுபோக்காத லின் விநோதமெனப்பட்டன. இவற்றுள், குரவை யென்பது காமமும் வீரமும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக மகளிர் எழுவர் அல்லது எண்மர் ஒன்பதின்மர் கைகோத்து ஆடும் கூத் தாகும். கலிநடமாகிய கழாய்க் கூத் தென்பது, மூங்கிலைக் காலாக நிறுத்தி அதன்மேற் கட்டிய கயிற்றின்மேல் ஏறி யாடும் இயல்பினதாகும். குடக்கூத்தென் பது தெய்வத்திறம்பற்றிய பதினோராடல் களுள் ஒன்ருகும். கரணம் என்பது நிலத் தின்மேற் படிந்தாடும் ஆடலாகும். நோக்கு என்பது பாரமும் (பெரியனவும்) நுண்மையும் (நுண்ணியனவும்) மாயமும் (காண்போர் கண்களை மறைக்கும் தந்திரச் செயல்களும்) அமையச் செய்யப்படும் இயல்பினதாகும். தோற்பாவை யென்பது, தோலாற் பாவை செய்து ஆட்டுவிப்பது. இவற்றுடன் நகைச்சுவைபற்றிய விதூட கக் கூத்தும் சேர்த்து விநோதக்கூத்து எழுவகைப்படும் என்பாரும் உளர்.

இனி, பல்வகைக் கூத்தாவன வென்றிக் கூத்து, வசைக்கூத்து, விநோதக் கூத்து என இவ்வாறு பகுத்துரைக்கப்படும் கூத்துக்களாகும். பகைவனது ஒடுக்கமும் தம்முடைய வேந்தனது உயர்ச்சியும் மேற் படும் நிலையில் அமைந்த கூத்து வென்றிக் கூத்தெனப்படும். பலவகையுருவங்களையும் பழித்துக்காட்டுங் கருத்துடன் நிகழ்வது வசைக்கூத்தெனப்படும். பெருவேந்தரும் குறுநில மன்னரும் முதலாயினோர் பகை வரை வென்று கொற்றத்துடன் வீற்றிருக் கும் பெருமித நிலையில் அன்னோர் பொழுது போக்காகக் கண்டு மகிழ்தற்குரிய முறையில் நிகழ்த்தப்பெறுங்கூத்து விநோதக்கூத்தின் பாற் படுவதாகும்.

இனி, தெய்வத்திறம் வாய்ந்த கூத்துக் களாக நம் நாட்டில் நெடுங்காலமாகப் போற்றப் பெறும் சிறப்புடைய ஆடல்கள் பதினொன்ரும். அவையாவன: அல்லியம், கொடுகொட்டி, குடைக்கூத்து, குடக் கூத்து, பாண்டரங்கம், மல்லாடல், துடி யாடல், கடையம், பேடு, மரக்காலாடல், பாவையாடல் என்பனவாம். இவற்றுள் முன்னுள்ள ஆறும் நின்ற நிலையில் நிகழ்த் தப்படும் கூத்துக்கள். பின்னுள்ள ஐந்தும் நிலத்திற்படிந்து வீழ்ந்து ஆடுமியல்பின வாகிய கூத்துக்களாகும். இவை பதினொன் றையும் 'பதினோராடல்' என்ற பெயராற் குறிப்பிடுதல் மரபு. உலகிற்கு இடர் விளைத்த அசுரர்களாகிய கொடியோர்களைக் கொல்லுதற்பொருட்டு அமரர்களால் நிகழ்த்தப் பெற்றவை இப்பதினோராடல் களாகும். இவற்றைத் 'தெய்வவிருத்தி' என்ற பெயராற் குறிப்பிடுதலும் உண்டு.

இந்திர விழாவைக் காணவிரும்பித் தன் மனைவியுடன் காவிரிப் பூம்பட்டி னத்தை யடைந்த விஞ்சை வீரனொருவன், அந்நகரத்து ஆடல்மகளாகிய மாதவி யென்பாள் சிவபெருமான் முதலிய தெய் வங்களால் நிகழ்த்தப்பெற்ற கொடுகொட்டி முதலிய பதினோராடல்களையும் அவ்வத் தெய்வங்களுக்குரிய அணிவகையாகிய கோலத்துடனும் கொள்கையுடனும் மேற் கொண்டு ஆடியதிறத்தைத் தன் மனைவிக் குக் காட்டி மகிழ்ந்தான் என்ற செய்தி சிலப்பதிகாரம் கடலாடுகாதையிற் கூறப் பட்டது. இக்காதையில் தெய்வவிருத்தி யாகிய பதினோராடல்களின் சிறப்பு இளங்கோவடிகளால் விளக்கப்பட்டது.

## 1. கொடுகொட்டி

எல்லாம் வல்ல இறைவனாகிய சிவ பெருமான், தேவர்களது வேண்டுகோட் கிரங்கிக் கொடியோர்களாகிய அவுணர்கள் வாழும் முப்புரங்களும் வெந்தழிய எரிமுகப் பேரம்பினை ஏந்திய அளவிலே, திரிபுரத் தவுணர்கள் எரிந்து சாம்பராய் விழ அங்ஙனம் விழுந்த வெண்பலிக்குவையாகிய பாரதியரங்கத்திலே (சுடுகாட்டிலே) உமா தேவியார் தன் திருமேனியின் ஒரு கூற்றினராய் நின்று பாணி தூக்கு சீர் என்னும் தாளங்களைச் செலுத்தி நிற்க வெற்றி மகிழ்ச்சியாற் கைகொட்டி நின்று ஆடிய கூத்து கொடுகொட்டி எனப்படும். அருளாளனாகிய இறைவன் தன் திருமுன்னர் முப்புரங்களும் தீப்பற்றி வெந்தழியக் கண்டும் சிறிதும் இரங்காது தனது மறக் கருணை தோன்றக் கைகொட்டி நின்று ஆடிய கொடுமையுடைத்தாதல் நோக்கி இக்கூத்திற்குக் கொடுகொட்டி யெனப் பெயர்தந்தனர் முன்னோர். கொடுங் கொட்டி எனற்பாலது கொடுகொட்டியென வந்தது விகாரம். கொடுகொட்டியாகிய இக்கூத்தினைப் பறையூர்க் கூத்தச் சாக்கையன் என்பான், சேரன் செங்குட்டுவன் முன் திறம்பட ஆடிக் காட்டிய செய்தியை இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் நடுகற் காதையில் விளக்கியுள்ளார்.

## 2. பாண்டரங்கம்

வானோராகிய தேரில் நான்மறைகளாகிய குதிரைகளைப் பூட்டித் தேர்முன் நின்ற திசைமுகனாகிய பிரமன் காணும்படி பாரதி வடிவாகிய (உமையுருவாகிய) சிவ பெருமான் வெண்ணீற்றையணிந்தாடிய கூத்து பாண்டரங்கம் எனப்படும். பாண்டரம்—வெண்மை. வெண்மை வாய்ந்த திருநீற்றையணிந்து ஆடுதலால் பாண்டரங்கம் என்னும் பெயர்த்தாயிற்று.

## 3. அல்லியம்

அஞ்சன வண்ணனாகிய கண்ணன், தன்மாமனாகிய கஞ்சனது வஞ்சனையால் வந்த யானையின் கொம்பினை ஒடித்தற்கு நின்றாடிய ஆடல் அல்லியம் எனப்படும். 'அல்லியம் என்பதனை அலிப்பேடு என்பாருமுளர்' என அடியார்க்கு நல்லார் குறிப்பிடுதலால் இக்கூத்து அலியாந் தன்மையில் நின்றாடியது எனலாம்.

## 4. மல்லாடல்

மாயோனாகிய திருமால், வாணன் என்னும் அசுரனை வெல்லுதற் பொருட்டு மல்லனாய்ச் சென்று அவனை அறைகூவி யழைத்து அவனது உடம்பினை இறுகப் பிடித்து உயிர்போக நெரித்துத் தொலைத்த நிலையில் ஆடிய கூத்து, மல்லாடல் என்ப.

## 5. துடியாடல்

கடல் நடுவே வேற்றுருவாய் மறைந்து நின்ற சூரனது வஞ்சனையறிந்து அவனைப் போரிற் கொன்ற முருகப்பெருமான், அக்கடலின்கண் எழும் திரையே அரங்கமாக அமைய நின்று துடிகொட்டியாடிய கூத்து துடியாடல் எனப்படும்.

## 6 குடைக்கூத்து

முருகனொடு பொருதற்கு வந்த அவுணர்கள், அப்பெருமான் முன் பொருதலாற்றாது தாம் போர் செய்தற்கு எடுத்த படைக்கலங்களைக் கீழே யெறிந்து விட்டு வருத்தமுற்றபொழுது, அப் பெருமான், அன்னோர்க்கு நல்லுணர்வுண்டாம் வண்ணம் தனது குடையை முன்னே சாய்த்து அக்குடையினையே ஒருமுக எழினியாகிய திரையாகக் கொண்டு ஆடிய கூத்து குடைக் கூத்தெனப்படும்.

## 7. குடக்கூத்து

வாணாசுரன், தன் மகள் உஷைகாரணமாகக் காமன் மகன் அநிருத்தன் என்பானைச் சிறைப்படுத்தினனாக, நீலமேனி நெடியோனாகிய திருமால், வாணனை யழித்தல் வேண்டி அவனுடைய சோ என்னும் நகர வீதியிற் சென்று குடங் கொண்டு ஆடிய கூத்து குடக்கூத்தெனப் படும். இது பஞ்சலோகங்களாலும் மண்ணாலும் இயன்ற குடத்தினைக் கொண்டு ஆடப்பெறுவதால் வந்த பெயர்.

## 8. பேடாடல்

காமன் தன்மகன் அநிருத்தனைச் சிறை மீட்ட நிலையில் ஆண்மைத் தன்மையில் திரிந்த பெண்மைக் கோலத்தோடு சோ நகரத்தில் ஆடிய ஆடல் பேடு எனப்படும்.

## 9. மரக்காலாடல்

வெற்றிவேற் றடக்கைக் கொற்றவையாகிய துர்க்கை, சினமிக்க அவுணர் வஞ்சனையாற் செய்த கொடுந்தொழிலைப் பொருளாய் ஆடிய ஆடல் மரக்காலாடல் எனப்படும். அவுணர்கள் உண்மைப் போரால் வெல்லமாட்டாது வஞ்சனையால் வெல்லக் கருதித் தன்மேல் பாம்பு தேள் முதலியனவாகப் புகுதலை யுணர்ந்த கொற்றவை, அவற்றை உழக்கிக் களைதற் பொருட்டு மரத்தைக் காலாகக் கட்டிக் கொண்டு கையில் வாளேந்தி யாடுதலின் இது மரக்காலாடலாயிற்று என்பர்.

## 10. பாவையாடல்

கொடும்போர் செய்தற்கு முற்பட்ட அவுணர்கள் போர்க்கோலத்தோடு மோகித்து வீழும்படி திருமகள், கொல்லிப் பாவை வடிவாய் ஆடியது பாவை ஆடல்.

## 11. கடையம்

வாணாசுரனுடைய சோ நகரத்தின் வடக்கு வாயிலின்கண் உளதாகிய வயலிடத்தே நின்று அயிராணி (இந்திரன் மனைவி) ஆடியது கடையம் என்னும் கூத்தாகும். இது கடைசியராகிய உழத்தியர் கோலத்தில் ஆடிய கூத்தாதலின் கடையம் என்னும் பெயர்த்தாயிற்று.

தேவர் அசுரர் முதலிய எல்லாவுயிர்களும் ஏனைப் பொருள்களும் தத்தம் நிலை குலைந்து அழிதற்குரிய ஊழிக்காலத்திலே முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் உலகிலுள்ள பல வடிவுகளையும் மீண்டு தன்னிடத்தே ஒடுக்கிக்கொண்டு கொடுகொட்டி, காபாலம், பாண்டரங்கம் ஆகிய கூத்துக்களை ஆடியருள்வாரெனவும், அக்கூத்துக்களுக்கேற்ப அவருடன் பிரிப்பின்றி விளங்கும் உமையம்மையார், பாணி, தூக்கு, சீர் என்னும் தாளவகைகளைத் தருவார் எனவும் கலித்தொகையிலுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல் கூறும். இதன்கண் பதினோராடலிற் சொல்லப்படாத காபாலம் என்றதொரு கூத்துக் கூறப்பட்டுள்ளது. இறைவன், அயன் தலையாகிய கபாலத்தைக் கையிலேந்தியாடுதலால் இது காபாலம் என்னும் பெயர்த்தாயிற்று. இவ்வாறே தெய்வத்திறம் பற்றிய ஆடல்கள் பல முற்காலத்தில் நம் நாட்டில் வழங்கி யிருத்தல் வேண்டும். அவற்றுட் சிறப்புடையனவே பதினோராடல் எனத் தொகுத்துரைக்கப்பட்டன.

"தாண்டவம் நிருத்தம் நாட்டியம் என்னும் மூன்று கூறுபாட்டினும் நாட்டியம் என்றது புறநடத்தை" என அரும்பதவுரையாசிரியர் கூறியதனைக் கூர்ந்து சிந்திக்குமிடத்து, அவரால் முதற்கண் குறிப்பிடப்பட்ட தாண்டவம் என்பது அகமார்க்கப் பொருள்பற்றி வருமென்பதும், நிருத்தம் என்பது அகச்சுவை முதலியன கலவாத சுத்த நிருத்தம் என்பதும் நன்கு புலனும். இராசதம் தாமதம் சாத்துவிகம் என்னும் குணத்தின்வழித் தோன்றும் அகத்துணர்வு அகமார்க்கப் பொருளாகும். இறைவன் ஆடிய திருக்கூத்துக்கள் இவ்வாறு தோன்றியனவாதலால் தாண்டவம் எனும் பெயர் பெற்றன.

அவரவர் பிறந்த நிலத்தன்மையும் பிறப்பிற்கேற்ற தொழிற்றன்மையும் விளங்க நடிக்கப் பெறுவது வரியென்னும் கூத்தாகும். இது, கண்கூடுவரி, காண்வரி, உள் வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக் கோள்வரி என எண் வகைப்படும். இவை நாடகமகளிராலன்றி ஏனையோரால் நடித்தற்கரியன. இவை சிலப்பதிகாரம் வேனிற் காதையாலும் அதனுரையாலும் நன்குவிளங்கும்.

குறள், மறம், சித்து, சோனகம், பார்ப்பான், சடாதாரி, பறை முதலிய பல கோலங்களை மேற்கொண்டு அவ்வக் கோலத்திற்குப் பொருத்தமான வசனத்துடன் மகளிரால் ஆடப்படும் கூத்துக்கள் 'கோலம்' என்னும் வகையைச் சார்ந்தன என்பர் பரதசங்கிரக நூலாசிரியர்.

"விழவிற்
*கோடியர் நீர்மை போல முறைமுறை*
*ஆடுநர் கழியும் இவ்வுலகத்து*
*நகைப்புறனாக நின் சுற்றம்*
*இசைப்புறனாக நீ ஓம்பிய பொருளே*"

எனவரும் புறப்பாடல், நாடக அரங்கிற் பலவேறு கோலந்தாங்கி நடித்து மறையும் நடிப்புத்திறனை நன்கு விளக்குதல் காண்க.

# ஒற்றுமைப்படுதல்

[டாக்டர், வி. ஐ. சுப்பிரமணியம்]

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள வடசேரியில் 1928-ல் இவர் தோன்றினர். அண்ணமலைப் பல்கலைக்கழகத்தில் பயின்று தேர்ந்து எம்.ஏ. பட்டம் பெற்றர். 1948 இல் திருநெல்வேலி ம.தி.தா. இந்துக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினர். 1953 இல் திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பதவியேற்றர். 1955 இல் 'ராக்பெல்லர்' நிலையத்தாரின் உதவிச் சம்பளம் பெற்று, அமெரிக்கா சென்று, அங்குள்ள இந்தியான



பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றர். அமெரிக்க நாட்டு மொழியியல் சங்கத்தில் தமிழ்மொழி பற்றி இவர் எழுதிப் படித்த இரண்டு ஆராய்ச்சிக்கட்டுரைகள் அறிஞர் பலரின் பாராட்டுதலைப் பெற்றன. இதுபோழ்து கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராகத் தொண்டாற்றி வருகின்றர். சங்க இலக்கியம் முழுமைக்கும் சொல்லடைவும் இலக்கணமும் அமைக்கும் பெரும் பணியில் இவர் ஈடுபட்டுள்ளமை பாராட்டற்குரியது.

வினையியலில் குறிப்புவினையை விளக்கும்போது தெய்வச் சிலையார் மிக அரிய இலக்கணக் கொள்கை யொன்றைக் குறிப்பிட்டிருக்கிறர். மேனட்டில், குறிப்பாக, ஐக்கிய அமெரிக்காவில் இப்போது இந்தக் கொள்கை தொடர்நிலை (syntax) ஆராய்ச்சியாளரிடையே செல்வாக்குப் பெற்று வருகிறது.

குறிப்புவினை யென்பது காலத்தையும் பொருளையும் குறிப்பாகக் காட்டுவது என்று கூறி அதனை விளக்கச் 'சாத்தன் குழையை உடையன்' என்ற வாக்கியத்தை முதலில் குறித்து, குழையாகிய பொருளும், உருபும் உடைமை என்னும் சொல்லும் ஒற்றுமைப் பட்டு, சாத்தன் குழையன் என ஒரு சொல்லாகி நிற்கிறது என்கிறர். (பக். ௩௩௩, R. வேங்கடாசலம் பிள்ளை பதிப்பு).

கணக்கு வகுப்பில் சிறுவன் ஒவ்வொரு வழியையும் தெளிவாக எழுதி விடை காணுவதுபோல் தெய்வச் சிலையார் குறிப்பிட்டுள்ள ஒன்றிப்பு முறையைத் தனித் தனி விதியாக மாற்றி எழுதினல் அது இவ்வாறு நிற்கும்:—

(1) உருபு கெடுதல்.

(2) குறிப்பு வினையடியாகிய உடைமை கெடுதல்.

மேற்குறித்த இருவிதிகளும் செயற்படும்போது இவ்வாறு நிற்கும்:—

சாத்தன் குழையை உடையன் (வாக்கியம்)

சாத்தன் குழை உடையன் (1)

சாத்தன் குழையன் (2) (சந்தியால்) உடம்படுமெய் பெற்றது.

தெய்வச் சிலையார் கூறிய ஒன்றிப்பு முறையால் தொடர் நிலையில் தோன்றும் வேறுபாடுகளைச் சில அடிப்படையான வாக்கியங்களிலிருந்து தோற்றுவிக்கலாம் என்பதும், அவ்வாறு செய்யும்போது மாற்றங்கள் ஒவ்வொன்றையும் வேறு பிரித்து விதிகளாகக் கொள்ள முடியும் என்பதும் ஊகிக்க இயலும்.

மேனட்டு அறிஞர்கள் தொடர்நிலையாராய்ச்சியில் இதையொத்த முறையைப் பின்பற்றி வருகிறர்கள். அவர்களை இடமாற்று இலக்கண ஆசிரியர்கள் (Transformation Analysts) என்று அழைப்பர்.

அவர்களுள்ளே ஆரிஸ் (Z. S. Harris) என்பாரையும் அவருடைய மாணக்கர்

நோவம் சம்ஸ்கி (Noam Chomsky) என்பாரையும் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும். இவ்விருவருள் பின்னவரே இந்தப் புது வழியைப் பின்பற்றி இலக்கண அமைப்பு முறையொன்றை வகுத்தளித்திருக்கிருர். (Syntactic Structures—1957).

சம்ஸ்கியினுடைய இலக்கணம் இரண்டு அடிப்படையில் இயங்குகிறது. முதலில், சிக்கலான வாக்கியங்கள் அனைத்தும் அடிப்படையான எளிய வாக்கியங்களில் (Kernal Sentences) இருந்து பிறக்கும். இரண்டாவது, அடிப்படை வாக்கியத்தில் இருந்து சிக்கலான வாக்கியம் தோன்றும்போது பல தோற்ற விதிகளைக் கொண்டு பிறக்கும். இந்தத் தோற்ற விதிகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மாற்றத்தை மட்டும் குறித்து நிற்கவேண்டும். எடுத்துக் காட்டாக ஐ உருபு கெடுதலையும் உடை கெடுதலையும் ஒரே விதியிற் கூருமல் ஒவ்வொன்று கெடும்போதும் தனித்தனி விதிகளால் கூறுவதையே அவர் குறிக்கிருர். இதனுல் விதிகள் மிக எளியவையாக அமையும். விதிகளை அடுக்கி ஒழுங்குபடுத்தும்போது ஒரு குறிப்பிட்ட முறையைப் பின்பற்ற வேண்டும் என்றும் அவர் கூறுகிருர். மேற்குறித்த ஐ உருபு கெடும் விதியை இரண்டாவதாகக் கொண்டு உடை கெடுதலை முதலாவதாக மாற்றினுல் சில இடையூறுகள் ஏற்படும். ஏனெனில் இம்மாற்றத்தால் உடை கெட்ட பின்னர்த்தான் 'ஐ'கெட முடியும். ஆனுல் பல இடங்களில் உடை கெடாமலே 'ஐ' கெடுவது உண்டு. எனவே விதிகளை அடுக்கும்போது பல்வேறிடங்களுக்கும் பயன்பட அமைக்கவேண்டுவதவர் கருத்து.

தெய்வச் சிலையார் குறிப்பிட்ட சாத்தன் குழையை உடையன் என்பது அடிப்படை வாக்கியமாகும். அவர் அடுத்துக் குறிப்பிட்ட உருபு உடைமை முதலியவை மறைதல் தோற்று விதிகளாகும்.

தோற்று விதிகளுள்ளே உருபுகள் அல்லது இடைச் சொற்கள் சேர்வது அல்லது மறைவது ஆகியவையும் தொடர்மொழியில் ஏற்படும் சொற்களின் இடமாற்று விதிகளும் அடங்கும். இடமாற்று விதியென்பது ஒரு தொடர்மொழியில் இருசொற்கள் இருக்கின்றன என்று கொள்வோம். அவற்றுள் முதற்சொல் இரண்டாவது நின்ற நிலையையும் இரண்டாவது, முதற்சொல் நின்ற நிலையையும் பெறுவதாகும். மற்ருெரு வகையில் கூறினுல் 1, 2 என நிற்பது 2, 1 என மாறுவதாகும். இதையும் தெய்வச் சிலையார் குறிப்பு வினைமுற்றிற்கும் வேற்றுமை உருபும் பொருளும் தொக்க தொகைக்கும் வேறுபாடு கூறும்போது மனத்திற்கொண்டிருந்தார் என்று ஊகிக்க இடம் உண்டு. சாத்தன் குழையன் என்ருல் குறிப்பு வினைமுற்று என்றும், குழைச் சாத்தன் என்ருல் வேற்றுமை உருபும் பொருளும் தொக்க தொகை என்றும் அவர் கூறியுள்ளார். இதை முன் கூறியவாறு அடிப்படை வாக்கியத்தாலும் தோற்று விதியாலும் கூறும்போது இவ்வாறு ஆகும்:—

(1) ஐ கெடல்
(2) உடை கெடல்.
(3) அன் கெடல்
(4) $1+2 \rightarrow 2+1$ ஆதல்.

இவை செயற்படும்போது,

சாத்தன் குழையை உடையன் (வாக்கியம்)

| | |
|---|---|
| சாத்தன் குழை உடையன் | (1) |
| சாத்தன் குழை அன் | (2) |
| சாத்தன் குழை | (3) |
| குழைச் சாத்தன் | (4) |

(சந்தியால் சகரம் இரட்டித்தது)

மேற்கூறிய தோற்று முறைகளில் குறிப்புவினைக்கும், வேற்றுமைத் தொகைக்கும் வேற்றுமை உருபும் பொருளும் தொக்க தொகைக்கும் பொதுவான விதிகள் இருப்பதையும் கவனிக்க ஓர் இடத்திற்கென அமைத்த விதி பல இடங்களுக்குப் பயனுவதும் இங்கு நினைவிற்கொள்ள வேண்டும். இந்த முறையால் தொடர்நிலை இலக்கணம் எளிதாக அமைவதற்கு வாய்ப்புண்டு என்பதும் புலனுகும்.

தமிழில் தொடர்நிலை இலக்கணம் மிகவும் சிக்கலானது. பின்னிப் பிணைந்து வாக்கியமுறை அமைந்திருப்பினும் ஒவ்வொரு விரிவும் எளிய வாக்கியங்களில் இருந்து தோன்றியிருக்கின்றன என்ற

உண்மையைத் தெய்வச் சிலையார் காட்டிய ஒன்றிப்பு முறையால் விளக்க இயலும். இதை எடுத்துக்காட்டுகளால் விளக்குதும்.

வினைமுற்று எழுவாய் முதலியவற்றை ஏற்பதுபோன்று வினையெச்சமும் எழுவாய் முதலியவற்றை ஏற்கும். பெயரெச்சமும் வினைத்தொகையடியும் அத்தகையன. அவன் வீட்டில் உண்டான் என்பதில் எழுவாய், ஏழாம் வேற்றுமை பயனிலை ஆகியவை உள்ளன. இவன் வர அவன் உண்டான் என்பதில் எழுவாய், வினையெச்சம், எழுவாய், பயனிலை ஆகியவை இருக்கின்றன. இவன் வந்த இடத்தில் அவன் உண்டான் என்பதில் எழுவாய், பெயரெச்சம், ஏழாம் வேற்றுமை, எழுவாய், பயனிலை ஆகியவை உள்ளன. இவன் தருபொருளை அவன் உண்டான் என்பதில் எழுவாய் வினைத்தொகையடி, இரண்டாம் வேற்றுமை, எழுவாய், பயனிலை ஆகியவை இருக்கின்றன. இவற்றால் வினையெச்சம், பெயரெச்சம், வினைத்தொகையடி முதலியவை, வினைமுற்றாகிய பயனிலை ஏற்பதை ஏற்பது தெளிவாகும். தெய்வச்சிலையார் சுட்டிய முறையில் மேற்குறித்த மூன்றையும் வினைமுற்றிலிருந்து தோற்றுவிக்கலாம். முதலில் வினையெச்சத்தை எடுத்துக் கொள்வோம்.

1. இடம் பால் எண் காட்டும் விகுதி கெடல்
2. கால இடைநிலை கெடல்
3. வினையெச்ச விகுதியாகிய அகரம் சேரல்

இவ்விதிகள் செயற்படும்போது
இவன் வந்தான் (வாக்கியம்)
இவன் வந்த் (1)
இவன் வ (2)

இவன் வ + அ → வர (?) (சொன்னிலையில் அகரத்தின்முன்வ → வர் எனத்திரியும்) பெயரெச்சத்திற்கு

1. இடம் பால் எண் காட்டும் விகுதி கெடல்
2. பெயரெச்ச விகுதிசேரல்

இவ்விதிகள் செயற்படும்போது
இவன் வந்தான் (வாக்கியம்)
இவன்வந்த் (1)
இவன் வந்த (2)

வினைத்தொகையடிக்கு

1. இடம் பால் எண்விகுதி கெடல்
2. கால இடைநிலை கெடல்

இவை செயற்படும்போது,
இவன் தந்தான் (வாக்கியம்)
இவன் தந்த் (1)
இவன் த—தரு (2) (சொன்னிலையில் பதஇறுதியாயின் த—தரு எனத் திரியும்)

இவற்றால் வினையெச்சம், பெயரெச்சம், வினைத்தொகையடி முதலியவை வினைமுற்றிலிருந்து பிறந்தவை யென்றாகும். இவ்வாறாயின் வாக்கிய நிலையில் வினைமுற்று ஏற்பனவற்றை இவை ஏற்று நிற்பது இயல்பே. இம்முறையால் தொடர்நிலை இலக்கண அமைப்பு எளிதாகின்றது.

இந்த முறையைப் பின்பற்றும்போது ஓர் ஐயப்பாடு தோன்றுவது இயற்கையே. விதிகள் செயற்படும் சமயம் பல உருவங்கள் இடையில் தோன்றுகின்றன. எடுத்துக்காட்டாக வந்த், தந்த் முதலியவை சில. இவை மொழி வரலாற்றில் என்றேனும் வழக்கிலிருந்தனவா என்று வினவலாம்.

கணித ஆசிரியர்கள் ஒரு கணக்கிற்கு விடை காணும்போது பல ஊகங்களை வாய்பாடுகளாகக் கொண்டு விடைகாண முயல்வது நாம் அறிந்ததே அந்த ஊகங்களில் எவையேனும் விடை காண்பதற்கு உதவுமாயின் அவற்றை வாய்பாடாக அவர்கள் கொள்வது வழக்கம். அவை உண்மையா அல்லவா என்று அவர்கள் வினவுவதில்லை. எளிதில் விடை காணுதற்குரிய உத்தியாகவே அவற்றைக் கொள்வர். அதைப்போன்றே இடையில் வரும் இந்தச் சொல்லுருவங்களையும் கொள்ளவேண்டும். தெய்வச் சிலையார் முறையை இடமாற்று இலக்கணிகளும் அவ்வாறே கொள்கின்றனர்.

இக்காலத்தில் நமக்குக் கிடைத்த புதுப் பயிற்சியும் இலக்கண ஞானமும் பண்டைத் தமிழ் இலக்கணக் கருவூலத்தின் பெருமையை அறிவதற்குப் பெருந்துணையாதல் தெளிவு.

---

# விண்டவர் கண்டிலர்

[பேராசிரியர், திரு. ஆர். கே. விஸ்வநாதன்]



தஞ்சை, மாயூரத்தில் 1906 ஆம் ஆண்டு இவர் பிறந்தார். தந்தையார் கிருட்டிண ஐயர்; தாயார் இலட்சுமி அம்மையார். கும்பகோணத்திலும் திருச்சியிலும் கல்வி பயின்று தேர்ந்து எம் ஏ. பட்டம் பெற்றுர். திருச்சி, செயின்ட் ஜோசப் கல்லூரியில் ஓராண்டு ஆசிரியராக விருந்து, பின்னர், அண்ணுமலைப் பல்கலைக்கழகம் நிறுவப்பட்ட நாள்தொட்டு, அதன் பௌதிகத் துறையில் பணியாற்றி வருகின்ருர். அண்ணுமலைப் பல்கலைக் கழகம் ஆயிரம் வெண்பொற்காசுகள் பரிசளித்து வெளியிட்டிருக்கும் இவரது "பௌதிக நூல்" தமிழிலேயே பௌதிகத்தைக் கற்றலும் கற்பித்தலும் கூடும் என்பதை முதன் முதலாக எடுத்துக்காட்டியது. பொதுமக்களின் விஞ்ஞான அறிவை வளர்க்கச் சிறந்த துணையாகுமென்று இவர் எழுதிய "சக்தி" என்னும் நூலைத் தேர்ந்தெடுத்துச் சென்னை அரசினர் ரூபா ஐந்நூறு பரிசளித்துள்ளனர். பல அரிய அறிவியல் நூல்களை எல்லோருக்கும் விளங்கும் எளிய நடையில் இயற்றியுள்ளார்.

"கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்" என்பது நமது மூதாதையரின் வாக்கு. அர்ச்சுனனுக்குக் கண்ணன் உபதேசித்த கீதையின் கடைசி அத்தியாயத்தில் சாத்வீக, ராஜச, தாமசகுணங்களை விவரிக்கும் இடத்தில் இதன் உட்கருத்தை நாம் காணலாம். பிரிவு பட்டு நிற்கும் எல்லா உயிர்களிலும் பிரிவற்ற ஒரே இயல்பைக் காணும் ஞானம் சாத்வீக ஞானம் என்றும், உயிர்கள் அனைத்திலும் வெவ்வேறு வகைப்பட்ட பல இயல்புகள் இருப்பதாகப் பிரித்துக் காணும் ஞானம் ராஜச என்றும் கூறப்படுகிறது. பின்னர்க் கூறப்பட்ட முறையையே விஞ்ஞானிகள் பெரும்பாலும் கையாண்டு வருகிருர்கள். சுமார் நூற்றைம்பது ஆண்டுகளில் அவர்கள் அடைந்துள்ள வெற்றி நம்மை எல்லாம் பிரமிக்கச் செய்துவிட்டது. மக்களின் வாழ்க்கையையே முற்றிலும் மாற்றிவிட்டது என்று கூடக் கூறலாம். இருந்தபோதிலும் இப்பிரபஞ்சத்தின் இரகசியத்தை அவர்கள் அறிய முடிந்ததா என்ருல் இல்லை என்ற பதிலே கிடைக்கும்.

நம்மைப் பிரமிக்கச் செய்யும் இயற்கைக் காட்சிகள் பல இருக்கின்றன. நள்ளிரவில் மேகங்கள் இல்லாதபோது வானத்தில் உள்ள நட்சத்திரங்கள் அளிக்கும் காட்சி, இவற்றில் ஒன்று. வானத்தைப் பார்த்தவுடன் முதலில் அதன் பரப்பே நம்மைத் திகைக்கச் செய்கிறது. இதன் குறுக்கே ஓர் ஒளிப்பட்டை தோன்றுவதைக் காணலாம். இதுவே நாமிருக்கும் அண்டம் (Galaxy) இதைப்பால் வழி (Milky way) என்றும் கூறுவதுண்டு இதில் நட்சத்திரங்கள் மிக நெருக்கமாக இருப்பதைக் காணலாம். வெறுங்கண்களைக் கொண்டு பார்க்கும்போது இதில் சுமார் ஆயிரக்கணக்கான நட்சத்திரங்களே இருப்பது போலத் தெரியும். பெரிய தொலைநோக்கிகளை (Telescopes) க்கொண்டு பார்க்கின் கோடிக் கணக்கான நட்சத்திரங்கள் இருப்பது தெரிகிறது. இவற்றில் ஒன்றுதான் நமது பூமி அண்டிப் பிழைக்கும் சூரியன்.

வானவெளியில் நட்சத்திரங்களினிடையே உள்ள தூரங்களை மைல் கணக்கில் சொல்லிச் சாத்தியப்படாது. ஒரு விநாடியில் ஒளி செல்லும் வேகத்தை ஆதாரமாகக் கொண்டு தூரங்கள் அளக்கப்படுகின்றன. ஒளி அலைகள் ஒரு விநாடிக்கு ஒரு லக்ஷத்து எண்பத்தாருயிரம் மைல்கள் வீதம் விசும்பில் பரவிச் செல்லுகின்றன. சந்திரனது ஒளி பூமியை வந்தடைய ஒரு விநாடிக்குச் சற்று அதிகமாக நேரம் பிடிக்கிறது. எனவே சந்திரன் பூமியிலிருந்து

ஓர் ஒளி-விநாடி (Light-second) தூரத்தி லிருக்கிறது என்று கூறலாம் அல்லவா? சூரியனது ஒளி பூமியை அடைவதற்கு எட்டு நிமிஷங்கள் ஆகின்றன. எனவே சூரியன் பூமியிலிருந்து எட்டு ஒளி-நிமி ஷங்கள் (Light-minute) தூரத்தில் இருக் கிறது என்று கூறலாம். நமக்கு மிக அருகாமையிலுள்ள நட்சத்திரத்தி லிருந்து ஒளி பூமி வந்தடைவதற்கு நான்கு வருஷங்களுக்குமேல் ஆகிறது. பூமியி லிருந்து அந்நட்சத்திரம் எவ்வளவு தூரத் தில் இருக்கவேண்டும் என்று ஊகித்துக் கொள்ளலாம். மைல் கணக்கில் இதைச் சொல்லவேண்டுமாயின் ஒருமணிக்குமூவா யிரத்து அறுநூறு விநாடிகள். ஒரு நாளைக்கு இருபத்திநான்கு மணி நேரம். ஒரு வரு ஷத்துக்கு முந்நூற்று அறுபத்தைந்து நாட்கள். ஒரு லக்ஷத்து எண்பத்தாறுயிரம் மைல்களை மூவாயிரத்து அறுநூறினால் பெருக்கிப் பின்னர் இருபத்திநான்கிலும், முந்நூற்று அறுபத்தைந்திலும் பெருக்கி னால் ஒளி ஒரு வருஷத்தில் செல்லக்கூடிய தூரத்தைப் பெறலாம். இவ்வாறு பெருக் கினால் அத்தொகை அரைக்கோடியே கோடி மைல் தூரம் ஆகும். இப்போது நமக்கு அருகாமையிலுள்ள நட்சத்திரம் நான்கு ஒளி வருஷங்கள் தூரத்தில் இருக்கிறது.

நமது அண்டம் உருவத்தில் வெள் ளெழுத்து மூக்குக் கண்ணாடி வில்லையைப் போல அமைந்து நடுவில் தடித்து இருப் பதை விஞ்ஞானிகள் பார்த்தார்கள் இதன் தடிமன் சுமார் அறுபதினாயிரம் ஒளி வரு ஷங்கள் என்றும், விட்டம் சுமார் மூன்று லக்ஷம் ஒளி வருஷங்கள் என்றும் கணக் கிட்டிருக்கிறார்கள். இதன் மையத்தி லிருந்து நமது சூரியன் சுமார் அறுபதி னாயிரம் ஒளி வருஷ தூரத்தில் இருக்கிறது. இவ்வண்டம் சக்கரத்தைப்போல அதன் மையத்தை இருசாகக்கொண்டு சுழன்று கொண்டே இருக்கிறது. சூரியனும் அதன் பரிவாரங்களாகிய கிரகங்களும் இம்மையத் தைச் சுற்றி மணிக்குப் பத்துலக்ஷம் மைல்கள் வேகத்துடன் சுழன்று வருகின் றன. ஒரு முறை சுற்றுவதற்குச் சுமார் இருபது கோடி வருஷங்கள் ஆகும். நம் முடைய நிலைமை எத்தகையது என்று சற்றுக் கவனிப்போம். பூமி தன்னைத்தானே சுற்றி வருவதை நாமறிவோம். தன் இரு சைச் சுற்றி மணிக்குச் சுமார் ஆயிரம் மைல் கள் வேகத்துடன் பூமி சுழன்று வருகின் றது. அதன்மீதுள்ள நமக்கும் இவ்வியக்கம் உண்டு. மேலும் நாம் பூமியுடன்கூடச் சூரியனைச் சுற்றிவந்து கொண்டிருக் கிறோம். சூரியனைச்சுற்றிப் பூமி மணிக்கு எழுபதினாயிரம் மைல்கள் வேகத்துடன் ஓடி வந்து கொண்டிருக்கிறது. இவ்வியக்க மும் நமக்கு உண்டு. இத்துடன் சூரிய னுடன் கூட அண்டத்தின் இருசை மணிக் குப் பத்துலக்ஷம் மைல்கள் வேகத்துடன் சுற்றிக் கொண்டு வருகிறோம். இனி, நமது அண்டம் ஏற்பட்ட விதத்தைப் பற்றி விஞ்ஞானிகள் கூறும் காரணத்தைப் பார்ப்போம்.

முதன் முதலில் இவ்வண்டத்தில் பொருள் மிக மிக விரிந்த நிலையில் வாயுப் பொருளாக இருந்திருக்க வேண்டு மென்று அவர்கள் கருதுகிறார்கள். இப் பொருளை அண்டப் பொருள் (Interstellar gas) என்று குறிப்பிடுவதுண்டு. நம் பவன இறுக்கத்தைவிட மிக மிகக் குறைந்த இறுக் கத்தில் இவ்வண்டப்பொருள் இருந்திருக்க வேண்டும். பூமியைச் சூழ்ந்து பல மைல் உயரம்வரை ஒரு காற்று மண்டலம் உளது. இது சதுர அங்குலத்துக்குச் சுமார் பதினைந்து பவுண்டு எடையுள்ள இறுக் கத்துடன் பூமியின் மேற்பரப்பிலுள்ள எல்லாப் பொருள்களையும் தாக்கி நிற்கின் றது. இதுவே பவன இறுக்கம் என்று கூறப்படும். இறுக்கம் பூஜ்ஜியமாக இருக் கும் இடத்தைப் பாழிடம் (Vacuum) என்று சொல்லுவார்கள். ஏறக்குறையப் பாழிடம் என்று சொல்லக்கூடிய அளவுக்கு அண் டத்தின் இறுக்கம் அமைந்திருந்ததாகக் கருதுகிறார்கள். இவ்வண்டம் தன் இருசைச் சுற்றிவந்து கொண்டிருக்கும் போது நீரோட்டத்தில் ஆங்காங்கே நீர்ச் சுழிகள் (Eddies) தென்படுவது போலச் சிறு சிறு இயக்கங்கள் முதலில் தோன்றி இருக்கவேண்டும். பின்னர்ப் பொருட் கவர்ச்சியின் ஆதிக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். பொருட் கவர்ச்சி என்பது இரண்டு பொருள்களுக்கு இடையே ஏற் படும் கவர்ச்சிச் சக்தி. இதை நியூட்டன் (Newton) என்ற விஞ்ஞானி முதலில்

கண்டுபிடித்தார். இக்கவர்ச்சிச் சக்தியின் வலிமை பொருள்களின் நிறைகளுக்கு ஏற்பவும் அவற்றின் இடைத் தூரத்தின் அளவுக்கு ஏற்பவும் அமைகின்றது. இக் கவர்ச்சிச் சக்தியின் விளைவாக அண்டத்தின் பொருள் மேகங்களாகச் சிதற ஆரம்பித் தனவாம். பின்னர்ச் சிதறுண்ட மேகங் கள் சுருங்க ஆரம்பித்து, இது தொடர்ந்து நடைபெற்று, முடிவில் நட்சத்திரங்கள் ஏற் பட்டதாக நினைக்கின்றூர்கள். அண்டத்தைப் போல இந்நட்சத்திரங்களும் சுழன்றுவரு கின்றன. இச்சுழற்சி இயக்கத்துடன் அவற்றுக்குத் தனிப்பட்ட இயக்கமும் ஏற் படலாயிற்று. ஒவ்வொரு நட்சத்திரமும் மேலும் அண்டப் பொருளைக் கவர்ந்த வண்ணம் இருந்து வருகிறது. இவ் வுண்மை பரிசோதனையினல் நிரூபிக்கப்பட் டது. சூரியன் நட்சத்திரங்களில் ஒன்றே. சூரியன் பல அடுக்குகளாக அமைந்திருக் கிறது. சிவப்பாகத் தோன்றும் (Photosphere) உள்வட்டத்தைச் சூழ்ந்து மூன்று அடுக்குகள் இருக்கின்றன. கடைசி அடுக் கைக் கொரேனு (Corona) என்று கூறுவார் கள். இது முத்துப்போன்ற வெண்மை நிறத்துடன் இருக்கிறது. இது பூரணசூரிய கிரகணத்தின்போது நன்ருகத் தென்படும். 1878ஆம் ஆண்டில் நடைபெற்ற பூரண சூரிய கிரகணத்தின்போது இக்கொரேனு விலிருந்து ஐம்பதுலக்ஷம் மைல்கள் உயரம் வரை ஜுவாலைகள் பீறிட்டு எழுவதைக் கவனித்தார்கள். சூரியனல் கவரப்படும் அண்டப் பொருள்தான் இத்தகைய ஜுவாலைகளாகத் தென்படுகின்றது என் பதை உணர்ந்தார்கள். இதிலிருந்து அண்டப்பொருள் சுருங்கி ஆங்காங்கே நட்சத்திரங்கள் ஏற்பட்டன என்ற முடிவை எல்லோரும் ஒப்புக்கொள்ளத் தொடங்கினர்கள். மற்ருெரு கேள்வி பிறந்தது. நட்சத்திரங்கள் எல்லாம் கோடிக் கணக்கான வருஷங்களாக அளவு கடந்த ஆற்றலை ஓயாமல் வெளியிட்டு வருகின்ற னவே, அஃது எவ்வாறு சாத்தியமாயிற்று என்பதற்குக் காரணத்தை ஆராய்ந்ததில் இதற்கு அடிப்படையாக அணுசக்தியே இருப்பதை உணர்ந்தார்கள்.

பூமியில் நாம் காணும் எல்லா வகைத் தாதுப் பொருள்களும் (Elements) நட்சத் திரங்களில் இருப்பது தெரியவந்தது. ஒவ் வொரு பொருளிலும் கோடிக் கணக்கான அணுக்கள் இருக்கின்றன. நட்சத்திரங் களில் உள்ள அதீத சூட்டு நிலையில் இத் தாதுப் பொருள்களின் அணுக்கள் எல் லாம் சிதறுண்டு இருக்கின்றன. ஒவ்வொரு அணுவிலும் அணுக்கருவு (Nucleus) என்ற பகுதியுண்டு. அதை நடுவாகக்கொண்டு பல்வேறு எலெக்ட்ரான்கள் (Electrons) அதைச் சுற்றி ஓடிவந்து கொண்டிருக் கின்றன. நட்சத்திரங்களில் அணுக் கருக்கள் வேருகவும், எலெக்ட்ரான்கள் வேருகவும் சிதறடிக்கப்பட்ட நிலையில் இருக்கின்றனவாம். அணுக்கருக்கள் ஒன் ருேடொன்று மோதுதலால் பலவேறு நூதன இரசாயன நிகழ்ச்சிகள் நடை பெற்ற வண்ணம் இருந்துவருகின்றன. நட்சத்திரங்களில் ஹைட்ரஜன் (Hydrogen) என்னும் தாதுப் பொருள் நூற்றுக்கு முப்பத்தைந்து பங்குக்குமேல் இருக்க வேண்டுமென்று கருதுகிருர்கள். ஹைட் ரஜன் அணுக்கருக்கள் நான்கு ஒன்று சேர்ந்து ஹீலிய (Helium) அணுக்கரு வாக மாறுவது இந்நூதன இரசாயன நிகழ்ச்சிகளில் ஒன்று. அவ்வாறு நடை பெறும்போது ஹைட்ரஜன் அணுக்கருக் கள் கூட்டு நிறையில் சிறிதளவு குறைவு ஏற்படுகிறது. ஐன்ஸ்டைன் (Einstein) கொள்கைப்படி இவ்வாறு குறைந்த பொருள் சக்தியாக மாறுவதினல் நட்சத் திரங்கள் அபரிமித ஆற்றலை வெளியிட்டு வரினும் நிலைத்திருப்பது சாத்தியமாயிற் றெனக் கருதுகிருர்கள்.

சூரியனுக்குப் பரிவாரங்களாகக் கிர கங்கள் இருப்பதுபோல நமது அண்டத் துக்கும் பரிவாரங்கள் இருப்பது தெரிய வந்தது. கிரகங்களைப்போல் இவை தனிப் பட்ட பொருள்களாக அமையவில்லை. பிரம் மாண்டமான நட்சத்திரக் கூட்டங்களாக அமைந்திருக்கின்றன. இவற்றுக்குக் கோள வடிவங்கொண்ட கூட்டங்கள் (Globular-clusters) என்று பெயர். அண்டத்தின் பரிமாணத்தைவிட இவற்றின் பரிமாணம் மிகமிகச் சிறியது. இவை ஒவ்வொன்றி லும் ஒருலக்ஷம் நட்சத்திரங்களுக்குமேல் இருக்கின்றன. அண்டத்தின் கவர்ச்சிச் சக்தியினல் இக் கூட்டங்கள் அதைச் சுற்றி

வருகின்றன இத்தகைய கூட்டங்களில் சுமார் நூறுவரை கண்டு பிடித்திருக்கிறார்கள். இது மட்டுமா? நமது அண்டத்தைப்போலப் பல அண்டங்கள் வான வெளியில் இருப்பதைப் பார்த்தார்கள். இவற்றுக்குப் புற அண்டங்கள் (External-galaxies) என்று பெயர். ஒவ்வொரு புற அண்டத்திலும் நட்சத்திரக் கூட்டங்கள், நட்சத்திர மேகங்கள், தனிப்பட்ட நட்சத்திரங்கள் முதலியன இருப்பது தெரிய வந்தது. இப்புற அண்டங்களில் ஒன்று நமது அண்டத்திலிருந்து ஏழுலக்ஷம் ஒளி வருஷதூரத்தில் இருப்பதை அறிந்தார்கள். நமது அண்டத்தைப்போல இவை ஒவ்வொன்றும் வானவெளியில் சுழன்று கொண்டிருக்கின்றன. சுமார் பத்துக் கோடிப் புற அண்டங்கள் இருக்க வேண்டுமென்று மதிப்பிட்டிருக்கிறார்கள் ஒவ்வொன்றும் நமது அண்டத்தைப்போல அகண்டாகாரமாக இருந்தபோதிலும் அவற்றின் இடைத்தூரத்தூரத்துடன் ஒப்பிடும்போது மிகமிக அற்பமாக இருக்கிறது. வானவெளியைக் கடலுக்கு ஒப்பிட்டால் இவ்வண்டங்கள் ஒவ்வொன்றையும் ஆங்காங்கே கடலில் தோன்றும் மிகச் சிறிய தீவுகளுக்கு ஒப்பிடலாம். அண்டத்திலிருந்து நட்சத்திரங்கள் ஏற்பட்ட விதத்தைப் போலப் பிரபஞ்சத்தில் அண்டங்கள் தோன்றி இருக்க வேண்டுமென்று நினைக்கிறார்கள். முதன் முதலில் இப்பிரபஞ்சம் முழுவதும் பொருள் மிகமிக விரிந்த நிலையில் இருந்து கவர்ச்சிச் சக்தியின் விளைவாக அது பல்வேறு அண்டங்களாகப் பிரிந்து பின்னர் ஒவ்வொரு அண்டத்திலிருந்தும் நட்சத்திரக் கூட்டங்கள், நட்சத்திரங்கள் முதலியன ஏற்பட்டு இருக்க வேண்டுமென்று கருதுகிறார்கள்.

ஊதிக்கொண்டே நிலையத்தை நோக்கி ஓடிவரும் புகைவண்டியின் ஒலியைக் கேட்கும்போது அதன் சுருதி (frequency) அதிகமாவதையும், புகைவண்டி நிலையத்தைக் கடந்து சென்றபின் அதன் ஒலியின் சுருதி குறைவதையும் கவனிக்கலாம். ஒளியை வெளியிட்டுக் கொண்டு ஓடிச் செல்லும் பொருள்களினிடத்தும் இந் நிகழ்ச்சி காணப்பட்டது. புற அண்டங்களின் ஒளியைச் சோதித்து அவற்றின் ஒளியில் இத்தகைய சுருதி வேறுபாடு ஏற்படுவதை விஞ்ஞானிகள் கவனித்தார்கள். நமது அண்டத்துக்கு அருகாமையில் உள்ள புற அண்டம் மணிக்குச் சுமார் பத்து லக்ஷம் மைல்கள் வேகத்துடன் நம்மை விட்டுவிலகி ஓடுவதையும், தொலைவிலுள்ள அண்டம் மணிக்குச் சுமார் இருபது கோடி மைல்கள் வேகத்துடன் விலகி ஓடுவதையும் பார்த்தார்கள். குழந்தைகள் விளையாடும் பலூனின் (Balloon) மீது பல இடங்களில் புள்ளிகளை இட்டுக்கொண்டு அதில் காற்றை நிரப்பிக்கொண்டே சென்றால் இப் புள்ளிகளின் இடைத்தூரம் அதிகரித்துக்கொண்டு போவதைக் கவனிக்கலாம். இதைப்போல இப்பிரபஞ்சத்திலுள்ள அண்டங்கள் விலகி ஓடி அவற்றின் இடைத்தூரம் அதிகரித்துக்கொண்டு இருப்பதை விஞ்ஞானிகள் உணர்ந்தார்கள். அஃதாவது இப்பிரபஞ்சம் முழுவதும் விரிந்துகொண்டே இருக்கிறது. இந் நிகழ்ச்சி விஞ்ஞானிகளைத் திடுக்கிடச் செய்தது. மேலும் பெரிய தொலைநோக்கிகளுக்கும் தெரியாத புற அண்டங்கள் இருக்கவேண்டுமென்றும், அவை ஒளியின் வேகத்தைவிட அதிகமான வேகத்துடன் நம்மை விட்டுவிலகி ஓடிச்செல்ல வேண்டுமென்றும் அவர்கள் அறிந்தவுடன் அவர்களது திகைப்புப் பின்னும் அதிகரித்தது. ஒளியின் வேகத்தைவிட அதிகமான வேகம் இப்பிரபஞ்சத்தில் இருக்க முடியாது என்று அவர்கள் இதுகாறும் மேற்கொண்டு வந்த கருத்துக்குப் பங்கம் ஏற்பட்டது. மேலும் பொருள்களுக்கிடையே கவர்ச்சிச் சக்தி இருப்பதுபோல அண்டங்களுக்கு மிடையேயும் கவர்ச்சிச் சக்தி அல்லவா இருக்க வேண்டும்? அவ்வாறு இல்லாமல் விலக்கு சக்தி அல்லவா இருக்கிறது என்று வியப்பு அடைந்தார்கள். எதுவரை கவர்ச்சிச் சக்தி இருந்து பின்னர் விலக்கு சக்தியாக மாறிற்று என்று அவர்களால் அறிய முடியவில்லை. கண்ணன் விசுவரூபத்தைக் காட்டியபொழுது அர்ச்சுனன் திகைத்து நின்றதுபோல விஞ்ஞானிகளும் தாங்கள் கண்ட விரிந்து செல்லும் பிரபஞ்சத்துக்கு எல்லை காணமுடியாது திகைத்து நிற்கின்றார்கள்.

# தேவார காலத்தில் தமிழ்நாட்டின் நிலை

[திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை]



இப்பெருந்தகை 15-8-1883-ல் மஞ்சக்குப்பத்தில் தோன்றினார். திருப்புகழைப் பதிப்பித்தவரும் மாவட்ட முன்சிப்பாகப் பணியாற்றியவருமான வ. த. சுப்பிரமணிய பிள்ளை என்பார் இவர்தம் தந்தையார் ஆவார். சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் பயின்று தமிழில் எம். ஏ. பட்டம் பெற்றார். ஆவணப் பதிவுத்துறைத் தலைவரின் துணையாளர் பதவி வகித்து 1938 இல் ஓய்வு பெற்றார். 'இராவ்பகதூர்', 'தணிகைமணி' என்னும் உயரிய பட்டங்கள் பெற்றவர். தமிழ் நூற் புலமை-சிறப்பாகச்-சைவ சமய நூற்பயிற்சி நிரம்பியவர். அருணகிரிநாதர் வரலாறும் நூல் ஆராய்ச்சியும் எழுதியவர். முருகவேள் பன்னிரு திருமுறையின் உரையாசிரியர். உபதேச காண்டத்தின் பதிப்பாசிரியர். தேவார ஒளிநெறி-சம்பந்தர், தேவார ஒளிநெறி-அப்பர், தேவார ஒளிநெறிக் கட்டுரை - சம்பந்தர், தேவார ஒளிநெறிக் கட்டுரை-அப்பர் என்னும் நூல்கள் இவர்தம் ஆராய்ச்சியின் பயனாக எழுதப்பட்டுப் பலரின் பாராட்டுகளைப் பெற்றுவருகின்றன.

ஏழாம் நூற்றாண்டில்–செந்தமிழ் நாட்டில் – மக்களின் நிலை–நாகரிகம் – பழக்க வழக்கங்கள் எவ்வாறு இருந்தன என்பது அக்காலத்துத் திருஞானசம்பந்தப் பெருமானது தேவாரத்தினின்றும் ஒருவாறு புலப்படும் : அதனை ஈண்டு விளக்குவாம்.

## 1. மக்கள்

உயர் ஞானத்தர், எழுமையும் விழுமியர், கேடில் எண்ணத்தர், சீலம்மிகு சித்தத்தவர், தலைப்படுந் தவத்தார், தவமலிபத்தர், துலை எடுத்த சொற்பயில்வார், நடுவுணர் பெருமையர், நித்த நியமங்கள் விதிப்படி நின்றவர், நிலைகொண்ட மனத்தவர், புலன்களை வென்றவர், மனந் தளராத் தகுதியர், வாய்மை வழுவாதவர், வெஞ்சினம் ஒழிந்தவர் ஆகிய பலரிருந்தனர்.

கலைவல்ல புலவர்கள், கற்றல் கேட்டல் உடையார், தமிழ்க்கலை தெரிந்த செஞ்சொலாளர்கள், நாவலர்கள், பாவலர்கள் பலரிருந்தனர். இரப்போர்க்குக் கரப்பு இலாமலும்–இல்லை என்று சொல்லாமலும் ஈந்து மகிழ்ந்த பெரியோர்களும், வரையின்றி அளித்த செல்வர்களும், அறங்களைப்பயிற்றி வந்த அறிஞர்களும், மழையின்றிப் பஞ்சம் புகுந்த காலத்தும் வண்மை குன்றாத வள்ளல்களும், எக்காரணத்தாலும் புலவர்மாட்டு வெய்யமொழி கூறாத பெருங்குணத்தவர்களும் அக்காலத்து வாழ்ந்துவந்தனர். கூகையன்ன மாக்களும் பொய்மிகுத்த வாயரும் இருந்தனர்.

## 2. மாதர்கள்

காலையில் இசைபாடி எழுவார்கள். சோலையில் உள்ள சுனைக்கோ, பொய்கைக்கோ, யாற்றுக்கோ, கடலுக்கோ சென்று குடைவார்கள். பொய்கையிற் குதித்து விளையாடுவார்கள். கொடிமுல்லை, மல்லிகை, சண்பகம் ஆதிய பூக்களைக் கொய்வார்கள். மாளிகை மேலிருந்து அச்சமின்றிப் பாடல் ஒலியை எழுப்புவர். ஊ(ஞ்)சல் ஏறி இனிதாக இசை பாடுவர். கண்களுக்கு மை யிட்டுக்கொள்வர். செங்கழுநீர், தாமரை, நீலம், நெய்தல் முதலிய மலர்களைத் தலையில் அணிவார்கள். கிளிக்கும் பூவைக்கும் சொல் பயிற்றுவர் ; அம்மானை, கழல், பந்து ஆடுவர் ; மாட வீதியிற் கையாற் பந்தோச்சி விளையாடுவர்.

கோயிலுக்கு மலர், புனல், தூபம், சாந்தம் இவை கொண்டு கன்னியர் செல்வர் ; அகில் கொண்டு புகைப்பர்; காலையில் இறைவனை இறைஞ்சுவர்; கூட்டமாய்ச் செல்வர் ; ஆடவருடன் செல்வர் ; நள்ளிருளிலும் பணிவர் ; சிவ வேடத்தைப் பரவுவார் ; அண்ணல் புகழ் பாடுவார்.

நடனமாதர்கள் அரங்கேறி நடம் பயில்வர். ஆடும்பொழுது பண் காந்தாரத்தில் (நவரோசு ராகத்தில்) பாடுவார்கள். முரவம், முழவம் என்னும் வாத்தியங்கள் ஒலிக்க, தாளத்துக்கு ஒப்ப நடமாடி இறைவனுடைய நாமங்களைச் சொல்லித் துதிப்பார்கள் ; யாழ் பயிலுவர், வண்ணம் பாடுவர் ; நாடகம் ஆடிப் பாடுவர் ; பாடல்களில் இறைவன் பெருமையையே எடுத்து ஓதுவார். குறிஞ்சி நிலத்துப் பெண்கள் குறிஞ்சிப் பண்ணில் (சுருட்டி ராகத்தில்) பாடி முருகன் பெருமையைப் பகர்வர்.

மாதர்கள் நடனம் செய்யும் பொழுது தண்டு (வீணை வகை), உடுக்கை, தாளம், தக்கை—இவை ஒத்துவர வாசிக்கப்படும்.

## 3. அடியார்கள்

இறைவன் பேச்சையே பேசி இன்புறுவர். வேறு பேச்சுக்களுக்குத் தமது செவிகொடார். அடியார்கள் வட்டம் வட்டமாகச் சூழ்ந்து நின்று இறைவன் திருவடியைப் பரவுவார்கள். அடியார்களுக்கு அன்னம் அளித்தல் உயர்ந்த அறச்செயலாகக் கொள்ளப்பட்டிருந்தது.

## 4. சாதிகள், சாதி வழக்கங்கள்

(1) ஆயன்: குழலை ஊதிக் காணமற் போன எருமையை வரச் செய்வான்.

(2) பரதர்-கடற்கரை ஓரத்தில் இவர்கள் மனை ; கடற்பொருளைச் சேகரித்து விலைபேசுவர்; வலையிட்டு வாரின மீன்களைப் பல இடங்களுக்குக் கொண்டுபோய் விற்பர் ; கடற்கரையில் வாழும் மாதர்கள் தாழைமடல் கொய்துகளிப்பர் ;

(3) வேடர், குறவர் — இவர்கள் மலையிலும், காட்டிலும் வசித்து வந்தார்கள். கரு நிறத்தினர் ; வெஞ்சொற் பேசுவர் ; வில்லும் அம்பும் கையிற் கொண்டவர்கள்; பூமியில் பன்றிகள் உழுது கிளைத்த இடங்களிற் கிடைக்கும் மணிகளை வேடர்கள் குவித்து வைப்பார்கள். வேடர்கள் ஒன்று கூடிக் கடவுளைத் தொழுவார்கள். சந்தன மரத்தின் சிறகால் தினையை விதைத்து விளைவு செய்வார்கள். கிளி முதலியன தினையை உண்ண ஒட்டாமல் மணிகளைக் கவணென வீசி வெருட்டி ஓட்டுவர். வேடர் மடவார் பரண்மீதிருந்து ஆயோ எனக் கூவிக் கிளிகளை ஓட்டுவர்; வேடர்கள் காரகிற்கட்டையை விறகாக உபயோகிப்பர். குறச் சிறுமிகள் சங்கவளை தரித்திருப்பர். மலைச்சாரலில் மூங்கில் உகுத்த முத்துக்களைக் குவித்து முத்து வாங்குங்கள் என்று ஆடியும் பாடியும் விலைகூறி அளந்து அளிப்பார். வேங்கை மரம் மலரும் காலம் அவர்களுக்கு மணம்செய் காலமாம்.

(4) வேளாளர்—ஈதலிற் சிறந்தவர்.

(5) மறையோர்: ஆகுதி வேள்வி செய்வர்; எரி மூன்றும் ஓம்புவர்; இறைவன் திருவடியையே ஆயும் மனத்தினர். நான்கு வேதம், ஆறங்கம் கற்றவர் ; சீரும் புகழும் தேசத்தில் மிக்க செல்வர். இவர்கள் கூடும் சபைகள் உண்டு. இவர்கள் தளராத வாய்மைப் புந்தியாளர். தோலொடு நூலிழை சேர்ந்த மார்பினர்; திருநீறு நிரம்பிய மார்பினர். சுருதிப்பொருள் வல்லவர். வேதமொழி சொல்லி இறைவனை ஏத்துவர் ; புதுமலர் மாலைகொண்டு சிவபிரானை வழிபடுவர். இவர்களுக்கு அந்தியுள் மந்திரம் ஐந்தெழுத்து.

அந்தணர்களுள் மலையாளரும் இருந்தனர். அரியலூருக்கு அருகில் உள்ள திருப்பழுவூரில் இவர்கள் பூசைசெய்தனர் ;

> "அந்தணர்களான மலையாளரவ ரேத்தும்
> பந்தமலி கின்ற பழுவூர்அரன்." (2-34-11)

கங்கை நாட்டு மறையவர் நன்னியமத்தவர்.

> "சங்கையின்றி நன்னியமம் தாம்செய்து
> தகுதியின் மிக்க கங்கை நாடுயர் கீர்த்தி
> மறையவர் காழி நன்னகரே." (2-96-5)

## 5. அரசர்கள்

இவர்களுக்குக் கழல், குடை, முடி, யானை, சிவிகை, அந்தளகம் (கவசம்), ஈச்சோப்பி (ஈயோட்டி), வட்டில் (பொற்கிண்ணம் முதலியன உண்டு; இவர்கள் பட்டணப் பிரவேசம் செய்யும்பொழுது மணியொலி, சங்கொலி, முரசொலி ஒலிக்கும்.

## 6. கோயிலும்—வழிபாடும்

தண்டு, உடுக்கை, தாளம், தக்கை என்னும் பக்கவாத்தியங்களுடன் அடியார்

கள் இன்னிசை பாடியும், நடனம் செய்தும் தொழுவார்கள்; பல தொண்டர் ஒன்று கூடித் திருநீறு பூசி அதிகாலையிற் பஜனை செய்வார்கள். தமிழிலும், வடமொழியிலும், வேற்றுத் திசைமொழியிலும் நரம்புக் கருவிகள் கொண்டு இசைகூட்டி வாசித்துத் தொழுவார்கள்.

"தென்சொல்...வடசொல்...திசைமொழி எழில் [நரம்பெடுத்து
...நெஞ்சிருள் நீங்கத் தொழுதெழு [தொல்புகலூர்." (2-92-7)

அருச்சனை: அந்தியிலும் சந்தியிலும் செந்தமிழரும், மறைநாவரும் அருச்சனை செய்வர். மலர், நீர், அவி (நைவேத்தியம்), பாட்டு, ஓமம், நாவிவாய்ச் சாந்து (புனுகு சட்டம்), சந்தனம், கந்தம், குங்கிலியம், தீபம், தூபம், மாலை வகைகள்—இவை வழிபாட்டுக்கு உரிய சாதனங்களாம்; செந்தமிழர் பூசித்தது, மறையவர் பூசித்தது, இரண்டும் கூறப்பட்டுள;

"செந்தமிழர், தெய்வமறை நாவர், செழுநற்கலை
தெரிந்த அவரோ(டு), அருச்சனைகள் செய்ய
அமர்கின்ற அரனூர்...வீழிநகரே." (3-80-4)

ஸ்ரீசைலம், கோகர்ணம், காசி முதலிய தலங்களில் இப்போது நடைபெறும் வழக்கம்போல, அப்போது தமிழ்நாட்டிலும்—திருவிடைமருதூர் முதலிய தலங்களில்—அடியார்கள் சாதிபேதத் தடையின்றி, இறைவனுக்கு முழுக்காட்டுச் (அபிஷேகம்) செய்து வந்தனர்.

"தடங் கொண்டதொர் தாமரைப் பொன்முடி [தன்மேல்
குடங்கொண் டடியார் குளிர்நீர் சுமந்தாட்டப்...
பரமன் இடங்கொண் டிருந்தான்தன் [இடைமருதீதோ." (1-32-2)

வழிபாட்டின்போது காலையிலும் மாலையிலும் குழல், சங்கு, துந்துபி, முழவு, யாழ் ஒலி செய்தன.

## 7. தமிழ்

தமிழ்க்கலை தெரிந்த பெரியோர் இருந்தனர். தமிழின் தன்மை, பெருமைகளைப் பேசிப் பாடல்கள் பாடுவார்கள். மாதர்களும் தமிழில் ஊறு பொருளைத் தேர்ந்து உணர்ந்திருந்தனர்.

தமிழ்மொழி — இசை மலிந்தது; இனிமை கொண்டது. கீதத்துக்கு ஏற்றது, பல ஓசைக்கும் இடம் தருவது, பெருகுந் தன்மையது, முடிவிலாதது — எனப் பாராட்டப்பட்டுளது.

## 8. இசை, நடம்

இன்னிசையாற் பாட வல்லவரும், கீதத்தை மிகப் பாடும் அடியார்களும், நடத்தொடு இசைபாடும் அடியார்களும், வேற்றுத் திசை இசைகளைக் கேட்டுத் தேர்ந்து ஆயும் பெரியோர்களும், இசை பாடும்பொழுது விம்மியழும் பெரியோர்களும் இருந்தார்கள். யாழ், வீணை, குழல், மொந்தை, முழவு இவை கீதம் பொலிதலுக்கு முக்கியமாய் விளங்கின. இசைபாடும் அடியார்கள் கூட்டம் கூட்டமாய்க் கூடித் துதிப்பர்; பாடுவர்; ஆடுவர்.

திருவையாற்றில் மடந்தையர் பண் காந்தாரத்தில் பாடல்கள் பாடினதும், திருக்களரில் மாதர்கள் பண் பொலிய யாழ் வாசித்ததும், திருவாரூரில் மாதர்கள் பாடும் கீதம் தேவலோகத்தையும் 'ஊடறுத்தது' என்பதும், திருஆமாத்தூரில் மங்கைமார் நடமாடி இன்னிசை பாடினதும், திருமாணிகுழியில் மடந்தையர் தத்தம் மாளிகையில் ஊசலில் வீற்றிருந்து இனிதாக இசை பாடினதும் கூறப்பட்டுள.

## 9. வாத்தியங்கள்

பலவித வாத்தியங்கள் இருந்தன. அவைதாம் — இடக்கை, உடுக்கை, கத்திரிகை, கல்லவடம், குடமுழா, குழல், கொக்கரை, கொடுகொட்டி, கொட்டு, சங்கு, சல்லரி, தக்கை, தகுணிச்சம், தண்டு, தண்ணுமை, தமருகம், தாளம், துடி, துத்திரி, துந்துபி, படகம், பறை, பேரி, மணி, முரசு, முரவம், முழவம், மொந்தை, யாழ், வீணை என்பன.

## 10. திருவிழாக்கள்

விழாக்களில் நெடுவெண்கொடிகள் நெருங்கிப் பொலிய—முழவு, குழல், மொந்தை, கொக்கரை, சங்கம், படகம், பறை—இவைகள் கடலொலி அயரப் பேரொலி எழுப்பும்; பல தலங்களில் தேர்கள் வரும் மாடவீதிகள் விளங்கின; விழாக் காலங்களில் வேல் வல்லார்கள் தத்தம் திறத்தைக் காட்டிப் போர் பொருது விளையாடுவார்கள். சிவனடியார்

களுக்கு அன்னம் இடப்படும். மாதர் கூட்டம் வீதிகளில் நெருங்கும். அரங்க மேடைகளில் மாதர்களும் மைந்தர்களும் ஏறி இறைவன் புகழைப் பாடித் துதிப்பார்கள். மாதர்கள் ஆடல் புரிவார்கள். மறையோர் கூட்ட நிறைந்து பொலியும். கார்த்திகை நாளில் பெண்கள் விளக்கிட்டு அலங்காரம் செய்வார்கள். அடியார்கள் இறைவன் புகழைப் பண்ணுடன் பாடிப் பின் செல்வர்; வேத ஒலி முழங்கும்; திருவிழாக்கள் பொழில்களிலும் நடைபெறும். அட்டமி நாள், ஆதிரை நாள், ஏழ்விழா, நாள்விழா, திங்கள் நாள் விழா, ஐப்பசி ஓண விழா, கார்த்திகை விளக்கீடு, தைப்பூசம், பங்குனி உத்திரம், பருவநாள் விழா, மாசிக் கடலாட்டு, பொற்ருப்பு, பெருஞ்சாந்தி முதலிய விசேட விழாக்கள் நடைபெற்றன. தேர் விழாவின்போது தெருக்கள் அலங்கரிக்கப்படும்; நறுமணம் வீசப்படும்; நீண்ட மாடவீதிகளில் தேர்வரும்; அப்பொழுது சங்கம், படகம் ஒலிக்கும். தைப்பூச விழாவில் மாதர்கள் நெய்யுணு நிவேதிப்பர்.

## 11. வியாபாரம்

நெல் ஆலைகள் நிரம்பி இருந்தன. மலை போன்ற மிகப் பெரிய கப்பல்கள் உலவின. மரக்கலங்கள் துறைமுகத்துக்கு வருகின்ற சேதி சங்க ஒலியால் தெரிவிக்கப்பட்டது. மரக்கலங்களில் பாய்கள் கட்டப்பட்டிருந்தன. சீகாழி, திருக்கழிப்பாலை, திருச்சாய்க்காடு, திருவேட்டக்குடி, நாகபட்டினம், மயேந்திரப்பள்ளி, வேதாரணியம் இவை துறைமுகப் பட்டினங்களாய் விளங்கின. அணிகள், சங்கங்கள், பவளம், முத்து, மணி ஆகிய சரக்குகள் கடற்கரைத் துறைமுகத்திற் பொலிந்தன.

## 12. வழக்கங்கள்—பழக்கங்கள்

1. மேழிகொண்டு உழுவார்கள்; கடைசியர்—வயலில் வேலை செய்பவர்—கழனியில் பாடுவர், விளையாடுவர்.

2. ஊர்களில் அந்தணர் வேள்வி, மறை ஒலி, செந்தமிழ்க் கீதம்–இவை சிறப்புடன் வளர்ச்சி பெற்றிருந்தன.

> *"அந்தணர் வேள்வியும், அருமறைத் துழனியும்,*
> *செந்தமிழ்க் கீதமும் சீரினல் வளர்தரப்...*
> *பயில்விடம்...மழபாடியே."* (3-28-3)

3. ஊனெடு உண்டல் நன்று எனறும், தீயது என்றும் அடியார்கள் பேசுவர்.

4. கள் குடித்து ஊரில் திரிதல் சொல்லப்பட்டுளது. சிவனடியார் கட்குடியராயிருப்பினும் அவர் பண்பை இகழ்வார் அறிவிலிகள் எனக் கூறப்பட்டுளது.

5. இறைவனுறையும் திருமலையை வலமாக வணங்கும் வழக்கம் இருந்தது.

6. அறிவுமிக்க பெரியோர்களைச் சிறியவர் கீழே விழுந்து பணிவர்.

7. திருமண ஓமத்தீயுள் பொரியிடும் வழக்கம் இருந்தது.

8. விரதம் அநுட்டிப்போர் நிலத்தில் உண்ணுதல் சொல்லப்பட்டுளது.

9. பிள்ளை வரம் வேண்டினேர் தீர்த்தங்களில் ஆடும் வழக்கம் இருந்தது.

10. புலவர்களிடத்தில் மிக மதிப்பு இருந்தது.

11. திருவெண்காட்டு முக்குள நீரில் முழுகின் பேய் விலகுவது கூறப்பட்டுளது.

12. பொழில்களில் ஆடல், பாடல் நடைபெற்றன.

13. வழிபாடு, வந்தனை செய்யும் காலம் தவிர மற்ற நேரங்களில் மறைபேசியும், சந்திப்போதில் நிஷ்டையிலிருந்தும் பெரியோர்கள் காலம் கழித்தனர்.

14. மனைகளுக்காகச் சுவர், கழி, கூரை வாசல் அமைத்தல் கூறப்பட்டுள.

15. மனைகளைச் சுற்றி மதில், கிடங்குகள் இருந்தன.

16. மாதவர்—முனிவர்—நீறுபூசுவர், நிலத்தில் உண்பர், நீரில் மூழ்குவர், மலைமேல் வசிப்பர், மரவுரி புனைவர்.

17. தீர்த்தம் புரோக்ஷித்துக் கொள்ளல்:

> *"வீடுடன் எய்துவார்கள் விதியென்று சென்று*
> *வெறிநீர் தெளிப்ப விரலால்."* (2-84-5)

18. வேதம் — பொழில்களில் ஓதப்பட்டது.

19. வேள்வி—ஆகுதியால் மழை பொழியும்.

# சிவநெறியும் தமிழும்

[டாக்டர், தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை]



திருநெல்வேலி, பாளையங் கோட்டையில் 2—6—1892 இல் சைவ வேளாள மரபினரான நெ.சு. திரவியம் பிள்ளையவர்கட் கும் முத்தம்மாளுக்கும் மகவாகத் தோன்றினர். நெல்லை, செயின்ட் சேவியர், இந்துக் கல்லூரிகளி லும், சென்னை, பம்பாய் மருத் துவக் கல்லூரிகளிலும் பயின்று தேர்ந்து பட்டம் பெற்ருர். இலண்டன் சென்று பயின்று எல். எம். எஸ். ஏ. என்ற பட்டமும் பெற்ருர். மருத்துவக் கலையின் சிறப்பான ஆராய்ச்சி களைக் கற்றறிந்தவர். சென்னை ஸ்டான்லி மருத்துவப் பள்ளி ஆசிரியராகப்பன்னிரண்டாண்டு கள் பணிபுரிந்துள்ளார். 'இராவ் சாகெப்', 'சித்தாந்தச் சைவப் புலவர்', 'செந்தமிழ் வித்தகர்', 'சைவப்புலவர்' ஆகிய பட்டங் களைப் பெற்றவர். இலத்தின் மொழியும் வல்லவர். 'காயப் பட்டவர்களுக்கு முதலுதவி' என்னும் ஆங்கில நூலைத்தமிழில் பெயர்த்துள்ளார். 'முருகன் முக் கண்ணன் விளக்கம்', 'திருவள்ளு வர் மருந்து' முதலிய அரிய நூல் களை இயற்றியுள்ளார். சிறந்த ஆராய்ச்சிச் சொற்பொழிவாளர்.

சிவநெறி தொன்றுதொட்டுத் 'தொன னெறி, மெய்ந்நெறி, ஒருநெறி, திருநெறி' என்று வழங்கப்பெற்று வந்துள்ளது; இப்பேரண்டத்தில் உள்ள எந்நாட்டிற்கும் இறைவனுகிய முழு முதற்கடவுளே, தென்னுட்டில், சிறப்பாகச் 'சிவன்' என் றழைக்கப்படுவதனல், 'சிவநெறி' என்னும் பெயர் தோன்றிற்று. இச்சைவ சமயமே உமாபதி சிவாசாரியாரால் "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்" என்றும் குமரகுருபர அடிகளாரால் "வேதாந்த மென்றுச்சியிற் பழுத்த, ஆராவின்ப அருங்கனி பிழிந்து, சாரங்கொண்ட சைவ சித்தாந்தத், தேனமுது" என்றும் ஓதப் பட்டுள்ளது.

சிவநெறியும் தமிழும் — இவ்விரண்டும் உலகில் ஒரே நாட்டிலேயே தோன்றி யிருத்தல் வேண்டுமென நம்புவதற்கிட முண்டு. சிவநெறி தோன்றிய காலம் இன்னும் அறுதியிட்டுக் கூறப்படவில்லை யாயினும், இற்றைக்குப் பதினுயிரம் ஆண்டுகளுக்கும் முந்திய தென்பதற்குத் தக்க பல சான்றுகள் கிடைக்கின்றன. சிவ நெறியைப்பற்றிய குறிப்புக்கள் இரண் டாயிர மாண்டுகளுக்கு முந்திய கடைச்சங்க நூல்களில் மலிந்து காணப்படுகின்றன. மூவாயிரமாண்டுகளுக்கு முன்னரே இயற் றப்பட்ட தொல்காப்பியத்தில், சிவநெறிக்கு அடிப்படையான முக்கண்ணன், சேயோன், மாயோன் வழிபாடுகள் வெள்ளிடைமலை போல் எடுத்துரைக்கப் பட்டுள்ளன. இற் றைக்கு ஆருயிரம் ஆண்டுகளுக்கு முந்திய தாக, யாவராலும் ஒப்புக்கொள்ளப்படும் மொகஞ்சதாரை........, புதைபொருள்களிற் கண்டுபிடிக்கப்பட்டுள்ள சிவலிங்கங்கள், தாண்டவன், மும்முகன், முருகன், விடை (இடபம் - நந்தி), தென்முகக் கடவுள், அம்மை உருவங்களும் சித்திர எழுத்துக் களும், சிவநெறியை யொட்டிய பாம்பு, அரசுமரவணக்கங்களும் போன்ற பற்பல சான்று, அங்குச் சிவநெறி தழைத்தோங்கி முதிர்ந்திருந்ததென்பதைக் கண்கூடாகக் காட்டுகின்றன. மேற்கூறிய சிந்துவெளி நாகரிகச் சின்னங்களை, நடுவுநிலைமையி னின்று ஆய்ந்து முடிவு கட்டியுதவிய தூயதிரு கெராஸ் அடிகளார் அங்குள்ள சித்திர எழுத்துக்களும் ஆதித்திராவிட மொழியிலேயே அமைந்துள்ளன வென்று உறுதிப்படுத்தியுள்ளனரே! 6000 ஆண்டு களுக்கு முன்னரே இத்திருநெறி வியக்கத் தக்க உச்ச நிலையையடைந்து நிலவி யிருந்ததானல், அதற்கும் எத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே அந்நெறி முளைத்துப் படிப்படியாக வளர்ந்து மலர்ந் திருக்கவேண்டும்!!!

தமிழின் தொன்மை—இற்றைக்கு 8,000 ஆண்டுகளுக்கு முன்னரேயே தொல்காப்பியம் இயற்றப்பட்டதென்று கூறுவாருமுளர் (ப. 32, கருணாமிர்த சாகரம்–ஆபிரகாம் பண்டிதர்). இத்தகைய தொன்மை பெற்ற இந்நூலில், சீரிய இலக்கணமுறைகளும், எழுத்து, சொல், அகப்பொருள், புறப்பொருள், மெய்ப்பொருளைப்பற்றிய குறிப்புக்களும் ஒருங்கே அமைந்து திகழ்கின்றன. இது இங்ஙனமிருக்க, தொல்காப்பிய நூற்பாக்களில் 'என்மனார் புலவர்' என்று கூறியதற்கிணங்க, தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரேயே, உச்சிமேற் புலவர்கள் பலர் இருந்தனராயின், இதற்கும் எத்தனையாயிரமாண்டுகளுக்கு முன்னரே, தமிழ் வழக்கில் இருந்திருக்க வேண்டும்? தொல்காப்பிய நூற்பாக்களிலுள்ள ஒலி அமைப்பு முறைகளை, விஞ்ஞான விதிகளோடு இயைத்துப் பார்த்து அவைகளின் முறை தவரு ஒப்புமைகளைக் கண்டு பெருவியப்படைந்த டாக்டர் C. R. சங்கரன் M.A., Ph.D., (பூனு, பல்கலைக் கழகம்) "Phonemics of old Tamil" என்னும் அரிய நூலை ஆங்கிலத்தில் எழுதியுதவியது மன்றி, மேனுடுகளிலும் இத்தகைய கருத்துக்களை அம்பலப்படுத்த வாய்ப்புப் பெற்றதும் திருவருட்டுணையன்றோ!! சிந்துவெளி நாகரிகச் சொல் வரிசைகளிலுங்கூட, குறள் வெண்பாவுக்குரிய கவிதை இசை நுணுக்கங்கள் காணப்படுவதாகத் தூயதிரு உலகப் பேரறிஞர் கொராசு அடிகளார் எடுத்துக் காட்டுகின்றனரே! எகிப்து நாட்டில் பிரமிட் என்னும் சாவுக் குழிகளின் சுவர்களிலே எழுதப்பட்டுள்ள (Egyptian hieroglyphics) தூய சித்திர எழுத்துக்களுக்கும் ஆதித் தமிழுக்கும் நெருங்கிய தொடர்பு காணப்படுகிறதென்னும் கருத்தும் வலுப்பெறுமேயானல், தமிழ்மொழி 10,000 ஆண்டுகளுக்கு முன்னரே யிருந்து உலகில் எங்கும் நிலவி வளம்பெற்றுள்ள தென்னும் உண்மையை மறுக்கமுடியுமோ?

சிவநெறி, தமிழ்—பரப்பு: இவ்வுலகில் நமது நாடு முழுவதிலும், மலேயா, ஆஃச்திரேலியா, சீயாம் முதலிய தீவுகளிலும், அமெரிக்காவிலும் (மேற்கரையோரங்கள்), ஆப்பிரிக்காவின் பகுதியாகிய எகிப்து நாட்டிலும், மத்தியதரைக்கடலையொட்டிய சின்ன ஆசியா, கிரீசு, இத்தாலியா, மற்றும் அயர்லாந்து, உருசியா முதலிய நாடுகளிலும் இன்றும் இலிங்கம், நந்தி போன்ற சிவச் சின்னங்கள் காணப்படுமாயின், இந்நாடுகளில், பண்டைக் காலத்திலேயே சிவநெறி பரவியிருந்ததென்பது வெளிப்படை. எகிப்து நாட்டிலுள்ள விடை (நந்தி) உலகிலேயே மிகப் பெரியதெனக் கூறப்படுகிறதே! அமெரிக்காவில், கொலராடோ யாற்றங்கரையில் 10,000 ஆண்டுகளுக்கு முந்திய சிவன் கோயில் கண்டுபிடிக்கப்பட்டதென்ற செய்தியும் உண்மைதானே! உலகிற் பல பாகங்களில், இலிங்கமும் (=இலங்கும் ஒளிப் பிழம்பு) விடையும் (நந்தியும்) ஆங்காங்கே கண்டெடுக்கப்பட்டுள்ளனவே! தமிழகத்து, பிறவா யாக்கைப் பெரியோன் கோயில்களில், கொடிமரத்தின் உச்சியில் ஒரு பக்கத்தில் முத்தலை வேலும் (திரிசூலம்), அதற்கெதிரே விடை (நந்தி)யும் அதில் முப்பத்துமூன்று வளையங்களும் இன்றும் எங்கும் காணப்படுகின்றன. அப்பரடிகளார் தூங்கானை மாடத்தில் தங்கியபொழுது, இரவில் வலது தோளில் திரிசூலமும் இடது தோளில் விடையும் சிவ முத்திரைச் சின்னங்களாகச் சிவகணங்களாற் பொறிக்கப்பட்டன என்பது வரலாறு. சிறிய ஆசிய நாடுகளில் வசித்து வந்த, விவிலிய நூலிற் கூறப்பட்டுள்ள கிட்டைட்சு (The Hittites) என்னும் மக்கள் 3000 ஆண்டுகளுக்குமுன் வழிபட்ட, வான் தெய்வத்தின் அடையாளங்கள் மேற்கூறிய தூய திரிசூலமும் விடையும்(இடபம்–நந்தி) தானே!! விரிப்பிற் பெருகும். சிவநெறி பண்டைக் காலத்தில் உலகெங்கும் பரவியிருந்த தென்பது ஒருதலை.

தமிழ்—பரப்பு: திராவிட மொழிகளுள் தாய் மொழி ஆதித் தமிழென்ப; தமிழகத்திற் செந்தமிழும், நமது நாடு முழுவதும் தமிழை யொட்டிய மொழிகளும் வழக்கில் இருப்பது நாமறிந்ததே. பூகோளத்தின் வடமுனையின் அருகிலுள்ள காமச்சட்கா (Kamatchatka)என்னும் உருசியப் பகுதியிற் பேசப்படும் மொழி தமிழையொட்டியதென்று வரலாற்றாசிரியர் சர் ஃகண்ட்டர் (Hunter) கூறுகின்றனர். இங்ஙனமே,

கன்னியாகுமரிக்குத் தெற்கே 7,000 மைலுக்குப் பரவியிருந்ததும், கடல் கோளால் விழுங்கப்பட்டதுமான குமரி நாட்டின் (Lemuria) தென்மூலைகளிலுள்ள நியூசீலந்து முதலிய பல தீவுகளிற் பேசப்படும் மொழி தமிழை யொட்டிய தென்று கூறப்படுகின்றதே! இத்தாலியா நாட்டில் டசுக்கானி என்னும் பகுதியிற் பேசப்படுவது தமிழின் திரிபென்று எடுத்துரைக்கப்படுகின்றதே. (J. R. A. S). ஐரோப்பாவின் மேற்பாகத்திலுள்ள ஐபீரியா நாட்டிலுள்ள (Spain), பிரனிஸ் மலையடிவாரத்திற் குடியேறியுள்ள 'பாசுக்' என்னும் இனத்தார் (Basques) பேசும் மொழி ஆதித்திராவிட மொழியை யடிப்படையாக உள்ளதென்று மொழிவல்லுநர் கூறுகின்றனரே! பண்டை மொழிகளிலெல்லாம் (ஈபீரு, கிரேக்கம், இலத்தீன், சமக்கிருதம்) தமிழ் வேர்ச் சொற்கள் திட்டவட்டமாய்க் காணப்படுகின்றன. இங்ஙனமாக, இவ்வுலகில் நாற்றிசைகளிலும் தமிழ்மொழி பரவியிருந்ததென்பது உண்மைக்குப் புறம்பாமோ? நமதுநாட்டு ஆட்சி மொழிகளுக்குள் ஒன்ருயமைவதற்குத் தமிழ்மொழி சீரிய தகுதிபெற்று நிலவி வருகின்றதே!!

தமிழ் எழுத்துக்கள் — தொல்காப்பியர் காலத்து நிலவிய தமிழ் நெடுங் கணக்குருவங்களுக்கும் இன்றும் வழக்கிலிருக்கும் வடிவங்களுக்கும் (வீரமாமுனிவர் செய்த இரண்டொரு பொருந்திய திருத்தங்களைத் தவிர) அதிக வேறுபாடு காணப்படுகின்றதெனக் கூறுவதற் கிடமில்லை. தொல்காப்பியர் நூற்பாவின்படி, தமிழ் எழுத்துக்களின் எண்கள்—249 (உயிர்-12, மெய்-18, சார்பு-3, உயிர் மெய்-216) ஆக இருநூற்று நாற்பத்தொன்பது. ஆய்த எழுத்தென்று கூறப்படும் முப்பாற் புள்ளியை ஓரெழுத்தென்று மயங்கி இடர்ப்படுவர்; ஆனல் அது மூன்று சார்பெழுத்துக்களையும் குறிக்குமென்னும் சிவஞான முனிவரின் திருவாக்கைப் பசுமரத்தாணி போல் பதித்துக்கொள்வோமாக. தமிழ் எழுத்துக்களின் ஒலி அமைப்புக்கும் சமக்கிருதத்துக்கும் நெருங்கிய ஒற்றுமை காணப்படுவதும், தமிழ் மொழியிலுள்ள ஐந்து குற்றுயிரெழுத்துக்களே (அ, இ, உ, எ, ஒ) இலத்தீன் மொழியிலும் ஐந்து இலக்கணப் பிரிவுகளாக (Declensions) அமைந்திருப்பதும் கூர்ந்து ஆய்வதற்குரியது. நம் முன்னேர், எண்கள் 216, 33, 5 இவைகளைத் தனிச் சிறப்புடையனவாகக் கருதினரென்பதற்கு ஒன்றிரண்டு சான்று இவண் தருதும். தில்லைச் சிற்றம்பலத்திலே, சிற்சபை ஓடுகளை, ஒரு காலத்திற் பிரிக்கத் தொடங்கியபொழுது ஓடுகளின் தொகை 21,600 என்றும், அதில் ஓர் ஓட்டில் "முப்பத்து முக்கோடி மூவைந்தெழுத்தும் செப்பேட்டில் அடைத்தது" என்றெழுதப்பட்டிருந்ததையும் தொண்டர்கள் திரள்திரளாகக் கண்டு வியந்தனர். இதன் மறைபொருள் உண்மையைச் சிந்தித்துத் தெளிவார் 216 (உயிர் மெய்யின் சிறப்பையும், தமிழ் நெடுங்கணக்கு எழுத்துக்கள் 33 இன் தனிச் சிறப்பையும் நன்குணர்வர். (33 கோடி = 33). மந்திரப் பொருளடங்கிய இவ் வெழுத்துக்களுக்கு நடுநாயகமா யிருப்பது திரு ஐந்தெழுத்து; இதில் மூன்று வகை (மூவைந்தெழுத்து) என்பதை மறை ஆசிரியர்வாய்க் கேட்டுணர்க.

தமிழ் எழுத்துக்கள் ஆதியில் சித்திர எழுத்துக்களினின்றே தோன்றியனவாகக் கூறுவார் மொழிவல்லுநர். இதை நன்காராய்ந்து முடிவுகட்டிய பேரறிஞர் ("Ancient Tamil letters by P. N. S.) என்னும் நூலிற் பின்வருமாறு குறித்துள்ளனர்: "இங்ஙனம் எழுத்துக்கள் நெடுங்கணக்கின் நிலையை அடைவதற்கு முந்திய காலங்களிற் பெற்றிருந்த உருவங்களைப்பற்றிய குறிப்புக்கள் தமிழைத் தவிர வேறு இந்திய மொழிகளிலுள்ள இலக்கியங்களிற் காணப்படவில்லை."

பண்டைத் தமிழ்க் கலைகள்—நமது பண்டைக் கூத்துக் கலையின் சிறப்பைத் தாண்டவப்பெருமானிடமும், இசைக்கலையின் தெய்வீகத் தன்மையை ஏழுவல்லமைகளை (சத்திகளை)க் குறிக்கும் ஏழு நெட்டுயிரெழுத்துக்களிலும் (ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ), ஓவியத்தின் உச்சநிலையை அம்பலவாணனது அருட்கோலத்திலும், கவிதையின் கட்டழகை மற்றைய மொழிகளிற் காணப்படாத மோனை, எதுகைகளின் பல்வேறு பிரிவுகளிலும், வான நூற்றிறமையைமுருகக்கடவுளின் திருக்கைகளிலுள்ள ஆயுதங்களின் பெயரால் சில

விண்மீன்கள் அழைக்கப்படுவதிலும், மருத்துவக்கலையின் வளப்பத்தைச் சித்த வயித்தியத்தின் தொன்மையிலும் சிறப்பிலும் யோகமுறையிலும் உண்ணு நோன்பிலும் அகத்துறையறிவைத் திருக்குறள், திருக்கோவையார் முதலிய நூல்களிலும், தமிழரின் வீரத்தைச் சங்கநூல்களிலும், மெய்ப்பொருள் ஞானத்தை, தொல்காப்பியம், திருக்குறள், தேவாரம் அனைய மெய்கண்ட நூல்களிலும் கண்டு தெளிவோமாக.

தமிழ் எழுத்துக்களின் ஒப்புயர் வில்லாத் தனிச்சிறப்பைக் கண்டு வியந்து தாமும் தமிழ் மாணவர் என்று பெருமிதங் கொண்ட மேனாட்டறிஞர் பலர். இவர்களில், தூய அடிகளார் ஒருவர், தமிழ எழுத்துக்களில் மந்திரப் பொருள்கள் (Mystic significance) மறைந்து பொதிந்து கிடக்கின்றன வென்றும் அவைகளைக் காண்பதற்கு, நுண்ணறிவும் தெய்வத் தன்மையும் பொருந்திய முதல் மாணவர் ஒருவர் உதிக்கவேண்டுமென்றும் தமிழ்த் தாயை வாழ்த்துகின்றனர். முருகப் பெருமானின் திருவுருவமே தூய எழுத்துக்களாய் அமையப்பெற்றுள்ளன வென்று சிவ, ஆகம நூல்கள் ஐயந்திரிபற ஓதுகின்றன. அவனருளாலே அவன்தாள் வணங்கிக்கூர்ந்து ஆய்ந்து இதை முடிவுகட்டுவோமாக. நம்முடைய முன்னோர் பண்பாட்டை உலக முழுவதும் பரப்பிப் பிறர்க்கென வாழும் பெரும் பேற்றைப் பெற்று உய்வோமாக.

---

## தமிழும் சைவமும்

எல்லாம்வல்ல இறைவனுக்குப் பழைய தமிழ் நூல்களிலும், வட நூல்களிலும் வழங்கிய முக்கண்ணன் உருத்திரன் முதலான பல பெயர்கள் இருக்க, அவற்றுள் ஒன்றான சிவன் என்னும் பெயர்மட்டும் ஏனைப்பெயர்கள் எல்லாவற்றினுஞ் சிறந்ததாக எடுக்கப்பட்டு முதல்வனுக்கு வழங்கலானதும், அப்பெயரின் வழியே முழுமுதற் கடவுளை வழிபடுந் தமிழரது கொள்கை அல்லது மதம் 'சைவம்' எனப் பெயர்பெறலானதும் என்னையெனின், சிவன் என்னுஞ் சொல்லே ஏனையெல்லாவற்றினும் மிக்க பழமையுடைய தொன்றென்பது, மற்றைப் பண்டை மக்களிற் பலர் அச்சொல்லையே இறைவனுக்குச் சிறந்த பெயராக வைத்து வழங்கியவாற்றால் அறியப்படுகின்றது. எபிரேயர் தாம் வணங்கிப்போந்த கடவுளைச் 'சிகோவா' என்றே அழைத்தனர்; கிரேக்கர் அதனைச் 'சியூஸ்' என்றே அழைத்தனர். உரோமர் அதனைச் 'சூபிதர்' என்றே அழைத்தனர்; இவ்வயலவர் வழங்கிய அச்சொற்களெல்லாஞ் 'சிவ' என்னுஞ் சொல்லின் திரிபேயன்றி வேறல்ல. மேல்நாடுகளில் அஞ்ஞான்று வாணிகம் நடாத்திய பண்டைத் தமிழரின் வாயிலாகச் 'சிவ' என்னுஞ்சொல் அயல்நாட்டு நாகரிக மக்களிடையே பரவினுற்போற், சிவபிரானைக் குறிக்கும் ஏனைப்பெயர்ச்சொற்கள் அம்மக்களிடையே பரவக் காணாமையின், வடக்கிருந்த பழந்தமிழர் வழங்கிய 'சிவ' என்னுஞ் சொல்லே ஏனையெல்லாவற்றினும் மிக்க பழமையுடைத் தென்பது தெளியப்படா நிற்கும். அதனாற்றான், 'சிவ' என்னுஞ்சொல் தமிழர் வணங்கிய முழுமுதற் கடவுளுக்குச் சாலச் சிறந்த பெயராகவும், அவரது மதம் அச்சொல்லின் வழியே 'சைவம்' என்னுஞ் சிறப்புப்பெயருடையதாகவும் வழங்கி நிலைபெறலாயினவென்று ஓர்ந்து கொள்க.

—மறைத்திரு. மறைமலையடிகள், ''தமிழர் மதம்''.

---

# உலகின் முதல்மொழி நூலாராய்ச்சி தொல்காப்பியம்!

[பன்மொழிப்புலவர், திரு. கா. அப்பாத்துரை, எம்.ஏ., எல்.டி.]



குமரி மாவட்டம், ஆரல்வாய்மொழியில் 1907 இல் இவர் தோன்றினார். தந்தையார் ந.காசிநாதபிள்ளை, தாயார் முத்தம்மாள். நாகர்கோவில் ஸ்காட் கிறித்துவக் கல்லூரி, திருவனந்தபுரம் மகாராஜா கலைக்கல்லூரி ஆகியவற்றில் பயின்று ஆங்கிலத்தில் பி.ஏ.(ஆனர்சு) பட்டம் பெற்றார். தமிழ் எம். ஏ., இந்தி விசாரத், எல். டி. ஆகிய பட்டங்களும் பெற்றார். சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளி, பச்சையப்பன் கல்லூரி, திருநெல்வேலி இந்துக்கல்லூரி ஆகியவற்றில் ஆசிரியராகவும், 'திராவிடன்', 'ஜஸ்டிஸ்', 'லிபரேட்டர்', 'விடுதலை' முதலிய பல செய்தியிதழ்களின் ஆசிரியராகவும் தொண்டாற்றியுள்ளார். பன்மொழிப் புலவரான இவர் நூற்றுக்கு மேற்பட்ட அரிய ஆராய்ச்சி நூல்களை இயற்றியுள்ளார். தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவரான இவர், சென்னைப் பல்கலைக் கழக ஆங்கில-தமிழ் அகர வரிசைக் குழுவின் துணையாசிரியராவார். இவருடைய தமிழ்த்தொண்டுவியந்து பாராட்டற்குரியது.

மொழிகள் எல்லாவற்றுக்கும் எழுத்தும் இலக்கியமும் இலக்கணமும் உண்டு என்று பலரும் கருதுதல் கூடும். தமிழ் போன்ற மிகப் பழம்பெருமை வாய்ந்த மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழருக்கு இஃது இயல்பே. ஆனால் உண்மைநிலை இதற்கு எவ்வளவோ மாறுபட்டது—வியத்தகு முறையில் மாறுபட்டது!

இன்றைய உலக மொழிகளில் தமக்கெனத் தனியாகத் தாமே எழுத்து வகுத்துக்கொண்ட மொழிகள் தமிழும் தமிழின மொழிகளும் மட்டுமே—இஃது இன்றைய உலகப் பொது மக்களுக்குத் தெரியவராத செய்தி—மாணவருலகும் அறிஞரும் கூடக் கவனியாத மெய்ம்மை ஆகும். ஆயினும் இது வரலாறு காட்டும் உண்மை.

இன்றுவரைகூட எழுத்து வடிவம் மேற்கொள்ளாத மொழிகள் மேலையுலகிலும் கீழையுலகிலும் உண்டு.

ஆயிர ஆண்டு இலக்கிய வளர்ச்சியுடைய மொழிகள் உலகிலேயே பதினைன்றுக்கு மேல் இல்லை. அவை மேலை உலகில் மூன்று (ஆங்கிலம், பிரஞ்சு, இத்தாலியம்), மேற்கு, கிழக்கு ஆசியாவில் மூன்று (பாரசீகம், சீனம், சப்பானியம்), தென் ஆசியாவில் ஐந்து (தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு, சமசுக்கிருதம்) ஆகியவைகளே. ஆரிய இன மொழிகள் என்று கூறப்படும் வடஇந்தியத் தாய்மொழிகள் அனைத்தும் பிரிட்டிஷ் ஆட்சிக் காலம்வரை இலக்கியமற்ற மொழிகளாகவே இயங்கின என்பது குறிப்பிடத்தக்கது. சிலவற்றுக்கு இன்றும் இலக்கியம் கிடையாது.

அணிமை மேலையுலகில் கிரேக்க இலத்தீன மொழிகள் தமிழுடன் ஒத்த இலக்கியப் பழமையுடையவை. ஆனால் நீடித்த இலக்கிய வாழ்வுடையன அல்ல.

இலக்கண வகையில் தமிழும் உயர் தனிச் செம்மொழிகளாகிய சமசுக்கிருதம், கிரேக்கம், இலத்தீனம், அரபு, ஏபிரேயம், பாரசீகம் ஆகியவையும்-இவ் ஏழுமொழிகள் மட்டுமே-தமக்கென இலக்கணம் வகுத்துக் கொண்டவை. மற்ற எல்லா மொழிகளும் இவற்றைப் பின்பற்றியே அணிமைக் காலத்தில் இலக்கணம் வகுத்துள்ளன.

மொழியின் வளர்ச்சிப் படிகளை இச் செய்திகள் நமக்கு வரிசை முறையாக வகுத்துக் காண உதவுகின்றன.

(1) வரி வடிவில் எழுத்து உருவாகிய நிலை, நெடுங்கணக்கும் நெடுங்கணக்கின் எழுத்து வரிசை முறையும் வகுக்கப்பட்ட நிலை—இவற்றின்பின் எண்களுக்கு இலக்கமும் எணமானமும் வகுக்கப்பட்ட நிலை—ஆகியவை முதற்படி.

தனக்கென எண் இலக்கமும் எண் மானமும் வகுத்துக்கொண்ட உலகின் ஒரே மொழி கூடத் தமிழே. மற்ற எல்லா மொழிகளிலும் அதை அப்படியே மேற்கொண்டோ சிறிது திரிந்தோ இன்றுவரை வழங்குகின்றன.

(2) இலக்கியம் உருவாகிய நிலை—வளர்ந்த நிலை—மொழி சார்ந்த இசை, நாடகம், மொழி சாராத பிறகலைகள் வளர்ந்த நிலைகள்—மொழியில் அறிவு நூல்கள் வகுக்கப்பட்ட நிலை—இவையே மொழியின் இரண்டாம் படி.

அறிவுநூல்கள் மேலைமொழிகளில் சென்ற நான்கு நூற்றுண்டு வளர்ச்சியே. அதற்குமுன் அவ்வளர்ச்சி அரபு, கிரேக்க, சமசுக்கிருத, எகிப்திய, தமிழக வளர்ச்சிகளையே மூலமாகக் கொண்டிருந்தது.

(3) அறிவு நூல்களில் ஒன்றுக மொழிக்கு இலக்கணம் ஏற்பட்ட நிலை. இது மொழியின் மூன்ரும் படி.

இலக்கணமுடைய பழைய மொழிகள் ஏழு என்று மேலே கூறப்பட்டாலும் தமிழுடன் ஒப்பிடத் தக்க விரிவகற்சியுடைய மொழி கீழ்த்திசையின் வழக்கிலாச் செயற்கை இலக்கிய மொழியாகிய சமசுக்கிருதம் ஒன்றே.

(4) கடைசிப் படியாகிய நான்காம் படி மொழியாராய்ச்சிப் படியாகிய மொழிநூற் படியே. இத்துறை மேலை உலகின் இயல் நூல் துறைகளிலேயே மிகப் புதிது—19 ஆம் நூற்றுண்டிலிருந்தே அது பிறந்து வளர்ந்து வருகிறது.

எழுத்துக்களின் ஒலிவடிவம் பற்றிய ஆராய்ச்சி ஒலிநூல். இதுவும் மொழி நூலின் ஒரு பகுதியே. மொழிநூலைப் போல இதுவும் மேலை உலகில் 19ஆம் நூற்றுண்டில் புதிதாகத் தோன்றி வளர்ந்துவரும் புத்தம் புதிய துறையேயாகும்.

தமிழ்மொழி பற்றிய வியப்பார்வமிக்க ஒரு புதுமை என்ன வென்ருல், ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் மேற்கூறிய மொழியின் மூன்று படிகளையும் கடந்து 19ஆம் நூற்றுண்டின் புத்தம் புதிய படியாகிய நான்காம் படியிலும் இன்றைய மேலை நாடுகடந்து முன்னேறியிருந்தது என்பதே.

தொல்காப்பியம் சரிவர ஆராயப்பட்டால், அந்நூல் இதனைக் காட்டும்.

மேலை நாட்டில் தொல்காப்பிய ஆராய்ச்சி தொடங்கப்பட்டுவிட்டது. மேலை ஆராய்ச்சியாளர் ஏற்கெனவே இதைக் கண்டு தமிழர் தொல்பழங்கால ஆராய்ச்சித் திறம் நோக்கி மூக்கில் கை வைக்கத் தொடங்கியுள்ளனர்!

தமிழகத்திலேயே தொல்காப்பியம் என்னும் ஆராய்ச்சிக் கருவூலத்தின் மறை மெய்ம்மைகளை அறிவுத்திறவுகொண்டு திறந்து காண முயன்ற அறிஞர் ஒரு சிலர் உண்டு—தமிழகம் அவர்களை இன்னும் உணர்ந்து கொள்ளவில்லை. அயற் பண்பளாவிய தமிழக ஆட்சி வகுப்பு அவர்களைத் தமிழகம் காணவிடவில்லை. அறிவுலகம் தீண்ட விடவில்லை.

இன்னும் தமிழகம் வந்தெட்டாத சில தொல்காப்பிய ஆராய்ச்சி விளைவுகளையும், தமிழகம் புறக்கணித்துள்ள அறிஞர் அறிவு முடிவுகளையும் இங்கே ஒரு சிறிது சுட்டிச் செல்வோம்.

மொழி ஒப்பீட்டினுல் மட்டுமே காணப்படும் சில தொல்காப்பியத் தனிச் சிறப்புக்கள் உண்டு. தொல்காப்பியர் காலப் பின்னணியால் இச் சிறப்புக்கள் பின்னும் சிறப்புப் பெறுவன. ஆகவே தொல்காப்பியக் காலம் பற்றிய சில குத்து மதிப்புக் கணக்கையும் ஒப்பீட்டினுல் வரும் சிறப்புக்களையும் இங்கே வகுத்துக் காண்போம்.

காலமதிப்பு: வடமொழி இலக்கண நூலாரான பாணினிக்கு முற்பட்டவர் தொல்காப்பியர் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். பாணினி கி. மு. நான்காம்

நூற்றுண்டினர் என்பர் வடமொழி ஆராய்ச்சியாளர். அத்துடன் தமிழில் கடைச்சங்க காலம் கி. மு. மூன்றும் நூற்றுண்டுக்கும் கி. பி. மூன்றும் நூற்றுண்டுக்கும் இடைப்பட்டதென்று கணிக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியம் கடைச்சங்கத்துக்கு முற்பட்டது. முதற்சங்கத்து இறுதிக் காலத்திலும் இடைச்சங்கத் தொடக்கத்திலும் அந்நூல் விளக்கம் பெற்றதென்று முச்சங்க மரபும் தொல்காப்பியப் பாயிரமும் சுட்டுகின்றன. எனவே அதன் காலம் கி. மு. 5 ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்டதென்பது தெளிவு. எவ்வளவு முற்பட்டதென்பதோ, கணித்து வரையறுக்க முடியாததாகின்றது. அது 2500 ஆண்டுகட்கு நெடிது முற்பட்டது என்பதில் ஐயமில்லை.

ஆரிய வேதங்கள் வகுக்கப்படுவதற்கு முற்பட்டது தொல்காப்பியம் என்பர் உரையாசிரியர் நச்சினுர்க்கினியர். வேத காலம் கி மு. 1500க்கும் கி. மு. 1000க்கும் இடைப்பட்ட தென்பர் வரலாற்ருசிரியர். பழைய கணித நூலாரும் புராணிகரும் கூறுகிறபடி அது கி. மு. 3100க்குச் சரியாதல் வேண்டும்.

தொல்காப்பியம் 10,000 ஆண்டுகளுக்கு முற்பட்டதாயிருத்தல் கூடும் என்பர் ஆசிரியர் மறைமலேயடிகள். இப் பழமை கூடப் புராணப் பழமை யன்று என்று வருங்கால ஆராய்ச்சியும் புதுமைக் கண்டுபிடிப்புகளும் காட்டக் கூடும் என்று நம்ப இடமுண்டு.

தொல்காப்பியத்தின் தனிச் சிறப்புக்கள்: (1) தொல்காப்பியத்தில் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று அதிகாரப் பாகுபாடுகளும், ஒவ்வொரு அதிகாரத்திலும் ஒன்பது இயல்களும், மொத்தம் 1610 நூற்பாக்களும் உண்டு. இவற்றுள் பொருளதிகாரம் என்ற பகுப்போ, பொருளிலக்கணம் என்ற ஓர் இலக்கணப் பகுதியோ உலகில் வேறு எந்த மொழிக்கும் இன்றுவரை கிடையாது. அது தமிழுக்கே – தொல்காப்பியத்துக்கே—சிறப்புடைய பகுதி—ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே தமிழர் வகுத்து வளர்த்துள்ள பகுதி அது என்பது குறிப்பிடத் தக்கது.

(2) தமிழர் இடைக்காலத்தில் இலக்கணத்தை ஐந்திலக்கணம் என்றனர். முழுநிறை இலக்கணத்தின் ஐந்து கூறுகளாக அவர்கள் கொண்டவை எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகியவை. இவற்றுள் தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று தலைப்புகளையே அதிகாரப் பெயர்களாகக் கொண்டாலும், பொருளதிகாரத்திலேயே யாப்பும் அணியும் உள்ளடக்கிக் கூறுகிறது. ஆகவே அது தமிழின் முழுநிறை இலக்கண நூலாகும்.

யாப்பும், அணியும் சங்க காலத்துக்குப் பிற்பட்டே தனி இலக்கணத் துறைகளாகத் தமிழிலும் சமசுக்கிருதத்திலும் வளர்க்கப் பெற்றன. இரு மொழிகளின் இந்த வளர்ச்சிக்கும் மூலமும் முதனூலும் தொல்காப்பியமே யாகும். ஆகவே தமிழுக்குச் சிறப்பான இலக்கணம் பொருள் மட்டுமன்று. யாப்பு அணி ஆகியவற்றையும் முதன் முதலில் இலக்கணமாக ஆராய்ந்த உலகமொழி தமிழேயாகும்.

இன்றளவும் சமசுக்கிருத இலக்கணத்தில் எழுத்தும் சொல்லுமே உண்டு; பொருளில்லை. யாப்பும் அணியும் தனி நூல்களாகப் பாணினிக்குப் பின் தமிழ்த் தொல்காப்பியத்தைப் பின்பற்றியே வகுக்கப்பட்டுள்ளன. மேலை மொழிகளில் யாப்பும் இலக்கணத்தில் சேர்க்கப்பட்டாலும், அணி இன்றும் பெரும்பாலும் தனித் துறையாகவே கணிக்கப்படுகிறது. அதன் வளர்ச்சி இன்னும் தமிழ், சமசுக்கிருதத்தின் வளத்துக்குப் பிற்பட்டதேயாகும்.

(3) மேற்கூறிய இரண்டு செய்திகளையும் இணைத்துப் பார்த்தால், தமிழ், தொல்காப்பியம் ஆகியவற்றின் தனிச் சிறப்பு விளங்கும்.

தொல்காப்பியக் காலத்துக்கு முற்பட்டே தமிழில் இலக்கியமும் இலக்கணமும் வளமுற்றிருந்தன. இதைத் தொல்காப்பியமே காட்டுகின்றது. எனவே தொல்காப்பியம் மொழிக்கு இலக்கணமாக மட்டும் வகுக்கப்படவில்லை, இலக்கியத்துக்கும் இலக்கணமாக வகுக்கப்பட்டது என்பது விளங்கும். சமசுக்கிருதத்திலும் இன்றைய மேலை மொழிகளிலும் மற்ற உலக மொழி

களிலும்கூட இலக்கணம் என்பது பெரிதும் மொழியின் இலக்கணம் மட்டுமே. இலக்கியத்தின் இலக்கணமாக அவை கருதப்படவில்லை.

தமிழில் இலக்கியம், இலக்கணம் என்ற சொல் தொடர்பும் இச் சிறப்பைச் சுட்டிக் காட்டுகிறது. சமசுக்கிருதத்திலோ மேலை மொழிகளிலோ இரண்டின் பெயர்களும் தொடர்பற்றவையாகவே இயல்கின்றன. (சமசுக்கிருதம்: இலக்கணம்=வ்யாகரணம் இலக்கியம்=சாகித்யம்: ஆங்கிலம்: இலக்கணம் =க்ராமர்; இலக்கியம் = லிட்டரேச்சர்).

(4) நூற்பா அல்லது சூத்திரம் தமிழ், சமசுக்கிருதம் ஆகிய இருமொழிகளுக்குமட்டுமே யுரிய சிறப்பு நடை ஆகும். சமசுக்கிருதத்தில் சூத்திரங்கள் வியக்கத்தக்க அளவில் செறிவுடையவை. தமிழில் நூற்பாவடிவில் அமையாத திருக்குறள் இதே வியத்தகு செறிவுடன் இனிமையும் கவிதை நயமும் உடையது. தொல்காப்பியமோ நூற்பா நடையிலேயே செறிவு, இனிமை, கவிதைநயம், எளிமை ஆகிய பல அரும்பெரும்பண்புகளும் ஒருங்கே கொண்டது ஆகும்.

(5) நன்னூலார் காலம் (12 ஆம் நூற்றாண்டு) முதல் தமிழ் இலக்கணங்கள் பேரளவில் பாணினியின் சமசுக்கிருத இலக்கணத்தைப் பின்பற்றின. அவற்றின் சிறப்பும் பாணினியின் சிறப்பே. ஆனால் பாணினியும் பிற்காலத் தமிழ் இலக்கண நூலாரும் 'தொகுத்துச் சுட்டல், வகுத்துக் காட்டல், விரித்துரைத்தல்' என்ற புலமை வரிசை முறையைக் (Deductive Method) கையாண்டனர். தொல்காப்பியமோ 'விரித்துரைத்தல், வகுத்துக் காட்டுதல், தொகுத்துச் சுட்டல்' என்ற ஆசிரிய ஆராய்ச்சி முறையை (Inductive Method) மேற்கொண்டுள்ளது. பின்னதன் சிறப்பு ஆராய்ச்சித் துறைகளிலும், ஆசிரியத் துறையிலும் இன்று போற்றப்படுவது.

எழுத்து என்பது என்ன என்றுகூறி, முதல் சார்பு, உயிர், மெய், உயிர்மெய் என வகுத்து எண் கூறும் நன்னூல் முறையுடன்—எழுத்து முப்பதெனக் கூறி, குறில் நெடில் வகைப்படுத்தியும், வலி மெலி இடை வகைப்படுத்தியும் பின் உயிரும் மெய்யும் தொகுத்துரைக்கும் தொல்காப்பிய முறையின் இனிய பண்பு ஒப்பிட்டுக் கண்டு மகிழத்தக்கது.

(6) தொல்காப்பியம் முதல்நூல். வழிநூல் அன்று. அத்துடன் இன்று தமிழருக்கு அது மூல முழுமுதல் இலக்கண நூலாகவும் இயல்கிறது. ஆயினும் அவர் காலச் சூழ்நிலையில் அது முதல் நூலேயன்றி முழுமுதல் நூலல்ல. ஏனெனில், முதலாவதாக, அக்காலத்துக்கு முன்பே இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ்த் துறைகளுக்கும் இலக்கிய இலக்கணங்கள் இருந்தன. தொல்காப்பியம் இயல்தமிழுக்கு மட்டுமே இலக்கணம் கூறிற்று. இசைக்கும் நாடகத்துக்கும் இலக்கணம் கூறவில்லை. இரண்டாவதாக, இயலிலேயே பிற இலக்கண நூலார் கூறியதையும் விளக்கியதையும் தாம் முற்றிலும் கூருமலும் விளக்காமலும் அவ்வப்போது காட்டிச் சென்று, பிறர் கூருதன, விளக்காதன வற்றையே தமக்கேயுரிய புத்தாராய்ச்சி முடிபுகளாகத் தொல்காப்பியர் விளக்கினர். இது ஆராய்ச்சியாளர் பலர் சுட்டிச் சென்ற ஒரு கருத்தேயாயினும், அதன் முழு அருமை இன்னும் வலியுறுத்தி உணரப்பட, உணர்த்தப்பட இல்லை.

(7) 9 ஆம் நூற்றாண்டிலிருந்து 18ஆம் நூற்றாண்டுவரை பல தமிழ் இலக்கண நூலாசிரியர்கள் தமிழ் இலக்கணத்தைப் பாணினியின் முன்மாதிரியில் வகுக்க முனைந்ததுடன் அமையாமல், தமிழ் இலக்கணமே பாணினியின் இலக்கணத்தின் வழிவந்தது என்று கூற முனைந்தனர்.

> 'வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி
> [அதற்கிணையாத்
> தொடர்புடைய தென்மொழியை......
> குடமுனிக்கு வரையறுத்தார்'

என்ற புதுப்புராணக் கூற்றை அவர்கள் ஆதாரமாகக் கொண்டனர். ஆனால் நச்சினார்க்கினியர் கூற்றும் தற்கால வரலாற்று ஆராய்ச்சியாளர் முடிபும் தொல்காப்பிய ஆராய்ச்சியும் பாணினிக்குத் தொல்காப்பியர் முற்பட்டவர் என்பதையும், பாணினி

யைத் தொல்காப்பியர் எங்கும் பின்பற்றிய தாகக் காட்டமுடியாது என்பதையும் விளக்கின. உயிர், மெய், இறந்த காலம், நிகழ் காலம் முதலிய இலக்கணக்குறியீடுகளுக்குப் பாணினியின் இலக்கணம் பெயரே தரவில்லை — செயற்கை ஒலிக்குறியீடுகளே தந்தன.

நம்கால ஆராய்ச்சியாளர் ஒருவர்— திரு. பி. எஸ். சாஸ்திரி, தொல்காப்பியர் பாணினிக்கு முற்பட்டவர் என்பதையும், அவரைப் பின்பற்றவில்லை என்பதையும் கண்டு ஏற்றுக்கொண்டார். ஆனால் வட மொழியிலே வேதங்கள் சார்ந்த பிராதி சாக்கியங்கள் பாணினிக்கு முற்பட்டவை என்றும், தொல்காப்பியர் அவற்றையே பின்பற்றினர் என்றும் திறம்பட ஆய்ந்து கூறி, மீண்டும் தமிழிலக்கணத்துக்கு வடபுலமூலம் நாட்ட முற்பட்டார்.

ஆனால் தொல்காப்பியர் பிராதிசாக்கியங்களைப் பின்பற்றவில்லை, பிராதிசாக்கியங்களே தொல்காப்பியத்தைப் பின் பற்றின என்பது மேலையாராய்ச்சியாளர் களுக்குப் படிப்படியாக இன்று புலனாகி வருகிறது. வேதங்களே தொல்காப்பியத் துக்குப் பிற்பட்டவை என்பதையும் இது சுட்டிக் காட்டுகிறது.

(8) எழுத்துக்களின் பிறப்புக் கூறும் இலக்கணப் பகுதி ஒலிநூலாராய்ச்சி யுடன் தொடர்புடையது. பாணினியின் இலக்கணத்திலுள்ள இப்பகுதி மேலை நாட்டில் ஒலிநூலை ஊக்கிப் பிறப்பித்தது. 19 ஆம் நூற்றாண்டு முழுவதும் ஒரு நூற்றாண்டளவு பாணினியே மேலை ஒலி நூலாரின் முன்னோடி ஆசானாயிருந்து மேலை அறிவுலகில் பெரும்புகழ் நிறுவினர். ஆனால் இருபதாம் நூற்றாண்டில் பாணினியின் குறைபாடுகள் பல காணப் பட்டன. அதன்பின் ஆராய்ச்சியாளர் பிராதிசாக்கியங்களைத் தேடி அவை பாணி னியைவிட ஒலிநூலறிவில் மேம்பட்டன என்றும், தமிழ்த் தொல்காப்பியத்தைத்தேடி அஃது இவற்றினும் நுண்ணறிவு சான்ற தென்றும் கண்டு இப்போது தொல்காப் பியத்தையும் தமிழையுமே ஒலிநூலின் முன்னோடிகளாகப் பின்பற்றத் தொடங்கி யுள்ளார்கள்.

(9) ‘பாணினி ஒலிநூலறிவற்றவர்; தொல்காப்பியத்தையும் பிராதிசாக்கியத் தையும் நன்கு உணராது பிறழ்ந்தவர்’ என்று கண்ட பின்னும், மொழிநூல்துறையில் அவர் சொல்லாக்க விளக்கம், ஒலித் திரிபு விளக்கம் ஆகியவை மேலையறிஞர் களின் வியப்பார்வத்தையே தூண்டின, தூண்டிவருகின்றன. ஆனால் தொல்காப் பியப் பயிற்சி இங்கும் மேலை நாட்டவர்க்குப் புதுப்பாதை காட்டிவருகின்றது. சமசுக் கிருதத்துக்குப் பாணினி வகுத்த சொல்லாக்கம் பெரிதும் தமிழில் அவர் மாணவரான நன்னூலாசிரியரின் சொற்சிதைவு (‘பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் ஆறினும்...எப்பதங்களும்’ என்ற விதி) போன்ற செயற்கைச் சிதைவு ஆகும். இங்கும் தொல்காப்பியர் மொழிநூல் முறை தெரிந்து செல்கிறார். மொழி இயற்கையானது, செயற்கையானதல்ல என்று தெரிந்து முழுதும் ஆராய்ந்து விளக்கம் பெறுமுன் தம் முடிபை மொழி மேல் ஏற்றத் தயங்குகிறார்.

(10) தொல்காப்பியர் மொழிநூலு ணர்வு வியந்தின்புறத்தக்கது என்பதனைப் பல செய்திகள் தெள்ளத் தெளியக் காட்டு கின்றன. (i) சார்பெழுத்துக்களை இட பேதத்தால் மட்டுமே வேறு வேறு எழுத் தாகக் கொள்ளும் நன்னூலார் கருத்துத் தொல்காப்பியரிடம் கிடையாது. எழுத் துக்களை முப்பதாக மட்டுமே (உயிர் 12 + மெய் 18) அவர் கொள்கிறார். ஆய்தமும் குறுகிய இகர உகரமும் சார்பெழுத்துக் களாக அவற்றுடன் ஒருசார வைத்தே கூறப்படுகின்றன. இவை ஒலிக் குறியீடு களல்ல, ஒலித்திரிபுக் குறிகள் மட்டுமே என்பதை அறிஞர் பா. வே. மாணிக்க நாயகர் ஒருவரே கண்டுரைத்தார். அறிஞர் கூறியதே ஏற்புடையது என்பதில் ஐய மில்லை. ஏனெனில் மகரக் குறுக்கத்துக்கும் ஐகார ஔகாரக் குறுக்கத்துக்கும் ஆய்தக் குறுக்கத்துக்கும் இலக்கணம் கூறும் தொல் காப்பியர் அவற்றை எழுத்துக்களாகச் சேர்க்கவில்லை. ஒலித்திரிபுகள் மட்டுமே யாதலால் ஒருசார்வைப்புக்கூட அவற் றுக்கு அளிக்கப்படவில்லை. (ii) சொல்லி லும் இதுபோலத் தொல்காப்பியர் பெய ரும் வினையும் மட்டுமே கொள்கிறார்.

இடையும் உரியும் பெயராகவோ வினை யாகவோ கொள்ளப்படலாம். அவற்றை அடுத்து அசையாகும் நிலையுணர்ந்தே அவர் அவற்றை ஒரு சாரவேனும் வைத்தார். (iii) சொல்லுறுப்புக்களில் பகுதிமட்டுமே சொல்லாக வழங்கு வது. அதிலும் சொல்லாக வழங்கித் தெளிந்த உருவுடையவற்றை மட்டுமே பகுதியாகச் சுட்டி, ஏனையவற்றைத் தொல் காப்பியர் விழிப்புடன் ஈறு, சாரியை என்று மட்டும்வழங்கிச் செல்கிறார். பாணினி யைப் போலவும் பிற்காலத் தமிழ் இலக் கண நூலார் போலவும் எல்லாச் சொல்லை யும் அவர் ஆராயாச் செயற்கை முடிவுட னேயே சிதைக்க எண்ணவில்லை. (iv) மக் கள் வழக்கு இலக்கிய வழக்கு ஆகிய இரண்டுக்கும் பொதுவான சொற்களை இயற்சொல்லென்றும், இலக்கிய வழக்கில் மட்டும் நிலவிய பழஞ் சொற்களைத் திரி சொல்லென்றும், மக்கள் வழக்கில் மட்டும் பெருகலாக உள்ளவற்றைத் திசைச் சொற்களென்றும், அறிவு நூல் வழக்கை வடசொல்லென்றும் தொல்காப்பியர் பிரித்த நயமறியாது உரையாசிரியர்களும் இடைக்காலத்தவர்களும் மயங்கினர். இப் பிரிவு மொழிநூலுணர்வுடையது என்பது குறிப்பிடத்தக்கது (v) 'எல்லாச் சொல் லும் பொருள்குறித் தனவே' என்ற நூற்பா தொல்காப்பியர் மொழிநூற் கோட்பாட்டையும், 'மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்று' என்ற நூற்பா அவர் மொழிநூல் உணர்வையும் தெள்ளத் தெளியக் காட்டுவது ஆகும். பின்னது வருங்கால ஆராய்ச்சிக் குரிய தென்று விடப்பட்டதாகும். (vi) எழுத்த திகாரத்தில் இலக்கணமரபை நூன்மர பாகவும், தமிழ் மொழிக்கே சிறப்பு மரபான வற்றை மொழிமரபாகவும், சொற்கள் இணைந்து ஒரு சொல் நீர்மையாகி வருவன வற்றைப் பிற்காலத்தார்போலப் புணரிய லுள் சேர்க்காமல் தொகைமரபு என வகுத்ததும், உயிராகவோ முழுதும் இயல் பான ஒற்றுகவோ நில்லாது மயங்கும் குற்றியலுகரத்துக்குத் தனிப் புணரியல் வகுத்ததும், பகுதியோ ஈறோமட்டும் தம் காலத்தவர்க்கு அல்லது தமக்கு விளக்க மாகி மற்றது ஆகாத சொற்களைப் பிரிக்க முடியாதன என்று தனி நூற்பாச் செய்த தும் (சொல்: எச்சவியல்: 893; சொல்: உரி: 878 காண்க.) தொல்காப்பியர் தம் மொழிநூல் சார்ந்த நுண்மாண் நுழை புலத்தைக் காட்டுகின்றன. இடைக்காலத் தாரும் உரையாசிரியர்களும் மொழிநூலு ணர்வின்றி இவற்றை மயங்கவும் பிறழவும் பிழைபடவும் உணர்ந்து தடுமாறினர், பிறருக்கும் தடுமாற்றம் உண்டு பண்ணினர்.

தொல்காப்பியத்தின் ஆராய்ச்சி இக் கூறுகளை இன்னும் துருவிக் காணல் வேண்டும். முன்னுள் அறிஞர் பா. வே. மாணிக்க நாயகரும், இந்நாள் அறிஞர் தேவநேயப்பாவாணரும் இத்துறையில் வழிகாட்டிகளாவர். ஆனால் வருங்காலமே மேலை யுலகிலும் இங்கும் புத்தாராய்ச்சி ஒளிமூலம் மெய்ந்நிலை விளக்க முற்பட வேண்டும்.

---

## தொல்காப்பியப் பழமை

தொல்காப்பியம் கி. மு. மூன்றாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதெனக் கொள் வதற்கு அதனகத்திற்றானே பல சான்றுகள் காணப் பெறுகின்றன. தொல்காப் பியம் எழுத்ததிகாரம் சூ. 24, 27, 28-களால் அக்காலத்து ஞ்ய, ந்ய, ம்ய, ம்வ என மொழிக்கிடையில் வருஞ் சொற்கள் உண்டு என விளங்குகின்றது. இக் காலத்துள்ள தமிழ் நூல்கள் ஒன்றிலேனும் அவ் வகையான சொற்கள் காணப் படவில்லை. கி. பி. முதல் நூற்றாண்டில் செய்யப்பட்ட திருக்குறளிலும் அவ்வகை யான சொற்கள் ஆளப்படவில்லை. அவ்வகையான சொற்கள் வழங்கிய காலம் குறைந்தபட்சம் திருக்குறளுக்கு மூன்று நூற்றாண்டு வரையிலிருத்தல் கூடும்.

—ந. சி. கந்தையா பிள்ளை, ''தமிழகம்''.

# அறத்தாறு எது?

[இராவ்சாகெப் திரு. K. கோதண்டபாணி பிள்ளை]

'ஆராய்ச்சி வல்லுநர்' என அழைக்கப்பெறும் இவர், 29-10-1896 இல் தோன்றினார். தந்தையார் பெயர் குப்புசாமிப் பிள்ளை என்பதாகும். பி. ஏ. பட்டம் பெற்றவர். மாவட்டத் தண்டல் தலைவர், அயல்நாட்டுச் செல்கைக் கட்டுப்பாட்டாளர் ஆகிய பதவிகளில் பிறர் பாராட்டும் வண்ணம் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். இவரின் பண்பையும், பணியாற்றும் திறனையும் பாராட்டி அக்கால அரசினர் "இராவ் சாகெப்" என்னும் பட்டம் வழங்கினர். பின்னத்தூர்



நாராயணசாமி ஐயர், பண்டித சௌரிராயன் ஆகிய பெரியார்களிடத்தே தமிழ் பயின்றார். இவர்தம் ஆராய்ச்சிப் புலமைக்குச் சான்றாக 'நெடுநல்வாடைப் பொருள்நலன்', 'நெடுநல்வாடைப்பாநலன்', 'முதற்குறள் உவமை', 'பழந்தமிழ் இசை', 'ஈரடி இருநூறு', 'தரைச் செலவு', 'மங்கையர்க்கரசி', 'பங்கயச்செல்வி' ஆகிய நூல்கள் விளங்குகின்றன. தமிழ் எழுத்தாளர் சங்கத்தார் எட்டாவது மாநாட்டில் (1960) இவருக்குப் பாராட்டுக்கேடயம் வழங்கினர்.

"அறத்தாறு எது?, என்னும் வினாவிற்கு விடை திருக்குறள் பகர்கின்றது. விடைதரும் குறட்பாவைக் கீழே காண்க:

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தான் இடை."
(குறள்—37)

எழுந்த வினாவிற்கு இக்குறள் விடையாக அமைந்த போதிலும், இதன் பொருள் விளங்கவில்லை. இக் குறளுக்குப் பலர் பலவாறு பொருள் கூறுகின்றனர். சிறந்த உரையாசிரியராகிய பரிமேலழகர் உரையைக் காண்போம்:

"அறத்து ஆறு இது என வேண்டா —அறத்தின் பயன் இது என்று யாம் ஆகம அளவையான் உணர்த்தல் வேண்டா, சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை—சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காட்சியளவை தன்னானே உணரப்படும்" என்பது அவர் கூறிய உரை. "அறம் செய்தவன், அதன் பயனாகச் சிவிகையில் ஏறிச் செல்கின்றான். அறம் செய்யாதவன் [அல்லது மறம் (பாவம்) செய்தவன்] சிவிகையைச் சுமந்து செல்கின்றான். சிவிகையில் ஏறிச் செல்வானிடத்திலும் சுமந்து செல்வானிடத்திலும் அறத்தின் பயனைக் கண்ணாற் கண்டுகொள்ளலாம். அறம்தந்த பயன் இவை என்பதற்கு வேறு சான்றுகள் வேண்டா," என்பது அவர் உரையின் கருத்தாகக் கொள்ளலாம்.

இக்காலத்தில், எவர் உரையும் படாத பாடு, பரிமேலழகர் உரையே படுகின்றது. ஆராயும் தன்மை வாய்ந்தது, ஆயும் அறிவிற்குப் போதிய வாய்ப்பு அளிப்பது அறிவாளிகளின் உரையே; ஏனையோர் உரையன்று. உரையாசிரியர்களிற் சிறந்த அறிவாளர் பரிமேலழகர்; ஆதலின், அவர் உரையையே பலரும் ஆய்கின்றனர்; பற்பல வகைகளில் ஆராய்கின்றனர். அவர் உரையிற் காணும் நுட்பங்கள் பற்பல. வேறு எவர் உரையிலும் காணாத பொருள் நுட்பங்களை, பற்பல இலக்கண நுட்பங்களை, அவர் உரையிற் காணலாம். ஆனால், குறை பாடுகளும், சில இடங்களில் காணப்படுவன. அவர் உரைநலத்தைப் பாராட்டுவதோடு அவர் குறைகளை எடுத்து ஆராய்தலும் தவறன்று; முறையேயாகும். இலக்கண வரம்பில் நின்று, தமிழ் இலக்கிய மரபும் தமிழ்மக்களின் பண்பாட்டு மரபும் வழாமல், குறைகளை எடுத்துக் காட்ட முடியுமானால், பரிமேலழகரே அவற்றை விரும்புவர். உண்மை உரையைக் காண்பதுதானே அவர் நோக்கம்?

பரிமேலழகருக்குப் பரிந்து உரைப்பாரை விட, பரிமேலழகரே இத்தகு ஆராய்ச்சியை மேற்கொள்ளத் தூண்டுவர். இவ்வாராய்ச்சியின் முடிவு, அறிவுநிலைக்கும் மரபின் மாண்பிற்கும் பொருந்துமெனின், அதை ஏற்றுக்கொள்ளவும் செய்வர்.

### உரையிற் காணும் குறைகள்

மேலே கூறிய உரையில் முதலாகக் காணும் குறைபாடு 'அறத்தாறு' என்பதற்குப் பரிமேலழகர் 'அறத்தின்பயன்' எனப் பொருள் கண்டதாகும். ஆறு என்பது, வழி எனப் பொருள்தரும், அஃது எவ்வாறு பயன் என்று பொருள்படும் என்பது வியப்பைத் தருகின்றது. ஆறு என்பது, வேறு எந்த இடத்திலும், இப்பொருளில் ஆளப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் பரிமேலழகரோ, அவ்வாறு, தாம் உரை கண்டதற்குக் காரணமும் காட்டுகின்றார். 'பயனை ஆறு என்றார், பின்னதாகலின்,' என்பது அவர்காட்டும் காரணம். இச்சிறு குறிப்பின் பொருளைக் காணவே பெருமுயற்சி வேண்டும்.

நாம் நடந்து செல்லும் இடங்களில் அடிச்சுவடு பட்டு ஒரு பாதை (அல்லது ஆறு) ஏற்படுகின்றது. அப்பாதை நாம் நடந்ததன் பயனாய் ஏற்படுவது; நாம் நடந்தபின் ஏற்படுவது. இதே போன்றது அறத்தின் வழியும். அறத்திற்குக் கால்கள் இலவாயினும், அது சென்ற அடிச்சுவட்டைக் காணுதல் கூடும். அறம் சென்ற இடத்திலெல்லாம் அதன் பயனைக் காணலாம். அறத்தின் பயன் அதன்பின் அதைத்தொடர்ந்தே செல்வது. ஆதலின், அறம் சென்ற இடங்களில் எல்லாம் அதன் பயனாகிய அடிச்சுவட்டை அதன் பின் பதிய விட்டே அறம் செல்கிறது. அறத்தின் பயன் (அடிச்சுவடு) எங்கெங்குக் காணப்படுகின்றதோ அவைதாம் அறம் சென்றவழி எனக் காணமுடியும். ஆதலின், அறம் தன் பின்னே விட்டுச் சென்ற பயனே அறத்தாறு—அறம் சென்ற பாதை — ஆமாறு காண்க. இவற்றைக் கருதியே பரிமேலழகர் "பயனை ஆறு என்றார், அது பின்னதாகலின்," என்னும் காரணக் குறிப்பை எழுதிச் சென்றார். பரிமேலழகர் கண்ட உரைக்கு அவர் காட்டும் காரணம் தக்க காரணமாகவே அமைகின்றது. இவ்வாறு, ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்டவை, அவர் குறித்துச் செல்லும் குறிப்புக்களிற் பல உள. அவர் உரையின் ஆழமும் சுருக்கமும்,குறளை அறிவதைவிட,அவர் உரையை அறிவதையே கடினமாக்குகின்றன.

இங்குப் பரிமேலழகர் காட்டிய காரணம் மிக்க நுட்பம் வாய்ந்தது. இந்நுண்ணறிவாளர் அன்றி வேறு யாரால் ஆறு, பயன் என்று காட்டுதல் கூடும்! எவ்வளவு கூர்த்த மதியைக்கொண்டு, எவ்வளவு ஆழ்ந்து ஆழ்ந்து கருதி, இவ்வுரையைக் கண்டிருத்தல் வேண்டும்? கருதுக. பரிமேலழகர் எத்தகு நுண்ணிய அறிவினர், எத்தகு திண்ணிய உரைநடையினர் என்பதை, அவர்தம் இச்சிறு குறிப்பு ஒன்றே காட்டிவிடும். அரிதிற்கண்ட அவர் உரை பொருந்தாதாவதே வருத்தம் தருவதாகின்றது. அவர் உரை எவ்வாறு பொருந்தாதாகின்றது என்பதைப் பின்னர்க் காண்போம்.

மற்றொரு குறையும் அவர் உரையில் காணப்படுகின்றது. 'இடை' என்ற சொல்லில், "பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை" என்று, இக்குறள் முடிகின்றது. இங்கு 'இடை' என்பதற்கு இடத்தில் எனப் பொருள் கொண்டு 'பொறுத்தானோடு ஊர்ந்தானிடத்தில் உணரப்படும்' என, அவர் உரைகண்டார். 'இடை' என்பதற்கு இடத்தில் எனப் பொருள் உணர்த்தியதோடு 'உணரப்படும்' என்னும் சொல்லையும் வருவித்துப் பொருள் கண்டார். 'உணரப்படும்' என்னும் சொல்லோ, அப்பொருளைத் தரும் வேறு சொல்லோ குறளில் இல்லை. குறளில் உள்ள சொற்களைக் கொண்டே பொருள் காணுதல் இயலாதெனின், பொருந்திய ஒரு சொல்லை வருவித்தல் முறையாகும். குறளில் உள்ள சொற்களே முழுப் பொருளையும் தருமானால் மற்றொரு சொல்லை வருவித்தல் மிகையாகின்றது. இவ்வாறு ஒரு சொல்லை வருவித்து உரை கண்டதற்கும் பரிமேலழகர் ஒரு காரணம் காட்டுகின்றார். "உணரப்படும் என்பது சொல்லெச்சம்" என்பது அவர் எழுதிய சிறுகுறிப்பு.

கூறவேண்டுவன வெல்லாம் முற்றக் கூறுதல் உரை நடையின் பண்பு. சொற்களை எஞ்சவிட்டுக் கூறுதல் பாக்களில் காணப்படும் ஒருவகைப் பாநலம். சுருங்கிய அடிகளைக் கொண்ட பாக்களில் கூற வேண்டிய எல்லாவற்றையும் கூறி முடிப்பது இயலாததாகின்றது. எல்லாவற்றையும் கூறுவதனல் பாவியல் பண்பு குறைவுபடும். அவ்வாறு கூறுவதால் அப்பாட்டின் நடையே உரைநடையாக மாற்றமும் பெறும். ஆதலின், பா நலத்தைப் பெருக்கச் சில சொற்களை எஞ்சவிட்டும் குறிப்பால் பொருள் உணர்த்தியும் பாவலர் கூறுவர். இவ்வாறு எஞ்சவிடும் சொல்லைச் 'சொல்லெச்சம்' என்பர். எஞ்சவிட்ட சொற்களைக் காணும் முயற்சி, சிந்தனையைத் தூண்டுவது; கற்பனையை எழுப்புவது; மனக்கண்ணைத் திறப்பது. ஆதலின், சொல்லெச்சத்தைப் புலவர் பெருமக்கள் விரும்பியே பாக்களில் கையாண்டார்கள். இப்பாவியல் பண்பைப் பரிமேலழகர் இப்பாட்டில் கண்டார். கண்டார் என்பதை "உணரப்படும் என்பது சொல்லெச்சம்" என்னும் அவர் சிறு குறிப்பு உணர்த்தும். ஆனல், இச்சொல்லெச்சமின்றியே பொருள் தருமாறு குறள் அமைந்துள்ளதையும் நாம் காண்போம்.

## உரைக்கு மறுப்பு

இக் குறளுக்குப் பரிமேலழகர் கூறிய உரையை மறுத்தவர்களுள் முன்னிற்பவர் சிவப்பிரகாச சுவாமிகள் என்னும் புலவர் பெருமகனர், மரபு வழா மதிநுட்பம் வாய்ந்தவர். அவர் இயற்றிய நால்வர் நான்மணி மாலையில் அவர் கூறுவதாவது:

"அறத்தா றிது வென வேண்டா சிவிகை
பொறுத்தானெ டூர்ந்தா னிடையை—மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்
றுந்துஞ் சிவிகையினை ஊர்ந்து."

சம்பந்தர் சிவிகையைத் தூக்கிச் சென்றவர்களும் பரிமேலழகர் கருத்தின்படி பாவிகள் அல்லது அறம் செய்யாதவர் ஆதல் வேண்டும். ஆனல், அவர்கள் அவ்வாறு இதுகாறும் கருதப்பட்டார் அல்லர். அவ்வாறு கருதலும் பண்பாட்டின் மரபாக அமையவில்லை. சம்பந்தர் சிவிகை ஊர்ந்து செல்லும்போது அப்பர் பெருமான், மெய்யுணர்வு கைவரப் பெற்றவர், சம்பந்தரைவிட வயதில் முதிர்ந்தவர், தம்மை இன்னர் என்று காட்டிக்கொள்ளாமலே, சம்பந்தர் சிவிகையைத் தாங்கிச் சென்றார் என்று வரலாறு காட்டுகின்றது. 'குழவிப் பருவத்திலேயே மெய்யுணர்வு பெற்ற ஞானத்தின் இளங்கன்றைச் சுமந்து செல்லும் பேறு பெறுதல் வேண்டும்; அதுவே நல்லறம்,' எனக் கருதினர் அப்பர் பெருமான். ஆதலின் தாமே சென்று சம்பந்தர் சிவிகையைச் சுமந்து நடந்தார்; அவர் சுமந்தது, சுமக்கும் ஆள் வேறு இல்லாமையால் அன்று. சம்பந்தரை அவர் சென்ற இடமெல்லாம் சுமந்து சென்ற மற்றவர்களும் பாவிகள் அல்லது அறம் செய்யாதவர்கள் ஆகார். சிவிகை பொறுத்துச் சென்ற அவர்களும் பேரறம் செய்தவர்களே. ஆதலின், 'சம்பந்தன் சிவிகை பரித்தார்,' (சம்பந்தன் சிவிகையைச் சுமந்து சென்றவர்), 'திரிகுவர் மற்றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து' வானுலகத்திலே தேவர்கள் சுமந்து செல்லும் சிவிகையில் ஏறி, உந்திச் செலுத்தத் தேவர்கள் சுமந்து செல்லத் திரிவர். முன்பு சிவிகை சுமந்தவர் இப்போது சிவிகை ஊர்ந்து திரிகின்றனர். இவ்வாறு உந்தும் சிவிகை ஊர்ந்து திரிபவர் பரிமேலழகர் உரையை மறுக்கின்றனர். உரையாசிரியரை மறுத்தது மட்டுமோ? 'அறத்தாறிது வென வேண்டா,' என்னும் குறளையே மறுத்தார் என முடிக்கின்ருர், சிவப்பிரகாசர். அந்தோ! உரையிற் படிந்த மாசு குறளையும் தாவிற்று. அதன் ஆசிரியரையும் மாசுறச் செய்தது போலும்!

பரிமேலழகர், இப் புலவர் பெருமகனரைப் போன்ற மதிநுட்பம் வாய்ந்தவரே. சிவப்பிரகாசர் கூறிய இந் நுட்பம் பரிமேலழகருக்கு ஏன் புலப்பட்டிலது? சம்பந்தர் காலத்தில் சிவிகை பொறுத்தல் இழி தொழிலாகவோ அறம் அற்ருர் செயலாகவோ கருதப்படவில்லை. மெய்யுணர் வாளர்களைத் தூக்கிச் செல்வதே பெரும் பேறு எனக் கருதிய காலம் அது. இதன் உண்மையை அப்பர் பெருமான் செயலிற் கண்டோம். ஆனல், பரிமேலழகர் காலத்தில், சிவிகை சுமத்தல் அவ்வாறு கருதப்

படவில்லை. குருமார்களுக்கு என்றே (மெய்ப்பொருளாளர்களுக்கே) அமைந்திருந்த சிவிகை, பொய்ப்பொருளாளர்கட்கும் பொருந்துவதாயிற்று. சிவிகை பொறுத்தலே ஒரு தொழிலாக, மக்களிடையே அமைந்தது போலும்! ஆதலின், அஃது இழிதொழிலாக,பாவிகள், அறம் அற்றோர் தொழிலாகவும் கருதப் பட்டது. மனிதனை மனிதன் சுமந்து செல்வது அறம் ஆகுமோ? ஆகாது. இழிதொழிலே ஆகும். ஆதலின், பரிமேலழகர் மேலே கூறியவாறு உரை கண்டார். ஆனால், சிவப்பிரகாசரோ வரலாற்றுக்கண் கொண்டு, குருமார்களின் நிலையில் நின்று, குறளையும் அதன் உரையையும் கண்டார். பரிமேலழகர் உரையையன்றிக் குறளையே மறுத்தார்.

ஆனால், திருவள்ளுவர் காலத்தில் சிவிகை பொறுத்தலும் ஊர்தலும் எவ்வாறு இருந்தன என்பது இக் குறள் உரைக்கு வேண்டற்பாலதன்று. ஆறு என்பதற்குப் பயன் எனக் கொண்டு சிவிகை ஊர்தல் அறத்தின் பயன் என்றும், அறம் அற்றோர் எய்தும் பயன் சுமந்து செல்வது என்றும் உரை கண்டால்தானே, சிவிகையைச் சுமக்கும் தொழில், வள்ளுவர் காலத்தில் எவ்வாறு கருதப்பட்டது என்பதைத் தெரிதல் வேண்டும்? வள்ளுவர் இங்குச் சிவிகையைப் பொறுத்தானையும் ஊர்ந்தானையும் எடுத்துக் காட்டுவது வேறு பொருளை உணர்த்துதற்பொருட்டேயன்றி, அறப்பயனை உணர்த்தற்கு அன்று.

### வேறு பொருள்

இடை என்னும் சொல் இடைச்சொல் லாகுதல் அன்றிப் பெயர்ச்சொல்லும் ஆகும். இடைச்சொல்லாகும்போது, இடையே, இடையாக, இடையில், இடத்தில் என இடப்பொருளை உணர்த்தும். இடை என்னும் சொல்லே பெயர்ச்சொல் லாகும்போது வழி எனவும் பொருள்படும். சங்க நூல்களில் பல இடங்களில் பெயர்ச் சொல்லாக இப் பொருளில் இடை என்னும் சொல் ஆளப்பட்டுள்ளது. அவற்றுள் சிலவற்றைக் கீழே காண்க:

புறம் 3-10 ‘நீரில்ல நீள் இடைய’
(நீண்ட வழியினை உடைய)

புறம் 370-9 ‘கழைகாய்ந்து உலறிய
வறங்கூர் நீளிடை’

குறுந்தொகை 331-1
‘நெடுங்கழை திரங்கிய நீரில் ஆரிடை’
(அரிய வழி)

,, 356-1 ‘நிழலான் றவிந்த நீரில் ஆரிடை’
(நீரில்லாத அரிய வழி)

,, 396-7 ‘கழைதிரங்கு ஆரிடை அவனொடு
[செலவே.’

இடையெனும் சொல்லைப் பெயர்ச் சொல்லாகக் கொண்டால், ‘அறத்தாறு இதுவென வேண்டா—அறத்தின் வழி இது எனச் சொல்ல வேண்டா. அது சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் வழியே ஆகும்’, என இக் குறளுக்குப் பொருள் காணலாம்.

‘‘பொய்யாமொழிப் பெருந்தகையே! இல்லறமே உயர்ந்தது என இல்லற இயலில் உணர்த்தினீர். பிறகு துறவறமே சிறந்தது எனத் தோன்றுமாறு துறவற வியலில் கூறினீர். ஆதலின், அறத்து ஆறு கவர்படுகின்றது; மயக்கம் தருகின்றது. ‘அறத்தாறு எது?’ என்ற வினாவிற்கு இக் குறள் விடை கூறுகின்றது. “அறத்தாறு இதுவென வேண்டா; இரண்டு பாதைகள் இருந்தால் அல்லவோ அறத்தாறு எது எனச் சுட்டிக்காட்டுதல் வேண்டும். இரண்டு பாதைகள் இங்கு இல்லை! இருவேறு வழிகளை நான் உணர்த்தவில்லையே! இரண்டு பாதைகளாகக் காட்டுவது மயக்க உணர்வும் தெளிவின்மையும் ஆகும். இரண்டு வழிகளே இல்லையாதலின், அறத்தாறு இதுவென வேண்டா. சிவிகை பொறுத்தானுக்கு ஒருவழி ஊர்ந்தானுக்கு வேறு வழி என்பது எங்கேயாவது உண்டோ? ஊர்ந்தானுக்கு எது வழியோ அதுவே பொறுத்தானுக்கும் வழி. ஊர்ந்தானுக்கும் பொறுத்தானுக்கும் ஒரு வழியே. அதுவே போன்றது என் அறத்தாறு. இல்லறத்திற்கும் துறவுக்கும் ஒரே வழி,” என விடை பகர்கின்றார் வள்ளுவர். இங்கு ‘இடை’ என்னும் பெயர்ச்சொல்லே வினைமுற்றாகின்றது. இங்கு ‘ஆறு’ பயனாவது இல்லை. உணரப்படும் என்னும் சொல்லெச்சத்தை வருந்தியழைத்தாலும் அது வாராது, வந்

தாலும் இங்குப் பொருந்தாது என்பதையும் காண்க.

## கூறிய வேறு பொருளுக்கு உறுதிபயப்பவை

இக் குறள் பாயிரத்தில் கூறப்பட்டது; நூலுள் கூறப்பட்டதன்று. நூலுக்குப் புறத்தே அமைந்து நூலுட் புகுவோரை நிறுத்தி, 'நூலுள் காணும் பொருளை எவ்வாறு கருதுதல் வேண்டும்? எவ்வாறு துணிதல் வேண்டும்?' என வழிகாட்டிய பின் நூலுள் புகுமாறு செய்வது பாயிரம். பாயிரத்தின் பண்புகளைக் கருத்துட் கொண்டே இக் குறளுக்கு உரை காணுதல் வேண்டும். பாயிரத்தின் பண்பை விளக்க உரையாசிரியர்கள் பற்பல உவமைகள் தந்துள்ளார்கள். அவற்றை ஆராய்ந்தால் இங்குக் கூறிய உரையின் பொருத்தம் நன்கு விளங்கும்; கூறிய புத்துரைக்கு உறுதியும் காணலாம். பாயிரத்தை விளக்கும் உவமைகளுள் ஒன்றனை இங்கு ஆராய்ந்து பாயிரத்தின் பண்பினை உணர்வோம்.

*"பாயிரம் கேளாக்கால் குன்று முட்டிய குரீஇப் போலவுங்*
*குறிச்சி புக்க மான் போலவும் மாணுக்கன் இடர்ப்படுமென்க"*

என்பது உரையாசிரியர்கள் தரும் விளக்கங்களில் ஒன்று. இதிற் காணும் இரண்டு உவமைகளுள் 'குறிச்சிபுக்க மான் போல' என்னும் உவமை ஒன்றே (இக்குறளை விளக்கப் போதிய) பாயிரத்தின் பண்பை உணர்த்துவதாகும். ஆதலின், இவ்வுவமைகளுள் 'குறிச்சிபுக்க மான்போல' என்பதை முதலில் ஆராய்வோம்.

குறிச்சி என்பது மலைநாட்டு ஊர். குறிஞ்சி நிலத்தில் உள்ள ஊர் குறிச்சி எனப் பெயர்பெறும். மலையும் மலைக்காடும் மிக்கது குறிஞ்சி. அக்காட்டில் இயற்கையே பிறந்து வளர்ந்த மான் குறிச்சியில் (மலை நாட்டு ஊருக்குள்) புக்கது. மீண்டும் தான் பிறந்து வளர்ந்த காட்டை அடைய எது வழியென அறியாது மயங்குகின்றது. ஒரு தெருவின் வழியே ஓடுகின்றது. அங்கு மக்கள் காணப்படுகின்றார்கள். அவர்கள் தன்னைப் பிடித்துக்கொள்வார்களாதலின், அது வழியன்று என மருண்டு வேறு வழியை நாடுகின்றது. அங்கும் பற்பல மக்கள் வில்லும் வேலும் வாளும் தாங்கிப் பணியாற்றச் செல்கின்றார்கள். அந்தோ! 'முன் கண்ட வழியினும் கொடுமையை உடைத்து இவ்வழி. இவ் வழியே சென்றால் துன்பம் பல விளையுமே!' என அஞ்சுகிறது மான். எந்த வழியை மேற்கொள்ளுவது என அறியாது மயங்கித் தவிக்கின்றது. அவ்வாறே, பாயிரத்தைப் படியாது திருக்குறளைப் படித்த மாணுக்கனும் மயங்குகின்றான்; வள்ளுவரை வினவுகின்றான்: "பெருந்தகையீர்! 'அறம் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்றீர். 'இல்வாழ்பவன் என்பான் முயல்வாருள் எல்லாம் தலை' என்றீர். அந்தோ! இல்லறமே பிறவிக் கடலினும் பெருங்கடல் என்பர். அதிற்பட்டோர் உறுவது மட்டிலாத் துன்பம், அதிலிருந்து கரையேறுதல் அரிதினும் அரிது; சையம் பூண்டு சமுத்திரம் நீந்துவதை ஒக்கும்,' என்றெல்லாம் கூறுகின்றார்களே! இவ்வாறு கூறுவது தவறு என ஒருதலைத் துணிந்து கூறினீர் அல்லீர். துறவறத்தையும் உயர்த்தி நீத்தார் பெருமையைப் புகழ்கின்றீர். நீத்தார் பெருமையே உலகின்கண் உயர்ந்தது என்கின்றீர். 'வேண்டின் உண்டாகத் துறக்க' என்கிறீர், 'துறந்தோர் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்' என்று வற்புறுத்துகிறீர். துறவோ, தாங்குதற்கு அரியது. உடையைத் துறந்தும், உண்ணுதொழிந்தும், உடலை ஒறுத்தும், நடுங்க நோற்றும், தளரும் யாக்கையைத் தளரச் செய்வது யாரால் இயன்றது? இவ்வழிச் செல்வதும் பெருந்துன்பம் தரும் போலும்! இத் துன்பத்தோற்றத்தோடுகூடக் குறள் நூல் உணர்த்துவதும் வழியும் கவர்படு வழியாகவே காணப்படுகின்றது. எவ்வழி யான் செல்வேன்! அறத்தாறு எது?" எனக் குறிச்சி புக்க மான்போல மருண்டு இடர்ப்படும் மாணுக்கனுக்குப் பாயிரம் பயன்படுகின்றது; பாயிரத்தில் பெய்து அமைத்த இக் குறள் வழி காட்டுகின்றது.

"உன்புலன்களும் உன் அறிவும் உன்னை மயக்கின. விரைந்து சுழலும் பம்பரத்தை அசையாது நிற்பது எனக்

காட்டும் புலனும் அறிவும் போன்றன உன்புலனும் அப்புலன் தரும் அறிவும். உற்றுப்பார். கண்ணை மறைக்கும் மாசினை நீக்கிப்பார். 'இருமை (இல்லறம் துறவறம் எனும் இருதன்மையின்) வகை தெரிந்து' அறம் பூண்க. அறத்தால் வருவதே இன்பம், துன்பம் யாண்டுளது? 'உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே' யாம் கூறும் தவத்திற்கு உரு. உடலை ஒறுத்தலும் நடுங்க நோற்றலும் யாண்டுளது? துன்பம் என்பது இயற்கையின் கூறு. துன்பம் இல்வாழ்விற்கும் துறவிற்கும் பொதுவானது. துன்பத்தை மாற்றுவது அன்பு. இவ்வியற்கைத் துன்பத்திற்கு அஞ்சி ஓடாது, ஒளியாது, துன்பம் சுடச்சுட நோற்பவன் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும். எம் அறத்தில் கவர்படு வழிகள், இரண்டு வழிகள் எங்கே உள? இரண்டெனக் கண்டது உன் காட்சியின் குற்றம். சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் வழியே எம் அறத்தின் வழி,'' எனத் தெளிவு தருகின்றார் வள்ளுவர் என இப்பாயிரக் குறளும் பாயிரத்தின்வழி யாத்த அவர் நூலும் காட்டும்.

பாயிரத்தில் இக்குறளைப் பெய்ததோடு நின்றாரிலர் வள்ளுவர். தமிழ்நாடு பாயிரத்தின் நுட்பத்தையும் ஆழத்தையும் அறியாத காலம் உளதாகும். பாயிரத்தை வள்ளுவர் இயற்றினர் இலர் என்றே கூறுவாருமுளராவர் என்பதை வள்ளுவர் அறிவார் போலும்! ஆதலின், இக்குறளைக் கூறும் அதிகாரத்திற்கே 'அறன் வலியுறுத்தல்' எனப் பெயரிட்டார். அறத்தை நூலுள் விரிவாகக் கூறியது போதாதாகுமோ? அதை ஏன் வலியுறுத்தல் வேண்டும் என்பதைக் கருதிக்காண்க. குறள்கள் எல்லாம் பத்துப் பத்தாகச் சேர்ந்து, பற்பல தலைப்பின் கீழ்ச் சிதறுண்டு கிடக்கின்றன. இவற்றை யெல்லாம் தக்கவாறு பிணித்து, இந்நூலுக்கே முழுமை சேர்ப்பது பாயிரம் ஆகும். இல்வாழ்க்கை, துறவு எனப் பிளவுபடக் காண்பதை இக்குறள் ஒன்றுசேர்த்துப் பிணித்து வலியுறச் செய்கிறது. இவற்றைப் பிணித்து, இல்வாழ்க்கையும் துறவும் ஒரே நெறியென ஒருமைப்பாடு இக்குறள் உணர்த்தாதாயின், வள்ளுவர் கூறிய அறமே வலியற்றதாகும். சமணர் புத்தர் கூறிய அறமே வள்ளுவர் அறம் என வலிவிழந்து நிற்கும். அவ்வாறு அன்று என்றும், வள்ளுவர் அறம் இல்லறம் துறவு என வேறு வழிகள் கொண்டதெனப் பிழைபடும் உணர்வை அகற்றியும் இக்குறள் அறன் வலியுறுத்தும் ஆற்றலைக் காண்க.

வள்ளுவர் காட்டிய துறவு புத்தர், சமணர் காட்டிய துறவினின்றும் வேறாகும். வேறு என்பதைக் காட்ட, இக்குறளே சான்றாக அமைகின்றது. இவ்வுண்மையை எடுத்துக்காட்ட வேறு சான்று எங்குளது? தேடுக. தமிழர் துறவு இல்லறத்தை வெறுக்கும் பொல்லாத் துறவு அன்று. இல்லறத்தினின்று தூய்மை அடைந்தது துறவு. இல்லறத்தின் உயர்வே தமிழன் துறவு. இல்லறமின்றேல், துறவின்று. சிவிகை பொறுப்பானில்லையேல், ஊர்வானில்லை. ஊர்வானில்லையேல், பொறுப்பானுமில்லை. இவ்வாறே இல்லறமும் துறவறமும் பிணிப்புண்டு அமைவன. இவ்வாறு கொள்ளார் சமணரும் புத்தரும். தமிழ்மரபின்படி இல்லறத்தினின்றும் எழாத் துறவு சிறப்பதில்லை. துறவில் உயரா இல்லறமும் சிறப்பதில்லை. "ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து, வேண்டும் பனுவல் துணிவு.'' இல்லற ஒழுக்கத்தின்கண் நின்று நீத்தார் பெருமையையே விழுமியதாகக் கொள்வது தமிழ் மரபு. இதுவே தமிழ்மக்கள் கண்ட நெறி, வள்ளுவர் கூறும் நெறி, நாயன்மார்களும் ஆழ்வார்களும் வாழ்ந்து காட்டிய நெறி, உயர்தனிச் செந்நெறி. அறத்தாறு எது என உணர்த்தி, அதுவே தமிழன் பண்பாட்டின் மரபு, பண்பாட்டின் உயர்வு, என்பதற்குச் சான்று பகர்கின்றது, அதையே வலியுறுத்துகின்றது, இக்குறள்.

### காமமும் துறவும் ஒருவழிப்படுதல்

''வள்ளுவர் காமத்துப்பாலைக் கடைசியில் உய்ப்பினும் இல்லறத் தொடர்பை அஃது ஏற்றே நிற்பது. இல்லறம் ஏற்ற காமமும் துறவும் எவ்வாறு ஒன்றுபடும்? ஒருவழிப்படும்?" என மருண்டாரும் உளர். மருண்டது மட்டுமோ! ''அப்பால் கொள்ளத் தக்கவை எவை உள?" எனக் ''குன்றுமுட்டிய குரீஇப் போலத்'' திரும்பினாரும் உளர்.

பெண்மக்களை வெறுப்பது தமிழ் மரபன்று; வள்ளுவர் அறமும் அன்று. பெண்மையைக் கண்டு, ஓடி ஒளிந்து, வெற்றி காண்பதன்று வள்ளுவர் அறம். பெண்மையுடன் பழகியும் பயின்றும் வெற்றி பெறும் ஆற்றை உணர்த்துவது அவர் அறம். ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழும் வாழ்வால், மென்மை பெறுவது எங்ஙனம், திண்மை உறுவது எங்ஙனம் என விளக்குவதும் வள்ளுவர் அறம்.

பாயிரத்தில் அமைந்த மற்றெரு குறளையும் சற்றுக் கருதுவோம். ''சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்றைந்தின் வகைதெரிவான் கட்டே உலகு" என்று உணர்த்துகின்றது, பாயிரத்தில் அமைந்த நீத்தார் பெருமை. இவற்றின்வகை தெரிவது எங்கு? எவ்வாறு? இவற்றிற்கு விடை காமத்துப்பால் பகர்வது வியப்பாகின்றது. ''கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் ஒள்தொடி கண்ணே உள'' எனச் சுட்டிக் காட்டுகின்றது காமத்துப் பால். காமத்துப்பாலை அதனுள்ளும் மகிழ்தலை நீத்தார் பெருமையுடன் இணைத்த நுட்பத்தை ஆழ்ந்து கருதல் வேண்டும். உலகையே தன் ஆற்றலுக் குள்ளாக்கும் நீத்தார் பெருமை எங்கிருந்து தொடங்குகிறது என்பதை அறிக! பாயிரம்தரும் ஒளியைக் கொண்டு இக் குறளின் பொருளைத் தேர்தல் வேண்டும்.

இங்கு வள்ளுவர் கூறுவது 'அறியும் ஐம்புலன்', நுகரும் ஐம்புலன் அல்ல. நுகரும் ஐம்புலன், விலங்கின் தன்மையைத் தருவன. இவற்றின் பெருமையைக் கண்டவர், நுகர்வின் பெருமகனுர் வாத்சாயனர். ''நுகர்க, நுகர்க, நுகர்வின் பெரும் பயன் பெறுக'' என ஊக்குவது, அவற்றிற்கு ஏற்ற வழிகளை வகுப்பது, அவர் நூல்; மக்களை மாக்களாக இழியச் செய்வதும் அது. வள்ளுவர் என்னும் அறிவின் பெருமகனுர் கண்டவை, அறியும் ஐம்புலன். இவை, மனித இயல்பினுள் பதுங்கிக் கிடக்கும் விலங்கின் தன்மையைத் தணிப்பன, மாற்றுவன, உயிர்ப்பண்பை வளர்ப்பன. மனத்தின் மாசைப் போக்குவன.

''அறியும் ஐம்புலனை அறிக, விலங்கின் தன்மையினின்றும் எழுக, உடல் நலமன்றி உயிர்நலம் பருகப் பழகுக, உயிர்ப் பண்பில் உயர்ந்து உயர்ந்து நீத்தார் பெருமையை அடைக'' என ஊக்குவது, அவற்றிற்கான வழிகளை வகுப்பது வள்ளுவர் நூல்.

இவ்வறிவால் பெறுவது வெறுப்பன்று, மகிழ்ச்சி; உறுதொறும் உறுதொறும் (1106 குறள்) உயிர் தளிர்ப்பப் பெறுகின்ற மகிழ்ச்சி; உடல் தளிர்க்கப் பெறும் மகிழ்ச்சியன்று. அதிகாரத் தலைப்புடன் இணைத்துக் "கண்டு கேட்டு உண்டு உயிர்த்து" என்னும் குறளுக்குப் பொருள் காணலும் வேண்டும். மகிழ்தலை முடிவில் தாங்கி நிற்கின்றது இவ்வதிகாரத்தின் பெயர். இவ்வதிகாரத்தால் உணர்த்தப் பட்டவை எல்லாம் மகிழ்தலையே தருவன. மகிழ்தல் அன்றி வேறில்லை என உணர்த்தவே அதிகாரத் தலைப்பு மகிழ்தலை ஏற்றுள்ளது. ஆதலின் இங்கு உணர்த்தப் பட்டது எதுவும் வெறுப்பைத் தருவதன்று. துன்பத்தையோ துக்கத்தையோ உணர்த்துவதும் அன்று. நிலையாமையை உணர்த்துவது அன்று, இவற்றை உய்த் துணர வைத்ததும் அன்று. கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறியும் ஐம்புலனையும் அறிந்து மகிழ்தலே இங்குக் குறிப்பிடப்படுவது.

மகிழ்தல் தருவது ஆக்கம். மகிழ்ச்சி தருபொருளை மனமுவந்து பெறுதலும், பெற்றதைப் போற்றி ஆக்கம் உறுதலும் மகிழ்வின் இயல்பு. அவற்றை விலக்கலோ, விட்டு ஓடுதலோ மகிழ்ச்சிக்கில்லை. வெறுப்புத் தரும் பொருளை விட்டு ஓடுதல் விலக்கல் அல்லது அழித்தல், வெறுப்பின் இயல்பு. மகிழ்பவர் வேண்டுவதும் பெறுவதும் ஆக்கம். வெறுப்பவர் வேண்டுவதும் பெறுவதும் விடுதலை. ஆதலின் இங்கு உணர்த்தப்படுவது, மகிழ்பவருக்கு மகிழ்தலைத்தரும் ஆக்கநெறி—விட்டு ஓடும் நெறி—விடுதலை நெறி—அன்று—"தானே அவளே"[1] ஆகும் ஆக்கநெறி. ''அவனே தானே'' ஆகிய அந்நெறி[2]யுள் உடன் கொண்டு உய்ப்பது, "காமமொடு தோன்

1. இறையனர் அகப் பொருள், 2.

2. சிவஞான போதம், 10.

றிக் "காதலின் ஒன்றி"[1] அன்புற்றமர்ந்து, "அன்பு ஈன்குழவி" யாகிய "அருளொடு புணர்ந்த அகற்சி"[2] யாகும் வள்ளுவர் தம் துறவு, நீத்தார் பெருமை. காமமும் காத லும் நீத்தார் பெருமைக்கு ஊற்ருகியும் உறுதுணையாகியும், இடர்ப்பாடு எதுவு மின்றி, நீத்தார் பெருமையுடன் துற வுடன்—ஒருவழிப் படுதலேக் காண்க.

இனி, அறத்தாறு எது எனக் கூற லும் வேண்டுமோ ? அறத்தாறு இது என வேண்டா; சிவிகை பொறுத்தாரெடு ஊர்ந்தான் வழியே அறத்தாறு. இவ் வழியைக் காட்டி அறத்தாறு என்னும் வாழ்க்கைப் பெருநெறியை இதோ காண்க எனச் சுட்டிக் காட்டுகின்ருர் வள்ளுவர்.

இல்லறம் துறவறம் என்னும் இரு வெவ்வேறு வழிகள் கொண்டது அன்று இவ்வழி; இவை இரண்டும் சேர்ந்து ஒன்றெனத் திரண்ட பெருவழி; ஒரேவழி. இல்லறமும் துறவறமும் ஒன்ருே டொன்று அறுதியில்லாத் தொடர்புடை யன, ஒன்றிற்கொன்று இன்றியமையாதன என வற்புறுத்துகின்ருர் வள்ளுவர். ஒன்றின் மிக்கது மற்ருென்று எனக் கொள்ள வும் இடமில்லே. 'இவற்றை எல்லாம் கருத்துள் இருத்தி நூலுள் நுழைக, நூல் நலம் பருக வருக' எனப் பாயிரம் அழைக் கின்றது. பாயிரத்தையே பின்பற்றித் தொடர்வோம்; அது காட்டும் வழியே செல்வோம். நூலுள் நுழைந்து அப் பெருவழியின் பண்பெலாம் காண்போம். அதுதரும் பயனேயும் துய்ப்போமாக.

"வாழ்க [3]நம்குறள் வள்ளுவர் தம்அறம்
சூழ்க வையகம் சூழ்துயர் நீங்கவே
ஆழ்க தீயவை அன்பறன் ஓங்குக
வாழ்க செந்தமிழ் வையகம் வாழ்கவே."

---

## அன்பும் அருளும்

அன்பு இல்லறத்திற்குரிய பண்பென்றும், அருள் துறவறத்திற்குரிய பண் பென்றும் நாம் கொள்ளாமல் அன்பும் அருளும் எவ்வகை யறத்திற்கும் பொருந் திய பண்புகளென்றும் கூறுதலே சிறப்புடைத்தாம். ஒருவகையில், வள்ளுவர் கூறும் இல்லறம், ஒருவனது குடும்ப வாழ்க்கையைச் சுட்டிக் காட்டுகிறது. குடும்ப வாழ்க்கையின் உயிர்நிலேப் பண்பு அன்பே. வள்ளுவர் கூறும் துறவறம் சமுதாய நிலேயை அடிப்படையாகக் கொண்டது. துறவறம் பூண்டவர்களுக்குரிய நிலேயை மாத்திரம் சுட்டிக்காட்டவேண்டுவதில்லே. ஒரு சமுதாயத்தில், தொடர் பற்ற மக்களுடன் நாம் சேர்ந்து வாழ்கிருேம். ஆகையால் அவர்களிடத்து அருள் செய்து அவர்கள் இன்னல்களே நம் இன்னல்போல் கொள்கிருேம். ஆகையால், உலக வாழ்க்கையில் இவ்விரு நெறிகளும் மனிதனின் இருவகை நிலேகளுக்குரிய நெறிகளாக அமைகின்றன. மனிதனது வாழ்க்கை இவ்விரு நிலேகளேயே கொண் டுள்ளது. தனிமனிதன், தன் குடும்பத்தில் அன்புடன் வாழ்கிருன். குடும்பத்தி லுள்ள தனிமகன், சமுதாயத்திலுள்ள அயலாருடன் அருளுடன் வாழ்கிருன் ; வாழவேண்டும்.

—திருவாட்டி, மேரி மாசிலாமணி அம்மையார், எம்.ஏ., எல்.டி.,
" செந்தமிழ்ச் செல்வி " சிலம்பு: ௩௨ - பரல் : ௧௦.

---

1. 2. தொல்., பொருள்., புறத்திணே இயல், 21.
3. நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளே என்பவற்றிற்போல 'ந' உயர்வுப் பொருள் உணர்த்தும் இடைச்சொல்லாகவும் கொள்க.

# இந்துமத அறநிலைய ஆட்சிமுறை வரலாறு

[திரு. அ. உத்தண்டராம பிள்ளை, ஐ. ஏ. எஸ்.]

*திருநெல்வேலி மாவட்டம் ஓட்டப் பிடாரத்தில் 13-4-1905 இல் இவர் தோன்றினர். தந்தையார் பெயர் அய்யாசாமிப்பிள்ளை. திருநெல்வேலி, இந்துக்கல்லூரி, திருச்சிராப்பள்ளி செயின்ட் சோசப் கல்லூரி, சென்னை சட்டக் கல்லூரி ஆகியவற்றில் பயின்று தேர்ந்து பி.ஏ., பி.எல். ஆகிய பட்டங்கள் பெற்றார். பல மாவட்டங்களில் தண்டல் தலைவராகத் திறமையாகப் பணியாற்றிப் பேரும் புகழும் பெற்றுள்ளார். 1955 அக்டோபர்த் திங்கள் முதல் சென்னை, இந்து அற*



*நிலையப் பாதுகாவற் கழக ஆணையாளராகவிருந்து இவர் செய்து வரும் திருத்தொண்டு எல்லோராலும் போற்றி வரவேற்கப் பட்டு வருதல் கண்கூடு. தாம் ஆணையாளராக வந்த பிறகு 'திருக்கோயில்' என்னும் செந்தமிழ்ச் சமயத் திங்கள் வெளியீட்டினைத் தொடங்கி அதன் ஆசிரியராக அமர்ந்து சிறப்புப் பணி புரிந்து வருகிறார். தமிழும் சைவமும் தழைத்தினி தோங்கச் செய்துவரும் இவர்தம் தூய திருத்தொண்டு பெறற்கரிய பெரும்பேறாகும்.*

இற்றைக்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகக் கருதப்படும் சிந்து வெளி நாகரிகம் தமிழர் நாகரிகமாக இருக்கவேண்டும் என்பது பெரும்பாலான புதைபொருள் ஆராய்ச்சி வல்லுநர்கள் கண்ட முடிபு. மொகஞ்சோதாரோ, ஆரப்பா முதலிய இடங்களில் அகழ்ந்தெடுக்கப் பட்ட பொருள்களில் நூற்றுக்கணக்கான சிவலிங்கங்களும், உருவங்களும் காணப் படுகின்றன. பழந்தமிழ் இலக்கியங்களில் கோயில் நகர் என்ற சொல்லால் குறிக்கப் பெற்றிருக்கிறது. காரிகிழார் என்ற புலவர் பெருந்தகையார் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய புறநானூற்றுச் செய்யுள் ஒன்றில் ''முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே இறைஞ்சுக பெரும நின் சென்னி'' என்று ''சிவன் கோயிலை வலம்வரும்போது மாத்திரமே பாண்டியனுடைய தலைவணங்குவதாக'' என்ற பொருள்படக் கூறியிருக்கிறார். சிலப்பதிகாரத்தில் 'பிறவாயாக்கைப் பெரியோன் கோயில்''....என்று தொடங்கும் அடிகளில் இளங்கோவடிகள் சிவபெருமான், திருமால், பலராமன், இந்திரன், கொற்றவை, முருகன் இவர்களுக்குக் கோயில்கள் இருந்ததாகக் கூறியிருக்கிறார். மணிமேகலை ஆசிரியரும் 'நுதல்விழி நாட்டத்திறையோன் கோயில் முதலாப்.... தெய்வம் ஈருக'க் கோயில்கள் இருந்தமையைக் குறிக்கின்றார். சுமார் 2000 ஆண்டுகளுக்குமுன்னமேயே மதுரை, திருவரங்கம், திருவேங்கடம், திருப்பரங்குன்றம், திருவேரகம், திருச்செங்கோடு, பழமுதிர்சோலை, திருச்சீரலைவாய், திருவாவினன்குடி முதலிய தலங்கள் இருந்ததைச் சங்க இலக்கியங்களிலிருந்து அறிகிறோம். அக்காலத்திலேயே பெருந்திருக்கோயில்கள் இருந்தன என்றாலும் அவை எப்படி ஆட்சி செய்யப்பட்டன என்பதற்குப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. எனினும் அரசர்கள் கோயில்களிடத்து எவ்வளவு பேரன்பு வைத்திருந்தார்கள் என்பது மேற்கூறிய காரிகிழார் செய்யுளினின்றும் அறிகிறோம். சேரன் செங்குட்டுவன் வட நாட்டுக்குச்சென்று கண்ணகிக்குப் படிமம் செய்ய இமயத்தில் கல் எடுத்து வருவதற்காக ''இறைஞ்சாச் சென்னி இறைஞ்சி" சிவன் சேவடியைத் தலைமிசைத் தாங்கிப் புறப்பட்டான் என்ற சிலப்பதிகாரப்பகுதி அரசர்களிடம் தெய்வ பத்தி மிக்குவிளங்கியதைக் காட்டுகிறது.

மரங்களின் அடியிலேயே முதல்முதல் தோன்றிய கோயில்கள் பின்னர்க் களிமண்,

செங்கல், மரங்கள் போன்றவைகளால் கட்டப்பெற்றிருந்தமையின் அவை அதிகக் காலம் நிலைபெற்றிருக்கவில்லை. கி. பி. மூன்றும் நூற்றாண்டிலிருந்து ஆறும் நூற்றாண்டுவரை இருண்டகாலமாக இருந்தது. அந்த இடைப்பட்ட காலத்தில் கோயில்களின் நிலை எவ்வாறு இருந்ததென்பதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லை. தமிழ்நாட்டில் பல்லவர் ஆட்சிக்காலத்தில் மலைகளையும், பெருங்கற் பாறைகளையும் குடைந்து கோயில்கள் அமைக்கப்பெற்றன. அப்படிக் குடையப் பெற்ற குகைக் கோயில்கள் திருச்சிராப்பள்ளி, சித்தன்னவாசல், மாமண்டூர், வல்லம், மகாபலிபுரம் முதலிய இடங்களில் உள்ளன. அதற்குப் பிறகு கருங்கற்களைக்கொண்டு கோயில்களைக் கட்டினர். இராஜசிம்ம பல்லவன் கட்டிய காஞ்சிக்கைலாசநாதர்கோயில், மகாபலிபுரம் கடற்கரைக்கோயில் முதலியன அப்படிக் கட்டப்பெற்ற கற்றளிகள். பல்லவ மன்னர் ஆட்சிக்காலத்திலேதான் அப்பர், சம்பந்தர் முதலிய நாயன்மார்கள் இருந்து சைவ சமயத்தைப் பரப்பினர்; கோயில்களுக்குச் சென்று தேவாரத்திருமுறைகளை ஓதினர். கோயில்களின் ஆட்சியைக் கவனிக்கச் சபையார் இருந்தனர். பெரிய கோயில்கள் தனிப்பட்ட ஆட்சிக் குழுவினர் மேற்பார்வையில் இருந்தன. அவர்களுக்கு "அமிர்தகணத்தார்" என்று பெயர். அவர்கள் கோயில் வரவு—செலவுக் கணக்குகளை நன்முறையில் கவனித்து வந்தனர். கோயில்களுக்கு விடப்பட்ட நிலங்கள் தேவதானம் எனப்பட்டன. கோயில்களிலுள்ள கருவூலத்துக்குக் கோயில் பண்டாரம் என்று பெயர். கோயில்களை அடுத்து மடங்கள் இருந்தன. அங்கே காவியம், இலக்கணம், தர்க்கம் முதலியன பயிற்றுவிக்கப்பட்டது. மடத்து ஆட்சியைக் கவனிக்கப் 'பெருமக்கள்' என்ற குழுவினர் இருந்தனர். காஞ்சியிலும், புதுச்சேரிக்கடுத்த பாகூரிலும், சோளிங்கரிலும் (கடிகாசலம்) வடமொழிக் கல்லூரிகள் இருந்தன.

பல்லவர்களுக்குப் பின்னர் தமிழ்நாட்டைச் சோழ மன்னர்கள் ஆண்டனர். கி. பி. 9 ஆம் நூற்றாண்டு முதல் 13 ஆம் நூற்றாண்டுவரை அவர்களுடைய காலத்திலேதான் அம்மன்னர்களும், மற்றையோரும் கட்டிய பல்லாயிரக்கணக்கான கோயில்கள் எழுந்தன. கோயில்களுக்குப் பூசனைகள், திருவிழாக்கள் நடத்தல், விளக்கேற்றல், பழுதுபார்த்தல் முதலியவற்றிற்கு நிலம், ஊர், ஆடு, மாடு, பொன், ஆபரணங்கள் இவைகளைத் தானமாக வழங்கியதாக அக்கோயில்களிலுள்ள கல்வெட்டுக்கள் சான்று பகர்கின்றன. தேவாரம், திருவாசகம், திவ்வியப்பிரபந்தம் முதலிய திருப்பதிகங்கள் பாடுவதற்காகப் பல தானங்கள் செய்யப்பெற்றிருக்கின்றன. திருவாமாத்தூர்க் கோயிலில் குருடர்கள் திருப்பதிகம் பாடுவதற்காக நிலம் வழங்கப்பட்ட செய்தி கல்வெட்டில் காணக்கிடக்கிறது. பிரபாகரம், சிவதருமம், சோமசித்தாந்தம், பெரியபுராணம், பாரதம், இராமாயணம் முதலியன குறித்துப் பெரியோர்களால் கோயில்களில் காலக்ஷேபங்கள் நடைபெற்றன. இசை, நடனம், கூத்து, ஓவியம் முதலியவைகளுக்குக் கோயில்கள் ஆதரவு தந்தன. சில கோயில்களில் கல்லூரிகளும், ஆதுலர் சாலைகளும், மருத்துவ நிலையங்களும், மாணவர் விடுதிகளும் இருந்தன. சில கோயில்கள் துறவிகளான சிவயோகிகள், மாகேசுவரர், பஞ்சமாகேசுவரர், மகாவைஷ்ணவர் என்பவர் மேற்பார்வையிலிருந்தன. வேறு சில கோயில்கள் அவைகளைச் சார்ந்த மடத்துத் தலைவர்களின் அதிகாரத்திலிருந்தன. சில கோயில்களுக்கு ஆட்சிக்குழுவினர் இருந்தனர். அக்குழுவினருக்கு "ஸ்ரீகோயிற் கணவாரியப் பெருமக்கள்", "ஸ்ரீகாரியம் செய்வார்", "பாதமூலத்தார்" என்று பலவிதப் பெயர்கள் வழங்கின. அக்குழுவில் ஊர்ச் சபையார், மாகேசுவரர், மடத்துத் தலைவர்கள் முதலியவர்களும் இடம் பெற்றிருந்தனர். கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள கோயில் மேற்பார்வையாளர்கள் இப்போதும் "ஸ்ரீகாரியம்" என்றே அழைக்கப்படுகின்றனர். மிகப்பெரிய கோயில்கள் தனிப்பட்ட அதிகாரிகள் மேற்பார்வையிலும், அரசர்களுடைய நேர்பார்வையிலும் இருந்தன. கோயில் கருவூலத்திற்கு ஸ்ரீபண்டாரம் என்று பெயர். அங்கு வைக்கப்பெற்றிருந்த கணக்குக்கு "ஸ்ரீபண்டாரப் புத்தகம்" என்றும், அவைகளின் அதிகாரிகளுக்கு "ஸ்ரீபண்டாரிகள்" என்றும் பெயர்கள் வழங்கின. கோயிலிலுள்ள அணிகலன்

களில் பதிக்கப் பெற்ற நவமணிகளைக் கணக்கெடுத்து மதிப்பு எழுதிவைத்தனர். இப்போதும் ஓர் அதிகாரி (Verification Officer) அப்பணியைச் செய்கிருர்.

கோயில் கணக்குகளும், நித்தியநைமித்திய காமிய பூசனைகளும் இதர நடைமுறைகளும் சரிவரக் கவனிக்கப்படுகின்றனவா என்று அவ்வப்போது அரசாங்க அதிகாரிகள் கண்காணித்து வந்தனர். அப்படிச் செய்ததை "ஸ்ரீகாரியம் ஆராய்ச்சி" என்று கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. உத்தமசோழன் மகனை மதுராந்தகன் கண்டராதித்தன் என்ற இளவரசன், அதிராஜேந்திர சோழமன்னனின் படைத்தலைவனை வீர சோழ இளங்கோவேள், அரசாங்க உயர் அலுவலர்களான காழி ஆதித்தன், அருமொழி மூவேந்தவேளான் முதலியவர்கள் கோயில் வரவு செலவுக் கணக்குகளைத் தணிக்கை செய்தனர்; கோயில் கணப்பெருமக்கள், ஊரவையார் இவர்கள் முன்னிலையில் கோயில் நகைகள் முதலிய சொத்துக்களை மதிப்பிட்டுக் கணக்கெடுத்துக்கொண்டனர்; பணத்தைக் கையாண்டவர்களைத் தண்டித்தனர். அவர்கள் சொத்துக்களைப் பறிமுதல் செய்தனர். அத்தகைய குற்றவாளிகளைச் 'சிவத்துரோகிகள்' 'ஊர்த்துரோகிகள்' எனப் பழித்தனர்.

அக்காலத்தே கோயில்களைக் சார்ந்த பல மடங்கள் இருந்தன. அவை கோயில் ஆட்சியையும் கவனித்தன. யாத்திரிகர்கள் தங்க வசதிகள் செய்யவும், ஒழுக்கத்தையும் சமய அறிவையும் புகட்டவும், சாத்திரங்களைக் கற்பிக்கவும், நோயாளிகள், விலங்குகள் முதலியவற்றுக்கு மருந்துகள் கொடுக்கவும் கோயில்கள் பயன் பட்டன. கோயில்களில் குகைகள் என்ற ஒருவகை மடங்களும் இருந்தன. அவற்றில் யோகியர் இருந்து திருமுறைகளைப் பாதுகாத்தல், திருப்பதிகம் ஓதுவித்தல் முதலியனவும் செய்துவந்தனர்.

பின்னர் விஜயநகரமன்னர், நாயக்க மன்னர், மராட்டியமன்னர் ஆட்சியில் பல கோயில்கள் கட்டப்பெற்றும், பழுதுபார்க்கப்பெற்றும் ஏராளமான திருப்பணிகள் நடைபெற்றிருக்கின்றன. அவர்கள் பூசை முதலியவற்றிற்காகப் பல நிவந்தங்கள் ஏற்படுத்தியிருக்கின்றனர். ஹைதர் அலி போன்ற மகம்மதிய மன்னர்களும் சில கோயில்களுக்கு நிலங்கள் வழங்கியிருக்கின்றனர்.

கிழக்கு இந்தியக் கம்பெனியார் காலத்தில் 1817ஆம் ஆண்டு ரெகுலேஷன் (Regulation II 1817) படி அறநிலையங்கள் அவர்கள் மேற்பார்வையிலிருந்தன. விக்டோரியா மகாராணியார் சமய விஷயங்களில் அரசாங்கம் தலையிடுவதில்லை என்று பிரகடனம் செய்து ஊரார்வசமே கோயில்கள் நிர்வாகம் விடப்பட்டது. மேற்பார்வையின்மையால் அநேக கோயில்களில் நிர்வாகம் சீர்குலைந்து கிராமங்களில் பூசல்கள் அதிகரித்தன. 1842ஆம் ஆண்டு முதல் 1863 வரை ரெவினியூ போர்டு மேற்பார்வையில் மாவட்டக் கலெக்டர்கள் மூலம் அறநிலையங்களின் ஆட்சி நடைபெற்று வந்தது. 1863 இல் ஒருசட்டம் (Act XX of 1863) இயற்றப்பட்டது. அதன்படி தேவஸ்தானக் கமிட்டிகள் மூலம் அறநிலையங்களின் ஆட்சிமுறை இருந்தது. பின்னர் 1925இல் அந்நாள் முதலமைச்சர் பனகல் அரசர் பெருமுயற்சியால் ஒரு சட்டம் (Act I of 1925) அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. அறநிலையக்குழுவின் முதல் தலைவர் சர். தி சதாசிவய்யர் அவர்களாவர். அதன்பிறகு 1927இல் (Act II of 1927) மீண்டும் சட்டம் இயற்றப்பெற்றது. அதன்படி ஓர் அறநிலைய ஆட்சிக் குழு அமைக்கப் பெற்றது. அவர்களில் ஒருவர் தலைவராகவும் மற்றவர்கள் அங்கத்தினர்களாகவும் இருந்தனர். ஒவ்வோர் அங்கத்தினரும் சில மாவட்டங்களைக் கண்காணித்து வந்தனர். தலைவர் எல்லாவற்றிற்கு மேலாளராக இருந்ததுடன் சில பெரியகோயில்களைத் தம்முடைய நேர் மேற் பார்வையில் வைத்துக்கொண்டார்.

1951இல் மறுபடியும் சட்டம் (Act. XIX of 1951) சீர்திருத்தம் செய்து இயற்றப்பெற்றது. அதன்படி அறநிலைய ஆட்சிக்குழு அகற்றப்பெற்று, ஓர் ஆணையரின் கீழ்த் தனி அரசாங்கத்துறையாக ஏற்படுத்தப் பெற்றது. ஆணையரின் கீழ், துணை ஆணையர்களும், உதவி ஆணையர்களும், இன்ஸ்பெக்டர்களும் வேலைபார்க்கின்றனர். அறநிலையங்களின் வருவாய்க் குத்தக்கபடி அவைகளுக்கு நிர்வாக அதி

காரிகளும் வேலைபார்த்து வருகின்றனர். அண்மையில் அச்சட்டம் மீண்டும் சீர் திருத்தப்பட்டு 1-1-60 முதல் (Act XXII- of 1959) அமுலுக்குக் கொண்டுவரப் பட்டது. அதன்படி அறநிலைய நிர்வாக அதிகாரிகளெல்லாம் அரசாங்க அலுவல ராகிவிட்டனர். கன்னியாகுமரி மாவட்டம் ஒரு தேவஸ்வம் போர்டாரின் மேற்பார் வையில் இருக்கிறது. சிறு கோயில்களுக் குத் தர்மகர்த்தர்கள் நியமிக்கும் உரிமை ஏரியாக்கமிட்டி என்ற குழுவினருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. பெரிய கோயில் களுக்கு ஆணையரால் தர்மகர்த்தர்கள் நிய மிக்கப்படுகின்றனர்.

கடந்த ஐந்து ஆண்டுகளில் அற நிலைய ஆட்சி பல்வேறு வழிகளில் முன் னேறியிருக்கின்றது. 1955–56 முதல் 1960-61 முடிய 10 இலட்சம் ரூபாய்கள் 188 கோயில்கள் பழுதுபார்ப்பதற்காக அர சாங்க மானியமாக வழங்கப்பெற்றிருக் கிறது. இவைகளையன்றிக் கோயில் அதிக வருமானம், பொதுமக்கள் நன்கொடை இவைகளைக்கொண்டு பல நூற்றுக்கணக் கான கோயில்கள் பழுதுபார்க்கப் பெற் றும், செப்பனிடப்பெற்றும், திருப்பணிகள் முடிந்து கும்பாபிஷேகங்கள் நடத்தப் பட்டும் இருக்கின்றன. சுமார் 8130 அற நிலையங்கள் தற்போது அறநிலையத்துறை ஆட்சியின்கீழ் இருக்கின்றன. பல கோயில் களில் தேவாரம், திவ்வியப்பிரபந்தம், திருப் புகழ் முதலியவைகள் கற்களில் பொறித்து வைக்கப்பெற்றிருக்கின்றன. பல கோயில் களில் திருமுறைக்கோயில்கள் நிறுவப் பெற் றுள்ளன. சில கோயில்களின் கூட்டுறவு —உழவுப்பண்ணைகளும், பால்பண்ணை களும் ஆரம்பிக்கப் பெற்றிருக்கின்றன. பள் ளிச் சிறுவர் சிறுமியர்க்குப் பகல் உணவும், காலை மாலை குழந்தைகளுக்குப் பால் விநி யோகமும் நடைபெற்றுவருகின்றன. சுசீந் தரம், பழனி, திருச்செந்தூர், திருநெல் வேலி, குற்றாலம், திருவெண்காடு முதலிய இடங்களில் தேவாரப் பாடசாலைகள் நடை பெறுகின்றன. ஓதுவார்களுக்குத் தேவாரத் திருமுறைப் பயிற்சி, திவ்யப்பிரபந்தப் பயிற்சி, நாதசுரப்பயிற்சி வகுப்புக்களும் அர்ச்சகர்களுக்குச் சித்தாந்த ஆகமப்பயிற்சி வகுப்புக்களும் அவ்வப்போது நடத்திவரப் படுகின்றன. பழனியில் ஒரு கீழ்த்திசைக் கலைக்கல்லூரியும், நாதசுர இசைப்பயிற் சிக் கல்லூரியும் தொடங்கப்பெற்று, நடை பெறுகின்றன. இராமேசுவரம் கோயில் மேற்பார்வையில் ஒரு வடமொழி தென் மொழிக் கீழ்த்திசைக் கல்லூரி நடக்கிறது. திருநெல்வேலி கோயில் 'காந்திமதியம் பாள் பெண்கள் உயர்நிலைப்பள்ளி' ஒன்றை நடத்துகிறது. சத்திரங்கள், யாத்ரீகர் விடுதி, பொதுமக்களுக்குத் தண்ணீர்க் குழாய்கள், கல்யாணங்கள் நடைபெற மண்டபங்கள் முதலிய வசதிகளைச் சில கோயில்கள் செய்திருக்கின்றன. திரு மயிலை, நாச்சியார்கோயில், மதுரை, பழனி, திருநெல்வேலி, திருச்செந்தூர், வைத்தீசு வரன்கோயில், சிக்கல், திருவெண்காடு முதலிய இடங்களில் கோயில்கள் அனாதை விடுதிகளை நடத்திவருகின்றன. திருப்புக லூர், பண்பொழி இந்த இடங்களில் சித்த வைத்திய சாலைகளில் இலவசமாக மருந்து கள் வழங்கப் பெறுகின்றன. பல கோயில் களுக்கு வரலாறுகள் எழுதப்பட்டும், கோயில்களைப் பற்றிய வேறு நூல்களும் வெளியிடப்பெற்றிருக்கின்றன. அறநிலைய ஆட்சி அலுவலகத்திலிருந்து கோயில்கள், அடியார்கள் வரலாறுகள், மற்றும் சமய சம்பந்தமான கட்டுரைகள் ''திருக்கோயில்'' என்ற மாத இதழில் இரண்டாண்டுகளாக வெளியிடப் பெற்று நடைபெறுகிறது. கோயில் முதலியவைகளின் விலையுயர்ந்த சொத்துக்களை மதிப்பிடவும், ஆண்டு தோறும் தணிக்கை செய்யவும் ஒரு உதவி ஆணையர் நியமிக்கப்பட்டிருக்கிறார். கோயில்களில் சமயச் சொற்பொழிவுகள், இசைநிகழ்ச்சிகள், கதாகாலக்ஷேபங்கள், வாரவழிபாடுகள் முதலியவை நடைபெற வசதிகள் செய்து கொடுக்கப்பெறுகின்றன. வருவாய் குறைவான கோயில்களைப் பழுது பார்க்க உபரி வருமானமுள்ள கோயில்கள் உதவித்தொகைகள் அளித்துவருகின்றன. நன்னிலத்துக் கருகிலுள்ள இராமனதீச் சரம் என்ற கோயிலுக்கு அதிக வருவாயில் லாதபடியால் அந்தக் கோயில் திருப்பணிக் காக ஆட்சியாளர்கள் தில்லைச் சிதம்பரம் கோயில் கண்காணிப்பாளர்களை உதவித் தொகை கேட்டதாகக் கூறும் சோழர் காலத்திய கல்வெட்டொன்று ஈண்டுக் குறிக்கத்தக்கது.

# அரசியல் – சில கருத்துக்கள்

[திரு. சுப. இராமநாதன், எம். ஏ.]

இராமநாதபுர மாவட்டம் நாட்டரசன் கோட்டையில் 1922ஆம் ஆண்டு பிறந்தார். தந்தையார் பெயர் சுப. ராம. சுப்பிரமணியன் செட்டியார்; தாயார் பெயர் மீனாட்சி ஆச்சி. மதுரை அமெரிக்கன் கல்லூரியிலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் பயின்று 1943 ஆம் ஆண்டு, பி.ஏ. (ஆனர்சு) தேர்வில் முதல்வராகத் தேறிப் பட்டம் பெற்றார். சிவகங்கை அரசர் துரை சிங்கம் நினைவுக் கல்லூரியில் ஏழாண்டுகள் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றினார்.



1956ஆம் ஆண்டு முதல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் விரிவுரையாளராகத் தொண்டாற்றி வருகின்றார். பினாங்கு, வெல்லஸ்லி மாகாணச் சட்ட மன்றத்தில் இந்தியர் பிரதிநிதியாக ஓராண்டுவரை பதவி வகித்துள்ளார். ஐங்குறுநூறு மாநாட்டில் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றியுள்ளார். "தமிழ்நாடு" நாளிதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதி வருகின்றார். நாட்டரசன் கோட்டையில் "கம்பன் தமிழ் மன்றம்" நிறுவியவர்களுள் ஒருவராவார்.

மக்கள் சமுதாயத்தின் வாழ்க்கையில் அரசாட்சியும் அரசாங்கமும் இன்றியமையாத பங்கினைக் கொண்டவை. அவர்களின் சமூக, பொருளாதாரச் சிக்கல்களெல்லாம் இவைகளோடு பின்னிப் பிணைக்கப்பட்டிருக்கின்றன. அம்முறையில் அரசியல், நாகரிகம் தோன்றிய நாள் முதல் இன்றுவரையும் பலரையும் சிந்திக்க வைத்த ஒன்றாகும். வள்ளுவரும் சங்கச் சான்றோர்களும் சிந்தித்துத் தங்கள் கருத்துக்களைக் கூறியிருக்கின்றார்கள். அவையெல்லாம் கூறின் ஒருதனி நூலாயடங்குமேயன்றி அவற்றை இக்கட்டுரையி லடக்கல் என்பது எளிதன்று. எனினும் ஒன்றிரண்டு கருத்துக்களைத் திருக்குறளையடிப்படையாகக் கொண்டு பார்ப்போம்.

வள்ளுவர் காலத்தில் முடியாட்சியொன்றைத் தவிர வேறு எதனையும் சிந்திக்க வேண்டிய தேவையில்லை. அதனால் அரசன் என்றே கூறிச் செல்கின்றார். அரசனுக்குச் சொல்லப்பட்ட அனைத்தும் ஆட்சித் தலைவனுக்கின்று பொருந்தும். முதற்கண் அரசனுக்கு இருக்க வேண்டிய பண்பைக் கூறுகின்றார்.

> "தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
> நீங்கா நிலனாள் பவற்கு." (குறள்—383)

இதிற்கல்வியும் ஒன்று. ஆட்சிப் பீடத்தில் அமருவோருக்குக் கல்வி இன்றியமையாதது என்பதை இன்றைய மக்களாட்சியில் நம்நாட்டில் எவ்வளவு தூரம் உணர்ந்திருக்கின்றார்களென்பது ஆராயப்பட வேண்டிய ஒன்று. சட்டசபையின் உறுப்பினருக்குக் குறைந்த அளவு கல்வித் தகுதிகூட விதிக்கப்படவில்லை. அமைச்சராக யார் வேண்டுமென்றாலும் வரலாம். வேடிக்கை நிகழ்ச்சி ஒன்று கூறுவார்கள். ஒருமுறை எட்டாவதுகூடப் படிக்காத ஒருவர் வேலை தேடி ஓர் அரசாங்க அலுவலரிடம் சென்றார். அவர் இவருடைய தகுதியைக் கேட்டு எம். ஏ., பி. ஏ., இண்டர் மீடியட் படித்திருந்தால் மேல்நிலைக் கணக்கராகவோ அன்றிக் கீழ்நிலைக் கணக்கராகவோ நியமிக்கலாம். இல்லை பள்ளியிறுதி வகுப்புவரை படித்திருந்தால் ஒரு பணியாளராகவாவது நியமிக்கலாம். அதனால், தான் ஒன்றும் செய்வதற்கில்லையென்றும், ஆனால் அமைச்சராக ஆவதற்கு முயலலாம். ஏனென்றால் அதற்கு எந்த வகையான கல்வித் தகுதியும் வேண்டியதில்லையென்றும் சொன்னாரெனக் கேட்கப்படுகிறது. வேண்டத்தக்க மக்களாட்சியில் ஆள்வோரின் அவல நிலையைக் காட்டுகிறது இது.

அரசனுக்கு மாத்திரம் கல்வியை வற்புறுத்துவதோடு நின்றுவிடவில்லை. இறைமாட்சிக்கு அடுத்த அதிகாரம் 'கல்வி' யாகும். அவ்வதிகாரம் எல்லாருக்கும் பொதுவானது. எந்நாட்டிலே மக்கள் கல்வியறிவில்லாதவர்களாக விருக்கின்றார்களோ அந்நாட்டிலே முடியாட்சி யிருந்தாலும், குடியாட்சி யிருந்தாலும், பொதுவுடைமை யாட்சி யிருந்தாலும் அது நல்லாட்சியாக விருக்க முடியாது. இன்று உலகில் மேம்பட்டு விளங்கும் ஆட்சியைப் பெற்ற நாடுகளிலெல்லாம் அம்மேம்பாட்டிற்குக் காரணம் அந்நாட்டு மக்கள் கல்வி கற்றவர்களாக விருக்கிறார்க ளென்பதே. இப்பேருண்மையை யுணர்ந்த வள்ளுவர் இறைமாட்சிக் கடுத்தபடியாகக் கல்வியைக் கூறியது உன்னுந்தோறும் உன்னுந்தோறும் வள்ளுவரது அரசியலறிவை நன்கு புலப்படுத்துவதாகும்.

கல்வி யென்பது எழுத்தறிதல் மட்டுமல்ல. உள்ளம் திருந்துவது, பண்பாடடைவதுமாகும். மக்கள் வாழ்வோடு ஒன்றியதாகக் கல்வி யமையவேண்டும். கற்றதன் பயன் ஒழுக்கம். ஒழுக்கமில்லாத நாடு ஓங்குவதில்லை.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக."

ஒழுக்கமில்லாத கல்வி, மக்கட் பண்பாடில்லாத கல்வி யோங்கியமையாற்றான் நாடுகளெல்லாம் நலிவடைகின்றன. "கற்றாரை யான் வேண்டேன்" என்பதும், "கல்லாதவர்களே நல்லவர்கள்" என்பதும் அதுபற்றி யெழுந்தவை யென்னலாம்.

இனி, கல்வி எத்தகையதாக அமைதல் வேண்டும் என்பது இப்பொழுது உலகின் பல்வேறு நாடுகளிலும் ஆராயப்படுகிறது. கல்வியின் முறை மாறினால் மக்கள் மனமும் வாழ்வும் மாறுகிறது. விஞ்ஞானப் பாடத்திற்கு முதன்மை கொடுத்ததன் விளைவு இன்றையப் போட்டியும் பூசலும் போரும் ஆகும். அதனால், சமநிலை பெற்ற கல்வியாக அமைதல் வேண்டும் என்று கலைப்பாடங்களும் சேர்த்துக் கற்பிக்கப்படுகின்றன. நம் பகுதிப் பல்கலைக் கழகங்களும் இப்பொழுது விஞ்ஞான மாணவர்கள் கலைப்பாடமும், கலைப் பகுதி மாணவர்கள் விஞ்ஞானமும் படிக்கும் படியும் பாடத் திட்டத்தை யமைத்திருக்கின்றன. இரண்டு துறைப் பாடங்களும் இன்றியமையாதவை மக்கள் வாழ்க்கைக்கு என்பதை யுணர்ந்த வள்ளுவர்,

"எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு" (குறள்—392)

என்று கூறுகிறார்.

இங்கு எண் என்றது எண்களை யடிப்படையாகக்கொண்ட விஞ்ஞானக்கல்வியை ஆகும். இக்கருத்துப் புலப்படும்படி வரைந்த பரிமேலழகர் உரை பாராட்டற் குரியது. மேலும் இவ்விரண்டு துறைகளும் இன்றியமையாதவை யென்பது மட்டுமல்ல. இரண்டும் ஒன்றற்கொன்று துணையாகவும் நிற்க வேண்டும். "கண்ணிரண்டும் ஒன்றையே காண்" என்பதற்கேற்ப இரண்டும் ஒரே நோக்கம் கொண்டவையாக விருத்தல் வேண்டும். வலக்கண் வடக்கேயும் இடக்கண் தெற்கேயும் நோக்கினால் கேடுதான் விளையும். இரண்டு கண் பார்வையும் சேர்ந்தாற்றான் ஒரு பொருளின் முழு வடிவினையும் காண முடியும். அது போன்று இரண்டு துறைகளும் இணைந்தாற்றான் முழு நிலையைப் பெறமுடியும்.

கல்வியைப் பொறுத்தமட்டில் பெண்களுக்குரிய இடம் எது என்பது விவாதத்திற்குரிய ஒன்று. பெண்பாலாரும் கல்வி கற்கவேண்டு மென்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். எவ்வளவு கல்வி, கற்றபின் அவர்களது கடமை யாது, அவர்களுக்குரிய பொறுப்பில் பெரும்பங்கு வீட்டிற்குள்ளா அன்றி வெளியேயா என்பது ஆராயவேண்டிய ஒன்று. எல்லார்க்கும் கல்வி வேண்டுமென்பதை,

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு" (குறள்—392)

என்ற குறளில் "உயிர்க்கு" என்ற தொடரால் அறிகின்றோம். ஆனால் உயர் கல்வியும் நுண்மாண் நுழைபுலமும் ஆடவர்க்கே பெரும்பான்மையு முரியதாக வள்ளுவர் கருதினர் எனக்கொள்ளலாம்.

"நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று." (குறள் 407)

பெண்களுக்குத் தகுதியும் திறமையு மில்லை யென்பதல்ல காரணம். அவர்கள் வீட்டிலிருந்து ஆற்ற வேண்டிய பணிகள் பல. வேறுபட்டவையும்கூட. "இல்லாள்" என்ற சொல் அதனை யுணர்த்தும். சங்கத் துச் சான்றோர்களும் இக்கருத்துக் கொண் டிருந்தார்களென்பதை,

"வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென"
(குறுந்தொகை 135)

"ஈன்றுபுறந் தருதல் என்றலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே"
(புறம் 312)

என்ற வரிகளாற் காணலாம். அதனால் பெண்கட்குக் கல்விவேண்டும். உயர்கல்வி கற்று வேலைக்குச் செல்லவேண்டுமென்ற தேவையில்லை. வீட்டில் மக்களை நன்கு பேணி வளர்ப்பதே நாட்டிற்குச் செய்யும் நல்ல தொண்டாகும்.

இனி, மக்களாட்சி முறையில் சிறந்த நிலையாகச் சொல்லப்படுவ தென்ன வென் றால் ஆள்வோருக்கும் ஆளப்பெறுவோ ருக்கு முள்ள உறவுதான். எந்நேரத்திலும் ஒருவர் மற்றவரைச் சந்திக்க முடியும். குறையைச் சொல்ல வேண்டுமா? நேரே அமைச்சரிடம் சென்று சொல்லலாம். வள்ளுவர் இதன் இன்றியமையாமையை யுணர்ந்துதான்,

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறும் மன்ன னிலம்." (குறள்—386)

என்றார்.

மற்றொரு குறிப்பிடத் தகுந்த நிலை யென்னவென்றால் எதிர்க்கட்சியார் தங் கருத்தைத் தெரிவிக்க உரிமை கொடுப்பது தான். இங்கிலாந்து நாட்டின் பாராளு மன்றம் எல்லாப் பாராளு மன்றங்கட்கும் தாயாகும். அங்கு எதிர்க்கட்சித் தலைவ ருக்கு முதன் மந்திரிக்குக் கொடுக்கும் சம் பளம் கொடுக்கப் பெறுகிறது. இடித்துச் சொல்லத்தான் எதிர்க்கட்சி. வள்ளுவரும்,

"இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்." (குறள்-448)

"இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்" (குறள்-447)

என்றார்.

சிறந்த ஆட்சி யென்பது நல்லோ ரைக் காத்தலும் அல்லோரை யழித்தலு மாகும். நல்லோர் தண்டிக்கப் படவுங் கூடாது. அல்லோர் தண்டிக்கப் படா திருக்கவுங்கூடாது. (குறள்—549) நம்கட்சி நம் உறவு, நம் நட்பு என்பதற்கெல்லாம் அங்கு இடமில்லை.

"நமரெனக் கோல் கோடாது
பிறரெனக் குணங் கொல்லாது" (புறம் 55)

என்பது புறம். (குறள்-541) அதிகமான தண்டனையும் நல்லதல்ல. "இம் மென்றால் சிறைவாசம் உம்மென்றால் வனவாசம்" என்ற நிலையினைச் சில நாடுகளிற் காண்கி றோம். சர்வாதிகார ஆட்சியுள்ள அந் நாட்டில் மக்கள் அடிமைகளாய் மாக்கள் வாழ்க்கைதான் நடத்தமுடியும். இனி, தண் டிக்கின்ற காலத்தும் அளவோடு தண்டிக்க வேண்டும். அதன் நோக்கமும் திருத்துவ தாக விருக்கவேண்டுமே யல்லாது வருத்து தலையே நோக்கமாகக் கொண்டிருக்கக் கூடாது.

"தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங் கொறுப்பது வேந்து." (குறள்-561)

"கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்." (குறள்-562)

இதுபோன்று பல அரிய அரசியற் கருத்துக்களைப் பரக்கக் காணலாம். இன்று அரசியல் விற்பன்னர்கள் ஆய்ந்து கண்டு சொல்லும் முடிவுகள் அற்றைக் காலத்தே யுணர்ந்து உரைக்கப்பெற்றவை. சங்கச் செய்யுட்கள் பழமைக்குப் பழமையாயும் புதுமைக்குப் புதுமையாயும் உள்ள வாடாத மலர்மாலைகள். கற்றின் புறுவோ மாக.

# அணுவின் அற்புத ஆற்றல்

[திரு. ந. சுப்பு ரெட்டியார்]



இவர் 7-9-1917 இல் பிறந்தார். திருச்சி புனித சூசையப்பர் கல்லூரி, சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி ஆகியவற்றில் பயின்றார். பி.ஏ., பி.எஸ்ஸி., எல்.டி., எம்.ஏ. ஆகிய பட்டங்கள் பெற்றுள்ளார். வித்துவான் தேர்வும் எழுதித் தேர்ந்துள்ளார். உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியராகவும், காரைக்குடி டாக்டர் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராகவும் பணிபுரிந்தார். தற்போது திருப்பதி, வேங்கடேசுவரர் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவராகத் தொண்டியற்றி வருகின்றார். 'கவிஞன் உள்ளம்', 'கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி', 'தமிழ் பயிற்றும் முறை', 'அறிவியல் பயிற்றும் முறை', 'காலமும் கவிஞர்களும்', 'மானிட உடல்', 'கல்வி உளவியல்', 'கவிதை அனுபவம்' ஆகிய அரிய நூல்களை இயற்றியுள்ளார். ஹெய்ஸென்பெர்க் எழுதிய 'நியூக்ளியா பிசிக்ஸ்' என்னும் ஆங்கில அறிவியல் நூலைத் தமிழில் மொழிபெயர்த்துச் சென்னைப் பல்கலைக்கழகச் சிறப்புப் பரிசினைப் பெற்றுள்ளார்.

பேராற்றல் படைத்த மேகநாதன் இலக்குவனுடன் உடற்றிய போரில் இறந்துபடுகின்றான். இச் செய்தியை யறிந்த மண்டோதரி பலவாறு புலம்புகின்றாள். தன் மைந்தனின் அளவற்ற ஆற்றலை எண்ணி எண்ணிப் புலம்புகிறாள்.

> முக்கணான் முதலி னோரை
> உலகொரு மூன்றி னோடும்
> புக்கபோர் எல்லாம் வென்று
> நின்றஎன் புதல்வன் போலாம்
> மக்களில் ஒருவன் கொல்ல
> மாள்பவன் வான மேரு
> உக்கிட அணுவொன்று ஓடி
> உதைத்தது போலும் அம்மா!
>
> —கம்ப. இராவணன்சோக. 52

என்பது கம்பநாடன் வாக்கு. "என் மகன் மேகநாதன் சாதாரணமானவன் அல்லன். மூன்று உலகங்களிலும் நடைபெற்ற போரில் எல்லாம் மூன்று கண்களையுடைய சிவபெருமானையும் வென்று வாகைசூடியவன். அத்தகையவன் இன்று கேவலம் ஒரு மனிதனால் கொல்லப்பட்டு விட்டான். இது வானுற வளர்ந்து ஓங்கி நிற்கும் மேரு மலையை அணு ஒன்று ஓடி உதைத்ததுபோலல்லவா இருக்கின்றது?" என்று கணக்குப் போட்டுப் புலம்புகின்றாள். பாவம்! அணுவின் பேராற்றலை அறியாத அபலை மண்டோதரி. கம்பநாடன்காலத்தில் அணுவினைப்பற்றி ஓரளவு கருதியிருந்தாலும் அதன் எல்லையற்ற ஆற்றலை இன்று மக்கள் அறிந்துள்ளதுபோல் அன்று அறியவில்லை. அதை அறிந்து கொள்ளும் அளவுக்கு அறிவியல் அன்று வளர்ச்சி பெறவும் இல்லை.

## அணுவின் ஆற்றல்

அறிவுலகமேதை ஐன்ஸ்டைன் தந்துள்ள மந்திரத்தால் அறிவியலறிஞர்கள் அணுவின் பெருமையை அறிந்தனர். அம்மையப்பர் வடிவில் உள்ள அணுவின் அமைப்பினைக் கண்டு இறும்பூது எய்துகின்றனர். சடமே சக்தி என்று அம்மந்திரம் கூறுகின்றது; பொருண்மையே ஆற்றலாக மாறுகின்றது என்பது ஐன்ஸ்டைன் கண்ட உண்மை. ஒரு கிராம் எடையுள்ள நிலக்கரியை அணுச்சிதைவு செய்தால் 2500 டன் நிலக்கரியை எரித்தால் கிடைக்கும் அளவு சூடு உண்டாகும் என்று கணக்கிட்டுக் கூறலாம். 1945 ஆம் யாண்டில் நடைபெற்ற அணுக்குண்டின் திருவிளையாடலுக்குப் பிறகு மக்கள் அணுவின் அளப்பரிய ஆற்றலை அறிந்தனர். இன்று அணுவின் ஆற்றலைக் கண்டு உலகமே நடுங்குகின்றது. குறளாய் இருந்த வாமனன் வளர்ந்து காட்டிப் பேராற்றலை

வெளிப்படுத்தியதுபோல, அணுவும் தன் பேராற்றலை வெளிப்படுத்துகின்றது. சிதைக்கப்பெறும் அணு சிவபெருமான் நெற்றிக் கண்ணினின்றும் வெளிப்படும் சுடர்களை யொத்த முச்சுடர்களை வீசி நிற்கின்றது. அதனால் பத்துக்கோடி சுழியுள்ள சூட்டினையும் வெளிப்படுத்துகின்றது. கதிரவனின்மேற்பரப்பிலுள்ள சூடுகூடச் சுமார் 6000°c தான். அணுச்சிதைவினால் வெளிப்படும் ஒளியோ கோடானுகோடி சூரியப்பிரகாசம் போன்றது. அணுச் சிதைவில் உருத்திர தாண்டவத்தைத்தான் பார்க்கின்றோம்; ஊழிக்காலத் திறுதியில் சிவபெருமான் ஆடும் 'கொடு கொட்டி' என்ற கூத்தைத்தான் காண்கின்றோம்.

## அணுவின் அளவு

அணு என்றால் என்ன? ஒரு பொருளை உடைத்துக்கொண்டே போனால் இறுதியில் எஞ்சி நிற்பது அணுத்திரளை; மூலக்கூறு (molecule) என்றும் இதனை வழங்குவர். அணுத்திரளையையும் வேதியல் மாற்றத்தின் வழியே உடைக்கலாம். அவ்வாறு உடைத்தால் மிஞ்சுவது அணு. இவ்வாறு அணுவாகப் பிரிபவையே உலகத்தின் அடிப்படைப் பொருள்கள்; இவற்றை அடிப்பொருள்கள் அல்லது தனிமங்கள் (elements) என்று வழங்குவர். பொருள்களை அணு அணுவாக உடைக்கும்பொழுது இந்த உலகில் 92 வகையான பொருள்கள் இருக்கக் கண்டனர்; ஒவ்வொருவகைப் பொருளின் அணுவும் ஒவ்வொரு வகையாக இருக்கவும் கண்டனர். இந்த 92 வகைப் பொருள்களும் தம்மொடு தாமும் பிறிதுமாகச் சேர்ந்து அணுத்திரள்கள் ஆகின்றன. இப்படிப்பட்ட சேர்க்கைப் பொருள்கள் (Compounds) உலகில் ஏழு இலட்சத்திற்கு மேலும் உள்ளன என்று அறிவியலறிஞர்கள் கணக்கிட்டுக் கூறுவர்.

அணு மிகமிகச் சிறியதொரு துகள். அதனைக் கண்ணால் காண முடியாது. அரைக்கோடி அணுக்களை அணிவகுத்து நிற்கவைத்தால் நாம் எழுதும்போதுவைக்கும் ஒரு முற்றுப் புள்ளிக்குள் அவை அடங்கி விடும். அறிவியலார் மிகமிகச் சிறிய அணுவின் குறுக்களவினையும் கணக்கிட்டிருக்கின்றனர். ஓர் அங்குலத்தினை இருபத்தைந்து கோடியாகப் பங்கிட்டால் கிடைக்கும் அளவே அணுவின் குறுக்களவாகும் என்று கண்டுள்ளனர். பெரிய அணுவின் குறுக்களவு இதனினும் இரண்டரை மடங்கு பெரிதாம்; அஃதாவது, ஓர் அங்குலத்தினைப் பத்துக்கோடியாகப் பங்கிட்டதில் ஒருபங்காம். ஒரு சிறு துகளைப் பார்க்கவும் பெருக்காடி தேடும் நமக்கு அணு எப்படித் தெரியப்போகின்றது? ஆனால் அணுவின் எடை, அதன் அகலம், நீளம், கனம், அமைப்பு, இனம், ஆக்கப்பாடு, அழிவாற்றல் முதலிய அனைத்தையும் அறிவிய லறிஞர்கள் அறுதியிட்டுக் கண்டறிந்துள்ளனர்; கணக்கிட்டும் உள்ளனர். இத்தனை விவரங்களையும் அவர்கள் ஆய்வகத்தில் ஆய்கருவிகளின் துணைகொண்டே அறிந்துள்ளனர்.

## வழக்கில் பயன்படும் பொருள்கள்

இவ்வுலகிலுள்ள பொருள்களில் அடிப்படையானவை 92 என்று கண்டோம். எனினும், வழக்கிலுள்ளவை பன்னிரண்டுக்குமேல் இல்லை என்பதை அறிவியலறிஞர்கள் கணக்கிட்டுள்ளனர். இது வியப்பினும் வியப்பு. உலகிலுள்ள பொருள்களை ஆயிரம் கூறுகளாகப் பகுத்துக்கொண்டால் ஏறக்குறையப் பாதி, அஃதாவது 492 பங்கு உயிரியம். இந்த உயிரியம் காற்றில் ஐந்தில் ஒருபங்கு; நீரில் ஒன்பதில் எட்டுப்பங்கு; இது கல்லிலும் காணப்படும் பொருளாகும். சிலிக்கன் என்பது 257 பங்கு; இது தரையில் நான்கில் ஒரு பங்கு. மணல் எல்லாம் சிலிக்கனோடு உயிரியம் சேர்ந்த சேர்க்கைப் பொருளாகும். அலுமினியம் 74 பங்கு; இது களிமண்ணில் அதிகமாகக் காணப்படுவது. இரும்பு 47 பங்கு; இஃது உயிரியத்தோடு சேர்க்கைப் பொருளாகக் கிடைக்கின்றது. கால்சியம் என்ற சுண்ணம்புச் சத்து 34 பங்கு. சோடியம் என்ற பொருள் 26 பங்கு; இது சோற்றுப்பில் காணப்படும் பொருளாகும். பொட்டாசியம் 24 பங்கு; இஃது அபிரேகம் (mica) முதலியவற்றில் உள்ளது. மக்னீசியம் 19 பங்கு; இது கடல் நீரிலும் உண்டு. பெட்ரோமாக்ஸ் விளக்கில் திரியாக எரிவதற்கு வெள்ளைச் சல்லடைபோல் உறை

யாகப் போடப்பட்டிருப்பது இப்பொருளே. நீரியம் 9 பங்கு; இது நீரில் உள்ளது; நீரில் ஒன்பதில் ஒருபங்கு இப் பொருளே. டைடானியம் என்பது 6 பங்கு; இது மண்ணிலும் மணலிலும் காணக்கிடக்கின்றது. குளோரின் என்பது 2 பங்கு; இது சோற்றுப்பில் சோடியத்துடன் சேர்ந்து சேர்க்கைப் பொருளாகக் கிடக்கின்றது. பாஸ்வரம் ஒரு பங்கு; எருவிற்கு இன்றியமையாத பொருள் இஃது. இந்தப் பன்னிரண்டு பொருள்களே உலகில் 991 பங்காகுல் மிகுந்து நிற்கும் 80 அடிப் பொருள்களும் 9 பங்கு அளவே இருக்கக் காண்கின்றோம்.

### பண்டையோரின் வேதியல் அறிவு

ஆதியில் இயற்கையை ஆராயத் தொடங்கின மனிதனுக்கு ஓர் உண்மை புலப்பட்டது. ஒன்றாய் இருந்த விதை பின் வேராய், அடிமரமாய்க், கிளையாய்க், கொம்பாய்க், கவடாய், இலையாய், பூவாய்க், காயாய்ப் பலவகையாய் மாறுவதுபோலவே வித்தென அருவமாய் இருந்தவை மரம் என உருமாறின என்று அவன் நினைத்தான். இக் கொள்கைக்குப் பரிணமவாதம் என்று பெயர்; கூர்தல் அறம் என்றும் இதனை வழங்குவர். உலகில் எதனை அடிப்படை என்பது? மண் என்றனர் சிலர்; நீர் என்றனர் பிறர்; தீ என்றனர் ஒரு சாரார்; காற்று என்றனர் பிறிதொரு சாரார்; வேறு சிலர் வான் என்றனர். இந்தச் சண்டையில் கலந்துகொள்ள அஞ்சிச் சிலர் தென்காசி வழக்காக ஐந்தும் அடிப்படை என்றனர். இத்தகைய கொள்கையை வற்புறுத்தியவர் அரிஸ்டாட்டில் என்பார். தொல்காப்பியரும்,

> *"நிலம்தீ நீர்வளி விசும்போடு ஐந்தும்*
> *கலந்த மயக்கம் உலகம்."*
>
> —தொல். பொருள். மரபி. 91

என்று கூறினர். இதனையே கம்ப நாடரும்,

> *"பூதம் ஐந்தும்*
> *விலங்கிய விகாரப் பாட்டின்*
> *வேறுபாடு உற்ற வீக்கம்."*
>
> —கம்ப. சுந்தர. காப்பு.

என்று கூறுவர். அரிஸ்டாட்டிலின் கொள்கைப்படி நான்கோ ஐந்தோ தனிப் பொருள்கள்; தனிமங்கள். மற்றவை யாவும் தனிமங்கள் பலவகையாகச் சேர்வதால் உண்டாகும் சேர்க்கைப் பொருள்கள். இப்படிக் கலப்பதனைப் பஞ்சீகரணம் என்று வேதாந்தம் கூறும். அவ்வாறு கலக்கும் பொருள்களை அறிவியலார் தனிமங்கள், சேர்க்கைப் பொருள்கள் என்று பேசுவர்.

### தத்துவம் அறிவியலாதல்

பொருள்களை ஆக்கும் அடிப்படையான துணுக்கே அணுவாகும். இந்த உலகமும் இதனையொத்த வேறு அண்டங்களும் அணுவினால் ஆகியவையே. பூக்கள் சேர்ந்து பூமாலை யாதல்போல் அணுக்கள் சேர்ந்து அண்டமாகின்றது. பழங்கால அணுவாதம் இதுதான். சமண சமயம் பேசியது இந்த அணுக் கொள்கையே. நியாய மதம், வைசேடிக மதம் என்ற சமயங்களும் இதனையே கூறின. பஞ்ச பூதங்களைப்பற்றிப் பேசினால் அவையும் அணுக்களே என்று வாதம் செய்யப் பெற்றது. அணுக் கொள்கையை வற்புறுத்திய நியாய மதத்தலைவரான கணதருக்கு "அணு விழுங்கியார்" என்ற மற்றொரு பெயரும் வழங்கியமை ஈண்டுச் சிந்திக்கற்பாலது. மேலை நாட்டிலும் டெமாகிரிட்டஸ் என்பாரும் இக்கொள்கையையே முதன் முதலாக எடுத்துப் பேசினர்; இவர்தாம் மேலைநாட்டு அணுக் கொள்கையின் தந்தையார். எபிகுயூரியஸும் இக்கொள்கையினரே. லூக்ரீஷியஸ் என்ற இலத்தீன் பாவாணர் அணுக் கதையினையே 'இயற்கையின் இயல்பு' என்ற தம்முடைய தத்துவக் காப்பியத்தில் அமைத்துப் பாடியுள்ளார். அறிவியல் தோன்றியதும் அறிவியல் அறிஞர்கள் வேதியல் நிகழ்ச்சிகளை விளக்குவதற்கு அணுக் கொள்கையைப் பயன்படுத்தத் தொடங்கினர். அணுக் கொள்கை தத்துவ நிலையிலிருந்து அறிவியல் நிலைக்குத் திரும்பியதும் அது வியத்தகு மாற்றம் அடைந்தது. டால்ட்டன் காலத்தில் அணு 'அழியாதது, பிரியாதது, என்றும் உளதாவது' என்ற கொள்கை நிலவியது. ஆனால், இன்று அக் கொள்கை 'பொய்யாய்க் கனவாய்ப் பழங்கதையாய் மெல்ல மெல்லப்' போய்விட்டது. ஏன்? கம்பநாடன் வாழ்ந்த காலத்திலேயே அணுவைக் கூறிட முடியும் என்ற கருத்து முகிழ்த்திருந்தது.

*"சாணினும் உளன் ஓர் தன்மை
அணுவினைச் சதகூறு இட்ட
கோணினும் உளன் மாமேருக்
குன்றினும் உளன்; இந் நின்ற
தூணினும் உளன்; நீ சொன்ன
சொல்லினும் உளன்; இத் தன்மை
காணுதி."*

—கம்ப. இரணியவதை—124

என்று இரணியனுக்குப் பிரகலாதன் கூறுவதாக அமைந்த பாடலில் இதனைக் காணலாம்.

## அணுவின் அமைப்பு

'அண்டத்தில் போலத்தான் பிண்டத்திலும்' என்பது நமது நாட்டில் வழங்கிவரும் ஒரு பழமொழி. இந்தப் பழமொழியின் உண்மை அணு ஆராய்ச்சியில் புலனாவதை அறிந்து மகிழலாம். அண்டங்களின் அமைப்பைப்பற்றி நாம் அறிந்துள்ளதை நினைப்பூட்டிக் கொண்டால் அணுவின் அமைப்புத் தெளிவாக விளங்கும். வானவெளியில் எண்ணற்ற அண்டங்கள் தொங்குகின்றன என்று அறிவியலறிஞர்கள் கூறுவர். இதனைத்தான் மணிவாசகப் பெருமானும்,

*"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன"*

—திருவண்டப்பகுதி (வரி 1—4)

என்று கூறிப் போந்தார். வானத்திலுள்ள கதிரவன் மண்டலத்தில் நாம் என்ன காண்கின்றோம்? நடுவில் கதிரவன் இருக்க, அக்கோளைச் சுற்றிப் பலப்பல மண்டலங்களில் புதன், வெள்ளி, பூமி, செவ்வாய், வியாழன், யுரேனஸ், நெப்டியூன், புளூடோ முதலிய கோள்கள் சுற்றிச் சுற்றி வருகின்றன. இந்தக் கதிரவன் மண்டலத்தைப் போலத்தான் அணுமண்டலமும் அமைந்துள்ளது. அணுவின் நடுப்பகுதியைச் சுற்றிப் பல வட்டங்களில் மின்துகள்கள் இடைவிடாது சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கின்றன. இதனைக் கருத்திற் கொண்டுதான் பாரதியாரும்,

*"இடையின்றி அணுக்களெலாம் சுழலுமென
இயல்நூலார் இசைத்தல் கேட்டோம்"*

என்று கூறினர். அறிவியலறிஞர்கள் ஆராய்ந்து கண்ட உண்மையினைக் கவிஞர் பரஞ்சோதியார்,

*"அண்டங்க ளெல்லாம் அணுவாக
அணுக்கள் எல்லாம்
அண்டங்க ளாகப் பெரிதாய்ச்சிறி
தாயி னானும்
அண்டங்க ளுள்ளும் புறம்புங்கரி
யாயி னானும்
அண்டங்கள் ஈன்றுள் துணைஎன்பர்
அறிந்த நல்லோர்"*

என்று கூறுகின்றார். இதில் அறிவியல் அனுபவ இயலாக முகிழ்த்துள்ளமையைக் கண்டு மகிழ்க.

அணுவின் நடுப்பகுதியை உட்கரு (nucleus) என்று வழங்குவர். இதில் நேர்மின்னேற்றம் பெற்ற நேர் இயல் மின்னிகளும் (protons) மின்னேற்றம் அற்ற பொது இயல் மின்னிகளும் (neutrons) அடங்கியுள்ளன. அதைச் சுற்றிலும் எதிர்மின்னேற்றமுள்ள எதிர்மின்னிகள் (electrons) சுழன்று கொண்டிருக்கின்றன. எதிர்மின்னி நிறையற்றது எனக் கருதப்பெறும் அளவுக்கு மிகவும் சிறியது; நுண்ணியது. அணுவின் நிறை முழுவதும் அதன் உட்கருவில் செறிந்துள்ளது. இதிலுள்ள மின்னேற்றம் உட்கருவின் நிறையை யொட்டி அதிகமாகும். நேர் இயல் மின்னி எதிர்மின்னியைவிட 1850 மடங்கு எடைமிக்கது. அணுவோ மின்னேற்றம் வெளிப்படாது சமநிலையிலுள்ளது. உட்கருவினைச் சுற்றிக் கோள் நிலையாகச் சுழன்று கொண்டிருக்கும் எதிர்மின்னிகள் ஒன்றிலிருந்து படிப்படியாக 92 வரையிலும் உயர்ந்து கொண்டே போகின்றன. இந்த எதிர்மின்னேற்றத்தைச் சரிப்படுத்த நேர் இயல் மின்னியும் ஒன்றிலிருந்து 92 வரை மிக்கு வருகின்றன. எனவே, ஓர் அணுவில் எத்தனை நேர் இயல் மின்னிகள் உளவோ அத்தனை எதிர்மின்னிகளும் இருக்கும். இவற்றை யொட்டியே அணுக்களின் வகையும் 92 என்று ஆகின்றது. அணுக்கள் பலவகையாகக் காணப்படுவதற்கு இந்தமின்னேற்ற வேறுபாடே காரணமாகும். மிக மிகச் சிறியதாகிய மின்னி ஒன்றுசேர்வதால் ஓர்

அணு வேறு அணுவாக மாறுகின்ற தன்மை நம்மை வியப்பினில் ஆழ்த்துகின்றது. அணுவெல்லாம் அடிப்படையில் ஒருதன்மையனவே என்பதை அறிகின்ரேம். மின்னிகளின் ஏற்றக்குறைவே வேற்றுமைக்கு அடிப்படை. மின்னிகளின் எண்ணிக்கையை ஏற்றவும் குறைக்கவும் முடியுமானல் ஓர் அணுவை வேறு ஓர் அணுவாக்கலாம். பண்டையோர் கருத்திலமைந்த இரசவாதமும் இந்த அடிப்படையிலேயே அமைந்தது. இதனல் பொன்னும் மண்ணும் (silican) ஒன்ருகின்றன. இதையுணர்ந்தே யோகியர் ''ஓடும் பொன்னும் ஒக்கவே நோக்கும்'' மனப்பான்மையைப் பெற்றுள்ளனரோ என்று கருதவேண்டியுள்ளது.

## சில எடுத்துக்காட்டுக்கள்

சில எடுத்துக்காட்டுக்களால் அணுவின் அமைப்பு இன்னும் தெளிவாகும். மிகச் சிறிய அணு நீரியஅணுவாகும். இதன் உட்கருவின் மின்னேற்றம் +1 என்றும் நிறை 1 என்றும் குறிக்கப்பெறுகின்றது. இவ் வுட்கரு −1 மின்னேற்றமுள்ள எதிர் மின்னியால் சூழப்பெற்றிருக்கின்றது. இதற்கு அடுத்ததாக உள்ளது பரிதிய அணு (helium atom) ஆகும். இதன் உட்கருவின் மின் ஏற்றம் +2. இதைச் சுற்றிலும் 2 எதிர்மின்னிகள் உள்ளன. ஆனல், பரிதியத்தின் அணுநிறை (அஃதாவது அதன் உட்கருவின் நிறை) நீரிய உட்கருவின் நிறையைப்போல் 4மடங்கு உள்ளது. இதன் உட்கருவில் இரண்டு நேர்இயல் மின்னிகள் மட்டிலும் இருந்தால் இதன் நிறை 2ஆகவே இருக்க வேண்டும். மிகுதியாக உள்ள நிறை அதிலுள்ள 2பொது இயல் மின்னிகளால் ஏற்பட்டதாகும். ஒருபொது இயல் மின்னியின் நிறை ஒரு நேர்இயல் மின்னியின் நிறைக்குச் சமம். யுரேனியம் 92 வது தனிமம். அதன் உட்கரு 92 அலகுகள் (units) மின்னேற்றம் கொண்டது. ஆனல், அதன் அணுநிறை 238. ஆகையால் அதில் 92 நேர்இயல் மின்னிகளைத் தவிர 146 (238—92=146) பொது இயல் மின்னிகளும் இருக்கின்றன. அக்கருவினைச் சுற்றி 92 எதிர்மின்னிகள் சுழல்கின்றன. இதனை பெட்ரண்ட் ரஸல் என்ற அறிஞர் வேடிக்கையாகத் துருக்கி மன்னரைச் சுற்றி அவருடைய 92 மனைவிமார் நடனமாடுவதைப் போலுள்ளது என்று உரைப்பர்! ஒரு நாள் கண்ணன் கோகுலத்திலுள்ள கோபிகையர்களுள் 92 பேரைத் தேர்ந்தெடுக்கப் பிருந்தாவனத்தில் நடனமாடினதைப் போன்றுள்ளது என்று நாம் உரைப்பின் அது மிகப் பொருத்தமாக அமையும்! வேதியல் மாற்றத்தில் அணுத்திரளைகள் உடைபட்டுப்பிரிந்து வேறுவகையான அமைப்பினைப் பெற்று வேறுவகையான அணுத்திரளைகளாக மாறுகின்றன. சோற்றுப்பு என்பது சோடிய அணுத்திரளைகளும் குளோரின் அணுத்திரளைகளும் வேதியல் மாற்றத்தில் ஒன்று சேர்ந்த சேர்க்கைப் பொருளாகும். வேதியல் மாற்றத்தில் சூடு வெளிப்படும். கரியும் உயிரியமும் சேர்ந்து கரியமிலவாயுவாக மாறுங்கால் சூடு வெளிப்படுவதனைக் காணலாம். கரியில் நம் கண்ணுக்குத் தெரியாமல் உறைந்து கிடந்த சூடு வேதியல் மாற்றத்தின்போது வெளிப்படுகின்றது. இந்தச் சூடு தாவரங்கள் நேராகக் கதிரவனிடமிருந்து பெற்றதாகும். விலங்கு, பறவை முதலியவைகளும் நாமும் கதிரவனுடைய ஆற்றலை நேரடியாக வாங்கிக்கொள்ள முடிவதில்லை; அதனை விழுங்கிய செடிகொடிகளையும் வித்து, கிழங்கு போன்ற தாவரப் பொருள்களையும் விழுங்கியே அவ்வாற்றலைப் பெற முடிகின்றது.

## அணுவில் அடங்கியுள்ள ஒளி

அணுக்கட்டில் பரிதிய அணுக்கட்டே வலிவான கட்டாகும். மேலே போகப் போக அணுக்கட்டு இவ்வளவு வலுவாக அமைவதில்லை. அதனலேயே 92 அணுக்களுக்குமேல் நேர் இயல் மின்னிகள் ஒருங்கு கூடி அணுவாகச் சமைவதில்லை. 92 க்கு மேலும் நேர்இயல் மின்னிகள் கூடத்தான் செய்கின்றன. ஆனல், அவை எளிதில் சிதைந்து அழிகின்றன. 88 க்கு மேலே உள்ள அணுக்களில் கட்டு ஆட்டம் கொடுக்கத் தொடங்குகின்றது. யுரேனிய அணு 92 அணு எண் உடையது. அஃது ஆட்டம் கொடுக்கும் நிலையில் சில ஒளிகள் வீசுவதை அறிவியல் புலவர்கள் கண்டனர்; இவை யாவும் காணு ஒளிகளே. இவ்வொளிகள் மூன்றுவகைக் கதிர்களாக வெளிவரு

கின்றன. அவற்றினை ஆல்பா கதிர்கள் என்றும், பீட்டா கதிர்கள் என்றும், காமா கதிர்கள் என்றும் பெயரிட்டு வழங்குவர். ஆல்பா கதிர் என்பது பரிதியக் கரு; பீட்டாகதிர் என்பது எதிர்மின்னி; காமா கதிர் என்பதோ புதிர்க்கதிர் (X-ray) போன்றதொரு கதிராகும். யுரேனிய அணுக்குண்டில் இம்மூவகைக் கதிர்கள் எழுந்துதான் ஹிரோஷீமாவை அழித்தது; நாகசாகியை நாசமாக்கியது. இந்த யுரேனியச் சிதைவுதான் இவ்வுலகில் வாழ்கின்ற நமக்கு மிகவும் இன்றியமையாதது. சதா குளிர்ந்து கொண்டிருக்கும் தரை அடியோடு குளிராமல் இருப்பதற்கு இது துணைசெய்கின்றது. குளிர்ந்துவருவதால் ஏற்படும் குறைவினை யுரேனியம் வெளிவீசும் சூடு நிறைவுசெய்கின்றது. பூமி குளிர்ந்து கொண்டுவரும் அளவினையும் அதனை ஈடுசெய்யப் பூமியில் எவ்வளவு யுரேனியம் இருக்கவேண்டும் என்றும் அறிவியலறிஞர்கள் கணக்கிட்டுள்ளனர். அந்த அளவுக்குமேல் யுரேனியம் பூமிக்குள் இருந்தால் அதிலிருந்து வரும் சூட்டினுல் பூமி வெடித்துப்போகும் என்று அவர்கள் கருதுகின்றனர்.

## அணுவில் உறைந்துள்ள ஆற்றல்

அணுத்திரளைகள் அணு அணுவாக உடையும் பொழுது முன் அடங்கிக்கிடந்த ஆற்றல் பின்னே வெளிப்பட்டுச் சூடாகி எழுகின்றது. வேதியல் மாற்றத்தில் வெளிப்படும் சூடு இதுதான். அணுவே சிதையும்போது இதைப்போல் பல்லாயிரம் மடங்கு சூடு வெளிப்படுகின்றது. மின்னிகள் அணுவாகக் கட்டுண்டபோது உட்கொண்ட ஆற்றலையே அணுவின்கரு சிதைவுற்றுக் கக்குகின்றது. ஒரு கிராம் எடையுள்ள கரியில் கிடக்கும் அணுத்திரளைகள் சிதைந்து எரிந்தால் 8 ஆயிரம் கனலி (calorie) சூடு எழும். ஆனல், ஒரு கிராம் கரியில் அணுச்சிதைவு ஏற்பட்டால் 16,000 கோடி கனலி சூடு வெளிப்படுகிறது. எனவே, அணுத்திரளையின் சிதைவினுல் கரி எரியும்போது ஏற்படும் ஆற்றலைவிட அணுச்சிதையும்போது எழும் ஆற்றல் 2 கோடி மடங்கு மிகுதியாகும் என்பதாகின்றது. ஒருபட்டாணி அளவு நிலக்கரியின் அணுக்களைச் சிதைத்து ஒரு கப்பலை அட்லாண்டிக் மாபெருங் கடலைத் தாண்டி ஓடச்செய்யலாம் என்று கணக்கிட்டுக் கூறுகின்றனர் அறிவியலறிஞர்கள். அரைவிரற்கடை அளவு நிலக்கரி அணுக்களைச் சிதைத்து ஐந்து புகைவண்டியில் ஏற்றிவரும் நிலக்கரி எரிவதால் உண்டாகும் சூட்டு அளவு வெளிப்படுத்தலாம் என்றும் அவர்கள் பேசுகின்றனர். இன்று அணுவினைத் தாக்கி உடைப்பதற்கு நேர்இயல் மின்னி, இருநி (deuteron), ஆல்பா கதிர், பொதுஇயல் மின்னி ஆகிய நான்கினைப் பயன்படுத்துகின்றனர். இவற்றைச் சுழலினி (cyclotron) என்ற கருவியின் துணைகொண்டு இயக்கி அணுவினைச் சிதைக்கின்றனர்.

## இயற்கை அன்னையின் கையழுத்தம்

அணுவினைப்பற்றி எல்லாம் அறிந்துவிட்டோம் என்று எண்ணுவது தவறு. அணு ஆராய்ச்சி இன்னும் முடியவில்லை. அதற்கு முடிவும் இல்லை. "அறிதோறும் அறியாமை கண்டற்ருல்." அணு பொருளா? ஆற்றலா? அலையா? என்று திட்டமாக வரையறுத்துச் சொல்ல முடியவில்லை. நம்முடைய இயற்கை அன்னை என்ன என்ன மறைத்துவைத்திருக்கின்ருள் என்பதை அறிவது எளிதல்ல. அப்பெருமாட்டி வாரி வழங்கும் வள்ளல் அல்லள்; கையழுத்தம் மிக்கவள். அறிவியலறிஞர்கள் துப்பறியும் சோதகர்கள் நிலையிலிருந்துகொண்டு அவள் மறைத்து வைத்திருக்கும் பொருள்களை ஆராய்ந்து வருகின்றனர். அப்பொருள்களால் எதிர்கால உலகம் எல்லா நலன்களையும் எய்த வேண்டும்.

## இறுவாய்

இஃது அணுயுகம். 'அணுவிற்கு அணுவாகி' என்று அருள்நூல்கள் பாராட்டும் அணுவைத் துருவித்துருவி ஆராயுங் காலம்; அண்டங்களின் அமைப்பும் அணுவின் அமைப்பும் ஒன்றே என்று உலகிற்கு எடுத்தியம்பிய காலம். இவ்வளவும் அறிவுத்தினவால் ஏற்பட்ட விளைவுமட்டிலும் அன்று; ஆன்ம அமைதிக்கும் இந்நிலை இன்றியமையாதது. நம்முடைய சடநிலை வாழ்வும் ஆன்மவாழ்வும் உயரவேண்டுமாஞல் அணு ஆராய்ச்சியால் கண்ட

உண்மைகள் சமுதாய நலனுக்குப் பயன் படும் வழிகளை வகுக்கவேண்டும். தாருக வனத்து முனிவர்கள் அபிசார யாகத்தி லிருந்து கிளப்பிவிட்ட களிறு, பாம்புகள் முதலியவற்றைச் சிவபெருமான் பயன் படுத்திக்கொண்டதைப்போல் அறிவியலறி ஞர்கள் சோதனைச் சாலையில் கண்டறிந்த அணுக்குண்டின் ஆற்றல்களை மக்கள் வாழ்வின் பொருட்டுப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அணுவாற்றலை ஹிரோஷீமா, நாகசாகிபோன்ற நகரங் களை அழித்தது போன்ற அழிவுவேலைக் காகப் பயன்படுத்திய முறையை ஒழித்து விவசாயம், மருத்துவம், ஆலைத்தொழில் முதலிய ஆக்கவேலைகளில் பயன்படுத்த வழிகளை வகுக்கவேண்டும். அறிவியல் துறைகளில் மேலோங்கி அகந்தையில் ஆழ்ந்துள்ள மேலைநாடுகளுக்கு ஆன்ம நேய ஒருமைப் பாட்டில் திளைக்கும் நம்நாடு தான் வழிகாட்டவேண்டும். ஒழுக்க நிலையி லிருந்து வழுக்கிவிழும் மேலைநாட்டின ருக்கு அறச்சுரணை யூட்டவேண்டும். பாக் டீரியாக்களை விழுங்கும், குருதியின் வெள்ளை யணுக்களைப்போலக் காந்தியடி கள் போன்ற பெரியோர்களைப்பெற்ற நம் நாடு அணுக்குண்டினையும் விழுங்கி ஏப்பமிட்டுப் புத்தர் காட்டிய பாதையில் போக வழி அமைத்துத் தருதல்வேண்டும். அத்தகைய வழியில் புதியதோர் உலகம் அமைத்துத்தர ஆண்டவன் அருள்வானாக!

---

## இயற்கை அணுக்குண்டுகள்

ஞாயிற்று மண்டிலத்தில் இயற்கையாகவே பலகோடி ஆண்டுகளாக அணுக்குண்டுகள் வெடித்துக் கொண்டு இருக்கின்றன. அங்குள்ள அணுக்கருவில் இடைவிடாது மாறுதல்கள் ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றன. விண்மீன்கள் எல்லாம் அணு ஆற்றலினால்தான் மின்னுகின்றன. ஓர் அடுப்புக்கரியை எரித் தால், அது ஒளியாகவும் வெப்பமாகவும் தன் ஆற்றலை வெளிவிடுகின்றது. ஆனால், அது சிறிது நேரத்தில் சாம்பல் ஆகின்றது. எரிந்துபோன பிறகு அதில் ஆற்றல் ஒன்றும் வெளிவருவதில்லை.

இதைப்போலவே சூரியனையும் எரிகின்ற கரித்துண்டம் என்று வைத்துக் கொண்டால், அது எரியத் தொடங்கிச் சில காலத்திற்குள் அழிந்து மறைந் திருக்கவேண்டும். ஆயினும் சூரியன் பலகோடி ஆண்டுகளாகச் சிறிதும் மாறுத லின்றிச் சுடர்விட்டு எரிகின்றது.

ஞாயிறு மண்டிலத்திலுள்ள ஹைட்ரஜன் முழுவதும் வேறு பொருளாக மாறும் வரையில், அணுவின் ஆற்றல் வெளிப்பட்டுக்கொண்டே இருக்கும். இஃதே போன்று ஏனைய நட்சத்திர மண்டலங்களிலும் அணுக் கருவில் மாற்றங்கள் ஏற்படுகின்றன.

அணுக் கருவின் மாற்றங்கள் நின்றால்தான் நட்சத்திரங்களின் ஆற்றல் முடிவு அடையும். சூரியனுக்கு இத்தகைய முடிவு ஏற்படுவதற்குப் பலகோடி ஆண்டுகள் செல்லும். ஆதலின் சூரியனுடைய முடிவைப் பற்றி இப்பொழுது நாம் கவலைப்பட வேண்டியதில்லை.

சூரிய மண்டிலத்தில் அணுக்கள் பிளக்கப்படுவதால்தான் அளவிடமுடி யாத ஆற்றலுடன் ஒளி வீசுகின்றது. சூரிய மண்டிலத்தில் தோன்றும் ஆற்றல் கோடிக்கணக்கான அணுக்குண்டுகள் ஒரே வேளையில் வெடிப்பதைப்போல் இருக் கின்றது. இதனால்தான் மிகத் தொலைவில் இருந்தாலும் சூரியன் கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் விளங்குகின்றது.

--என். கே. வேலன், பி.ஏ., ''அணுவின் கதை''

---

# அனைத்திற்கும் அடிப்படை ஒன்றேதான்

[டாக்டர் மொ. அ. துரை அரங்கசாமி]

செங்கற்பட்டு, மதுராந்தகத்தைச் சேர்ந்த மொறப்பாக்கத்தில் மொ. சி. அப்பாசாமிப் பிள்ளைக்கும் ஞானாம்பாள் அம்மைக்கும் 1-7-1908 இல் இவர் திருமகனாராய்த் தோன்றினார். வித்துவான் தேர்வில் முதல்வராகத் தேறி ஐந்தாம் ஜார்ஜு மன்னர் நினைவுப் பரிசிலாகிய ஆயிரம் வெண் பொற்காசுகளைப் பெற்றார். எம். ஏ., எம். ஓ.எல், பிஎச்.டி. ஆகிய பட்டங்கள் பெற்றவர். கோ. வடிவேற் செட்டியார், கயப்பாக்கம் சதாசிவ செட்டியார், தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் ஆகியோரின் அருமந்த மாணவராவார். வடமொழியும் வல்லவர். அரசினர் அலுவலகத்தில் எழுத்தராகவும், சென்னை, இந்து தியாலஜிகல் உயர்நிலைப் பள்ளி, பச்சையப்பன் கல்லூரி, மதுரை, தியாகராசர் கல்லூரி ஆகியவற்றில் ஆசிரியராகவும் பணியாற்றி 1950 முதல் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராகத் தொண்டாற்றி வருகின்றார். ஆழ்ந்த ஆராய்ச்சியின் பயனாக அரிய நூல் பல இயற்றியுள்ளார்.



அவன் மிக்க பரபரப்புடன் அவரிடம் வந்தான். வழக்கம்போல் அவனை முக மலர்ச்சியுடன் அவர் வரவேற்றார். அவருக்கு அண்மையிலேயே ஒரு முக்காலியின் மேல் அவன் உட்கார்ந்தான்.

அவருடைய தலையிலும் வலத் தோளிலும் கட்டுக்கள் கட்டப்பெற்றிருந்தன. கட்டுக்களின்மேல் குருதிக்கறை தென்பட்டது.

கட்டிலின்மீது அவர் உட்கார்ந்து கொண்டிருந்தார். துன்பக்குறி ஒன்றும் அவருடைய முகத்திலோ கண்களிலோ காணப்படவில்லை. வழக்கம்போல் ஏதோ ஓர் ஓலைச் சுவடியை அவர் படித்துக் கொண்டிருந்தார்.

வந்தவன், வந்த பரபரப்போடேயே, அவரைப் பார்த்து, "தங்கள் மீது கற்களை யாரோ வீசி எறிந்தார்களாமே! தங்களுக்குத் தமிழ் மரபில் பற்றில்லை என்றார் களாமே! தூய தமிழில் சிறிதளவுகூட ஈடுபாடில்லை என்றார்களாமே! நாளும் கோளும் எண்ணிக்கொண்டும், வந்தவர்களிடம் இன்ன இன்ன இவ்விக் கோள்களால் நேரும் என்று சொல்லிக் கொண்டும், யாரும் காணாத ஒரு கடவுள் உண்டு என்று கூறிக்கொண்டும், அதன் அருளே துணையாகக் கோள்களால் வந்துறுவனவற்றைப்பொறுமையாக நுகர்ந்து அமைதி பெற்றிருக்கவேண்டும் என்று சொல்லிக்கொண்டும் தாங்கள் தமிழர்களைக் கெடுத்துக்கொண்டே வருகிறீர்கள் என்றார் களாமே! கடவுட்கொள்கை தமிழனுக்கு ஏது என்றார்களாமே! நாளும் கோளும் ஊழும் எல்லாம் மூடநம்பிக்கை என்றார் களாமே! அயலாரிடமிருந்து வந்து புகுந்த அவற்றையெல்லாம்கொண்டு தமிழர்களைக் கெடுத்துக்கொண்டுவரும் தாங்கள் நாசமாய்ப் போகவேண்டும் என்று கூறிக் கொண்டே தங்கள்மீது கற்களை வீசி எறிந்தார்களாமே! பல பேர்கள் ஒன்றாய்க் கூடி நின்றுகொண்டு 'ஒழிக! ஒழிக!' என்று கற்களைத் தங்கள்மீது வீசி வீசி எறிந்தார்களாமே!

"தங்களுக்கு நன்றாக அடிபட்டிருப்பது போல் காணப்படுகிறதே! தலையில் கட்டு! கையில் கட்டு! கட்டின் மீது குருதி கொப்புளித்திருக்கிறது! அவர் வீசிஎறிந்த கற்கள் தங்களை வலுவாகவே தாக்கியிருக்கின்றன! அந்தோ! இந்த நிலையிலும் தாங்கள் கட்டிலில் படுத்து ஓய்வுகொள்ளாமல் வழக்கம்போலவே சுவடியைப்

புரட்டிக்கொண்டிருக்கிறீர்களே! அந்தப் பாவிகள் யார்? தங்கள் பகைவர்கள் யார்? அவர்கள் யார் என்று சொன்னல் அவர்களைச் சுக்குநூறு ஆக்கிவிடுகின்ருேம். சொல்லுங்கள்! அவர்கள் யாரென்று சொல்லுங்கள்! உங்களுக்கு நாங்கள் இல்லையா? தங்கள் பொன்மொழிகளைக் கேட்டுப் பயனடைந்துவரும் நாங்கள் என்ன, ஆற்றலில் குறைந்தவர்களா? தமிழில் எழுத்துமட்டும் தெரிந்தவர்கள் அவர்கள்! தாங்களோ, எழுத்தொடு எண்ணும் தெரிந்தவர்கள்! அவர்களைவிடத் தாங்கள் எவ்வாறு குறைந்தவர்கள்? அவர்கள் ஏன் அப்படிச் சொன்னர்கள்? அவர்கள் யார் என்று சொல்லுங்கள். அவர்களைத் தொலைத்துக்கட்டினலொழிய எங்களுக்கு ஆறுதல் ஏற்படாது. சொல்லுங்கள்! உடனே சொல்லுங்கள்!'' என்று கண்ணீரும் கம்பலையுமாய் வருத்தம் தேங்கிய முகத்துடன் பரபரப்புடன் பலப் பலவாகக் கூறிக் கேட்டான் அவன்.

அப்போதும் அவர் நகைமுகத்துடனேயே, "என்ன தம்பி! ஏதேதோ கூறுகிருய்? யார் எனக்குப் பகைவர்கள்? யார் எனக்குத் தீங்குசெய்தனர்? உனக்கேன் இத்தனை பரபரப்பு? என்னை யாரும் ஒன்றும் செய்யவில்லையே!'' என்ருர், இன்சொற்களாலேயே.

"என்ன ஆசிரியரே இப்படிக் கூறுகிறீர்கள்! நான் வழியில் கேட்டதெல்லாம் பொய்யா? எனக்குற்ற நண்பர்கள் கூறக்கேட்ட செய்தி பொய்யா? தங்களிடமோ அவர்களிடமோ, பகையோ உறவோ இல்லாத நடுவுநிலையாளர்களான அயலவர்கள் கூறக்கேட்ட செய்தியும் பொய்யா? கேட்டது பொய்யென்ருலும், ஈதோ எதிரே என் இருகண்களாலும் காண்பதும் பொய்யா? தலையில் கட்டு! கையில் கட்டு! குருதி கொப்புளித்திருக்கிறது! இந்த அடிகளுக்குக் காரணம்! காரணம் இல்லாமல் காரியம் ஏற்படுமா? இந்த அடிகள் ஏற்படக் காரணம்?'' என்ருன் அவன்.

"ஓகோ! இந்த அடிகள் ஏற்பட்டதற்குக் காரணம் கேட்கிருயா? அப்படியாளுல் அவ்வாறு கேட்டிருக்கலாமே! அதைவிட்டு என்னென்னவோ, அமைதியை இழந்து, பரபரப்புடன் கூறினையே! இத்துணைக் காலம் என்னிடம் பயின்ற நீ, இந்த அடிகளுக்குக் காரணம் கூறும்படி என்னை ஏன் கேட்கவேண்டும்? நான் கூறித்தான் அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமா? அஃது உனக்கே தெரியுமே! மறந்து விட்டாயா? மறதி! மறதி! மறதியால் அன்ருே உனக்கு இத்தனை பரபரப்பு! மறதிக்கு அடிமையாவதால் அன்ருே மக்கட்சுட்டுடன் வாழமுடியாது போகிறீர்கள்! போகட்டும். நானே கூறி விடுகிறேன். கட்டாகட்டும், அடியாகட்டும், கறையாகட்டும், பிறவாகட்டும்—அனைத்திற்கும் காரணம் ஒன்றுதானே! தீங்கிற்கு மட்டுமென்ன, நன்மைவருதற்கும் காரணம் ஒன்றே ஒன்றுதானே! அனைத்திற்கும் அடிப்படை ஒன்றேதான்! அதை மறந்து விட்டு அவர் வைதார்; இவர் வைதார்; அவர் தீங்கு செய்தார்; இவர் தீங்கு செய்தார் என்று பிறர்மீது பழி சுமத்துவானேன்?" என்ருர் அவர்.

அவரிடம் நெடுநாட்கள் பயின்றவன் தான் அவன்! அவரிடம் எழுத்தும் பயின்ருன்; எண்ணும் பயின்ருன்; தமிழ் மொழியின் சுவையை அவரிடம் நிரம்பவே நுகர்ந்தான். ஆளுல், அவர் கூறிய காரணம் இன்னது என்று அவனுக்கு விளங்கவில்லை.

எனவே, அவன் மிக்க அடக்கத்துடனும் பணிவுடனும், "தாங்கள் குறித்த காரணம் இன்னது என்று விளங்கவில்லையே! தீங்கு வருவதற்கும் நலம் வருவதற்கும் காரணம் ஒன்றே என்று கூறினீர்களே! அஃது இன்னது என்று தெரிந்துகொள்ள முடியவில்லையே! அருள் கூர்ந்து அஃது இன்னது என்று தாங்களே கூறவேண்டும்,'' என்று இரந்து வேண்டினன்.

"அப்படியா? காரணம் தெரியவில்லையா? அவரவர்க்குவரும் தீங்கிற்கும் நலத்திற்கும் அவரவரே காரணம். எனவே, இந்த அடிக்கும், கட்டிற்கும், கறைக்கும் நானேதான் காரணம்!'' என்ருர் அவர்.

"என்ன ஆசிரியரே! தாங்களே அடித்துக் கொண்டீர்களா? அப்படியும்

யாராவது செய்துகொள்வார்களா? தாங்கள் கூறுவது புதுமையாக அன்றோ இருக்கிறது! எனக்கொன்றுமே புலப்பட வில்லையே! அருள் கூர்ந்து விளக்கமாகச் சொல்லுங்கள்,'' என்றான் அவன்.

''சொல்லுகிறேன்கேள்! கருத்துடன் கேள்! மக்களாகப் பிறந்தவர்கள் இந்த உண்மையைத்தான் அரும்பாடுபட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். இந்த உண் மையைத் தெரிந்து கொள்ளாதவர்கள் புலமை நிரம்பியவர்கள் ஆகமாட்டார்கள். மொழி பயின்றவர்கள் அனைவரும் இந்த உண்மையைத் தெரிந்துகொள்ளாத வரை யில் புலமை நிரம்பியவர்கள் ஆகவே மாட்டார்கள். தமிழ்மொழி ஆயினும் சரி, பிறமொழி ஆயினும் சரி—எம் மொழி பயின்றவர்க்கும் இந்த உண்மை உணரப் படவில்லையாயின், அவர்கள் மொழியைக் கற்றும் கல்லாதவர்களே ஆவர்; பதடிகளே ஆவர்.

''எல்லா மொழிகட்கும் எல்லாக் கலைகளும் உரிமை ஆவனவேயாகும். கலைகளெல்லாம் எல்லா மொழிகட்கும் பொது உடைமையாகும். அவைகள், ஒரு மொழியில் நூல்களால் விரித்துரைக் கப்பெற்றிருக்குமானால் அதற்கே உரிமை யானவை என்று கூறுதல் பகுத்தறிவிற்குப் பொருந்தாது. தொல்காப்பியத்திற்கு முன் இருந்த தமிழ் நூல்கள் எங்கே? தொல் காப்பியத்திற்கு முன் தமிழில் நூல்கள் இல்லையென்று கூறமுடியுமா? தமிழில், கலைகள் பற்றி இப்போதில்லாத நூல்கள் தொல்காப்பியர் காலத்திற்கு முன் இருந் திருக்கலாம் அல்லவா? கடவுட்கொள்கை பற்றிய பலப்பல நூல்கள் இருந்திருக்க லாம் அல்லவா? எண் எனப்படும் கணிதம் பற்றிய நூல்கள் இருந்திருக்கலாம் அல் லவா? எனவே, தமிழில் மிகுதியாகக் கணிதம் முதலியவை பற்றிய நூல்கள் இல்லையென்றால், அவைபற்றிய கருத்துக் கள் அயல் மொழிகளிலிருந்து வந்து தமிழில் புகுந்தன என்று கண்மூடித் தனமாகக் கூறுவதுதான் உண்மையா? தமிழில் நூல்கள் இல்லையென்றாலும், இலைமறை காய்போல் அங்கங்கே எண் பற்றிய செய்தியும் பிறவும் இருத்தலைக் காணலாமே! அவற்றையெல்லாம் திரட்டி உணர்வைப் பெருக்கிக்கொள்ளும் ஆற்றல் இல்லாதவர்கட்கு அனைத்தும் மூடப்பழக்க மாகவே தோன்றும்! வந்தேறிகளாகவே தோன்றும்! அவர்களைக் குறித்து நாம் இரக்கம் காட்டவேண்டுமேயன்றி வேறு ஒன்றும் செய்தற்கில்லை. இது நிற்க.

''இந்த அடிகளுக்குக் காரணம் நானே என்று கூறினேன். அஃது உனக்கு விளங்கவில்லை. நானே காரணம் என்றால் நான் செய்த வினையே காரணம் என்ப தாகும்; சென்ற பிறப்புக்களில் நான் செய்த வினையே காரணமாகும் என்ப தாகும். சென்ற எத்தனையோ பிறப்புக் களில் செய்த வினைகளுள் ஊழ்த்து, அஃதாவது முதிர்ந்து பக்குவப்பட்டு ஊழாய் இப் பிறப்பில் வந்து பயன் கொடுக்கும் வினைகளே என் அடிகளுக்குக் காரணமாகும். கடந்த பிறப்புக்களில் செய்த வினைகளெல்லாம் நான் அறிந்து விரும்பிச் செய்த வினைகளே. அவற்றால், இப் பிறப்பில் தீதோ நன்றோ அவ்வப் போது உண்டாகின்றது. எனவே, தீது வருவதற்கும் நலம் வருவதற்கும் நான் காரணமே ஒழியப் பிறர் அல்லர். 'காக்கை ஏறிற்று; பனம் பழம் விழுந்தது' என்ற கதையாய், நான் செய்துகொண்ட வினையின் பயன்கள் என்னை வந் தடையுங் கால், இடையில் நிற்பவர்மீது பழிபோடு வது எவ்வாறு பொருந்தும்? தீதும் நன்றும் பிறர்தர வாரா. அவரவர்க்கு, அவரவர் கடந்த பிறப்புக்களில் செய்த வினைப்பயனாகவே, அவை வருகின்றன. எனவே, அவரவர் அடையும் தீதுநலங் களுக்கு அவரவரே காரணம்; மற்றவர் அல்லர்.

''இந்தப் பிறப்பில், மக்களனைவரும் தத்தம் தாய் வயிற்றிலிருந்தே பிறக் கின்றனர்; பிறத்தற்கு ஏற்ற முறையாகத் தான் பிறக்கின்றனர். ஆனால், அவர்களுள் எத்தனை வேறுபாடு? அவர்களுடைய உறுப்புக்களில் எத்தனை வேறுபாடு? அவர்கள் செயல்களிலும், இன்ப துன்பம் ஏற்கும் வழிகளிலும், இன்ப துன்பங் களிலும் எத்தனை எத்தனை வேறுபாடு? மக்களாய்ப் பிறந்தவர்களுக்கு இவை யெல்லாம் ஒரே வகையாகவே அல்லவோ இருத்தல் வேண்டும்? அவ்வாறு

இல்லையே! எனவேதான், இவ்வேறுபாடுகளுக்கெல்லாம் காரணமான வினைகளும், அவை செய்தற்கு வேண்டப்படும் கடந்த பிறப்புக்களும் மதிநலம் உடையவரால் ஒப்புக்கொள்ளப்படுகின்றன; அறிவுத் திறம் உடையவர்களால் கொள்ளப்படுகின்றன.

"சென்ற பிறப்புக்களில் செய்த வினையின் பயனை இப் பிறப்பில் நுகர் பொருள்களைப் பெற்றுத் துய்த்தற்கேற்ற செல்வமும், அவற்றைத் துய்த்தற்கேலாத வறுமையும் நம்மை வந்தடையும். நல்வினையால் செல்வமும், தீவினையால் வறுமையும் வந்தடையும். அவையே, முறையே நன்றும் தீதும் எனப்படும். தீவினையால் தீதும், நல்வினையால் நன்றும் நம்மை வந்தடைவனவாயிருக்க அவை பிறர் தர வந்தனவாகக் கொள்ளலாமா? எனவே, தீதும், நன்றும் பிறர் தர வாரா எனல் வேண்டும்.

"நாம் செய்த தீவினையின் காரணமாக உடம்பிற்கு நோயும், மனத்திற்குக் கவலை என்னும் பிணியும் வருவன. நோயையும் பிணியையும் ஒன்று சேர்த்து நோதல் எனலாம். நல்வினையின் காரணமாக நோதல் இன்றி வாழ்தலும் நோதல் நீங்கித் தணிதலும் அமையும். எனவே, நோதலுக்கும் தணிதலுக்கும் முறையே தீவினையும் நல்வினையும் காரணங்களாகும். ஆகவே, நோதலும் தணிதலும் அவற்றோரன்ன எனக் கூறலாம் அன்றோ!

"சென்ற பிறப்புக்களில் செய்த தீவினை நல்வினைகளுள், ஊழ்த்த சிலவற்றை, இப்பிறப்பில் இவ்வளவு காலம் வாழ்ந்திருந்து அவற்றை நுகர்ந்து கழிப்பதற்கெனவே வந்திருக்கிறோம். எனவே, அவற்றை நுகர்ந்து கழித்தபின், நாம் சாகத்தான் வேண்டும். இப்படி எத்தனையோ பிறப்புக்கள் எடுத்துச் செத்திருக்கிறோம். எனவே, சாதலும் புதுவதன்றே எனக் கூறலாம் அன்றோ!

"வாழுங் காலத்தில், நாம் செய்த நல்வினையால் நுகர்பொருள்களெல்லாம் வந்தடைய, வாழ்தல் இனிதாகலாம்; தீவினையால் வறுமை வந்தடைய, வாழ்தல் இன்னாதாகலாம். வாழ்தல் இனிதாயினும், இன்னாதாயினும், வாழ வரைந்துகொண்ட நாள் முழுதும் வாழ்ந்தே தீரவேண்டும். ஆதலால், இருவகை வாழ்க்கையையும் ஒப்பக்கொண்டு வாழ வேண்டுமே ஒழியச் செல்வத்தால் செருக்கோ, வறுமையால் தளர்ச்சியோ கொள்ளுதல் ஆகாது. செல்வம் வந்துற்றபோது வாழ்தலை இனிதாகக் கொண்டு செருக்குபவர், வறுமை வந்துற்றபோது மனமுடைந்து பெரிதும் அல்லல் படுவர். ஆகவே, நாம், வாழ்தலை இனிதெனலும் ஆகாது; அதனை வெறுத்து இன்னாதெனலும் ஆகாது

"தீதும் நன்றும், நோதலும் தணிதலும், சாதலும் பிறத்தலும், வாழ்தலும் வறுமையுறலும் மாறி மாறி வருவன. எவரும் வாழ்நாள் முழுதும் தீதே நுகர்வரல்லர்; தீது ஒருகாலும் நலம் ஒருகாலும் நுகர்வர்; தீது நீண்டகாலமும் நலம் சிறிது காலமும் நுகர்வர்; அல்லது தீது சிறிது காலமும் நலம் நீண்ட காலமும் நுகர்வர். அவ்வாறே ஏனையவும்! மாறி மாறி வரும் அவற்றிற்கெல்லாம் காரணம் வினையே; நாம் செய்த வினையே. நம் வினைக்குப் பிறர் பொறுப்பாளியல்லர்.

"எனவே, ஊழ் ஒரு பெரு வெள்ளம் போன்றதாகும்; வினைப் பயனால் ஒரு பிறப்பில் நமக்கு மேற்கூறியவற்றையெல்லாம் தர முன்னிற்கும் ஊழாகிய வெள்ளத்தில், அஃதோடும் ஓட்டத்தில் நாம் உடன் ஓடிக்கொண்டிருக்கிறோம். மின்னி இடித்துப் பெருமழையைக் கருமுகில் பெய்ததாக, அப்போது கரை புரண்டு ஓடும் ஆற்றின் பெருவெள்ளத்தை யாரும் அணைகோலித் தடுத்தல் இயலாது. அதன் ஓட்டத்தை மாற்றிச் செலுத்தவும் இயலாது. அவ் வெள்ளத்தில் ஒரு புணை அகப்பட்டுக்கொண்டால், அஃது அவ் வெள்ளம் ஓடும் வழியாகவே ஓடும். அதுபோலவே ஊழாகிய பெருவெள்ளத்தில் நம் ஆருயிராகிய புணை ஓடிக்கொண்டே இருக்கும். வெள்ளம் வறண்டுபோனால், புணை, கேட்பாரற்றுக் கிடந்தொழியும். ஊழ் கழிந்துபோனால், உயிர் நின்ற உடம்பு, பிணமாய்க் கிடந்தொழியும்.

"ஊழே அனைத்திற்கும் ஒரே காரணம் என்பது இப்போது புலப்படவில்லையா? நம் ஊழ் காரணமாக நமக்கு இன்ப

துன்பங்கள் ஏற்படுமானல், அவற்றை இடையில் நிற்பவர் தந்தார் என்று கூற லாமா? அதனல், நமக்குத் தம் நற்குண நற்செயல்களாகிய மாட்சியினல் பிறர் நன்மை செய்தார் என்று அவரை வியந்து பாராட்டுதற்கும் இல்லே. மாட்சியிற் பெரி யார் என்று அவரை வியத்தற்கும் இல்லே. அல்லாதவரைச் சிறியார் என்று இகழ் தற்கும் இல்லே.

"நாம் பிறந்த ஊரில் இவர் பிறந்தார்; ஆதலின், நமக்கு நன்மை செய்தார்; ஆகவே நமக்குக் கேளிர்; நலந் தீங்குகளைக் கேட்டு நன்மை செய்ய நமக்கு உறவுமுறை யாதற்கு உரியவர்; அத்தகையோர் சூழ இருக்கும் நம்மூரே நமக்குச் சிறந்தது என்பதற்கில்லே. ஏன்? நம் ஊழ் நமக்கு நலமோ தீதோ செய்யவல்லதே ஒழிய, மற்றவர் எவரும் செய்யவல்லவர் ஆகார். எனவே, யாதும் நம் ஊரே யாகும்; யாவரும் நம் கேளிரே யாவர். அயலூர் என்றும் அயலவர் என்றும் அயல் மொழி என்றும் நாம் வெறுத்தல் ஆகாது.

"இவற்றை நானே படைத்துக் கூறுகிறேன் என்று கருதுதல் வேண்டா. அறிவின் திறமுடையவர், இவற்றை யெல்லாம் முன்பே நன்குணர்ந்து, தாம் இயற்றிய நூல்களில் எழுதிவைத்து விட்டுச் சென்றிருக்கின்றனர். அவர்கள் கூறியிருப்பவை அனைத்தும் நம் வாழ்க்கை யில் பார்க்கின்றபோது, முற்றும் உண்மை யாகின்றன. ஆகையால் திறவோர் காட்சி யில் பெற்ற தெளிவு ஈதாகும்.

"எனவே, என்மீது யாரோ கல்லே வீசி எறிந்தார்கள் யாரோ, என்னென் னவோ பேசினர்கள். அவர்கள் யார்? என்றெல்லாம் கேட்டால், அவர்களும் நம் கேளிர் என்றுதான் நான் பதில் சொல்ல முடியும்; அவர்கள் தங்கள் ஊழால் உந்தப்பட்டு அவ்வாறு செய்தார்கள். அவர்கள் செயலால் அவர்கள் இன்ப துன்பத்தை நுகர்வார்கள். நமக்கு வரக் கடவனவாகிய இன்ப துன்பங்கள் நமக்கு வருகின்றன. அவர்கட்கு வரக்கடவன வாகிய இன்ப துன்பங்கள் அவர்கட்கு வரும். அவர்கட்கு இன்ப துன்பங்களே நாமியற்றவோ நமக்கு இன்ப துன்பங்களே அவர்களியற்றவோ முடியாது.

"எனக்கு ஏற்பட்ட அடி அவர்கள் கல் எறிந்ததால் என்றன்றே நீ கூறுகிருய்! அவர்கள் எறிந்த கற்கள் அனைத்தும் என் மீது பட்டிருந்தால் என் கதி யாதாய் இருந்திருக்கும்? எல்லாக் கற்களும் ஏன் படவில்லே? என் ஊழால் எனக்கு ஏற்படுதற்குரிய துன்பம் விளையும் அளவா கவே அவர்கள் வீசிய கற்களுள் சில என் மேல் பட்டன. இத் துன்பம், இன்று அவர்களா லன்றி வேறு வகையாகவும் வந்திருக்கலாம். ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் எனவே, நம் ஊழால் நமக்கு ஏற்படுவனவற்றை, நாம் முன் விரும்பிச் செய்த வினையால் அல்லவா ஏற்பட்டன என்று வெறுப்பில்லாமல் நுகர்தலே ஏற்றது. எனவே, அனைத்திற்கும் காரணம் ஊழே என்பது இப்போது விளங்கிற்ரு?"

பரபரப்போடு வந்தவன் அமைதியே உருவமானன்; இரு வினையையும் ஒப்பக் கொள்ளும் அவருடைய மாட்சிமையை நினைந்து வியந்தான். பிறர்மீது குற்றம் சாற்ருமல், தமக்குற்றதை விருப்பு வெறுப் பின்றி ஏற்று, இன் சொல்லும் முகமலர்ச்சி யும் கொண்டு விளங்கும் அவருடைய பண் புடைமையைக் கண்டு, தனக்கு அஃது என்ருயினும் வருமோ என்று ஏங்கினன்; அதனைப் பெற வேட்கை கொண்டான்.

அவருடைய விளக்கம் அவனுக்குப் பெறற்கரிய பெரும்புதையல் கிடைத்தது போல் ஆயிற்று. தான், என்றும் தன் நினைவில்வைத்துப் போற்றப் பெருவிருப் பம் கொண்டான் அவன்; தான் பெற்ற பேறு அனைவரும் பெற வேண்டும் என்ற ஒப்புரவுள்ளமும் கொண்டான். இவ் வளவும் கேட்டு அவனுக்கு அத்தகைய உள்ளம் எங்ஙனம் வாராமல் இருத்தல் ஒல்லும்? எனவே, அவன் அவரை இவ் வரும் பொருள் பொதிந்த பாட்டோவியம் ஒன்று தீட்டியளிக்கும்படி வேண்டினன். அவரும் அவ்வாறே உவகையுடன் பாடினர்; முடிந்த முடிப்பையே எடுப்பாகக் கொண்டு பாடினர்;

"யாதும் ஊரே; யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்ருே ரன்ன;
சாதலும் புதுவ தன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன் றும் இலமே; முனிவின்

இன்னு தென்றலும் இலமே; மின்னெடு
வானந் தண்டுளி தலைஇ யானது
கல்பொரு திரங்கும் மல்லல் பேரியாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆதலின், மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே,''

என்று பாடினர் புலவர். உயிருக்கு இம்மை மறுமைகளில் உறுதிதரும் பொருண்மையடங்கிய பொருண்மொழிக் காஞ்சித்துறையமையப் பாடிய இப்பாடல், சங்க நூல் வரிசையில் சிறந்த புறநானூற்றில் 192 ஆம் பாடலாகப் போற்றிக் கொள்ளப்படுவதாயிற்று. இத்தகைய சிறப்புடைய பாட்டைக் கேட்டு அவன் உள்ளம் பெற்ற மகிழ்ச்சியைக் கூறவும் வேண்டுமா?

இதனைப் பாடிய புலவர் 'கணியன் பூங்குன்றன்' என்ற பெயருடையவர். கணியன்பூங்குன்றனர் என ஏனைய புலவர்கள் பெயர்போல் 'ஆர்' என்னும் உயர்வுப் பன்மை இறுதிநிலை பெருது 'கணியன் பூங்குன்றன்' என்றே இவர் பெயர் வழங்கப்படுதலால், இவரைக் குறுநில மன்னர்களுள் ஒருவராகக் கொள்ளுதலே ஏற்புடைத்தாகும். பூங்குன்றூரை ஆளும் உரிமையுடன், தமிழ்ப் புலமையும் கணித நூற் புலமையும் ஒருங்கே பெற்றுச் சமநிலைக் காட்சியுடன் வாழ்ந்து உலகிற்குப் பெரு நன்மை ஆற்றியவர் இவர் எனலாம்.

இவர் பாடிய மற்றொரு பாடல் நற்றிணையில் (226) இடம் பெற்றுள்ளது; ''மரஞ்சா மருந்துங் கொள்ளார்; மாந்தர் உரஞ்சாச் செய்யார் உயர் தவம்; வளங் கெடப் பொன்னும் கொள்ளார் மன்னர்; நன்னுதல் நாம் தம் உண்மையின் உளமே'' என்றுவரும் அப்பாடற் பகுதியால், இப்புலவருடைய சமநிலைக் காட்சியும், அரச வரிசையிற் சார்ந்தவர் இவராகலாம் என்பதும், காதல் வாழ்க்கையின் சிறப்பை நன்குணர்ந்தவர் இவர் என்பதும் தெரியலாம்.

கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை இன்னநாளில் இறப்பான் என்று கூடலூர்கிழார் நாளும் கோளும் ஆராய்ந்து கூறியவாறு, அவன் இறந்த செய்தியைக் கூறும் புறப்பாடல் கொண்டு (229), தமிழுலகம், கணிதம் சோதிடம் முதலியவற்றை மூடப்பழக்கம் எனக் கொள்ளாது, சிறந்த அறிவியல் மாட்சிகளாகக் கொண்டு போற்றியிருத்தலை நாம் உணர்தல் வேண்டும்.

ஊழே அனைத்திற்கும் காரணம் என்றதன் உண்மையைத் தெளியமாட்டாது, ஊழ் ஊழ் என்று கூறிக்கொண்டு கோட்டை விட்டவர்கள் தமிழர்கள் என்று வாய் கூசாது கூறுவாரும் உண்டு. கடந்த பிறப்புக்களில் செய்த வினைகளின் பயன், ஊழாய் நம்மைவந்தடைதல் தெளியப்படுமானல், இம்மையிற் செய்யும் வினைகளும் இனிவரும் பிறப்புக்களில் ஊழாய் வந்தடையும் என்பது தெளியப்படும். எனவே, நாம் செய்த வினைப்பயனைப் பிறரைத் தூற்றுதல் போற்றுதல் செய்யாது அமைதியுடன் நுகர்தல் வேண்டும் என்பதும், இம்மையில், முயன்று நல்வினைகளையே செய்தல் வேண்டும் என்பதும், அவ்வாறு செய்து வாழ்க்கை நடத்தினல், இனிவரும் பிறப்புக்களில் துன்பமின்றி வாழலாம் என்பதும் நன்கு பெறப்படும்.

ஊழே அனைத்திற்கும் காரணம் என்ருலும், அதை நம்மிடம் சேர்ப்பிக்கும் கடவுளின் நியதியால்தான் அது நம்மை வந்து உறுகிறது என்பதை இன்னும் தெளிவாக அறிவோமானல், ஊழால் வருவனவற்றைப் பொறுமையுடன் நுகர்ந்து வருங்கால், கடவுளின் அளவிலாற்றலுடைமையை உள்ளவாறு விளக்கும் திறவோராலும், திறவோர் காட்சியாலும் (நூலாலும்) உணர்ந்து, அன்பு கொண்டு கடவுளை வாழ்த்தலும், வணங்கலும் நினைத்தலும் இடைவிடாது செய்து, அவனருளாலேயே மெய்யுணர்வு பெற்று இப்பிறப்பிலேயே இனிப்பிறவாத பேரின்ப நிலையை எய்தலாம். திறவோர் காட்சி இத்தன்மையதாய் இருக்க, அதன் துணையைக் கொண்டு தெளிவு பெற்றுப் பயனடையாமல், ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்பது எங்கள் பண்டைத் தமிழர் பண்பாடு என்று தமிழ் மேடைகளில் முழக்கினல் மட்டும் போதுமா?

# சொல்லியல்

[திரு. ம. இராசமாணிக்கம், எம். ஏ.]

திருச்சி, உடையார்பாளையத்தைச் சேர்ந்த செந்துறை யென்னுஞ் சிற்றூரில் 3-11-1918 இல் இவர் தோன்றினர். தந்தையார் மருதவாணப் பிள்ளை; தாயார் பார்வதியம்மையார். திருவையாறு அரசர் கல்லூரியில் பயின்று வித்துவான் பட்டம் பெற்றார். பின்னர் எம்.ஏ. பட்டமும் பெற்றார். உயர்நிலைப் பள்ளிகளில் பத்தாண்டுக்காலம் தமிழாசிரியராகப் பணியாற்றியுள்ளார். தற்போது சென்னை, வண்ணையம்பதி, சர். தியாகராயர் கல்லூரியின் தமிழ்த்துறைத்



தலைவராகச் சிறந்த தமிழ்த் தொண்டாற்றி வருகின்றார். எளிய-இனிய தமிழ் நடையில் எல்லோருளமுங் கொள்ளுமாறு நகைச்சுவையுடன் கருத்துக்களைச் சொல்வதிலும் எழுதுவதிலும் வல்லவர். 'தமிழ் வாத்தியார்', 'உதயணன்', 'தென்றற் கோவை', 'இலக்கியச் சுவை (முதற் பாகம்)' ஆகியவை இவர் இயற்றியுள்ள நூல்களுட் சில வாகும். இவர் எழுதிய 'பழமொழி நானூறு உரை' கழக வெளியீடாக வெளியிடப் பெற்றுள்ளது.

'மலைமீது ஏரினேன்' என்றெழுதியிருந்தான் மாணவன் ஒருவன். 'ஏறினேன்' என்னுஞ் சொல்லின் பகுதியை மட்டும் தனித்து எழுது எனக் கேட்டேன். 'ஏறு' எனத் தன்னையறியாமலேயே யெழுதித் தான் செய்த தவற்றினையும் உணர்ந்தான் போன்று நின்றான். 'ஏறு' என்னுஞ் சொல்லின் வளர்ந்த நிலைதான் ஏறினேன் என்பது; ஆகவே வல்லினமிட்டே எழுத வேண்டுமென்றேன். இந்தச்சொல் மட்டுமன்று, எந்தச் சொல்லாயினுஞ் சரி; எழுதும் பொழுது ஐயந் தோன்றுமேயானல் பகுதியைமட்டும் எழுதிப் பாருங்கள்; ஐயம் உங்களிடமிருந்து விடைபெறுமென்றேன். ஓரளவு தெளிவு பெற்றான் போன்றே அவன் காணப்பட்டான். ஆனல் அவனருகிலிருந்த நண்பன் ஒருவன் எழுந்து, 'ஏறு' என்பதற்கு ஏன் வல்லினமிட்டு எழுதவேண்டும்; 'ஏரு'வென எழுதினல் வரும் இழுக்கென்னை யென்றான். வினு நல்ல வினவே. ஏறுதலும் இறங்குதலும் எளிய செயல்களல்ல; உயிருக்கு இறுதியை விளைவிக்கக் கூடிய கடிய செயல்களே. ஆகவே அவற்றை யெழுதும் பொழுது வல்லினமிட்டுத்தான் எழுதவேண்டும். இறத்தலும் பிறத்தலும் இவற்றைப் போன்று அரிய செயல்களே. அவற்றின் கடுமையை யுணர்ந்துதான் அடியவர்கள் அனைவரும் பிறப்பும் வேண்டேன் இறப்பும் வேண்டேன் எனப் பாடியிருக்கின்றார்கள். ஆகவே, அவற்றை யெழுதும் பொழுது வல்லினமிட்டுத்தானே யெழுத வேண்டும்! பெரியவர்கள் என்னுஞ் சொல்லை ஆராய்ந்து பாருங்கள். மென்குணம் வாய்ந்தவர்கள் என்னும் பொருளைத் தருகின்றதன்றோ! பெரியவர்கள் எனவெழுதும் பொழுது இடையின மிட்டுத்தானே எழுதவேண்டும்? சிறியோர் என்பது சிறுமைக்குணமும் கடிய பண்பும் வாய்ந்தவர்களெனப் பொருள் தருதலால் அதை வல்லினமிட்டே எழுதவேண்டும்.

'அறைந்தான்' என்னுஞ்சொல் உள்ளத்திற் பதிய வன்மையாக உரைத்தான் என்னும் பொருள் தருதலால் அறைந்தான் என்பதற்கு வல்லினமிட்டே எழுத வேண்டியிருக்கின்றது.

செய்தி பரவியது என்னும் தொடரில் வரும் பரவியதற்கு இடையினமிட்டு எழுதுகின்றோம். செய்தி எவ்வாறு பரவும்? ஒருவரிடமிருந்து ஒவ்வொருவரிடமாக மெல்லப் பரவு மன்றோ? மெல்ல விரிந்தது என்னும் பொருளைத் தருதலால் பரவியதற்கு இடையினமிட்டு எழுதுகின்றோம். அரம் அரிக்குமே யன்றி அறுத்தல் செய்யாது. அரிவாளும் அரிக்குமே யன்றி

அறுத்தலைச் செய்யாது. ஆகவே அவற்றை யெழுதும் பொழுது இடையின ரகரம் எழுதுகின்றோம். மனம் இரங்கினர் என்னு மிடத்தும், 'இரங்குதல்' என்பது, உள்ளங் கசிந்துருகும் மென்மை யுணர்த்துவதால் இடையின ரகரமே இடம்பெறுகின்றது.

சலசலப்பு என்னுஞ் சொல்லைக் கேட்கும் பொழுதே ஓசை நினைவு உண்டா கின்றதன்றோ! தமிழே யறியாத வேற்று மொழியாளரிடத்துச் சலசலப்பு, விறு விறுப்பு முதலிய சொற்களைச் சொல்லி, அவற்றின் பொருளாக அவர்கள் அறிவன யாவை யென அறிந்து பாருங்கள்.

'ஏர்' என்னுஞ் சொல்லின் முதலெழுத் தில் நீங்கள் உழுகலப்பையைக் காண்கின் றீர்களல்லிரோ! 'குடம்' என்னுஞ் சொல் லின் முதலெழுத்தைக் கண்ட அளவி லேயே குடத்தின் உருவம் உங்கள் முன் வரத்தான் செய்யும். 'ஒட்டகம்' என்னுஞ் சொல்லின் முதலெழுத்து ஒட்டகத்தை உங்கள் கண்முன் கொண்டுவந்து நிறுத்து கின்ற தன்றோ! 'மறவர்கள்' என்னுஞ் சொல்லைக் கேட்ட அளவிலேயே, கடிய பண்புடைய வீரர்கள் உங்களின் நினைவில் இடம் பெறுவார்கள். 'ஈ' என்னுஞ் சொல் லைக் காணும் பொழுது இரப்போனின் முகக் காட்சி உங்கள் கண்ணெதிரே நிற் கின்றதன்றோ! 'பறை'யென்னுஞ் சொல் லைக் கேட்ட அளவிலேயே அதிலிருந்து வரும் வலிய ஓசை உங்கள் காதுகளைத் துன்புறுத்தும்.

தமிழ்ச் சொற்களிலே அவற்றாற் குறிக் கப்படும் பொருள்கள் இவ்வாறு பொதிந்து கிடக்கின்றன. சொல்லைக் கேட்ட அளவி லேயே பொருளின் உருவமோ பண்போ உளக்கண்முன் ஓடி வருகின்றது. இன்ன பொருளை இன்ன சொல்லாற் குறிக்க வேண்டுமெனக் காரண மின்றி வரும் இடு குறிச்சொற்களல்ல, தமிழ்ச் சொற்கள். பொருள்களின் உருவங்களையோ பண்பு களையோ அடிப்படையாகக் கொண்டெழுந் தனவே அனைத்தும். முதல்முதலில் பொருள்கட்குப் பெயரிட்ட மக்களின் உள் ளங்களை அப்பொருள்களின் உருவங்களோ பண்புகளோ கொள்ளைகொண்டிருக்கும். அவற்றின் அடிப்படையிலேயே அவர்கள் அவற்றிற்குப் பெயரிட்டிருப்பர்.

தமிழ் எழுத்துக்களைச் சித்திர வெழுத் துக்களின் வகையின என்பர். ஐ என்னும் எழுத்தைப் பாருங்கள். பெரியவர் ஒருவர் கால்மேல் கால்போட்டு உட்கார்ந்திருக்கும் காட்சியைக் காணுகின்றீர்களல்லிரோ! ஆ என்னும் எழுத்தும் அதைப்போன்றே ஆவும் கன்றும் அணைந்து செல்கின்ற காட் சியைக் கொண்டு வருகின்ற தன்றோ! அவையே பிற்காலத்தில் ஓரெழுத்தொரு மொழிகள் எனப்பட்டன. குடத்தினை முன் னாளில் கு வென்ற எழுத்தால் குறித் திருப்பர். பின்னாளில் அவ்வுருவெழுத்து வளர்ந்து குடம் என்றாயது. தமிழ்ச் சொற் கள் அனைத்தும் தம்மால் உணர்த்தப்படும் பொருள்களின் உருவத்தையோ பண் பையோ சித்திரம் போன்று நம் கண்முன் காட்டுகின்றன. ஆகவே தமிழ்ச் சொற் களைச் சித்திரச் சொற்கள் எனக் கூறுவதில் தடையேது மின்று. எழுத்துக்கள் சித்திர வெழுத்துக்களாயின் சொற்களும் சித்திரச் சொற்களாகவே அமைந்திருக்கு மல்லவா!

தமிழ் மிகப்பழைய மொழியாயின மையால் அதன்கண் பயிலும் சொற்களுள் பலவற்றிற்கு இன்று நம்மால் பொருள் அறிந்துகொள்ள வியலவில்லை. காரண மின்றி யெழுந்தனவோ இவை யென் றையுறு மளவிற்குப் பல சொற்கள் திரிபு களைப் பெற்றுவிட்டன. எனினும் குறிப் பாகவேனும் அவை பொருள்களை யுணர்த் துதலினின்றும் நீங்கா. அணி என்னுஞ் சொல்லின் பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்கின்றோம். மரம் என்ப தற்குரிய பொருளை நம்மால் அறிந்து கொள்ள இயலவில்லை. நம்மால் அறிந்து கொள்ள வியலவில்லையே யென்பதைத் தவிர மரம் என்னுஞ் சொற்குக் காரண மில்லை யென்பதன்று. மரம் என்னுஞ் சொல் உருவத்தையோ பண்பையோ வெளிப்படையாகக் காட்டிய காலம் ஒன் றிருந்திருக்கவேண்டும். காலப் போக்கில் இன்று அது குறிப்பாகப் பொருளை யுணர்த் தும் நிலையை யடைந்திருக்கின்றது. மரம் என்னுஞ் சொல் தென்னைமரம், மாமரம் முதலிய நிற்கும் பொருள்கள் அனைத்துட னும் சேர்ந்து வருகின்றது. உலக வழக்கி லேயும் அசைதலின்றி நிலைத்து நின்றானை மரம்போல் நின்றான் என வழங்கக் காண்

கின்றோம். எனவே மரம் என்னுஞ் சொல் நிலையாக நிற்கும் பொருளை யுணர்த்துவது என்பதைக் குறிப்பால் அறியலாம். இதைப் போன்றே தென்னை என்னுஞ் சொல்லும் குறிப்பால் பொருள் உணர்த்துதலைக் காணலாம். தேன் என்னுஞ் சொல்லின் அடிப்படையிற் றோன்றியது தென்னை யென்பதை யறியலா மன்றோ! இங்ஙனம் சொற்கள் பொருள்களைக் குறிப்பாக அறிவிக்கின்றன என்றே கொள்ளல் வேண்டும். அங்ஙனங் கொண்டாலன்றிச் சொற்களின் பொருள்களை நுணித்தறியும் ஊக்கந் தோன்றாது. இடுகுறிப் பெயரென்றோ காரணப் பெயரென்றோ பெயர்களைக் குறித்தல் நுணித்தறிய விரும்பும் நுழை புலத்திற்குக் கதவடைத்தல் செய்வது போலாம். எனவே சொற்கள் பொருள்களை யுணர்த்தும் நெறி இருவகைப்படும். வெளிப்படை, குறிப்பு என்பனவே அவை என்று கொள்ள வேண்டும். இது பெயர் வினை ஆகிய இரண்டிற்கும் ஏற்கும். வினையின் கண் செயல் வெளிப்படையாகவே புலப்படுகின்றமையால் வினைச்சொற்கள் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் உணர்த்தும் என்பது காலத்தையே யாகும். வெளிப்படையாகக்காலங் காட்டிவரும் வினைகளைத் தெரிநிலைவினை யெனவும் குறிப்பாகக்காலங் காட்டிவரும் வினைகளைக் குறிப்புவினை யெனவும் கூறுவர். பெயராயின் காரணத்தை வெளிப்படையாகக்காட்டுவனவும் குறிப்பாகக் காட்டுவனவுமென இருவகைப் படும். இதுவே தொல்காப்பியர் போன்ற பேராசிரியர்களுக்கும் உடன்பாடாகும்.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே" என்பர் தொல்காப்பியர். எனவே பொருள் குறியாது வரும்—இடுகுறியாய் வரும் சொல் ஒன்று மின்று என்பது அவர் கருத்தாகின்றது. பின்னும் அவரே "மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" என்று கூறியிருத்தலால் தெளிவாகச் சில சொற்களுக்குக் காரணம் அறியப்படும்; குறிப்பாகச் சில சொற்களுக்குக் காரணம் புலப்படும் என்பது தெளிவாகின்றது. எனவே இடுகுறிச் சொல்லென எதனையும் பெயரிட்டழைத்தல் ஆசிரியருக்குக் கருத்தன்று என்பதறியப்படும்.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே" என்று தொடங்கிய ஆசிரியர் சொல் பொருளை யுணர்த்தும் நெறியினை,

"தெரிபுவேறு கிளத்தலும் குறிப்பிற் றோன்றலும்
இருபாற்றென்ப பொருண்மை நிலையே"

என்று விளக்கினர். பெயர்கள் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் பொருளைத் தோற்றுவிக்கும் இருநிலைகளை யுடையன என்பதே இதன் பொருள். சுருங்கச் சொல்வதானால் வெளிப்படைப் பெயர், குறிப்புப் பெயர் எனப் பெயரிட்டழைத்தலே ஆசிரியர் கருத்தாகும் என்று கொள்ளல்தகும். இடுகுறிப் பெயரென்றோ காரணப் பெயரென்றோ பெயரிடவேண்டுமென ஆசிரியர் நினைத்தார் என்பதற்கு ஏது யாண்டுமில்லை. குறிப்பாகக் காலங் காட்டும் வினையைக் குறிப்புவினையெனவும் வெளிப்படையாகக் காலங் காட்டும் வினையைத் தெரிநிலைவினை யெனவும் கொண்ட பிற்கால ஆசிரியர்கள், காரணத்தைக் குறிப்பாகக் காட்டும் பெயரைக் குறிப்புப் பெயரெனவும் வெளிப்படையாகக் காட்டுவனவற்றைத் தெரிநிலைப் பெயரெனவும் கொள்ளாது போயினர்; பெயரை இடுகுறிப் பெயரெனவும் காரணப் பெயரெனவும் வகுத்து மொழிவளர்ச்சிக்கு ஒரு வகையில் ஊறு தேடினர். சொற்களின் பொருள்களை மக்கள் நன்றாக உணர்ந்தாலன்றிச் சொற்கள் வளர்ச்சியடைதல் இல. சொற்களின் பொருள்களை மக்கள் உணரவும் வேண்டும். உணர்வதற்குரிய ஊக்கத்தையும் ஆசிரியர்கள் அளித்தல் வேண்டும். குறிப்புப் பெயரெனின் காரணத்தை யறிய ஒருவரோ டொருவர் முந்துவர். இடுகுறிப் பெயரெனின் அதைப் பற்றி யாரும் கவலையுறார். காலப்போக்கில் அத்தகைய சொற்கள் இறந்துபடும். பொருள்களோடு வழங்கும் சொற்களே என்றும் நிலைபெறும். பொருளற்ற சொற்கள் எனக் கருதப்படுவன விரைவில் அழிந்துபோகும். இம்முறையில் இடுகுறிப் பெயரென ஒருவகையினைக் கொள்வது மொழி வளர்ச்சிக்கு ஏலாத தொன்றென்றே கொள்ள வேண்டும். அங்ஙனம் வகுத்தார் சொற்களுக்கு வருத்தத்தை வகுத்தாரே யாவர்.

# திருவாமாத்தூர் யானை

[திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை]

தென்னார்க்காடு மாவட்டம், ஔவையார் குப்பத்தில் வேளாள கருணீகர் குலத்தில் சுந்தரம் பிள்ளை சந்திரமதி ஆகிய பெற்றோர்களுக்குத் திருமகனாக 1903இல் இவர் தோன்றினார். உயர்நிலைப் பள்ளிப் படிப்பைத் திண்டிவனத்தில் கற்று வேலூர் ஊரிஸ் கல்லூரியில் பயின்று தேர்ந்தார். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் தமிழவேள் த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் ஆதரவில் தமிழ் பயின்றார். கரந்தைத் தமிழ்ச் சங்கம், திருப்பதி ஓரியண்டல் கல்லூரி,



அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஆகியவற்றில் தமிழாசிரியப் பணிபுரிந்துள்ளார். தற்போது மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகத் தொண்டாற்றி வருகின்றார். மணிமேகலை, புறநானூறு, பத்துப்பாட்டு, ஐங்குறுநூறு ஆகியவற்றினுக்குச் சிறந்த உரை எழுதியுள்ளார். சேரர் வரலாறு, சைவத் தமிழிலக்கியங்கள் முதலான பல நூல்களும் இயற்றியுள்ளார். 'சித்தாந்த கலாநிதி' 'பேராசிரியர்' என்னும் சிறப்புப் பட்டங்கள் பெற்றவர்.

பண்டை நாளில், செல்வமிக்க பெருங் கோயில்களில், யானைகளை வைத்துப் பேணுவது வழக்கம். இப்போதும், திருவண்ணமலை, சீகாழி, திருவரங்கம் முதலிய பெரும் பதிகளில் யானை இருப்பது காணலாம். திருவிழாக் காலங்களில் இறைவன் திருவுருவங்கள் ஊர்வலம் வரும்போது, இந்த யானைகளை ஒப்பனைசெய்து முன்னே அழகுற நடந்துவரச் செய்வர். சில சிறப்புக் காலங்களில் பெருங் குடங்களில் நீர் கொணர்தற்கும் இவைகள் பயன்படும். வழிபாட்டுக்குரிய பொருள்களையும் யானைகள் சுமந்து வருவதுண்டு. சில கோயில்களில் சிற்சில சிறப்புக் காலங்களில் பூரண கும்பங்களும் திருப்பலியும் யானைமேல் வைத்துத்தான் கொணர்தல் வேண்டுமென்ற கட்டளை நிலவுகிறது.

இவ் வழக்கங்கள், நூல்களால் விதிக்கப்பட்டன அல்லவாயினும், பல நூற்றாண்டுகளாக நடைமுறையில் இருந்து வருகின்றன. செல்வம் குறைந்த கோயில்களில் இவை நின்று போயின. பண்டை நாளில், கோயில்களில் நடைபெற வேண்டிய நிகழ்ச்சிகள் குறைவில்லாமல் நடத்துவதில் வேந்தர் கண்ணுங் கருத்துமாய் இருந்தனர். கோயில்களில் காணப்படும் பல்லாயிரக் கணக்கான கல்வெட்டுக்கள் இதனை வற்புறுத்துகின்றன.

இவ்வாறு யானைகளைக் கோயில்களில் வைத்துப் பேணுதற்கென்றே பண்டைய வேந்தர்கள் நிவந்தங்கள் ஏற்படுத்தியிருந்தனர். யானைகட்கென விடப்பட்ட நிலங்களின் வருவாய் யானைகட்கே பயன்படும்; யானைகளை மேய்ப்பதும் பாதுகாப்பதும் செய்தற்கெனப் பாகர்கள் நியமிக்கப் பெற்றிருந்தனர். அவர்கள் யானைகட்குக் காலந்தோறும் உணவுநல்கி நீராட்டி அன்போடு வளர்ப்பர். அப்பாகர்களுக்கும் வேதனம் உண்டு. அவர்கட்கு வேதனம் குறையின், தம்தொழிலை அன்போடு செய்யமாட்டார்களென்ற கருத்தால், அவர்கட்கும் நிலம் விடுவர். அந்நிலத்து வருவாய், பாகர்கட்கு வேண்டும் உணவு முதலியவற்றிற்கு உதவும். யானைக்கு வேருகவும் யானைப் பாகர்க்கு வேருகவும் இன்றி ஒன்ருயமையின் ஒன்றினென்று மேலூர்ந்து இரண்டிலொன்றன் வருவாயைக் குறைத்துவிடும். பெரும்பாலும் யானையே உணவு குன்றி வாடநேரும். இவ்வகையில் யானை சார்பாக உளதாகும் செலவு மிகுந்தேயிருக்கும். இது பற்றியே 'யானைகட்டித் தீனி போடுவதென்பது கடினம்' என்ற பழ

மொழியும், 'யானை அசைந்து தின்னும் வீடு அசையாமல் தின்னும்' என்ற பழமொழியும் நாட்டில் நிலவுவவாயின.

இருந்தாலும், செல்வம் மிக்க செல்வர்களும் வேந்தர்களும் யானைகளை வைத்துப் பேணுவதைத் தம் செல்வ வாழ்வுக்குச் சிறப்பாகக் கருதினர். செல்வம் மிக்க கோயில்களில் எழுந்தருளும் இறைவன் ஏனைவேந்தரினும் மிகமிக வுயர்ந்தோனதலின், அவனுடைய திருக்கோயிலிலும் யானை இருப்பது சிறப்பெனக் கருதினர். ஆனல் வேந்தர்கள் தம் பெருமனை போலவே இறைவன் திருக்கோயில்களும் யானைகளால் பொலிதல் வேண்டுமென்று கருதினர்.

திருவாமாத்தூர் என்பது தென்னர்க்காடு மாவட்டத்து விழுப்புரத்துக்கு அண்மையிலுள்ள பேரூர்; இப்பகுதிக்குப் பண்டைநாளில் அருவா நாடு என்பது பெயர். அருவா நாட்டில் உட்பகுதியுண்டு; அவற்றுள் வாவலூர் நாடு என்பது ஒன்று. இதனல் இவ்வாமாத்தூர், அருவா நாட்டு மீவழி வாவலூர் நாட்டுத் திருவாமாத்தூர் எனப்படும். இதனருகே பம்பையாறு ஓடுகிறது. இதனை ஞானசம்பந்தர், ''கரவின் மாமணி பொன்கொழித் திழி சாந்து காரகில்தந்து பம்பைநீர் அருவிவந் தலைக்கும் ஆமாத்தூர்'' என்று சிறப்பிப்பார். இந்த ஆற்றங்கரையில் மிக்க அழகுறத் திருவாமாத்தூர் இறைவன் கோயில் அமைந்துள்ளது. இங்குள்ள இறைவனை முன்னோர் பெருமானடிகள் என்று பெயர் வழங்கி வழிபட்டு வந்தனர். இதற்குக் காரணமும் உண்டு. திருஞானசம்பந்தர் முதலியோர் இவ்வூர்க்கு எழுந்தருளி இறைவனைப் பாடிய காலத்தில் ''ஆமாத்தூர் அம்மான்" என்றும், ''ஆமாத்தூர் அம்மான் எம்பெம்மான் என்று ஏத்தாதார் பேயரிற் பேயரே" என்றும் பாடினர். இதைக் கண்ட சான்றோர் பெம்மானென்று ஏத்துவாராய், பெம்மான் என்பது பெருமான் என்பதன் திரிபாதல் கண்டு, பெருமானடிகள் என்று போற்றி வழிபட்டு வந்தனர்.

இத் திருவாமாத்தூர்க் கோயில் அந்நாளில் மிக்க செல்வம் படைத்த திருக்கோயிலாக விளங்கிற்று. இதற்கு இத்திருவாமாத்தூரே தேவதானமாக இருந்தது. இவ்வூர் வருவாய் முற்றும், இத்திருக்கோயில் நித்திய நைமித்திய நடைமுறைகட்கே உரியதாயிற்று. இதற்குத் திருப்பலி கொணர்தற்கென யானை யொன்றும் இருந்து வந்தது. இந்த யானையைப் பேணும் பாகனுக்கும் நிலநிவந்தம் விடப்பட்டிருந்தது. இவ்வாறே இக்கோயில் தன்கண் இருந்து தொண்டு செய்வார்க்கு உணவு நல்கும் அறச்சாலையாகவும் விளங்கிற்று. இதனல் இக்கோயில் எல்லாவகையாலும் சிறப்புற்று இருந்து வந்ததெனச் சுருங்கக் கூறலாம்.

பண்டம் நிறைந்த நிலையங்களில் ஊடறுத்தழிக்கும் எலிகளும் பெருச்சாளிகளும் பெருகுவதுண்டு. இவ்வாறே செல்வம் மலிந்த திருக்கோயில்களிலும் எலியும் பெருச்சாளியும் போன்ற மனமுடைய மக்கள் உளராவது இயல்பு. ஆகவே இக்கோயில்களிலும் அத்தகையோர் அவ்வக் காலங்களில் உண்டாயினர். கி. பி. ஏழாம் நூற்றுண்டில் திருஞானசம்பந்தர் இவ்வூர்க்கு வந்திருந்தார். அக் காலத்தே கோயிற் பெருச்சாளிகளின் கொடுமையால் கோயில் தொண்டர்கட்கு உணவு முட்டுப்பாடுண்டாயிற்று. 'உண்ட களைப்புத் தொண்டர்க்கும் உண்' டென்பது உலகுரை; ஆனல் இவ்வூரிலிருந்த தொண்டர்க்கு உண்ணுமையால் வரும் களைப்பே மிக்கிருந்தது. அதனைக் கண்ட திருஞானசம்பந்தர், ''தொண்டர் வந்து வணங்கி மாமலர் தூவி நின்கழல் ஏத்துவர்; அவர் உண்டியால் வருந்த இரங்காத தென்னைகொலாம்'' (குன்றவார். 5) என்று பாடினர். அது கண்ட கோயிலதிகாரிகள் மிகவும் அஞ்சித் தொண்டர்க்கு நேர்ந்த வருத்தத்தைப் போக்கினர்.

அக் காலத்தே தொண்டரைப் பற்றிய தீவினை நீங்கிற்றுயினும், அஃது அவ்விடத்தின் நீங்காதிருந்து முதற்பராந்தகன் காலத்தில் யானைப்பாகனைப் பற்றியது. அவனுக்கென வைக்கப் பெற்றிருந்த நிலம் தகவிலார் கைப்பட்டுப் போதிய விளைவு தாராதாயிற்று. அந் நிலத்தைப் பயிரிட்டோர் அதனைத் தமக்குரியதாக்கிக் கொண்டனர். அவன் யானைக்கு நல்கும் அரிசியைத் தன் மனைவாழ்க்கைக்கு வேண்டி

எடுத்துக் கொண்டான்; யானை வலி குன்றியது; முடிவில் உணவு முட்டுப்பாடு பெருகி அவனையும் யானையையும் வருத்தத் தொடங்கிற்று. அவன் கோயிலாரிடம் தெரிவித்துக் கொண்டான். ஏழை பேச்சு அம்பல மேருதென்பது போல அவனுடைய முறையீடு பயன்படா தொழிந்தது. முடிவில் அவன் தன்னைப் பேணுதற்கே பெரும்பாடு படலானான்; யானை பேணற்பாடிழந்தது. அவனும் உரிய காலத்தில் தன் கோயிற் பணியைச் செய்ய இயலாதவனாய் விட்டான். இந் நிலையில் கோயிற் சிறப்பொன்று நடைபெற்றது; அப்போது திருப்பலி கொணர்தற்கு யானைப்பாகனை நாடினர்; அவன் யானையின் மாட்டாமை கூறி மறுத்து விட்டான். அதனால் திருப்பலி முட்டுப்பட்டது.

இம் முட்டுப்பாடு இவ்வாறு பன்முறையும் உண்டாகத் தலைப்பட்டது. கோயிற் றொண்டர்களான மகேச்சுரர்களுக்கு இது மிக்க வருத்தத்தைத் தந்தது. அவர்கள் கோயில் காரியம் பார்ப்போர்க்கும் ஊரவர்க்கும் தெரிவித்தனர். அக்காலத்தே திருவாமாத்தூர் இருந்த வாவலூர் நாட்டைப் பெற்றுக் காவல்புரிந்து வந்த சோழ சிகாமணிப் பல்லவரையரும் இதனைச் செவியிற் கொள்ளாது புறக்கணித் திருந்தமையால், ஒருவரும் மகேச்சுரருடைய முறையீட்டை ஏற்கவில்லை.

இந் நிலையில் திருவாமாத்தூர் மகேச்சுரர்களிற் சிலர் சோழவேந்தனை பராந்தகனைக் கண்டனர். வேந்தன் அவர்தம் நலம் கேட்டுக் கோயில் காரியங்களின் செம்மை நிலையைத் தெரிவிக்குமாறு பணித்தான். அவர்கள் உள்ளதன் உண்மையை உள்ளவாறு விண்ணப்பித்தனர். அது கேட்டதும் அவன் அமைச்சரோடு ஆராய்ந்து திருப்பலி முட்டுப்பாடின்றி நிகழுமாறு வேண்டிய நிவந்தங்களைப் பணித்து, அவற்றை விரைந்து கொடுக்குமாறு சோழசிகாமணிப் பல்லவரையர்க்குத் திருமுகம் விடுத்தான்.

பல்லவரையர்க்குத் திருமுகம் வந்ததும் அவர் திடுக்கிட்டுக் கோயிலார்க்கு அத் திருமுகப்படியைத் தந்து யானைப்பாகனுக்கு நிவந்தமாக விட்ட நிலத்தையளந்து கொடுக்குமாறு செய்து, அதனைக் கல்லிலும் வெட்டுமாறு ஏற்பாடு செய்தார். யானைப்பாகன் அரசன் விடுத்த நிவந்தம் பெற்று வறுமை நீங்கினான்; திருப்பலி முட்டுப்பாடும் தீர்ந்தது. இந் நிகழ்ச்சி முற்றும் திருவாமாத்தூர்க் கோயில் மண்டபத்தின் தென்சுவரில் வெட்டப்பட்டுள்ளது.

---

## சாவகத்தீவில் சைவம்!

பெரம்பனன் கோயிலானது கி. பி. 860 இல் நடுசாவகத்தின் இந்து மன்னர்களால் கட்டப்பட்டது. அந்நாளில் அவர்களுடைய பெருமை உச்ச நிலையில் இருந்தது. உயர்ந்த நாகரிகம் படைத்திருந்தார்கள். சைவ சமயத்தினராய்ச் சிறந்த அன்புடையராய் விளங்கினார்கள். இறைவனிடத்தில் கொண்ட பேரன்பினால் மிகச் சிறந்த கோயிலொன்றை எழுப்பினார்கள். ஆனால் செல்வமானது ஆறிடும் மேடும் மடுவும் போலாம் என்பர் மூதாட்டியார். அதுபோல இந்த மன்னர் வமிசமானது. வெகுகாலம் இருக்கவில்லை. கி. பி, 915 இல் அழிந்துவிட்டது. ஆனால் அவர்கள் கட்டிவைத்த பெருங் கோயில் அன்னாருடைப செல்வாக்கை இதுகாறும் காட்டிக்கொண்டு நிற்கிறது.

—கோவை கிழார், சி. எம். இராமச்சந்திரன் செட்டியார்·
செல்வி சிலம்பு ௨௨—பரல் ௧௦,

# திருவாசகத்தில் இருசுவை

[வித்துவான் திரு. வீ. குமாரசாமி ஐயர்]



திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த மேட்டுப் பாளையம் என்னும் ஊரில் பிறந்தவர். வீர சைவ சமயத்தினர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கா. சுப்பிரமணிய பிள்ளை, விபுலானந்த அடிகள் முதலிய சான்றோர்களிடம் முறையாகத் தமிழ் பயின்று வித்துவான் தேர்வில் முதல்வராகத் தேர்ச்சியுற்றார். மதுரைமாவட்டத்தைச் சார்ந்த மேலூர்க்கழக உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகச் சிறந்த முறையில் பணியாற்றி வருகின்றார். 'இஷ்டலிங்க அகவல் உரை' 'திருவள்ளுவரும் சிவப்பிரகாசரும்' என்னும் நூல்களை இயற்றியுள்ளார். ஐங்குறுநூற்று மாநாட்டில் முல்லை பற்றி அரிய ஆராய்ச்சிச் சொற்பொழிவு நிகழ்த்தி யுள்ளார். 'தமிழ்ப்பொழில்', 'செந்தமிழ்ச் செல்வி' ஆகிய இதழ்களில் வெளியிடச்சிறந்த கட்டுரைகள் எழுதி வருகின்றார். இவருடைய தமிழ்ப் புலமையையும் சமய நூலறிவையும் பாராட்டி மயிலம், பொம்மபுரம் ஆதினத்தலைவரவர்கள் தம் ஆதினப் புலவராக ஏற்றுள்ளனர்.

திருவாதவூரடிகள் அருளிய தெள்ளிய தீஞ்சுவைப்பனுவல் திருவாசகமாம். இம் மெய்ந்நூலுள் உள்ள திருப்பதிகங்கள் 51. அவற்றிலுள்ள திருப்பாடல்கள் 658. இப் பதிகங்கள் சிவபுராணம் முதலாக அச்சோப் பதிகம் ஈருக வுள்ளன. இப்பதி கங்களும் இப்பதிகங்களிலுள்ள பாடல் களும் தனித்தனியாக நோக்குங்கால் நகை அழுகை முதலிய ஒன்பான் சுவைகளுள் பல்வேறு சுவையுடையனவாகும். அவற்றுள் அவலச்சுவையும் பெருமிதச் சுவையும் பொருந்திய சில திருப்பாடல்களை ஈண்டு அறிவோம்.

சுவை என்பது மெய்ப்பாடு. இதற்கு "மெய்ப்பாடென்பது பொருட்பாடு. அஃதாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப்படுதல்'' என்பர் பேராசிரியர். சங்கச்சான்றோரும் தொல்லுரை யாசிரியர்களும் பாட்டில் சுவை சிறந்து நிற்றலையே இன்றியமையாததாகக் கொண்டனர். வெறும் சொற்கட்டுக்களாலாகிய யாப்பினை வெற்றெனத் தொடுத்தலாக எண்ணி வெறுத்தனர். பாட்டின்கண் மெய்ப்பாடு, பாடுபவனுடைய உளச்சுவைக் கேற்ப அமையப் பெறும். கவிஞனது உள்ளம் எச்சுவையில் படிந்துளதோ அதனையே ஆடிநிழலெனப் பாட்டும் காட்டும். திருவாதவூரடிகள் தம் கூற்றைத் தாமே எடுத்தருளுகின்றாராதலின் அவர்தம் உள்ளத்துணர்வு அவர் அருளிய திருப்பாசுரங்களில் உள்ளவாறே அமைந்திலங்குவதில் ஐயமில்லை. அடிகளார் கனிந்த உள்ளம் பெற்றவர். அழுதடியடைந்த அன்பரானவர். இறையருளைப் பெறக் கண்ணீர் பெருக்கி மெய்ம் மயிர் சிலிர்த்து மனம் நெக்கு நெக்குருகப் பாடினவர். ஐம்பொறி கையிகந்து அறிவாய் அறியாச் செம்புலச் செல்வரானவர். ஆதலின் அவர்தம் பாட்டுக்கள் கேட்போர் உள்ளத்தைக் கரைக்கும் சொல்லாற்றலையும் பொருளாற்றலையும் பெற்றுள்ளன. அதனால் உலகில் ''திருவாசகத்திற்கு உருகாதார் ஒருவாசகத்திற்கும் உருகார்'' என்ற பழமொழியும் வழங்கலாயிற்று. கற்று வல்ல புலவர் பெருமக்களும் திருவாசகத் திருமறையை ஓதி ஓதி அதன் செம்பொருள் கண்டனர். அங்ஙனங் கண்ட புலவர்களுள் சிவப்பிரகாச அடிகளார் தலைசிறந்தவராவர். அப்புலவர் பெருமான் திருவாசகத்தில் அமைந்துள்ள மெய்ப்பாட்டினைத் தாம் இயற்றியருளிய நால்வர் நான்மணிமாலை என்னும் நூலில் "விளங்கிழை பகிர்ந்த'' என்ற பாசுரத்தில்'

"... ... ... ... ...
... ... ... ... ...
திருவா சகமிங் கொருகால் ஓதில்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை யுலகில் மற்றையர் இலரே"

என்ற அடிகளில் விளங்கக் கூறியுள்ளார். "திருவாசகத்தை ஒருமுறை யோதினாலும் அதனைக் கேட்பவரது கருங்கல் போல் வலிய மனமும் கரைந்துருகப் பெறுகிறது கண்ணீர் தோண்டப்பட்ட கிணற்றினின்று நீர் சுரப்பதுபோல் பெருகுகின்றது; மெய்ம்மயிர் சிலிர்க்கின்றது; உடல் நடுக்க மடைகிறது; பாட்டிலுள்ள பொருளில் உள்ளம் படிந்து சிவபெருமானுக்கு அன்பராகின்றனர்; அவ்வாறு ஆகாதவர் உலகில் இல்லை" என்று கூறப்படுகிறது. இதனால் கண்ணீர் அரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல், நடுக்கமடைதல் ஆகிய சுவையுணர்வுகளைக் கேட்போர்க்குத் திருவாசகம் உண்டாக்குகிறதென்பது பெறப்படும். கண்ணீர் அரும்பல் அன்பினை வெளிப்படுத்தும் அறிகுறி. திருவள்ளுவரும் "அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர், புன்கணீர் பூசல் தரும்" என்றார். இங்குத் திருவாசகப் பாடலைக் கேட்போர் கண்களில் பெருகும் நீர் அன்பால் ஊற்றெடுத்த ஆனந்தக் கண்ணீர். இவ்வாறு உண்டாகும் உவகைக் கண்ணீரையும் அவலச் சுவையின்பாற் படுத்தியே கூறுவர். "இளிவே இழவே அசைவே வறுமையென, விளிவில் கொள்கை அழுகை நான்கே" (தொல்காப்பியம்) என்ற நூற்பாவிற்கு உரைகூறிய பேராசிரியர் "விளிவில் கொள்கை" என்ற மிகையானே "அழுகைக் கண்ணீர்போல உவகைக் கண்ணீர் வீழ்தலும் உண்டு. அதனையும் அழுகைப்பாற் சார்த்தி உணரப்படும்" என்றார். ஆனந்தக் கண்ணீர் பெருகப் பெருக அருளிய திருவாசகம் கேட்போர் உள்ளத்தையும் உருக்கிக் கண்ணீர் பெருகச்செய்தலின் இந்நூல் அவலச்சுவை நிரம்பியது என்பது தெளிவாம். இனி அச்சுவை பொருந்திய சில திருப்பாடல்களைச் சுவைத்துணர்வோம்.

## அவலச்சுவை

சிவபுராணம் திருவாசகத்தில் முதற்கண் உளது. இப்பாசுரம் திருப்பெருந்துறையில் அடிகளார் குருவருள் பெற்ற பின்னர் அருளப்பெற்றது. குருவருளால் பாசநீக்கம் பெற்ற அடிகளார் ஞானநோக்கத்தால் முற்பிறப்புக்களை யறியும் ஆற்றலும் பெற்றிருந்தார். ஆதலின் தாம் முற்பிறப்புக்களில் அடைந்த இன்னல்களை எண்ணி உளம் நைந்து அவற்றை இப்பாசுரத்தில் சில அடிகளில் உணர்த்துகின்றார்.

அப்பகுதி :—

"புல்லாகிப் பூடாய்ப்
புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப்
பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப்
பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி
முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்
தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும்
பிறந்திளைத்தேன்: எம்பெருமான்!
மெய்யேயுன் பொன்னடிகள்
கண்டின்று வீடுற்றேன்."

இதில் "எம்பெருமானே! உலகத் தோற்றத்தில் நிலையியற் பொருள்களுள்ளும் இயங்கியற் பொருள்களுள்ளும் பல பிறப்புக்களையடைந்தேன். அடியேன் கற்பாறை யணுக்களில் அடங்கிக் கிடந்தேன்; புல்—பூடு—மரம் ஆகிய தாவரங்களும் ஆனேன்; புழு—பாம்பு முதலிய ஊர்வனவாகவும் பிறந்தேன்; பறவைப் பிறப்பும் உற்றேன்; மிருகமும் ஆனேன்; மக்களாய்—பேயாய்—பூதகணங்களாய் — அசுரராய் — முனிவராய் — விண்ணவராய்ப் பிறந்தேன். இவ்வாறு எல்லாவகையான பிறப்புக்களையும் அந்தோ! எடுத்து எடுத்து அலுத்தேன்! இப்போது நிலைப்பாயிருப்பதற் கேதுவாய உனது அழகிய திருப்பாதங்களைக் காணப்பெற்றுப் பாசநீக்கம் அடைந்தேன்" என்று கூறுவதை உணர்வார் உள்ளம் உருகாமல் இரா. இவ்வடிகளில் பிறப்பின் வகைகளை யெல்லாம்

எடுத்துரைத்து இறுதியில் ''எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்'' என்று கூறியுள்ளதில் அவலச்சுவை தேங்கிக் கிடத்தலைக் காண்க. அங்ஙனம் பிறந்து இளைத்த அடிகளாருக்கு எம்பெருமான் திருவடி, கடலில் ஆழ்பவனுக்குப் புணை கிடைத்தாற்போல் கிடைத்தது. அத்திருவடியை உளத்தாற் கட்டித் தழுவுவது போலச் சொற்களாலும் ''எம்பெருமான் மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்'' என்று உவகையும் பெருமிதமுந் தோன்ற அடிகளார் அருளுதல் காண்க.

இவ்வாறு பிறவித் துன்பத்தை யறிந்த அடிகளார் பிறவாநெறியையடைய அவாவுகின்றார். வேண்டுதல் வேண்டாமையில்லாத இறைவனடி சேர்ந்தார்க்கே பிறவித் துன்பங்கள் இல்லையாகும். இறைவன் திருவடியைச் சார்தற்கு ஞானம் வேண்டும். ஞானத்தை அடைவதற்கு நற்கருமங்களை இடைவிடாது இயற்றல் வேண்டும். வீட்டு நூல்களை ஓதல்வேண்டும். அங்ஙனம் புரிய மனம் துணையாக நிற்றல் வேண்டும். மனமே உலகில் கெடுக்க வல்லதும் கெட்டோரை உயர்த்த வல்லதும் ஆகும். ஆதலின், அதனைத் தம்வயப்படுத்த முயல்கின்ற அடிகளார் மனத்தை முன்னிலையாகக் கொண்டு,

''யாதொரு துணையுமில்லாத பிணம் போன்ற மனமே; தனு—கரண—புவன—போகங்களைக் கொடுத்து இவ்வுலகை ஆட்டுவிக்கும் கூத்தப் பெருமான் திருவடிக்கண் அன்பில்லாதிருக்கின்றாய். அவனை அன்பால் உளத்து எண்ணி ஆனந்தக்கூத்து ஆடுகின்றாயில்லை; எலும்பும் உருகப் பாடுகின்றாயில்லை; அவனது நற்றாளைத் தொழாதிருக்கும் பிழைக்குஅஞ்சி நடுங்குவதும் இல்லை; தாழ்ந்து வணங்குவதும் இல்லை. அவனது திருவடிக் கமலங்களைத் தலைமேற் கொள்கின்றாயில்லை. அவனது திருவடிக்கு மலர்மாலை தொடுத்துச் சூட்டுகின்றதும் இல்லை; அவனுடைய திருவடிகளை யணுகும் நெறிகளை ஆன்றோர்பால் கேட்டு அறிகின்றாயுமில்லை. அவன் புகழ்களைக் கூறித் தெருக்கள் தோறும் கதறுவதும் இல்லை. நீ இவ்வாறு பிணம்போல் செய்தொழில் இன்றிக் கொன்னே பயனற்றுக் கிடப்பின் அந்தோ! உய்யும் நெறியொன்றினையும் யான் யறிய மாட்டேன்'' என்னும் பொருளமைய,

''ஆடு கின்றிலை, கூத்துடை
யான்கழற் கன்பிலை, என்புருகிப்
பாடு கின்றிலை, பதைப்பதுஞ்
செய்கிலை, பணிகிலை, பாதமலர்
சூடு கின்றிலை, சூட்டுகின்
றதுமிலை துணையிலி பிணநெஞ்சே!
தேடு கின்றிலை, தெருவுதோ
றலறிலை, செய்வதொன் றறியேனே''

என்ற திருப்பாசுரத்தை அருளிச் செய்துள்ளார். அடிகளார் குருவருளால் பாசநீக்கமுற்று மெய்யறிவினைப் பெற்றிருந்தாராயினும் மீண்டும் உலகப்பற்றுத் தம்மையடையாதவாறு இறைவனையே நாடி அறிவு நிற்றல் வேண்டுமென்பதை வலியுறுத்துகின்றார். உலகப்பற்று நீங்கிய காலத்தில் அறிவு இறைவனை நாடுதல் வேண்டும். அங்ஙனம் நாடாது பிணம் போல் வாளா இருத்தல் தவறும் என்பதையும் உணர்த்துகின்றார். இப்பாசுரத்தில் இலை என்ற சொற்கள் பல இடங்களில் அடுக்கிவந்து இரக்கக் குறிப்பைத் தருதல் காணத் தக்கது. ''துணையிலி பிண நெஞ்சே'' என்றும் ''செய்வதொன்றறியேனே'' என்றும் கூறியதால் இவ்விரல் பொருளாக அவலச் சுவை பிறந்தது. இது கருணை எனவும் படும்.

இறைவன் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தின்கீழ் அறிவாசானாக வீற்றிருந்து காட்சியளித்து அடிகளாரை ஆட்கொண்டருளிய பின்னர் மறைந்தார். மீண்டுங் காணும் வேட்கையராய் ''யானை மதத்தால் தன்னையும் பிறரையும் அறியாததுபோலச் செருக்கினால் என்னை மாத்திரமன்றி உன்னையும் அறியாதிருந்தேன். உலகில் உன்னை நாடுபவர்களுக்கெல்லாம் நீ பெண்ணோ ஆணோ அலியோ என்று அறியப்படாமலிருக்கின்றாய். ஆனால் நீ எனக்கு உள்ளவாறே தோன்றிக் காட்சி கொடுத்தாய். கூட்டை விட்டுப் பறந்து செல்ல அறியாத பறவைக் குஞ்சுபோல வஞ்ச உடம்பை நீத்து உன்னையடையும் நெறியைக் கண்டிலேன்; அவ்வாறுள்ள எனது பாசக் கட்டினை யொழித்து ஆட்கொண்டு கண்கள் பார்த்து மகிழும்

படியாகத் திருநீறணிந்தபேரன்பர்களோடு இருக்க நாயனைய என்னைப் பட்டி மண்டபம் ஏற்றுவித்தாய். அங்ஙனம் நின்னடியார் குழாத்துள் சேர்த்து ஆட்கொண்ட பின்னர் என்னைக் கைவிட்டு நீங்குதல் நீதியோ?'' என்று வேண்டிப் புலம்பும் அடிகளார்க்குத் தம்மையடையும் ஞானமின்மையால் இறைவன் விட்டகன்றார் என்ற ஐயம் உண்டானது போலும். அதனால் இறைவனை நோக்கி,

''எல்லாப் பொருளையும் அறியும் பேரறிவுடையவனே! அன்பர்களுக்கு உறுதி பயத்தலில் சாவாமருந்தாயுள்ளவனே! நாயனைய அடியேனைப் பெருங் கருணைத் திறத்தால் ஆட்கொண்ட காலத்தில் நினது உரையை அறியத் தக்கான் இவன் என்று கருதியோ என்னை ஆட்கொண்டது? அவ்வாறில்லையன்றோ? என்னை ஆட்கொண்ட நாளில் என்பால் அறியாமையைத் தானே கண்டது? அங்ஙனம் இருக்க இன்று என்னைக்கைவிடுதல் நீதியோ? இனிச் செய்யவேண்டுவது யாதெனின், யான் அறிஞனோ? அல்லனோ? எவ்வாறாயினும் என்னை ஆண்டருள்க'' என்று வேண்டுவதாக,

*''அறிவ னே! அமுதே! அடி நாயினேன்*
*அறிவ னாகக்கொண் டோஎனை யாண்டது*
*அறிவி லாமையன் றேகண்ட தாண்டநாள்*
*அறிவ னோஅல்ல னோஅருள் ஈசனே !''*

என்னும் பாசுரத்தை அருளிச் செய்கின்றார். இப்பாட்டு அடிகளாரின் சொற்றிறமை — எளிமை — இனிமை—பணிவு ஆகிய இயல்புகளைச் செவ்வனம் புலப்படுத்துவதோடு கற்பவர் உள்ளத்தையும் கனிந்துருகச் செய்கிறது.

இவைபோலும் அவலச்சுவை நிரம்பிய பாசுரங்கள் திருவாசகத்தில் நிறைந்துள்ளன. அவற்றை அறிஞர்கள் சுவைத்து இன்புறுவார்களாக. இனிப் பெருமிதச் சுவை நிரம்பிய சில பாட்டுக்களைக் காண்போம்.

### பெருமிதச்சுவை

பெருமிதம் என்பது எல்லாரோடும் ஒப்ப நில்லாது மேம்பட்டு விளங்கல். இச் சுவை ''கல்வி தறுகண் இசைமை கொடையெனச், சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே'' என்னும் தொல்காப்பிய நூற்பாவான் கல்வியும் அஞ்சாமையும் புகழும் ஈகையும் என்னும் நான்கும் பொருளாகக் கொண்டு பிறக்குமென்பது பெறப்படும். ''கல்வி என்பது தவமுதலாகிய விச்சை'' என்பர் பேராசிரியர்.

அடிகளார் இருவினையொப்பும் மலபரிபாகமு முடையராய் அருட்பதிவு பெற்றுத் திகழ்ந்தார். அந்நிலையில் குருவடிவாய் வந்த சிவபெருமான் நுட்ப ஐந்தெழுத்துண்மையை உணர்த்த உணர்ந்தார். அதனால் பெறற்கருஞ் செல்வத்தைப் பெற்றவர்போல் அடிகளார்,

''நானே வீடடைதற்குரிய நற்றவஞ் செய்தவனானேன்; எதனாலெனின், வீட்டின்பத்தை விரும்புபவர் புகலும் நுட்ப ஐந்தெழுத்தாய சிவாயநம என்னும் திருமந்திரத்தை ஞானாசிரியர் உணர்த்த அறியப் பெற்றேன். மற்றும், தேன்போலவும் இனிய அமுதம் போலவும் இனிமை பயக்குஞ் சிவபெருமான் தானே வலிதில் எழுந்தருளி வந்து என்னுடைய மனத்திற் புகுந்தருளி உடலோடு கூடிய உயிர் வாழ்க்கையை மிகவும் வெறுத்திடும் வண்ணம் அடியேற்கு அருள்புரிந்தான்'' என்றருளுகின்றார். அப் பாசுரம்:

*''நானேயோ தவஞ்செய்தேன்*
*சிவாயநம வெனப்பெற்றேன்*
*தேனாய்இன் னமுதமுமாய்த்*
*தித்திக்குஞ் சிவபெருமான்*
*தானேவந் தெனதுள்ளம்*
*புகுந்தடியேற் கருள்செய்தான்*
*ஊனாரும் உயிர்வாழ்க்கை*
*யொறுத்தன்றே வெறுத்திடவே.''*

இதன்கண் எளிதில் கிடைத்தற்கரிய ஐந்தெழுத்துண்மையைத் தாம் உணர்ந்ததையும் அம்மந்திரத்தைப் பல்கால் ஓதிய தன் பயனாய் இறைவன் தன் உள்ளத்திற் குடிபுகுந்ததனாலாய உயர்வையும் வெளியிடுகின்றார். இப்பெருநிலை அடிகளாரது தவத்தால் உண்டானது. அதனை ''நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப் பெற்றேன்'' என்று உணர்த்தலான் இது கல்விபற்றிவந்த பெருமிதம்.

சிவபெருமானல் ஆட்கொள்ளப் பெற்ற அடிகள் உலகில் பிறர்க்கில்லாத உயர்வு தமக்குண்டாயிருத்தலை ஓர்ந்தார். உலகில் ஏனையோர்க்கு உண்டாகும் அச்சம் தமக்கின்மையையும் அறிந்தார். தமது இன்பநிலையையுங் கண்டார். அதனை,

''தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோன் என்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவனடியார் அடியா ரோடும்
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே''

என்ற பாட்டில் வெளியிடுகின்ருர். இதில் தன்னையாட்கொண்ட முதல்வன் ''விண்ணவர்க் கரசனுகிய இந்திரனுல் அறியப்படாத தேவதேவன்; மற்றும் வளவிய உலகங்களைப் படைத்துக் காத்து அழிக்கின்ற மூவராகிய அயன்—அரி—அரன் என்பார்க்குத் தலைவனுய் நின்ற ஈசன்; அட்ட மூர்த்தமாயிருப்பவன்; எல்லார்க்கும் பாட்டன்; உமை வீற்றிருக்கும் இடப்பாகத்தையுடைய எம் தந்தை; யாவர்க்கும் அரசனுகவுள்ளவன்'' என்று இறைவன் பெருமை தோன்ற எடுத்துரைத்தார். அத்தகு மேம்பாடுடையோன் கீழான அடியேனையும் தானேவந்து ஆண்டருளினன். ஆதலால் யாங்கள் அவன் ஒழிந்த பிறர் எவர்க்கும் அடிமையாக மாட்டோம்; எதற்கும் பயப்படமாட்டோம்; அவனுடைய அடியார்க் கடியவராயிருப்பவருடன் கூடியுள்ளோம்; அவனது ஆனந்தக் கடலிலே மூழ்கித் திளைத்துக் கூத்தாடுவோம்'' என்றருளினர்.

இங்ஙனம் தமக்கு ஒப்பாரில்லாத இயல்பினை வெளிப்படுத்தியுள்ளார். இதில் ''யாமார்க்குங் குடியல்லோம் யாதும் அஞ்சோம்'' என்றதால் பெருமிதந் தோன்றுதல் காண்க.

அடிகளார் ஒரு போர்க்குப் படைத் தலைவராய்ப் புறப்படுகின்ருர். இப்போர் உலகத்தில் மண்வேண்டி நிகழ்த்தும் போரை ஒத்ததன்று. இது பிரபஞ்சப் போர். இன்ப நாட்டை ஆள, அதனைக் கைப்பற்றச் செய்யும் பெரும்போர். எதிர்த்து வரும் படை மாயப்படை. அப்படை முத்தியுலகைக் கைப்பற்ருதவாறு தடுத்து நிற்கிறது. ஆதலின் அதனை முறியடிக்கச் சேனைகளை முனைந்து செலுத்துகின்ருர். போர் எனின் படைக்கருவிகள், போர்ப்பறை, குடை, வீரர்க்கு உடற் கவசம் ஆகியவை தேவை; நாற்படைகளும் வேண்டும். இங்கு அவை யாவை எனின், ''ஞானமே வாள்; அதனை ஏந்துங்கள்; பிரணவ பஞ்சாக்கர நாதமே பறை; அதனை அடியுங்கள். மெய்யறிவே குடை; அதனைப் பிடியுங்கள். ஆக்கத்தைத் தருகின்ற திருவெண்ணீருகிய மெய்ப்பையினுள்ளே புகுந்து கொள்ளுங்கள்'' என்று தொண்டர்களாகிய வீரர்களுக்குக் கட்டளையிடுகின்ருர். எதிர்த்து நிற்கும் மாயப்படை வந்து தாக்குமுன்னே அருள்வானிலுள்ள இன்பப்பதியை நாம் கைப்பற்றுவோம் என்று துணிவுடன் உரைக்கின்ருர்.

நாற்படை வீரர்களாக வுள்ளவர்களோ தொண்டர்கள்—பத்தர்கள்—யோகிகள்—சித்தர்களாவர். அவர்களை நோக்கித் ''தொண்டர்களே! முன்னணியாகச் செல்லுங்கள்'' என்றும், ''பத்தர்களே முதற் படை அடுத்துச் செல்லுங்கள்'' என்றும், ''யோகிகளே! படைக்கு நடுவிற் செல்லுங்கள்'' என்றும், ''உடல்வலிமை மிக்க சித்தர்களே! பின்னணியிற் செல்லுங்கள்'' என்றும் கட்டளையிடுகின்ருர். துன்பப்படை நம்மை வந்து தாக்காமற் காத்து வீட்டுலகத்தைக் கொள்வோம் என்று ஊக்கப் படுத்துகின்ருர். அப் பாசுரங்கள் :

''ஞானவாள் ஏந்தும்ஐயர்
நாதப் பறையறைமின்;
மானமா ஏறும்ஐயர்
மதிவெண் குடைகவிமின்,
ஆனநீற் றுக்கவசம்
அடையப் புகுமின்கள்;
வானவூர் கொள்வோம்நாம்
மாயப்படை வாராமே.''

''தொண்டர்காள்! தூசிசெல்லீர்;
பத்தர்காள் சூழப்போகீர்;
ஒண்திறல் யோகிகளே!
பேரணி உந்தீர்கள்;
திண்திறல் சித்தர்களே!
கடைக்கூழை சென்மின்கள்!

அண்டர்நா டாள்வோம்நாம்
அல்லற்படை வாராமே.''

[ஐயர் — தலைவர் (சிவபெருமான்) மானமா ஏறும் ஐயர் — பெருமை பொருந்திய விடையிலேறுந் தலைவர். தூசி— முன்னணி. கடைக் கூழை—பின்னணி]

இவை ''திருப்படை எழுச்சி'' என்ற தலைப்பில் காணப்படுவன. இவை அறிவிக்கும் பொருள் ''அல்லாத துர்க்குண மாயப்படைகள் வளையாமல் அருள்வாள் ஏந்தி, நல்லோர்கள் யாரும் எம்மோடெய்துமெனல் படையெழுச்சி நவிறலாகும்'' என்று திருவாசக உண்மை கூறுகிறது. அடிகளார் பாண்டி மன்னனிடம் பல்லாண்டுகள் அமைச்சராயிருந்து போர் முறைகள் யாவற்றையும் நன்கறிந்தவர். உலகியலை விடுத்து இன்பவுலகை நாடி நிற்கும் நிலையில் அருளுகின்ற ஞான நூலிலும் உலகியலறிவைப் பயன்படுத்திக் காட்டுதல் போற்றத் தக்கது. சிறந்த படை வீரர்களை முன்னணியிலும் ஏனையோரை அடுத்தடுத்தும் வைத்துப் படைகளைச் செலுத்துவர் சேனைத்தலைவர். அம்முறையில் மாயப்படை வந்தால் அதனை எதிர்த்து முறியடிக்க வல்ல ஞானநிலையிலுள்ள அடியார்களை முன்னும் சரியை கிரியை நெறிகளிலுள்ள பத்தர்களை அவர் பக்கத்தும் யோகிகளைப் பெரும்படை நிலவும் நடுவிலும் காயசித்தி பெற்ற சித்தர்களைப் பின்னணியிலும் வைத்துச் சேனையைச் செலுத்துவதாகக் கூறும்முறை அடிகளுடைய பொருள் நூலறிவை விளக்குகின்றது.

இப்பாசுரங்களில் ஏந்தும்—அறைமின்—கவிமின்—புகுமின்கள்—செல்லீர்—போகீர்—உந்தீர்கள்—செல்மின்கள் என்ற ஏவல் வினைமுற்றுக்களும், வானவூர் கொள்வோம்—ஆள்வோம் ஆகிய வினைமுற்றுக்களும் விரவிப் பெருமிதச் சுவைபயந்து நிற்றல் காண்க.

இதுகாறும் இக்கட்டுரையில் திருவாசகத்தில் அவலம்—பெருமிதம் ஆகிய இரு சுவை நிரம்பிய சில பாட்டுக்களையே கண்டோம். இவ்வாறு பல்வகைச் சுவைதரும் பாட்டுக்கள் அத்திருமறையில் உள்ளன. அவற்றைப் பொருளுணர்ந்து படிப்பாராயின், ''வான்கலந்த மாணிக்க வாசக! நின் வாசகத்தை, நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே, தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென், ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே'' என்று இராமலிங்க அடிகளார் துய்த்த இன்பத்தைத் தாமும் துய்ப்பர்.

---

## திருவாசகச்சீர்!

திருவாசகம் என்பதில் அடைமொழியாய் நின்ற திருவென்னுஞ் சொல் கண்டாரால் விரும்பப்படுந் தன்மை நோக்கமாகிய அழகினை உணர்த்தவே, பேரின்பப் பேற்றைக் காதலிப்பாரெல்லாராலும் விரும்பப்படும் அழகினை உடைத்து இவ் வாசகம் என்பது பெற்றும். எல்லாரும் ஒன்றை விரும்புதல் அது பிறிதொன்றற்கில்லாத அழகினை உடைமையினாலேயாம். தன்னைக் கற்பார் உள்ளத்தை உருகச் செய்து அவரைப் பேரின்பப் பெருக்கின்கண் ஆழ்த்துதற்கட பிறிது எந்நூலுக்கும் இல்லாத அழகினை இத்திருவாசக நூல் உடைமையால், இதனினும் மேலான அழகினைப் பெற்ற வேறொரு நூல் இல்லையென்பது தேற்றமாம்.

ஆரியர்க்குள் வழங்கும் நான்மறைகளும் அவரால் உயர்ந்தனவாகக் கருதப்படினும், நடுநிலை திறம்பாத நல்லிசைப் புலவர் ஒருவர் அவ்வாரிய நான்மறைகளையும் இத் தமிழ்மறையினையும் பொருடெரிந்து ஓதிக் காண்பராயின் இத் திருவாசகம் அந்நான்மறையினுங் காணப்படாத பேரழகினை யுடைத்தெனத் தெற்றென உணர்வார். இத் திருவாசகத் தமிழ்மறையினை இடையறுது ஓதி அதன் பொருளை எந்நேரமும் நினைந்து கழிபேரின்பத்திற் றிளைத்திருப்பார்க்கு மலக்கறை தானே தேய்ந்துபோக, இறைவன் றிருவருட்பேறு எளிதில் வந்தெய்துமென்க.

—மறைத்திரு. மறைமலையடிகளார், '' திருவாசக விரிவுரை ''

# தாங்கருங் காவலன்

[திரு. கு. பரமசிவன், எம். ஏ.]



நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த திரு. சி. ப. குமாரசாமி பிள்ளை அவர்களின் மகனுரான திரு. கு. பரமசிவன் அம்பா சமுத்திரத்தை யடுத்துள்ள வீரவ நல்லூரில் 1933 இல் தோன்றியவர். நெல்லை இந்துக் கல்லூரியிலும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலும் பைந் தமிழைப் பயின்று எம். ஏ., பட்டம் பெற்ருர். மதுரை அமெரிக்கன் கல்லூரித் தமிழ்த் துறையில் பணியாற்றி வருகின்ருர். தீந்தமிழ் உரைநடை எழுதுவதில் வல்லவராய இவர் ஆங்கில மொழியில் சிறந்து விளங்கும் பல நூல்களைத் தமிழாக்கம் செய்துதந்துள்ளார். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை ஆலிவர் டுவிஸ்ட், டேவிட் காப்பர்பீல்ட், ஐவன்கோ, குவெண்டின் டர்வர்டு, இராபின்சன் குருசோ என்பவையாம். கல்லூரியில் பயிலுங்காலத்திலேயே இனிய முறையில் கேட்டார்ப் பிணிக்கும் வண்ணம் சொற்பொழிவு ஆற்றிய இவர், பல இலக்கியச் சொற்பொழிவு மாநாடுகளில் கலந்து அரிய சொற்பொழிவாற்றியுள்ளார்.

அருஞ்சொற் புலவராய பெருஞ்சித்திரனுர் அதியமான் நெடுமானஞ்சியைக் காணச் சென்ருர்; பரிசிலர்க்கு அடையா வாயிலின்கண் பாடி நின்ருர். "அமிழ்து விளை தீங்கனி ஔவைக் கீந்த" அதியமான் யாது காரணம் பற்றியோ புலவரை நேரில் காணுது பரிசிலை மட்டும் அனுப்பினுன். "வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கை"யுடைய பெருஞ்சித்திரனுர் அப்பரிசிலைப் பெற்றுக்கொண்டார் அல்லர். 'அதிகமான், சிறுகுன்றும் பெருமலையும் பல கடந்து வந்த புலவரைச் சென்றெதிர் கொண்டான் அல்லன்; வருகைக்குக் காரணத்தை வினவி அறிந்தானுமல்லன்; பொருள்பெறுதல் ஒன்றேபுலவர் நோக்கம் என்றன்ருே எண்ணினன்' என்று வருந்திய புலவர் தம் வேதனையும் புரவலன் இழிவும் தோன்றப் பாடினுர்:

"குன்றும் மலையும் பலபின் ஒழிய
வந்தனென் பரிசில் கொண்டனென்
[செலற்(கு) என
நின்ற என்நயந்து அருளி ஈதுகொண்டு
ஈங்கனம் செல்க தான்என என்னை
யாங்குஅறிந் தனனே தாங்கருங் காவலன்
காணுது ஈத்தஇப் பொருட்கு யானோர்
வாணிகப் பரிசிலன் அல்லேன் பேணித்
தினைஅனைத்து ஆயினும் இனிதுஅவர்
துணைஅளவு அறிந்து நல்கினர் விடினே."
(புறம். உ0அ)

பாடலில் வேதனையே அன்றி எள்ளற் சுவையும் நிறைந்துள்ளது. வருகையை எதிரேற்று அளவளாவி, வண்டமிழ்ப் புலமைத் திறமறிந்து, பரிசில் வழங்கினன் அல்லனே என்னும் உணர்வால் தோன்றிய வேதனையும் எள்ளலும் பாடலின் உயிராய் விளங்குகின்றன.

பாடலில் பெருஞ்சித்திரனுர் "தாங்கருங் காவலன்" என்னும் தொடரால் அதியமானைக் குறிக்கிருர். இத்தொடருக்கு உரைகாரர் வகுத்த பொருள், "பகைவரால் தடுத்தற்கரிய வேந்தன்" என்பதாகும். தாங்குதல் என்பது தடுத்து நிறுத்துதல் என்னும் பொருளில் பழம் பாடல்கள் பலவற்றிலும் பயின்று வந்துள்ளது.

"அருஞ்சமம் தாங்கி முன்நின்று எறிந்த"
(புறம். உஅ௪)

"வருபடை எதிர்தாங்கினன்" (புறம். உ௩க)

என்பன சில எடுத்துக்காட்டுக்களாம். ஆயினும் "பகைவரால் தடுத்தற்கரிய வேந்தன்" என்னும் பொருள், தாங்கரிய மனக்கவலைகொண்ட புலவரின் தன்மையையும், தனது கடமையில் வழுவிய காவலனின் அயன்மையையும் சுட்டுவதாய் அமைந்திலது; எஞ்சிய பகுதியில் மிளிரும் எள்ளற் சுவைக்கு அரணுகவோ, அணிசெய்வதாகவோ இல்லை. புரவலனை எள்

ளும் புலவருடைய புண்பட்ட உள்ளம் அவனது போர்த்திறனைப் போற்றுதற்கு இடந்தருமோ? பொறுத்தற்கரிய காவற் பொறையைப் பூண்டுள்ளவனின் புன்மைச் செயலை இடித்துரைத்துத் திருத்த இடந் தருமோ?

"தாங்கருங் காவலன்" என்பதற்குத் தாங்குதற்கரிய காவல் தொழிலையுடைய வன் என்றுரைப்பதே பாடற் கருத்துக்கு ஏற்ற பொருளாகலாம். தாங்குதலாவது சோர்வுபடாது காத்தல். காவலன், காவல் தொழிலையுடையவன். தாங்குதல் எனும் சொல்லுக்கு ஏற்றுக் காத்தல்—சோர்வு படாது காத்தல் — என்னும் பொருளும் உண்டென்பதனை,

"வேந்துறு விழுமம் தாங்கிய
பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகை புண்ணே"
(புறம். உஅக)

எனவும்,

"பீடுபெறு தொல்குடிப் பாடுபல தாங்கிய
மூதிலாள ருள்ளும்" (புறம். உஅ௬)

எனவும் வரும் சான்றோர் செய்யுட் பகுதி களாலும், அவற்றிற்குப் பேராசிரியர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் தெரித்த உரையாலும் தெளியலாம்.

"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில்
[தோன்றினும்
காவலர்ப் பழிக்கும் இக் கண்ணகல் ஞாலம்"
(புறம். ௩௫)

ஆதலின்,

"மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவு இல்"
(சிலம்பு. உ௫. ௧0௩-௪)

என்றனர், கற்றறிந்தோர். காவல் தொழிலை மேற்கொண்டோருள்ளும் கைவண்மை பூண்டோர்தம் பொறுப்பும் கடனும் அளப் பரியன. 'வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலர்',

"வரிசை அறிதலோ அரிதே பெரிதும்
ஈதல் எளிது" (புறம். ௧உ௧)

என்றல் காண்க.

கொடைக்கடன் பூண்ட கொற்றவனாய் இருந்தும், புலவர்தம் வரவேலாது, வரிசை அறியாது, பரிசிலை அனுப்பினன் அதிய மான். வள்ளன்மைத் திறத்தில் வழுவிய அவனை எள்ளல் சுவை ததும்பத் "தாங் கருங் காவலன்"—சோர்வுபடாது காத்தற் கரிய காவல் தொழிலையுடையவன்—எனக் குறிக்கிறார், பெருஞ்சித்திரனார்.

---

## வஞ்சின மறமொழி!

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வஞ் சினம் கூறும் நெறியில் "எனை இழித்துப் புல்லிய சொற்களைச் சொற்ற அரசர் களைப் போரிலே சிதறுமாறு பொருது முரசத்தோடு அவர்களைக் கைக்கொள் வேன். அங்ஙனம் செய்யேனாயின், என் குடைநிழல் வாழும் குடிமக்கள் 'எம் வேந்தன் கொடுங்கோலன்; எங்களுக்குத் தக்க காவலில்லை' என்றழுதரற்றிக் கண்ணீர் பரப்பிப் பழி தூற்றும் கொடுங்கோலை யுடையேனாகுக; உலகத்தோடு எஞ்ஞான்றும் நிலையுறும் புகழையும், தலைமையையும் உடைய புலவர் என் நில எல்லையைப் பாடாது நீங்குவாராக. 'இல்லை' என்று வந்தோர்க்குக் கொடாத இன்மையை யான் உறுவேனாக" எனக் கூறுகின்றான். இவ்வரசனின் சொற் களால் செங்கோலின் செவ்விய நெறியும், புலவர்கள்பால் அரசர்களுக்கிருந்த நன்மதிப்பும், இரப்போர்க்கீயும் வள்ளற்றன்மையும் தெற்றெனப் புலப்படு கின்றன.

—முத்து. இராசாக்கண்ணனார், எம். ஏ., "புறநானூற்றுச் சொற்பொழிவுகள்"

# தொல்காப்பியமும் நன்னூலும்

[பண்டித வித்துவான், திரு. கு. சுந்தரமூர்த்தி]



திருச்சி மாவட்டம், முசிரி வட்டத்தைச் சேர்ந்த தோணூர்ப் பட்டி என்னும் கிராமத்தில் 14-4-1930 இல் இவர் பிறந்தார். தந்தையார் குப்புசாமி முதலியார்; தாயார் நாகரத்தினத் தம்மையார். பல்கலைக் கழக இடைநிலை வகுப்பு வரை பயின்று, திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் சேர்ந்து கற்று 1950 இல் வித்துவான் தேர்வில் முதல் வகுப்பில் தேறினர். அந்நாள் தொட்டுத் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியிலேயே தமிழ்ப் பேராசிரியராகத் தமிழ்த் தொண்டாற்றி வருகின்றார். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டிதத் தேர்ச்சியும், சைவசித்தாந்த சமாசத்துச் சைவப் புலவர் தேர்ச்சியும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துச் சைவ சித்தாந்தத் தேர்வில் ஆயிரம் வெண்பொற் காசுகள் பரிசும் பெற்றவர்; பரிசில் பெற்றமையைப் பாராட்டி மதுரையாதினத்தாரால் 'சித்தாந்த நன்மணி' என்னும் சிறப்புப்பட்டம் வழங்கப் பெற்றவர். திருக்குறளிலும், தொல்காப்பியத்திலும் ஆழ்ந்த புலமைவாய்ந்தவர்.

## தொல்காப்பியம்

உலகின்கண் வழக்காற்றில் பயின்று வரும் தொள்ளாயிரம் மொழிகளுள் தொன்மொழிகள் என்று கூறப்படுவன நான்கு அல்லது ஐந்தே மொழிகள் தாம். அவற்றுள் ஓவா மூவா நம் தமிழ் மொழியும் ஒன்று. சொற் சிதைவுகளைத் தடுத்துச், சொற்களை மேல் வழங்கு முறைகாட்டி வரம்பறுத்து, மொழியை ஒழுங்கு படுத்துவன இலக்கணங்கள். எழுத்தெனும் அரும்பு தோற்றிச் சொல்லெனும் பூம் போது அலர்ந்து, பொருளெனும் நல் விருந் தீந்தாது நாறும் இயற்றமிழ் இலக்கண நூலே இத் தொல்காப்பியம். இது தொன்மையும் தலைமையும் கொண்ட விழுமிய நூல். இதனை நம் முன் படைத்த நல்லிசைப் புலவர் தொல்காப்பியர் என்னும் பெருந்தகை ஆவர். இதற்கு முன்னும் பின்னும் எத்தனையோ இலக்கணப் பெரு நூல்கள் எழுந்தும் இதனையே நாவலரும் பாவலரும் போற்றி வருவது இதன் சிறப்பிற்குச் சான்றாகும். "இடைச் சங்கத்தார்க்கு நூலாயிற்று அகத்தியமும் தொல் காப்பியமும்'' எனவரும் இறையனார் களவியல் உரையால் இதன் தொன்மை மேலும் நன்கு ஒளிரும். இது மேற்கூறிய முப்பிரிவுகளை யுடைத்தாய் ஒவ்வொரு பிரிவிற்கும் ஒன்பது ஒன்பது இயல்களாய் நிரல்படக் கோத்த பெருமையுடையது. இந் நூலிற்கு உரைகளை நோக்க நூல் முழுமைக்கும் இளம்பூரணரும், எழுத்து, சொல், (பொருளில் முதல் ஐந்து இயல் மட்டும்) நச்சினார்க்கினியரும், பொருள் பிற்பகுதிக்குப் பேராசிரியரும், சொல்லதிகாரத்திற்கு மேற்கூறிய இருவருமன்றிச் சேனாவரையர், தெய்வச்சிலையார், கல்லாடனார் என ஐவரும் உரை வகுத்த பெருமக்களாயினர்.

## நன்னூல்

தொல்காப்பியத்திற்கு வழிநூலாய்த் திகழ்வது நன்னூல். இது தொல்காப்பியத்திற்குக் காலத்தால் எத்தனையோ ஆண்டுகள் பிற்படத் தோன்றியிருப்பினும் அத் தொன்னூலில் பரந்தும் விரிந்தும் உள்ள செய்திகளை ஒருங்கே தொகுத்தும், மேலும் அந்நூலில் ஐயுறத்தக்க சில கருகிய இடங்கட்கெல்லாம் தக்கதொரு தெளிவுரையென வழிகாட்டியும் விளங்குகின்றது. வழக்கியல் மிக்க இந்நூலின் சிறப்புப் பாயிரம்கொண்டு இஃது ஐந்தியல்களாகத் (எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி) தொடங்கப்பட்டதாகத் தெரியினும் இன்று நம்முன் நடமாடுவன எழுத்துஞ் சொல்லுமேயாம். இந்

நூலை இவ்வுலகுக்கு அளித்த பெருமை பவணந்தியார் என்ற பாவாணரைச் சாருமேனும், இதை ஆக்கப் பணித்து ஆதரவு நல்கிய சீயகங்கனையும் (கி. பி. 1210) நாம் மறத்தல் இயலாது. பன்னூல்களைக் கற்ற பெருநாவலராம் பவணந்தியார், தொல்காப்பிய நூற்பாக்களை அன்றி முதல் உரை ஆசிரியரான இளம்பூரணர் கருத்தையும் இணைத்துத் தம் நூலில் புனைந்திருப்பது பாராட்டத் தக்க தொன்றாகும். தொல்காப்பியத்தின் துணைகொண்டும், அதன் உரைகளைக் கொண்டும் விளங்க வேண்டிய பல செய்திகளையும் தம் நூலின்கண் எழில்பட யாத்த இவரது செயற்கருஞ் செயல் கண்டு மகிழ்தற்குரிய தொன்றாகும்.

## உடம்படுமெய்

முறையும் நெறியுமாக எழுத்து, சொல், பொருள் என வகுத்துக் கொண்ட தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தின்கண் உயிர்களை உடம்படுத்தும் மெய்பற்றிக் கூறினார். சங்கர நமச்சிவாயரும் "நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும் உயிரும் உயிருமாக இருப்பின் அவ்விரண்டையும் இணைக்க ஓர் உடம்பாக அடுக்கும் மெய் ஒன்று தோன்றும் அதுவே உடம்படுமெய்" என்றார். தொல்காப்பியர் இதைப் பற்றிக் கூறும்பொழுது "எவ்வகைப்பட்ட மொழிக்கும் உயிரீற்றோடு உயிர் முதன்மொழி வந்து புணரும்போது இடையே உடம்படுமெய் வடிவு கோடலை நீக்கார்" என்றே கூறுவர். அவர் கூறும் நூற்பா :—

"எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்"

என்பது.

தொல்காப்பியனார் கருதுவது உடம்படுமெய் ஆண்டு வரலாமென்பதும் அதனை நீக்குதல் தகாதென்பதும் ஆகிய அவ்வளவேயாம். எவ்வெவ் வுயிரீறு வருகையில் எவ்வெவ் வுடம்படுமெய் வரும் என்பதைத் தொல்காப்பியத்தின் வாயிலாக அறிய இயலவில்லை. தொல்காப்பிய முதல் உரையாசிரியர் இளம்பூரணர் "இகர ஈகார ஐகார ஈறுகள் யகர உடம்படுமெய் கொள்வன; அல்லன வெல்லாம் வகர உடம்படுமெய் கொள்வன" என விளக்கினர்.

ஆசிரியர் நன்னூலார் தொல்காப்பியத்தையும் அதற்கு உரை எழுதிய இளம்பூரணர் உரையையும் தெள்ளிதின் உணர்ந்து,

"இ ஈ ஐ வழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன் இவ்விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்"

என்று சொற் சுருக்கிப் பொருள் விரித்தார். ஏ முன் இவ்விருமையும் (ய, வ) வரும் என நன்னூலார் இலக்கியம் கண்டு இயம்பிய திறம் இன்புறுதற்குரியது. "முன்னோர் மொழி பொருளே அன்றிப் பின்னோன் வேண்டுவனவும் தந்துரைத்தல்" வழிநூலாம்—என்றவாறு மேற்கூறியவற்றை நாடியுரைத்த இவரது ஆற்றல் போற்றற்குரியது.

இந் நூற்பாவிற்கு முன்னூலின் துணைகொண்டு இக் கருத்துக்களை யெல்லாம் ஆசிரியர் நச்சினார்க்கினியர் நன்கு விளக்கியுள்ளார் என்பது நினைவுகூரத் தக்கது.

## இனப் பொருள்

இனப் பொருள் பற்றி உரைகாண வந்த இளம்பூரணர் "எவ்வகைப்பட்ட பொருளாயினும் தன்னுழையுள்ளது அல்லதை இல்லை என வேண்டின் அவன் கூறிய பொருளல்லாத பிறிது பொருள் கூறி இல்லை என்க" என்றார். பிறிது பொருளென்பதன் கருத்து, வினவப்பட்ட பொருட்கு இனமாய பிறிது பொருளையே கூறுக என்பது. இதற்கு, பின் வந்த சேனவரையர் பிறிது இனப்பொருள் என்று கூறிய நல்லுரையை மறுத்திருப்பினும் தொல்காப்பியர் கருத்தொடுபட்ட பொருள் இனப்பொருள் கூறுதலே என்பதைத் தெளிந்தார் நன்னூலார்.

"எப்பொருளாயினும் அல்லதில் லெனின்
அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்"

"அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்"

என்ற தொல்காப்பியர் நூற்பாக்களையும்,

"தம்பால் இல்ல தில்லெனின் இனனாய்
உள்ளது கூறி மாற்றியும் உள்ளது
சுட்டியும் உரைப்பர் சொற்சுருங் குதற்கே."

என்ற நன்னூலார் இசைத்த நூற்பாவையும் ஒருங்கு காணுவோர்க்கு எளிய, இனிய முறையில் கருத்து விளக்கம் தந்த நன்னூலார் செய்கை இனிது விளங்கும்.

## ஒருவர் என்னும் பெயர்

"ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி
இருபாற்கு முரித்தே தெரியுங் காலை."

"தன்மை சுட்டின் பன்மைக் கேற்கும்."

என்னும் நூற்பாக்கள் ஒருவர் என்னும் பெயரது இயல்பை விளக்க வந்த நூற்பாக்களாகத் தொல்காப்பியத்தில் காண்கின்றோம். ஒருவர் என்னும் பெயர் உயர்திணை ஆண்பாலுள் ஒருவனையோ, பெண்பாலுள் ஒருத்தியையோ குறிக்காமல் உயர்திணை இருபாற்கும் வருமென்பது 'ஒருவர்' என்று தொடங்கும் நூற்பாவின் கருத்தாகும். இந் நூற்பாவில் 'இருபாற்கும் உரித்தே' என்ற தொடர் "உயர்திணை இருபாற்கும் என்பது" உரைகொண்டே விளங்க வேண்டியிருக்கிறது. அடுத்து ஒருவர் என்னும் சொல் எச் சொல்லோடு முடியும் என்பதை ஆயுங்கால் "பன்மைச் சொல்லோடுதான் முடியும்" என்பது "தன்மை சுட்டின்" என்ற நூற்பாவின் கருத்தாகும். "தன்மை சுட்டின்" என்னும் பகுதிக்கு "அதிகாரத்தால் ஒருவரென்னும் பெயரதியல்பு கருதின்" என்றே உரை வகுக்கக்கப்பட்டிருக்கிறது. இங்ஙனம் உரையினானும் அதிகார முறைமையினானும் காணவேண்டிய நுண் கருத்துக்களை ஆசிரியர் நன்னூலார்,

" ஒருவர் என்ப துயரிரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப"

என எழிலும் மணமும் பொருந்த ஒரு நறுமலரை நூற்பாவின் வடிவில் ஈந்தார்.

## ஆ ஓ வாதல்

"செய்யுளுள் சில பெயர்களின் ஈறு ஆ ஓவாதலுமுண்டு, அவ்விடத்தை அறிந்து கொள்க" என்று கூற வந்த தொல்காப்பியர்,

"ஆ ஓ வாகும் பெயருமா ருளவே
ஆயிட னறிதல் செய்யு ளுள்ளே."

என்று கூறினர். இங்கு "இடம் அறிக" என்பதுதான் தொல்காப்பியருடைய ஆணை. அவ்விடத்தை அறிந்துகொள்ள இளம்பூரணரின் எடுத்துக் காட்டுக்களே பயன்படுவனவாகும். அவர் சுட்டுவது :—

வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொல் அளியர் தாமே.

என்பதேயாகும்.

இனி வினையியலில் பாலை அறிய வருகின்ற மூன்று வினையீற்றுச் சொற்களும் செய்யுளுள் ஆ ஓ வாகும் என்றும் "ஆய்" என்ற சொல்லும், அங்ஙனமே ஆ ஓ வாகுமென்றும் கூறப்பட்டுள்ளது. இங்ஙனம் பாலை அறிய வருகின்ற மூன்று ஈறு எவையென்பதை உரையாசிரியர் தம் உரைகளைக் கொண்டே தெரிய வருகிறது. தொல்காப்பியர் காட்டும்,

"பாலறி மரபின் அம்மூ வீற்றும்
ஆ ஓ வாகும் செய்யு ளுள்ளே."

"ஆயென் கிளவியும் அவற்றொடு கொள்ளும்."

என்ற நூற்பாக்களுக்கு இளம்பூரணர் தரும் எடுத்துக் காட்டுக்கள் :

'வினவி நிற்றந்தோனே' (அகம், 48)

'நகூப் பெயர்ந்தோளே' (அகம், 248)

'சென்றோர் அன்பிலர்' (அகம், 31)

'வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப.' (அகம், 80)

இங்ஙனம் இளம்பூரணர் தரும் சான்றுகள் கொண்டு பெயரிடத்தும் வினையிடத்தும் ஆ ஓ வாகும் ஈறுகள் ன, ள, ர, ய என்ற நான்கு மென்பதும், அங்ஙனம் திரிவதும் ஈற்றயல் ஆகாரமே என்பதும் நன்கு விளங்குகின்றன.

இத்தகு நுண்கருத்துக்களை தன் உள்ளக் கிழியில் உருவெழுதினார் நன்னூலார். சிறுகுழலில் இனிய இசையை நிறுத்தும் குழல்வல்லோன் போன்று,

"பெயர் வினை இடத்து னளரய ஈற்றயல்
ஆ ஓ வாகலும் செய்யுளுள் உரித்தே."

என்ற சிறிய நூற்பாவிலே மேற்கூறிய செவ்விய தீவிய கருத்துக்களை யெல்லாம் சமைத்துப் புகழ்கொண்டார் நன்னூலார்.

## செய்கென் கிளவி

"செய்கு" என்னுஞ் சொல் வினையொடு முடியினும் வினைமுற்றாகவே கருதப்படும். இச் செய்தியை,

"அவற்றுள்,
செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியா தென்மனார் புலவர்."

என்னும் நூற்பாவால் தொல்காப்பியர் விளக்குகின்ருர். ஈண்டு "அவ்வியல் திரியா" தென்றது, வினைமுற்றும் தன்மையினின்றுந் திரியாது என்பதே பொருளாகும். இவ்வளவில் அமைய "செய்கு" என்னும் கிளவி வினையொடும் முடியினும் அமைக எனவே "செய்கும்" என்னும் கிளவியும் வினையொடு முடியினும் அமைக" என்பதே போந்ததாம் எனக் கூறி, உண்கும் வந்தேம் என எடுத்துக் காட்டும் கொடுத்தார் இளம்பூரணர்.

இவ் விளக்கத்தையும், எடுத்துக் காட்டையும் இந் நூற்பாவோடு இணைத்துக் கண்ட நன்னூலார்,

"செய்கென் ஒருமையும் செய்குமென் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே."

எனச் செவ்விய நூற்பாவைத் தீட்டினர்.

செய்கு, செய்கும் என்பன முறையே ஒருமையாகவும் பன்மையாகவும் வரும் என்ற கருத்தையும் இந் நூற்பாவிலேயே விளங்க அமைத்திருப்பது அறிந்து மகிழ்வதற்குரிய தொன்ருகும்.

## அன்மொழித் தொகை

அன்மொழித் தொகை எவ்வெந் நிலைக் களத்துப் பிறக்கும்? என்று ஆய்ந்த தொல்காப்பியர்,

"பண்புதொக வரூஉங் கிளவியானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே."

என்ற நூற்பாவால், விளக்கினர். 'பண்பு, உம்மை, வேற்றுமை ஆகிய மூன்றன் நிலைக்களத்துப் பிறக்கும் அன்மொழித் தொகை' என்பது இதன் கருத்து. கருத்து இங்ஙனமாக, இளம்பூரணர் "மற்று "வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே" என்னும் சூத்திரத்து வேற்றுமைத் தொகையை முற்கூறி இருக்க ஈண்டுப் பண்புத் தொகையை முற்கூறிய தென்னை யெனின்? அதனற் பிறவும்உள கொள்ளப்படுவன; அவை யாவையோ வெனின் ஒழிந்து நின்ற உவமத்தொகையும் வினைத் தொகையும் பற்றிப் பிறக்கும் அன்மொழித் தொகை" என்று கூறிச் சான்றுகளும் நிறுவினர்.

இந் நூற்பாவையும், முறைமாற்றியமையால் பெறப்பட்ட இளம்பூரணர்தம் கருத்தையும் அடிப்படையாக வைத்து அவ் வண்ணமே நன்னூலார், "ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி" எனச் சுருக்கமும் அழகும் பொருந்த உரைத்தார்.

## முடிவுரை

இங்ஙனம் ஞாயிறெனத் திகழும் தொல்காப்பியத்தின் கருத்துக்களையும், ஒளிக் கற்றைகள் போன்ற உரையாசிரியர்தம் நல்லுரைகளையும் குறைவறத் தெளிந்தார் நன்னூலார். தெளிந்ததைச் சில்வகையெழுத்தான் பல்வகைப் பொருளைத் திட்பமும், நுட்பமும் அமைய யாத்திருப்பதையும், செறித்து இனிது விளக்கிய மாண்பையும் காண்தொறும் நாம் பெருமையடைகின்றேம். தொல்காப்பியம் எனும் வித்து, உரைகளாம் கிளைகளீன்று, நன்னூல் எனும் நறுஞ்சுவைக் கனியைத் தமிழ்மக்கட்கு நல்கிற்றெனில் அது மிகையாகாது. மொழிவளம் ஒழுங்குபடக் கலங்கரை விளக்கெனத் திகழ்ந்து தமிழுக்கு நல்வாழ்வு காட்டிய இவ் விலக்கணச் செல்வங்கள் என்றென்றும் வாழட்டும்! நன்னூலின் மாண்பை நன்கு உணரவேண்டின் தொல்காப்பியத்தையும் அதன் உரைகளையும் கற்றுத்தெளிவுறவேண்டும். அதுபோழ்து தான் நன்னூலின் சுவையையும் பயனையும் நன்கு உணர முடியும்.

"பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி"

என்றும்,

"முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினுள்
எந்நூ லாரும் நன்னூ லார்தமக்கு
இணையோ வென்னும் துணிவே மன்னுக."

என்றும், பிறர் கூறியவாறு யாமும் கூறி வாழ்த்துவதன்றி வேறு என் செய இயலும்?

வாழ்க தொல்காப்பியம்!
வழிவழி சிறக்க நன்னூல்!

# தாய்மொழிக் கல்வியில் இலக்கிய நோக்கம்

[பேராசிரியர், திரு. சரவண. ஆறுமுக முதலியார்]

திருச்சி மாவட்டம், திரு அன்பிலாலந்துறையில் இவர் தோன்றினர். கு. சரவண முதலியாரும் செல்லம்மாளும் பெற்றேராவர். திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரி, ஹீபர் கல்லூரி ஆகியவற்றில் பயின்று, சென்னைப் பல்கலைக் கழகத்துப் பி. ஏ., பட்டத் தேர்வில் மாநிலத்திலேயே முதல்வராகத் தேறினர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி. ஏ. (ஆனர்சு), எம் ஏ. ஆகிய பட்டங்களையும் முதல்வராகத் தேறிப் பெற்றுள்ளார். மற்றும் பி. ஓ. எல்., எல். டி., வித்துவான் ஆகிய பட்டங்களையும் பெற்றார். சென்னை மாநிலக் கல்லூரி, கோவை அரசினர் கல்லூரி, சென்னை, ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, திருப்பராய்த்துறை, விவேகாநந்தா பயிற்சிக் கல்லூரி ஆகியவற்றில் பணியாற்றியபின் தற்போது கொமாரபாளையம் அரசினர் பயிற்சிக் கல்லூரியின் முதல்வராகியுள்ளார். 'தமிழ் கற்பிக்கும் முறைகள்', 'கட்டுரைக் கருவூலம்', 'திருக்குறளும் பொது நோக்கமும்' முதலிய பல நூல்களியற்றியுள்ளார். சிறந்த ஆராய்ச்சிச் சொற்பொழிவாளர்.



தொடக்க நிலையிலிருந்து, உயர்நிலை, கல்லூரி நிலை முதலிய பல நிலைகளிலும் கல்வித் துறைகளிலும் அவற்றைக் கற்பிக்கும் முறைகளிலும் திருத்திய அமைப்பு நிகழும் இந் நாளில் தாய்மொழிக்கல்வியில் எல்லா நிலைகளிலும் இலக்கிய நோக்கம் (Literary aim) எவ்வாறு தலைசிறந்து விளங்குகிறது என்பதை ஆராய்வது, பொதுவாகத் தமிழ்மக்களுக்கும் சிறப்பாகத் தமிழ் மாணவர்களுக்கும் தமிழாசிரியர்களுக்கும் கவர்ச்சி உள்ளதாக இருக்கும்; பயனும் விளைவிக்கும் என்பதில் ஐயமில்லை. மக்கள் முதன் முதலில் நாடோடிகளாக வாழ்ந்து வந்த பின்னர், ஒரு நாட்டில் ஒன்றுகூடி ஒரு மன்பதையாய் (சமுதாயமாய்), வாழத் தலைப்படவே மொழி தோன்றலாயிற்று; வளரலாயிற்று. ஒன்றுபட்ட மக்களின் பொதுவாழ்க்கைக்கு மொழி இன்றியமையாதது. பல்வேறுபட்ட, மாறுபட்ட, கொள்கைகள், குறிக்கோள்கள், சமயங்கள், குலங்கள், நிலைகள், தொழில்களால் வேற்றுமையுற்ற மக்களும் தாம் பேசும் மொழியால் ஒன்றுபடுகின்றனர். மொழியினால் தான் மக்கள் எண்ணும் எண்ணம் வெளிப்படுகின்றது. சிந்தையும் அதை வெளியிடும் மொழியும் ஒன்றை ஒன்று விட்டுப் பிரிக்கமுடியாத நிலையைப் பெற்றிருப்பதால் சிந்தை வளர அதை எடுத்தியம்பும் மொழியும், மொழிவளர எடுத்து மொழிவதற்குரிய சிந்தையும் ஒருங்கே வளரவேண்டும். ஒன்றைவிட்டு மற்றென்றைப் பிரித்தால் ஒன்றும் வளராது. தளரவே செய்யும். எனவே வாழ்ந்தால் இரண்டுக்கும் ஒருங்கே வாழ்வு; தாழ்ந்தால் இரண்டுக்கும் ஒருங்கே தாழ்வு. இப் பழவுண்மையைக் கண்டுணர்ந்ததனாலன்றே புதுமைக்கவிஞர் பாரதிதாசனும் தமிழைப் பார்த்து, "நைந்தா யெனில்நைந்து போகுமென் வாழ்வு, நன்னிலை உனக்கெனில் எனக்குந் தானே" என்று முழக்குகின்றார்.

உலகில் பல மொழிகள் தோன்றி, வளர்ந்து, மறைந்துபோய்விட்டன. சில அன்று முதல் இன்றுவரை நிலவுவதோடு, என்றும் பொன்றாப் புகழுடன் நின்று நிலவவும் செய்யவல்ல பழமையும் புதுமையும் ஒருங்கே கொண்டு விளங்குகின்றன.

நாடுகள்தோறும் மொழிகளும் வேறுயிருப்பினும், ஒரு நாட்டில் பிறந்தது முதல் இறந்ததுவரை அந்நாட்டினர் கேட்டுவரும் மொழியே—வாழையடி வாழையாக, வழி வழியாக, மிகப் பழங்காலம் தொட்டே கேட்டும், பேசியும், படித்தும், எழுதியும், வரும் மொழியே—தாய்மொழி எனப்படும்.

தாயின் கருவில் இருக்கும்பொழுதே ஒரு சேய் திருவுற்றுத் தன் தாயின் ஊனிலும் உள்ளத்திலும் உயிரிலும் ஒன்றுபட்டு, அவள் வழியாக அம் மொழியினரின் நடை, உடை, எண்ணங்கள், பண்பாடு, கலை, நாகரிகம், கடவுட் கொள்கை, அரசியற் கொள்கை, குறிக்கோள், ஆகிய இன்னோரன்னவற்றைத் தன் ஊனிலும் உள்ளத்திலும் உயிரிலும் பெற்றுக்கொண்டு பிறப்பதால் அச் சேயின் மொழி தாய்மொழி எனப்படுவதில் வியப்பொன்றுமில்லை. பின்னர் அச் சேய் பிறந்து மொழி பயிலுங்கால் அதன் தாய் முதற்கண் பாலூட்டித் தாலாட்டிப் பின் சீராட்டிப் பாராட்டும் மொழியே சேய்க்கும் தாய்மொழி ஆயிற்று. அடுத்துச் சேயும் தாயாகித் தன் சேய்க்கும் புகட்டும் மொழியும் அதுவே ஆகும். இச் சிறப்புக் கருதியே நம் மொழி "பால்வாய்ப் பசுந்தமிழ்" என்று போற்றப்படுகிறது.

தாயே சேய்க்கும் முதல் ஆசிரியர் ஆவாள். அவள்பால், மழலை மொழிந்து, பின்னர் அப்பனாலும், பள்ளிக்கூடத்தில் ஆசிரியனாலும் வரிவடிவிற் பயிற்றப்பெற்று அறிவு விரிவெய்தப்பெறும். இவ்வுலகக் கல்வியில் மட்டுமன்றி, மெய்யுணர்வுறுவதற்குரிய அவ்வுலகக் கல்வியிலும், ஒருவர் இறைவனைத் தலைப்பட விழையுங்கால் அங்கும் அருள் உருவாகிய தாயே முதற்கண் அவரைப் பண்படுத்தி, அப்பனாகிய இறைவனை அறிவித்து அவன்பால் உய்ப்பவளாவள். இதனை,

> "... ... ... ... மெய்யருளாம்
> தாயுடன் சென்றுபின் தாதையைக்
> கூடிப்பின் தாயைமறந்து
> ஏயும தேகிட்டை"

என்னும் முற்றத்துறந்த முனிவர் பெருமான் அருள்மொழியாலும் அறியலாம். தாய்வழியாகத் தந்தைக்கு ஆளாதலை உணர்ந்தே மணிவாசகப் பெருந்தகை யாரும், "அம்மையே! அப்பா! ஒப்பிலா மணியே" என்று தம் அருமைத் திருவாசகத்தில் திருவாய்மலர்ந்தருளியுள்ளார்.

தமிழர்களின் தாய்மொழியாகிய தமிழ் அமிழ்தினும் இனியதென இமிழ்கடல் வரைப்பில் எல்லோராலும் போற்றப் பெறுவது. "கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே"யும் "முன்தோன்றி மூத்து"ப் படைப்புக் காலந்தொடங்கி மேம்பட்டு வருவது. பழமையும் பெருமையும் வாய்ந்த இது புதுமையும் பொருந்தி, இன்றும் உலக வழக்கழியாது என்றும் நின்று நிலவுதற்குரிய "உயர்தனிச் செம்மொழி" எனற் பாலது. தமிழ்த் தெய்வ வணக்கம் கூறப் போந்த பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் தமிழ்மொழிக்குப் பரம்பொருளை உவமை கூறினர். பரம்பொருள், பல்லுலகும் பல்வுயிரும் படைத்தளித்துத் துடைக்கினும், யாதொரு மாறுபாடுமின்றி அக் காலத்தும், இக் காலத்தும், எக்காலத்தும் இருப்பதுபோல் நந்தஞ் செந்தமிழும், முன்னைப் பழமொழிக்கும் முன்னைப் பழமொழியாயும் பின்னைப் புதுமொழிக்கும் பின்னைப் புதுமொழியாயும் பொலிகின்றது.

ஆரியம், எபிரேயம், லத்தீன் போன்ற பல இறந்துபட்ட பழைய மொழிகள் உயர்தனிச் செம்மொழி (Classical Languages)கள் என வழங்கப்பெற்று வருவனபோலப் பழமையிலும் பெருமையிலும், இலக்கிய விரிவிலும் இலக்கண அமைதியிலும் அவற்றிற்குப் பின்வாங்காதிருப்பதோடு இன்னும் "உலக வழக்கழிந்து ஒழிந்து சிதையாத சீரிளமைத் திறம்" வாய்ந்த நந்தம் செந்தமிழ்மொழியை ஏனோ மொழிநூலறிஞரும் பிறரும் உயர்தனிச் செம்மொழியெனப் பேணிப் போற்றவில்லை? "தான் வழங்கும் நாட்டின்கண்ணுள்ள பல மொழிகட்கும் தலைமையும் அவற்றினும் மிகவே தகவுடைமையும்" உள்ள மொழியே உயர்மொழி. "தான் வழங்கும் நாட்டிற் பயிலும் மற்றைய மொழிகளின் உதவியின்றித் தனித்து இயங்கவல்ல ஆற்றல் சான்றதே தனிமொழி" எனப்படும். "திருந்திய பண்பும் சீர்த்த நாகரிகமும் பொருந்திய தூய்மொழி புகல் செம்மொழியாம்." இம் மூன்றிலக்கணங்களையும் தன்னகத்தே கொண்ட தமிழ்மொழியும் உயர்தனிச் செம்மொழி ஆகாதோ? இதே மூச்சில் அது தற்காலத்தும் பிற்காலத்தும் நிற்கக் கூடிய புது மொழியுமாகாதோ?

இத்தகைய சிறப்பு வாய்ந்த நம் தாய்மொழி, தமிழ்நாட்டில் பள்ளிக்கூடங்களில் முதலிடம் பெற்றும், பிற பாடங்களைக் கற்பிக்கும் வாயிலாகவும் விளங்கினும், கல்

லூரிகளில் இன்னும் அந்நிலை முழுவதும் எய்தவில்லை. இவ்விடங்களிலெல்லாம் தாய்மொழி, பன்னோக்கங்கொண்டு கற்பிக்கப்பட்டு வருகிறது. சிந்தையை வெளியிடும் வாயிலாக, ஒருவருக்கொருவர் கருத்துக்களை வாய்மொழி, எழுத்து ஆகிய இரு வழிகளிலும் வெளியிட்டு, உட்கொள்ளும் கருவியாக வழங்கப் பயிற்றுதல், (Linguistic aim) கருத்துக்கள் மட்டுமன்றி, உணர்ச்சிகளையும் மனவெழுச்சிகளையும் பண்படுத்தல் (Emotional aim), பன்முக அறிவை மிக உயர்ந்த நிலை வரையில் திரட்டிக் கொள்வதற்குரிய அறிவு வாயிலாக அமைத்துக் கொள்ளல் (Intellectual aim), இலக்கிய நயமுணர்ந்து இன்புறல் (Literary aim), படிப்போரின் படைப்பாற்றலுக்குதவல் (Creative aim), நல்ல மனப்பயிற்சியாதல், ஒரு நாட்டு வரலாறு, வாழ்க்கை முறை, அரசியல், சமயவியல் முதலிய பன்முகச்சிறப்பை எடுத்துக்காட்டும் இலக்கிய வரலாற்றுச் சான்றாகப் பயன்படுத்தல் (Cultural aim), மொழிப்பற்றினடியாக மிளிரும் நாட்டுப் பற்று (Patriotic aim), நல்லொழுக்க, சமய நன்னெறிகளைக் காட்டி ஆற்றுப்படுத்தல் (Moral and Spiritual aim) முதலிய பன்னோக்கங்களும் பயன்களாகக் கைவரப் பெறவேண்டும் என்னும் குறிக்கோளோடுதான் தாய்மொழிப் படிப்புக்குத் தனியிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது என மொழிமுறை வல்லாரும், கல்வித்துறை வல்லாரும் ஒருங்கே கூறுகின்றனர்.

இந் நன்னோக்கங்கள் பலவற்றுள்ளும் பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும், பாங்குடன் பயிலும் பல்லாயிர மாணவர்களுக்கு இலக்கிய நோக்கம்தான் தலையாய நோக்கமாக அமையவேண்டும் என்பதைக் காண்பாம். ஒரு மொழியின் இலக்கியத்தில், உரைநடை நூல்கள், கதைகள், கட்டுரைகள், கடிதங்கள், நாடகங்கள், நாடோடிப் பாடல்கள் முதலிய பல வகைகள் இருப்பினும், தனிநிலை, சொல்தொடர் நிலை, பொருள் தொடர்நிலையாகவுள்ள செய்யுட்களே இலக்கியத்தின் உயிர்நிலையாகிய பகுதியாகும். சிறந்த புலவர் பெருமக்களுடைய வாழ்க்கை நுகர்வுகளிலிருந்தும் பட்டறிவிலிருந்தும் எழும் உணர்ச்சிகளையும், உயர் கருத்துக்களையும், ஓசை இனிமை, சொல்நயம் பொருள் நயங்களோடு வெளிப்படுத்துவது செய்யுளே யாகும். செய்யுளைச் 'சொல் ஓவியம்' என்னலாம். வியன்கலைகளில் (Fine Arts) செய்யுள் முதலிடம் பெறுகின்றது. "எழுத்து முதலா ஈண்டிய அடியிற், குறித்தபொருளை முடிய நாட்டல், யாப்பென மொழிப யாப்பறி புலவ"ராதலின், பாவாணரையும் படைப்புக் கடவுளர் வரிசையில் வைத்தெண்ணுவர் அறிஞர்.

> "பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல்போற்பல
> சொல்லாற் பொருட்கிட னாகஉணர்வினில்
> வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்."

என்று பவணந்தி முனிவர், யாப்புக்கு வரையறை (definition) கூறினும், குமரகுருபரர், மக்கள் முதலிய உயிரினங்களின் யாக்கைகளை நான்கு வழிகளிற் படைக்கும் (புழுக்கள், நச்சுப் புழுக்கள்போல் அழுக்கினின்று தாமே தோன்றல், விதைபோட்டு அல்லது பதியம்போட்டுச் செடிகொடிகள் பிறத்தல், முட்டையிட்டுக் குஞ்சு பொறித்தல், குட்டிபோட்டுப் பால் கொடுத்தல்) நான்முகக் கடவுளைவிட யாப்பைப் படைக்கும் புலமைக் கடவுளரே சிறந்தவர் என்றனர். மலரவன் படைக்கும் வெற்றுடம்புகள் மாய்வனபோல் புலவர்கள் படைக்கும் உடம்புகள் மாயா என்பதனால் சிறந்த புலவர்களின் செய்யுட்கள் சிறந்த வாழ்க்கையின் சிறந்த இயல்புகளை எடுத்துக் கூறுவனவாயுள்ளன. ஒரு புலவர் தம்மைச் சூழ்ந்துள்ள, இயற்கைப் பொருள்களையும், மக்களையும், மக்கள் இயற்கையையும், தம் நுண்மாண் நுழைபுலத்தாற் கூர்ந்து நோக்கி, அவற்றைத் தம் மனத்திலேயே பின்னர் நினைவுறுத்திக்கொள்ளுவர். பிறகு அவற்றைச் சிறந்த செய்யுட்களின் வாயிலாய்ப் புதிய கற்பனையோடு தாம் கண்டவற்றைப் புதியதான ஒரு கவின்பெறு காட்சியாகச், சொல்லோவியமாக ஆக்குகின்றனர். இவற்றைப் படிப்போருக்கும் வாழ்க்கைச் செயல்களும், நிகழ்ச்சிகளும் ஒரு சிறந்த மனக்காட்சியாகக் காட்சி அளிப்பது கண்கூடு.

மனத்திற்றோன்றி யெழும் உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் ஏற்ற சொற்களில் நடைநலமும் தொடைநலமும் இசை

நலமும் பொருந்தக் காவியப் புலவன் பாடுகின்றான். இவற்றையே ஓவியப் புலவனும் நிறங்களிற் கோல் தோய்த்து, காவியப் புலவனின் சொல்லோவியங்களை, வண்ண உயிர் ஓவியங்களாகத் தீட்டிவிடுகின்றான். இதுபோன்றே மற்றொரு கலைஞன் கல்லிற் செதுக்கியும் செம்பில் வார்த்தும் உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் சிலைகளில் வடித்தெடுத்துக் காட்டிவிடுகின்றான். பாடற் (இசைப்) புலவனும் ஆடற் புலவனும் இங்ஙனமே எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் தத்தம் கலைகளிற் கவினுறக் காட்டுகின்றனர். எனினும் இவ்வழகுக் கலைகளுக்கெல்லாம் இல்லாத ஒரு சிறப்பியல்பு இலக்கியக்கலைக்குண்டு. காலத்தாலும் இடத்தாலும், கருத்தாலும் ஓவியம், சிற்பம், இசை முதலிய கலைகள் கட்டுப்பட்டுக் கிடக்கின்றன. ஆனால் செய்யுள் இப்படிப்பட்ட தடைகளால் கட்டுப்படாமல் தன்னுரிமை பெற்றுள்ளது. மேலும், ஏனையவை, கண்டும் கேட்டும் உணரவிருக்கச், செய்யுளைக் கேள்வி இன்பத்தால் மட்டும் துய்ப்பதோடு செய்யுளில் உள்ளடங்கியிருக்கும் கருத்தும் அதை எடுத்துரைக்கும் சொல்லும் பருந்தும் நிழலும்போல் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாது உடன் போவதால், அவற்றின் பொருளையும் நன்குணர்ந்து இன்புற்று இதிற் காணலுறும் பல தொடர்ந்த நிகழ்ச்சிகளையும் மனக்கண்ணாலும் காணலாம். இன்னும் புலவன் எழுதும் மொழியும் நடையும் அந்நாட்டிற் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பயின்று வரும் தாய்மொழியிலேயே அமைந்திருப்பதால் குழந்தைகள் முதல் பெரியோர்கள்வரை பாமரர் முதல் புலவர் வரை எல்லோருக்கும் அவை எளிதில் விளங்கும். சிற்பம், ஓவியம், இசை, ஆடல் முதலிய பிற கலைகளை இங்ஙனம் அனைவரும் சுவைத்தின்புறுவது எளிதல்ல.

இத்தகைய இலக்கியச்சுவையை ஊட்டுவதற்கெனவும், பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும் விட்டு நீங்கிய பின்னரும் வாழ்நாளில் இலக்கியத்தைச் சுவைத்து இன்புறுவதற்கு வழிகாட்டியாக இருப்பதற்கும் தமிழ்ப் பாட நூல்கள் உறுதுணையாக அமைகின்றன இவை மொழி அறிவை வளர்ப்பதோடு இலக்கியச் சுவையுணர் ஆற்றல், இலக்கியத் திறனாயும் ஆற்றல் முதலியவற்றையும் உண்டுபண்ணி, இலக்கியப் பற்று, தாய்மொழிப் பற்றுக்களை விளைவித்துக் கல்விக்கழகங்களை விட்டு நீங்கிய பின்னரும், இவை நிலைத்திருக்குமாறு செய்யவல்லன பாடநூல்கள். இப் பாடநூற் படிப்பை ஆழ்ந்த படிப்பு (Intensive reading) அகன்ற படிப்பு (Extensive reading) என இருவகையாகப் பிரிக்கலாம். அகன்ற படிப்பு, பரந்த பொது அறிவை வளர்க்கவும், விரைவாகப் படிக்கவும் வேண்டுவது ஒன்று ஆதலால் இது வாய்க்குள்ளேயே (Silent) விரைவாகப் பொருளுணர்ந்து கொண்டே செல்லும் தன்மைத்து. இதை, நூலகப் படிப்பு, துணைப்பாட நூற்படிப்பு, செய்தித்தாட் படிப்பு, வாரம், பிறை, திங்கள், இதழ்ப் படிப்பு, ஆண்டிருமுறை, ஆண்டு நான்முறை முதலிய பருவ இதழ்ப் படிப்பு, புதினங்கள், சிறுகதைகள், கட்டுரைகள், கலைக்களஞ்சியங்கள், பொது அறிவு நூல்கள் முதலிய பன்னூற் படிப்பு முதலியவற்றால் வளர்க்கலாம்.

இனி, ஆழ்ந்த படிப்புக்கென வகுப்புக்களில், நிலைத்து, மெதுவாகப் படித்துக் கொண்டு செல்லுமாறு, செய்யுள், உரைநடை நூல்கள் பாட நூல்களாக வைக்கப் படுகின்றன. அவற்றிலுள்ள சிறந்த நல்ல, செய்யுள் உரைநடைப் பகுதிகளைப் பொருளும் சுவையும் உணர்ந்து மாணவர் மனப்பாடம் அல்லது நெட்டுருச்செய்து கோடற்குரியராவர். அவற்றை அவர்கள் நுட்பமாக ஆராய்ந்து படிக்கவேண்டும். பொருள் உணர்தலோடு சொல்நயம் பொருள்நயங்களைச் சுவைத்து இன்புறவேண்டும். நடைநலம் தொடைநலம் ஓசைநலம் முதலியவற்றை வாய்விட்டுப் படித்தும், ஒப்புவித்தும் (recitation) செவிவழியாகச் சென்று சிந்தையில் தங்கும் கவிச்சுவையாகப் பருகவேண்டும். மேலும் அவற்றுள் வரும் தலைவன், தலைவியர், பிற ஆட்கள் போன்றோர்களின் இயல் செயல்களை அறிதல், பாட அமைப்பின் ஒழுங்கு, கட்டுக்கோப்புக்களுணர்தல், இலக்கணக் குறிப்புக்கள், அரிய சொல்லாட்சிகளை அறிதல், சொற்றொடர் மரபுத்தொடர்கள் உணர்ந்து, தம் வாக்கிலேயே பல்லிடங்களில் வைத்து வழங்கப்

பயிலுதல் அவற்றுட் பயிலும் சுவையும் மெய்ப்பாடும் தோன்றச் சுவைத்துணர்தல் ஆகிய இன்னோரன்ன முறைகளில் படித் தின்புறல் இவ்வாழ்ந்தபடிப்பின் குறிக்கோ ளாகும். இது மேலெழுந்தவாரியாக நுனிப் புல் மேயாமல் ஆழ்ந்து நுட்பமாகக் கவ னிக்கும் பழக்கத்தை வளர்க்கும்.

உயர்ந்த ஆசிரியர்களால் எழுதப் பட்ட நூல்கள் தொட்டனைத்தூறும் மணற் கேணிபோல இன்பமூறும் ஊற்றுக்களாம். இலக்கியம், நம் முன்னோர்களாகிய தெய் வப் புலமைச் சான்றோர்கள் தங்கள் வாழ் நாட்களில் பட்டறிந்து கண்டு வைத்த உண்மைகளாகிய விலைமதிக்க வொண்ணு மணிகள் நிறைந்த பொற்பேழைகள் மல்கிய கருவூலங்களாம். நாட்டில் உள்ளோரனைவரும் வேற்றுமையின்றிச் சென்று தண்ணிழற்கீழ் இன்புறத்தகும் பூம்பொழிலாம். இவற்றைப் பெற்று மகிழ் வது அவர்கள் கால்வழியில் வந்த பிற்றை நாள் தலைமுறையாளரின் தலையாய கட னும். இவற்றைப் பயின்று, இவற்றில் இலைமறை காய்களாய்ச் செறிந்து கிடக்கும் பொருள் நயங்களையும் அவற்றின் வெளித் தோற்றங்களாகிய சொல்நயங்களையும் கண்டுணர்ந்து சுவைத்து இன்புறுதலே தாய்மொழிப் படிப்பின் தலைசிறந்த நோக்க மாகும்.

*" தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்*
*இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ*
*நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்*
*தும்பர் உறைவார் பதி."*

என்றும்,

*" நுண் ணுணர்வி னரொடு கூடி நுகர்வுடைமை*
*விண் ணுலகே யொக்கும் விழைவிற்றால்—*
*[ நுண் ணூல்*
*உணர்வில ராகிய ஊதிய மில்லார்ப்*
*புணர்தல் நிரயத்து ளொன்று."*

என்றும், இலக்கியச் சுவைஞர் நுகரும் இன்பம் நாலடியாரில் விளக்கப்படுகிறது. இந் நுண்ணுணர்வினரும், தொல்கேள்வித் தன்மையரும் இயற்றிய நூல்களைப் படித் தின்புறலே அன்னரோடு கூடி மகிழ்த லாகும்.

உலகத்து, நாம், பல்வேறு மக்களோடு பழகும்போதும், வயிற்றுப் பிழைப்புக்காகப் பல துறைகளிலும் கிடந்துழன்று, ஓடி யாடித் திரிந்து, உழைத்து, அலுத்துப் போகும்போதும் தோன்றக்கூடிய வெறுப்பை இலக்கியங்களே போக்க வல்லன. சிற்றினஞ் சேர்தல், மடி, வீண் காலப்போக்கு, பயனில்சொல் பாராட்டு தல் முதலிய பல குறைகளை நீக்கி, அவற்றி னிடத்தில், பெரியோர் கேண்மை, மடி யின்மை, காலத்தைப் பயனுறப் போக்கல், பயனுள் சொல் பாராட்டுதல் முதலிய பல நிறைகளை நிறுவ வல்லது இலக்கியப் படிப்பு. பரந்த நோக்கமும் விரிந்த பார்வை யும் நல்கும். கவி இன்பத்தைச் சுவைத்து மகிழ்வதைவிடச் சிறந்த இன்பம் உலகில் வேறில்லை என்பர் ஆன்றோர். வாய் ஆருக வயிறு களனுகை உணரும் வாய்ச் சுவையோ சிறிது நேரமே நிலைத்து நின்று பிறகு மறைந்தொழிவதோடு தெவிட்டுந் தன்மையும் வாய்ந்தது. அளவுக்கு விஞ்சி ணல் நோய்க்கும் இடம்தரும். செவியாருகச் சிந்தை களனுகை உணரவல்ல கவிச் சுவையோ என்றால் தெவிட்டாத தெள் ளமுதமாய், மேலும் மேலும் வளர்ந்து, நினைக்கும்போதெல்லாம் புத்தின்பம் பயப் பதாய் நமதுள்ளத்தை என்றும் இன்பத் தில் ஆழ்த்தவல்லதாயிருக்கின்றது.

*" கவிப்பா அமுதம் இசையின் கறியொடு*
*கண்ணற் குண்ணக் குவிப்பான்."*

என்ற அடிகளிற் கம்பர் கவிப்பாவை இன்ப அமிழ்தெனவும் இசையைக் கறியெனவும் உருவகப்படுத்தித் தெரிந்த வாய்ச்சுவை உவமை வாயிலாய்த் தெரியாத கவிச் சுவைக்கு அழைத்துச் செல்லும் சிறப்பைக் காணலாம். செய்யுள் இன்பத்தில் ஒருவர் எவ்வளவில் ஈடுபட்டு இன்புறுதற்குரிய ரென்பதைக் கவியொடு ஊனும் உயிரும் ஒன்றிக் கலந்து அந் நிலையை எடுத் துரைக்கும் இராமலிங்க அடிகளின் கீழ்க் கண்ட பாவினல் உணரலாம்.

*" வான்கலந்த மாணிக்க*
*வாசகநின் வாசகத்தை*
*நான்கலந்து பாடுங்கால்*
*நற்கருப்பஞ் சாற்றினிலே*
*தேன்கலந்து பால்கலந்து*
*செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்*
*ஊன்கலந்து உயிர்கலந்து*
*உவட்டாமல் இனிப்பதுவே."*

என்பதே அப் பாடல்.

"ஆயுந் தொறுந் தொறு
மின்பந்தருங் கல்வி."

என்பர் பிறரும்.

கவி நயத்திலேயே ஆழ்ந்து அமிழ்ந்த திருவள்ளுவரும் "நவில்தொறு நூனயம் போலும்" என்ற சிறந்த உவமையைப் பண்புடையோர் தொடர்பிற் பயில்தொறும் மிகும் இன்பத்தை விளக்க அமைத்துள்ளார். "செவியிற் சுவை"யுணராதாரை அவர், மக்கள் வரிசையில் வைக்காமல் 'மாக்கள்' வரிசையில் வைத்தெண்ணுவதையும், செவிக்குணவில்லாதபொழுது சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும் என்று கூறுவதையும் தமிழ்மக்கள் பொதுவாகவும், தமிழ் மாணவர்கள் சிறப்பாகவும் கவனித்து இலக்கியச் சுவையில் ஈடுபடல் வேண்டும். சுருங்கக் கூறின் பசி, நீர்வேட்கை, அவலக் கவலை, கையாறு, முதுமை, தளர்ச்சி முதலியவற்றைப் போக்கி, மட்டிலா மகிழ்ச்சியை ஆக்கி என்றும் இளமையை நல்கவல்லது இவ்வின்பம்.

இவ்வின்பத்தை மாணவர்கள் மட்டுமன்றித் தமிழ்மக்கள் அனைவருமே துய்த்தற்குரியர். எத் தொழிலில் எவர் ஈடுபட்டிருந்தாலும் இலக்கியச் சுவையை நுகர்வதிற் றடையொன்றுமில்லை. அவரவர்தம் தொழிலுக்கிடையே இலக்கியச் சுவையிலும் ஈடுபடும் பழக்கத்தை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்.

பண்டைப் புலவர்களிற் பலரும் தாம் ஒரு தொழிலை வயிற்றுப் பிழைப்புக்காக மேற்கொண்டிருந்ததோடு, இலக்கிய இன்பங்களையும் நுகர்ந்து, அரிய பெரிய செய்யுட்களையும் காவியங்களையும் எழுதியுள்ளனர். இக்காலத்தும் அங்ஙனமே பலர் இதில் ஈடுபட்டிருக்கின்றனர். மதுரைக் கூலவாணிகன் சாத்தனார், உறையூர் மருத்துவன் தாமோதரனார், வேதநாயகம் பிள்ளை, தாமோதரம் பிள்ளை, சுந்தரம் பிள்ளை, கனகசபைப் பிள்ளை, சுப்பிரமணிய முதலியார், தேசிக விநாயகம் பிள்ளை, சிதம்பரநாத முதலியார் முதலிய பலரைக் காண்க. பண்டைத் தமிழரசர்களிலும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், சோழன் நல்லுருத்திரன், ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் போன்ற பலர் இங்ஙனம் பயின்றுள்ளனர். பதிற்றுப் பத்து, பத்துப்பாட்டு முதலியவற்றை யாத்த புலவர்களுக்கு நூறாயிரக்கணக்கான பொற்காசுகளையும், முற்றூட்டாகப் பல ஊர்களையும் வழங்கிப் புலவர்களை அரசர்கள் புரந்ததெல்லாம் இவ்விலக்கியச் சுவை கண்டு மகிழ்ந்த திறத்தினாலன்றோ? செங்கோலேந்திய திருக்கரங்கள் அன்று தமிழ்ப்புலவர்களுக்கு வெண்சாமரை வீசியதும் இதுபற்றியே யன்றோ?

---

## தமிழின் இனிமை!

தமிழ் மொழி இவ்வளவு இனிமையாக இருப்பதற்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டும். மாணிக்கவாசகர் ஒரு காரணம் தெரிவிக்கிறார். அறிஞர்கள் அடிக்கடி ஒன்றுகூடித் தமிழ்மொழியை இவ்வளவு இனிமைப்படுத்தி யிருக்கிறார்கள் என்பது அவர் கருத்து. சொற்களை அவர்கள் இனிக்கும் சொற்களாக உருவாக்கியிருக்கிறார்கள்; அச் சொற்கள் கொண்டு இனிக்குங் கருத்துக்களையே தேர்ந்தெடுத்து விளக்கியிருக்கிறார்கள். படிப்பவர்களுக்கு இன்பம் உண்டாகும் படி பல அழகுகளோடும் எழுதியிருக்கிறார்கள். இனிமையல்லாதவற்றை அவ்வப் போதும் களைந்திருக்கிறார்கள். இப்படி நெடுங்காலமாகச் செய்து வந்திருக்கிறார்கள்.

அறிஞர்கள் இங்ஙனங் 'கூடல்' கூடி ஆய்ந்து ஆய்ந்து அழகுபடுத்தி வந்ததனால் தமிழ்மொழி இவ்வளவு விளக்கமும் தித்திப்பும் உடையதாயிற்று. ஆதலால் மாணிக்கவாசகப் பெருமான் "கூடலின் ஆய்ந்த ஒண் தீந்தமிழ்" என்று அருளிச் செய்து கூடலில் ஆய்ந்ததைத் தமிழின் இனிமைக்கு ஒரு காரணமாக எடுத்துச் சொல்லி மகிழ்கின்றார்.

—இளவழகனார், "சங்கநூற் கட்டுரைகள்".

# கொண்டாட்டமும் விழாவும் கூறுவன

[திரு. க. பெருமாள், எம். ஏ.]

வடார்க்காடு மாவட்டம், திருப்பத்தூர், வெள்ளைய கவுண்டனூரில் 5—2—1922இல் இவர் பிறந்தார். தந்தையார் பெயர் கவுண்டப்பக்கவுண்டர்; தாயார் பெயர் சென்னம்மாள். திருப்பத்தூர் நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளியில் பயின்று தேர்ந்தார். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் சேர்ந்து கற்றுப் பி. ஓ. எல். (ஆனர்சு) பட்டத்தேர்வில் 1947 ஆம் ஆண்டு, மாநிலத்திலேயே முதல்வராக முதல் வகுப்பில் தேர்ந்தார். கல்லூரியிலும் பல



கலைக் கழகத்திலும் பலசிறப்புப் பரிசில்கள் பெற்றுள்ளார். 1947 இல் கோவை பி. எஸ். ஜி. கலைக் கல்லூரியிலும், 1948—'56 இல் சென்னை மாநிலக் கல்லூரியிலும் தமிழ்த்துணைப்பேராசிரியராகப் பணியாற்றினர். 1956 செப்டம்பரிலிருந்து சென்னை அரசினர் கலைக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகச் சிறந்த தமிழ்த் தொண்டியற்றி வருகின்றார். எளிய - இனிய தமிழில் எல்லாருள்ளமுங் கொள்ளுமாறு கருத்துக்களைப் பேசுவதிலும் எழுதுவதிலும் வல்லவர்.

காலத்துக்குக் காலம், அயலார்களின் ஆட்சிப் பிடியில் அகப்பட்டு, அல்லலுற்று, ஓயாது அழுத இந்தியாவின் கண்ணீர்ப் பெருக்கின் விளைவே, அதன் மூன்று பக்கங்களிலும் சூழ்ந்துள்ள பெருங்கடல்கள் என்று கூறினும்கூட, அது மிகையாகாது. தான் பெற்று வளர்த்த அரும்பெரு மக்களிடையே இருந்து வந்த மாண்பிறந்த புகழ்வேட்கையும், எல்லாப் பாவங்களையும் பெற்று வளர்க்கும் பொறாமையும், உலகச் சுமையாம் புறங்கூறலும், பொறுப்பின்மையும், ஒற்றுமையின்மையுமே இந்தியா அவ்வளவு மிகுதியாக அழுதமைக்குக் காரணமாகும். அவ்வாறு, தான் அழுதமைக்குரிய காரணங்களை அகற்றவல்ல, உரிமைவேட்கையையும், உணர்வாற்றலையும், அறிவாற்றலையும், ஒற்றுமையாற்றலையும், உழைப்பாற்றலையும், தன்மானத்தையும் படைத்துத், தக்க உரம் ஊட்டி வளர்க்கவல்ல, சிப்பாய்க் கலகத்தை 1857 ஆம் ஆண்டில் இந்தியா நிகழ்த்திக் காட்டிச் செம்மாந்து நின்றது. அக் கலகத்திற்குப் பிறகு, அயலார்களுடைய ஆட்சிப் பேய்களைத் தேய்க்கவல்ல, இமயமும் பொதியமும் போன்ற எதற்கும், எவர்க்கும் அஞ்சாத நெஞ்சுரம் சான்ற பெருமிதச் செல்வர்கள், இந்தியாவின் பல்வேறிடங்களிலும் தோன்றினர்கள். அவர்களுக்கெல்லாம் மணிமுடியாக விளங்கிய காந்தியண்ணல் அவர்களுடைய தனிப்பெருந் தலைமையில், மாற்ருர்களுடைய ஊனுக்கும், உயிர்க்கும், பொருளுக்கும் ஊறு நேராத வகையிலே, அவர்களுடைய மனத்தைமட்டும் மாற்றும் முறையிலே நிகழ்த்தப்பட்ட பல சான்ருண்மைப் போராட்டங்களின் விளைவாக, 1957 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள், பதினைந்தாம் நாள், வியாழக்கிழமையாகிய நாளில், இந்தியா, தன்னுடைய உரிமைப்போரின் நூற்ருண்டு விழாவினையும், தன்னுடைய உரிமையாட்சியின் பத்தாம் ஆண்டு விழாவினையும் பெருஞ்சிறப்புடன் கொண்டாடி மகிழ்கிந்தது.

உலக நாடுகளெல்லாம் பாராட்டும் வகையில், பெருத்த அளவில் கொண்டாடப்பட்ட அப்பெரு விழாவில், பங்குகொண்டு, மகிழும் வாய்ப்பைப் பெற்ற எல்லோரும், "கொண்டாட்டம்", "விழா" ஆகிய தமிழ்ச் சொற்களின் உண்மைப் பொருள்கள்தாம் என்னே என்று ஆராய முயன்ருல், சில தெளிவுகள் புலப்படுதல் கூடும் என்ற நம்பிக்கையால், அம் முயற்சி ஈண்டுச் சுருங்கிய அளவில் மேற்கொள்ளப்படுகின்றது.

கொண்டாட்டம்

கொண்டாட்டம் என்பது தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பட்டு என்னும் பழைய இலக்கண இலக்கியங்களில் ஆட்சி பெருத ஒரு சொல்லாகும். அதனுல், அதனைத் தமிழ்ச் சொல்லோ பிற மொழிச் சொல்லோ என்று ஐயுற்று இடர்ப் படுதல் கூடாது. சில நல்லறிஞர்கள், பழைய இலக்கண இலக்கியங்களில் ஆட்சி பெருத ஒரே காரணம் பற்றிப் பல அருமையான தமிழ்ச் சொற்களைப் பிறமொழிச் சொற்கள் என்று துணிந்து, தமிழ்கூறும் நல்லுலகத்துக்குப் பெருந் தீங்கை இழைத்து விடுகின்ருர்கள். அவர்கள் நெறியைப் பின்பற்றிக் கொண்டாட்டம் என்பதைப் பிற மொழிச்சொல் என்று துணிந்துவிட்டால், அத்துணிபைக் கண் மூடித் துணிபெனக் கொண்டு அறிஞர் உலகம் எள்ளி நகையாடும். 'கொண்டு' என்னும் எச்சச் சொல்லும், 'ஆட்டம்' என்னும் தொழிற்பெயர்ச் சொல்லும் இணைந்தே, கொண்டாட்டம் என்னும் தொடர்ச்சொல் அமைந்துள்ளது. இத் தொடர்ச்சொல், தன் பொருளைத் தானே விளக்கவல்ல ஆற்றலையும் பெற்றுள்ளது. அதன் பொருளைப் பின்னர் வரும் விளக்கம், தெளிவாக்கத் துணைசெய்கின்றது.

இன்று உரிமைத்திருநாள்; உரிமைத் திருவைப் பெற்றுத் தந்த நாளே உரிமைத் திருநாள் எனப்படுகின்றது. உரிமைத்திரு என்பதற்கு உரிமைச் செல்வம் என்பதே பொருள். இந்த உரிமைச் செல்வத்தை அடிப்படையாகக் கொண்டே, மக்கட் செல்வம், செவிச் செல்வம், அருட்செல்வம், பொருட்செல்வம், கலைச்செல்வம் போன்ற ஏனைய மும்மையுலகச் செல்வங்களும் அமைகின்றன. அதனுல், உரிமைச் செல்வம் என்பது, 'செல்வத்துள் ளெல்லாம் தலை' யான செல்வம் என்று பாராட்டுதற் குரிய பெருநிலையைப் பெற்றுவிடுகின்றது. அதனுல்தான், இந்தப் பெருஞ்செல்வத்தைப் பெறுவதற்காகப் பெரும் பெருஞ் சான்ருேர்கள் எல்லோரும் ஒன்று திரண்டு செயற்கரிய செயல்களை எல்லாம் செய்துள்ளார்கள். உடல் பொருள் ஆவி யாவற்றையும் தியாகம் செய்துள்ளார்கள். உடல் பொருள் ஆவி யாவற்றையும் தியாகம் செய்தவர்களுக்கு, வ. உ. சிதம்பரம் பிள்ளை, கட்டபொம்மன் போன்ற பெருமக்கள் என்றும் எடுத்துக்காட்டாக நின்று நிலவும் பெருந்தகுதிகளைப் பெற்றுள்ளார்கள். உரிமைச் செல்வத்தைப் பெறுவதற்காகச் சான்ருேர்களும், அவர்கள் வழி நின்றவர்களும் மேற்கொண்ட எண்ணம், மொழி, செயல்களை நினைவில் கொண்டு, ஆடல் பாடல் பேச்சுக்கலைகளை எல்லாம் நிகழ்த்தி, தம்தம் பண்பாட்டிற் கேற்ப, மக்கள் தம் அகத்தும் புறத்தும் மகிழ்ந்து, ஆடும் ஆட்டமே உரிமைக் கொண்டாட்டம் எனப்படுகின்றது. இக்கொண்டாட்டத்தில் மக்கள், இன்றும் என்றும் வீழ்ச்சியுருவண்ணம், அவர்களுக்கு வேண்டிய ஊக்கவுரைகளையும், ஆக்கவுரைகளையும், அறிவுரைகளையும், அறவுரைகளையும், உரிமையுரைகளையும், ஆடல்பாடல் போன்ற கலைகளின் வாயிலாகவும், சொற்பொழிவு போன்ற பிற கலைகளின் வாயிலாகவும், அறிஞர்களும், ஆன்ருேர்களும், அரசியலார்களும் ஆண்டாண்டு நிகழ்த்தும் தொண்டில் ஈடுபட்டு, அத்தொண்டினையே பற்றுக் கோடாகக் கொண்டு, தாமும் மகிழ்ந்து, கொண்டாட்டம் நிகழ்த்துகின்ருர்கள். இவற்றையெல்லாம் வைத்துக்கொண்டு ஆராய்ந்து பார்ப்பின், பெற்ற ஒரு திருவினை அடிப்படையாகக் கொண்டு, பெற வேண்டிய திருக்களுக்கு வழிவகைகளை வகுத்துத் தந்து, மக்களுக்கு ஊக்கமூட்டி அவர்களை முன்னேற்றும் ஆற்றல்களைப் பற்றிக் கொண்டு, ஆடும் ஆட்டமே, கொண்டாட்டம் எனப்படுதற் குரியது என்பது தெளிவாகின்றது.

யாவருக்கும் நன்மை தரத்தக்க, வன்மையான பற்றுக் கோட்டைத் துணையாகக் கொண்டு, ஆடாத ஆட்டம், பெருத்த வீழ்ச்சியில் தள்ளிவிடும்; விழிப்பின்றி ஆடும் ஆட்டம் யாவும், வீழ்ச்சியில் முடிந்துவிடும் என்னும் உண்மையை நினைவூட்டிக் கொண்டே உள்ளது கொண்டாட்டம் என்னும் தமிழ்ச்சொல். வீழ்ச்சியற்ற மகிழ்ச்சியாட்டத்திற்குரிய காரணங்கள் அல்லது பற்றுக்கோடுகள், காலத்துக்குக் காலம் வேறுபட்டுக் கொண்டே உள்ளன. அதனுல்தான், இன்ன பற்றுக் கோட்டைக் கொண்டு, ஆடுவதுதான் கொண்டாட்டம்

என்று வரையறுத்துக் கூருமல், வாளா கொண்டாட்டம் என்றே சான்ருேர்கள் கூறியுள்ளார்கள். காலமும், இடமும், அறமும், பொருளும் இன்பமும், அறிவும் பிறவும், வீழ்ச்சியற்ற வாழ்விற்குத் துணையாக வல்ல பற்றுக்கோடுகளைப் படைத்துத் தந்து கொண்டே இருக்கின்றன. அவற்றுள், ஏற்ற ஒன்றைத் தம் ஆற்றலுக் கேற்பப் பற்றிக்கொண்டு மக்கள் ஆடவேண்டும் என்பதே கொண்டாட்டம் என்னும் சொல்லால் கற்பிக்கப்படும் பாடமாகும்.

அஃதோ அந்த மரம் ஆடுகின்றது. காற்று வந்ததைக் காரணமாகக் கொண்டு அஃது ஆடுகின்றது. அதை மரத்தின் கொண்டாட்டம் என்று கூறின் தவருகாது. மரத்தின் கொண்டாட்டம் மரத்திற்குப் பகையான பூச்சி, புழு, பறவை போன்றவற்றை வீழ்த்திவிடுகின்றது; அதற்குப் பயனற்ற பழுத்துப் போனவும் உளுத்துப் போனவுமான இலை, பூ, காய், பழம், கொம்பு முதலியவற்றை உதிர்த்து விடுகின்றது; அதன் அழகைப் பாழ்படுத்தும் மாசுகளைப் போக்கிவிடுகின்றது. அதன் ஆட்டத்தால் செலவான ஆற்றலையும் உரத்தையும் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகியவற்றிலிருந்து பெற்றுக் கொள்கின்றது. எனவே, மரத்தின் கொண்டாட்டம், அதன் பகையை வீழ்த்தவும், அதற்குப் பயனற்றவற்றை அகற்றவும், அதன் மாசுகளைப் போக்கவும், அதன் வாழ்க்கைக்கும் வளர்ச்சிக்கும் வளத்துக்கும் தேவையான புதுப்புது ஆற்றல்களையும் உரங்களையும் பெற்றுத் தரவும் துணை செய்வது வெளிப்படையாகத் தெரிகின்றது. அதுபோலவே, மக்களுடைய கொண்டாட்டமும், அவர்களுடைய முன்னேற்றத்துக்குத் தடையான பகையை நீக்கவும், அவர்கள் வாழ்வுக்குப் பயனற்றவற்றை அகற்றவும், அவர்களுடைய அகத்தும் புறத்தும் படியும் மாசுகளைப் போக்கவும், அவர்கள் வாழ்க்கைக்கும் வளர்ச்சிக்கும் வளத்துக்கும் தேவையான புதுப் புது ஆற்றல்களையும் உரங்களையும் படைத்துத் தரவும் வல்ல தகுதியைப் பெற்றுவிடுகின்றது. அதனுல்தான், மக்கள் வாழ்க்கையில், காலத்துக்குக் காலம் ஏதேனும் ஒருவகைக் கொண்டாட்டம் இருந்து கொண்டே இருத்தல் வேண்டும் என்று எண்ணிய சான்ருேர்கள், மொழிப்பற்றையோ, நாட்டுப்பற்றையோ, ஆண்டவன்பற்றையோ, சான்ருேர்கள் இடத்துக் கொண்டுள்ள பற்றையோ அடிப்படையாகக் கொண்டு, சில நிலையான கொண்டாட்டங்களை மக்களுக்கு அமைத்துத் தந்துள்ளார்கள்.

காற்று, வன்மையாக வளைத்து வளைத்து மோதுமாளுல், மரத்தின் கொண்டாட்டம் அதன் பேராட்டமாகிவிடுகின்றது. அப்பேராட்டத்தால் மரம் முறிந்து சிதைந்து போதலும் உண்டு; வேரோடு சாய்ந்து போதலும் உண்டு; இருந்த இடத்தைவிட்டு வேறிடத்துக்குப் பறந்து போய் அழிந்து போதலும் உண்டு. மகிழ்ச்சி எல்லை மீறுமானல், மக்களும் சில போது தம் கண்ணை மூடிக்கொண்டு, கொண்டாட்டத்தின் எல்லையைக் கடந்து சென்று, பேராட்டம் ஆடத் தொடங்கிவிடுகின்ருர்கள். அதனுல், எல்லையற்ற கடன் சுமைகளும் பிறதொல்லைகளும் பெரும் புயல்போல் தோன்றி அவர்களைச் சூழ்ந்து மோதி அடித்து ஆட்டி அழித்தும் சிதைத்தும் விடுகின்றன. சிலர் இருந்த இடத்தில் சிதைகின்ருர்கள் அல்லது அழிகின்ருர்கள். சிலர் இடம்விட்டு இடம்போய் அழிகின்ருர்கள் அல்லது சிதைகின்ருர்கள். இந்த அழிவு நிலைகளையும் சிதைவு நிலைகளையும் படைத்துத் தரும் பேராட்டங்கள் மரத்துக்கும் வேண்டா; மக்களுக்கும் வேண்டா. ஈண்டுத் தந்த விளக்கம், மக்கள் பேராட்டங்களுக்கோ திண்டாட்டங்களுக்கோ இடம் தராமல் கொண்டாட்டத்தின் அளவிலேயே நின்று முன்னேறுதல் வேண்டும் என்னும் உண்மையைத் தெளிவாக்கத் துணை செய்கின்றது.

இந்த உண்மையைத் தெளிந்த சான்ருேர்கள், தமிழ்மொழியைத் தெய்வமாக்கி, அதனையே பற்றுக் கோடாகக் கொண்டு, ஆடும் நிலைமையைத் தமிழர்களுக்குக் காலத்துக்குக் காலம் ஏற்படுத்தித் தந்துள்ளார்கள். இன்றும் ஏற்படுத்தித் தருகின்ருர்கள். தமிழைப் பற்றிக்கொண்டால், அம்மொழியைப் பேசும் நான்குகோடி மக்களும் ஒன்றுபட்டுக் கொண்டாட முடியும். அந்தக் கொண்டாட்டத்தால், தம்முடைய

பண்பாடு கலை முதலியவற்றின் வளர்ச்சிக்குத் தடையாக உள்ள உட்பகை புறப்பகைகளை வீழ்த்திவிட்டு, தமிழர்கள் தம் நிலையிலிருந்து தாழாமல் வாழ்தற்குரிய ஒற்றுமையாற்றலைப் பெறமுடிகின்றது. இத்தகைய ஒற்றுமையாற்றலைப் பெறவும் தமிழைக் காக்கவுமே தமிழ்த்திருநாள் கொண்டாட வேண்டியுள்ளது.

இன்று உரிமையைப் பற்றுக் கோடாகக் கொண்டு, நாற்பது கோடி இந்தியர்கள் ஒன்றுபட்டுக் கொண்டாட்டம் நிகழ்த்துகின்றார்கள். இக் கொண்டாட்டத்தால், தமக்குற்ற, இனி உறவிருக்கின்ற, அகப்பகை புறப்பகைகளை எல்லாம் வீழ்த்தி, என்றும் வீழ்ச்சியற்ற வாழ்வை அமைத்துக் கொள்ளுதற்குரிய பேராற்றல் இந்தியர்களுக்குப் பிறக்கின்றது. உலகமக்கள் எல்லோரும் ஒன்றுபட்டுக் கொண்டாடுவதற் குரிய ஒற்றுமையாற்றலைத் திருக்குறள் போன்ற உலகப் பொதுநூல்களோ ஆண்டவனைப் பற்றிய பொதுக்கருத்துக்களோ படைத்துத் தரவல்லனவாக உள்ளன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு அமையும் கொண்டாட்டம் உலக முன்னேற்றத்துக்கு வேண்டிய பல நன்மைகளையும் படைத்துத் தரும் என்பதில் ஐயம் இல்லை. ஆகவே, கொண்டாட்டம் என்பது ஊரும் நாடும் உலகமும் முன்னேறுவதற்குப் பெரிதும் இன்றியமையாத தேவையாகிவிடுகின்றது. இவ்வாறு, ஊரும் நாடும் உலகமும் முன்னேறுவதற்குரிய ஒற்றுமையாற்றலைப் படைக்காமல், மக்கள் ஆற்றலைப் பிரித்துப் பிரித்துச் சிதைத்துச் சிதைத்துப் பிணக்கையும் பூசலையும் போர்களையும் உண்டாக்கும் இனவெறியையோ, மொழிவெறியையோ, பிறவெறியையோ அடிப்படையாகக் கொண்டு நிகழ்த்தப்படும் கொண்டாட்டங்கள் உலக வாழ்க்கையில் பல வகையான வீழ்ச்சிகளையே ஏற்படுத்திவிடும் ஆற்றலுடையனவாக உள்ளன. இத்தகைய வீழ்ச்சிகளைப் படைத்துத் தரும் கொண்டாட்டங்களைக் கொண்டாட்டங்கள் என்று விதந்து கூறுமல், வெறும் திண்டாட்டங்கள் என்றே பழித்துக் கூறி விலக்குதல் வேண்டும்.

இனி, விழா என்னும் சொல்லின் பொருளையும் அச்சொல்லின் துணைகொண்டே ஆராய்ந்து காண்டல் நலம் பயக்கும். விழா, விழவு, சாறு என்ற மூன்று சொற்களும் தொல்காப்பியத்தில் ஆட்சிபெறவில்லை. அதனால், தொல்காப்பியர் காலத்தில் இம் மூன்று சொற்களும் இருந்தன இல்லை என்றோ, இவற்றால் விளக்கப் பெறும் கொண்டாட்ட நிகழ்ச்சி இருந்தது இல்லை என்றோ துணிந்து விடுதல் சாலாது.

பழந்தமிழர்களின் இலக்கியக் கருவூலங்களாக விளங்கிவரும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு ஆகிய முத்திறத்து நூலுலகங்களிலும் விழவு, சாறு என்ற சொற்களே பெரிதும் பயின்று வந்துள்ளன. 'விழா' என்ற வடிவமோ, கலித்தொகையில் ஓரிடத்திலும் (கலி 83: வரி 14—15) ஆசாரக்கோவையில் ஓரிடத்திலும் (ஆசா: பா 48), பழமொழி நானூற்றில் ஓரிடத்திலும் (பழமொழி: பா 137) ஆட்சி பெற்றுள்ளது.

## விழவு: பெயர்க்காரணம்

விழவு என்னும் சொல்லுக்குப் பல வகையாகச் சொற்பொருள் விரித்தல் கூடும். விழித்துக்கொண்டு மகிழ்வதற்குரிய நிகழ்ச்சிகளில் மிகவும் சிறந்தது எதுவோ அது விழவெனப்பட்டது என்பது ஒரு வகைப் பொருளாகும். விழைந்து செய்யப்படும் நிகழ்ச்சிகளில் பெருஞ்சிறப்புடையது எதுவோ அது விழைவு எனப்பட்டது என்பது மற்றொருவகைக் கருத்தாகும்; இவ்வாறு கொள்ளின், இளைமை, இளமை என்றுதல்போல, குழைவு, குழவு என்றுதல் போல விழைவு, விழவு என்றுயிற்று என்று 'விழவு' என்ற சொல்வடிவத்துக்குக் காரணம் காட்டுதல் வேண்டும்.

ஆனால், இலக்கணநூலார் துணைகொண்டு ஆராயின், விழா என்ற சொல்லே விழவு என்றுகியுள்ளது என்று துணியும்படி நேருகின்றது. குறில், நெடில், இணைந்த சொற்கள் தமிழ்மொழியில் பல உண்டு. அவற்றிற்கு, நிலா, கனு, சுரு, இரு, புரு, உணு, விழா போன்ற சொற்கள் எடுத்துக் காட்டுக்களாகும். அவை, செய்யுட்கண் வரும்போது 'நிலவு, கனவு, சுறவு, இறவு, புறவு, உணவு, விழவு' என்

ருதல் வேண்டும். இவ்வாருதற்குத் தொல் காப்பியத்தில் விதியுள்ளது. இந்த உண் மையை,

'குறியதன் இறுதிச் சினைகெட உகரம்
அறிய வருதல் செய்யுளுள் உரித்தே.'
(தொல்: உயிர் மயங்கியல்: நூற்பா 32)

என்னும் நூற்பா அறிவிக்கின்றது.

தொல்காப்பியர் தமிழ் மொழியின் தொன்மை மரபுகள் கெடக்கூடாது என்பது கருதியே ஓம்படை ஆணையிட்டு இலக் கணம் கூறியுள்ளார். (தொல். சொல். நூற் பா 366).

'மரபுநிலை திரியிற் பிறிது பிறிதாகும்.'
(தொல். பொருள்: நூற்பா 646)

என்ற அடிப்படை உண்மையைக் கொண்டே அவர் அவ்வாறு இலக்கணம் செய்தனராதல் வேண்டும். தமிழ் மொழி யின் தொன்மை மரபுகளைப் பாதுகாத்தல் வேண்டும் என்னும் குறிக்கோளினுல் உந்தப்பெற்று, தமிழ்ப்பேரிலக்கணம் ஒன்று செய்த சிறந்த காரணம் பற்றியே, அவரைத் தொல்காப்பியர் என்று அக் காலத்துப் பெருமக்கள் விதந்து கூறியிருத் தல் வேண்டும். தொல்காப்பியத்தைத் துணைகொண்டு ஆராயின், உலக வழக்கில் குறில் நெடில் இணைந்த சொற்கள், திரி பின்றி வழங்கும் என்றும், செய்யுள் வழக் கில் அவை திரிந்து வழங்கும் என்றும் தெரிகின்றது. செய்யுள் வழக்குச் சொல்லை விட, உலக வழக்குச் சொல்லே காலத்தால் முற்பட்டதாதல் வேண்டும். அதனுல், 'விழா' என்ற வடிவமே விழவு என்னும் வடிவத்தினும் முற்பட்டது எனல் பொருந் தும். தொன்மை இலக்கியங்களில் ஒரோ வழி ஆட்சி பெற்றுள்ள காரணம் பற்றி 'விழா' என்னும் வடிவம் பிற்பட்டதாதல் வேண்டும் என்று துணிதல் நேரிது அன்று.

'விழா' என்னும் சொல், செய்யுள் வழக்கிலும் அருகி வருதலைத் தெளிந்த நன்னூலார், அது செய்யுட்கண்ணும்வரும் என்று விதி அமைத்துள்ளார். அதனை,

'குறியதன் கீழ்ஆக் குறுகலும் அதனேடு
உகரம் ஏற்றலும் இயல்புமாம் தூக்கின்.'
(நன். நூற்பா. 172)

என்ற நூற்பாவால் அறியமுடிகின்றது.

## விழவு: சொற்பொருள்

விழுவார் (பரிபாடல் 6: வரி 6), விழை வார் (குறள் 901), வீழ்வார் (குறள் 1103, 1305) இச்சொற்கள் விரும்புவார் என்னும் பொருளைத் தருகின்றன. இவற்றின் பகுதி 'வீழ்' என்னும் தனிவினைப் பெயராகும். 'வீழ்' என்னும் தனிவினைப் பெயரே விருப் பம் என்னும் பொருளையும் தரவல்லது. 'வீழ் பிடி' போன்ற தொடரில் 'வீழ்' என்னும் சொல் விருப்பம் என்னும் பொருளைத் தருதல் கண்கூடு. கிழக்கு, கிழங்கு என்னும் சொற்களின் பகுதி 'கீழ்' என்பதுபோல, உழவு, உழைப்பு என்னும் சொற்களின் பகுதி 'ஊழ்' என்பதுபோல, விழவு, விழா என்னும் சொற்களின் பகுதி யும் 'வீழ்' என்பதே ஆதல் வேண்டும்.

'வீழ்' என்னும் சொல் விருப்பம் என் னும் பொருளைத் தரினுங்கூட, அது, மேலிடத்திலிருந்த ஒரு பொருள் காட்சி வகையானே, கருத்து வகையானே கீழிடத் துத் தாழ்தலைக் குறித்தலே பெரும்பான்மை வழக்காகும். காதல், காமம் என்னும் சொற்களால் உணரப்படும் நெஞ்சத்து விருப்பம், தன்னளவில் மிக்க நிலைபெறும் போது, அதனைக் காதல் மேலிடல் அல்லது காமம் மேலிடல் என்று கூறுதல் வழக்கம். இவ்வாறு, காதல் அல்லது காமம் மேலிட்ட உள்ளத்துணர்வு, அதனைத் தாங்கி நிறுத்தி நிறைவு செய்யும் மற்ருேர் உள்ளத்துணர் வில் தாவி வீழ்தலையே 'வீழ்' என்ற சொல் லால் குறித்துள்ளனர் சான்ருேர். இவ் வீழ்ச்சி, கருத்து வகையான் உணரப்படுதற் குரியது. (He has fallen in love with her) என்ற ஆங்கிலத் தொடரிலும் வீழ்ந் தான் என்ற சொல் விரும்பினுன் என்ற பொருளைத் தருகிறதல்லவா? அதனுல், மேலிடத்துள்ளதொன்று அதனைத் தாங்கும் மற்ருேரிடத்துத் தாழ்தலையே வீழ்தல் என்ற சொல்லால் உணர்தல் வேண்டும் என்று தெளிவாகின்றது. ஆலம் விழுது அல்லது வீழ்து என்ற சொற்கண்ணும் 'வீழ்' என்ற சொல் அப்பொருளைத் தருதல் காண்க.

## விழா

'வீழ்' என்னும் சொல்லோடு 'ஆ' என்னும் இடைச்சொல் சேரின், 'வீழா'

என்ற வடிவம் உண்டாகின்றது. 'ஆ' என்னும் சொல் சாரியையாயின் (நன்னூல் 233) 'வீழா' என்னும் சொல், விரும்புதல் அல்லது வீழ்தல் என்ற பொருளையே தரும் பெயர் ஆகின்றது. அது 'விழா' என முதல் குறுகி, மக்கள்தம் மனம் நேர்ந்து விரும்பிச் செய்யும் கொண்டாட்டங்களுள் தலைமையான ஒன்றுக்கும் பெயர் ஆகிவிடுகின்றது. 'ஆ' என்பது எதிர்மறை விகுதியாயின், 'வீழா' என்பது எச்சம், முற்று, பெயர் ஆகிய மூன்று நிலைமையையும் பெற்றுத் தமிழர்களோடு விளையாடத் தொடங்கிவிடுகின்றது. அது, 'விழா' என்று முதல் குறுகி வந்தபோதும் அவ்வாறே செய்யவல்லது.

'விழாச் செல்வம்' என்ற தொடரில், அஃது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாக உள்ளது. 'மரம் முறிந்து விழா' என்ற தொடரில், அது முற்ருக உள்ளது. 'விழாக் கண்டு மகிழ்ந்தேன்' என்ற தொடரில் அது பெயராக உள்ளது. விழா என்ற ஒரே வடிவம் பொருளுணர்த்தும் வகையில் மூன்று வெவ்வேறு சொற்களின் நிலை பெற்று விடுகின்றது.

'விழா' என்பது எச்சச் சொல்லாக உள்ளபோது, அது, 'வீழ்ச்சியற்ற' என்ற பொருளைத் தருகின்றது. 'விழா' என்பது பெயராயின், மக்கள் தம் வாழ்க்கையில் வீழ்ச்சியற்ற நிலையைப் பெற்றபோது கொண்டாடும் மகிழ்ச்சி நிகழ்ச்சியை, அல்லது வீழ்ச்சியற்ற நிலையைப் பெறுதல் வேண்டும் என்ற மனக்கோளுடன் கொண்டாடும் மகிழ்ச்சி நிகழ்ச்சியை, அல்லது இருநிலைமையையும் கருதிக் கொண்டாடும் மகிழ்ச்சி நிகழ்ச்சியை அது குறித்தல் வேண்டும் எனத் தெரிகின்றது.

சாறு

விழா என்ற சொல்லால் உணரப்படும் பொருளையே, 'சாறு' என்ற வேருெரு சொல்லாலும் விளக்கி வந்துள்ளனர் பழந் தமிழர். வீழ்ச்சியற்ற நிலை என்பதனை நிரம்பிய நிலை அல்லது நிறைவு நிலை என்று பிறிதொரு வாய்பாட்டாலும் கூறுதல் உண்டு. நிரம்பிய நிலை புறத்தும் அகத்தும் உள்ளபோது, அதனைச் சான்ருண்மை அல்லது சால்பு என்ற சொல்லால் குறித்தல் மரபாகும். இச் சொற்களின் பகுதி, 'சால்' என்பது ஆகும். பிறிதொரு சொல்லோடோ விகுதியோடோ பொருந்தாது, தனித்து நின்ற போதும் 'சால்' என்பது நிரம்புதல்என்ற பொருளையே தருகின்றது. பானை வகைகளுள் ஒன்று 'சால்' எனப்படுகின்றது. கவலையில் நீர் முகந்து கொணரும் கருவியைக் கவலைச் சால் என்பர். ஏற்றத்தில் நீர் மொள்ளும் கருவியை ஏற்றச்சால் என்பர். அகப்பண்பாலும் புறப்பாங்காலும் நிறைவுற்ற கற்புடைய மகளொருத்தியைச் 'சாலி' அல்லது 'சாலினி' என்று கூறுதல் உண்டு. அங்கெல்லாம் 'சால்' என்ற சொல்லுக்குப் பொருள் 'நிரம்பிய நிலை' என்பதே ஆகும். தெலுங்கு மொழியில், 'சாலு' என்ற சொல் 'போதும்' என்ற பொருளைத் தருகின்றது. 'போதும்' என்ற சொல்லால், தேவை என்று அவாவப்பட்ட பொருளைப் பெற்று நிறைவுற்றமையின், இனி அது வேண்டா என்ற பொருள் அறியப்படுகின்றது.

'யானும் என் எஃகமும் சாறும்' (தொல். சொல். சேனாவரையம் 43 ஆம் நூற்பாவின் உரை) என்னும் தொடரிலும் 'சாறும்' என்னும் சொல் போதும் என்ற பொருளையே தருகின்றது. அச்சொல், 'சால்' என்னும் முதனிலையுடன் 'தும்' என்னும் விகுதி புணர்ந்தமையால் அமைந்த ஒன்ருகும். இந்த எடுத்துக் காட்டுக்களால் 'சால்' என்ற சொல் நிரம்பிய நிலை அல்லது நிறைவு நிலை என்ற பொருளை உணர்த்தவே பயன்பட்டு வருதல் தெரிகின்றது.

இச் 'சால்' என்னும் தனிவினையோடு (Root) 'து' என்னும் சொல் இயைந்து 'சாறு' என்ற வடிவம் அமைந்துள்ளது. இந்த உண்மையைத் தமிழ்மொழியின் புணரிலக்கணத்தின் துணை கொண்டு அறியலாம். 'து' என்ற ஓரெழுத்தொரு மொழிக்கு நுகர்தல் என்பது பொருள் ஆகும். இதனுல், வாழ்க்கைத் தேவைகளை நிரம்பப் பெற்று, அவற்றை நுகர்ந்து இன்புறுவதற்கு, மக்கள், தம் மனம் ஒத்து நிகழ்த்தும் மகிழ்ச்சி நிகழ்ச்சிகளில், தலைமை சான்றது எதுவோ அதுவே 'சாறு' என்ற சொல்லால், விளக்கப்பட்டது என்று அறிதல் வேண்டும். அவ்வாறு கொள்ளின்,

'சாறு' 'விழா' என்பன ஒரே பொருளை விளக்கும் சொற்களாகிவிடுகின்றன.

### பழச்சாறு முதலியன

பழச்சாறு, பனஞ்சாறு, கருப்பஞ்சாறு என்ற தொடர்களில் வரும் 'சாறு' என்னும் சொல்லால் அறியப்படும் பொருள் பழங் காலத்தில் 'சேறு' (மலைபடுகடாம், வரி:137, 513) என்ற சொல்லால் உணரப்பட்டு வந்துள்ளது. பழம் முற்றும் நிரம்பி யுள்ளது எதுவோ, கரும்பு முற்றும் நிரம்பி யுள்ளது எதுவோ அதுவே 'சாறு' என்ற சொல்லில் குறிக்கப்படுகின்றது. அதனால், ஈண்டும் 'சாறு' என்பதற்கு நிரம்பியுள்ளது என்பதே பொருளாக உள்ளமை தெரி கின்றது இதுகாறும் காட்டிய சான்று களால் 'சாறு' என்பதும் 'விழா' என்பதும் நிறைவுநிலை அல்லது வீழ்ச்சியற்றநிலை என்னும் பொருளையே தருகின்றன என்பது தெளிவாகின்றது.

இனிச் சில பெரியோர்கள், கடவு ளரைக் கருதி நிகழ்த்தப்படும் கொண்டாட் டமே 'விழா' என்னும் சொல்லால் குறித் தற்குரியது என்பர். அஃதுண்மையாயின், தன் முனைப்பால், 'அனைத்தினும் உயர்ந்த நிலை தனக்கே உண்டு' என்று செருக்கி மயங்கும் இயல்புடைய மனம் தன்குறைவு நிலை நீங்கி, நிறைவுநிலை பெற, இறைவன் திருவடியில் சென்று வீழ்தல் வேண்டும் என்ற குறிக்கோளுடன், வழிபடு தெய்வத் தைச் சிறப்பாக வணங்கி, ஏனைத் தெய்வங் களைப் பொதுவாக வணங்கி, அறம் பல செய்து, அறிவு பல பெருக்கிப் பண்பு பல வளர்த்து மகிழ்தற்குக் கொண்டாடப்படும் நிகழ்ச்சியே 'விழா' எனக் கூறப்பெற்றது என்று கொள்ளுதல் வேண்டும். பலவகைக் குறைவுகளை மேவித் துன்புறும் மனம், அவற்றினின்று நீங்கித் தன்னை நிறைவு நிலை பெற்று இன்புறுமாறு செய்ய வல்ல இறைவன் திருவடி நீழலில், தான் தாழ்தல் வேண்டும் என்று எண்ணிக் கொண்டாடும் நிகழ்ச்சியே 'சாறு' எனப்பட்டது என்றும் கொள்ளுதல் வேண்டும். கடவுளைக் கருதிச் செய்யப்படும் அனைத்துச் செயல்களிலும் தமிழன் நிறைவுநிலை எய்த முயன்றுள் ளான். தமிழன் கடவுளுக்கென எடுத்த கோயில்களுள், அவன் கலைகளெல்லாம் நிறைவுநிலை (Perfection) பெற்றுள்ளமை அதற்குச் சான்று பகரும் அன்றோ? தமிழன் கடவுளைப் பற்றிப் பாடிய பாடல்களில் (தேவாரம், திவ்வியப் பிரபந்தம்) அவன் உணர்வு, நிறைவுநிலை பெற்றுள்ளமை வெளிப்படையன்றோ? அவனுடைய கடவுள் சார்பான சமய சாத்திரங்களில், அவன் அறிவு, நிறைவுநிலை பெற்றுள்ள மையைச் சொல்லவும் வேண்டுமோ?

### இலக்கிய ஆசிரியர்கள்

இலக்கிய ஆசிரியர்கள் சிலசில இடங் களில் விழவு என்ற சொல்லைத் தக்க அடை மொழியுடன் கூறியுள்ளனர். அந்த உண்மைக்கு, ஒடியா விழவு (அகம் 149) அழியா விழவு (அகம் 115) புலரா விழவு (நற்றிணை 220) பொய்யா விழவு (அகம் 116) மடியா விழவு (புறம் 221) என்பன எடுத்துக் காட்டுக்களாகும். இந்த இடங் களிலெல்லாம் 'விழவு' என்ற செய்யுள் வழக்கச் சொல், தன் உண்மைப் பொருளை உணர்த்தாமல், வாளா ஒரு மகிழ்ச்சி நிகழ்ச்சியைக் குறிப்பதாக நின்றுவிட்டது. அதனால்தான், அச்சொல்லால் உணர்த்தப் படுதற்குரிய உண்மைப் பொருளை, ஆசிரி யர்கள் அச் சொல்லுக்குத் தக்க அடை மொழிகள் தந்து விளக்க நேர்ந்துவிட்டது. ஒடியா, அழியா, புலரா, பொய்யா, மடியா என்னும் அடைமொழிகளை, நிறைவு நிலையை உணர்த்த வந்த எதிர்மறை வாய்பாட்டுச் சொற்களாகவே கொள்ளுதல் தக்கது. 'ஒடியா விழவு' போன்ற தொடர் களுக்குப் பொருள் வகுத்த பெரியோர்கள், 'இடையறு விழா' அல்லது 'நீங்கா விழா' என்று உரை எழுதியுள்ளார்கள். காலத் தொடும், இடத்தொடும் சார்த்தி, 'இடை யறு' என்ற சொல்லுக்குப் பொருள் தெரி யின், குறிப்பிட்ட மூதூரிலோ, பேரூரிலோ எப்பொழுதுமே ஏதோ ஒருவகையான விழா நடந்துகொண்டே யிருக்கும் என்பது பொருளாகின்றது. அச் சொல்லுக்கும் வீழ்ச்சியற்ற நிரம்பிய நிலைபெறக் கருது தலில் தாழாத அல்லது நீங்காத என்று பொருள் கொள்ளுவதே பொருத்தமாகும். 'விழவறு வியலாவணம்' (பட்டினப்பாலை, வரி 158) போன்ற இடங்களிலும் ''விழா வால் நிரம்பிய'' என்றே பொருள்கொள்ள வேண்டிய நிலை ஏற்படுகின்றது.

உரையாசிரியர்கள் 'விழவு' என்ற சொல்லுக்கு 'விழா' என்றே உரை கூறிச் செல்வர். 'விழா' என்ற உண்மைச் சொல் வடிவத்தைக் காட்டிவிட்டால், அதனைக் கொண்டு 'விழவு' என்ற சொல்லின் உண்மைப் பொருளைத் தெரிந்து கொள்ளுதல் எளிது என்று கருதியே, அவர்கள் அவ்வாறு செய்திருத்தல் கூடும்.

### உவமை

பதிற்றுப்பத்தில் எட்டாம்பத்து, தகடூ ரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை மீது அரிசில்கிழாரால் பாடப்பட்டது. அப் பத்தின் இரண்டாம் பாட்டில்,

'அஞ்சாறு புரையும் நின்தொழில்'

என்று இரும்பொறையின் தொழில் சிறப்பிக்கப் பெற்றுள்ளது. "விழாக் காலம் நணியார், சேயார், சிறியார், பெரியார், உடையார், இல்லார், இளையார், முதியார் எல்லார்க்கும் இன்பம் செய்தல்போலச் சேரமானும் எல்லார்க்கும் தன் ஆட்சியால் இன்பம் செய்தலின், 'அம்சாறு புரையும் நின் தொழில்' என்றார்" என்று அப்பகுதிக்கு ஔவை-சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் விளக்கவுரை தந்துள்ளார்கள். இதனாலும் விழாப் பெருநிறைவுடையது என்பது தெரிகின்றது.

ஏழாம்பத்தின் ஐந்தாம் பாட்டில், செல்வக் கடுங்கோ,

'சாறுபடு திருவின் நனைமகி ழானே'

என்று பாராட்டப்பட்டுள்ளான். அரசன் திருவோலக்கம், விழாக்களம்போலக் கண்ணுக்கும் மனத்துக்கும் மற்றப் பொறிகளுக்கும் கவர்ச்சியாக நிரம்பி இருந்தது என்பது பொருள். ஈண்டுக் காட்டிய உவமைகளாலும் விழா என்னும்சொல் நிரம்பியநிலை என்பது புலனாகும்.

### விழவினன்

பதிற்றுப்பத்துக் கடவுள் வாழ்த்துச் செய்யுள் சிவபெருமான்மேல் அமைந்துள்ளது. அப்பாட்டில் சிவன், 'விழவினன்' என்றே சிறப்பிக்கப் பெற்றுள்ளான். விழா என்ற சொல்லுக்குக் குறையாத அதாவது நிரம்பிய நிலை என்று பொருள் கொண்டால், 'விழவினன்' என்ற பெயர்க்கு எல்லா வகையான செல்வமும் இயல்பாகவே பெற்று நிரம்பியவன் என்று பொருள் கொள்வது பொருத்தமாக உள்ளது. செல்வங்களுக்கெல்லாம் அவன் தலைவன் என்ற பொருளையே 'ஐசுவரன்' (ஈஸ்வரன்) என்ற பெயரும் தருகின்றது. செல்வங்கள் யாவற்றுக்கும் தலைவன் என்ற கருத்துப்பற்றியே அவனை 'உடையவன்' என்று தேவாரமும் திருவாசகமும் பாடியுள்ளன. இதனால், வீழ்ச்சி, உயர்ச்சி இவ்விரண்டு நிலைகளுக்கும் இடையே இருந்து, ஊஞ்சலாடும் மக்கள் அவ்விரண்டு நிலைகளும் கடந்து, எல்லாச் செல்வங்களும் பெற்று, இயல்பாகவே நிறைவுநிலையாக உள்ள கடவுளைக் கருதி விழவு அயர்தலும், அவ் விழவுகளை எல்லாம் ஏற்பவனும் அவை தாமேயாயுமுள்ள இறைவனை 'விழவினன்' என்றலும் தகுதிப்பாடுடையதாம்.

### நிரு

வாழ்க்கைத் தேவைகளால் நிறைவு பெற்று, மக்கள் குறிப்பிட்ட ஒருநாளிலோ சில நாட்களிலோ, ஓரிடத்திலோ பலவிடத்திலோ, ஓரூரிலோ பலவூரிலோ, மலையிலோ பிறவிடங்களிலோ கூடி நிகழ்த்தும் விழாவிற்கு அறுவடை விழாக்கள் எடுத்துக் காட்டுக்களாக அமையும். அறுவடை விழாவை 'நிறைவு' என்றே மலையாளத்தில் வழங்கி வருகின்றனர். அவர்கள் நிறைவு என்ற சொல்லை 'நிரு' என்று அவர்கள் ஒலியியலுக்கேற்ப வழங்குகின்றார்கள். அறுவடை முடிந்த பின்னர் இல்லமும் மனமும் நிரம்பிய நிலையை அவ்விழாக் காட்டுகின்றது. தமிழர்கள் கொண்டாடும் பொங்கல் விழாவும் அத்தகையதே. பொங்கல் என்ற சொல்லுக்கு நிறைந்து வழிதல் என்பது பொருளாகும். அதனால், பொங்கல் விழாவினை 'நிறைவு' விழா எனக் கொள்வது தவறாகாது. பிற நாட்டார் இவ் விழாவை அறுவடை விழா என்பர்.

இதுகாறும் நிகழ்த்திய சுருக்கமான ஆராய்ச்சியால், கொண்டாட்டம், விழா என்னும் சொற்கள் தம் பொருளைத் தாமே கூறும் ஆற்றல் பெற்றவைகளாக உள்ளன என்பது தெரிகின்றது. அவை கூறும் பொருள்களின் வன்மை மென்மைகளை அறிஞர்கள் ஆய்ந்து தெளிவாராக.

# சீவக சிந்தாமணிக்கு நச்சினார்க்கினியருரை

[திரு புலவர் 'அரசு']

இவர் தோன்றிய நாள் 25—8—1900. தொடக்கப் பள்ளிப் படிப்பிற்குப் பிறகு 1920-24இல் மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் பயின்று பிரவேச பண்டிதத் தேர்வில் முதல்வராகத்தேர்ந்து 'பதக்கம்' பரிசு பெற்றார். 1924 முதல் செங்கற்பட்டு மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராகப் பணியாற்றத் துவங்கினார். 1928-29 இல் சிதம்பரம் மீனாட்சி போதனா முறைக் கல்லூரியில் பயிற்சி பெற்றார். 1937 இல் சென்னைப் பல்கலைக் கழக வித்து



வான் தேர்வில் தேர்ந்தார். 1952 டிசம்பர் முதல் தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் துணையாசிரியராகப் பெருந்தொண்டு புரிந்து வருகின்றார். இவரால் 1929இல் எழுதப் பெற்ற 'அமர சிங்க விஜயம்' என்னும் புனைவு நூல் 1937 - 38 இல் சென்னைப் பல்கலைக் கழகத்துப் பி. ஏ. வகுப்புக்குப் பாட நூலாக வைக்கப் பெற்றது. இவர் இயற்றிய பல உரை நூல்களும், வரலாற்று நூல்களும் கழகத்தாரால் வெளியிடப் பெற்றுள்ளன. தெள்ளு தமிழ்க் கவிஞருமாவர்.

சிந்தாமணியின் சிறந்த கருத்துக்கள் (சைனக் கொள்கைகளுட்பட) நச்சினார்க்கினியருரை யின்றேல் விளங்கா. உய்த்துணர வேண்டிய உயர்ந்த பொருள்கள் பலவும் எளிதில் விளங்குமாறெடுத்துக் காட்டும் அவர் திறம் பாராட்டற்பாலது. இந்நூற்கேயன்றித் தொல்காப்பியம், கலித்தொகை, பத்துப்பாட்டு முதலான சங்க நூல்கட்கெல்லாம் நச்சினார்க்கினியருரை கைவிளக்காயுள்ளது. எனினும், இவர் தம் கருத்திற்கேற்பவே பெரும்பாலும் நூற்குப் பொருள் கூறும் இயல்பினர் என்று கொள்ளவேண்டியுள்ளது.

தொல்காப்பியம் செய்யுளியலில்,

"அகன்று பொருள்கிடப்பினும்
அணுகிய நிலையினும்
இயன்று பொருள்முடியத்
தந்தன ருரைத்தல்
மாட்டென மொழிப
பாட்டியல் வழக்கின்."

என்னும் (202) சூத்திரத்தை ஆதரவாகக் கொண்டே சீவக சிந்தாமணியிற் சில இடங்களிற் பொருள் கூறுகின்றனர். அவற்றுள் இரண்டொரு சான்றுகள் ஈண்டுக் காட்டப் பெறும்.

க

காந்தருவதத்தையை யாழினால் வென்று மணம்புரியக் கருதிய சீவகன் தன் வளர்ப்புத் தந்தையாகிய கந்துக்கடனிடம் இசைவுபெற்று வருமாறு நண்பனாகிய புத்திசேனனை விடுத்தான். அவன் இது பற்றிக் கந்துக்கடனிடம் உரையாடிக் கொண்டிருக்கையில் அரண்மனையிலிருந்து நாகமாலை யென்பவள் ஒரு பணிமகள் வாயிலாகக் குவளை மலரில் ஓர் ஓலையைப் பொதிந்தனுப்பினாள். அவ்வோலையிலிருந்த செய்தியைக் கந்துக்கடன் படித்துப் பார்த்த பிறகு, புத்திசேனனிடம், 'மேலை நாட்பட்ட தொன்று விளம்புவல் கேளி தென்றான்'.

"ஓலையை அவட்கு நீட்டி
ஒண்மணிக் குழையும் முத்தும்
மாலையும் படுசொல் ஒற்றி
வம்மென மறைய நல்கி
வேலைநெய் பெய்த திங்கள்
விரவிய பெயரி னாற்கு
மேலைநாட் பட்ட தொன்று
விளம்புவல் கேளி தென்றான்." (671)

என்னும் இச் செய்யுளில், "ஓலையை வந்த பெண்ணிடங் கொடுத்து, 'மாலைக்காலத்திற்

படுசொல்லேயும் ஒற்றிவந்து சொல்க' எனக் கூறிக் குழையும் முத்தும் மாலேயும் பரிசாக நல்கிப் புத்திசேனனேப் பார்த்து, 'மேலே நாட்பட்ட தொன்று விளம்புவல்; இது கேள்' என்ருன்" என்றே பொருள் கிடைக்கின்றது.

மேலே நாட்பட்டதாகக் கூறுவது இது தான் :

அநங்கமாலே என்பாள் ஒரு நாடகக் கணிகை. அவள் தான் கற்ற நாட்டியத்தை முதன்முதல் அரசன் திருமுன் அரங்கேற்ற வந்தாள். அதற்குச் சீவகனுஞ் சென்றிருந் தான். அவன் அரங்கிற்கும் நாட்டியத்திற் கும் ஏற்பப் புனேவதில் வல்லனுதலால் அவனே அவளேப் புனேய வேண்டுமென் ருங்குளோர் விழைந்தனர். அவனும் அவளே அணிபெறப் புனேந்தான். அக்காலே அவன் தன் மெய்தீண்டியதாற் களிப்பெய் திய அநங்கமாலே பின்னர் அரங்கில் ஆடும்போது சீவகனேயே காதலுடன் நோக்கியவாறு ஆடினுள். அரசனுன கட்டியங்காரனுக் கிது பொருமைத் தீயை எழுப்பியது. புழுங்கிய அவன் ஆட்டம் முற்றியவுடன் அவளே அரண்மனேக்குக் கொண்டு சென்று, அவள் விருப்பத்திற்கு மாருகவே, காகம் மலரைத் 'தாதுகக் குடைவதேபோல்' துன்புறுத்திக் கூடினுன். அப்போதும் அவள் சீவகனேயே வாய் விட்டுக் கூப்பிட்டரற்றினுள். அதனுற் சீவகன்மேற் கட்டியங்காரன் சீற்றங்கொண் டிருக்கிருன்.

இதனேயே புத்திசேனனுக்குக் கந்துக் கடன் கூறுவதாக அச் செய்யுளில் உள் ளது. கட்டியங்காரன் தலேமையிலே நடை பெறும் யாழ்ப் போரிலே சீவகன் கலந்து கொண்டாற் கட்டியங்காரன் சீற்றத்தையும் அறிந்து நடந்துகொள்ள வேண்டுமென் பதற்காகவே சீவகனுக்கு நண்பனுன இவ னிடம் கந்துக்கடன் இதனேக் கூறுகிருன். நச்சினுர்க்கினியர், "அவன் புத்திசேன னுக்குக் கூறினுனென்று கூறின், புதல் வன் செய்தியைத் தந்தை கூறும் முகத்தாற் கூருது, இடக்கர் முதலிய கூற்ருற் கூறினுகைத் தேவர் கூருரென்றுணர்க." எனக் காரணங் காட்டிவிட்டு, மேலே நாட்பட்ட இதனே அரண்மனேயிலிருந்து வந்த பெண்ணே புத்திசேனனுக்குக் கூறுவதாக அமைக்கின்ருர்.

இதற்காக அவர் 667 முதல் 693 வரை உள்ள செய்யுட்களே ஒரு தொடராக்கு கின்ருர்.

670 ஆஞ் செய்யுளில், 'இதுபட்டது அடிகள் என்ருள்' என்றுள்ளது. 671 ஆஞ் செய்யுளில் 'மேலே நாட் பட்டதொன்று விளம்புவல் கேளிதென்ருன்' என்றுள் ளது நச்சினுர்க்கினியர் இவ்விரண்டு தொடர்களிலும் உள்ள சொற்களே, 'மேலே நாட் பட்டதொன்று விளம்புவல் அடிகள் என்ருள்' என ஒலே கொண்டு வந்தவள் கூற்ருக்குக என்கிருர். 'கேள் இது என் ருன்' என்பதற்குக் கந்துக்கடன் புத்தி சேனனே நோக்கி, 'இவள் கூறும் இதனே நீ கேள்' என்ருன் எனப் பொருளமைக் கின்ருர்.

இதற்காகவே அவர்,

*"இன்னன் என்ன இன்புருன்*
*இழந்தனன் அரசென*
*என்னே வெளவும் வாயில்தான்*
*என்னுஞ் சூழ்ச்சி தன்னுளான்*
*அன்னதால் அரில்தப அறிந்து*
*கூத்தி கூறினுள்*
*இன்னதாற் படையமைத்*
*தெழுமினென் றியம்பினுன்."* (693)

என்னுஞ் செய்யுளில் (693) 'சூழ்ச்சி தன் னுளான்' என்பதன் பின்னர், 'இதுபட்டது அடிகள் என்ருள்' என்று வந்த பணிப் பெண் கூறுவதாக அமைக்க வேண்டும் என்று கூறுகிருர். இவ்வாறு 670 ஆஞ்செய் யுளில் உள்ள சொற்ருெடரை 693 ஆஞ் செய்யுளிலுள்ள சொல்லுடன் மாட்டேற் றிக் கூறும் நச்சினுர்க்கினியருரை வியப் பானதன்ருே ?

இவ்வாறெல்லாம் இடர்ப்பட்டு மாட் டேற்றிப் பொருள்கூற நச்சினுர்க்கினியர் கூறுங் காரணம் புத்திசேனனுக்குக் கந்துக் கடன் நேரிற் கூறத்தகாத இடக்கர்ப் பொருள் கொண்ட செய்தியிது என்பது தான். திருத்தக்கதேவர் இதனேத் தவ றெனக் கருதின் இவ்வாறிடர்ப்பட்டுப் பொருள் செய்யுமாறு அமைக்கமாட்டார். மேலும், அவர் இச் செய்தியை முன்னர்

எங்குங் கூறவில்லை. படிப்போர் அறிய இங்கு விரிவாகவே கூறுகிறார். அம்முறையில் 'மேலைநாட் பட்ட' இதனை அமைத்துக் கொள்ளல் வேண்டுமென்றே தோன்றுகிறது.

மற்றும், முத்தியிலம்பகத்தில் துறவு மேற்கொண்ட விசயை தன் மகன் சீவகனுக் கறிவு கொளுத்துவான் வேண்டி,

*"கற்சிறை யழித்து வெள்ளங்*
*கடற்கவா யாங்குக் கற்றோர்*
*சொற்சிறை யழித்து வேந்தன்*
*துணைமுலை துறத்தல் செல்லான்*
*விற்சிறை கொண்ட போலும்*
*புருவத்து விளங்கு வேற்கண்*
*நற்சிறைப் பட்டு நாடும்*
*நகரமுங் காவல் விட்டான்."* (2612)

எனத் தன் கணவன் 'துணைமுலை துறவாமல்' 'வேற்கண் நற்சிறைப்பட்டு'த் தன்கட் கிடந்ததைக் கூறுவதாக எழுதும் திருத்தக்கதேவர், சீவகன் இயல்பைப் புத்திசேனனிடங் கந்துக்கடன் கூறுவதில் இப்பொருளிருப்பதைத் தவருகக் கொள்ளாரென்றே கொள்ளவேண்டும்.

உ

கேமசரியை மணந்த பின்னர் அவளைப் பிரிந்து செல்லுஞ் சீவகன் தன் செலவிடையே வனகிரியை அண்மினான். அவ் வனகிரிக்கு முன்னர் ஒரு பொழிலும் சுனையும் இருந்தன.

*"கானத்தின் ஏகு கின்றான்*
*கடிபொழிற் கவின்கண் டெய்தி*
*தானத்தி லிருத்த லோடும்*
*தையலா ளொருத்தி தானே*
*வானத்தி னிழிந்து வந்த*
*வானவர் மகளும் ஒப்பாள்*
*நானமும் பூவுஞ் சாந்தும்*
*நாறவந் தருகு நின்றாள்."* (1567)

இச் செய்யுளைப் படிப்போர், "கான்வழி செல்லும் சீவகன் பொழிலின் கவினைக் கண்டு, 'தானம்' ஆகிய முனிவர் இருக்கையிலே இருக்கும்போது, தையலாள் ஒருத்தி அவன் அருகு வந்து நின்றாள்" என்றே பொருள் கொள்வர்.

இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருள் : 'கானத்தின் ஏகுகின்றான்' என்று பெயர் கூறவே, 'வன சரிதன்' என்ற வடமொழிப் பெயரையும், 'தானம்' எனவே 'இருடிகள் உறைவிடம்' என்பதனையும் உணர்த்தின.

(இதன் பொருள்) "சீவகன் கடிபொழிலிலே சென்றிருந்த அளவிலே, வானவர் மகளும் ஒப்பாளாகிய தையலாள் ஒருத்தி, அத் தானத்தில் உறைவானொரு வனசரிதனைக் கண்டு, நானம் முதலிய நாறத் தானே வந்து அருகு நின்றாள் என்க."

"இங்ஙனங் கூறுது சீவகன் கவினைக் கண்டு அவள் எய்தினாளென்று கூறின், மேல் இவற்கு இவள் வேட்கை விளைவித்தலின், இவன் நெஞ்சு தன் தன்மை திரிந்ததனை இவன் தேற்றினான் என்று கூறுவர். அங்ஙனங் கூறவே, மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றினாற் செய்துகொள்ளும் பாவங்களிற் சிறந்த மனத்தாற் செய்துகொள்ளும் பாவமும் சீவகற்கு எய்திற்றாம் ஆதலானும், உழுவலன்போடு தோன்றிய மகளிரிடத்தல்லது இவற்கு வேட்கை நிகழாதென்பது இத் தொடர்நிலைச் செய்யுட்குக் கருத்தாதலானும் அது மாறுபடக் கூறிற்றாமென்றுணர்க."

இவ்வாறு இங்கு இவர் வலிந்து பொருள் கொண்டதனால் மற்றொரு செய்யுளினும் இடர்ப்பட்டுக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ள நேர்ந்துள்ளது. அச் செய்யுள் :

*"குழைகொள் வாண்முகத்துக் கோல்வளையைக்*
*காணான் குழைந்தழு கின்ற*
*அழகன் சொல்லும் அணிசெய்கோதை*
*காமமும் கண்டும் கேட்டும்*
*முழவுத் தோளான் முறுவ*
*லித்தீங் கேயிரு நீயென்*
*றிழையச் சொல்லி யிளையான்*
*இளையானை யெய்தி னானே."* (1593)

இச் செய்யுளுக்கும் முற்செய்யுளுக்கும் இடையேயுள்ள கதைத்தொடர்பின் இன்றியமையா அமைவனைத்து மறிந்தாலன்றி இச் செய்யுளின் பொருள் செவ்விதில் உளங்கொள விளங்காதாகையால் அதனையுஞ் சுருக்கமாக இங்குக் கூறவேண்டியுள்ளது.

நச்சினார்க்கினியர் கருத்துப்படி : சீவகன் முனிவர் இருக்கையிலே யிருந்தான். அழகிய நங்கையொருத்தி வனசரிதனைக் கண்டு, அருகே வந்து, தன் மொழியால் மயக்கி, அவனை வயப்படுத்த முயன்றாள். அவன் காமங்கனிய நின்ற அவளுடைய தோற்றத்தால் திரிந்த நெஞ்சினைத் தன் நிறையிலே நிறுத்தி, அவளுக்கும் புன்புலாலுடம்பின் இழிதகவை எடுத்தியம்பித் திருத்திக்கொண்டிருந்தான். அப்பொழுது, யானை தன் பிடியைப் பிரிந்து மயங்கினாற் போல மயங்கிய, அவள் காதற்கணவன் பவதத்தன் என்பான் அநங்கமாவீணை யென்னும் அவளைத் தேடிக்கொண்டு, காமங்கனற்றுதலாற் பிரிவாற்றாமை தோற்றப் புலம்பிக்கொண்டு வந்தான். அவளைத் தன் காதலியென்றுணராமல், ஓரியக்கியென்றே யெண்ணி அவளைப் பணிந்து, தன் காதலியைத் தருமாறு வேண்டினான்.

—இவ்வாறு வருகின்றது கதை.

'குழைகொள்' என்னுஞ் செய்யுட்கு நச்சினார்க்கினியர் கூறும் விளக்கமும் பொருளும் :—

"தோளான்—இவர்கள் செய்தியைக் கண்டிருந்த சீவகன். இழையச் சொல்லி என்றது, தாமுறைவிடத்தே வந்தார்க்குத் தாம் நுகர்வனவற்றைக் கொடுத்துப்பேணி விடுத்தல் வனசரர்க்கியல்பாதலின், சீவகன் போக்கொருப்பட்டமை கண்டு, அவ்வனசரிதனும், யான் நுகர்வனவற்றை நீயும் நுகர்ந்து, வழிவரல் வருத்தம் தீர்ந்து வருவாயாக என்றாற்கு, அவனும் தனக்கு அவ்வருத்தமின்மையை அவன் மனம் பொருந்தச் சொல்லி என்றவாறு. ஆங்கு உவமவுருபு ஆயினமையின் ஈங்கும் உவம உருபாம் புறநடையால்; இவ்விடத்தேயிரு வென்றது உபசாரமுமாம். சீவகன் அவனை யிங்கே யிருவென்று பொருந்தக் கூறல் அவற்கு இயையாமை யுணர்க."

(இதன் பொருள்) "சீவகன், கோல் வளையைக் காணாஅய் அழுகின்ற பவதத்தன் கூற்றைக் கேட்டும், அநங்கமாவீணை வனசரிதன்மேல் நிகழ்த்தின காமத்தைக் கண்டும் நக்கு, வனசரிதன் உபசாரத்திற்கு இழையச் சொல்லி, அவனை நீ எக்காலமும் இருவென்று கூறி, அவன் பவதத்தனைச் சேர்ந்தான் என்க."

'கானத்தின் ஏகுகின்றான்' என்னும் பாட்டிலிருந்து ஆற்றொழுக்காகச் 'சீவகனே பொழிலின் கவினைக் கண்டு இருத்தலோடும், அநங்கமாவீணை அவன் கவின் கண்டு வந்து தன் காமக்குறிப்புத் தோன்ற அவனை மயக்கியபோது, அவன் பெண்ணலங்கனிந்த அவள் தோற்றத்தால் நிலை கலங்கிய தன் மனத்தை நிறையிலே நிறுத்தி, அவளுக்கும் அறிவுரை கூறினான். அப்போது பவதத்தன் வர, அவன் இவள் மேற்கொண்ட காதலைக் கண்டு மனமிரங்கி, அவனுக்கும் அறிவுறுத்தி இருவரையும் ஒன்று சேர்த்துவிட்டான்' என்று பொருள் கொள்ளுமாறு திருத்தக்கதேவர் அமைத்துள்ளார்.

அதனை மாற்றி அச் செய்யுளில் இவர் செய்த மாற்றத்தினால், இச் செய்யுளிலும், 'இங்கேயிரு நீயென்றிழையச் சொல்லி' என்பதற்கு வனசரிதன் தனக்குச் செய்த உபசாரத்திற்கு நன்றி கூறினான் என்று கூறவேண்டி வந்தது.

நச்சினார்க்கினியர் இங்ஙனம் வலிந்து பொருள் கொள்ளும் — மாட்டேற்றுப் பொருள்கோள் கொள்ளும்—இடங்கள் பல வுள. அவ்வாறு கோடற்குக் காரணம் சீவகனுடைய தலைமைக்கு இழுக்கு நேரத் திருத்தக்கதேவர் கூறார் என்பதொன்றே யாம்.

இவ்வாறெலாமிருப்பினும், நச்சினார்க்கினியருரையின்றேல் நமக்கு இந் நூலின் சிறந்த உட்கிடக்கை தெள்ளிதின் விளங்காதென்பது மறுக்கவொண்ணாதது.

---

# தேவாரமும் ஓர் இலக்கியமே

[பேராசிரியர், திரு. மயிலை. சிவமுத்து]



*மயிலை சிவானந்த முதலியார் அவர்கட்கும் விசாலாட்சி அம்மைக்கும் அருமைத் திருமகனாராக 14-1-1892 இல் இவர் தோன்றினார். பேராசிரியர் மணி, திருநாவுக்கரசு முதலியாரவர்களிடம் தமிழ் பயின்று பெரும்புலவராய்ச் சென்னை முத்தியாலுப் பேட்டை உயர்நிலைப்பள்ளியில் பல்லாண்டுகள் தமிழாசிரியப் பணியாற்றி ஓய்வுபெற்றார். மாநிலத் தமிழாசிரியர் கழகத் துணைத் தலைவர். சென்னை மாணவர் மன்றத் தலைவர். தமிழகப் புலவர் குழுவில் மரபுவழிப் புலவராய அங்கம்வகிப்பவர். குழந்தைகளுக்காகவும், பெரியோர்களுக்காகவும் எளிய—இனிய தமிழ் நடையில் கதை, கவிதை, கட்டுரைகளையும் நூல்களையும் இயற்றித் தந்துள்ளார். இந்தி எதிர்ப்பியக்கத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டுழைத்து வருபவர். குழந்தை இலக்கியப் பணிக்காகச் சென்னை அரசினர் சார்பாகக் கவர்னர் அவர்களால் வெள்ளிக் கேடயம் அளிக்கப் பெற்றுப் பாராட்டப் பெற்றவர். தமிழ்நெறிக் காவலர் என்ற சிறப்புப் பட்டம் பெற்றவர்.*

'தமிழ்மறை' என்றும், 'மூவர் தமிழ்' என்றும் சிறப்பித்துச் சொல்லப்படும் தேவாரத் திருமுறைகளைத் தோத்திர நூலாகக்கொண்டு இறை வழிபாட்டுக்குப் பயன்படுத்துவதைத் தமிழ்மக்கள் அனைவரும் நன்கு அறிவர். இந்தத் தமிழ் மறையைப் பழைய பண்முறைகளுக் கேற்ப இக்கால இன்னிசைகளோடு சைவ மெய்யன்பர்கள் திருக்கோயில்களிலும், பொது மேடைகளிலும் உருக்கத்தோடு பாடி வருவதையும் நாம் நேரில் காண்கின்றோம். எனினும் அந்தத் திருமுறைகளை இலக்கிய நூல்போல் எண்ணிப் பொருளுணர்ந்து படித்து மகிழும் பழக்கத்தினையுடையோர் நம் நாட்டில் மிகவும் அருமையாகவே காணப்படுகின்றனர். தேவாரத் திருமுறைகளில் உள்ள எல்லாப் பாடல்களையும் படித்துப் பொருள் உணர்தல் அரிதாயிருப்பினும் குறைந்த கல்வி அறிவுடைய பொதுமக்களாலும் பொருளுணர்ந்து இன்புறத்தக்க பல பாடல்கள் உள.

"அப்பன் நீ அம்மைநீ அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்னும் முதலடியையுடைய நாவரசர் பாடலையும் "மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு" என்பது போன்ற சம்பந்தர் பாடலையும், "வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்" என்னும் அடியையுடைய சுந்தரர் பாடலையும் எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம்.

சங்க இலக்கியங்களையும் பிற்காலக் காவியங்களையும் கற்று மகிழ விரும்பும் தமிழ் இளைஞர்களுக்கும் இந்தத் தமிழ் மறை ஒரு சிறந்த வழிகாட்டியாக இருத்தலைப் பலர் எண்ணிப் பார்த்துப் பயன் அடைய விழையாமலிருப்பது பெரிதும் வருந்தத்தக்கதே யாகும். சங்க நூல்களிலே காணப்படும் இயற்கை நவிற்சி போன்ற அணிகளும், பிற்காலக் காவியங்களில் காணப்படும் இல்பொருள்உவமை போன்ற அணிகளும் இந்தத் தமிழ்மறையில் பல இடங்களிலும் அமைந்து இருத்தலைத் தமிழ் இளைஞர்கள் படித்துப் பயனடைதல் வேண்டும் என்னும் எண்ணத்தாலேயே இக் கட்டுரை என்னால் எழுதப்படுகிறது.

பத்தாம் நூற்றுண்டினர் என்று ஆராய்ச்சியாளர்களால் கருதப்படும் திருத்தக்கதேவர் இயற்றியுள்ள சீவகசிந்தாமணியில் காணப்படும்,

''காய்மாண்ட தெங்கின் பழம்விழக்
கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி
வருக்கை போழ்ந்து
தேமாங் கனி சிதறிவாழைப்
பழங்கள் சிந்தும்
ஏமாங் கதம்என் றிசை யாற்றிசை
போய துண்டே'' (நாம. பா. உ)

இதே கருத்தினை இவருக்கு முற்காலத்தவர் என்று சொல்லப்படும் ஞான சம்பந்தர், திருவைகாவூர் என்னும் திருப்பதியில் உள்ள இறைவனைப் பாடும் முதற் பதிகத்திலே,

''தாழையிள நீர்முதிய காய்கமுகின்
வீழநிரை தாறுசிதறி
வாழையுதிர் வீழ்கனிகள் ஊறிவயல்
சேறுசெயும் வைகாவிலே''

என்று பாடியிருக்கின்றார்.

யார் எவர் பாடலைப் பார்த்துப் பாடியிருத்தல் கூடும் என்னும் ஆராய்ச்சியில் இங்கே நான் இறங்க விழையவில்லை. எனினும், தேவாரத் திருமுறையிலும் இலக்கியச் சுவை உண்டு என்பதைத் தெரிவிக்கவே இதைத் தமிழ் இளைஞர்களுக்கு நினைப்பூட்டுகிறேன்.

"தென்னை மரத்தில் உள்ள தேங்காய் பழுத்துப் பாக்கு மரத்தின் மீது விழுகிறது. பாக்கு மரத்தில் உள்ள பழுத்த பாக்குக்கள் சிதறி வாழைக் குலையின் மீது விழுகின்றன. வாழைக் குலையில் உள்ள பழுத்த பழங்கள் வயலில் வீழ, இந்த மூவகைப் பழங்களின் சாறுகள் வயலில் உள்ள புழுதியைச் சேறு படுத்துகின்றன'', என்னும் கருத்து இரண்டு பாடல்களிலும் அமைந்திருத்தலைக் கண்டு தமிழ் இளைஞர்கள் இன்புறலாம்.

கம்பநாட்டாழ்வார் என்று சிறப்பித்துச் சொல்லப்படும் கவியரசராய்த் திகழ்ந்த கம்பர் பன்னிரண்டாம் நூற்றாண்டினர் என்பதும், அவர் பிறந்த ஊர் திருவழுந்தூர் என்பதும் ஆராய்ச்சியாளர்கள் பலராலும் ஒப்பமுடிந்த உண்மைச் செய்தியாகும். ஞான சம்பந்தர் காலத்தை ஆராய்ச்சியாளர்கள் ஏழாம் நூற்றாண்டு என்று தக்க ஆதாரங்களுடன் நிலைநாட்டியுள்ளனர். அந்த ஞானசம்பந்தர் கம்பர் பிறந்த ஊராகிய திருவழுந்தூரிலே எழுந்தருளியுள்ள இறைவனைப் பாடும் பத்துப் பதிகங்களுள் இரண்டொன்றைப் படித்துப் பார்த்தல் நலம் என்று நான் எண்ணுகிறேன்.

அவை வருமாறு:

''கடலே றியநஞ் சமுதுண் டவனே
உடலே உயிரே உணர்வே எழிலே
அடலே றுடையாய் அழுந்தை மறையோர்
விடலே தொழுமா மடமே வினையே.''

''தடுமா றுவல்லாய் தலைவா மதியம்
சுடுமா றுவல்லாய் சுடரார் சடையில்
அடுமா றுவல்லாய் அழுந்தை மறையோர்
நெடுமா நகர்கை தொழநின் றனையே.''

கவியரசராய கம்பர் இதே பொருளில் பாடாவிட்டாலும் இதே சந்த அமைப்பில் சீதை அசோக வனத்தில் துயர் ஆற்றாது புலம்புவதாகப் பாடும் பாடல்களுள் இரண்டொன்றை யேனும் ஒப்பிட்டுப் பார்த்து நாம் மகிழ்ச்சியுறலாம்.

அவை வருமாறு:

''கல்லா மதியே! கதிர்வாள் நிலவே
செல்லா இரவே சிறுகா இருளே
எல்லாம் எனையே முனிவீர் நினையா
வில்லா ளனையா தும்விளித் திலிரோ!''

''பேணும் உணர்வே உயிரே பெருநாள்
நாணின் றுழல்வீர் தனிநா யகனைக்
காணும் துணையும் கழிவீர் அலிர்நான்
பூணும் பழியோ டுபொருந் துவதோ.''

பதினோராம் நூற்றாண்டு என்று ஆராய்ச்சியாளர் கூறும் தெய்வச் சேக்கிழார் அடிகளும் எறிபத்த நாயனார் புராணத்தில் இதே சந்த அமைப்பில் எறிபத்த நாயனார் இறைவனை நோக்கி வருந்தும் பகுதியில் ஐந்து பாடல்கள் அமைத்திருக்கின்றார். இரண்டொன்று வருமாறு:

''களியா னையின்ஈர் உரியாய் சிவதா
எளியார் வலியாம் இறைவா சிவதா
அளியார் அடியார் அறிவே சிவதா
தெளிவார் அமுதே சிவதா சிவதா.''

''ஆறும் மதியும் அணியும் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதோ
வேறும் நினைவார் புரம்வெந் தவியச்
சீறும் சிலையாய் சிவதா சிவதா.''

தேவாரத்தில் வரும் பலப்பல சீர் அமைப்புக்களையும், சந்த அமைப்பினையும் சேக்கிழாரும், கம்பரும், பிற ஆசிரியர்களும் எடுத்தாண்டிருப்பதைத் தமிழ் இளைஞர்கள் ஒப்பிட்டுப் பார்த்து மகிழலாம்.

தேவாரத் திருமுறைகளில் காணப் பெறும் அழகிய வர்ணனைகளையும், அரிய கருத்துக்களையும் இந்தச் சிறிய கட்டுரையில் எடுத்துக் காட்டுதல் சிறிதும் இயலாத செயலே ஆகும்.

தேவார ஆசிரியர்கள் தம் பாடல்களில் வெறும் வர்ணனைகளை மட்டும் அமைத்துப் பாடாமல் அந்த வர்ணனையுள்ளும், உள்ளுறை உவமம், இறைச்சி முதலிய தொனிப்பொருள் அமையப் பாடுதலே அவர்கள் இயல்பு. எடுத்துக் காட்டாக ஒன்றைப் பார்க்கலாம். திருமுதுகுன்றக் காட்டில் வாழும் வேடர்கள் மான், மயில் முதலிய உயிர்களைக் கொன்று தின்று வாழ்க்கை நடத்துவார்கள், அவர்கள் பகலெல்லாம் வேட்டையாடித் தம் ஊருக்குத் திரும்பும்போது முதுகுன்றக் கடவுளைத் தொழுது செல்கின்றார்கள். அவர்கள் தொழுவதைக் கண்டு அருகேயிருந்த முல்லைக் கொடி புன்னகை செய்ததாம்.

''கொல்லை வேடர் கூடி நின்று கும்பிட
முல்லை அயலே முறுவல் செய்யும் முதுகுன்றே''
(சம்பந்தர் தேவாரம்)

இந்தக் காலத்திலும் ஒருசில வணிகர்கள் பகல்முழுதும் மக்களை ஏமாற்றி வாணிகம் செய்து மாலையில் முருகனுக்குத் திருவிழாக் கொண்டாடும்போது நாமும் அவர்களைப் பார்த்துப் புன்னகை செய்வது போல அந்த முல்லைக் கொடியும் மாலையில் தன் முல்லை மலரை அரும்பச் செய்தது. அந்த வேடர் தம் அறியாமையை நினைத்து முறுவல் செய்வதாக உட்பொருள் ஒன்றினையும் இந்த ஆசிரியர் அமைத்துப் பாடியிருக்கிறார்.

சங்ககாலக் கருத்துக்களையும் தேவாரத் திருமுறையில் நாம் கண்டு மகிழலாம். எடுத்துக் காட்டாக இரண்டொன்றை மட்டும் இங்கே குறிப்பிடுகிறேன்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்குறள் கருத்துக்களைப் பல இடங்களில் எடுத்தாளுகின்றார்.

அவை வருமாறு :

''பொறிவாயில் இவ்வைந்தினையும் அவிய.''

''பிறவிப் பெருங்கடல் நீந்தி ஏறி.''

''அகரம் முதலின் எழுத்தாகி.''

''உறங்கி விழித்தால் ஒக்கும் பிறவி.''

நாலடியாரின் சொற்றொடர்கள்:

''பை மறித்தியற்றி யன்ன பாங்கிலா வாழ்க்கை.'' (அப்.)

''நல்வாயில் செய்தார் நடந்தார் உடுத்தார்.'' (சுந்.)

''பல்வீழ்ந்து நாத்தளர்ந்து''

''பகடூர் பசி'' (சம்.)

இறவாப் புகழ் படைத்து ஒளிரும் சுப்பிரமணிய பாரதியார் ''அச்சமில்லை அச்சமில்லை'' என்னும் பாடலைப் பாடி நம் நாட்டு மக்களின் அச்சத்தை ஒழித்து நமக்குக் குடியாட்சியை வாங்கித் தந்ததற்குத் துணைபுரிந்தவர் திருநாவுக்கரசரே ஆவர். அவர்தம் திருவதிகை வீரட்டத் தேவாரத்திலே வரும் ''அஞ்சுவது யாதொன்றும் இல்லை, அஞ்ச வருவதும் இல்லை'' என்னும் ஈற்றடிகளை அமைத்துப் பாடியிருத்தலைத் தமிழ் இளைஞர்களுக்கு நான் நினைவூட்டுகின்றேன்.

தேவாரத்தில் ஆங்காங்கே காணப்படும் நயங்களை எல்லாம் சேக்கிழார் தம் திருத்தொண்டர் புராணத்திலே விளக்கிக் கூறியிருத்தலைத் தமிழன்பர்கள் ஒருமுறையேனும் படித்துப் பார்க்கும்படி கேட்டுக்கொள்கிறேன். அன்றியும் இறுதியாக மேலும் இரண்டொன்றுகூறி என் கட்டுரையை முடித்துக் கொள்கிறேன்.

ஃ என்னும் ஆய்த எழுத்தின் அருமை பெருமைகளை உணர்ந்து கொள்ளுதற்குச் சம்பந்தர் பாடியுள்ள ''யாழ்மூரி'' என்னும் மேகராகக் குறிஞ்சிப் பாடலாகிய ''மாதர் மடப்பிடியும்'' என்னும் துவக்கத்தை யுடைய பாடல் பெரிதும் ஆராய்ச்சிக்கு உரியது.

அச்சிறுபாக்கப் பாடலை நான் படிக்கும்போது ''இரண்டுருவாய அடிகள்'' என்னும் அடிக்கு என்ன பொருள் இருக்கும் என்று எண்ணி எண்ணிப் பார்த்தும்

அறிய முடியாதிருந்தேன். அந்த ஊருக்குச் சென்ற போது இரண்டு சிவலிங்கம் ஒன்ருக இருத்தலைக் கண்டு "இங்கே இரண்டு இலிங்கங்கள் ஏன் இருக்கின்றன" என்று கோயில் குருக்களை வினவினேன். அவர் உடனே "இரண்டுருவாய அடிகள்" என்னும் அடியினைப் பாடிக் காட்டினர். சேக்கிழாரைப் போலத் தேவார ஆசிரியர்கள் ஒரு சிறந்த ஆராய்ச்சியாளர் என்பதை இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ளலாம். அன்றியும் ஞானசம்பந்தர் "வாழ்க அந்தணர்" என்னும் அடியினையுடைய பதிகத்தில் ஏழாம் பாடலில் சண்டேசுரர் சரிதையைக் குறிப்பிடும் போது" "படிசேர்ந்த பால்கொண் டங்காட்டிடத் தாதை பண்டு, முடிசேர்ந்த காலை அறவெட்டிட முக்கண் மூர்த்தி, அடிசேர்ந்த வண்ணம் அறிவார்சொலக் கேட்டும் அன்றே" என்று பாடியிருத்தலால் சம்பந்தர் அப்பர் முதலியவர்கள் திருப்பதிகள் தோறும் சென்ற போது அங்கங்கே உள்ள அரிய செய்திகளைக் கேட்டறிந்தும் தம் திருப்பாடல்களில் அமைத்திருக்கின்றனர் என்பது தெரியவருகின்றது.

இத்தகைய உயரிய தமிழ்மறையில் இன்னும் எவ்வளவோ அரிய செய்திகள் அடங்கியிருக்கின்றன. அவைகளை எல்லாம் இளைஞர்கள் ஊன்றிக் கற்றும் ஆய்ந்து பார்த்தும் அகமகிழ்வார்களாக.

---

## தேவாரப் பொழில் வளம்

சோலைகள் இருண்டன, நீண்டன, அழகு வாய்ந்தன, தேன் நிறைந்தன, மலர் நிறைந்தன, குளிர்ந்திருப்பன, நிழல் பயப்பன, நறுமணம் வீசுவன, வானம் அளாவுவன, மதியைத் தாவுவன. மா, பலா முதலிய இனிய கனிகள் நிறைந்தன. சோலைகளில் குயில்கள் கூவும், இசை பாடும்; மயில்கள் ஆலும்; கூகைகள் முரலும்; தென்றல் வீசும்; பழங்கள் விழும்; புன்கு பொரி சொரியும்; பெடையைப் புல்கி மயில் மாநடம் ஆடும்; வண்டு மதுவுண்டு பாடும்; பண் முரலும்; மேகம் தவழும்.

பொழில்கள் அழகு வாய்ந்தன, அன்னந் தங்குவன, இருண்டுள்ளன, கதிர் தோய்வன, கனி நிறைந்தன, குளிர்ந்துள்ளன, கொக்கரவம் உள்ளன, தடங்கொண்டன, தழைந்துள்ளன, தாது உதிர்வன, திடம் பொலிவன, திண்ணியன, தெய்வத் தருக்கள் வளருவன, தென்றல் வீசுவன, தேன் அவிழ்வன, நறுமணம் வீசுவன, நிழலளிப்பன, நீண்டுள்ளன, பரப்புள்ளன, மதிற்புறத்தன, மரங்கள் நெருங்குவன, மலர் நிறைந்தன, மலைச் சாரலில் உள்ளன, வண்டுகள் கெண்டுவன, வளங் கொண்டுள்ளன, வாவிகள் கொண்டன, வான் அளாவுவன, வெயிற்கு இடங்கொடாதன.

பொழில்களில் கிளிகள் அடையும், கோதும்; குயில்கள் கோதும், மிழற்றும். தென்றல் வீசும். நெல் ஆலைகள் விளங்கும்; பலாக்கனி, மாங்கனி முதலிய கனிகள் நெருங்கும்; பொய்கைகள் விளங்கும்; பொறி அரவுகள் (உலவும்) ; மதி தோயும்; மயில், குயில், அன்னம் அணையும்; மயில் ஆலும், பேடையோடாடிக் கூடும்; மீனும் புள்ளும் வாழும்; முதுவேய்கள் முத்து உதிர்க்கும்; முழவு அதிரும்; மேகம் தவழும்; வண்டுகள் கீதம் முரலும், பண்பாடும், யாழ்பாடும்; வண்டு பேடையோடாடும்; விழாக்கள் மல்கும். வேத சந்தங்கள் ஒலிக்கும்.

—"தேவார ஒளிநெறிக் கட்டுரை (சம்பந்தர்)"

# திருக்கோயில்கள்

[வரலாற்றுச் செல்வர், திரு. ஆர். பஞ்சநதம் பிள்ளை]

*திருச்சியில் 2-4-1893 இல் இவர் பிறந்தார். தந்தையார் இராசரத்தினம் பிள்ளை; தாயார் காந்திமதியம்மாள். பள்ளியிலும் தனிப்பட்டோரிடமும் கல்வி பயின்று 1922 இல் தெப்பக்குளம் பிஷப் ஹீபர் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகச் சேர்ந்து தொடர்ந்து 27 ஆண்டுகள் பணியாற்றினர். தமிழாராய்ச்சிக் கழகம், சைவசித்தாந்த சபைகளின் செயலாளராகத் தொண்டாற்றியுள்ளார். சென்னை அறநிலையப் பாதுகாப்புத்துறை ஆதரவில் பல கோயில் வரலாறுகளை எழுதி வெளியிட்டுள்ளார். திருச்சி வானொலி நிலையத்தில் இவர் அவ்வப்போது பேசிய பேச்சுக்களைத் தொகுத்து 'அற்புதக்கனி', 'திருமுருகாற்றுப்படை விளக்கம்' என்னும் நூல்களாக வெளியிட்டுள்ளார். இவர் தொண்டைப் பாராட்டும் வகையில் திருச்சிப் பெருமக்களால் 'வரலாற்றுச் செல்வர்' என்றும், மதுரை ஆதீனத்தாரால் 'புலவர் மாமணி' என்றும், ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடாதிபதி யவர்களால் 'ஆராய்ச்சிமணி' என்றும் பட்டங்கள் வழங்கப் பெற்றுள்ளன.*



முன்னோர்களுடைய பண்பாடுகளை—நாட்டின் நாகரிகங்களை அறிவதற்குரிய கருவிகளாய் அமைந்த சின்னங்களில் சிறந்தனவாய் அமைந்தவை சிற்பமும், ஓவியமும் ஆகும். இவைகளை முன்னோர்கள் கண் எனப் போற்றிக் கடவுள் இயல்புகளையும் சேர்த்துத் தெய்வம் வீற்றிருக்கும் திருக்கோயில்களில் அமைத்து வைத்தார்கள். உலகம் எல்லாவற்றையும் ஆக்கிக் காத்து அழிக்கின்ற—யாவற்றையுங் கடந்த பேராற்றலுடைய ஒரு பரம்பொருள் உண்டென்பதையும், அஃது எல்லாப் பொருள்களையும் இயக்குகிறது என்பதையும் உறுதியாகக் கண்டார்கள். அவ்வுறுதியைப் புலப்படுத்துவதற்கு உறுதியான — திண்மையான கருங் கல்லிலும், பிற உலோகங்களிலும் பல வடிவங்களை அமைத்தார்கள். கோயிலுக்குரிய கோபுரம், விமானம், மண்டபங்கள், தூண்கள் முதலியவைகளை அழகிய சிற்ப வேலைப்பாட்டுடன் அமைத்தார்கள். ஆங்காங்குப் பல ஓவியங்களையும் தீட்டினர்கள். சொற்சிற்பங்களாகிய பல கல்வெட்டுக்களைச் சுவர்களிலும், தூண்களிலும், பிற இடங்களிலும் வெட்டுவித்தார்கள். சிற்றன்னவாசல், தஞ்சைப் பெருவுடையார் கோயில் முதலிய இடங்களில் பழங்காலத்துச் சித்திரங்களைக் காணலாம். எனவே திருக்கோயில்கள் பத்திக்குரிய இடங்களாவதன்றிப் பெருஞ் சிற்பங்கள் நிறைந்த சேகரங்களுமாகும்.

யாவற்றையும் கடந்த பரம்பொருளாகிய இறைவன், உலகத்திலுள்ள பல உயிர்களும் துன்பம் நீங்கி இன்பம் பெற்று உய்யும் வண்ணம் தன் கடந்த நிலையான அருவ நிலையிலிருந்து இறங்கி இப்பூவுலகில் ஆங்காங்குள்ள பல தலங்களில் உருவத் திருமேனி கொண்டு எழுந்தருளியிருந்து பக்தியுடன் வழிபடும் அடியார்களுக்கு அருள்செய்து வருகிறன். அத்தகைய சிறப்பிடங்களே திருக்கோயில்கள் ஆகும். பசுவின் உடல் முழுதும் பால் மறைந்திருந்தபோதிலும் மடியின் மூலமாகவே பால் வெளிப்படுவது போலவும், ஞாயிற்றின் ஒளி எங்கும் பரவியிருந்தபோதிலும் பளிங்குக்கல்லின் (Lens) மூலமே கிரணங்கள் விரைவில் வெளிப்படுவது போலவும், நிலத்துக்கடியில் நீர் இருந்தபோதிலும் தோண்டிய இடத்தில்தானே நீர் தோன்றுவது போலவும் இறைவன் எங்கும் வியாபித்திருந்தபோதிலும், பெரியோர்கள் அமைத்த திருக்கோயில்களில் உள்ள மூர்த்திகளின் மூலமாகவே இறைவன் வெளிப்பட்டு அருள்செய்வான்;

"......மிருஞ்சுரபிக் கெங்கும்,
உருக்காண ஒண்ணுத பால்முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல் வெளிப்பட் டருளுவன்அன்
[பர்க்கே."
(சிவஞானசித்தியார்)

"எங்கும் சிவனிருப்பன் ஆனாலும் ஏசற்ற
சங்கமத்தும் சற்குருவின் தன்னிடத்தும்-லிங்கத்தும்
ஆவினுடம் பெல்லாமும் ஆவரித்து நிற்கினும்பால்
பாவுமுலைக்கண் மிகுதி பார்."
(சிவஞானப் பிரகாச வெண்பா)

மேலும் மின்சார அணுக்கள் நிறைந்த இடம் (Power house) போலத் திருவருள் அணுக்கள் நிறைந்த சிறப்பிடங்கள் ஆகும். செம்பும் கல்லும் மின்சாரத்தை ஈர்ப்பது போலக் கோயில்களில் செம்பு முதலிய உலோகங்களிலும், கல்லிலும் திருவுருவங்களைச் சிற்பங்களுடன் அமைத்தார்கள். எழுத்தின் ஒலிவடி வெழுத்தை உணர்த்துவதற்கு வரிவடி வெழுத்து அமைந்தது போலக் கட்புலனால் காண முடியாத கடவுளைக் காணவைக்கும் சாதனங்களாகக் கோயில்கள் விளங்குகின்றன. இவைகளை நமது முன்னோர்கள் தம் உயிரினும் மேலாகப் பாதுகாத்துப் பின்வழியினராகிய நமக்கு அருஞ்செல்வங்களாக—செல்வன் கழலேத்தும் செல்வமாக வைத்துச் சென்றுர்கள். நாட்டின் நலத்துக்கும், மக்களின் நல்வாழ்வுக்கும் கோயில்கள் இன்றியமையாதன. வாழ்க்கைக் கடலில் அகப்பட்டுத் துன்புறும் மக்களுக்குக் கோயில்கள் கலங்கரை விளக்கங்களாக (Light house) விளங்குகின்றன. "கோயில் விளங்கக் குடிவிளங்கும்," "ஆலயந்தொழுவது சாலவுநன்று" என்பவை ஆன்றோர் கூறிய அனுபவமொழிகளாகும்.

தென்னுடாகிய தமிழ்நாடு மிகுதியான கோயில்களையுடையது. நாட்டை வளப்படுத்தும் ஆறுகளும், சோலைகளும், வாவிகளும் சூழ்ந்து இயற்கைக் காட்சிகளைத் தந்து இன்பம் ஊட்டுகின்றன. வானளாவிய கோபுரங்களும், விமானங்களும் காண்போருக்குத் தூரத்திலிருந்தபடியே தெய்வ உணர்ச்சியைத் தூண்டும் நிலையில் அமைந்துள்ளன. உடலுக்கு உணவுதரும் வயல்கள் அமைந்திருப்பதுபோல உள்ளத்துக்கு உணவாகிய பக்தியை உண்டாக்கும் பாங்குடைய கோயில்கள் பல விளங்குகின்றன. நாட்டின் பல இடங்களிலும் சைவ-வைணவக் கோயில்கள் பல ஆங்காங்கு மிளிர்கின்றன. இவ்வகையில் தென்னுடு தெய்வமணங்கமழும் திருநாடாகத் திகழ்கிறது.

"நோக்கிய இடங்க ளெல்லாம்
நுவலருந் தலங்க ளாகத்
தேக்கிய தீர்த்த மாகச்
சிவலிங்க மூர்த்தி யாக
ஆக்கிய தவத்தா ஞைும்
அடைந்தவர்க் கறமென் ருேதும்
பாக்கிய மாக்கி மேலுய்ப்
பதுமுது சென்னி நாடு."
(மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை)

தென்னுட்டுக் கோயில்களில் தேவார ஆசிரியர்களால் தேவாரப் பாடல்பெற்ற 274 தலங்களும், ஆழ்வார்களால் மங்களாசாசனம் பெற்ற 108 திருப்பதிகளும், அருணகிரியார் திருப்புகழ் பாடிய முருகன் கோயில்களும், பிற கோயில்களுமாகும்; இவைகளில் பஞ்சபூதத்தலங்களும், சப்த விடங்கத் தலங்களும், அட்டவீரத் தலங்களும், பிற கோயில்களும் அடங்கும்.

### கோயில்களின் வளர்ச்சி

ஆதியில் கர்ப்பக்கிரகத்திலிருக்கும் மூர்த்தியும், தலத்திற்குரிய மரமும் இருந்ததாகவும், பிறகு அர்த்தமண்டபம் மகா மண்டபம், திருச்சுற்று, கோபுரம் முதலியன ஏற்பட்டதாகவும் தெரிகிறது. கோயில்கள் முதலில் மரத்தாலும் செங்கல்லாலும் கட்டப்பெற்றன. 6 ஆவது 7 ஆவது நூற்றுண்டில் மகேந்திரவர்ம பல்லவன் மலைகளைக் குடைந்து குகைக்கோயில்களைக் கட்டுவித்தான். இத்தகைய கோயில்கள் திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, திருமெய்யம், திருக்கழுக்குன்றம் முதலிய இடங்களிற் காணலாம். பிற்காலத்தில் சோழர்களும், பாண்டியர்களும், விஜயநகர மன்னர்களும் கோபுரங்கள், மண்டபங்கள், திருச்சுற்று முதலியவைகளைப் பல சிற்பங்களுடன் கட்டுவித்தார்கள். தங்கள் காலத்தில் ஏற்பட்ட பல அறங்களைக் கல்வெட்டுக்களில் அமைத்தார்கள்.

### பிற கோயில்கள்

இறைவன் எழுந்தருளிய கோயில்களைத் தவிரச் சமயப் பெரியோர்கள்—

துறவிகள் வசிக்கும் மடங்களும், சமய நூல்கள் நிறைந்த நூலகங்களும் கோயில்களாகக் கருதப்பட்டன.

### வழிபாட்டு முறை

இயற்கைப் பொருள்களாகிய ஞாயிறு, திங்கள், மலை, கடல், வான், மரம் முதலியவைகளையும், நிலம், நீர் முதலிய ஐம்பூதப் பொருள்களையும் முன்னோர்கள் கடவுளாகப் போற்றி வழிபட்டு வந்தார்கள். இயற்கையோடு இயைந்த நல்வாழ்க்கையை நடத்தி வந்தார்கள்.

*"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி*
*இயமான னாயெறியும் காற்று மாகி*
*அருநிலைய திங்களாய் ஞாயி றாகி*
*ஆகாச மாயட்ட மூர்த்தி யாகி"*

என்றும், "மண்ணாகி விண்ணாகி மலையு மாகி, மறிகடலும் மால்விசும்பும் தானே யாகி" என்றும் இறைவனின் தன்மைகளை ஆன்றோர் அருளியுள்ளார்கள். நாளடைவில் எல்லாம் வல்ல மேம்பட்ட ஆற்றலுடைய பரம்பொருளை அருவுருவமாகிய சிவலிங்க வடிவாகவும், பலவகை உருவத்திருமேனிகளாகவும் கொண்டு தனிக்கோயில்களைக் கட்டுவித்து ஆங்காங்கு வழிபட்டு வரலானார்கள். மனிதர்களே யல்லாமல் மனிதருக்குக் கீழ்ப்பட்ட யானைமுதல் எறும்பு வரையிலுள்ள உயிர்களும் தனித்தனியே வழிபட்டனவாகப் பல கோயில்கள் உள்ளன. யானை, பசு, குரங்கு, பாம்பு, ஈ, முயல், எறும்பு, தவளை, நாரை, மயில் முதலியன வழிபட்டனவாக முறையே திருவானைக்கா, ஆவூர், ஆடுதுறை, சீகாளத்தி, ஈங்கோய்மலை, திருப்பாதிரிப் புலியூர், எறும்பூர், ஊற்றத்தூர், நாரையூர், மாயூரம் முதலிய தலங்கள் பேசப்படுகின்றன.

முப்பொருள்களாகிய பதி—பசு—பாசம் என்னும் மூன்றையும் அறிவிக்கும் இடமாகக் கோயில் உள்ளது. சிவலிங்கமே பதியாகவும், ஏறு பசுவாகவும், பலிபீடம் பாசமாகவும் சொல்லப்படும்.

இத்தகைய கோயில்களுக்கு யாதொரு தீங்கும் நேராமல் பூசைகள் சரிவர நடைபெறவேண்டும். ஏதேனும் முட்டுப்பாடு ஏற்பட்டால் நாட்டுக்கும் மக்களுக்கும் நலன்கள் குன்றும் எனப் பகர்வர்.

இவ்வாறு புறத்தே கோயில்கொண்டு விளங்கும் பெருமான், பத்தியுடன் வழிபடும் அடியார்களின் உள்ளத்தையும் அகக்கோயிலாகக்கொண்டு அருள் செய்வான். "சீரார்பெருந்துறையான் என்னுடைய சிந்தையே ஊராகக்கொண்டான்" என்றும், "காலையும் மாலையும் கைதொழு வார்மனம் ஆலயமாகும்" என்றும், "அன்பர் அகத் தாமரையின் மீதிருக்கும் தெய்வவிளக்கொளியே" என்றும் ஆன்றோர்கள் கூறியுள்ளார்கள். உடம்பை நடமாடுங் கோயிலாகத் திருமூலர் காட்டுகிறார்.

*"உள்ளம் பெருங்கோயில் ஊ னுடம் பாலயம்*
*வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே."*

(திருமந்திரம்)

எனவே புறக்கோயில்களில் வீற்றிருக்கும் இன்பவடிவாகிய இறைவனை அன்பினால் வழிபட்டு அகக்கோயிலாகிய உள்ளத்திற்கொண்டுவந்து இருத்தி இன்பம் பெறுவோமாக.

*"சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய*
*இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே."*

(திருஞானசம்பந்தர்)

---

## சிவன் திருக்கோவிற் சிறப்பு

வழிபாட்டின் பொருட்டு அருவம், அருவுருவம், உருவம் என்னும் முந்நிலையினையும் திருக்கோவிலின்கண் காணலாம். அருவநிலை அம்பலவாணர் எழுந்தருளும் பொன்னம்பலம். அருவுருவநிலை சிவக்கொழுந்து. உருவநிலை கூத்தப்பெருமான். பொன்னம்பலமருவம் பொற்றூண் அருவுருவம், பின்னுருவம் கூத்தப்பிரான் எனப் பேணுவர்.

---

# சேக்கிழார் செய்யுள் திறன்

[கவியரசு, வித்துவான், திரு. கு. நடேச கவுண்டர்]

கோயமுத்தூரில், கொங்கு வேளாளர் குலத்தில் 2-4-1901 இல் இவர் தோன்றினார். தந்தையார் குமாரசாமிக்கவுண்டர்; தாயார் அங்கம்மாள். கோவை, பள்ளபாளையம், பண்டித என். வையாபுரிப் பிள்ளை, பண்டித சி. எஸ். சொக்கலிங்கம் பிள்ளை, சிவவணபுரம், கௌமாரமடம் கந்தசாமிச் சாமியார் ஆகியோரிடம் தமிழைக் கற்றுத் தேர்ந்தார். சிரோமணி அநந்தநாராயண சாத்திரிகளிடம் வடமொழி பயின்றுள்ளார். கோவை நகராட்சி அகநகர் உயர்நிலைப்



பள்ளியில் 26 ஆண்டுகளாகத் தமிழாசிரியராகப் பணியாற்றித் தற்போது பேரூர் சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியின் முதல்வராகத் தமிழ்த் தொண்டாற்றி வருகின்றார். 'மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழ்' 'எட்டிக்குடி முருகன் பிள்ளைத் தமிழ்', 'சாமிநாதன் பிள்ளைத் தமிழ்', 'மயில் விடு தூது' முதலியன இவர் இயற்றிய செய்யுள் நூல்களாம். வடமொழி நூல்கள் சிலவற்றையும் செய்யுள் வடிவில் தமிழில் பெயர்த்துள்ளார்.

"தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல வல்ல பிரானெங்கள்
பாக்கி யப்பய னுப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி யிருத்துவாம்."

(காஞ்சிப் புராணம்)

சிவமணமும் தமிழ்மணமும் ஒருங்கு கமழும் செந்தமிழ்க் காப்பியங்களுள் மிகச் சிறந்தவை திருத்தொண்டர் புராணம், கந்த புராணம், திருவிளையாடற் புராணம் என்பவையாம். இவை மூன்றும் சைவசமயத்திற்கு முக்கண்களை ஒப்பன. இவற்றுள் திருத்தொண்டர் புராணம் அருண்மொழித் தேவர் என்னும் சேக்கிழார் அருளிச் செய்தது. அதன் செய்யுள் திறனைச் சுருங்கிய அளவில் விளங்கக் கூற முயல்கின்றேன்.

## திருத்தொண்டர் புராணத்தின் தோற்றமும் அதன் தெய்விகச் சிறப்பும்

அநபாய சோழ மன்னவன் வெண்குடைத் தண்ணிழலில் மண்ணுலகம் குளிர்ந்து வாழும் காலத்தில் அம் மன்னவனுக்கு அரும்பெறல் அமைச்சராகி அவனுக்குக் கண்ணும் உறுகவசமுமாய்க் காரியம் பார்த்தொழுகி வந்தார் சேக்கிழார். இந் நாளிலும் புறச்சமயத்தோர் சிலர், கல்வி மருத்துவம் முதலிய உதவிகளைச் செய்வதுபோற் காட்டித் தங்கள் சமயத்தைப் பரப்பி வருவதுபோல, அந்நாளிலும் சமணர் செய்து வந்தனர். அவர்கள் தமிழ் மொழிக்குச் செய்த அரும்பெரும் பணிகள் வியந்து பாராட்டத்தக்கனவே யெனினும், சிவநெறியையும் திருத்தொண்டர்களையும் இகழ்ந்து பேசித் தம் புதுமைக் கொள்கையைப் புகுத்துவதே கருத்தாயிருந்தனர். அதற்கு அவர்கள் கைக்கொண்ட வழிகளில் ஒன்று இன்பச்சுவை நிறைந்த காப்பியங்களை இயற்றி மன்பதையோர் மகிழ்ந்து பயிலச் செய்ததாகும். அத்தகைய காப்பியங்களில் ஒன்று செந்தமிழ் வளம் துறுமிய சீவக சிந்தாமணியாகும். சிந்தாமணியின் கதைத் திறத்தினும் செய்யுட்டிறத்தினும் சிந்தையைப் புகுத்தி 'உலகிலுள்ளோர் கற்றுப்' பொழுதுபோக்கினர். அவர்தம் செயலை,

"...சிந்தா மணியை மெய்யென்று
உலகிலுளோர் சிலர்கற்று நெற்குத்துண்ணு
துமிக்குத்திக் கைவருந்திக் கறவை நிற்க
மலடுகறந் துளந்தளர்ந்து குளிர்பூஞ் சோலை
வழியிருக்கக் குழியில்விழுந் தளறு பாய்ந்து
விலைதருமென் கரும்பிருக்க இரும்பை மென்று
விளக்கிருக்க மின்மினித்திக் காய்ந்து நொந்தார்."

எனச் சேக்கிழார் புராணம் ஆக்கினார் கூறியுள்ளார்.

வளவர்பிரான் அநபாயனும் சிந்தாமணியைப் பலவாருகப் பாராட்டிக் கேட்டு வந்தான். அதுகண்ட அமைச்சர்பிரான் அருண்மொழித்தேவர் மன்னனையும் மண்ணவரையும் திருத்திச் செந்நெறி செலுத்தத்திருவுளங்கொண்டு "இளவரசன் றனை" நோக்கி, "சமணர் பொய்ந்நூல் இது, மறுமைக்கும் ஆகாது ; இம்மைக்கும் அற்றே ; வளமருவும் சிவகதை இம்மைக் கும் மறுமைக்கும் உறுதி" எனக் கூறினர். வேந்தன் அதனைக் கேட்டு இம்மையும் மறுமையும் உறுதி பயப்பதாகிய சிவகதை ஏது? அது புதிதோ பழையதோ? அதனை இயற்றினேர் யார்? என்பன வாதியாக வினவவே, அமைச்சர்பிரான், திருத் தொண்டத்தொகை தோன்றியவரலாற்றை யும் திருத்தொண்டர் திருவந்தாதியின் வர லாற்றையும் கூறி, அவற்றுள் கூறப்பட் டுள்ள நாயன்மார்களின் வரலாறுகளை விரித்துக் கூறினர். வளவர்பிரான் கேட்டு மகிழ்ந்து சிவபெருமானது கருணையையும் திருத்தொண்டர்களது பெருமையையும் வியந்து பாராட்டி, 'இவ் வரலாறுகளை ஒரு செந்தமிழ்க் காப்பியமாகப் பாடியருளுக' என வேண்டினன். அவ்வேண்டுகோளுக்கு இசைந்து சேக்கிழார் தில்லை சென்று சிற்றம்பலத்தெங்கள் செல்வனது திருமுன் னிலையில் நின்று தம் கருத்தை விண்ணப் பிக்கவே அச் செல்வன் 'உலகெலாம்' என்று அடியெடுத்துக் கொடுக்க அதனையே முதலாகக் கொண்டு திருத்தொண்டர் புரா ணம் பாடியருளினர். இந்நூலின் அருமை பெருமைகளை உணர்ந்த அநபாய மன்ன னும் அவையோரும் பாராட்டிப் பன்னிரண் டாம் திருமுறையாகக் கொண்டனர் இவ் வரலாறு சேக்கிழார் புராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இதனல் பெரிய புராணத்தின் தெய்விகச் சிறப்பும் தெரிய வரும்.

## திருத்தொண்டர் புராணத்தின் வேறு பெயர்கள்

நம்பியாரூரர் அருளிச்செய்த திருத் தொண்டத்தொகைக்கு வகைநூலாக நம்பி யாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திரு வந்தாதியருளினர். சேக்கிழார் விரித்துப் புராணம் அருளிச்செய்தமையால் அப் புராணம் திருத்தொண்டத் தொகைவிரி எனப் படும். எனினும் பெரியபுராணம் என்னும் பெயரே பெரிதும் பயில வழங்குகின்றது. "பெரியபுராணம்=பெருமையை அறி வுறுக்கும் புராணம். யாவர் பெருமை யென்னும் அவாய்நிலைக்கண் திருத்தொண் டர் பெருமை என்பதுதானே போதரும்" (திராவிடப் பிரகாசிகை). உடையார்களா கிய நாயன்மார்தம் பெருமை உடைமை யாகிய புராணத்தின் மேலேற்றப்பட்டது. "எடுக்கும் மாக்கதை" எனப்போந்தபாயிரச் செய்யுளின்கண் இப் பெயர் குறிப்பாகக் கூறப்பட்டிருத்தலைக் காணலாம். "அளவி லாத பெருமையராகிய—அளவிலாவடியார் புகழ்" கூறலான் பெரியபுராணம் என்ற பெயர் மிகப் பொருந்தியது ஒன்றன்றே !

## பெரியபுராணம் ஒரு பெருங்காப்பியம்

கந்தபுராணம் கம்பராமாயணம் என் பவை போன்று பெருவடிவிற் றன்ருயினும் பெரியபுராணம் ஒரு பெருங்காப்பியமே. பெருங்காப்பியவிலக்கணம் அனைத்தும் பெரியபுராணத்தில் பொருந்தியுள்ளன. வாழ்த்து, தன்னேரில்லாத் தலைவனை யுடைமை, மலைகடல்நாடு, வளநகர் முதலிய வற்றின் வருணனை கூறல், முதலாகக் கூறப்பட்டவையனைத்தும் பெரியபுராணத் தில் ஆங்காங்கு இனிதே அமைந்திருக்கக் காணலாம். அறம் பொருள் இன்பம் வீடு என்ற நாற்பயனும் நன்கு கூறப்பட்டுள் ளன. அவற்றிற்கு எடுத்துக்காட்டுக்கள் ஈண்டு இயம்பப்புகின் கட்டுரை மிக விரி யும். பெரியபுராணத்தில் அறுபத்துமூன்று தனியடியார்கள் ஒன்பதின்மர் தொகையடி யார்கள் வரலாறு கூறப்படுவதால் அஃது தன்னேரில்லாத தலைவன் ஒருவனையே யுடைத்தாதல் யாங்ஙனமெனில் ஏனைய நாயன்மார்கள் வரலாறுகள் இடையே கூறப்படினும் நுணுகி நோக்குவார்க்குப் பெரியபுராணத்தில் சுந்தரமூர்த்தி நாயனர் வரலாறே மணிமாலையிற் பொன்நாண் போற்புகுந்து நிற்றல் புலனகும். புராணத் தின் தொடக்கத்தில் திருமலைச் சருக்கத்தில் உபமன்னியு முனிவர் கூற்றினல் சுந்தரர் வரலாறு தொடங்குகின்றது. "மாதவம் செய்த தென்றிசை வாழ்ந்திடத்—தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரப்—போது வார்" ஆகிய ஆலாலசுந்தரனர் கமலினி

அனிந்திதையார்பாற் காதல் வைத்தமையும் "காதல் இன்பங் கலந்தணைவாய்'' என இறைவன் கட்டளையிட்டதும் "மையல் மானுடனாய் மயங்கும்வழி—ஐயனே தடுத் தாட்கொள்ள வேண்டும்'' என ஆலால சுந்தரனார் அரனை வேண்டி அங்ஙனே வரம் பெற்றதும் ஆலாலசுந்தரர் நம்பியாரூரர் எனத் திருவவதாரம் செய்து தடுத்தாட் கொளப்பெற்றுத் திருத்தொண்டத்தொகை பாடியதுமாகியவை கூறப்பட்டன. பின், நூலின் இடையிடையே ஏயர்கோன் கலிக் காமர், கழறிற்றறிவார் என்னும் நாயன்மார் கள் புராணத்திலே நம்பியாரூரரது வர லாறுகள் பல விரித்துக் கூறப்பட்டு, இறுதி யில் வெள்ளானைச் சருக்கத்தில், அவர், மீண்டும் கயிலையை அடைந்தமை கூறப் பட்டுள்ளது. எனவே நூலில் ஆதிநடு அந்தம் எல்லாம் நம்பியாரூரர் வரலாறே கூறப்படுவதாலும் ஏனைய தொண்டர் வரலாறுகள் இடைநிலையாக ஆங்காங்கு அமைந்திருத்தலாலும் பெரியபுராணத்தின் தன்னேரில்லாத் தனிப்பெருந் தலைவர் நம்பியாரூரரே என்பது தேற்றம்.

இத்தகைய தெய்வக் காப்பியமாகிய பெருந்திரு மாளிகையின் அளத்தற்கரிய வளப்பெருங் காட்சிகளில் ஒரு சிலவற்றின் அழகை நோக்குவாம்.

### கடவுள் வாழ்த்து

பெருங்கோயிலின் முகப்பில் கோபுரம் போலக் காப்பியத்தின் முகப்பில் கவினுற விளங்குவது வாழ்த்து. பெரியபுராணத் தின் வாழ்த்துச் செய்யுளாய் முதலில் விளங்குவது,

*"உலகெ லாமுணர்ந் தோதற் கரியவ*
*னிலவு லாவிய நீர்மலி வேணிய*
*னலகில் சோதிய னம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.''*

இதன் பொருள்: அம்பலத்தின்கண்ணே திருக்கூத்தாடுகின்றவன் உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவனாகவும் அளவு இல்லாத பேரொளிமயனாகவும் நிலவு உலாவுகின்ற நீர்மலிந்த சடையை உடை யவனாகவும் நின்றனன். ஆதலான் அவ னது உலகெலாம் மலர்ந்துள்ள சிலம்படி யினை இக் காவியம் இனிது முடிதற் பொருட்டு வாழ்த்தி வணங்குவாம் என்ற வாறு.

இத் திருப்பாட்டிற்கு அறிஞர்கள் மிகப் பாரித்து உரை கூறுவர். ஒருசில கருத்துக் களை மட்டும் ஈண்டு நாம் உன்னுவாம். உலகெலாம் என்ற சொல், சேக்கிழாருக்கு அம்பலவர் அருளிய முதற்சொல் என்பது முன்னமே கூறினேன். அச் சொல்லை இம் முதற்செய்யுளின் முதலில் அமைத்த தன்றிப் புராணத்தின் நடுவில்,

*"சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்*
*மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்று*
*ஆதி யாரரு ளாதலின் அஞ்செழுத்*
*தோதி யேறினா ருய்ய வுலகெலாம்.''*

எனவும்,

இறுதியில்,

*"என்று மின்பம் பெருகு மியல்பினால்*
*ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட*
*மன்று ளாரடி யாரவர் வான்புகழ்*
*நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம்.''*

எனவும், சேக்கிழார் அமைத்துள்ளமை காண்க.

'உலகு' என்றது ஈண்டு உயிர்களை உணர்த்தும். உயிர்கள்தாம் மலம் ஒன்றே யுடைய விஞ்ஞானகலரும், மலம் கன்மம் என்ற இரண்டும் உடைய பிரளயாகலரும், மலம் கன்மம் மாயை என்ற மூன்றும் உடைய சகலர் என்றும் மூவகைப்படும். ஆதலால் 'உலகெலாம்' என்றார். மூவகை உயிர்களாலும் உணர்ந்தோதற்கரியவன் என்றது சிவத்தின் சிறப்பு இயல்பை (சொருப நிலையை) உணர்த்திய வாறாகும். 'அலகில் சோதியன்' என்றது சிவத்தின் இலய நிலையை—உருவ முதலியனவும் படைப்பாதித்தொழிலும் ஒடுங்கி நின்ற நிலையை உணர்த்தியதாகும். 'நிலவுலாவிய நீர்மலி வேணியன்' என்றது சதாசிவத் திருமேனி கொண்டு ஐந்தொழிலும் நடத்து விக்கும் போகநிலையைக் கூறியதுவாகும். இங்ஙனம் சிறப்பு நிலையிலும் பொது நிலை யிலும் நின்ற முழுமுதற்பொருள் 'அம்பலத் தாடுவான்' ஒருவனேயாகும் என்றும் உணர்த்தினர். அம்பலத்தாடும் எம்பெரு மான் திருவுருவமே அவன் ஐந்தொழிற் கருத்தன் என்பதை இனிது விளக்கும்.

அம்பலம் என்பது இருதய தாமரையில் உள்ள சிதம்பரம் ஆகிய சிற்றம்பலத்தைக் குறிக்கும். அவ்வம்பலத்தின் பெருமையும் அதில் இறைவன் இயற்றும் திருக்கூத்தின் பெருமையும் உபாசனை முறைமையும் வட மொழி வேத உபநிடதங்களிலும் ஆகமங் களிலும், தென்தமிழிற் கோயிற் புராணத் திலும் பாம்பன் குமரகுருதாச சாமிகள் அருளிய தகராலய ரகசியத்திலும் நன்கு அறியலாம். மலர் சிலம்படி என்பதன் முன்னரும் 'உலகெலாம்' என்பதனைக் கூட்டி 'உலகெலாம் மலர்சிலம்படி' எனக் கொண்டு பொருள்கொள்ளப் பணித்தார் மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் — சேக்கிழார் பிள்ளைத்தமிழில். எனவே அத் தொடர் இறைவன் எல்லாவுலகங்களிலும் உடலில் உயிர்போல் கலந்து நிற்கும் முறையை உணர்த்தியதாகும். சிலம்பு என்பது வீரக் கழல். கற்பங்கள்தொறும் கணக்கிலா உயிர் களை மும்மலப் பகை செற்று வீடுபுகுவித்த வீரச் செயலைச் சிலம்பு விளம்பும் "வாழ்த்தி வணங்குவாம்" என்பதால் இனம்பற்றி நினைத்தலும் கொள்ளப்படும்.

இங்ஙனம் இத் திருப்பாட்டின் பொருள் கொள்ளும்போது பெறப்படும் உண்மைகள் சில:—சைவசமயத்திற் கூறப் படும் நெறிகள் நான்கு; அவையாவன சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. இந் நான்கு நெறியினும் வழிபடற்குரிய இறைவன் திருமேனிகள் சகளம், நிட்கள சகளம், நிட்களம், சொருபம் என்பனவாம். இந் நான்கு நெறியினும் நின்று நான்கு திருமேனியினையும் வழிபட்டு நான்கு பயனா கிய சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சி யம் பெற்ற அடியார்கள்தம் வரலாறுகள் இப் புராணத்திற் கூறப்பட்டன என்பது குறிப்பித்தவாறாகும்.

உலகெலாம் மலர்சிலம்படி என்பத னால் உலகம் 'சிவமயம்' என்பதும், அம்பலத் தாடுவான் என்பதனால் அவனையறிந்து வழிபடற்குரிய கோயில் திருச்சிற்றம்பலமே யாகும் என்பதும் தெரிகின்றது. எனவே சைவர்கள் தேவாரமாதி அருட்பனுவல்களை ஓதுமுன்னும் எழுதும் முன்னும் சிவமயம், திருச்சிற்றம்பலம் என ஓதுதற்கும் எழுது தற்கும் உரிய காரணத்தையும் உணரலாம்.

இனி, மங்கல வாழ்த்தாகிய வாயிலைக் கடந்து அகத்தே நுழைந்து சில அழகு காண்போம்.

**பத்திச்சுவை**

ஏனைய காப்பியங்களில் இலங்கும் ஏனைய சுவைகள் எல்லாம் பெரியபுராணத் தின்கண் எழில்பெற அமைந்திருத்தலன்றி அவற்றில் அரிதிற் காணப்படும் பத்திச் சுவை பெரிதும் காணப்படும். அதனா லன்றோ மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் "பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ" எனச் சேக்கிழாரை உள்ள வாறு உவந்து புகழ்ந்தனர். யாமும் ஈண்டு முதலில் இப் புராணத்தில் சொட்டும் பத்திச் சுவைத்தேனை நுகர்வோம்.

பாயிரமாகிய வாயில் கடந்து காவிய மாளிகையினுள் நுழையும்போதே சைவ சாதனங்கள் மூன்றின் முதன்மையதான திருநீற்றின் பேரொளி வீசுகின்றது.

*"பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப்*
*பன்னு நீள்பனி மால்வரைப் பாலது*
*தன்னையார்க்கும் அறிவரியா னென்றும்*
*மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை."*

(திருமலைச் சிறப்பு. க)

பொன்னின்மேல் திருநீறு புனைந்தது போல இமயமலையின்மேல் கயிலைச் சிகரம் விளங்குகின்றதாம். "பனிமால் இமயப் பொருப்பகம் சேர்ந்த பொல்லாக் கருங் காக்கையும் பொன்னிறமாயிருக்கும்" என் றார் அமிதசாகரனாரும். தன்னை யார்க்கும் அறிவதற்கு அரியவன் எனினும் இறை வன் ஆன்மாக்கள் வழிபட்டுய்வதன் பொருட்டுக் கயிலையில் மன்னி வாழ்கின் றானும். அதனால் கயிலையின் "ஊழிதோ றூழிமுற்றும் உயரும்" பண்பும் புலனா கின்றது. இத் திருப்பாட்டு, "பந்தத்தால் வந்தெப்பால் பயின்று நின்ற உம்பர் அப்பாலே சேர்வாய் ஏனோர் கான்பயில் கண முனிவர்களும்—சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின் மங்கை தன்னொடும் சேர்வார் நாள்நாள் நீள்கயிலை" என்ற திருஞான சம்பந்தப் பெருமான் திருவாக்கின் கருத் தைத் தழுவியிருத்தல் காண்க. கயிலைமலை யானது "அண்ணல் வீற்றிருக்கப் பெற்ற தாதலின்........புண்ணியம் திரண்டுள்ளது

போல்வது'' (திருமலைச். 2) என்கின்றார். புண்ணியமே இறைவன் திருவுருவைக் காட்டவல்லது என்பது சான்றோர் முடிபாகும். சங்கராசாரியர் சிவாநந்தலஹரியில் சந்திரனுக்கும் சிவபெருமானுக்கும் சிலேடையாக "ப்ராக்புண்யாசல மார்க்க தர்ஸித சுதா மூர்த்தி :'' என்றார். அதன் பொருள் முன்பு செய்த மலை போன்ற புண்ணியங்களின் வழியே தரிசிக்கப்படுகின்ற அமுதமயமான திருவுருவன் சிவபெருமான் என்பதாகும்.

"மாசி லாத மணிதிகழ் மேனிமேல்—பூசு நீறுபோ லுள்ளும் புனிதர்கள்'' என்று திருக்கூட்டச்சிறப்பு உரைப்பதனால் உருத்திராக்கத்தின் சிறப்பினையும் திருநீற்றின் தூய்மையையும் விளக்கினார். முத்துச் சிவிகையின் சோதியைக் கண்டு "வெண்ணீற்றொளி போற்றி''னார் சம்பந்தர் என்று கூறியதும் ஈண்டு நினைக்கற்பாற்று.

அடுத்து, திருநாட்டுச் சிறப்பின்கண் காவிரியாறு மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் வணங்கும் கண்ணுதல் அன்பர்போற் காட்சியளிக்கின்றது.

*"வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்*
*செம்பொன் வார்கரை யெண்ணில் சிவாலயத்து*
*எம்பி ரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி*
*உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால்.''*

(திருநாட்டுச். 7)

காவிரியின் நீருண்டு வளர்ந்த 'சாலி, நீள்வயலின் ஓங்கி....அரனுக்கு அன்பர் ஆலின சிந்தைபோல'க் கதிர்கள் அலர்ந்து நிற்கின்றன. பின்னர்,

*"பத்தியின் பாலராகிப் பரமனுக் காளாம் அன்பர்*
*தத்தமில் கூடினார்கள் தலையினால் வணங்குமா [போல்*
*மொய்த்த நீள்பத்தியின்பால் முதிர்தலை வணங்கி [மற்றை*
*வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலி [யெல்லாம்.''*

என அன்பர்களின் செய்தியையே நெல் விளைவினுக்கு உவமையாக்கிக் கூறுகின்றார்.

பத்தியின்பால் = அன்பர் பத்திவசத்தினராதல், நெல் வரிசைப்பட்டு இருத்தல் தலையினால் வணங்கல் = அன்பரும் தத்தமில் கூடித் தலையால் வணங்குவர் நெல்லும் அங்ஙனே. அன்பரும் முதிர்தலை வணங்கிச் (சிவ) போகம் விளையப்பெறுவர். நெல்லும் போகம் விளையப்பெறும் எனப் பொதுத் தன்மை காண்க.

திருநகரச் சிறப்பின்கண் ; "தெள்ளும் ஓசைத் திருப்பதிகங்கள் பைங்கிள்ளைபாடுவ கேட்பன பூவைகள்" (திருநகரச். 8) என்று அஃறிணை யுயிர்களும் திருநெறித் தமிழ் பாடுவதைக் காட்டி எம் உள்ளத்தை உருக்குகின்றார் சேக்கிழார். இங்ஙனம் மண்ணும் கல்லும் நீரும் பயிரும் உயிரும் ஆகிய அனைத்தும் சைவமாம் நிலையினைக் காட்டவல்லார்நம் அருண்மொழித்தேவரேயல்லால்மற் றியாவரே !

இனி, இன்பச் சுவையெழ இயம்புகின்ற நிகழ்ச்சிகளிலும் பத்திச்சுவை பாங்காய்ப் பயிலப் பகருவதைக் காண்பாம்.

திருவாரூரில் பூங்கோயில் ஒருவரைப் பூங்கழல் வணங்கப் பாங்கியர் சூழப் பரவையார் போந்தார். புற்றிடங்கொண்டாரைப் போற்றித் திரும்பிய ஆளுடை நம்பி நற்பெரும் பான்மை கூட்ட நங்கை பரவையாரைக் கண்டார்.

*"கற்பகத்தின் பூங்கொம்போ*
*காமன்றன் பெருவாழ்வோ*
*பொற்புடைய புண்ணியத்தின்*
*புண்ணியமோ புயல்சுமந்து*
*விற்குவளை பவளமலர் மதிபூத்த*
*விரைக்கொடியோ*
*அற்புதமோ சிவனருளோ*
*அறியேன்என் றதிசயித்தார்.''*

"பாசமாம் வினைப்பற்றறுப்பான் மிகும் ஆசையே'' கொண்டிருந்த ஆரூரர் தமக்கு அவ்வாசையின் மேலும் ஓர் ஆசையளியா நின்ற பரவையாரின் உருவத்தைக் கண்டு வியக்கும் முறையைப் பார்மின். கற்பகத்தின் பூங்கொம்போ என்பன முதலாக ஐயுற்று அதுவன்று அதுவன்று எனக் கழித்து இறுதியாக யாதென நினைக்கின்றார் ? 'சிவன் அருளோ ?' என. எனவே சிவனருளன்றி ஆரூரரை மயக்கும் ஆற்றல் பிறிதொன்றற்கும் இல்லையென்பது புலனாகுமன்றோ !

பரவையாரது 'அயல் அறியாமனமும்' அண்டர்பிரான் திருவருளால் பண்டை

விதிகடைக்கூட்டக் 'கண்கொள்ளாக்கவின் பொழிந்த திருமேனி கதிர்விரிப்ப விண் கொள்ளாப் பேரொளி'யொடு நின்ற ஆரூரரை எதிர்நோக்கியதால் மயங்கிற்று. அவரும்,

"முன்னேவந் தெதிர்தோன்றும்
முருகனோ பெருகொளியால்
தன்னேரில் மாரனோ
தார்மார்பில் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல்
மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேஎன் மனந் திரித்த
இவன்யாரோ என நினைந்தார்"

இதனால் முருகன் முதலியோரால் பரவையார் மனத்தைத் திரிக்க இயலாமையும் இறைவன் அருள்பெற்ற ஆரூரராலே தான் அது இயன்றது என்பதும் பெறப் படுமன்றோ? இங்ஙனம் காதல் காட்சியினும் கண்ணுதல் அருளைக் கலந்து காட்ட வல்ல கவிஞர் வேறு யார்?

### சேக்கிழார் சொல்திறன்

பெரியபுராணத்தில் பொதிந்துள்ள எண்வகைச் சுவையும் அறமுதலிய நாற் பயனும் பிறவும் தனித்தனியே எடுத்துக் காட்டப்புகின் மிகவிரியும் ஆதலால் பத்திச் சுவையும் இன்பச் சுவையுமே ஒரு சிறிது கூறினேன். இனிச் சேக்கிழாரது கவியின் ஏனைத் திறன் சில கூறுவேன்.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்,

"சொல்லும் பொருளும் நனிசிறப்பச்
சுருங்கச் சொல்லன் முதலாய
தோட்டி யமைய வமங்கலமாஞ்
சொற்கள் புணரா தறக்களைந்து
வெல்லுந் தகைய முரண்காட்டி
விலக்கு விலக விதிதழுவி
விரும்பும் மூல விலக்கியமே
வேறு காதென் றுலகேத்த
...... ... ......... ......
கல்லும்கரையக் கவிபாடுங்
கனிவாய்"

என்று சேக்கிழார் திருவாயைக் கனிவாய்ப் பாடியிருக்கின்றார். அவர் எடுத்துக்கூறிய சிறப்புக்களிற் சிலவற்றினைக் காணுவோம்.

சொல்லும் பொருளும் நனிசிறத்தல்:

"சையமால் வரைபயில் தலைமை சான்றது
செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது
வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறும்
உய்யவே சுரந்தளித் தூட்டு நீரது."
(திருநாட்டுச் சிறப்பு, 3)

இது காவிரியாற்றின் சிறப்புக் கூறுவது. காவிரி என்பது பெண்பாற் பெயராதலால் பெண்மைக்குரிய சிறப்புக்கள் தொனிக்குமாறு இச் செய்யுள் அமைந்துளது. சையமால் வரைபயில் தலைமை சான்றது என்பதால் உயர்குடிப் பிறப்பும் மேலிடத்துப் பழக்கமும் தொனிக்கும். செய்யபூமகட்கு நற்செவிலி போன்றது என்பதால் தன்னால் வளர்க்கப்படும் சோழ நாடாகிய மகளுக்கு அறிவும் ஆசாரமும் கற்பிக்கும் ஆற்றல் பெறப்படும். வையகம் பல்லுயிர் வளர்த்து என்பதால் உண்டியளித்து உடலோம்பல் கூறிற்றாம். சுரந்து என்பதனால் வேண்டியபோது குழந்தைக் குப் பால் பெருகும் தாயன்பின் தன்மை சாற்றினர். அளித்து என்பதனால் சோறேயன்றி இன்றியமையாதன ஏனையவற்றையும் உதவுதல் பெற்றாம். ஊட்டும் என்றதனால் கருணை தெரிகின்றது. நீரது என்ற சொல் இறுதியில் மிக அழகிதாய் விளங்குகின்றது. மேற்கூறிய செயலனைத்தும் காவிரியாறு தன் நீரினாலன்றோ நிகழ்த்துகின்றது? ஆதலால் அச் செயல்களைச் செய்யும் நீரினையுடையது என ஆற்றினுக்குப் பொருளாம். நீரது = நீர்மை, தன்மையையுடையது எனப் பெண்மைக் கேற்பப் பொருளாம். இதுபோலச் சொல்லும் பொருளும் நனிசிறப்பத்தோட்டியமைந்த பாட்டுக்கள் பல பெரியபுராணத்தின்கண் உள்ளன.

சுருங்கச் சொல்லல்: "அணுவைத் துளைத்தேழ்கடலைப் புகுத்திக்குறுகத்தறித்த குறள்" எனத் திருக்குறளினை ஆன்றோர் புகழ்ந்துரைத்தனர். அத்தகைய குறளினையும் குறுக்கிப் பல செய்யுள்களில் சேக்கிழார் சேர்த்திருப்பதனை உன்னிப் பார்த்தால் அறிஞருக்குப் பேருவகையுண்டாகும்.

இதோ காண்மின்! மெய்ப்பொருள் நாயனருடைய மேன்மைகளை விளம்புங் கால், "மலாடர் கோமான்....அன்பர் கருத்

தறிந்து ஏவல் செய்வார்'' என்பதில் ''பணியுமாம் என்றும் பெருமை" என்ற திருக்குறள் காண்கின்றோம்.

'' அரசியல் நெறியின் வந்த
அறநெறி வழாமற் காத்து
வரைநெடுந் தோளால் வென்று
மாற்றலர் முனைகள் மாற்றி
உரைதிறம் பாத நீதி
ஓங்குநீர் மையினின் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையா னன்பர்
வேடமே சிந்தை செய்வார்.''

என்ற திருப்பாட்டில், ஆட்சிமுறையாலே குடிகளை அறநெறியில் வழுவாமற் காத்தலையும், பகைவர்களை வெல்லுதலையும், செங்கோன்முறை தவறாமையையும், உயர்ந்த இயல்பினையும் கூறினர். இதன்கண்,

'' அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.''

என்ற திருக்குறள் உடலில் உயிர்போல நிற்கின்றதன்றோ!

அமங்கலமாம் சொற்கள் புணராமை:

மெய்ப்பொருள் நாயனரை வெல்லும் ஆசைகொண்டு பன்முறை போர்செய்து பரிபவப்பட்டுப்போன முத்திநாதன் அவரது சீலம் அறிந்து அற்றத்தில் வெல்வானகச் ''செப்பரும் நிலைமை எண்ணித் திருக்கோவலூரில் வந்தான்.'' அவன் எண்ணிய அமங்கலச் செய்தியைச் சொல்லுதல் தகாதாகையால் 'செப்பரும் நிலை'யென்றே செப்பினர் சேக்கிழார். பின் நாயனர் அவனை வணங்கும்போது அவன் தன் கவளியில் வைத்திருந்த பத்திரம் எடுத்துச் செய்த பாதகச் செயலைக் குறிக்கும்போதும் "தான்முன் நினைந்த அப்பரிசே செய்தான்" என்றும், நாயனர் ''மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள் எனத்தொழுது வென்றார்" எனவும் மங்கலமாகக் கூறிய அருமைப்பாடு வியத்தற்குரியதாகும். உயிரை இழந்த நாயனர் வென்றார் என்று காட்டியதே வெல்லுந்தகைய முரண்காட்டியதற்குச் சான்றுமாகும். ''பொய்தவ வேடங் கொண்டுபுகுந்தனன் முத்திநாதன்'' என்ற தொடரும் முரணுக்குச் சான்றாகும். எங்ஙனமெனில் முத்திதருவதற்குரிய சிவவேடம் புனைந்து, கண்டார்க்கு அன்பு விளைத்துத் தன் மனத்தினில் கறுப்பு வைத்து 'மைபொதி விளக்'குப்போல் வந்த அவன் வேடம் அவனளவில் தீமையையே விளைத்தது. அதனால் அது 'பொய்தவ வேடம்' ஆயிற்று. முத்திதரும் சிவவேடம் அவனுக்கு நரகந்தருதற்கேதுவாயிற்று; முத்திநாதனும் நரகத்துக்கு அடிமையாயினன் என்றால் இது எத்தகைய முரண் ஆகும்!

இனி, அடியார்களின் அரும்பெருந்தன்மை நன்கு காட்டும் ஆற்றலுடையவர் சேக்கிழார் என்பதற்கு ஒரு சான்று காட்டி நிறுத்துவேனாக.

அங்கத்தைப் பூம்பாவையாக்கிய ஆளுடைய பிள்ளையாரின் திருவுளப் பெருமையைக் கூறும்போது,

'' எண்ணிலாண் டெய்தும் வேதாப்
படைத்தவ ளெழிலின் வெள்ளம்
நண்ணுநான் முகத்தாற் கண்டான்
அவளினு நல்லாள் தன்பால்
புண்ணியப் பதினா றாண்டு
பேர்பெறும் புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ள
மாயிர முகத்தாற் கண்டார்.''

என்று சேக்கிழார் அருளிச்செய்தார். இப்பாட்டின் அருமையை உள்ளுந்தோறும் உள்ளம் களிப்பெய்துகின்றது. பிரமனும் ஒரு பெண்ணைப் படைத்தான். பிள்ளையாரும் ஒரு பெண்ணைப் படைத்தார். பிரமன் எண்ணிலாண்டு எய்திய முதியவனாக இருந்தும் தானே படைத்த பெண்ணின் அழகின் மிகுதியைக் காமத்தால் கண்டான். காமக்கண்ணால் நோக்கும் அவன் எதிர் நிற்க அஞ்சி அவள் சென்ற திசைதொறும் முகங்கொண்டு பார்த்தான் திசைமுகன். ஆனால் ஞானசம்பந்தப் பிள்ளையாரோ எனின் காமம் நுகர்தற்குரிய பதினாறாட்டைப் பிராயத்தவர். பிரமன் படைத்தவளினும் பேரழகு உடையவளைப் படைத்தார். அவளைக் கண்டாரா? அவளது அழகைக் கண்டாரா? இல்லை. பின் யாது கண்டார்? கண்ணுதற் பெருமானது கருணைவெள்ளத்தையே கண்டார். பிரமனைப்போலத் தமக்கு நான்கு முகமில்லையாயினும் தம் ஒரே முகத்தைக்கொண்டு ஆயிரமுகத்தாற் கண்டார். இறைவனது

திருவடி ஞானம் பெற்றுருக்கன்றி யிவ்வற்புத ஆற்றல் வருமா! திருவருளாற்றலைக் காணும் செய்தவம்பிள்ளையார்க்கேயுள்ளது.

அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்து திருவருட்டுணை கொண்டு சேக்கிழார் அருளிய செய்யுட்டிறனில் ஒரு சிறிதே இசைத்தேன். பலப்பல வகையாகச் சேக்கிழார் செய்யுள் திறனை அறிஞர்கள் பகுத்து நுகரலாம். சைவத் தமிழர்கள் அத்தகைய பணியில் ஈடுபட்டுப் பேரின்பம் பெற்று மகிழத் தெய்வ சபாநாதன் திருவருள் புரிக.

"செல்வமலி குன்றத்தூர்ச்
சேக்கிழா ர்டி போற்றி."

---

## சேக்கிழாரடிகளின் தெய்வச் சீர்மை

திருத்தொண்டர் புராணமென்னும் பெரியபுராணம் தொண்டர்சீர்பரவுவாராகிய சேக்கிழாரடிகளால் யாத்தருளப் பெற்ற தமிழ்த் திருமாமறையாகும். அத் திருவருள்நூல் அம்பலவாணர் 'உலகெலாமுணர்ந்து' என அடியெடுத்துக் கொடுக்க அவர் திருமுன் வீற்றிருந்து அருளிச் செய்யப்பட்டதாகும். இஃது அளப்பரிய மெய் வரலாற்று நூலாகும். இந் நூல் செந்தமிழ்ப் பொதுமறையாம் திருக்குறளுக்கு நனிமிகப் பொருந்திய இனியதோரிலக்கியமாகும். அதற்கு வேண்டும் எடுத்துக்காட்டுக்கள் பலவுளவேனும் ஒன்று காட்டுதும்.

"வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்." —திருக்குறள், அடு.

விருந்தோம்புதற் பொருட்டு வித்தினைச் சமைத்த விழுமிய வரலாறு யாண்டுங் காணப்படுவதின்று. ஆனால் இளையான்குடிமாற நாயனுர் திருவரலாறு ஒன்றிற்றான் வித்தினையமுதாக்கினமை காணப்படுகின்றது. அது வித்துமட்டுமன்று; "செல்லல் நீங்கப் பகல் வித்திய செந்நெல், மல்லல் நீர்முளை." அதனை வாரிக்கொண்டு வந்து அமுதாக்குவித்தனர். மேலும், திருக்குறளின்கண் விருந்தோம்பல் ஒன்பதாம் அதிகாரமாகும். இளையான்குடிமாற நாயனுர் திருவரலாற்றின் 'திருப்பாட்டில் வேரித்தாரான் விருந்தெதிர் கொண்டனன்' என்னும் திருப்பாட்டு ஒன்பதாவது திருப்பாட்டாக அமைந்துள்ளது. அது வருமாறு.

"மாரிக் காலத் திரவினில் வைகியோர்
தாரிப் பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித் தில்லம் அடைத்தபின் பண்புற
வேரித் தாரன் விருந்தெதிர் கொண்டனன்." —சஉ · இளையான். க

சேக்கிழாரடிகளின் சீர்சிறப்போர்ந்தே மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள், 'சேக்கிழார் பிள்ளைத் தமிழ்' என்னும் ஓர் அரிய நூலைச் சொற்சுவை பெருக யாத்து அடியுறையாக நல்கியுள்ளார்கள். அதன்கண்ணுள்ள பாட்டொன்று வருமாறு.

சோறு மணக்கு மடங்களெலாந் தூய்மை மணக்குஞ் சிந்தையெலாஞ்
சுவண மணக்கும் ஆடையெலாம் தொங்கல் மணக்குந் தோள்களெலாஞ்
சேறு மணக்குங் கழனியெலாஞ் செல்வ மணக்கு மாடமெலாந்
தென்றல் மணக்கு மேடையெலாம் தெய்வ மணக்குஞ் செய்யுளெலாம்
நீறு மணக்கு நெற்றியெலா நெய்யே மணக்குங் கறிகளெலாம்
நெருப்பு மணக்குங் குண்டமெலாம் நேய மணக்கு வீதியெலாஞ்
சாறு மணக்குங் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ.

---

# அவனன்றி ஓரணுவும் அசையாது

[திரு. N. K. வேலன், பி. ஏ.,]

சேலத்திற்கடுத்த பாகற்பட்டி என்னும் ஊரில் 1907 ஆம் ஆண்டு இவர் தோன்றினர். இவர்தம் பெற்ளேர், செல்வக் குடும்பத்திற் பிறந்து சிறந்தவர்கள். 'எம்மொழியினும் நந்தமிழ் மொழியே சிறந்தது' என்று உலகிற்கு எடுத்துணர்த்திய தமிழறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர் இவர்தம் தாய்மாமன் ஆவார். சேலம் கல்லூரியிலும், சென்னை மாநிலக் கல்லூரியிலும் பயின்று பி.ஏ., பட்டம் பெற்ளுர். தம்முடைய ஓய்வு நேரத்தைத் தமிழ்த் தொண்டிற்காகப் பயன்



படுத்திச் சிறப்புப் பெற்றுவருபவர். அவ்வப்போது சுவையும் எளிமையும் வாய்ந்த நடையில்-இனிய தமிழில் அறிவியற் கட்டுரைகள் எழுதி வருகின்ளுர். இவரியற்றிய 'இயற்கையும் செயற்கையும்' 'மண்ணும் விண்ணும்', 'ஒளியின் கதை', 'அணுவின் கதை', 'காற்றின் கதை', 'சூரியனின் கதை, முதலான நூல்கள் கழகவழி வெளியிடப் பெற்றுள்ளன. அறிவியற் கருத்துக்களை மாணவருளங்கொள எழுதிவரும் இவர் தொண்டு பாராட்டற்குரியது.

உலகில் காணும் சக்திகள் எல்லாம் அணுவின் சக்தியையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. அணுக்களின் அசைவினுல்தான் ஞாயிற்றின் வெப்பமும், சக்தியும் நிலைபெற்று நிற்கின்றன. அணுவிலிருந்து ஞாயிறு பெறும் ஆற்றலில் மிகச்சிறு பகுதியே இவ்வுலகிற்கு வந்து சேர்கின்றது. ஞாயிற்று மண்டிலத்தில் அணுவையும் பிளக்கக் கூடிய மிகப் பெரிய வெப்பம் தாக்குவதால் அங்குள்ள அணுக்கள் தாமாகவே பிளக்கப்படுகின்றன. அணுவின் உட்கருவில் ஏற்படும் மாறுதல்களில் ஞாயிறு மங்கிப்போகாமல் ஒளி வீசுகின்றது. அணுவின்சக்தி ஞாயிற்றினை இயக்கும் அற்புத சக்தியே எனக் கூறலாம்.

நாம் காணும் பொருள்களில் எல்லாம் அணுக்கள் அசைந்து கொண்டும் துடித்துக்கொண்டும் இருக்கின்றன. இந்த அசைவினுல் தான் அணுவிற்குள் ஆற்றல் ஏற்படுகின்றது. "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்றபடி ஒவ்வோரணுவிலும் கூத்தப் பெருமானது தாண்டவம் தான் நடைபெறுகின்றது. அணுவின் உள்ளே காணும் அசைவும் ஆற்றலும் நம் சிற்றறிவிற்கு எட்டாதனவாக இருக்கின்றன. அணுக்கருவின் உள்ளே மிகச் சிறிய துணுக்குகள் காணப்படுகின்றன. இத் துணுக்குகள் ஒரு பெரிய ஆற்றலினுல் கட்டுப்படுத்தப்பட்டுள்ளன.

பொருள்கள் எல்லாம் அணுக்களால் ஆகியவை. ஒரு பொருளை உடைத்து அல்லது வெட்டிச் சிறுசிறு துண்டுகளாகப் பகுத்துக்கொண்டே போனுல் மேலும் பகுக்க முடியாத மிகச் சிறு பகுதியை 'அணு' என்று சொல்கிறேம். அணு என்பது பகுக்க முடியாதது என மக்கள் நம்பி வந்தனர். இக் காலத்தில் அணுவையும் பிளப்பதற்கு வழிகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அணுவின் உட்கருவைப் பிளத்தலினுல் ஏற்படும் ஆற்றலைப் பயன்படுத்தி அணுக்குண்டு செய்யப்படுகின்றது. இரண்டாவது உலகப் போரில் ஜப்பானிய நகரங்களின்மேல் அணுக்குண்டு வீசப்பட்டது. இதனுல் பன்னிரண்டு மைல் சுற்றளவிற்குச் சேதம் ஏற்பட்டது. ஓர் அணுக்குண்டு ஒருநகரத்தையே அழித்துவிடுவதைக் கண்டு உலகம் நடுங்கிப் போயிற்று.

நீரில் அமைந்திருக்கும் 'ஹைட்ரஜன்' அணுதான் மிகச் சிறியது என ஆராய்ச்சியாளர் எண்ணி இருந்தனர். மிகச் சிறிய

ஹைட்ரஜன் அணுவில்கூட ஏறக்குறைய ஆயிரத்து எண்ணூற்று நாற்பது மின் அணுக்கள் இருப்பதாகத் தாம்சன் (Thomson) என்னும் அறிஞர் கண்டு பிடித்தார். அணுவின் உள்ளே இருக்கும் கருவைப் பற்றியும் அதைச் சுற்றிவரும் மின் அணுக்களைப் பற்றியும் அறிஞர்கள் பலர் ஆராய்ச்சி செய்தனர். பூமி ஞாயிற்றினைச் சுற்றி வருவது போன்று மின் அணுக்கள் அணுவின் உட்கருவைச் சுற்றி ஓடிவருகின்றன. அவை நொடிக்கு இருபதாயிரம் மைல் வேகத்தில் ஓடுவதாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றது.

வெளியில் உள்ள மின் அணுக்களின் சக்தியைவிடக் கருவின் உள்ளே இருக்கும் துணுக்குகள் பத்து லட்சம் மடங்கு மிகுந்த ஆற்றல் உடையனவாய் இருக்கின்றன. ஓர் அணுவின் துணுக்கை மற்றொரு துணுக்குடன் மோதும்படி செய்தால் அணு உடைந்து மிகப் பெரிய ஆற்றல் வெளிப்படுகின்றது. நீரின் உள்ளே பதுங்கிக் கிடக்கும் ஹைட்ரஜன் அணு அளவற்ற சக்தியுடையதாக இருக்கின்றது. இதிலிருந்து அணுக்குண்டைவிடப் பன்மடங்கு ஆற்றல் வாய்ந்த 'ஹைட்ரஜன்' குண்டு செய்யப்படுகின்றது.

''அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த" குறளில் கடவுள் வாழ்த்துக்கு அடுத்தபடியாக மழையின் சிறப்பு வைக்கப் பட்டுள்ளது. நீரின்றி உலக வாழ்க்கை நடைபெருது. உணவை உண்டாக்குவதும் உணவாக இருப்பதும் நீர். உலகத்து வாழும் உயிர்களுக்கு நீர் அமிழ்தம் போன்றது. உயிர்களை வாழ வைக்கும் நீரில் அழிக்கும் சக்தியும் நிறைந்திருக்கின்றது. நீரைக் காய்ச்சினுல் ஆவி ஆகின்றது. மேலும் பரிசோதனை செய்து பார்த்தால் அணு அணுவாகப் பிரிந்து போகின்றது. நீர்வளி நிறைந்த பொருள்களை வெடிக்கச் செய்தால் அதிலிருந்து மிகப் பெரிய சக்தி வெளிப்படுகின்றது. ஜப்பானில் போடப்பட்ட அணுக்குண்டைவிட இப்புதிய குண்டு ஆயிரம் மடங்கு அதிகமான சக்தி உடையது எனக் கூறப்படுகின்றது.

அணுவின் சக்தியை அழித்தற் ருெழிலுக்குப் பயன்படுத்துவதைவிட நன்மை பயக்கும் வழிகளில் திருப்பிவிடலாம். பனி மிகுந்த இடங்களில் வெப்பம் மூட்டலாம். பாலைவனங்களைச் செழிக்க வைக்கலாம். தீராத நோய்களைத் தீர்த்துவைக்கலாம். கப்பல்களை இயக்கவும் ஊர்திகளை ஓட்டவும் இவ் அற்புத சக்தியைப் பயன்படுத்தலாம். ஆயிரக் கணக்கான மைல்கள் வானத்தில் பறந்து செல்லலாம். திங்கள் மண்டிலம், செவ்வாய் மண்டிலம் முதலிய வான உலகங்களுக்குப் போவதற்கும் வழிகள் கண்டு பிடிக்கலாம்.

அணுவைப் பற்றிய ஆராய்ச்சி தொடர்ந்து நடைபெறுகின்றது. அறிவியல் அறிஞர்கள் அல்லும் பகலும் ஓயாது உழைத்துப் பல புதிய உண்மைகளைக் கண்டு பிடிக்கின்றனர். பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டுகின்றனர். ஆண்டவன் அருளால் செயற்கரிய செயல்களைச் செய்து முடிக்கின்றனர். நமக்குத் தெரியாத பொருள்கள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன.

வானவெளி எல்லையற்றது. கோடிக் கணக்கான உலகங்களை உடையது. "அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி'' அளிப்பது. வான உலகங்கள் எல்லாம் அணுசக்தியால்தான் சுடர்விட்டு மின்னுகின்றன. அணுவின் அசைவினுல் உலகங்கள் எல்லாம் சுழன்று ஓடுகின்றன. அணுவிற்குள் அணுவாக அமர்ந்து இருக்கும் ஆண்டவனைப் புகழ்ந்து பாடும் தமிழ் மறை.

''அணுவை யார்க்கும் தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத் திகழ்ஒளியைத் தேவர்கள் தங்கோனை'' எனப் போற்றுகின்றது. அணுசக்தியின் அற்புதங்களைக் காணுந்தொறும் காணுந்தொறும் இறைவன்றன் பேராற்றலும் பேரறிவும் வெளிப்படுகின்றன.

# சொல்வன்மை

[திருவாட்டி R. இராஜாமணி அம்மையார்]



தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த சிற்றூர் ஒன்றில் 1906 ஆம் ஆண்டு இவர் தோன்றினர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பயின்று தேர்ந்து தமிழ் பி. ஏ., (ஆனர்சு) பட்டம் பெற்ருர். பின்னர்ச் சென்னை வில்லிங்டன் சீமாட்டி ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் பயிற்சி பெற்று எல். டி., பட்டம் பெற்ருர். 1938 ஆம் ஆண்டிலிருந்து சென்னை மேரியரசியார் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராகத் தூய தமிழ்த் தொண்டாற்றி வருகின்ருர். கற்பாருளங்கொளுமாறு கன்னித் தமிழில் நூல்களைக் கற்பிப்பதில் வல்லவர். விழாக்களிலும் இலக்கியக் கூட்டங்களிலும் கலந்துகொண்டு தமிழர் சமயம், கலை, பண்பாடு ஆகியவற்றை அழகுற விளக்கிச் சொற்பொழிவாற்றி வருகின்ருர். இனிய தமிழில் பயனுள்ள கட்டுரைகள் பல எழுதியுள்ளார். தமிழ் கற்ற பெருமாட்டியாக விளங்கித் தகைசால் பெருமை கொண்டுள்ள இவர் செந்தமிழின் சீருயர்த்தி வருதல் நந்தமிழகத்தின் நற்பேறேயாகும்.

'சொல்வன்மை' என்பது பேச்சுத் திறன் என்று பொருள்படும். இதனைப் பேச்சுக்கலை யெனவுங் கூறலாம். சொல்வன்மையானது எல்லோரிடத்தும் இயல்பாக அமைந்திராது. எனவே பேசுந் திறனற்றவர்களும் முயற்சி செய்தால் சிறந்த பேச்சாளராகத் திகழலாம். இதற்கு வரும் வரலாற்றுக்குறிப்பே சான்ருகும்.

பழங்காலத்தில் டெமஸ்தனீஸ் என்னும் தெற்றுவாயன் ஒருவன் கிரேக்க நாட்டில் வாழ்ந்துவந்தான். தான் பேச்சு வன்மையில் சிறந்து விளங்கவேண்டும் என்பது அவனது பேரவா. எனவே அவன் அன்ருடம் கடற்கரைக்குச் சென்று கூழாங்கற்களை வாயில் அடக்கிக்கொண்டு உரத்த குரலில் பேசிப் பழகினுன். விடா முயற்சியாகிய இப்பயிற்சி வீணுகவில்லை. இறுதியில் அவன் வெற்றி பெற்ருன்.

ஒருவன் பேச்சில் வல்லனுதற்கு, ஆழ்ந்த அறிவு இன்றியமையாதது. அத்தகைய அறிவை அவன் இருவழிகளில் பெறலாம். ஒன்று—சிறந்த அறிஞர்களால் எழுதப்பட்ட நூல்களை ஐயந்திரிபறக் கற்றல். இது கல்வியறிவு எனப்படும். மற்ருென்று, செம்மைசான்ற சொற்பொழிவுகளைச் செவியின் வாயிலாகக் கேட்டு, அறிவைப் பெருக்கிக்கொள்ளுதல் இதனைக் கேள்வியறிவு என்பர். இதன் சிறப்பு நோக்கியே வள்ளுவனுர் 'செல்வத்துட் செல்வம் செவிச்செல்வ மச்செல்வம், செல்வத்து ளெல்லாந் தலை' என்றருளினர்.

ஒருவன் ஒரு பொருளைக் குறித்து ஓர் அவையில் பேசுமுன், அங்கே எந்தப் பொருளைப் பற்றிப் பேசினுல் பயன் உண்டாகும் என்பதைத் தெரிந்து கொள்ளுதல் நலம். பிறகு, அப்பொருளைப் பற்றிய சிறந்த கருத்துக்களைப் பல நூல்களினின்றும் ஒருங்கு திரட்டி, அவற்றை முறைப்படுத்தி ஒழுங்குசெய்து கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் கருத்துக்கள் கோவையாகவும் செவ்வையாகவும் அமையும்.

முதலில் தெரிந்தவற்றையும் எளியவற்றையும் கூறி, பிறகு தெரியாதவற்றையும் நுட்பமானவற்றையும் விளக்கினுல், கேட்போர் எளிதில் புரிந்துகொள்வர். அரிய கருத்துக்களை எளிய முறையில் கூறுதலே சிறப்புடைத்து. மேலும், எந்தப் பொருளைக் குறித்துப் பேசினுலும் அதற்கேற்றவாறு கருத்துக்கள் அமைந்திருத்தலே நல்லது. எடுத்துக் காட்டாக, நீதிமன்றத்தில் வாதாடும் ஒரு வழக்கறிஞரது பேச்சு, சட்டத்தைப் பற்றியதாதல் வேண்

டும். மேடைப் பேச்சாக இருப்பின், அது மக்களுடைய மனத்தைக் கவரத்தக்கதாதல் வேண்டும். எத்தகைய பேச்சாக இருப்பினும் அதில் சொற்செறிவும் பொருட்செறிவும் மிளிர்தல் சிறப்புடைத்து.

ஒவ்வொரு தலைப்பின்கீழும் கருத்துக்களைச் செவ்வையாக வரையறுத்துக் கூறுவதுடன், கூறவேண்டியவற்றை இனிமையாகவும், சுருக்கமாகவும், விளக்கமாகவும் கூறுதல் வேண்டும். அதை விடுத்து, அரைகுறையாகவோ முன்னுக்குப்பின் முரணாகவோ, முன் கூறியதையோ கூறுதல் கூடாது. கேட்போரது மனத்தில் கருத்துக்கள் ஒழுங்காகப் பதியும்போது, இடையில் தொடர்பற்ற கருத்துக்களைக் கூறுவதனால், பதிந்த கருத்துக்கள் சிதறும். அதனால் குழப்பமுண்டாம்.

ஒருவன் பேசும்போது உன்னிக்க வேண்டியவற்றுள் குரல் மிகவும் முக்கியமானது. அவன் தன்னுடைய குரலால் அவையிலுள்ளாரது மனத்தைப் பிணித்துவிடவேண்டும். கூட்டத்தின் அளவுக்கேற்ப, குரலைச் சரிப்படுத்திக்கொள்ள வேண்டும். ஏனெனில், சிறு கூட்டத்தில் உரத்த குரலில் பேசினால் கேட்பதற்கு இனிமையாயிராது. பெருங் கூட்டத்தில் மெல்லிய குரலில் பேசினால் அவையிலுள்ளோருக்கு ஒன்றும் கேளாது. அவர்களே, பேச ஆரம்பித்து விடுவார்கள். சிலர் எழுந்தும் சென்றுவிடுவார்கள். முதலிலிருந்து கடைசிவரையில் ஒரே குரலில் பேசாமல், இடத்திற் கேற்றவாறு குரலை உயர்த்தியும், தாழ்த்தியும், நடுத்தரமாயும் பேசுதல் நலம். இதை ஆங்கிலத்தில் 'Modulation of voice' என்பர். கடைசியிலுள்ளவர்களுக்குக்கூட அவன் பேச்சு விளக்கமாகக் கேட்க வேண்டும். இவ்வித ஏற்றத்தாழ்வுகள் அவ்வச்சுவைகளுக்கேற்ப இருத்தல் சாலச் சிறப்புடைத்து. இல்லையேல் கூட்டத்தில் அமைதியிராது. இராமாயணச் சொற்பொழிவு ஆற்றிக்கொண்டிருந்த ஒருவர், இராமர் காட்டுக்குச் சென்றார், சென்றார் என்று மிகுந்த சீற்றத்துடன் வெடித்த குரலில் கூறினாராம். அவையிலிருந்த ஒருவர் எழுந்து " எங்கள் இராமர் அப்படித்தான் செல்வார்; அதனால் உங்களுக்கு என்னவந்தது?''என ஆத்திரப்பட்டாராம்.

சொற்பொழிவாளர்கள் தலைகுனிந்தபடியே பேசுவதோ, குறிப்பாக ஒருவரையே பார்த்தலோ கூடாது. முன்னையது அவையோருக்கு உல்லங்கன மனப்பான்மையையும், பின்னையது பேச்சாளருக்குத் தடுமாற்றத்தையும் உண்டாக்கலாம். சொற்பொழிவாற்றுகையில் சிறிது நடிப்பு (அபிநயம்) இருப்பதில் குற்றமில்லை.

சொல்வன்மையினால் உலகத்தையே வசப்படுத்திவிடலாம். அதனாலன்றோ தெய்வப்புலமைத் திருவள்ளுவர் 'விரைந்து தொழில் கேட்கும் ஞாலம்' என்றார். 'நாவசைந்தால் நாடசையும்' 'வாயசைந்தால் வையகமசையும்' என்னும் பழமொழிகளும் இதனை வலியுறுத்தும். குறிப்பிட்ட ஒரு சொற்பொழிவினைக் கேளாதவரோ, பகைவரோ, அதனைக் கேளாதது பற்றிக் கழிவிரக்கங் கொள்ளத்தக்க முறையில் அது அமையவேண்டும்.

சொல்வன்மையிற் சிறந்தோர் அக்காலத்திலும், இக் காலத்தும் உள்ளனர். ஷேக்ஸ்பியர் எழுதிய ஜூலியஸ் சீசர் என்னும் நாடகத்தில் ப்ரூடஸ், அந்தோனி முதலியோர்கள் சொல்வன்மையில் மிக்கார். காலஞ்சென்ற திரு. சீனிவாச சாத்திரியார் ஆங்கிலேயரும் வியக்கப் பேச்சாற்றல் பெற்றதாலன்றோ 'The Silver Tongue Orator' என்னும் சிறப்புப் பெயர் பெற்றார்கள்!

பேச்சு மும்முரத்தில் சிலர் காலக் கழிவையே நாடுவதில்லை. சொற்பொழிவு எவ்வளவுதான் சுவையுடையதா யிருப்பினும், நீண்ட நேரம் பேசினால் கேட்போருக்கு அலுப்புத்தட்டிவிடும். எனவே, இன்னும் சிறிதுநேரம் பேசமாட்டார்களா என்று அவையோர் கருதும்போதே பேச்சை முடித்துக் கொள்வதுதான் சிறந்தது. அதற்காகத் திடீரென்று பேச்சை நடுவில் நிறுத்திவிடலாகாது. அதுவரையில் கூறிவந்த கருத்துக்களைத் தொகுத்துக் கூறுவதனாலும், குரல் அடக்கத்திலும், சொற்பொழிவின் முடிவை, அவையோர் அறிந்துகொள்ளுமாறு செய்யலாம். காலவரையறைக்குட்பட்ட பேச்சினை, குறித்த காலத்தில் தொடங்கி, குறித்த காலத்தில் முடிப்பதையே யாவரும் விரும்புவர்.

# கொடிகள் கூறும் விந்தைச் செய்திகள்

[திரு. வல்லை-பாலசுப்பிரமணியம்]

சென்னைமாநகரில் 1903இல் செந்தமிழ் இரத்தினகரம், மருத்துவமணி, வல்லை சண்முக சுந்தர முதலியாருக்கும் சிவபாக்கியம் அம்மையாருக்கும் திருமகனராய் இவர் தோன்றினர். தம்முடைய 18ஆம் அகவையில், 'வேளாளர் தோற்றமும் வரலாறும்' என்னும் ஆராய்ச்சிக் கட்டுரையெழுதிப் பொற்பதக்கப் பரிசில் பெற்ருர். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பயின்று பி. ஏ., பட்டம் பெற்ருர். சென்னை அரசினரின் மொழி பெயர்ப்புத்



துறையில் பணியேற்றுத் தலைமை மொழிபெயர்ப்பாளர், நூற்பதிவாளர் ஆகிய பதவிகள் வகித்து 1958இல் ஓய்வுபெற்ருர். அரசுப்பணியிலிருக்கையில் இந்திய அரசியல் அமைப்பினைத் தமிழில் பெயர்த்து டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை முதலானேரின் பாராட்டுதல்களைப் பெற்ருர். இதுபோது சென்னைப் பல்கலைக் கழக ஆங்கிலத் தமிழகராதியின் துணையாசிரியராகப் பணியாற்றி வருகின்ருர். சென்னை மாணவர் மன்றத் துணைத் தலைவருமாவார்.

ஓங்கிய கம்பத்தின் உச்சியின் மீமிசை கொடியை ஏற்றினல், அது காற்றில் படபடத்து அசையும்போது அதைக் காண்போர் உள்ளங்களில் பற்பல உணர்ச்சிகளைத் தோற்றுவிக்கிறது. நமது நாடு, மொழி, இனம், சமயம், கொள்கை முதலியவற்றிற்குச் சின்னமாக விளங்கும் கொடி கொம்பின் உச்சியில் அசைந்தாடும்போது நம்முடைய உள்ளங்களில் பெருமகிழ்ச்சியையும், கிளர்ச்சியையும் உண்டாக்குகிறது. உண்மையில் ஒரு நாட்டின் கொடி அதன் வெற்றிக்கும், உரிமைக்கும் அடையாளம் அல்லவா? கொடியைத் தாழாமல் வைத்திருப்பதற்காக — கொடிக் கப்பலை (Flag Ship) காக்கும் முயற்சியில்—எண்ணற்ற வீரர்கள் தங்கள் அரிய உயிர்களை இழந்த செய்திகளை வரலாற்றின் ஏடுகள் கூறுகின்றன. அம் முறையில் நம் இந்தியத் தாயின் மணிக்கொடி கொடிமரத்தின் நுனியில் பட்டொளி வீசிப் பறப்பதைக் கண்ணுறும் கவிஞர் பாரதியாரின் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்குகிறது.

கொடி அரைக் கம்பத்தில் பறந்தால் அது அவலச் செய்தியைக் குறிப்பதாகும்.

சாரணர் இயக்கத்திலும் இருப்பூர்தித் தொடர் வண்டிகளை இடர்ப்பாடின்றிச் செலுத்துவதிலும் பலநிறக் கொடிகள் செய்யும் விந்தைகள் கொஞ்சநஞ்சமல்ல. குறித்த ஒரு நிறமுள்ள கொடியை ஒருவிதமாக அசைப்பதனல் சேய்மையிலிருந்தே இவர்கள் தங்கள் கருத்தை மற்றவர்களுக்குத் தெரிவித்துவிடுகிருர்கள். இவ்வாறு கொடிகள் கூறும் செய்திகள் பலப்பல.

மாநகரின் வானளாவிய கட்டிடங்களின்மீது கொடிகள் பறந்துகொண்டிருந்தன. கொடிகளின் அசைவு என்னவோ ஒரு படித்தானதுதான். ஆனல் இருபெரும் கவிஞர்களின் உள்ளங்களில் நேர்மாருன உணர்ச்சிகளை அவை எவ்வாறு எழுப்பின என்னும் விந்தைச் செய்தியினை இனி இக் கட்டுரையில் நாம் காண்போம்.

முதற்கண், கவிஞர் பெருமான் கம்பர் பாடிய இராமாவதாரக் காவியத்தை எடுத்துக்கொள்வோம்.

இராமபிரான் கோசிக முனிவன் வேள்வியைக் காத்து, அகலிகைக்குச் சாப வீடு அளித்து, முனிவனேடும் இளவல் இலக்குவனேடும் மிதிலை நோக்கி வருகிருன். கருங்கடல் பள்ளியில் கலவி நீத்துப் பிரிந்த செந்திருவாகிய சீதை அங்கே சனக மன்னனுக்கு மகளாகத்தோன்றி, இளமைச் செவ்வி எய்தப்பெற்று, இராமன் வருகைக்

காகக் காத்துக்கொண்டிருக்கிருள். மிதிலை யின் மாடமாளிகைகள் கூடகோபுரங்களின் மீது கொடிகள் வானளாவப் பறக்கின்றன. அவைகள் காற்றில் அசைவது எதற்காக வென்று கம்பர் சொல்லுகிருர். மிதிலை மாநகர் செய்த பெருந்தவத்தின் விளை வாகத் திருமகள் செந்தாமரைப் பூவினை விட்டு நீங்கி அந் நகரில் வந்து குடிபுகுந் தாள். "அவளை மணந்துகொள்ளுதறகு விரைவில் வா, வா" எனத் தன் கைகளா கிய கொடிகளை நீட்டி அந் நகரம் இராம னுக்கு வரவேற்பளிக்கின்றதாம். இக் கருத்தினைக் கம்பர் பாட்டினுலேயே தெரிந்துகொள்வது நனி இன்பம் பயப்ப தாகும். இதோ அப் பாடல்:

'மை யறு மலரின் நீங்கி,
யான்செய் மா தவத்தின் வந்து,
செய்யவள் இருந்தாள்' என்று,
செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக்
கடிநகர், கமலச் செங்கண்
ஐயனை, 'ஒல்லைவா' என்று
அழைப்பது போன்றது அம்மா!

[செய்யவள் - இலக்குமி; கமலச் செங்கண் ஐயன் - இராமபிரான்; ஒல்லை - விரைவாக.]

* * * *

அடுத்து, கவித்துறையிலும் காவியத் துறையிலும் கம்பருக்கு வழிகாட்டியாக விளங்கிய இளங்கோவடிகளாரின் சிலம்புக் காவியத்தை எடுத்துக்கொள்வோம்.

சிலப்பதிகாரக் கதை எல்லாருக்கும் தெரிந்ததுதான். கோவலன் கண்ணகியின் அவலக் கதைதானே அது?

எதிரதாக்காக்கும் அறிவின்மையினுல் கோவலன் தன் பெருஞ் செல்வத்தை யெல்லாம் கூடா ஒழுக்கத்திஞல் அழித்துத், தெய்வக் கற்பினளாகிய தன் மனைவி கண்ணகியின் காற்சிலம்பை விற்று முதலாக வைத்து வாணிகம் செய்ய அவ ளுடன் மதுரை மாநகர் நோக்கிச் செல்லு கிருன். "மாடமலி மறுகில் கூடல்," "நான்மாடக் கூடல்," "பாண்டியன் மூதூர்" என்றெல்லாம் புகழ் பெற்ற தல்லவா மதுரை? அந்நகரின் மதில் சுவர்களின் மீது கொடிகள் மேற்காற் றடிக்க அசைகின்றன. அவற்றின் அசைவு எதைத் தெரிவிக்கிறது என்பதை இளங்கோவடிகள் கூறுகிருர்: "கோவ லனே, உனக்கு இந்த ஊரில் அவலம் காத்துக்கொண்டிருக்கிறது. உயிரோடு வருகிற நீ உயிரோடு மீளப்போவதில்லை. ஆகையால் இந்த ஊரில் அடி எடுத்து வைக்காதே. திரும்பிப்போய் விடு" என்று கூறுவதுபோல் அக் கொடிகள் அசை கின்றனவாம்.

போர் உழந்து எடுத்த
ஆரெயில் நெடுங்கொடி
'வாரல்' என்பன போல்
மறித்துக் கைகாட்ட.

என்பன சிலப்பதிகார வரிகள்.

[ஆர்எயில் - அரிய மதில்; வாரல் - வராதே; மறித்து - தடுத்து.]

யான் மேலெடுத்துக் காட்டிய கம்ப ராமாயணப் பாடலும், சிலப்பதிகார வரி களும் தற்குறிப்பேற்றம் என்னும் அணிக்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்கள் ஆகும்.

---

## கொடிச் சிறப்பு

பண்டைநாள் தொட்டு இன்றுகாறும் யாண்டும் நின்று நிலவும் கொடிச் சிறப்பு உளங்கொள உவகை யூட்டுவதாகும். சுருங்கக்கூறின் அறம் பொருள் இன்பங்களின் சிறப்புக்களையும் வீடுபேற்றினையும் விளக்கும் விழுத்திணைக்கருவி கொடியேயாம் அறத்தின்கண் செங்கோன் முறையும் பொருளின்கண் வணிக மும், கொடையும், இன்பத்தின்கண் மணமும் விழாவும், வீடுபேற்றின்கண், வழிபாடும் மெய்யுணர்வும் முதலிய பலவும், குறிப்பானடங்கும். துன்ப நீக்கத்திற் கும் இன்ப ஆக்கத்திற்கும் கொடியொன்றே சீரிய கருவியாகும். இதற்குக் காட் டாக ஒளியினைக் கூறலாம். அவ்வொளி இருளுக்குப் பகையாகித் துன்ப நீக்கத்தை யும், பொருளுக்குத் துணையாகி இன்ப ஆக்கத்தையும் தருகின்ற தன்மை உலகறி யுண்மையேயாம்.

---

# தமிழ் கூறும் நல்லுலகம்

[திரு. தனிநாயக அடிகள்]

இலங்கைத் தமிழ் மரபில் 2-8-1913இல் இவர்தோன்றினார். யாழ்ப்பாணத்திலும், கொழும்பிலும் கல்வி பயின்றார். உரோம் நகரத்திலும், இலண்டனிலும் கற்றுச் சமயத்துறையிலும், ஒப்புமைக் கல்வியிலும் டாக்டர் பட்டங்கள் பெற்றார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தமிழ் எம்.ஏ.,எம்.லிட்., ஆகிய பட்டங்களையும் பெற்றுள்ளார். திருநெல்வேலி மாவட்டத்தில் சில காலம் ஆசிரியராக இருந்த பிறகு 1952 முதல் இலங்கைப் பல்கலைக் கழகத்தின் விரிவுரையாளராகத் தொண்டாற்றி வருகின்றார். உலக முழுவதும் சுற்றியுள்ளார். ஆழ்ந்த ஆராய்ச்சிசேர் அரிய பல நூல்களைத் தமிழிலும் பிற மொழியிலும் இயற்றியுள்ளார். 'தமிழ்ப் பண்பாடு' என்னும் ஆங்கில இதழின் ஆசிரியர் குழுத் தலைவராவார். ஆங்கிலம், இத்தாலி, இலத்தீன் பிரெஞ்சு, ஸ்பானியம், ஜர்மனி, ஆகிய மொழிகளில் சிறந்த தேர்ச்சியும், போர்த்துகீசியம், ஹீப்ரு, கிரேக்கம்,வடமொழி, சிங்களம், உருசியம் ஆகிய மொழிகளில் ஓரளவுக்குப் புலமையுமுடையவர்.



வெளிநாடுகளில் தமிழ் ஆராய்ச்சித் துறையில் பணியாற்றுவதற்குத் தமிழறிஞர்களுக்குக் கணக்கற்ற வாய்ப்புக்கள் உள. கீழ்த்திசை நாடுகளில் தமிழ்ப் பண்பாடு மிகவும் பழைமையான காலத்திலேயே பரவியது. சாவகம், சுமத்திரா போன்ற இடங்களுக்கு, இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்னரேயே தமிழ்மக்கள் குடியேறி இருக்கவேண்டுமென்பது கெல்டேற்ன் போன்ற அறிஞர்களின் கருத்து. தமிழ் நாட்டிலிருந்து மரக்கலங்கள் பண்டு அந் நாடுகளுக்குச் சென்று வணிகம் நடத்தியன என்றும், அவ்வணிகம் நிலைபெற்று நீண்ட நாள் நடந்தது என்றும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர் இன்றும் சுமத்திராவில் வாழ்ந்துவரும் காரோ பட்டாக் வகுப்பினரின் உட்பிரிவினராக விருக்கும் சிம்பீரிங் என்பார் தங்களைச் சோழர், சேரர், பாண்டியர், கலிங்கர் என்று வகுத்துக்கொண்டிருக்கின்றனர்.

சாவகத்தில் எழுப்பப் பெற்றிருக்கும் "பிரம்பானன்", எனும் கோயில் சைவ சித்தாந்தத் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்ட கோயில் என்பர். அதே போன்று "திசாங்", சமவெளியில் உள்ள கோயில்கள் பலவும், "பனத்தரான்", எனும் கோயிலும் திராவிட தென்னிந்திய மக்களின் கட்டடக்கலையை ஒட்டி அமைக்கப் பெற்றவை.

இந்தோனேசியா மொழியில் வழங்கும் சொற்கள் பல, அம்மக்கள் தமிழ்நாட்டுடன் கொண்ட வணிகத் தொடர்பைக் குறிப்பன. எடுத்துக் காட்டாக, கப்பலைக் 'கபல்' என்கின்றனர். வேறு சில சொற்கள்: வாடை, சுக்கு, இஞ்சி, கஞ்சி, கொத்து மல்லி, குதிரை, கூடை, பெட்டி, பிட்டு போன்றவை. தாலி என்ற சொல்லைக் கொடி என்ற பொருளிலும் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

பாலித் தீவில் இந்து சமயக் கோயில்கள் பல உள. அங்கிருக்கும் ஓரிடத்திற்குக் 'கபல்' என்று பெயர். அவ்விடத்தில் தமிழ்நாட்டுக் கப்பல் ஒன்று கரையில் மோதுண்டு உடைந்ததாகக் கூறுவர். பொதுவாகத் தென்கிழக்குத்திசை நாடுகளின் இசையும், நாட்டியமும், நிழற்கூத்தும் இந்தியக் கலைகளுடன் தொடர்புடையன வென்று கருதுவதற்கு இடமுண்டு ஆயினும் இத்துறைகளில் ஆய்வு நிகழ்த்துவதற்கு நம்மவர் தென்கிழக்குத் திசைமொழிகளை அறிவதுடன், நன்றாகப் பிரஞ்சுமொழியையும் டச்சுமொழியையும்

பயின்றிருத்தல் வேண்டும். சேடிசு, கேண் போன்றவர்கள் எழுதிய நூல்களிலிருந்து நம்மவரும் பல வரலாற்றுண்மைகளை அறிதல் கூடும்.

இதுகாறும் நம் அறிஞர்கள் இவ்வா ராய்ச்சிகளை நிகழ்த்துவதற்குத் தென்கீழ்த் திசை நாடுகளுக்குச் சென்றிலர். அவர்கள் செல்லாது இருக்கும் தறுவாயில் ஒருசில தொடர்புக் குறிப்புக்களையே நாம் பொது வாகக் கூறிக்கொண்டு வருதல் கூடும். மலேயா போன்ற இடங்களில் தமிழரின் வழிபடுந் தெய்வங்களின் சிலைகளும், பண்டு தமிழ் பேசும் மக்கள் அமைத்த கோவில்களும் உள. ஆயினும் மலேயா வைக் கடந்து கம்போதையா வியட்னும் போன்ற இடங்களுக்குச் சென்றால் அங்கு நாம்காணும் தமிழரின் சின்னங்கள் பெரு வியப்பைத் தருகின்றன.

வியட்னுமின் துாானில் இருக்கும் பழம் பொருட் சாலையில் உள்ள நந்திகளைப் போல் அழகு வாய்ந்த நந்திகளைத் தமிழ் நாட்டில் நான் கண்டிலேன். மேலும் வியட்னுமின் பல பாகங்களில் சிவலிங்கம் அமைத்த கோயில்கள் பல உள்ளன. மரங் களும் செடிகளும் அவற்றின் சுவர்களின் மேல் வளர்ந்தும் படர்ந்தும் வருகின்றன. அந்நாட்டின் ஒருபகுதி சம்பா என்றே அழைக்கப் பெற்றது. சம்பாவில் வாழ்ந்து வரும் சாம்பரின் வரலாற்றைத் தமிழறி ஞர்கள் படித்தல் வேண்டும். வியட்னு மிற்கு அண்மையில் இருக்கும் அம்கோர் வாட். அம்கொர்தொம் எனும் பெரு நகரின் கட்டிடங்கள். கிமேர் (Khmers) எனும் இனத்தவரால் ஒன்பது பத்தாவது நூற்றுண்டுகளில் சிறப்புற எழுப்பப் பெற்ற முகில்களை வருடும் கட்டிடங்கள். அங்குச் சுவர்கள்மீது செதுக்கப்பெற்றிருக் கும் மகாபாரதம், இராமாயணம் முதலிய வரலாற்றுச் செய்திகள் இவை யாவையும் இதுகாறும் தமிழ் அறிஞர்கள் பார்வை யிட்டனர் அல்லர். அங்குள்ள கட்டிடங் கள் பல, அகத்தியர், கணபதியின் சிலைகள் பல, யானையின் உருவங்கள் பல பல்லவரினுடைய கட்டிடச் சிற்ப முறை களைக் காட்டுவன.

கிமேர் இனத்தாரின் அரசரின் பெயர் களும் வர்மன் என்ற விகுதியைக் கொண் டவை. ''அம்கோர்'' என்ற சொல்லும் ''நகர்'' என்ற திராவிடச் சொல்லின் திரி பாகும்.

கம்போதியாவின் அரண்மனையில் நடைபெற்று வந்த நாட்டியக்கலை பரத நாட்டியக் கலையுடன் ஒப்பிட்டுப் பார்க்கத் தக்கது. தாய்லாந்தில் சிறப்பாகத் தமிழ்ப் பாக்களைத் தாய் மன்னரின் முடிசூட்டு விழா வில் பாடிவருகின்றனர் என்பதை இன்று தமிழர்கள் சிலரேனும் அறிவர். பேங்காக் மா நகருக்குச் சென்றிருந்தபொழுது இந்து சமயப் பிராமணர் என்பவர் இருக்கும் கோவில்களைப் பார்க்கச் சென்றேன். அங்கு அவர்களுடைய ஏடுகளிலிருந்து, தம் மன் னரின் முடிசூட்டு விழாவில் பாடிவரும் செய்யுட்களை அவர்கள் பாடியபொழுது தமிழ் என்று அறியாது பாடும் ''ஆதியும் அந்தமும்.......சோதியை'' எனும் திருவெம் பாவைப் பாட்டைக் கேட்டுப் பெரு வியப்பு எய்தினேன்.

திருப்பாவை, திருவெம்பாவைத் திரு நாட்களைப் பண்டு மிகவும் சிறப்பாகக் கொண்டாடி வந்தனர் தைநாட்டு மக்கள். அக்கொண்டாட்டம் பொதுமக்களின் கொண்டாட்டமாகவும் அமைந்தது என்ப தற்கு அங்குள்ள மாபெருங் கோயிலுக்கு அண்மையில் உள்ள உயர்ந்த ஊஞ்சல் நிலைகளே சான்றுவன. இன்றும் திருப் பாவைத் திருநாளை அப்பிராமணர்கள் கொண்டாடி வருகின்றனர். அங்குள்ள அவர்களின் கோயில் அமைப்பும் வழி பாடும் தென்னிந்தியக் கோவில் அமைப்புக் களையும், வழிபாட்டு முறையினையும் தழுவி உள்ளதாக அவர்களின் அரசகுரு எனக்குக் கூறினர்.

தை மொழியில் இருக்கும் இராமா யணம் வால்மீகியின் இராமாயணத்தைத் தழுவியது அன்றென்றும், பெரும்பாலும் கம்பரின் இராமாயணத்தையே தழுவி இருத்தல் கூடுமென்றும் பியானுமன் எனும் தை அறிஞர் எனக்குத் தெரிவித் தார், மேலும் தம் மொழியில் ஐ விகுதி களும் அன் விகுதிகளும் கொண்ட சொற் கள் பலவென்றும், தம் இராமாயணத்தின் காவியச் செல்வர்கள், (பாத்திரங்களின் பெயர்கள்) பெரும்பாலும் இராமன், சுக்ரீ

வன் என்ற தமிழ்ப் பெயர்களைப் போலவே அமைந்திருக்கின்றனவென்றும் குறிப்பிட்டார். அதே அறிஞர் 'தங்கம்' எனும் சொல் தமிழிற்குச் சீனத்திலிருந்து தை நாட்டின் வழியாக வந்த ஒரு சொல் என்றும் கருதினர்.

"தமிழ்" என்ற சொல்லைத் "தமின்" என்று ழகரத்தின் இடத்தில் னகரம் கொடுத்துப் பயன்படுத்துகின்றனர் தை மக்கள். ஆனல், தைமொழியில் தமின் என்ற சொல் கொடுமையான மகன் எனப் பொருள்படும். பல்லவர் சோழர் காலத்தில் செல்வாக்குப் படைத்த பல்லவ, சோழ மன்னர்களின் அரண்மனை முறைகளையும், சடங்குகளையும் கடைப்பிடித்த தை மக்கள் பிற்காலத்தில் தமிழ் என்னும் சொல்லுக்கு இத்தகைய பொருளைக் கொடுப்பதற்குக் காரணம் யாது? பிற்காலச் சோழர்களின் படைகள் ஈழம் முதலிய வெளிநாடுகளின்மீது படையெடுத்ததன் காரணமாக அந்நாடுகளுக்குப் பெருந் துன்பம் நேர்ந்தது. அதனல் ஈழத்தில் வாழ்ந்த புத்த பிக்குகள் தம் நாட்டைவிட்டுப் புத்த மதக் கோட்பாடுகளைப் பேணிவரும் தை நாட்டின்கண் சென்று அடைக்கலம் புகுந்தனர். அங்ஙனம் சென்ற புத்தர்கள், தென்னட்டுத் தமிழ் மன்னர்களால் தம்நாட்டிற்கு ஏற்பட்ட அழிவினை அறிவித்தனர். அதனல் பண்டு உயர்சொல்லாக வழங்கிய தமிழ் எனும் சொல் இப்பொழுது இழிவுச் சொல்லாக வழக்கில் திரிந்து வழங்குகின்றது. இப்பொருள் மாற்றத்தை உறுதிப் படுத்தும்பொருட்டு, வானுர்தி நிலையத்தில் பணியாற்றும் பாமரன் ஒருவனை அணுகி—"அப்பா, தமின் என்ற சொல்லுக்குப் பொருள் யாது?" என்று வினவினேன். அதற்கு அவன் சிறிதும் தயங்காது "By Tamin I mean a cruel black Indian" என்று விடை யிறுத்தது வியப்பை விளைத்தது.

தமிழ் நாட்டிற்கு வடமேற்குத் திசையிலிருக்கும் நாடுகளிலும் தமிழ் ஆராய்ச்சிக்கு எல்லையற்ற இடமுண்டு. இன்று வரையிலும் நாம் அறிந்த பண்புள்ள பண்பற்ற திராவிடமொழிகள் ஏறக்குறைய இருபது என்று கூறுவர். மொகஞ்சதரோவை நான் பார்க்கப் போயிருந்த பொழுது அங்குப் பிராகுவி மொழி பேசும் மக்கள் சிலருடன் உரையாடினேன். பாகிஸ்தானத்தில் கிணறு தொடும் குலத்தினர் ஒரு சிலர் ஒட்டர் எனப் பெயரிடப் பெறுவர் என்றும், அன்னர் திராவிடமொழி போன்ற ஒரு மொழியைப் பேசி வருகின்றனர் என்றும் என்னிடம் கூறினர். நான் ஒட்டர் எனும் அம்மக்களை நேரில் கண்டு அவர்களுடன் பேசுவதற்குரிய வாய்ப்பினைப் பெற்றிலேன். மேலும் இவ்வாண்டு மாஸ்கோ மாநகரில் ஆப்கானிஸ்தானத்திலிருந்து வந்த ஆங்கில அறிஞர் ஒருவருடன் உரையாடிய பொழுது, அன்னர் ஆப்கானிஸ்தானத்தில் ஒரு வகுப்பினர் (ஏறக்குறைய 200 குடும்பங்கள்) திராவிடமொழி போன்ற மொழி ஒன்றனைப் பேசி வருவதாகவும், இதுகாறும் அம்மொழியினை அறிஞர் எவரும் ஆராய்ந்திலர் என்றும் செப்பினர். எனவே நம் அறிஞர்கள் இந்நாடுகளுக்குச் சென்று இம்மொழிகளைப் பேசும் மக்களைப் பற்றிய செய்திகளை ஆய்ந்து வருவாராயின் இன்னும் சில திராவிட மொழிகள் இயங்கி வருவதாக நாம் அறிய வந்தாலும் வரலாம்.

பினிஷ் மொழி திராவிட மொழிகளுடன் தொடர்புடையது எனக் கால்டுவெல் முன்கூறியுள்ளதை மீண்டும் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழக அறிஞர் பாரோ (Burrow) இக் காலத்திலும் வற்புறுத்தி வருகின்றார்.

மொழி இயலில் தமிழராகப் பிறந்த தமிழ் அறிஞர்கள் ஈடுபடும்பொழுது பிற நாட்டுத் தமிழறிஞர் தமிழ்மொழியையும், பண்டைய இலக்கியங்களையும் நன்கு அறியாது ஆராயும் வழக்கின்சிலவழுக்களை நாம் நீக்குதல்கூடும். மேல் நாட்டு அறிஞர் ஒருவருடன் நானும் தோதவர் சிலரைக் கண்டு (உதகமண்டலத்தில்) சில பொருள்களுக்குத் தம்மொழியின் பெயரைக் கூறுமாறு கேட்டோம். அஃதாவது பறவை ஒன்றனைச் சுட்டிக் காட்டி அதற்கு அவர் மொழியில் பெயர் யாது? என்று கேட்டோம். அதற்கு அத் தோதவன் "பிள்" என்று கூறினன். மேல் நாட்டறிஞரோ தமிழ்ச் சொல்லின் திரிபு என்று அதனை உணர்ந்திலர். எனவே தமிழ் ஆய்வுகளைத் தமிழின் வெவ்வேறுகால இலக்கியங்களை

நன்கு பயின்ற அறிஞர்கள் உயர்ந்தமுறையில் நடத்தும்பொழுது ஏனையோர்க்கில்லாத வாய்ப்புக்களைப் பெறுகின்றனர். வழிவகைகளையும் காண்கின்றனர். ஆயினும் அவர்களுக்குப் பன்மொழிப் புலமை இவ்வாராய்ச்சிக்கு இன்றியமையாத அடிப்படையாகும் ''யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்'' என்ற அடியை உண்மையுடன் கூறுவதைத் தமிழ் மொழி ஒன்றனையே அறிந்த புலவர்க்கு இயலாது. பாரதியார் ஆங்கிலத்தையும், பிரஞ்சுவையும், இந்தியையும், வடமொழியையும், வங்கமொழியையும் அறிந்ததால்தான் அவ்வாறு கூற உரிமையுடையவரானர். இன்றிருக்கும் புதுப்பேச்சுக் கருவிகளைக் கொண்டு புது மொழிகளைப் பயில்வது பண்டினும் எளிதாகும்.

பண்டைக் காலத்தில் கிரேக்க நாடு, ரோம்நாடு போன்ற மேல்நாடுகளுடன் தமிழ்மக்கள் கொண்ட வணிகத்தொடர்பு மிகவும் சிறந்தது என்பதற்குச் சங்க இலக்கியங்களும், சிலப்பதிகாரமும் நல்ல உறுதியான ஆதாரமாக அமைகின்றன. அரிசி, இஞ்சிவேர், சருவாய் போன்ற தமிழ்ச்சொற்கள் கிரேக்க மொழியில் உள்ளன. ஆயினும் paleography, paleontology போன்ற சொற்களில் வரும் ''பழைய'' எனும் பகுதியையும், இக்காலக் கிரேக்க மொழியில் நீருக்கு, ''நேரோ'' எனும் சொல்லும், இன்னும் நாம் கிரேக்கம் போன்ற பண்டைய மொழிகளுடன் ஆய்வு செய்வதற்கு இடமுண்டு என்பதைக் காட்டுகின்றன. கிரீட் தீவின் பண்பாட்டில் காளைமாட்டின் வழிபாடும், ஏறு தழுவுதல் போன்ற விளையாட்டும் கி மு. 2000 க்கு முன் நிலவிய மீனேஸ் காலத்தின் பண்பாட்டில் இடம் பெற்றுள்ளன. இன்றும் செட்டிநாட்டில் இடம்பெறும் விளையாட்டும், முல்லைக்கலிகூறும் ஏறு தழுவுதலும் தமிழ் – கிரீட்டர்களின் பண்டைத் தொடர்பினைக் காட்டுகின்றன என்பது அறிஞர் சிலரின் முடிபு.

தமிழ் நூல்கள் பதினேழாம் பதினெட்டாம் நூற்றாண்டுகளில்தான் அச்சேறின என்ற ஒரு கருத்தும் பரவிவருகின்றது. ஆயினும் தமிழ்மொழிதான் இந்திய மொழிகளில் முதன்முதல் அச்சினைக்கண்ட மொழி. 1554 இல் லிஸ்பன் மாநகரில் இலத்தீன் எழுத்துக்களைக் கொண்டு தமிழ்ச் செபங்களை ஒலிபெயர்த்த நூலினை அச்சிட்டனர். அஃதில் ஒரு வரி தமிழ் ஒலிவடிவைக் காட்ட, மற்றொரு வரி போர்த்துக்கீசிய மொழியில் பொருளைத் தர, மூன்றுவது வரி தமிழ்ச்சொல்லிற்கு நேராகிய போர்த்துக்கீசியச் சொல்லைத் தருகின்றது. இவ்வாறு மும்மூன்று வரிகளாகவும் இருநிறங்களிலும் அச்சிடப்பெற்ற அழகிய இந்நூல் ஐரோப்பிய அச்சுக்கலைக்கே அணியாக விளங்குகின்றது. மேலும் 16 ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் போர்த்துக்கீசியமொழியில் எழுதப்பெற்ற தமிழ் இலக்கண நூல்களையும் லிஸ்போன் நூற்கூடங்களிற் கண்டேன். வத்திக்கான் நூற்கூடத்தில் இருந்த கையெழுத்துப் பிரதிகள் சிலவற்றையும், பழைய நூல்கள் சிலவற்றையும் ஒருமுறை ஆராய்ந்த பொழுது, அங்குப் பதினேழாம் நூற்றாண்டில் அம்பலக் காட்டில் அச்சிடப்பெற்ற போர்த்துக்கீசு தமிழ் தமிழ்போர்த்துக்கீசு அகரவரிசையையும் கண்டேன். 664 பக்கங்கள் கொண்டதும் 'புன்னைக்காயல்' என்னுமிடத்தில் 1586 ஆம் ஆண்டு பதிப்பிக்கப் பெற்றதுமான கத்தோலிக்கத் திருத்தொண்டர் வரலாறு என்னும் நூலினையும் கண்டெடுத்தேன். இன்னும் பல பயனுள்ள கையெழுத்துப் பிரதிகளையும் பண்டு அச்சிடப்பெற்ற தமிழ் நூல்களையும், ஜகார்த்தா, லிஸ்பன், பாரீஸ், வத்திக்கான், கொப்பென்கெய்கன், இலண்டன் இன்னோரன்ன நகர்களிலுள்ள நூற்கூடங்களில் கண்டிருக்கின்றேன். எதிர்காலத்தில் இந்நகர்களுக்குச் செல்லும் தமிழறிஞர்கள் வரலாற்றிற்குப் பயன்படும் இத்தகைய நூல்களையும் கையெழுத்துப் பிரதிகளையும், கடிதங்களையும் ஆய்தல் வேண்டும்.

மேலைநாட்டு அறிஞர்கள் பலர் இன்றும் தமிழ் ஆராய்ச்சியில் ஈடுபட்டு வருகின்றனர். கலிபோனியாவிலிருக்கும் 'ஏமெனூ' என்பவர் 'கோத்தர்' மொழியினை நன்கு கற்றவர். அன்னர் திராவிட மொழியியலில் ஈடுபட்டு வருகின்றார். ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் பாரோ

(Burrow) என்பவர் வடமொழிக்கும் தென் மொழிக்கும் இருக்கும் தொடர்பினையும் திராவிடமொழிகளின் ஒப்பியல் பான்மையையும் ஆராய்ந்து வருகின்றார். பாரீஸ் நகரில் 'மெல்' என்பவரும் பீலியோசா என்பவரும் தமிழ் இலக்கணத்தையும் இலக்கியத்தையும் ஆய்ந்து வருகின்றனர். ஜெர்மனியில் இருக்கும் லெமன் (Lehman) என்பவர் தாயுமானவர் பாடல்களைச் செர்மன் மொழிகளில் பெயர்த்தவர். தஞ்சை மாவட்டத்தின் சீர்காழியில் ஏழாண்டுகள் வாழ்ந்தவர். இன்று கிழக்குச் செர்மானியின் பல்கலைக் கழகமொன்றில் தமிழ் கற்பித்து வருகின்றார். செக்கஸ்லோவாக்கியாவில் இருக்கும் சுவலேபிலும் "லெனின் கிராடில்", இருக்கும் ரூடின் என்பவரும் இளைஞர்; தமிழ்ப் பற்றுடையவர்; செந்தமிழைச் செம்மையுடன் பேசுகின்றவர், எழுதுகின்றவர். இலண்டன் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பாடங்களை நடத்தும் 'மார்' என்பவரும் 'ஆசர்' என்பவரும் மாஸ்கோ பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சி செய்யும் 'ஆந்திரேனோ' என்பவரும் 'பியர்த் கோஸ்கீ' என்பவரும் தமிழில் பெரும் ஈடுபாடு உள்ள மேனாட்டு இளைஞர். இவர்களுடைய தமிழ்ப் பற்றும், தமிழறிவும், இக்காலப் பன்மொழிப் புலமையும், இக்கால ஆராய்ச்சிமுறைகளும் நம்மவர்க்கும் இருக்குமாயின் தமிழ் ஆராய்ச்சி காணவிருக்கும் எதிர்கால வெற்றிகள் கணக்கற்றவை என்பதும் எல்லையற்றவை என்பதும் திண்ணம்.

தமிழ் மக்களும், தமிழ்ச் சின்னங்களும், தமிழ்ப் பண்பாட்டை நினைவூட்டும் பழக்க வழக்கங்களும் பாரெங்கும் பரவி இருக்கின்றன. பிரஞ்சுமொழியில் 1863 இல் தமிழ் இலக்கண நூலொன்றை எழுதியவர் "மார்டினீக்" தீவுகளில் தமிழ்மக்கள் வாழ்வதாகவும், ஆதலால் அங்கு ஆட்சிசெலுத்தும் பிரஞ்சுமக்களுக்குத் தமிழ் இலக்கண நூற் பயன்படுவதாகவும் தம் முகவுரையில் கூறியிருக்கின்றார். இவ்வண்ணம் இடையமரிக்கா, அட்லாண்டிக் தீவுகள், தென்னாப்பிரிக்கா, மரீசியஸ்தீவு, மலேயா, பியூஜி தீவுகள் ஆகிய எங்கும் தமிழ்மக்கள் வாழ்ந்து வருகின்றனர்; தமிழ்மொழியையும் பயின்றுவருகின்றனர். இந்தியத் தமிழ்நாடு தமிழகமெனச் சிறப்பாகக் கூறப்படுமேல் ஈழநாட்டிலும் தமிழகம் உண்டு. மலேயாவிலும் தமிழ் மக்கள் பெருந்தொகையாக உள்ளனர். சென்னை, புதுடில்லி, கொழும்பு, சிங்கப்பூர், குவலாலம்பூர், இலண்டன் மாநகர், மாஸ்கோநகர் போன்ற நகர்களிலிருந்தெல்லாம் தமிழ் ஓசை ஒலிபரப்பக்கேட்டல் கூடும். தமிழ்ப் பேசும்படங்களைக் கீழ்த்திசைச் சைக்கோனிலிருந்து மேற்றிசை கெய்ரோ வரையும் காட்டுவதாக அறிந்திருக்கின்றேன். இத்தகைய தமிழ்ப் பரப்பின் பான்மையையும், செறிவையும் இயல்பையும் வகையையும் தமிழறிஞர் வருங்காலத்தில் வரையறுத்துக் கூறத் தமிழ்த்துறைகளைக் கொண்ட பல்கலைக் கழகங்கள் மேலான வாய்ப்புக்களை அளித்தருள்க.

---

## பிறமொழியுள் தமிழ்ச்சொல்

உலகத்தில் எழுத்தானியன்ற பழைய நூல்களிடைக் காணப்பெறும் பண்டைய திராவிடச் சொல் மயிலின் பெயர்க்குரிய சொல்லாகும். கி. மு 1000 ஆண்டுகளுக்கு முன்னகவே தர்ஷிஷ், உவரி முதலிய இடங்களிலிருந்து மன்னன் சாலமனுடைய கப்பல்களில் ஏற்றிக்கொண்டு வரப்பட்ட வாணிபப் பொருள்களுள் மயிலிறகும் ஒன்றாகும் என்பது எபிரேய விவிலிய நூலிற் காணப்படும் சான்றாகும். இவ்விடத்தில் மயிலிறகு என்பதற்கு அரசர் பகுதியில் 'துகி' என்ற சொல்லும் வரலாற்றுப் பகுதியில் 'தூகி' என்ற சொல்லும் வருகின்றன.

—" கால்டுவெல் ஒப்பிலக்கணம் ",

---

# தமிழரின் கட்டடக்கலை

[திரு. வை. மு. நரசிம்மன்.]

சென்னை திருவல்லிக்கேணியில் 27-11-1912 இல் தோன்றினார். தந்தையார் உரையாசிரியச் சக்கரவர்த்தி வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார்; தாயார் வை. மு சிரங்கம்மாள். சென்னைப் பல்கலைக்கழகத்துப் பி.ஏ., பி.இ., பட்டங்களைப் பெற்றவர். மற்றும் எம்.ஐ.இ. (இந்தியா), எம். ஆர். எஸ். எச். (லண்டன்) ஆகிய பட்டங்களும் பெற்றார். தந்தையாரிடமே வேதாகமங்களைப் பயின்றார். கோயிற்பணி, திருப்பணி, புதைபொருளாராய்ச்சி, பழங்காலக் கட்டடக்



கலை ஆகியவை பற்றியும் கற்றுத் தேர்ந்து இந்தியாவின் பல இடங்களிலும், இலங்கையிலும் இத்துறைகளில் பணியாற்றியுள்ளார் இக் கலைகள்பற்றிப் பல கட்டுரைகளைச் செய்தி இதழ்களுக்கும், தமிழ்க் கலைக்களஞ்சியத்திற்கும் எழுதி வருகின்றார். தம்முடைய தந்தையாரியற்றிய உரைகளைப்பதிப்பித்தும், தமிழர் தம் பண்டைய கலை, பண்பு ஆகியவற்றை விளக்கி நாடெங்கும் கண்காட்சிகளை நடத்தியும் தூய தமிழ்த் தொண்டாற்றி வருகின்றார்.

இச்சிறு கட்டுரையில் தமிழரின் கட்டடக் கலையின் உயர்வையும், அன்னார் பல நாடுகளுடன் கொண்ட பரந்த தொடர்பையும், அத்தொடர்பின் அடிப்படைத் தத்துவத்தையும், எப்படி அத்தத்துவமே இன்று நம் பாரத நாட்டில் நிலவும் இந்துக் கட்டிடக் கலைகளெல்லாவற்றிற்கும் கடைகால் போன்றுள்ளது என்பதையும் எடுத்துக் காட்ட விழைகின்றேன். இப்பண்புகளைக் கொண்ட இச்சீரிய கலை காலப் போக்கில் பெருமை குன்றிவர இன்று மிக்க கீழ்நிலையில் உளது. மறுபடியும் அதனை உயர்நிலையை யெய்தச்செய்ய ஒவ்வொரு தமிழனும் தன்னால் இயன்ற வரை முயலவேண்டும்.

## 1

### கலையின் மாண்பு

ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில் தமிழரின் கட்டடக் கலை மிகத் தாழ்ந்த நிலையை அடைந்ததெனலாம். அதிவிரைவிலேயே நம் கலையை மறக்கக் கூடிய அளவிற்கும் நாம் வந்து விட்டோம். அத்தகைய நிலையைக் கண்ட ஸர்ஜார்ஜ் பர்ட்சட், ஜெனரல் கன்னிங்காம், பர்கஸ், ஜேம்ஸ் பர்கூஸன், ப்ளெச்சர், ஹாவல் போன்ற பாரத நாட்டுக் கலையுயர்வுக்காக மிக உழைத்த மேலைநாட்டு மேதைகள் நமது தமிழ்க் கலையின் மேன்மையைப் பலவாறாக எடுத்துக் காட்டியுள்ளனர். பேராசிரியர் மாக்ஸ் முல்லர் என்பவர் கூறுகிறார்:—"ஐரோப்பியரிடம் காணும் நலன்களை எடுத்துக்கொள்ளுங்கள். ஆனால் ஐரோப்பியராக ஆகக் கூடாது. எப்பொழுதும் மனுவின் பரம்பரையினராகவே இருக்கவேண்டும். அழகிய இந்தியாவின் மக்களாகவும், சத்தியத்தையே நாடுபவர்களாகவும் இருத்தல் நலம்."

"இந்தியக் கலையின் மிக வுயர்ந்த பண்பு யாதெனின், அக்கலையின் ஒவ்வொரு பாகமும் அதி நுட்பமான வேலைத் திறனின் கூறுபாடுகளை மிகக்கொண்டு ஒன்றோடொன்று வெகு வாய்ப்பாக இணைந்து அழகு சொட்ட விளங்குவதேயாகும்." மற்றும் நமது கட்டடக்கலை கால தேச வரம்புகளைக் கடந்து மிகப் புனிதமாக, என்றும் பிரகாசிக்கக் கூடிய பெருமையையுடையது. பல நூற்றாண்டுகளுக்கு முன் எழுப்பப்பட்ட கட்டடங்கள் பல இன்றைக்கும் பார்ப்போர் மனத்தைக் கவரும் படி நிற்கின்றன. அத்தகைய கட்டடங்களைப் பார்க்க வன்றோ அன்னிய நாட்டவர்

பல்லோர் நம் நாட்டை நாடிவருகின்றனர். பலவகைப்பட்ட இயந்திர வசதிகளைக் கொண்டுள்ள இன்றைய உலகோர் அத்தகைய கட்டடங்களை எழுப்ப முடியுமா என்று ஐயுறச் செய்யும் வண்ணம் அக் கட்டடங்கள் தொழில் நுட்பம் வாய்ந்தவையாய் மிளிர்கின்றன. நம் நாட்டின் தட்ப வெப்ப நிலை, எளிதிற் கிடைக்கக் கூடிய பொருள்கள், நிலத்தின் வளம் முதலியவைகளுக்கு ஏற்பக் கட்டடங்களை அமைக்கும் முறைகளை நமது பண்டைச் சிற்ப நூல்கள் வெகு தெளிவாகக் கூறுகின்றன. அம்முறைகளை வாழையடி வாழையாகப் பழக்கத்தில் கையாண்டு வந்ததால், நம் நாட்டுச் சிற்பிகள் இன்றைக்கும் செய்ய முடிகின்ற சிற்ப வேலைகளைக் காண எவரும் அதிசயிக்கின்றனர். என்னே நம் கலையின் மாண்பு! இங்ஙன் எல்லாவகையினும் மாட்சிமிக்க நிலையையும் பக்குவத்தையும் அடைந்த நம் தேசீயக் கலையை இன்று புறக்கணித்து, நாம் பிறநாட்டவரின் கட்டடக் கலையைப் பின்பற்றத் தொடங்கிவிட்டோம். நமது கலாசாரத்திற்கும் நாட்டின் பழக்க வழக்கங்களுக்கும் தட்ப வெப்ப நிலைக்கும், பொருளாதாரத்திற்கும் சிறிதும் ஏலாத கட்டடங்களை யெழுப்புகிறோம். வெகு சிலரே விரும்புவனவாய், குறுகிய காலமே நிற்கக் கூடியனவான கட்டடங்களைக் கட்டுகிறோம். இந்தப் பரிதாபகரமான நிலையை நம் பிரதம மந்திரி, ஜவஹர்லால் நேருவும் பல தடவைகளில் எடுத்துக் காட்டியுள்ளார். சமீப காலத்தில் கட்டடங்கள் கட்டும் முறைகளில் முன்னேற்றத்திற்கான பெரிய மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. அவைகளை நாமும் கையாள வேண்டியது அவசியமே. ஆனால் கட்டடங்கள் கட்டும் பாணி (Style)யில் முடிந்த வரையில் பெருவாரியாக நம் முன்னோர்களுடைய வழியையே நாம் பின்பற்ற வேண்டும். பண்டைத் தமிழரின் பாணியிலேயே இன்றைத் தமிழர் கட்டடங்களை அமைக்க வேண்டும். இதற்கு நம் அரசாங்கமும் வேண்டிய உதவிகளை மிகுதியாகச் செய்ய முன்வர வேண்டும். சுருங்கக் கூறின் ஒரு நாட்டின் கட்டடங்களே அந்நாட்டுக் கலாசாரத்தின் நிலையை உள்ளங்கை நெல்லிபோல் எடுத்துக் காட்டுவனவாம்.

## 2

## பரந்த தொடர்பு

தமிழரின் கட்டடக்கலைச் சிறப்பினைத் தெளிவுற ஏறக்குறைய கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே பார்க்கலாம். முதல் மகேந்திரவர்மன் என்ற பல்லவ மன்னனே முதல் முதலில் தமிழ் நாட்டில் கற்பாறைகளில் கட்டடக் கலைகளைச் செய்ய முன் வந்ததாக அம்மன்னனின் ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. ஆனால் ஏழாம் நூற்றாண்டிற்கு முன்னர்த் தமிழகத்தில் நிலவியிருந்த கலையை வெளிநாடுகளில் பார்க்கலாம். தமிழ்க் கலையை நன்கு பூத்துக் காய்த்துக் கனிந்த ஒரு கனிக்கு ஒப்பிடலாம். காற்று வீசும்போது கனிந்ததொரு கனியின் விதைகள் பல இடங்களிலும் பரவி விழ அவ்வவ் விடங்களின் வளமைக்கேற்ப அவ்விதைகளிலிருந்து பெரிய செடிகளும் மரங்களும் உண்டாகின்றன வன்றோ! அஃதே போல்தான் அனேகமாக, கீழை நாடுகளிலெல்லாம் தமிழ்க்கலை பரவியதும், சீனு, சப்பான், சியாம், தாய்லாந்து, இலங்கை, பர்மா, சுமத்ரா, ஜாவா, முதலிய நாடுகள் தமிழ்க் கலையின் ஆட்சிக்குட்பட்டன. அக்கலையாட்சி கி. பி. 2, 3 நூற்றாண்டில் ஆரம்பமாகி கி. பி. 12, 13 நூற்றாண்டுகள் வரையில் இருந்தது எனலாம்.

### சீனு—ஜப்பான்

சீன தேசத்துச் சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் பாண்டுரங்கா, ப்யூனன் என்ற இரண்டு இந்து இராச்சியங்கள் இரண்டாம் நூற்றாண்டிலே இருந்ததாகக் கூறுகின்றனர். ப்யூனன் (Fu-nan) என்பது இப்போதைய கம்போடியா நாடாகும். பொதுவாக, இந்தோ—சீனச் சேர்க்கை பௌத்தமத சம்பந்தமாகவே கி. பி. 10 ஆம் நூற்றாண்டுவரை வளர்ந்தது. பௌத்தத்துடன் இந்து மதமும் குடியேறிற்று. கி. பி. 749 இல் சீனத்திலிருந்து ஜப்பானுக்குச் சென்ற சீனபிக்கு ஒருவர்—காண்டன் (Canton) நகரில் மூன்று இந்துக் கோவில்கள் இருந்தன வென்றும், அங்கு இந்தியப் பிராமணர்கள் வசித்து வந்தனரெனவும் சொல்லுகிறார். தட்டுத் தட்டாய் எழுப்பப்படும் கோபுரச் சிற்பமுறை சீனத்













1. தமிழர் கட்டிடக்கலைப் பாணியில் ஒரு பாதியும் வட இந்தியப் பாணியில் மறு பாதியும் உள்ள விமானத்தின் வரை படம்.
2. ஈழத்தில் பொலனுருவாவில் உள்ள ஒரு முற் சோழர் காலக் கோயில்.
3. ஒரு பண்டைக்காலச் சப்பானியர் கோயிலின் உள் தோற்றம்.
4. கம்போடியாவில் அங்கோர்வாட் கோயிலின் வான் வெளித் தோற்றம்.







5. ஓரிசா மாகாணத்துப் புவனேசுவரத்தில் உள்ள வித்தல் கோயிலின் புறத்தோற்றம்.

6. தமிழர் பாணியில் ஒரு பாதியும் கலிங்கர் பாணியில் மறு பாதியும் உள்ள வரை படம்.

7. கம்போடியா பரம்பன் சிவாலயங்கள் ஒன்றனுள் உள்ள கோஷ்டம்.

திற்குத் தமிழகத்திலிருந்தே சென்றது. சீவகசிந்தாமணியில் தமிழ்நாட்டில்தெரிந்த மொழிகளில் சீனமொழியும் ஒன்றெனச் சொல்லப்பட்டுள்ளது. முதல் நூற்றுண்டி லிருந்த பான்-கௌ என்ற சீன எழுத் தாளர் தம் நூலில் சீன மன்னனுக்கும், காஞ்சியிலிருந்த பல்லவ அரசனுக்கும் உள்ள நட்பைக் குறித்துள்ளார். பல்லவ மன்னன் நரசிம்மபோதவர்மனும் (ராஜ சிம்மன்) அக்காலத்துச் சீன மன்னனும் நெருங்கிய நண்பினராக இருந்தனராம். சோழர் ஆதிக்கத்திலும் பாண்டியர் ஆட்சி யிலும் தமிழ்நாடு சீனத்துடன் மிக நெருங் கிய உறவுகொண்டிருந்தது. கி. பி. 1290 இல் குப்ளாகான் என்ற சீன மன்னன் தூது வர்களை யனுப்பி, தென்னிந்தியாவி லிருந்து சிற்பிகள், விஞ்ஞான நிபுணர் கள் முதலிய பலரை வரவழைத்துக் கொண்டான். சீனுவிலிருந்து இந்துக் களின் கலாசாரம் ஜப்பானுக்கும் பரவியது. அதன்விளைவாக அனேக இந்துக் கடவுளர் கள் ஜப்பானிலும் இன்னும் காணப்படு கிருர்கள்.

## இந்தோ-சீனு

இந்நாடு 1946 ஆம் ஆண்டில் வியட் நாம், கம்போடியா, லாவோய் என்ற மூன்று நாடுகளாகப் பிரிந்து பிரஞ்சு ஐக்கியத்தின் பகுதிகளாக ஆயின. ஆசியாவின் தென் கிழக்குக் கோடியில் இவை உள்ளன. பண் டைக்கால இந்தோ-சீனத்தின் கலைமரபு கள் இந்தியக் கலைகளிலிருந்தே தோன் றியவை. "முக்கியமாக, கட்டடம் அமைக்கும் முறையுர், சிலைகளை யமைக்கும் ஹெயும் இந் திய மரபுகளை யொத்தவை". இந்தோ-சீனு வின் மேற்குப் பக்கமான கம்போடியா கி. பி. முதல் நூற்றுண்டிலேயே தென் இந்திய நாகரிகத்திற்குட்பட்டது. கோபு ரங்கள் உள்ள கோவில்களைக் கட்டும் கலை, 12 ஆம் நூற்றுண்டில் ஆங்கோர்வாட் கோயிலில் உச்ச நிலையை அடைந்தது. இந்தோ-சீனு வின் தெற்கேயுள்ள அன்னும் பிரதேசத்தில் கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் சம்பா என்னும் இந்து ராச்சியம் நிறுவப்பட்டது. இந்நாட்டின் கலைகள் "ஷாம்கலை" எனப் பட்டு, இந்தியக் கலைகளிலிருந்தே தோன் றியவையாக முடிவுகட்டப்பட்டுள்ளது.

## இந்தோனீசியா

ஜாவா, சுமத்ரா, மதுரா, போர் னியோ, பாலி, செலிபீஸ் முதலிய பல தீவுக் கூட்டங்களைக் கொண்டது இந்தோ னீசியா. இந்தக் கலாசாரத்தைப் பரப்பிய வர்கள் தென்னிந்தியர்களே என்பதற்குப் பல சான்றுகள் கிடைத்துள்ளன. தயாங் (Dieng) பீடபூமியிலுள்ள—சண்டிகள் (கோயில் கள்) மாமல்லபுரத்திலுள்ள கோயில்களைப் போலப் பஞ்சபாண்டவர்கள் பெயரால் எழுப்பப் பட்டன. இக்கோவில்கள் தமிழரின் சிற்ப முறையைத் தழுவியே தோன்றினவாம். உலகப் பிரசித்தி பெற்ற போராபுதூர் துபாத்தில் உள்ள மகா வேலைப்பாடுகளும் சிற்பங்கள் முதலியனவும், இக்கோயிற் கலை நம் நாட்டுக்கலையுடன் எவ்வளவு தொடர்பு உடையது என்பதை எடுத்துக் காட்டும்.

## தாய்லந்து

இன்றைக்கும் தென்னிந்தியக் கலா சாரத்தின் சிதைவுகள் இங்குக் காணப்படு கின்றன. தாய்லந்தின் சரித்திரம் இந்துக் களின் இராச்சியம் ஏற்பட்டதிலிருந்தே ஆரம்பமாகியது. அப்படியிருந்த போதி லும் இந்நாட்டை அடுத்துள்ள கம்போ ஜில் இருப்பதுபோல இங்குப் பெரிய கோயில்கள் இல்லை. இடிந்த சில சிறிய இந் துக் கோயில்களும், கடவுளர்களின் சிலை களுமே நமக்குக்கிடைக்கின்றன. பாங்காங் கில் உள்ள வாட் போட் ப்ராம் (பிராமணர் களின் கோயில்) என்ற இந்துக் கோயிலின் சமீபத்தில் இன்றைக்கும் சுமார் எண்பது பிராமணர்கள் வசிக்கிருர்கள். இவர்கள் அரசசபையில் உயர்ந்த பதவியை வகிக் கிருர்கள். அரசர்கள் முடிசூடும் போதும், இன்னும் பல முக்கிய விழாக்களிலும், இவர்கள் தலைமை வகிக்கிருர்கள்.

## பர்மா

தென் இந்திய, பாலி நூல்களிலுள்ள பௌத்த மதமே பர்மாவில் பெரும்பாலும் கடைப் பிடிக்கப்படுகிறது. புதைபொருள் இலாகாவினுல் கண்டு பிடிக்கப்பட்ட பல வகையான கடவுளர்களின் உருவங்கள், கோயில்கள், இன்னேரன்ன நம் நாட்டின் கலாசாரம் எவ்வளவுதூரம் பர்மாவில் வேரூன்றி இருந்தது என்பதை எடுத்துக் காட்டுகின்றன. ஆனல், 12, 13 ஆம்

நூற்றாண்டுக்குப் பிறகு இந்தக் கலைத் தொடர்பு அற்றுப் போயிற்று. இன்றைக்கு இடிந்துபோன கட்டடங்களும், அவைகளின் சிற்பங்களுமே பண்டைக்கால வரலாற்றைக் குறிக்கின்றன. பேகன் என்ற இடத்தில் உள்ள ஒரே ஒரு கோவில்தான் நன்னிலையிலுள்ளது. மயின்பேகனிலுள்ள ஒரு தமிழ் கல்வெட்டு (கி. பி. 12 ஆம் நூற்றாண்டு) இக்கோவிலைக் குறிக்கிறது.

### இலங்கை (ஈழம்)

இந்நாடு, இன்று தனிப்பட்ட தேசமாக இருந்த போதிலும், நாடுகளில் ஐரோப்பியர் ஆதிக்கம் ஏற்படும் வரையில் தமிழ் நாட்டுடன் நெருங்கிய தொடர்பைக் கொண்டிருந்தது. இந்நாட்டுக் கட்டடக்கலை பௌத்தம், தமிழ் (அல்லது திராவிடம் என்று சிலர் கூறுவர்) என இருவகையினதே. ஜனத்தொகையில் ஆறில் ஒருபங்கு தமிழ் பேசுபவர். எங்குப் பார்த்தாலும் தமிழ் நாட்டுக் கோவில்கள் காணப்படும். தேவாரத் தலங்களில் இரண்டு — திருக்கேதீச்வரம், திருக்கோணமலை — இந்நாட்டில் உள்ளன. ஆகையால், கலாசாரத்தில், ஈழநாட்டைத் தமிழகத்துடன் சேர்ந்ததாகவே கொள்ளலாம்.

## 3

## முதன்மைத் தன்மை

நம் பாரதநாட்டின் கட்டடக் கலையைப் பௌத்தம், இந்து, சராசனிக் (Saracenic) அஃதாவது முகமதியர்கலை என மூன்று பெரும் பிரிவுகளாக வகுக்கலாம். அவற்றுள் முக்கியமானது இந்துக்கள் கட்டடக் கலையைக் கிருட்டிணா நதிக்கு வடக்கே காணப்படும் இந்தோ—ஆரியன் வகையதென்றும், கிருட்டிணா நதிக்குத் தெற்கே உள்ள திராவிட வகையினது (தமிழ்க்கலை) என்றும், இரண்டு உட்பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஆனால், இந்த இரண்டு பிரிவுகளின் அடிப்படையான தன்மைகள் ஒன்றே. தென் நாட்டுக் கலையில் நேர்மட்டத்தைச் (Horizontal) சேர்ந்த வரிகள் நன்கு எடுத்துக் காட்டும்படி அமைக்கப்பட்டிருக்கும். வடநாட்டுக் கலையில் மேனோக்கிச் செல்லும் கோடுகளும், வரிகள் மிக எடுப்பாக இருக்கும்படி கட்டப்பட்டிருக்கும். அதனால், இவ்விரண்டும் தனிப்பட்ட இரண்டு வகைகளாக மேற்பார்வைக்குப் புலப்படும்.

ஒரிஸாவின் கட்டடக்கலை மிகப் பழமையானது. இதன் தனிப்பட்ட தன்மையாலும், வெகுகாலமாகப் பல மாறுதல்களைக்கொண்டு பக்குவப்பட்டதாலும், இந்தக் கட்டடக்கலை கலிங்கப்பாணி (800—1300 கி. பி.) என வழங்கப்படும். இஃது இந்தோ–ஆரியபாணியின் ஒருவகையே. நாடுகளின் பூகோள அமைப்பினையொட்டி, வடநாடுகளிற் காணப்படும் கட்டடக் கலைகள் (1) மத்திய இந்தியாவிலுள்ள கச்சுரஹோ (Khajuraho) பாணி, (2) ராஜஸ்தான் பாணி, (3) குஜராத் பாணி, (4) காதியவார் பாணி, (5) தக்கான் (Deccan) பாணி, (6) மத்ராபாணி என ஆறுவகைகளாகச் சொல்லப்படுகின்றன. இவைகள் பாரதநாட்டில் முக்கால் பாகத்தைத் தங்களுடையனவாக ஆக்கிக்கொண்டுள்ளன. மேலே குறித்துள்ள இந்தோ–ஆரியப்பாணியின் ஒரிசாபாணியோடு சேர்ந்து ஏழு வகைப்பட்டவைகளின் வளர்ச்சியையும் ஆராய்வோமானால், அவைகள் பலவகையான பிரத்தியேக குணாதிசயங்களைக் கொண்டிருந்த போதிலும், தமிழரின் கட்டடக் கலையிற் காணும் பல அம்சங்களையும் உடையனவாக விளங்குகின்றன. (1) பல்லவக் கோயில் களைப்போல, பண்டைக் கால வட நாட்டுக் கோயில்களும் அனேகமாகக் கர்ப்பக் கிரகத்துடன் தான் இருந்தன. அவைகள் சதுர வடிவிலே அமைக்கப்பட்டன. (2) கோயில்களின் சடங்குகள் வளர வளர, பலவகையான மண்டபங்கள் கட்டப்பட்டன. இக் கட்டடங்கள், கர்ப்பக்கிரக மத்திய இரேகையையே நம் நாட்டிலுள்ளது போலவே அச்சுக்கோடாகக் கொண்டன. (3) அடுத்தபடியாகக் கோயிலின் உட்பாகங்களில் சிற்பங்கள் இல்லாமல் இருப்பது கவனிக்கத் தக்கது. (4) கடவுளைத் தொழச் செல்லும் போது ஒருவன் மனம் அதிலேயே ஈடுபட வேண்டுமென்று தமிழன் எப்படி இருண்ட கர்ப்பக் கிரகத்தில் ஒளிவீசப் பரம்பொருளை அமைத்தானோ அக்கருத்தில் வடநாட்டினரும் தங்கள் கோயில்களை எழுப்பினர். (5) மேலும், கோயிலைச் சுற்றிப் பிராகாரங்கள் அமைப்பது, மதில் சுவர்களில் கோபு

ரங்களை எழுப்புவது போன்றவற்றையும் வடநாட்டுக் கட்டடக் கலையிலும் காண லாம். (6) பெரும்பாலும் வடஇந்தியாவில் கோயில்களை அமைக்கச் சில்பசாரம், மந் தனுவினுல் இயற்றப்பட்ட ப்ராசாத மந் தன என்ற இரண்டு சிற்பநூல்கள் மிகுதி யாகக் கையாளப்படுகின்றன. அவை களில் காணப்படும் பங்கு மானங்கள், நம் நாட்டிலுள்ளனபோல் இருக்கின்றன. அதைத் தெளிவாக இரண்டு படங்களில் காட்டியிருக்கிறேன் (7) மந்தனுவே தான் செய்துள்ள நூலிற்கு ஆதாரங்கள் தென் இந்தியாவிலிருந்தே கிடைத்துள்ளனவாக எழுதிவைத்துள்ளார். என்னே நம் கலை யின் மேன்மை! அடிப்படையாகுந் தன்மை! (8) பாரத நாட்டின் பூகோளபடத் தில் ஒரிஸா மிக முக்கியமான இடத்தில் இருப்பதைப் பார்க்கலாம். இந்நாடு கலைக் களஞ்சியம். இந் நாட்டில்தான் தென் தேச கலாசாரமும், வடதேச கலாசாரமும் சந்திக்கின்றன. ஆகவே, கலிங்கபாணி தென் இந்திய பாணியால் மிகப் பாதிக்கப் பட்டுள்ளது. கலிங்க பாணியின் நால் வகையில் திராவிடப்பாணி ஒன்ருக எடுக் கப்பட்டுள்ளது. இன்னும் கலிங்கபாணியே மற்றைய வட இந்திய பாணிகளுக்கு அடிப்படை என அறிஞர்கள் பலர் கூறு கின்றனர். (9) தென் நாட்டில் கட்டடக் கலை மிக உயர்ந்த நிலையை (கி. பி. 900—1200) அடைந்த போதுதான் வட நாட்டிலும் கட்டடக் கலைகள் மிக உயர்ந்த நிலையை அடைந்தன.

மேலே மிகச் சுருக்கமாகக் கொடுக்கப் பட்டுள்ள பல காரணங்களினுல், வட இந்தியக் கட்டடக்கலைகள் தென்நாட்டுத் தமிழரின் கட்டடக்கலையையே அடிப்படை யாக் கொண்டு வளர்ந்தன என்றும், அப்படி அவைகள் வளர்ச்சி அடைந்து வருகையில், தங்கள் நாட்டிற் கேற்பத் தனிப்பட்ட சில குணுதிசயங்களையும் தம் முட்கொண்டன என்றும் அறியலாம்.

---

## தென்னுட்டுக் கட்டடக்கலை

நீலகிரி மலையில் உள்ள தொதவர் கோவில் பார்க்கத்தக்கது. வட்டமான கற்சுவர் எல்லையை வகுப்பதாகும். இத்துடன் திருநெல்வேலியில் உள்ள பேய்க் கோவில்கள் ஒருமைப்படுகின்றன. இக் கோவில்களே பண்டைய திராவிடர் கட்டட அமைப்பைக் காட்டுவன. தொதவரிடமுள்ள இருவகைக் கோவில்களில் கோபுரம்போல அமைத்துள்ள கோவில்களே பழைமை வாய்ந்தவை; தொலைவி லிருந்து பார்ப்பவர் அதனைக் கிறித்தவர் கோவிற் கோபுரம் எனக் கருதுவர். இம்மாதிரியே வடஇந்தியாவில் உள்ள கோவில்கள் அமைந்துள்ளன. இதனுல் இந்தியாவிற் புகுந்தவுடன் ஆரியர் இவ்வமைப்பைத் திராவிடரிடமிருந்து கடன்பெற்றனர் எனக் கூறலாம்.

தென்னுட்டுக் கட்டடக்கலை (Architecture) தமிழகத்துக்கே உரியது. இன்றுள்ள வானளாவிய கோபுரங்கள், விமானங்கள் இவற்றில் காணப்படும் வேலைப்பாடுகள் அனைத்தும் இந்நாட்டுப் பழைய வேலைப்பாடுகளிலிருந்து வளர்ச்சியுற்றவையே ஆகும். இந்த வளர்ச்சி பல நூற்ருண்டுகளாக உண்டா னவை. மனிதக் குரங்கின் மண்டை ஓட்டிலிருந்து இன்றைய மனிதனது மண்டை ஓடு வளர்ச்சியுற்ருற் போலவே - தமிழகக் கட்டடக் கலையும் இயல்பாக வும், அமைதியாகவும், செம்மையாகவும் வளர்ச்சி பெற்று வந்ததாகும். இதன் உண்மையை மாமல்லபுரத்துத் தேர்களைக் கொண்டும், திருப்பாதிரிப் புலியூரில் உள்ள சிவபிரான் கோவில் வேலைப்பாட்டைக் கொண்டும் நன்கறியலாம்.

—''பல்லவர் வரலாறு''

---

# மெய்யுணர்வு ஆராய்ச்சியும் மொழிவளமும்

[திரு. டாக்டர், வி. ஏ. தேவசேனபதி]

சென்னை மாநகரிலே 25-7-1914இல் இவர் தோன்றினர். தந்தையார் பெயர் வ. சு ஆறுமுகம் பிள்ளை; தாயார் பெயர் வ. ஆ. கிருபாம்பாள். 1935 ஆம் ஆண்டு பி. ஏ., (ஆனர்சு) பட்டம் பெற்ருர். 1936 இல் எம். ஏ., பட்டமும், 1949 இல் பி எச். டி., பட்டமும் பெற்ருர். ஜர்மன் மொழியிலும் தேர்ச்சிப் பெற்றுள்ளார். 1940 ஆம் ஆண்டு முதல் 1955 ஆம் ஆண்டுவரை சென்னை, பச்சையப்பன் கல்லூரியில் தத்துவப் பேராசிரியராகச் சிறந்த முறையில் பணியாற்றி



ஞர். தற்போது சென்னைப் பல்கலைக் கழகத் தத்துவத் துறையில் வாசகராகத் தொண்டியற்றி வருகின்ருர். 'சிவஞான சித்தியார்' ரிலும் அதற்கான ஆறு உரைகளிலும் விளக்கப்பட்டுள்ள சைவ சித்தாந்தம் பற்றிய ஓர் அரிய நூலை ஆங்கிலத்தில் இயற்றியுள்ளார். அண்மைக் காலத்தில் அரிய பல சித்துக்களை ஆற்றியருளிய 'நாராயண வரம் சுரைக்காய் சுவாமிகள் வரலாறு', 'மெய்யடியார்கள்' ஆகியவை இவர் செய்த மொழிபெயர்ப்பு நூல்களாம்.

மெய்ப்பொருள் ஆராய்ச்சி (தத்துவ ஆராய்ச்சி) என்பது பழங்காலந்தொட்டே நம் நாட்டிலும் மேனுட்டிலும் நடந்து வருவதாகும். இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்குக் குறையாமல் இவ்வாராய்ச்சி நடந்து வந்துளது எனலாம். பொதுவாகக் கருதுமிடத்து இவ்வாராய்ச்சி (1) நம்மைப் பற்றியும் (2) நாம் வாழும் உலகத்தைப் பற்றியும் (3) கடவுள் அல்லது கடவுளரைப் பற்றியும் நிகழ்ந்து வந்துளது. இவை உண்டு என்பது மெய்ப்பிக்கக் கூடியதா? கூடுமெனின் எவ்வாறு?

நம் நாட்டில் அளவை (பிரமாணம்) என்பது மெய்யுணர்வு ஆராய்ச்சியில் சிறந்த இடம் பெற்றுளது. பருப்பொருள்களை அளவுகோல் முதலியன கொண்டு அளந்தறிவதுபோல் நுண்பொருள்கள் அல்லது கருத்துப் பொருள்களை எவ்வாறு அறிவது? சிவஞானசித்தியாரில் வரும் அளவையை விளக்கும் உரையில் மறை ஞானதேசிகர் பின்வருமாறு கூறுகிருர்:

'அளவை என்பது அளந்தறியப்படுவது. அஃது எவ்வாரும்? எனின், உலகத்துப் பதார்த்தங்களை எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நால்வகை அளவினுல் அளந்தறியுமாறுபோல, பதி முதலிய பொருள்களைப் பக்குவான்மாக்கட்கு அளந்து அறிவிக்கையின் பொருட்டு அளவைப் பிரமாணங்களை முதற்கட் கூறியது என அறிக. இதனை,

"பண்ணிலாற் கில்லாத பாட்டிற் பயம்போன்றும்
கண்ணிலாற் கில்லாக் கவின்போன்றும்—
எண்ணிலா
அஞ்சொ லளவை அறியா தவற்கில்லை
செஞ்சொ லளவின் சிறப்பு."

என அளவை விளக்கத்தில் அறிக.'

காண்டல் (பிரத்தியக்ஷம்), கருதல் (அனுமானம்), உரை (சப்தம்) முதலிய அளவைகளுள் கொள்ளத்தக்கன எவை, தள்ளத்தக்கன எவை என்பது ஆராய்ச்சிக் குரியதாகிறது. உலோகாயதர் என்போர், காண்டல் ஒன்றே போதும் என்று கூறுவர். பௌத்தர்கள் காண்டலுடன் கருதலையும் கொள்ளவேண்டு மென்பர். சைவ சித்தாந்திகள், சாங்கியர் முதலியோர் இவ்விரண்டுடன் உரையையும் (அதாவது வேதங்கள், சான்ருேர் மொழி) கொள்ள வேண்டுமென்பர்.

காண்டல் ஒன்றனையே கொண்டு நாம் எல்லாவற்றையும் அறியமுடியாது. காண்டலுடன் கருதலையும் ஏற்கவேண்டும். புகை

யுள்ள இடத்தில் நெருப்பு உண்டென்பது காட்சியாலன்றிக் கருதலால் பெறப்படுவ தாகும். காண்டல், கருதல் இவற்றிற்கும் அப்பாற்பட்டனவாயுள்ளவற்றை அறிந்து கொள்ள வேதாகமங்கள் துணை செய்கின் றன என்று இவ்வாருக அவரவர் கொள் கைக்கு ஏற்ப அளவைகளைக் கூட்டியும் குறைத்தும் கூறுவதை இந்திய மெய் யுணர்வு வரலாற்றில் காண்கிருேம்.

கடவுள் உண்டு என்பதைக் கருத லளவையால் நிலைநாட்ட முடியுமென்று கருதுவோர் (நையாயிகர்) உளர். கருத லளவையால் கடவுள் உண்டு என்பது ஒருவாறு பெறப்படுமாயினும் அறிவு வழி யாகப் பெறப்படும் இம்முடிபு உண்மை யான விளக்கம் தரவேண்டுமெனின் இறை வன் அருள் முன்னிற்க வேண்டுமென்பது சைவசித்தாந்திகள் கொள்கை.

"மறையினல் அயனல் மாலால் மனத்தினல்
வாக்கால் மற்றும்
குறைவிலா அளவினலும் கூருெண
தாகி நின்ற
இறைவனர்"

என்று கூறும் அருள்நந்தி சிவாசாரியர்,

"அருளினல் ஆகமத்தே அறியலாம் அளவினலும்
தெருளலாம்சிவனை ஞானச்செய் தியாற்சிந்தை
[யுள்ளே
மருளெலா நீங்கக்கண்டு வாழலாம் பிறவிமாயா
இருளெலா மிரிக்கலாகும் அடியரோ டிருக்க
[லாமே"

என்று இறைவன் அருள் முன்னின்ருல் முடியாததொன்றில்லை யென்பதை நினை வூட்டுகிருர்.

காண்டல், கருதல், உரை முதலிய அளவைகள் பற்றிய விரிவான ஆராய்ச்சி கள் இந்திய மெய்யுணர்வு வரலாற்றில் காணப்பெறுகின்றன. இனி, மேனுட்டு மெய்யுணர்வு வரலாற்றைச் சற்றுப் பார்ப் போம்.

மேனுட்டில் மெய்யுணர்வு ஆராய்ச்சியே அனைத்தாம் அறிவியல் துறைகளுக்கும் தாயகமாய் அமைந்தது. முதலில் புற உலகின் தன்மையைப் பற்றித் தொடங்கிய ஆராய்ச்சி காலப்போக்கில் விரிந்தும் பரந் தும் சென்று கணிதம், பௌதிகம் முதலிய தனித்துறைகளாக அமைவதற்கு அடி கோலியது. மெய்யுணர்வுத் துறையில் சிறப்பிடம் பெறத்தகுந்த உளவியலும் சிறிது காலத்துக்கு முன் தனித்துறையாகி விட்டது. பலதிறப்பட்ட கேள்விகளுக்கும் பொதுவான விடைகள் தரப்பெறும் வரை யில் இவை மெய்யுணர்வுத் துறையிலிருந் தனவென்றும் திட்டமான விடைகள் தரப் பெற்றவுடன் இவை தனித்துறைகளைத் தோற்றுவித்தன என்றும் கூறலாம். அவ்வாருயின், மெய்யுணர்வியலுக்கு இன்று தனித்தொழில் ஏதும் உளதா என் னும் கேள்வி எழுகிறது. உயிர், கடவுள், வீடு என்பன போன்றவற்றைப் பற்றிய கேள்விகளும் விடைகளும் மெய்யுணர்விய லில் இடம்பெறலாமா? இவற்றைப்பற்றி விஞ்ஞானத் துறைகளில் ஆராய்ச்சிக்கு இடம் இராததால் மெய்யுணர்வுத் துறை யில் இவற்றிற்கு விடைகாண வேண்டும் என்பது பொருத்தமன்ருே?

பொருத்தமில்லை என்பது மேனுட்டு மெய்யுணர்வுத் துறையில் குறிப்பிடத்தக்க இருதிறத்தினரின் முடிபாகும். முடிபு ஒன்ருயினும் அவர்கள் கூறும் காரணங்கள் மாறுபட்டவையாகும். இருத்தல் கொள்கை யினர் (Existentialists) எனப் பெறுவோர் மெய்யுணர்வுத் துறையில் இதுவரை கருதப் பெற்ற கேள்விகள் சரியானவை. ஆயின் அறி வின் துணைகொண்டு அவற்றிற்கு விடை காண முயலும் முறை சரியானதன்று என்று கருதுகிருர்கள். உணர்ச்சிவழி நின்று இலக்கியம், கவிதை போன்ற கலைகளின் போக்கில் சென்று காணும் விடைகளே ஏற்கத்தக்கவை. மெய்யுணர்வு எழுப்பிய கேள்விகளை வைத்துக்கொள்வோம். ஆனல் மெய்யுணர்வு பின்பற்றிய அறிவு முறையை விட்டுவிடுவோம் என்று இவர் கள் கூறுகிருர்கள்.

இதற்கு மாருக அளவைமுறைப்புலக் கொள்கையர் (Logical positivists) என் போர் அளவை முறை ஆராய்ச்சி கொள்ளத்தக்க தாகும்; ஆனல் மெய்யுணர்வு இதுவரை எழுப்பி வந்த கேள்விகள்தாம் பொருளற்றவை என்பர். அளவைமுறை பெரும்பாலும் கருத்துக்களை ஆராய்கிறது; சிறுபான்மை கருத்தை வெளியிடத் தேவையான மொழி பற்றியும் ஆராய்கிறது. இம் முறையைக்

கையாண்டு கருத்துக்களைப்பற்றித் தெளிவு காண்பதுபோல மொழியையும் ஆராய்ந்து தெளிவுபெற வேண்டும். இவ்வாறு கருத்துக்களையும் மொழியையும் நுணுகி ஆராய்ந்தால் இதுவரை மெய்யுணர்வுத் துறையில் எழுப்பப்பெற்ற கேள்விகள் பொருளற்றவை என்பது தெளிவாகும். கேள்விகள் பொருளற்றவை எனின் இவற்றிற்குத் தரப்பெறும் விடைகளும் பொருளற்றவை என்பது சொல்லாமலே விளங்கும். எனவே, மெய்யுணர்வுத் துறையில், கடவுள், உயிர், உயிரின் கட்டற்றநிலை முதலியவற்றைப் பற்றிப் பேசுவதை இனி விட்டுவிட வேண்டும். இவை நம் உணர்ச்சிகளோடு இயைந்து நிற்கலாம். ஆயினும் இவற்றிற்கு மெய்யுணர்வுத் துறையில் இடம் இல்லை. மெய்யுணர்வு பின்பற்றிய அளவைமுறை ஆராய்ச்சியை மேற்கொள்ளலாம். ஆனல் பொதுவாக இதுவரை எழுப்பப்பெற்ற கேள்விகளைப் பொருளற்றவை என விலக்கிவிடவேண்டும். இதுவே அளவைமுறை புலக்கொள்கையினர் கூறும் முடிபு.

ஆயின், மெய்யுணர்வுத் துறையில் பேச எஞ்சியவை எவையேனும் உளவா என்னும் கேள்வி எழுகிறது. பண்டைக்காலத்தில் மேனாட்டில் மெய்யுணர்வுத்துறையில் எழுந்த கேள்விகளுக்குத் திட்டமான விடைகள் கிடைத்தவுடன் தனி விஞ்ஞானத் துறைகள் ஏற்பட்டன என்று முன் பார்த்தோம். மெய்யுணர்வுத் துறையில் எஞ்சி நிற்கும் கடவுள், உயிர் முதலியவை பற்றிய கேள்விகள் பொருளற்றவை எனின் மெய்யுணர்வுத் துறையே மறைந்துவிட வேண்டியதுதானு?

இந்தக் கேள்விக்குப் பதில் பின்வருமாறு தரப்பெறுகிறது: விஞ்ஞானத்தின் பலதுறைகளில் திட்டமான அறிவு கிடைக்கிறது. இவ்வறிவு மொழிவாயிலாக வெளியிடப்பெறுகிறது இந்த விஞ்ஞான மொழியை ஆராய்ந்து பார்ப்பதே மெய்யுணர்வுத் துறைக்கு ஏற்ற பணியாகும். விஞ்ஞானம் கையாளும் மொழியை ஆராய்வதால் கருத்துத் தெளிவும் மொழித் தெளிவும் ஏற்படும்.

இந்த முடிபு, மேனாட்டிலும் நம் நாட்டிலும் வழிவழியாக வந்த மெய்யுணர்வு மரபைப் பின்பற்றுவோரால் முழுவதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாயில்லை. நாம் யார்? நாம் வாழும் உலகம் எதற்காகத் தோன்றியது? (அல்லது தோற்றுவிக்கப்பட்டது?) இப் பிறப்பிற்கு முன் நாம் இருந்தோமா? இப் பிறப்பிற்குப் பின் நாம் இருப்போமா? இவை போன்ற கேள்விகள் மெய்யுணர்வுத் துறையோடு பிரித்தறியமுடியாதவை என்பவர்கள், மொழி ஆராய்ச்சி, கருத்து ஆராய்ச்சி இவற்றை அளவை இயலின் அடிப்படையில் நடத்துவதோடு மெய்யுணர்வுக் கொள்கை அமையவேண்டும் என்பதை உடன்படார்கள். மேலும் விஞ்ஞானத்தில் கையாளப்பெறும் அளவைமுறை பெரும்பாலும் பகுத்தறிமுறையோடு நின்றுவிடுவதனல் தொகுப்பறிவு, உள்ளுணர்வு இவற்றின் பயனை இழப்பதாகும் என்பதை மறந்துவிடக் கூடாது என்றும் கூறுவர்.

மெய்யுணர்வுத் துறையில் புதிதாகப் பயிலப்பெறும் கருத்து–மொழி ஆராய்ச்சிகளின் முடிபு கொள்ளத்தக்கதா? அன்ரு? என்பது ஒருபுறமிருக்க, இத்தகைய கருத்து–மொழி ஆராய்ச்சி, நம் இந்திய மொழிகளிலும் சிறப்பாக நம் தமிழ்மொழியிலும் ஏற்பட்டால், புதிய வழிகளில் நம் மொழி வளமடையலாம் என்பது உறுதி. தமிழ்மொழியைப் பிற மொழிகளோடு ஒப்பிட்டு ஆராய்வதுடன், இத்தகைய புதிய முறையிலும் ஆராய்வது மிக வேண்டற்பாலதாகும்.

---

## மெய்யுணர்வு தெளிவிற்கடிப்படை

தோன்றும் பொருளனைத்தும் சொல்லிடுங்காற் காரியமாம்
தோன்றலிலாக் காரணமெய் சொற்றுணிவாம் — ஆன்ற
அளவையுரை யாலறிதல் ஆண்டான் அருளால்
உளங்கொள்ளல் மெய்யுணர்வாம் ஓர்.

# கங்கைகொண்ட சோழபுரத்தின் – – – – தொன்மையும் பெருமையும்

[திரு. வை. சுந்தரேச வாண்டையார்]



தஞ்சை, மாயூரத்தைச் சேர்ந்த சோத்தமங்கலத்தில் 1899 ஆம் ஆண்டு (விகாரி, மார்கழி 3ஆம் நாள்) இவர் தோன்றினூர். பெற்றோர் வைத்தியலிங்க வாண்டையார்; சிவகங்கை ஆயாள். பள்ளியிறுதித் தேர்விலும், வித்துவான் பட்டத் தேர்விலும் தேர்ந்து தமிழாசிரியராகத் திருவையாறு, திருப்பனந்தாள், முத்துப்பேட்டை, குற்ருலம் ஆகிய ஊர்களில் பணியாற்றியுள்ளார். தற்போது அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் மொழியியல்துறை விரிவுரையாளராகத் தொண்டாற்றி வருகின்ருர். 'கொட்டையூர்க் கோடீச்சரத்தல மான்மியம்', 'அப்பர் ஐம்மணி மாலை', 'கொட்டையூர்ப் பதிகம்' ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். திருக்குறள் - பரிமேலழகர் உரைக்கான விளக்கமும், கல்வெட்டு விளக்கமும் வரைந்துள்ளார். இவருடைய கல்வெட்டாய்வுப் புலமையைப் பாராட்டித் தருமையாதீனத்தார் 'கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர்' என்ற பட்டமளித்துச்சிறப்பித்துள்ளனர்.

### தலைநகராகக் கொண்ட அரசன்

கங்கைகொண்ட சோழபுரம் என்பது பிற்காலத்துச் சோழமன்னர்களுடைய தலைநகரங்களில் ஒன்ருகும். இதைத் தலைநகராகக் கொண்டவன், முதலாம் இராசராச சோழனின் மகனும், சோழவள நாட்டைக் கி.பி. 1012 முதல் 1044 வரை ஆட்சி செய்தவனும், அலைகடல் நடுவுள் பலகலஞ் செலுத்திக் கடாரம் முதலியவைகளை வென்றவனுமாகிய, முதலாம் இராசேந்திர சோழன் ஆவன்.

### இவன் இதைத் தலைநகராகக் கொண்டதற்குக் காரணம்

பிற்காலத்துச் சோழமன்னர்களுக்கு (விசயாலயன் காலம் முதல், முதலாம் இராசராச சோழன் காலம் முடிய) தலைநகராய் விளங்கியிருந்த தஞ்சாவூர், பாண்டிய மன்னர்களுடைய எல்லைக்கு அருகில் இருந்தமையால், அம் மன்னர்கள் படையெடுத்து வந்து எளிதில் வென்றுவிடலாம் என்னும் கருத்துப்பற்றியும், தங்கள் குல தெய்வமாகிய தில்லைச் சிற்றம்பலத்து இறைவனை அடிக்கடி வந்து வழிபடுதற்குக் கொள்ளிடப் பேராறு வெள்ளப்பெருக்குக் காலங்களில் பெருந்தடையாய் இருந்தமையாலும், இக்காலம் கொள்ளிடப் பேராற்றுக்கு இருக்கும் கீழ் அணைக்கட்டு (Lower Anicut) அக்காலம் இல்லாமையாலும், முதலாம் இராசேந்திர சோழன் சோழவள நாட்டின் உட்பகுதியாகிய கங்கைகொண்ட சோழபுரத்தைத் தலைநகராகக் கொண்டிருக்க வேண்டும்.

### இங்குத் தலைநகரம் இருந்தது என்பதற்கு ஆதாரம்

"கங்கைகொண்ட சோழபுரத்து வீட்டினுள்ளால் குளிக்கு மாடத்து தானஞ்செய்தருளாயிருந்து."[1]

"ராஜேந்திரதேவன் கங்கைகொண்ட சோழபுரத்து கேரளன் மாளிகையில் சோபான காடுவெட்டியில் எழுந்தருளியிருந்து."[2]

1. Annual Report on South Indian Epigraphy for the year 1932 p. 51.
2. Travancore Archaelogical Series, Vol. I. No. 3. p. 164.

"உடையார் ஸ்ரீ ராஜேந்திரதேவர் கங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிலினுள்ளால் முடிகொண்ட சோழன் திருமாளிகையில் வடபக்கத்து தேவாரத்துச் சுற்றுக்கல்லூரியில் தானஞ்செய்தருளாயிருந்து."[1]

"வைதும்ப அரசனை இருந்தலை அரிந்து பெரும்புனற் றன்னொடு கங்கைமாநகர்த் தெய்தபின் திங்களில்."[2]

"வீரத் தனிக்கொடி தியாகக் கொடியும் ஏற்பவர் வருகென்று நிற்பக் கோத்தொழில் உரிமையும் எய்தி அரசு வீற்றிருந்து மேவரு மனுநெறி விளக்கிய கோவிராஜகேஸரிவர்மரான உடையார் ஸ்ரீ வீரராஜேந்திரதேவற்கு யாண்டு அஞ்சாவது கங்கைகொண்ட சோழபுரத்துச் சோழகேரளன் திருமாளிகையில் ராஜேந்திரசோழ மாவலிவாணராஜனில் எழுந்தருளியிருந்து."[3]

"ஜயத்திருவுடன் கங்காபுரி புகுந்தருளி."[4]

"கங்கைகொண்ட சோழபுரத்து கங்கைகொண்ட சோழன் திருக்கொற்றவாசலில் புறவாயில் ஸேநாபதி, இளங்காரிகுடையான் சங்கரன் அம்பலங்கோயில் கொண்டாநாந அநந்தபாலர் பெருந்திருவாட்டி என்று செய்த அறச்சாலைக்கு," (திருவாவடுதுறைக் கல்வெட்டு யான் நேரில் படித்து எழுதியது)

"கங்கைகொண்ட சோழபுரத்(து முடிகொண்)ட சோழன் திருமாளிகையி லாதி பூமியிற் கீழைச் சோபானத்து பள்ளிக்கட்டிலில் எழு(ந்தருளியிருந்து)".[5]

"கங்கைகொண்ட சோழபுரத்தில் வீரசோழன் மாளிகையில்."[6]

என்னும் கல்வெட்டுப் பகுதிகள் கங்கைகொண்ட சோழபுரம் ஒருபெரு நகரமாய் விளங்கியிருந்த செய்தியையும், அது கங்காபுரி என்னும் பெயர் பெற்றிருந்ததையும், அங்குச் சோழ மன்னர்களுக்கு மாளிகை இருந்தமையையும், அம் மாளிகையின் சிற்சிலபகுதிகள் முடிகொண்ட சோழன் திருமாளிகை, சோழகேரளன் திருமாளிகை, கேரளன் திருமாளிகை, வீரசோழன் திருமாளிகை என்னும் பெயர்கள் பெற்றிருந்தமையையும் கொற்றவாசல் புறவாயிலில் சேனாதிபதி இருந்த செய்தியையும் புலப்படுத்துகின்றன.

## வேறு ஆதாரங்கள்

முதலாம் இராசேந்திர சோழனால் கட்டப்பெற்றுக் கருவூர்த் தேவரால் பாடப்பெற்ற கங்கைகொண்ட சோழேச்சரத்துக்கு அண்மையில் உள்ள உட்கோட்டை, மாளிகைமேடு, ஆயுதகலம், சுண்ணும்புக்குழி, வாணதரையன் குப்பம், வீரரெட்டித்தெரு, மெய்காவல்புத்தூர் முதலான ஊர்களும், சோழகங்கம் அல்லது பொன்னேரி என்ற ஏரியும் இது தலைநகரமாய் விளங்கியிருந்ததைப் புலப்படுத்துகின்றன.

**உட்கோட்டை:** என்பது இக்காலம் சுமார் இருநூறு வீடுகளைக்கொண்டுள்ளதாய் ஒரு சிற்றூராய் விளங்குகின்றது. இதுவே கோட்டை இருந்த இடமாகும். சாதாரண மக்கள் இதை உக்கோட்டை என்கின்றனர்.

**மாளிகைமேடு:** இது உட்கோட்டைக்கு மேற்கில் இக்காலம் ஒரு திடராய்த் திகழ்கின்றது. இதுவே சோழ அரசர்களுடைய மாளிகை இருந்த இடமாகும். இங்குத் தோண்டிப் பார்த்த மக்கள் பழங்காலத்துச் செங்கற்களாகிய தேட்டாக் கற்கள் கிடைக்கின்றன என்று கூறுகின்றனர். (புதைபொருள் ஆராய்ச்சி செய்தால் பல அரிய செய்திகளை அறியலாம்.)

**ஆயுதகலம்:** இது உட்கோட்டைக்கு அருகில் ஆயுதங்கள் வைக்கப்பட்டிருந்த இடமாகும். இக்காலம் ஆயிரகலம் என்னும் பெயரோடு ஒரு சிற்றூராய் விளங்குகிறது.

1. S. I. I. Vol. II Part I, p. 106, Ins. No. 20,
2. Epi.-Indica Vol. XXI page 231, Line 4.
3. Epi.-Indica Vol. XXI page 231, Line 4.
4. Epi.-Indica Vol. XXI Line 7.
5. S. I. I. Vol. IV Ins. No. 527.
6. ARE 1925 No. 203,

யுத்தபள்ளம்: இது உட்கோட்டைக்குத் தென்பக்கத்தில் உள்ள ஊராகும்.

சுண்ணுப்புக்குழி: இது மாளிகை, உள் கோட்டை, கங்கைகொண்ட சோழேச்சரம் இவைகளைக் கட்டுவதற்குச் சுண்ணும்பு தயாரித்த இடமாகும்.

வாணதரையன் குப்பம்: இது கங்கைகொண்ட சோழேச்சரத்திற்குத் தெற்கில் ஒரு சிற்றூராய் இருக்கின்றது. இது முதற்குலோத்துங்க சோழனது சேனுதிபதியாகிய வாணகோவரையன் தங்கியிருந்த இடமாகும். இவன்கீழ் ஒரு குதிரைப்படை இருந்த செய்தியைக் கலிங்கத்துப்பரணி கூறுகின்றது.

வீரரெட்டித் தெரு: இது கங்கைகொண்ட சோழபுரத்திற்குத் தெற்கில் இருக்கும் ஊர். இது வீரர்கள் தங்கியிருந்த இடமாகும்.

மெய்காவல் புத்தூர்: இது கங்கைகொண்ட சோழேச்சரத்திற்கு மெய்காவல் செய்தவர்கள் வசித்த ஊர் ஆதலின் இப்பெயர்பெற்றது.

### சோழகங்கம் அல்லது பொன்னேரி

இது கங்கைகொண்ட சோழபுரத்திற்கு மேற்கே சயங்கொண்ட சோழபுரம் போகும் பெருவழியில் இரண்டு கல் தூரத்தில் இருக்கிறது. இது தெற்கு வடக்கில் பதினுறு மைல் நீளமுள்ளது. இவ்வேரி தூர்ந்தும் கரைகள் எல்லாம் உடைந்தும் இருந்தது. சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் அரசியலார் தெற்கு வடக்கில் மூன்று மைல் நீளத்திற்கும் கிழக்கு மேற்கில் ஒரு மைல் அகலத்திற்கும் அகலப்படுத்திப் பெரிய கரைகளைக் கட்டி ஏரியாக ஆக்கியுள்ளனர். மழைபெய்யுங்கால் கருவாட்டு ஓடை என்னும் காட்டாறு வழியாக நீர் வந்து நிரம்புகிறது. இதைக் கொண்டு ஆயிரம் ஏக்கர் பயிர் செய்யப்படுகிறது.

முதலாம் இராசேந்திர சோழன் கங்கைக் கரையிலுள்ள அரசர்களை வென்று கங்கை நீரைக் கொணருமாறு, தன் படைத் தலைவனுக்குக் கட்டளையிட, அவனும் இந்திரரதன், இரணசூரன், தர்மபாலன், மகிபாலன் என்னும் மன்னர்களை வென்று கங்கையை அடைந்து அவ்வாற்றின் புனித நீரைக் கொண்டு வந்தான். அப்பொழுது முதலாம் இராசேந்திரன் கோதாவரிக் கரையை அடைந்து தன் படைத்தலைவனைச் சந்தித்தும், வழியில் ஒட்டதேசத்து அரசனை வென்றும், கொண்டுவந்த கங்கை நீரைத் தன் தலைநகரமாகிய கங்கைகொண்ட சோழபுரத்தில் ஒரு பெரிய ஏரி ஒன்றை வெட்டி அதில் அந்நீரை ஊற்றி அதற்குச் சோழகங்கம் என்று பெயர் வைத்தான். இதுவே நீர்மயமான வெற்றித் தூண் ஆகும். இச் செய்திகள் அனைத்தையும் திருவாலங்காட்டுச் செப்பேட்டிலுள்ள 109 முதல் 124 முடிய உள்ள வடமொழிப் பாடல்கள் செப்புகின்றன.[1] இந்தச் சோழகங்கம் என்னும் ஏரி பொன்போன்று இப்பக்கத்தார்களுக்குச் சிறப்புள்ள ஏரியாதலால் பெரும்பாலான மக்கள் இக்காலம் இதைப் பொன்னேரி என்று வழங்குகின்றனர்.

தஞ்சாவூர்ச் சில்லாவில் கும்பகோணம் தாலுகாவில் உள்ள திருப்பனந்தாளுக்கு அருகில் இருக்கும் திரைலோக்கி என்னும் ஊர்ச் சிவன் கோயிலில் ஒரு துண்டுக் கல்வெட்டில் காணப்பெறும் "ராஜேந்திர சோழன் கங்கைகொண்டு எழுந்தருளி நின்ற இடத்து திருவடி தொழுது" என்னும் கல்வெட்டுப் பகுதியும்[2] கங்கைநீர் கொண்டு வந்ததாகத் திருவாலங்காட்டுச் செப்பேடு கூறும் செய்தியை உறுதிப்படுத்துகிறது.

இதுகாறும் காட்டிப்போந்த கல்வெட்டு ஆதாரங்களும், கங்கைகொண்ட சோழேச்சரத்துக்கு அண்மையிலுள்ள ஊர்கள், ஏரி இவைகளின் பெயர்க்காரணங்களும் கங்கைகொண்ட சோழபுரம் பிற்காலத்துச் சோழ மன்னர்களுக்குத் தலைநகராய் விளங்கியிருந்த செய்தியை உறுதிப்படுத்துவனவாகும்.

1. The Tiruvalangadu Plates of Rajendra chola I, South Indian Inscriptions Vol. III Part III.
2. A. R. E. 1932 Part II page 50.

## தொன்மை

பிற்காலத்துச் சோழமன்னர்களில் முதலாம் இராசேந்திரன், முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், வீரராசேந்திரன், அதிராசேந்திரன், முதற்குலோத்துங்கன், விக்கிரமசோழன், இரண்டாங் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன், இரண்டாம் இராசாதிராசன், மூன்றுங் குலோத்துங்கன், மூன்றும் இராசராசன், மூன்றும் இராசேந்திரன் இவர்கள் காலங்களில் கி.பி. 1012 முதல் கி பி. 1256 முடிய அதாவது 244 வருடங்களாக இது தலைநகராய் இருந்தது.

முதலாம் இராசேந்திரசோழன் ஆட்சி எய்திய முதல் மூன்று ஆண்டுகள் முடியப் போர் நிகழ்ச்சிகள் இல்லை. அக்காலம் இங்கு மாளிகையையும் கங்கைகொண்ட சோழேச்சரத்தையும் கட்டியிருக்க வேண்டும். இவனது 'திருமன்னி வளர' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்திப் பகுதியில் இவனது 12 ஆவது ஆட்சியாண்டில், "வெறிமலர்த் தீர்த்தத்து எறிபுனல் கங்கை"யின் நீரைக் கொண்டுவந்த செய்தி கூறப்பெற்றுள்ளமையால் கி.பி. 1012+12 அதாவது கி பி 1024 இல் இதற்குக் கங்கை கொண்ட சோழபுரம் என்னும் பெயரையும் கட்டிய கோயிலுக்குக் கங்கைகொண்ட சோழேச்சரம் என்றபெயரையும் இட்டிருக்க வேண்டும். எனவே கங்கைகொண்ட சோழபுரம் என்னும் பெயர் வைக்கப்பெற்று இற்றைக்கு 936 ஆண்டுகள் ஆகின்றன என்று கொள்ளலாம்.

## பெருமை

முதலாம் இராசேந்திரன், இரண்டாம் இராசேந்திரன், முதற்குலோத்துங்கன் முதலானோர் புறநாட்டு மன்னர்களை வென்று வெற்றிக்கொண்டாட்டம் நடத்திய இடம் இதுவாகும் முதற் குலோத்துங்க சோழ மன்னன் கலிங்கப்போரில் வெற்றி பெற்றுத் தன் தலைநகர்க்குத் திரும்பிய காலை, அவைக்களப் புலவராகிய சயங் கொண்டாரைக் கண்டு யானும் சயங் கொண்டான் ஆனேன் என்று கூறியருளியபொழுது, புலவரும் சயங்கொண்டாரைச் சயங்கொண்டார் பாடுதல் தகுதியென்று கூறி கலிங்கத்துப்பரணியைப் பாடியது இப்பதியில்தான். கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர், விக்கிரம சோழன், இரண்டாங் குலோத்துங்கன் இரண்டாம் இராசராசன் இவர்கள்மீது உலாப்பாடிப் பெருமை பெற்றிருந்த பதியும் இதுவாகும். மூன்றுங் குலோத்துங்க சோழன் தெய்வப்பாக் கிழாராகிய சேக்கிழார் பெருந்தகையாரைத் தில்லைக்கு அனுப்பித் திருத்தொண்டர் புராணத்தைப் பாடுமாறு செய்ததோடு நாடோறும் எவ்வளவு பாடல்கள் ஆகியுள்ளன என்பதை ஆளிட்டு அறிந்து வருமாறு செய்தபதியும் இதுதான். சுருங்கக் கூறுமிடத்து ஓவாது செய்ய தமிழ் முழங்கும் தெய்வப்பொதியிலாக இந் நகரம் விளங்கியிருந்தது. இங்கிருந்து ஆண்ட சோழமன்னர்கள் தந்தையில்லார்க்குத் தந்தை ஆகியும், தாய் இல்லார்க்குத் தாய் ஆகியும், மன்னுயிர்கட்கு உயிராகியும், முத்தமிழ்க்கும் தலைவர்களாகியும் அல்லவை கடிந்து அரசியல் முறை நிறுத்திப் புகழ் என்னும் நிலாவைப் பரப்பியதும் இப் பதியிலிருந்துதான். இன்னணம் இதன் பெருமையை விரிப்பின் அகலும், தொகுப்பின் எஞ்சும். ஆதலின் இம்மட்டோடு நிறுத்துகின்றேன்.

## இதன் இற்றைய நிலை

இது திருச்சிராப்பள்ளி சில்லாவில் உடையார்பாளையந் தாலுகாவில் கொள்ளிடப் பேராற்றின் கீழ் அணைக்கட்டிலிருந்து சயங்கொண்ட சோழபுரத்திற்குப் போகும் பெருவழியில் ஒருசிற்றூராய் நிலை பெற்று வருகின்றது. எனினும் முதலாம் இராசேந்திர சோழனின் புகழுக்கு நிலைக்களமாய் விளங்கும் கங்கைகொண்ட சோழேச்சரம் இதன் பண்டைய பெருமையை விளக்கி நமக்கெல்லாம் ஆறுதலையளித்து வருகின்றது. இதையாவது போற்றிப்புரப்பது சோழநாட்டாரின் தனிப் பெருங் கடமையாகும்.

# எந்தச் சிலம்பு

[திரு. டாக்டர் வ. சுப. மாணிக்கம்]

1917 ஆம் ஆண்டில் நகரத்தார் மரபில் பிறந்தார். அண்ணுமலைப் பல்கலைக் கழக வித்துவான் வகுப்பிற் சேர்ந்து முதன் மாணவராக முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்ருர். பண்டித மணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களின் அன்புக்குரிய சிறந்த மாணவராவார். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலேயே தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றிக் கொண்டே பி ஓ. எல்., எம். ஏ., எம். ஓ. எல். ஆகிய பட்டங்கள் பெற்ருர். 1954 ஆம் ஆண்டு, காரைக்குடி அழகப்பா



கல்லூரி விரிவுரையாளராகி இதுபோது பேராசிரியராகத் தமிழ்த்தொண்டாற்றி வருகின்ருர். 'சங்க இலக்கியத்தில் காதல் நலம்' என்ற ஆய்வுரை வரைந்து டாக்டர் பட்டமும் பெற்றுள்ளார். சொல்வன்மைக்காகப் பல பரிசுகள் பெற்றவர். 'வள்ளுவம்' என்னும் பெயரிய திருக்குறள் ஆய்வு நூலொன்று இயற்றிப் பெருஞ் சிறப்புப் பெற்றவர். 'தொல்காப்பியப் புதுமை' 'மனைவியின் உரிமை' 'கொடை விளக்கு' என்ற நூல்களை இயற்றியுள்ளார்.

I

சிலப்பதிகாரம் என்னும் பெயர் சிலம்பு காரணமாக வந்தது என்பது வெளிப்படை. எனினும், அச் சிலம்பு எது? யாருடையது? கண்ணகியின் காற்சிலம்பே காப்பியத்தின் பெயர்க்குக் காரணம் என்று நாம் அறிவோம்; வேறு வகையாக நினைத்துப் பார்க்க அறியோம்.

கோவலன் மாதவி வயப்பட்டனன். பிரிவுற்ற கண்ணகி ''அஞ்செஞ்சீறடி அணி சிலம்பு ஒழிய'' (4. 47) எக்கோலமும் கொள்ளாது துயருறுகின்ருள். மாதவியை வெறுத்துத் திரும்பிய கணவனிடம் 'சிலம்புகள் உள்ளன, கொள்ளுங்கள்' (9. 73) என்று, வாடி வருந்திய நிலையிலும், கண்ணகி நல்லாள் உடையது விளம்புகின்ருள். மனம் நல்வழிப்பட்ட கோவலன் 'இச் சிலம்பை முதலாக வைத்து எல்லாப் பொருளையும் ஈட்டுவேன்' (9.74) என்று குறிக்கோள் பொள்கின்ருன். இவை புகார்க் காண்டத்து வரும் சிலம்புக் குறிப்புக்கள்.

இடை மகள் மாதரியின் இல்லத்துத் தங்கியிருக்கும்போது, மனைவியின் காற்சிலம்பில் ஒன்றை விற்பனைக்கு எடுத்துக் கொண்டு வீதிவழிப் புறப்படுகின்ருன் கோவலன் (16. 92). அச் சித்திரச் சிலம்பின் செய்வினைகளைப் பொற்கொல்லன் காண்கின்ருன் (16 119); செய்வினைச் சிலம்பின் செய்தியெல்லாம் காவலர்க்குக் காட்டுகின்ருன் (16. 160). கணவன் சாவு கேட்ட கண்ணகி எஞ்சிய சிலம்பொன்றைக் கையேந்தி ஊர் சூழ்கின்றனள் (19.2). “பொற்ருெழிற் சிலம்பு ஒன்று ஏந்திய கையள்'' (20. 42) என்று வாயிலோன், கண்ணகி சொல்லப் பணித்தபடியே, பாண்டியன் முன் அறிவிக்கின்ருன் “என்காற் பொற்சிலம்பு மணியுடை அரியே'' (20.67) என வழக்குரைத்துச் சிலம்புடைத்து வேந்தனை வெல்கின்ருள் புகார் நங்கை. ''சிலம்பின் வென்ற சேயிழை நங்கை'' (22. 135) என்று மதுரை நங்கையர் புகழ் பாடுவர். இவை கண்ணகிதன் சிலம்பு பற்றி மதுரைக் காண்டத்து வருபவை.

பாண்டிய வேந்தன் முன்னே சிலம்பொடு சென்று சிலம்பை எறிந்து மாநகர் அழித்த பத்தினியின் வீரத்தைச் சேரன் செங்குட்டுவனுக்கு விரித்து மொழிகின்ருர் சாத்தனர் (25. 71). சிலம்பும் மேகலையும் வளைக்கையும் பொற்ருேடும் பொலிந்த மின்னுக் கொடியை வானத்துக் காண்கின்ருன் செங்குட்டுவன் (29-பா. 9)

''கோவேந்தைச் செஞ்சிலம்பால் வென்ருளை'' (29–பா. 11) வஞ்சி மகளிர் வாழ்த்துப் பாடுவர். இவ்வ வஞ்சிக்காண்டத்து வரும் சிலம்புச் செய்திகள்.

II

கண்ணகியின் சிலம்பு எல்லாக் காண்டத்தும் தொடர்ந்து பேசப்படுதலாலும், கற்புக்கடம்பூண்ட மாபெரும் பத்தினித் தெய்வத்தின் காலணியாக இலங்குதலாலும், சிலப்பதிகாரம் என்னும் நூற்பெயர்க்குக் காரணமான சிலம்பு கண்ணகியுடைய சிலம்பே என்று தமிழறிஞரெல்லாம் இது காறும் எண்ணி வருகின்றனர்; உரையும் விளக்கமும் திறனும் எல்லாம் எழுதி வருகின்றனர். இக் கருத்தை நன்மரபுபோலத் தமிழுலகமும் போற்றி வருகின்றது. சிலப்பதிகாரப் பெயர்க்காரணம் உள்ளூர் மலை போலவும் ஊருணி நீர்போலவும் தெளியக் கிடத்தலின், ஈண்டுச் சிந்தனை எற்றுக்கு என்று பலர் உள்ளலாம். இடைக்காலத் தமிழ்ப்போக்கு பண்டைத் தமிழ்நெறியினும் பல்லாற்ருன் வேறுபட்டது. இடைக்காலப் புலவோர் காலக்கோட்பட்டு எழுதிவிடுத்த மயக்கங்களை, மரபுகள் எனவும், தொல்லோர்தம் உண்மைகள் எனவும், நாணயத் தாள்போல, நாம் ஆராயாது மேற்கொள்வோமேல், தமிழ் ஆராய்ச்சி மேலும் புரையோடிப் புற்றுப்படுங்காண். இடைக்காலோர் சிந்தித்துத் துணிந்த கருத்து என்று பலவற்றில் நாம் சிந்தனை இழப்போமேல், புதைபொருள் என்றும் புதையுண்ட பொருளேயாய்க், குப்பை மேடுகளே கோபுரங்களாய்த் தோன்றும்.

நூற் பெயரீட்டிற்குக் கண்ணகியின் சிலம்பு காரணம் என்று ஆங்காங்கு வந்துள்ள இடங்களையெல்லாம் எடுத்துக் காட்டுகின்ருேமே: இது பொருந்துமா? சிலம்பு மகளிர் அணியாதலின், பெண் என்ற நிலையில், கண்ணகிக்குச் சிலம்பணி கூறிய சிலவிடங்கள் நூலகத்து உள. சிலம்பு காலுக்கு அமைவுற அணிந்தாள் (6. 84) என்று மாதவிக்கும், ''சிலம்பும் கழலும் புலம்பும் சீறடி'' (12. 63) என்று சாலினிக்கும் பெண் வனப்பாகக் கூறியிருத்தலை ஒப்பிடுக. இங்ஙனமே கண்ணகிக்குச் சிலம்பு அணியாகும் பொதுக் கூற்றினை யும், கதைக்குச் சிலம்பு ஆதாரமாகும் சிறப்புக் கூற்றினையும் காப்பியத்து நாம் பிரித்து உணரவேண்டும். மாதவியை மாயத்தாள் என்று கைநெகிழ்ந்து வந்த கோவலனுக்குச் சிலம்பு உள கொள்ளுவீர் என்று புகாரில் கண்ணகி மொழிந்தது கதைக்கு முதற் சிறப்பிடம். சீறடிச் சிலம்பின் ஒன்று கொண்டுபோய் விற்று வருவன் என்று கோவலன் கொண்டு சென்றது பிறிதொரு சிறப்பிடம். எஞ்சியிருந்த ஒரு சிலம்பைக் கையில் எடுத்துக் கொண்டு கண்ணகி ஊர் சுற்றியது மற்ருெரு சிறப்பிடம். வேந்தன் முன்பு அணிமணிக் காற் சிலம்பு உடைத்தது இறுதிச் சிறப்பிடம். இதனோடு கதையியக்கத்துக்குக் கண்ணகி சிலம்பின் தேவை முடிந்துவிடுகின்றது.

*''அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய*
*மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்*
*கொங்கை முன்றிற் குங்குமம் எழுதாள்*
*கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்*
*திங்கள் வாண்முகம் சிறுவியர்ப் பிரியச்*
*செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்*
*பவள வாணுதல் திலகம் இழப்பத்*
*தவள வாணகை கோவலன் இழப்ப*
*மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்*
*கையறு நெஞ்சத்துக் கண்ணகியன்றியும்'' (47.4)*

இவை கணவனைப் பிரிந்த கண்ணகியின் ஆராத் துயரைப் புலப்படுத்தும் நெய்தலடிகள். சிலப்பதிகாரம் என்ற பெயர்க்கேற்ப, இங்கு சிலம்பு முதற்கண் கூறப்பட்டுள்ளது எனக் கண்ணகி சிலம்புக் கொள்கையாளர் எடுத்தியம்புவர். இது பொருந்தாது. 'அஞ்செஞ் சீறடி' எனத் தொடங்கி 'மையிருங் கூந்தல்' என முடிதலின், பிரிவாற்ருக் கண்ணகியின் முழு அவலத் தோற்றத்தை, அடிமுதல் முடிகாறும் எடுத்துக்காட்ட வந்த ஓர் இலக்கிய நெறியாகவே கொள்ளப்படும். இத் தோற்றம் பிரிவு பொருக் கற்புடை நங்கைக்கெல்லாம் சொல்லத்தகும் பொது நிலையாகும். "கையறு நெஞ்சத்துக் கண்ணகி யன்றியும் காதலர்ப் பிரிந்த மாதர் நோதக'' என்று தொடர்ந்து மேல்வரும் கருத்தினை உன்னுக. இவ்விலக்கிய நெறியால் சிலம்பு முற் கூறப்பட்டது என்பது தவிர, அம் முற்கூற்று சிலப்பதிகாரப் பெயர் ஆராய்ச்சிக்கு என்னுனும் தொடர்புடையதன்று.

"என்னேயிஃ தென்னேயிஃ
தென்னேயிஃ தென்னேகொல்
பொன்னஞ் சிலம்பிற்
புனைமே கலைவளைக்கை
நல்வயிரப் பொற்றேட்டு
நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன்று
மீவிசும்பிற் றோன்றுமால்."
(29-பா. 9)

பத்தினிக் கோட்டம் வகுத்த செங்குட்டுவன் கண்ட வானக் காட்சி இது. கண்ணகிதன் சிலம்பாற் பெயரியது சிலப்பதிகாரம் என்பவர் ஈண்டு 'பொன்னஞ் சிலம்பின்' என வருதலை ஒரு சான்றிடமாகத் தொடுத்துக் கூறுவர். இதுவும் அமையாது. சேரன் கண்டது சிலம்பன்று. மின்னுக்கொடி. அக்கொடி சிலம்பும் மேகலையும் பொற்றோடும் என்றின்ன பலவணியாற் பொலிந்த ஒரு பெண் கொடி. பெண் கொடி என்று தெரிவித்தற்கே, சிலம்பு முதலான பெண்ணணிகள் ஒருங்கு கூறப்பட்டன. ஆதலின் ஈண்டுச் சிலம்பணிக்குத் தனிச் சிறப்பில்லை. அது பொது வரவு என அறிக. ஓர் அணியையோ, ஓர் உறுப்பையோ தனித்துச் சிறப்பிக்க இளங்கோ எண்ணியிருப்பரேல், பிற அணிகளோடு உடன் எண்ணாது, சிலம்பு அணிந்த மின்னுக்கொடி எனப் புனைந்திருப்பர்மன். குரங்குக் கைகொண்ட வானவன் சாரணர் முன் தோன்றினன் என்று, கையுறுப்பை மட்டும் அடையாகச் சிறப்பித்துக் காட்டியிருத்தலை அடைக்கலக் காதையிற் காண்க.

III

கண்ணகியின் ஞெகிழம் காரணமாக நூற் பெயர் இடுதல் கூடாது என்பது என் கருத்துரை யன்று. அப்படி நூலாசிரியன் இடவில்லையே என்பதுதான் நாம் அறிய வேண்டும் மெய்யுரை. காப்பிய நடக்கைக்குக் கண்ணகி தேவியின் காற்சிலம்பு எத்துணை இன்றியமையாதது, அத்துணை இன்றியமையாத இன்னொரு தேவியின் சிலம்பும் உண்டு என்று நாம் நினைவு கொண்டோமா? நூற் பெயரை ஆராய முற்பட்டார் எல்லாம், தமிழினம் தமிழை மறந்து வருதல் போல, பாண்டி மாதேவியின் சிலம்பணி சிலப்பதிகாரத்து வருவதை மறந்தயர்ந்தனர். சிலப்பதிகாரம் இருதேவியரின் சிலம்புப் பூசல். இருவர் சிலம்பில் யார் சிலம்பு இன்றேனும், கதை நடவாது; காப்பியம் பிறவாது. கண்ணகி மடந்தையின் ஞெகிழம் காண்டந்தோறும் காதை பலவற்றில் வருவது என்னும் ஒரு கருத்து மயக்கத்தால், ஒரு காண்டத்து ஒருகாதையில் மட்டும் வந்துபோம் அரசியின் காலணியை நினைந்து பார்க்கவும் நினைப்பிலோம். இந் நினையாமைக் கெல்லாம் கற்புத் தெய்வத்தின் புகழ்மேல் நாம் கொண்ட ஈடுபாடே காரணமாம். உரை சால் பத்தினியின் திருவடிக் கலனாற் பெயர் பெற்ற பேறுடையது சிலப்பதிகாரம் என்று சொன்னாற்றான், என்று சொல்லும் போதுதான், நூலுக்கு ஏற்றம் என்னும் ஓர் எண்ணப்பற்று அறியாமலே நம்முள் ஊறிவிட்டது. அதனால் மற்றொரு பெருந்தேவியையும் அவள் காலணியையும் உளங்கொளாது விட்டோம். அரச நங்கையின் சிலம்புகாரணமாகச் சிலப்பதிகாரம் எனப் பெயர் எய்திற்று என்றால், எண்ணிப் பார்மின், நூலின் ஏற்றம் இறங்கிப் போமோ? முடிசூடா மன்னன் என்பது போலக் கல்லெழுதாக் கற்புத் தேவியன்றோ அவ்வரச பத்தினி.

"மன்னவன் மயங்கிவீழ்ந்
தனனே தென்னவன்
கோப்பெருந் தேவி
குலைந்தனள் நடுங்கிக்
கணவனை இழந்தோர்க்குக்
காட்டுவ தில்லென்று
இணையடி தொழுதுவீழ்ந்
தனளே மடமொழி." (20. 78)

"மன்னவன் செல்வுழிச்
செல்க யானெனத்
தன்னுயிர் கொண்டவ
னுயிர்தே டினள்போல்
பெருங்கோப் பெண்டும்
ஒருங்குடன் மாய்ந்தனள்." (25. 84)

இளங்கோவும் சாத்தனாரும் பாண்டி மாதேவி உயிர் துறந்த எளிமையையும் விரைவையும் மாண்புறப் பாராட்டுவர். பாராட்டிய அடிகள், குறள் போலச் சிலவாயினும், அப்பாராட்டு வான் போர்த்த புகழாகும். சாத்தனார் மணிமேகலைக் காப்பியத்து முவ்வகைப் பத்தினியரைக் கூறுவர்.

காதலர் இறப்பின் உடனே இன்னுயிர் ஈவர் (மணி 2. 42) என்று அக்காப்பியம் மொழிந்த முதன்மைப் பெண்டிர்க்குத் தமிழிலக்கியத்துக் கற்கப்படும் ஒரே ஒரு எடுத்துக் காட்டு இப்பாண்டிமா பத்தினி யல்லது யார்? மறக்கறபிற்கும் அறக்கற் பிற்கும் எடை போட முயல்வது அழ கன்று. எடை போட விரும்பிய செங் குட்டுவன்,

"உயிருடன் சென்ற ஒருமகள் தன்னினும்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினும்
நன்னுதல் வியக்கும் நலத்தோர் யார்" (25. 109)

என்று தன் தேவியை வினவினன். 'கண வன் உயிரோடு தன்னுயிர் விட்ட அரச மாது வானகத்துப் பெருந்திரு உறுவாள். நாம் செய்ய வேண்டுவது நம் நாட்டுக்கு வந்த பத்தினிக் கடவுளைப் பரவுவது' என்று சேரமாதேவி மன்னனுக்கு வழி காட்டினள்; செங்குட்டுவனது வேண்டா வினவிற்கு நேர்விடை கொடாது, கற்புடை நங்கையருள் உயர்வு தாழ்வில்லை; கற்பு வழிப்பட்ட எல்லாருமே உயர்ந்தவர் என்று குறிப்பிற் புலப்படுத்தினள். ஆத லின் எத்தேவியின் சிலம்பு காரணமாக நூற் பெயர் வந்திருந்தாலும், நூலின் பெருமைக்குக் குறைவில்லை என்று தெளிக. யார் சிலம்பு என்பது இந்நூற் பெயர் ஆராய்ச்சிக்கு உரிய பொருளன்று; எந்தச் சிலம்பு என்பதுவே ஆய்வுப் பொருள். "சிலம்பு காரணமாகச் சிலப்பதிகாரம் என் னும் பெயரான் நாட்டுதும்", என்ற அடி யைப் படிக்குங்கால், எச்சிலம்பு காரணம் என்ற வினக்கொண்டு ஆராய முனையாது, சிலம்பு அணிந்த ஒரு தேவியை முன் வைத்து ஆராய்ந்தமையால், நம்மனோர் இதுகாறும் செய்த பெயராராய்ச்சி பிழை யாராய்ச்சி யாயிற்று. காப்பிய விலக்கியம் படைத்த இளங்கோ தம் நூற்குப் பெய ரிட்ட போது, கண்ணகி தேவியையோ கோப்பெருந் தேவியையோ காரணமாகக் கருதவில்லை. நிகழ்ச்சிகளின் தீயவிளைவு களுக்கு இல்லறமாசற்ற இத்தேவியர் கார ணரல்லர் என்பது அவர் துணிபு. காவிய இயக்கத்துக்கும் காவிய மாந்தர்களின் வாழ்க்கை மாற்றங்கட்கும் காரணமான ஓர் உயிரிடம்—அரிய பெரிய நுண்ணிய நிகழ்ச்சி—உண்டென்று இளங்கோவிற் குப் பட்டது. அதனை நூற் பெயரிலேயே காட்ட நினைத்தார். இக்காப்பியத்து எத னல் பெரிய பெரிய மாற்றங்கள் அதிகரிக் கின்றன, ஒன்றன்பின் ஒன்று தொடர்ந்து வருகின்றன, அதனல் பெயர் வைக்கக் கருதினர். அது எது? கோப்பெருந் தேவியின் சிலம்பைக் களவாடிய கள்வன் என்று கோவலன் குற்றப் பட்டுக் கொல் லப் படுதலே காப்பியத்தின் துடிப்பான கருவிடமாகும். பொற் கொல்லன் சூழ்ச்சி வினைக்கும், பின்னெழுந்த பல வினைக்கும் இத்தேவியின் சிலம்பே காரணமாயிற்று.

## IV

தன் தேவியின் சிலம்பு என மயங் கிய வேந்தன் "கொன்று அச்சிலம்பு கொணர்க" என்று ஏவி அரசியல் பிழைத் தான்; அறம் கூற்றுதற்கு இடஞ்செய் தான். வேந்தியின் சிலம்போடு கண்ணகி சிலம்பு மோதிய அரிய நிகழ்ச்சியினுற்றுன், கண்ணகி வழக்குரைத்து அரசனையும் அரசியையும் மடிவித்துச் சேரவேந்தன் கல்லெடுப்ப உயர்ந்தோர் ஏத்தும் வெளிப் பட்ட புகழுடையளாயினள். பாண்டிய மன்னன் குடிமக்களுள் ஒரு பெண்ணின் சிலம்பைத் திருடியவன் என்று கோவலன் ஒருவனல் கொலைப்பட்டிருந்தால், கண் ணகியின் கற்பு மறமாக வெளிப்பட்டிருக் குமா? வெளிப்படினும் இத்துணை ஞாலப் பரப்புக்கு இடனுயிருக்குமா? உலகெலாம் தொழத்தக்க உரைசால் பத்தினியெனக் கண்ணகியை ஞாலத்துக்குக் காட்டியது கோப்பெருந் தேவியின் சிலம்புப்பகையே. மேலும், அரசியின் காலணி கவர்ந்த கள் வன் என்று கோவலன் கொல்லப்படும் போதுதான், ஊழ்வினை உருத்து வந்து ஊட்டிய முறைமையைக் காண்கின்றோம்.

" வினைவிளை காலம் ஆதலின் யாவதும்
சினையலர் வேம்பன் தேரா னுகி
ஊர்காப் பாளரைக் கூவி யீங்கென்
தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு
கன்றிய கள்வன் கைய தாகிற்
கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கெனக்
காவலன் ஏவக் கருந்தொழிற் கொல்லனும்
ஏவல் உள்ளத் தெண்ணியது முடித்தெனத்
தீவினை முதிர்வலைச் சென்றுபட் டிருந்த
கோவலன் தன்னைக் குறுகின னுகி "
(16. 148)

கள்வனைக் கொன்று தேவியின் சிலம்பைக் கொணர்க என்று மன்னன் கட்டளையிட்ட காலத்தை வினைவிளைகாலம் என்றும், ஊர்காப்பாளரோடு பொற்கொல்லன் கோவலனை நெருங்கிய காலத்தைத் தீவினை முதிர்ந்த காலம் என்றும் இளங்கோ சுட்டிக் காட்டுதலும் நினையத் தகும்.

''அரைசியல் பிழைத்தோர்க்
கறங்கூற் றுவதூஉம்
உரைசால் பத்தினிக்
குயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந்
தூட்டும் என்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு
காரண மாகச்
சிலப்பதி காரம்
என்னும் பெயரான்
நாட்டுதும் யாமோர்
பாட்டுடைச் செய்யுள்''

இப்பதிக அடிகள் மீண்டும் நினைத்தற்கு உரியவை. இளங்கோ நாட்ட நினைத்த முத்திறக் கொள்கைக்குக் காரணமாக நிற்பது எச்சிலம்பு? நூற் பெயர் ஆராய்வார் விடைகாண வேண்டும் வினா இதுவே. கோப்பெருந் தேவியின் சிலம்புக் கள்வன் என்று கண்ணகி கேள்வன் கொலைப்பட்ட காரணத்தாற்றான், செழியனுக்கு அரசியற் பிழைப்பும், கண்ணகிக்கு உயர்ந்தோர் ஏத்தும், கோவலனுக்கு ஊழ் வினை யூட்டும் நேர்ந்தன என்று மேலே விளக்கினேன். கண்ணகியின் சிலம்பு காரணம் ஆகாதோ எனின், ஆகும், எப்படிக் கதையிருந்தால். கோவலனது சிலம்பை வஞ்சகத்தால் பறித்துக் கொள்ளப் பாண்டியன் சூழ்ச்சி செய்திருந்தால், கண்ணகி சிலம்பினைக் கவரும் ஆசையால் கோவலனைக் கொன்றிருந்தால், ''என் காற் சிலம்பு கொள்ளும் விலைப்பொருட்டாற் கொன்றாரே" (19. 8) என்று கண்ணகி கருதுவது உண்மையாக இருந்தால், அவள் சிலம்பு நூற்பெயர்க்குக் காரணமாயிருக்கும். கதை அப்படி யில்லையே. கோவலன் வைத்திருக்கும் சிலம்பு கோப்பெருந் தேவியின் சிலம்பு என்ற நிலைக்களத்தில் இருந்தன்றே மேல்பெருவிளைவுகள் தோன்றுகின்றன. மூன்று கோட்பாடுகளுள் அறங்கூற்றுதலும் உயர்ந்தோர் ஏத்தலும் இளங்கோ நாட்ட எண்ணிய துணைக்கொள்கைகளே. ஊழ்வினைக்கோள் தான் அவர் நிறுவ முனைந்த தலையாய பேரறம். ''வினை விளைகாலம் என்றீர்; யாது அவர் வினைவிளைவு'' (பதிகம்) என்று சாத்தனார்பால் இளங்கோ மறித்துக் கேட்கும் வினாவால், அவர்க்கு இருந்த இக் கொள்கைப்பற்று நன்கு விளங்கும். சிங்கபுரத்துச் சங்கமன் என்னும் வணிகனை ஒற்றன் என்று பொய்க் குற்றப் படுத்திக் கொல்வித்தான் முற்பிறப்பிற் கோவலன். அதனால் இப்பிறப்பில் சிலம்புக் கள்வன் என்று பொய்க்குற்றப் பட்டுக் கொல்லப் படுகின்றான். இவ்வூழ்வினைப் பயனை அவனுக்கு உறுத்தியது எது? அரச மாதேவியின் சிலம்பைக் கவர்ந்த கள்வன் என்ற குற்றப்பாடே.

V

நூற்பெயர் வைப்பிற்கு உரிய காரணத்தை இளங்கோ மயக்கமறவே சொல்லியுள்ளார். பதிகத்தைப் படிக்கும் நாம் பொருள் பொதிந்த தொடர்களை ஊன்றிப் பாராது, சிலம்பு காரணமாகச் சிலப்பதிகாரம் என்ற பெயர் உண்டாயிற்று என்று பொதுப்படையாகக் கருதி வருகிறோம். ''சூழ்வினைச் சிலம்பு காரணமாக'' என்ற தொடரில் வரும் அடைமொழியை நாம் ஆழ நினைக்கவில்லை. நினையா வண்ணம் உரைகளும் நம்மை ஒருவழிப் படுத்தின. சூழ்வினை—சூழ்ந்த சிற்பத் தொழில் என்பது அரும்பத வுரையாசிரியர் உரை. இவ்வுரைப் பொருளையே இவ்வடை மொழிக்குப் பின்வந்த உரையாசிரியர்களும் எழுதலாயினர். சூழ்வினை என்பது சிலம்பணிக்கு இயற்கை யடை என்று கருதுவது பிழை. பிற சிலம்பினின்றும் வேறுபடுத்திக் காட்டும் இனஞ்சுட்டிய அடை என்று ஈங்குக் கொள்ளவேண்டும்.

சிலப்பதிகாரக் கதைக்கு மூன்று சிலம்புகள் தேவை; கண்ணகியின் சிலம்பு இரண்டு; கோப்பெருந்தேவியின் சிலம்பு ஒன்று. கண்ணகி சிலம்பு ஒவ்வொன்றும் காப்பிய நிகழ்ச்சிக்கு இன்றியமையாதது; தனிச் சுட்டுக்கு உரியது. சீறடிச் சிலம்பின் ஒன்று கொண்டுபோய் விற்று வருவேன் என்று கோவலன் ஒரு சிலம்பை மட்டும்

எடுத்துச் செல்கின்றான். அது பொற் கொல்லன் வஞ்சனையால் வேந்துகோட் படுகின்றது. போற்றருஞ் சிலம்பு, சித்திரச் சிலம்பு, செய்வினைச் சிலம்பு, செஞ்சிலம்பு என இவ்விற்பனைச் சிலம்புக்கு இளங்கோ அடைமொழி புணர்ப்பர். கோவலன் இறந்தபின், கண்ணகியின் மற்றொரு சிலம்பு கதையை நடத்துகின்றது. எஞ்சி நின்ற சிலம்பொன்றைக் கையேந்தி ஊர் சூழ்ந்து, அச்சிலம்பொடு சென்று வேந்தன் முன் வழக்குரைக்கின்றாள் கண்ணகி. செம் பொற் சிலம்பு, இணையரிச் சிலம்பு, பொற் றொழிற் சிலம்பு எனக் கண்ணகி கைச் சிலம்புக்கு இளங்கோ அடைமொழிகுவர். இன்னணம் கோவலனுக்கு ஒரு சிலம்பும் கண்ணகிக்கு ஒரு சிலம்பும் வேறு வேருகப் பயன்படக் காண்கின்றோம்.

கோப்பெருந்தேவியின் சிலம்பு இரண் டையும் பொற்கொல்லன் திருடினனா? ஒன்றுதான் திருடினனா? இரண்டும் கள வாடப்பட்டிருக்குமேல், கோவலனைக் கொன்று ஒரு சிலம்பைக் கொண்டுவந்த போது, மற்றொரு சிலம்பு எங்கே என்று ஊர்காப்பாளர்களைப் பாண்டியன் கட்டா யம் வினவியிருப்பான். வினவியிருப்பா னேல், கண்ணகி வந்து வழக்குரைக்க வேண்டாமலே, தன் கொடுங்கோன்மையை உணர்ந்து உயிர்விட்டிருப்பான். தானே உணர்ந்து கைகுறைத்துக் கொண்ட செங் கோன்மையைப் பொற்கைப் பாண்டியன் வரலாற்றில் அறிகின்றோம். காவலர்களை வினவாமையாலும், காவலன் உயிர் விடாமையாலும், தேவியின் தொலைந்த சிலம்பு ஒன்றேயாகும். கோவலன் சிலம்பு இரண்டையும் விற்க எடுத்துச் சென்றிருப் பினும், கதை வேறுவகையாக முடிந்திருக்க வும் கூடும். இரண்டு சிலம்பு வைத்திருக்கக் கண்டாரேல், கோவலனைக் கொல்ல ஊர் காவலர்கள் மறுத்திருக்கவுங் கூடும். ஊழ் வினையால் ஒரு சிலம்பை மட்டும் கொண்டு சென்றான் கோவலன். "காவலன் தேவிக்கு ஆவது ஓர் காற்கணி நீ விலையிடுதற்கு ஆதியோ'' (16. 111) என ஒரே ஒரு சிலம்பு விற்பனை பற்றியே பொற்கொல்ல னிடமும் பேசுகின்றான்; மேலும், அவ் வொரு சிலம்பு காவலன் தேவிக்கு ஆம் தகுதியுடையது என்றும் சாற்றுகின்றான்.

பொற்கொல்லன் அரசியின் ஒரு சிலம்பு கவர்ந்த கள்வனாதலின், கோவலன் சொற் களைக் கேட்டதும் அவனைக் கள்வனெனச் சாட்டிவிடும் சூழ்ச்சி சட்டென அவனுக்கு உதயமாயிற்று. நுணலும் தன் வாயாற் கெடும் என்பது பழமொழி. கோவலன் தன் கூற்றாற் கெட்டான்.

*'' ஊர்காப் பாளரைக் கூவி ஈங்கென்*
*தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு*
*கன்றிய கள்வன் கைய தாகிற்*
*கொன்றச் சிலம்பு கொணர்க''* (16. 150)

என்பது பாண்டியன் கட்டளை. 'சிலம்பு கையது ஆகின்' என ஒருமை முடிபு பெறு தலின், தேவியின் ஒரு சிலம்புதான் தொலைந்தது என்பது தெளிவு. வேந்தன் நீர்வார் கண்ணொடு வந்த கண்ணகியைக் கண்டான்; காலணியான சிலம்பு கையில் இருப்பக் கண்டான்; அதுவும் ஒற்றைச் சிலம்பாக இருக்கக் கண்டான்; கண்ட போதே பாண்டியன் தோல்வி கண்டான் என ஒரு வெண்பாப் பகர்கின்றது:

*'' மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்*
*கையிற் றனிச்சிலம்பும் கண்ணீரும்—*
*வையைக்கோன்*
*கண்டளவே தோற்றான் அக் காரிகைதன்*
*சொற்செவியில்*
*உண்டளவே தோற்றான் உயிர்.''*

'' கூடலான் கூடாயினன் '' என்று மற்றொரு வெண்பாக் கூறுகின்றது. ஏன்? ஊர்காவலோர் கொண்டு வந்தது தன் தேவியின் சிலம்பு இல்லையோ? இந்நங்கை யின் மற்றொரு சிலம்போ? என்று வேந்தன் உள்ளம் உளையத் தொடங்கிவிட்டது. கோவலன் விற்பனைச்சிலம்பும் கண்ணகி கைச் சிலம்பும் கோத்தேவியின் களவுச் சிலம்பும் ஆகிய மூன்றுமே சிலப்பதிகாரக் கதை நடப்புக்கு உரியவை. முன்னிரு சிலம்புகளுக்கு வந்த அடைமொழிகளை மேலே காட்டினேன். அவ்விரண்டினும் வேறுபாடு தோன்ற, முத்திறக் கொள்கைக் குக் காரணமானது இதுவென அறிய, '' சூழ்வினைச் சிலம்பு '' என்று தேவியின் களவுச் சிலம்புக்கு அடைபுணர்த்தினர் ஆசிரியர். பொற்றொழிற் சிலம்பு, சித்திரச் சிலம்பு என்பனபோல் இத் தேவியின் சிலம்பு தன்மையடை பெறவில்லை. பல

வினைகள் ஒன்றன்பின் ஒன்ருய்ச்சுற்றி வருதற்கு, சூழ்ந்துவருதற்கு, இச்சிலம்பு காரணமாய் இருந்தமையின், சூழ்வினைச் சிலம்பு என்ற அடை பெற்றது. ஊர் சூழ்வரி, மீளசூழ் கோவலர், வையை சூழும் மதுரையார் என்ற தொடர்களை ஒப்பு நோக்குக.

VI

நூலியற்றிய பின்னரே பதிகம் செய்யப்பட்டது. நூலுள் வரும் பல அடிகளையும், சொற்ருெடர்களையும் பதிகத்தவர் தழுவிக்கொண்டார் என்பது மிக வெளிப்படை. திருமாபத்தினி விண் ஏகிய வியப்பைக் குன்றக் குறவர்கள் இளங்கோவிடம் அறிவித்தனர் என்ற செய்தியைப் பதிகம் கூறுகின்றது. செங்குட்டுவனுக்கு இதனைத் தெரிவித்தோரும் அக் குறவர்களே என்று காட்சிக் காதையால் அறிகின்ருேம். குறவர் செய்தி அறிவித்தகாலை, உடனிருந்த தமிழ்ச் சாத்தனுர் கோவலன் கண்ணகியார் வரலாற்றை இளங்கோவுக்கும் சேரனுக்கும் எடுத்து விளக்கினுர் என்று முறையே பதிகமும் காட்சிக் காதையும் மேலும் ஒருங்கு புலப்படுத்துகின்றன.

" தீவினைச் சிலம்பு காரண மாக
ஆய்தொடி யரிவை கணவற் குற்றதும்,
வலம்படு தானை மன்னன் முன்னர்ச்
சிலம்பொடு சென்ற சேயிழை வழக்கும்,
செஞ்சிலம் பெறிந்து தேவி முன்னர்
வஞ்சினம் சாற்றிய மாபெரும் பத்தினி
அஞ்சி லோதி அறிகெனப் பெயர்ந்து
முதிரா முலைமுகத் தெழுந்த தீயின்
மதுரை மூதூர் மாநகர் சுட்டதும்" (25. 69)

இவை சாத்தனுர் செங்குட்டுவற்கு மொழியும் வரலாற்று விளக்கம்; மேலும், நூற் பெயரின் உண்மை காண்பான் என்னை ஆராயத் தூண்டிய அடிகள். தீவினைச் சிலம்பு, சிலம்பொடு சென்ற, செஞ்சிலம் பெறிந்து என மூன்று சிலம்புகள் இப் பகுதியில் இடம் பெற்றுள. " சிலம்பொடு சென்ற சேயிழை வழக்கு " என்ற தொடர் கண்ணகியின் கைச் சிலம்பைக் குறிக்கும். கண்ணகி தான் ஏந்திச் சென்ற கைச்சிலம்பை வேந்தன் முன் உடைக்கவில்லை. இச் சிலம்பை உடைத்து உள்ளிருக்கும் பரல் மாணிக்கம் என்று காட்டுவது சான்ருகுமோ? இதனுடு இணையான மற்ருெரு என் சிலம்பையே என் கணவன் கொண்டு சென்ருன் காண்மின் என்று பறைசாற்றுவதே கண்ணகி கைச்சிலம்பின் பயன். ஊர் காவலர் கொன்று கொண்டுவந்த சிலம்பே உள்ளது மாணிக்கமா முத்தா என்று காண்பதற்கு உரியது. கண்ணகி சிலம்புகள் மணிப்பரல் உடையன. தேவியின் சிலம்புகள் முத்துப்பரல் உடையன. எனினும், இப்பொதுச் செய்தி வழக்குரையன்று. கண்ணகியின் கைச்சிலம்பு மணிப் பரல் உடையதாக இருக்கலாம். தேவியின் தொலையாத அரண்மனைச் சிலம்பு முத்துப்பரல் உடையதாக இருக்கலாம். எத் தேவியின் சிலம்பு எப்பரலுடையது என்று காண்பதா ஈண்டு வழக்காட்டம்? கண்ணகி சிலம்பின்பரல் மணி; தேவியின் சிலம்புப்பரல் முத்து. இப்பொதுத் தன்மையை ஊர் காப்பாளர் கொண்டு வந்த ஒரு சிலம்பில் வைத்துப் பார்த்துப் பரல் வேறுபாடு கண்டு வழக்கின் உண்மை தெளிய வேண்டும். இவ்விளக்கத்தை நினைந்து பின்வரும் வழக்குரை யடிகளை நோக்குக:

" என்காற் பொற்சிலம்பு மணியுடை [யரியேஎனத்
தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி
யாமுடைச் சிலம்பு முத்துடை யரியே."
(20. 67)

என் கணவன் விற்க எடுத்துவந்த என் சிலம்பு மணிப்பரல் உடையது எனக் கண்ணகி வழக்காடினுள் என்றும், நீ சொல்வது சரியான சான்று; எனினும், ஊர்காவலர் கொன்று கொணர்ந்து யாம் வைத்திருக்கும் சிலம்பு முத்துப்பரல் உடையது எனப் பாண்டியன் எதிர்ச்சான்று விளம்பினுன் என்றும், இப்பகுதிக்கு ஒரு சிலம்பின்மேல் எழுந்த வழக்காகக்கொள்ள வேண்டும். பின்னர் வழக்கிற்கு உரிய அச் சிலம்பைக் கொண்டு வருக என்று பாண்டியன் ஏவினுன்; மெல்லப் பிரித்துப் பார்க்கும் கருத்தோடு அதனைத் தன்முன் வைத்தான். அச்சிலம்பைப் பார்த்தாள் கண்ணகி. இச்சிலம்பால் கணவனை இழந்து வாழ்வு முடிந்த நிலையை எண்ணினுள்; பொருது பொங்கிய சினத்தளாய் அதனை உடைத்தெறிந்தாள். உள்ளிருந்த

மணிப்பரல் 'கொன்று அச்சிலம்பு கொணர்க' என்று சொல்லிய தென்னவன் வாயைத் தாக்கிற்று. ஆதலின் 'செஞ் சிலம்பு எறிந்து' என்று மேலே தந்த காட்சிக் காதைப் பகுதியில் வருவது கோவலன் விற்பனைக்குக் கொண்டு சென்ற சிலம்பையே குறிப்பதாகும். ''கொங்கை யாற் கூடற்பதி சிதைத்துக் கோவேந்தைச் செஞ்சிலம்பால் வென்றுளைப் பாடுதும் வம்மெல்லாம்'' என்று வாழ்த்துக் காதை யிலும், இவ்வழக்குச் சிலம்பு 'செஞ்சிலம்பு' என அடைமொழிப்படுகை காண்க.

'சிலம்பொடு' என்பதும் 'செஞ்சிலம்பு' என்பதும் கண்ணகி சிலம்பிரண்டினையும் குறித்து விடுதலின், 'தீவினைச் சிலம்பு' என முதலில் வருவது கோப்பெருந் தேவியின் களவுச் சிலம்பு என்று உய்த் துணரலாமன்றோ?

> '' தீவினைச் சிலம்பு காரண மாக
> ஆய்தொடி யரிவை கணவற் குற்றதும்''

என்ற ஈரடிகளின் நடை தனித்து நினையத் தகும். ஆய்தொடி யரிவை என்பது கண்ணகியையும், அரிவை கணவன் என் பது கோவலனையும், கணவற்கு உற்றது என்பது அவன் கொலைப்படுதலையும் குறிப் பன. தீவினைச் சிலம்பு என்பதற்குக் கண்ணகி சிலம்பு என்று பொருள்படுத் தின், கண்ணகி சிலம்பு காரணமாக அவள் கணவன் கொலைப்பட்டான் என்று பொருள்படும். இச் சிலம்பா அவன் கொலைக்குக் காரணம்? ஆய்தொடி யரிவை சிலம்பு காரணமாகக் கணவற்குற்றது என்று நடையில்லை. ஆய்தொடி யரிவை கணவன் என்பது பின்னடியாக இருத்த லின், முன்னடியில் வரும் தீவினைச்சிலம்பு, கதைப்படி, கோப்பெருந்தேவியினது ஆதல் தெளிவு. இக்காட்சிக் காதையில் வரும் சிலம்பின் முத்தொடர்களும் கண்ணகியின் இரு சிலம்புகளையே குறிக் கும் எனக்கொளின், அரச தேவியின் சிலம்பு குறிப்பிட வேண்டாவா? அச் சிலம்பு இன்றேல், கண்ணகி தன் சிலம்பு அணிந்து நல்வாழ்வு வாழ்ந்திருப் பாள். ஆயின், இளங்கோ காப்பியத்துக்குப் பொருளாகியிராள். தேவியின் சிலம்புக் கள்வன் என்று குற்றஞ்சுமத்திய காரணத் தாற்றுன், காரணத்தின்பின்தான், கோவ லன் கொலையுண்ணலும், கண்ணகி வழக் குரைப்பும், சிலம்புடைப்பும், வஞ்சினம் சாற்றலும், மாநகர் அழிவும், தென்னவன் வீழ்வும், தேவி மாய்வும் எல்லாம் நிகழ்ந் தன என்று செங்குட்டுவனுக்குச் சாத்தனர் விளக்கினர். பலர் மாய்வுக்குக் காரணமாக இருந்தமையின், பாண்டியன் சிலம்பினைத் ''தீவினைச் சிலம்பு'' என்று தொடங்கினர். இச் சிலம்பின் தொடர்பு இன்றேல், இவ் வளவு பெரிய அரிய விளைவுகள் நடந்திரா என்பது புலவர் கருத்து. ''தீவினைச் சிலம்பு காரணமாக'' என்று காட்சிக் காதையில் வருவதும், ''சூழ்வினைச் சிலம்பு காரணமாக" என்று பதிகத்தில் வருவதும் ஒப்புநோக்குவார்க்குக் கோப்பெருந்தேவி யின் தொலை சிலம்பே காரணம் என்பது செவ்விதின் விளங்கும்.

சிலப்பதிகாரப் பெயர் பற்றிய என் ஆராய்ச்சி முன்னையோர் ஒருமுகமாகக் கூறிவரும் கருத்துக்கு முற்றுமுரணுக இருந் தாலும், உண்மைகாண முயலலும், கண்ட உண்மையை வலியுறுத்தலும் தமிழ் மாணவர் கடனுகும். இக்கடமையுணர்ச் சியே என் கருத்தை வெளியிடத் தூண் டிற்று.

---

## 'இருவினைப் பயனைத் தருபவன் இறையே'

'செய்வினையும், செய்வானும், அதன் பயனும், சேர்ப்பானும்' எனப் பொருள்கள் நான்கினையும் மெய்வகையென மேற்கொண்டொழுகுதல் நன் னெறியாகும். இவ்வுண்மையினை வரும் செந்தமிழ்ப் பொதுமறையானுணரலாம்:

> ''வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
> தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.''

—திருக்குறள் ௩௭௭.

# தமிழும் ஆரியமும்

[பேராசிரியர், திரு. சி. இலக்குவனார்]

*17-11-1909*-இல் இவர் பிறந்தார். இவர் சொந்த ஊர் மதுரை. பிறந்த ஊர் வால்மேடு. தந்தையாரின் பெயர், சிங்காரவேல். இவர் திருவையாற்று அரசர் கல்லூரியில் தனித்தமிழ் வித்துவான் பயின்று, சிறந்த முறையில் தேர்ச்சியுற்று, அக் கல்லூரியிலேயே பல ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராக இருந்தார். மேலும் பயின்று எம் ஏ, எம். ஓ. எல் என்னும் பட்டங்களையும் பெற்றார். தற்பொழுது மதுரை தியாகராசர் கல்லூரியின் தமிழ்த் துறைத் தலைவராகப் பணியாற்றி



வருகிறார். தமிழகப் புலவர் குழுவின் உறுப்பினருள் இவரும் ஒருவர். மேலை நாட்டவரும் வியக்கும் வண்ணம் தொல்காப்பியத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். ''இலக்கியம்'' போன்ற பல இதழ்களையும் வெளியிட்டுள்ளார். 'தமிழ் கற்பிக்கும் முறை', 'திருக்குறள் பொழிப்புரை விளக்கவுரை,' 'அமைச்சர்யார்,' 'தொல்காப்பிய ஆராய்ச்சி,' 'Semantemes and Morphemes in Tamil language' என்பன இவருடைய நூல்களுட் சிலவாகும்.

மக்கள் நன்மைக்காக மக்களாற் படைத்துக் கொள்ளப் பட்டவற்றுள் மாண்பு மிக்கு விளங்குவது மொழியொன்றே. மக்களை விலங்குகளினின்றும் வேறுபடுத்து உயர்த்துவதும் மொழியே. மக்களை மக்களாக வாழச் செய்வதும் மொழியே. மொழியின்றேல் உலகில் ஒன்றுமே இன்று எனக் கூறலாம்.

பயன்மிகு கருவியாம் இம்மொழியைத் தமிழர் படைத்துக் கொண்ட காலம் யாது எனக் கூறல் இயலாது. உலகில் மாந்தரினம் தோன்றியது நம் தென்னகத்திலென்றும், பழங்கற் கருவிக் காலத்திலேயே தமக்குப் பயன்படும் மொழியைப் பெற்றிருக்க வேண்டுமென்றும் வரலாற்று ஆசிரியர் கருதுகின்றனர். (Pre-historic South India - P. 41, 42, 173, 178)

ஆரியர்கள் இந்நாட்டிற்கு வருவதன் முன்னர் இமயம் முதல் குமரி வரை வழக்கில் இருந்த மொழி தமிழ்தான் என்பது நடுநிலை தவறாத ஆராய்ச்சியாளர் நூல்களால் அறியப்படும் உண்மையாகும். ஆரியம் தமிழோடு கொண்ட கலப்பின் பயனாகவே இன்று நம் பரதகண்டத்தில் உலவும் மொழிகள் உருவாகி வளர்ந்துள்ளன. ஆதலின் இந்திய மொழிகளின் தந்தையாக ஆரியத்தையும் தாயாகத் தமிழையும் ஆராய்ச்சியாளர் சிலர் உருவகப் படுத்திக் கூறுவர். ஆரியத்தைத் தந்தையென அழைத்து அதற்கு முதன்மை கொடுப்பதாக எண்ணி மகிழ்ந்தாலும், இந்திய மொழிகளின் தாய் தமிழ் என்பதை ஏற்றுக்கொள்ளும் நிலை ஏற்பட்டு விடுகின்றது; ஆரியமே இந்திய மொழிகளின் அன்னை என்ற கொள்கை உண்மைக்கு மாறுபட்டது என்பது வெளிப்பட்டுவிடுகின்றது.

''சதுர்மறை ஆரியம் வருமுன்
சகமுழுது நினதாயின்
முதுமொழி நீ அநாதியென
மொழிகுவதும் வியப்பாமோ?''

என்னும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் கூற்று, மொழிப்பற்று மிக்க புலவர் கூற்று எனப் புறக்கணித்துவிடல் இயலாது. பரத கண்ட முழுவதும் பரவி வழங்கி வந்த பழந்தமிழோடு ஆரியம் கலப்புற்றுப் பல்வேறு கிளைமொழிகள் உருவாகியுள்ளன. வடஇந்திய மொழிகள் தமிழ்க்குழு மொழிகளோடு வேறுபட்டன போல் தோன்றினும், தமிழ்மொழி அடிப்படையிலேயே அவை உருவாகி வளர்ந்துள்ளன என்பது நுணுகி ஆராய்வார்க்

குத் தெள்ளிதிற் புலனாகும். (Studies in Dravidian Philology-Pages 9—10)

வடாது பனிபடு நெடுவரையும் தெனாது உருகெழு குமரிக்கடலும் எல்லைக ளாகக் கொண்டு வழங்கி வந்த பழந்தமிழ், ஆரிய மொழிக் கலப்பால் சிதைவுண்டு காலப்போக்கில் பல்வேறு கிளைமொழிக ளாக் கிளைத்தது. ஆரிய மொழித்தன்மை மிகுந்துள்ள மொழிகள் ஆரியக் குடும்ப மொழிகள் எனவும், தமிழ்த்தன்மை மிகுந்த மொழிகள் தமிழ்க் குடும்ப மொழிகள் (திராவிடக் குடும்ப மொழிகள்) எனவும் அழைக்கப்படுகின்றன. ஆரிய மொழியும் அதனைச் சார்ந்துள்ள மொழிகளும் தமிழ்த் தன்மைகளை மிகுதியான அளவில் இன் றும் கொண்டு விளங்குகின்றன. (The Origin and Development of The Bengali Language - Pages 170-178; Comparative Grammar of Dravidian Languages P. 55) அன்றியும் ஆரிய மொழி, எழுத் துக்களைப் படைத்துக் கொண்டதே அது தமிழோடு தொடர்பு கொண்ட பின்னர் தான் என்பது இருமொழி எழுத்துக் களையும் நுணுகி ஆராய்ந்தால் தெள்ளி தின் புலனாகும். இரு மொழிகளும் வேறு பட்ட இனத்தினவாயிருந்தும் இரண் டிலும் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் பத்து உயிர்களும்; க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம, ய, ர, ல, வ, ள என்னும் பதினைந்து மெய்யெழுத்துக் களும் ஒத்திருக்கின்றனவே! எதனால் இவ் வொற்றுமை? ஒன்றைத் தழுவி இன் னொன்று அமைத்துக் கொண்டாலன்றி இவ்வொற்றுமை ஏற்பட இயலாதன்றோ? எதனைத் தழுவி எது அமைத்துக் கொண் டது?

வடமொழியில் உள்ள ஐவ் வருக் கங்களை நோக்கினால் தமிழினைத் தழுவித் தான் ஆரிய மொழி தன் எழுத்துக்களை அமைத்துக்கொண்டது என்று புலனாகும். ஐந்து வருக்கங்களிலும் முதல் எழுத்தும் கடைசி எழுத்தும் இரண்டு மொழிகளிலும் ஒன்றே. இடையில் உள்ள மூன்று எழுத் துக்களும் ஆரியம் மிகுதியாகப் பெற்றுள் ளது. தமிழிலும் அவ்வொலிகள் உண்டு. ஆனால் அவ்வொலிகளைக் காட்டும் தனி வரி வடிவங்கள் இல்லை. கடன் பெற்ற கூர்த்த மதியுடைய ஆரியம், புதிய வரிவடி வங்களைப் படைத்துத் தன் நெடுங்கணக் கினை விரிவு படுத்திக்கொண்டது; வரி வடிவக் குறைபாடற்ற மொழியாகி விட்ட தாகக் காட்டிக் கொண்டது. நன்றாகச் செய்யப்பட்டது – சமஸ்கிருதம் – என்று தன்னை அழைத்துக் கொண்டது.

ஏன்? தமிழ்மொழி ஆரியத்தைத் தழு வித் தன் நெடுங்கணக்கை அமைத்துக் கொண்டது என்று கூறினால் பொருந் தாதோ எனின், முற்றிலும் பொருந்தாது. கடன் கொடுப்பான் ஒருவன் வேண்டியன பெற்றுக்கொள் என்று உரிமையளிக்குங் கால், குறைவாகப் பெறுவார் இருப்பரோ? இரார். அங்ஙனமே தமிழ் ஆரியத்தினின் றும் கடன் பெற்றிருக்குமேல் குறைபா டுடைய முறையில் கடன் பெறக் காரணம் இல்லை. ஆரிய நெடுங்கணக்கைப் போல் அமைத்துக் கொண்டிருக்கலாமே. தமிழி னின்றும் உருமாறிப் பிரிந்த தெலுங்கு, மலையாளம் பிற்றை நாளில் அவ்வாறு செய்து கொள்ள வில்லையா? ஆதலின் தமிழ் நெடுங் கணக்கைக் கண்ட பின்னரே ஆரியம் தன் நெடுங்கணக்கை அமைத் துக்கொண்டது என்பதே சாலப் பொருந் தும். ஆரியர் இந்நாட்டுக்கு வந்தகாலம் கி. மு. 2000 முதல் 1500 வரை என்பார். அக்காலத்திலேயே தமிழ்மொழி எழுத்துக் களைப் பெற்றிருந்த செம்மொழியாகும். தமிழ் எழுத்துக்களைக் கண்டே ஆரியமும், பொனீஷியர் மொழியும், எகிப்தியர் மொழி யும் எழுத்துக்களை அமைத்துக் கொண்டன என்று கூறுதலே பொருந்தும். இதற்கு மாறாகச் சிலர் கருதுவது உண்மைக்கு மாறானதாகும்.

குமரியொடு வடவிமயத்து ஒரு மொழி யாய் வழங்கி வந்த தமிழ் ஆரியத்தின் கலப்பால் பல மொழிகளாகப் பிரிந்தது. தொல்காப்பியர் காலமாம் கி. மு. ஏழாம் நூற்றாண்டு அளவில் வடவேங்கடம் தென்குமரி ஆயிடையே தமிழ் எனும் பெயருடன் தனியே நிலவியது.

குமரியென்று கூறப்படுவது இப் பொழுதுள்ள குமரிமுனை (கன்னியா குமரி) அன்று எனவும் இலங்கைக்குத் தெற்கே பூமையக் கோட்டை ஒட்டியிருந்த குமரி மலையெனவும், குமரியாறெனவும் ஆராய்ச்

சியாளர் கூறுகின்றனர். அங்ஙனமாயின் தெற்கே இலங்கிய தமிழகத்தின் பெரும் பரப்புக் கடலால் விழுங்கப்பட்டுவிட்டது என்று அறிதல் வேண்டும். கடல் விழுங்கிய செய்தியைத் தமிழ் இலக்கியங்கள் சுட்டிக்காட்டுகின்றன. (கலித்தொகை, சிலப்பதிகாரம்)

எனவே வடக்கே இமயமுதல் தெற்கே பூமையக்கோடு வரையில் பொதுக்கடிந்து ஆட்சியிலிருந்த தமிழ், வடக்கே ஆரியத்தாலும் தெற்கே கடலாலும் நெருக்குண்டு, சங்க கால இறுதியில் திருப்பதி எனப்படும் வேங்கடத்திற்கும் குமரி முனைக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பில் மட்டுமே வழங்கும் நிலையை எய்தியது. அன்றுள்ள தமிழின் நிலையைத் தொல்காப்பியத்தின் துணைகொண்டு நன்கு அறியலாகும்.

'தொல்காப்பியம்' என்ற பெயர் பற்றியும் அதன் காலம் பற்றியும் சிலர்-குறிப்பாக வையாபுரிப் பிள்ளை அவர்கள்-உண்மைக்குப் புறம்பான செய்திகளைக் கூறியுள்ளனர். தொல்காப்பியத்தின் காலம் கி. மு. ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது அல்லது வடமொழியாளர் தென்னாட்டிற் குடிபுகத் தொடங்கிய காலம் எனத் திட்டவட்டமாகக் கூறலாகும். (விரிவு "தொல்காப்பிய ஆராய்ச்சி" எனும் எனது நூலிற் காண்க.)

தொல்காப்பியர் காலத்தில்தான் வேங்கடத்திற்குத் தெற்கே ஆரியர் வந்தனர் என்றும், ஆரியமொழியாம் சமக்கிருதமும் தமிழும் ஒன்றோடொன்று தொடர்புகொண்டன என்றும் தொல்காப்பியத்தின் துணைகொண்டு அறியலாகும். தொல்காப்பியத்தின் நூற்பாக்கள் இருவகையாக அமைந்திருக்கக் காணலாகும். சில விதிகளைத் தொல்காப்பியர் தாமே கூறுவதுபோல் அமைந்திருப்பது ஒருவகை; பிறர் கூற்றினை மேற்கொண்டு கூறுவதுபோல் அமைந்திருப்பது இன்னொரு வகை. தமக்கு முன்பு நிலவிய வழக்கைக் கூறுங்கால் பிறர் கூற்றாகவே கூறுவார். தமிழுக்கு எழுத்துக்கள் முப்பது என்பதும் அவை அகர முதல் னகர இறுவாய் எண்ணப்பட்டு வந்தன என்பதும் தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே உள்ள செய்திகள் என்பது அவர் நூற்பாவால் அறியலாம். "எழுத்தெனப்படுப அகரமுதல் னகர இறுவாய் முப்பது என்ப" என்று கூறுவதை நோக்குமின். ஆனால் வடமொழிச் சொற்கள் தமிழில் கலக்குங்கால் எவ்வாறு எழுதப்படவேண்டும் என்று கூறும்போது தாமே கூறுவதுபோல் நூற்பா அமைந்துள்ளது:

"வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே"

என்னும் நூற்பாவில் 'என்ப' 'என்மனார்' போன்ற சொற்கள் இன்மையால், வடசொற்கள் தமிழில் கலக்குங்கால் வடவெழுத்துக்குரிய ஒலியின்றித் தமிழ் எழுத்துக்குரிய ஒலியால் எழுதப்படவேண்டும் என்று விதி வகுத்தவர் தொல்காப்பியரேயாவார். இன்றும் இவ்விதி, பிறமொழிச் சொற்களை எவ்வாறு எடுத்தாள வேண்டுமென்பதற்கு நமக்கு வழிகாட்டுகின்றது.

ஆரியம் தமிழைக் கண்டு தம் ஒலி வடிவ எழுத்துக்களை அமைத்துக் கொண்டமையால் இருபத்தைந்து எழுத்துக்கள் இரண்டிலும் ஒன்றாய் உள்ளன. தமிழில் உள்ள எழுத்துக்கள் இருபத்தைந்தையும் ஏற்றுக்கொண்டு எ, ஒ, ற, ன, ழ என்னும் ஐந்து எழுத்துக்களையும் விட்டுவிட்டது ஆரியம். ஆகவே எ, ஒ நீங்கிய உயிர் பத்தும் க–ங, ச–ஞ, ட–ண, த-ந, ப–ம முதலிய பத்தும் ய, ர, ல, வ, ள முதலிய ஐந்தும் ஆக இருபத்தைந்தும் இரண்டுக்கும் பொதுவாம். தொல்காப்பியர் காலத்தில் எ, ஒ என்ற இரண்டும் புள்ளி பெற்று எழுதப்பட்டு வந்துள்ளன. எழுதுங்கால் புள்ளி விட்டும் எழுதியிருப்பர். அதனால் ஆரியர் குறில்களை விடுத்து நெடில்களை அமைத்துக்கொண்டனர் போலும். தமிழ் மொழியின் ஈரோசைச் சட்ட இயல்பு அறியாது, ஒரு வரி வடிவம் ஒரே ஒலியைத்தான் குறிப்பிடவேண்டுமென்று கருதி, ஐவருக்கங்களிலும் மும்மூன்று எழுத்துக்களையும் பிற எழுத்துக்களையும் படைத்துக் கொண்டனர்.

இரு மொழிக்கும் உரிய பொதுவெழுத்துக்களால் ஆன சொற்கள் இரண்டு மொழிகளிலும் தடையின்றிப் பயிலத் தொடங்கின. தமிழ்ச்சொற்கள் பல ஆரி

யத்துள் சென்றன. ஆரியச் சொற்கள் தமிழிலும் புகுந்தன. ஆரியர்கள் செல்வாக்கு இந்நாட்டில் பெருகப் பெருகத் தம் மொழியில் புகும் தமிழ்ச் சொற்களே உரு மாற்றி வடமொழிச் சொற்கள் எனக் கருது மாறு ஆக்கிக்கொண்டனர். வடமொழியைக் கடவுள்மொழி (தேவ பாஷை) என்றும் ஏனைய மொழிகளைப் பேய்மொழிகள் என்றும் (பைசாச பாஷை) அழைத்தனர். வடமொழியானது கடன் கொடுக்குமேயன்றிக் கடன் கொள்ளாது என்றும் பறைசாற்றினர். தமிழ்மொழியாளர் வடமொழியாளர் மருட்டலில் மயங்கி வடசொற்களைக்கலந்து பேசலே நாகரிகத்தின் உயர்வுக்கு அறிகுறி என்று தமிழ்மொழியில் வடசொற்களைக் கலந்து பேசலை மகிழ்ந்து ஏற்றனர். தொல்காப்பியர் விதியையும் மறந்தனர். ஆரியத்தைக் கற்று அதில் நூல்களையும் இயற்றினர். ஆரியர்கள் இந் நாட்டு மக்களில் சிறுபான்மையினராக இருந்தமையால் இந் நாட்டு மக்கள் மொழியை அழித்துவிட முடியவில்லை. இந் நாட்டு மக்கள் ஆரிய மொழியின் சொற்களைத் தான் ஏற்றுக்கொண்டனரே யன்றி மொழியின் அடிப்படை அமைப்பை மாற்றிக் கொண்டாரிலர். இந் நாட்டு மொழியமைப்பில் ஆரியமொழிச் சொற்கள் மிகுந்து புது மொழிகள் தோன்றின. ஆனல் ஆரியம் மறைந்துவிட்டது. வடஇந்திய மொழிகள் தமிழின் அமைப்பின் மீது வடசொற்களைக் கொண்டு கட்டப்பட்டவைகளாம். தென்னிந்திய மொழிகள் ஆரிய மொழியைப் பின்பற்ற முயன்றபோதும் தம் சொற்களை இழந்துவிடவில்லை. ஆதலின் தமிழ்த் தன்மை மிகுந்துள்ளன. வடஇந்திய மொழிகளினின்றும் வேறுபட்டுக் காணப்படுகின்றன. வடஇந்திய மொழிகளும் தென்னிந்திய மொழிகளும் இன்று ஆரியக் குடும்ப மொழிகள் என்றும் திராவிடக் குடும்ப மொழிகள் என்றும் மொழிநூலாரால் அழைக்கப்படுகின்றன. எல்லாம் தமிழ்த்தாயினின்றும் தோன்றியனவேயாம். ஆரியம் உலக வழக்கழிந்து ஒழிந்ததுபோல் தமிழ் ஒழியாது. தமிழுக்குரியோர் இந்நாட்டு மக்கள். எங்கும் பெரும்பான்மையினராய் உள்ளனர். பெரும்பான்மையினர் மொழியை — இலக்கண அமைப்பும் இலக்கிய வளமும் கொண்ட மொழியை — சிறுபான்மையினர் மொழி அழித்தல் இயலாது. ஆகவே தமிழும் அதன்வழிப் பிறந்த மொழிகளும் ஒரு நாளும் அழியா.

இன்று இந்தியாவின் ஆட்சிமொழியாக இருப்பதற்கு உரிமையுடையது தமிழேயாகும். இந்தி அதன் சொற்களால் ஆரியத்தின் வழிமொழியே என்ருலும் கட்டமைப்பால் தமிழேயாகும். கலப்பு மொழியாகும். அதற்குள்ள உரிமை தாய் மொழியாம் தமிழுக்கு இல்லையே! தமிழுக்கு முழு உரிமை அளிக்காது போயினும், இந்தியோடு வீற்றிருக்கும் சம உரிமையாவது அளிக்கலாம் அன்ருே? ஆகவே இந்திய அரசின் ஆட்சிமொழிகளுள் ஒன்ருகத் தமிழையும் ஆக்குதல் வேண்டும். இந்தியர்கள் அனைவரும் தமிழைக் கற்பதற்குரிய வசதிகளையும் கல்வித்திட்டத்தில் ஏற்படுத்தல் வேண்டும். வடஇந்தியர்கள் தமிழையும் தென்னிந்தியர்கள் வடமொழியையும் கற்றல் வேண்டும். தமிழும் ஆரியமும் கற்கப்பட்டால் வடக்கு தெற்கு என்ற வேறுபாடு மறைந்து அனைவரும் ஒற்றுமையுற்று வாழும் நிலை தோன்றும். தமிழே இந்திய மொழிகளின் தாய் என்றும் ஆரியக் கலப்பால்தான் தமிழ் இவ்வாறு பல மொழிகளாகக் கிளைத்தது என்றும் அறியும் நிலை ஏற்படும். இருவேறுபட்ட இனத்தைச் சார்ந்த இரண்டும் இணைந்து தன்னியல் மாற்றம் உருமல் தனித்தனியே வளர்ச்சியுற வழியமைத்தல் வேண்டும். குமரியொடு வடஇமயத்து ஒரு மொழியாய் வாழ்ந்த தமிழ் ஆரியத்தால் அழிவுண்டது. ஆரியம் மறைந்துவிட்டது. அழிவுற்று உரிமையிழந்த தமிழை அரியணையில் ஏற்றுவதற்கு ஆவன செய்தல் அனைவர்க்கும் உரிய கடனாகும்.

---

# தமிழரும் தமிழ்நாகரிகமும்

[பேராசிரியர், திரு. கா. பொ. இரத்தினம்]

*10-3-1914* இல் யாழ்ப்பாணத்து வேலணையில் பிறந்தார். தந்தையார் பொன்னம்பலம்; தாயார் பத்தினிப் பிள்ளை. இலண்டன் பல்கலைக்கழக பி.ஏ (ஆனர்சு), சென்னைப் பல்கலைக் கழக பி.ஓ.எல், எம்.ஏ, வித்துவான் முதலிய பட்டங்களைப் பெற்ருர். இலங்கை அரசினரின் தமிழ் ஆராய்ச்சிப் புலமைப் பரிசில் பெற்று, சென்னைப் பல்கலைக்கழகத்தில் இரண்டாண்டுகள் தமிழாராய்ச்சி செய்தார். கொழும்பு அரசினர் ஆங்கில ஆசிரியர் கல்லூரியில் பன்னிரண்டு ஆண்டுகள் பேராசிரியராகப் பணியாற்றினர். சென்ற ஐந்தாண்டுகளாக இலங்கை அரசகரும மொழித் திணைக்களத்தில் தமிழாராய்ச்சித் தலைவராகப் பணியாற்றி வருகிருர். திருக்குறளை உலகெங்கும் பரப்பும் நோக்குடன் தமிழ்மறைக் கழகத்தை நிறுவி நடத்துகிருர். மாஸ்கோவில் நடைபெற்ற கிழைநாட்டியற் புலவர்களின் உலகமாநாட்டில் சொற்பொழிவாற்றியுள்ளார். 'இலங்கையில் இன்பத் தமிழ்' போன்ற பல அரிய தமிழ் நூல்களை இயற்றியுள்ளார்.



இவ்வுலகில் ஈராயிரத்து எழுநூற்றுத்தொண்ணூற்ருறு மொழிகள் உள. இவற்றுள், பத்துலட்சத்துக்கு மேற்பட்ட மக்களாற் பேசப்படும் மொழிகள் இருநூறு; நாலு கோடிக்கு மேற்பட்ட மக்களாற் பேசப்படுவன இருபது. இந்த இருபது மொழிகளிலே தமிழும் ஒன்ருகும். எனினும், இது சமஸ்கிருதம், கிரிக்கு, இலத்தின் என்பனவற்றைப் போன்றதொரு உயர்தனிச் செம்மொழியாகவும் விளங்குகிறது. தமிழோடு பழைமைபாராட்டும் மொழிகள் மாற்றமடைந்தும், இறந்தும் போய்விடத் தமிழ்மொழி மட்டும் இன்றும் இளமையோடு இலங்குகின்றது. மொழிவரலாற்றிலே, ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்ததுபோல் இன்றும் குன்ருத இளமையுடன் வாழும் உயர்தனிச் செம்மொழிக்கு உதாரணமாகத் தமிழ்மொழியினை மட்டுமே குறிப்பிடலாம்.

இப்பொழுது தமிழ்மொழி தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் மட்டுமன்றி மலாயா, சிங்கப்பூர், பர்மா, பிச்சித்தீவுகள், மொறிசியசு, தென் ஆப்ரிக்கா முதலிய இடங்களினும் வழங்கிவருகிறது.

''தமிழகம்'' எனுஞ் சொல்லே தமிழ் வழங்கும் நாடுகளைக் குறித்தற்குப் பழந்தமிழ் இலக்கியங்களில் வழங்கப்பட்டுளது. இச்சொல்லை, தொலமி என்பார், 'தமரிக்கா' எனக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழகத்திலே தமிழினைப் பேசி வாழ்ந்த மக்கள் தமிழர் எனப்பட்டனர். தமிழர்கள் இந்தியாவின் பழங்குடியினரே, பின்னர்வந்த ஆரியர்களையும் பிற சாதியினரையும் போல வேறிடத்திலிருந்து இந்தியாவுக்குட் புகுந்த குடியினரோ என்பது முன்னர் விவாதத்துக்குரியதாயிருந்தது. ஐரோப்பிய அறிஞர்களும் இந்திய அறிஞர்களும் இது பற்றிப் பல கருத்துக்களை வெளிப்படுத்தியுளர்.

கால்டுவெல்,[1] கனகசபைப் பிள்ளை,[2] மாசுமன்,[3] பேக்குயூசன்,[4] கென்னடி,[5] திருப்பதி,[6] முதலானேர் தமிழர் தோன்றிய விடம் இந்தியாவுக்கு வெளியே எனக்

1. A Comparative Grammar of the Dravidian Languages.
2. Tamils 1800 years ago.
3. History of India.
4. History of Indian and Eastern Architecture.
5. J. R. S. Journal.
6. Ancient India.

குறிப்பிட்டுளர் எனினும் இவர்களுடைய கொள்கைகள் பொருத்தமற்றனவெனவும் தமிழர்கள் தென்னிந்தியாவுடன் தொடர்ந்து பரந்திருந்த இலெமூரியாக் கண்டத்தையே தம் பிறப்பிடமாகக் கொண்டவர்கள் எனவும் பூரணலிங்கம் பிள்ளை[1] முதலானோர் கூறியுளர். மொகஞ்ச தாரை, ஆரப்பாமுதலிய இடங்களில் எடுக்கப்பட்ட புதை பொருள்களும் பழந்தமிழ் இலக்கியங்களும் இவர்களுடைய கருத்தை அரண் செய்கின்றன.

இலெமூரியாக்கண்டம் இக்காலத் தமிழ்நாடுகளையுள்ளடக்கி இந்து சமுத்திரத்திற் பெரும் பகுதியிற் பரவியிருந்தது.[2] தமிழ் இலக்கியங்கள் இக்கண்டத்தையே சம்புத்தீவு அல்லது நாவலந்தீவு எனக் குறிப்பிடுகின்றன என்பர். அடுத்தடுத்து உண்டான பெருங்கடல் கோள்களினால் இப்பரந்த கண்டம் மறைந்து போக விந்தியமலைக்குத் தெற்கேயுள்ள தக்காணம் மட்டுமே எஞ்சிற்று. புவிவரலாற்றியல், மனிதவியல், சரித்திரம் முதலிய துறைகளிலே தேர்ந்த பேரறிஞர்கள் இக் கடல்கோள்கள் நிகழ்ந்தனவென்பதை ஏற்றுளர். பேராசிரிய சிக்கில்[3] மனித இனத்தின் தொட்டிலைப் பற்றிக் கொண்டுள்ள கருத்தும் தக்காணம் மிகப்பழைய தொரு நிலப்பகுதியென்பதை வலியுறுத்துகிறது. இறைசினி[4] என்பார் தக்காணம் உலகின் மிகப்பழைய பூப்பகுதிகளில் ஒன்று என்றுரைத்துளர். இவற்றால், தக்காணம் பல்லாயிர ஆண்டுகளாக நிலைத்துள்ள பூப்பகுதி என்பது தெளிவாகின்றது. எனவே இறைசிலி என்பார் கூறுவது போலத் தக்காணத்திலே தமிழர் சரித்திர காலந்தொடக்கம் மட்டுமன்றி, அளவிட்டுக் கூறமுடியாத காலமாக ஆங்கு வாழ்ந்து வருகிறார்கள் எனலாம். தமிழ்ச் சொற்களையும், தமிழ்மக்களின் பழக்க வழக்கங்களையும் ஆராய்ந்து தமிழர் தென்னிந்தியாவின் பழங்குடிகளே என, பி. டி. சீனிவாச ஐயங்கார்''[5] முடிவு செய்துளர்.

இவ்விடத்திலே திருக்குறள் செய்யுள் ஒன்றிலே வரும் பழங்குடி எனுஞ்சொல்லுக்குப் பரிமேலழகர் கூறும் விளக்கவுரை குறிப்பிடத்தக்கது. ''தொன்று தொட்டு வருதல் சேரசோழ பாண்டியரென்றாற் போலப் படைப்புக் காலந்தொடங்கி மேம்பட்டுவருதல்'' என்கிறார் பரிமேலழகர். புறப்பொருள் வெண்பாமாலையிலே ஒரு குடியின் பழைமை ''கற்றோன்றி மண் டோன்றாக் காலத்தே வாளோடு, முற்றோன்றி மூத்தகுடி'' எனக் கூறப்பட்டுளது. இவையெல்லாம் தமிழர் கடல்கோள்களுக்கு இரையான இலெமூரியாக் கண்டத்தைச் சேர்ந்தவர்கள் என்பதையும் இக் கண்டத்தில் இப்பொழுது தக்காணமே எஞ்சியுளது என்பதையும் நன்கு புலப்படுத்துகின்றன.

''திராவிடர்களின் பிறப்பிடம் இந்தியாவின் தென்பகுதி எனக்கொள்ளலே மிகப் பொருத்தமானது. இந்தியாவுக்கு வெளியேயுள்ள எப்பகுதியுடனும் அவர்களை இணைக்கும் ஐதிகக் கதை ஒன்றுமில்லை. அவர்கள் உறவு கொண்டாடத் தக்க இனத்தவர்களும் இந்தியாவுக்கு வெளியேயில்லை. யாமறிந்த அளவில் அவர்கள் இந்தியாவின் பழங்குடிகளே யாவர்'' எனக் கலாநிதி பேக்குயூசன்[6] கூறியுளர். இவருடைய கூற்றைக் கலாநிதி கிறையேசனும் வலியுறுத்தியுளர். இந்தியாவின் மொழியியற்கணிப்பு எனும் நூலில் கிறையேசன் பின்வருமாறு கூறியுளர்: ''திராவிடர்கள் பொதுவாக இந்தியாவிலே அன்றேல் தென் இந்தியாவிலே தோன்றியவர்கள் என்றே கொள்ளப்படுகின்றனர். இவர்கள் தென்னிந்தியாவின் பழங்குடிகள் அல்லர் என்பதை அறிவிக்கும் சான்றொன்றுமில்லை.'' டாக்டர் மாக்கிலேன்[7] என்பவரும் இக்கருத்தையே வெளிப்படுத்தினர்.

இலெமூரியாக் கண்டத்தில் அன்றேல் அதன் ஒருபகுதியாகிய தக்காணத்தில் வாழ்ந்த பழந்தமிழர் வட இந்தியாவுக்கும்

1. History of Tamil Literature and Tamil India.
2. Lost Lemuria—Scott Eliot.
3. History of creation and Pedigree of Man.
4. The Peoples of India-H. Risely, p. 2.
5. History of the Tamils, p. 23.
6. Linguistic Survey of India Vol. IV.
7. Manual of Madras Administration, Vol I.

இந்தியாவுக்கும் வெளியிலும் சென்று வாழ்ந்தனர்.[1] இதனாலேயே கி. மு. 3000 ஆண்டில் மொகஞ்சதாரை ஆரப்பா எனு மிடங்களிலே மிகச் சிறந்த நாகரிகம் படைத்த மக்கள் வாழ்ந்தனரென அறிகிறோம். மொகஞ்சதாரை நாகரிகத்தைக் கெராசு அடிகளார் திராவிடரின் நாகரிகத்துடன் இணைத்துக் காட்டியுளர்.[2] திராவிடருக்கு இத்தகைய பழமையை அளிக்க விரும்பாத சிலர் மொகஞ்சதாரை நாகரிகத்தை இன்னும் திராவிட நாகரிகம் என்று முற்றாக ஒப்புக் கொள்ளவில்லை.

சிவ வழிபாடு தென்னிந்தியத் தமிழருக்கேயுரிய தனிவழிபாடென்பதை மாக்சு முல்லர், போப் போன்ற மேனாட்டு அறிஞர்களும் ஒப்புக் கொண்டுளர்.[3] சிவன் திராவிடருடைய கடவுளே என்பதை கே. எம். பணிக்கர் அவர்களும் 'இந்திய வரலாற்றுக் கணிப்பு' எனும் தமது நூலிற் சிறப்பாக எடுத்துக் காட்டி நிறுவியுளர். மொகஞ்சதாரை மக்களிடையே காணப்பட்ட சிவவழிபாடு அவர்களைத் திராவிடருடன் எவ்வித ஐயத்துக்குமிடமின்றி இணைக்கின்றது.

சேர்யோன்மாகஸ் என்பவர் "மொகஞ்சதாரை நாகரிகம் பிற நாடுகளிலிருந்து புகுந்தது என்றோ, அதன் இயல்பு பிற நாடுகளாற் பாதிக்கப்பட்ட தென்றோ கொள்ளுதற்கு எவ்வித காரணமுமில்லை" என்று எழுதியுளர்.[4] எனவே மொகஞ்சதாரை நாகரிகம் ஆரிய நாகரிகத்துக்கு முந்திய இந்திய நாகரிகத்தின் ஒரு பகுதியென்பதும், அந்நாகரிகம் திராவிட நாகரிகமே என்பதும் புலப்படுகின்றன. "இந்தியக்குடா நாட்டின் பழங்குடிகள் திராவிடரேயாவார். அவர்களுடைய நாகரிகமே மெசப்பொத்தேமியாவுக்குப் பரவிச் செமிற்றிற்கு நாகரிகத்தின் அடிப்படையாக விளங்கிற்று" என்று இறைசிலி கூறுவதும் கருதத்தக்கது. "அணிமைக் கீழை நாடுகளின் பழைய வரலாறு" எனும் நூலில் ஓல் என்பாரும் இத்தகைய கருத்துக்களை வெளியிட்டுளர். "இந்திய நாகரிகமும் பண்பாடும் ஆரியர் வருகைக்கு முன்பே தோன்றியன; இந்திய ஆரியருடைய நாகரிகமும் தாழ்வும் திராவிடராலேயே உண்டானவை" எனவும் ஓல் கூறியுளர்.[5] மொகஞ்சதாரை நாகரிகத்துக்கு ஏறக்குறைய 2000 ஆண்டுகளுக்குப்பின், கி. மு. 1500 அளவில் பஞ்சாப்பு வெளியினுள்ளே ஆரியர்கள் புகுந்தனர். அப்பொழுது அவர்கள் அங்கிருந்த மக்களைத் தாசர்கள் என வழங்கினர்; அவர்களுடன் போரிட்டனர். இப்போரே வேத நூல்களின் சரித்திரப் பின்னணியாகும்.

மொகஞ்சதாரை நாகரிகத்துக்குத் திராவிட நாகரிகத்தோடு சிறப்பாகத் தமிழ் நாகரிகத்தோடு உள்ள தொடர்பு எத்தகையதாயிருப்பினும், இந்தியத் தமிழர் ஆரியர் இந்தியாவுக்கு வருதற்குப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னரே மிகச் சிறந்துயர்ந்த நாகரிகத்தை உடையவர்களாயிருந்தனர் என்பது மறுக்கவோ மறைக்கவோ முடியாததோர் உண்மையாகும்; நேரு, சிலேற்றர், இருப்சன், ஓல் முதலிய பலரும் இதனை எடுத்தியம்பியுளர்.[6] "ஆரியர் இந்தியாவுக்கு வருவதற்கு முன்னரே தமிழ்மொழி நல்வளர்ச்சி யடைந்திருந்தது" எனக் குமயூம் கபீர் என்பார் தமது "இந்திய மரபுரிமை" எனும் நூலிற் கூறியுளர்.[7] இருக்கு வேதப் பாடல்களும் இவ்வுண்மையை நன்கு புலப்படுத்துகின்றன. "தாசர்கள் அல்லது தமிழர்கள் எனப்படுவோர் இந்தியா முழுவதிலும் பல்வேறு நகரங்களில் வாழ்ந்தனர். அவர்களுடைய அரசர்கள் பெருஞ்செல்வர்களாயிருந்தனர்; அளவில்லாப் பசுக்களையும் குதிரைகளையும்

1. India and Pacific World p. 279—Kalidas Nag.
2. Sight of the Mohenja Daro Riddle - The New Review—No. 19. Vol. IV.
3. South Indian Bronzes p. 47, G. O. Gangly.
4. Monenjo Daro and Indian Civilization.
5. Ancient History of the Near East—J. R. Hall.
6. Discovery of India—Jawaharlal Nehru. Dravidian Element in Indian Culture—G. Slater, Ancient India-Robson.
7. The Indian Heritage—Humayun Kabir.

தேர்களையும் உடையவர்களாயிருந்தனர். இவையாவும் நூறுகதவுகளையுடைய கோட்டைகளாயிருந்தன. தாசர்கள், பொன் வைர நகைகளை அணிந்து தம்மை அழகு படுத்தினர். அவர்கள் ஆரியருடைய சமயக் கிரியைகளை ஏற்றுக் கொள்ள வில்லை. வணிகர்கள் 'பணிக்கர்' என வழங்கப்பட்டனர். இவர்கள் ஐரோப்பிய ஆப்பிரிக்க நாடுகளுடனும் கடல் வழியாகவும் நிலவழியாகவும் வியாபாரஞ் செய்தனர்."

உவில் துறந்து என்பார் திராவிடமக்களைப்பற்றிப் பின்வருமாறு "எமது கீழைத் தேயமரபுரிமை'' எனும் தமது நூலிற் கூறியுளர். "ஆரியர்கள், திராவிடர்களிடையே புகுந்தபொழுது திராவிடர்கள் முன்னரே நாகரிகமடைந்த மக்களாயிருந்தனர். திராவிடவணிகர்கள் சுமேரியாவுக்கும் பாபிலோனியாவுக்கும் கப்பல்களிற் சென்றனர். அவர்களுடைய நகரங்களில் போகப் பொருள்கள் பல இருந்தன. அவர்களிடமிருந்தே ஆரியர்கள் கிராமச்சமுதாயம், நிலவாட்சி, வரி முதலியனவற்றைக் கற்றனர். இன்றுவரை தக்காணம் மக்கட்குலம், பழக்கவழக்கங்கள், மொழி, இலக்கியம், கலைகள் முதலியவற்றிலும், சிறப்பாகத் திராவிடமாகவே இருக்கிறது.''

ஆரியநாகரிகமும், சமஸ்கிருதமொழியும், வடஇந்திய மொழிகளும் தமிழரின் நாகரிகத்தாலும், தமிழ் மொழியாலும் வளம்படுத்தப்பட்டன. படிப்படியாக ஆரியர் வடஇந்தியாவிலிருந்த பழங்குடிகளோடு கலந்து வடஇந்தியாவில் பெரும்பான்மைச் சாதியினராக ஆகினர். எனினும், தென் இந்தியாவில் வாழ்ந்த மக்களை ஆரியர் தம் வலிமையினால் அடக்கி ஆள முடியாதவர்களாயினர். வட இந்தியப் பேரரசருள் ஒருவராக விளங்கிய அசோகரும் தமது மவுரியப் பேரரசைக் கலிங்கம் வரையுமே விசாலிக்கச் செய்தார். காவேரி, தாமிரவருணி எனும் ஆறுகளின் வளம்மிக்க வெளிகள் ஆரியரைக் கவர்ந்தன. எனவே அவர்கள், குடியேற்றுக்காரர்களாகவும், ஆசிரியர்களாகவும், சமயக்குருக்களாகவும் தமிழகத்திலே நுழையத் தொடங்கினர். இவ்வாறு நுழைந்தவர்கள் தமிழ் அரசர்களிடத்துப் பெருஞ் செல்வாக்கு உடையவர்களாகவும் ஆகினர். ஆரியருடைய நுழைவினால் ஆரியருடைய பழக்க வழக்கங்களும், சமயக்கோட்பாடுகளும், பிறவும் தமிழரிடையே பரவத் தொடங்கின. எனினும், தமிழருடைய சமுதாய அமைப்பும், மொழியும், பழக்க வழக்கங்களும் இன்றும் பெரும் மாறுபாடு அடையாமற் றனித் தனித்தன்மையுடன் நிலைத்து நிற்கின்றன.

தமிழகத்திலே நுழைந்த ஆரியர்களுட் பெரும்பாலானோர் பிராமணர்களாவார். இவர்களே இப்பொழுது தமிழகத்திற் காணப்படும் சாதிவேற்றுமைகளையும் குருட்டுப் பழக்க வழக்கங்களையும் நிலைநாட்டினர். பிராமணர்கள் தங்களை உலகத்தில் மிக உயர்ந்த சாதியினர் இவ்வுலகத்தேவர் (பூசுரர்) எனக் கூறிக் கொண்டு தம் தரத்துக்காகச் சைவசமயத்திலும் சாதிவேற்றுமையைப் புகுத்தினர். இவர்கள் தங்கள் சமக்கிருத மொழியைத் தேவ பாடை என்று போற்றித் தமிழை இழித்தனர். தமிழின் தனித்தன்மையையும் முதன்மையையும் பழமையையும் மறைத்து அதனைச் சமக்கிருதத்தின் ஒரு கிளை மொழியாக்கிவிட முயன்றனர். இப்பிராமணர்கள் பிற மக்களோடு கலவாது தனித்து வாழ்ந்தனர். இவர்கள் வாழ்ந்த இடங்கள் ''சதுர்வேதிமங்கலம்'' எனவும் ''பிரமபுரம்'' எனவும் வழங்கப்பட்டன. இவ்விடங்கள் வேதப்படிப்பின் இருப்பிடங்களாக விளங்கின.

பௌத்தமும், சமணமும் தென்னிந்தியாவிற் பரவின பொழுது அவை ஆரிய நாகரிகத்தைத் தென்னிந்தியாவிற் புகுத்தித் தமிழரின் நாகரிகத்தை மாற்ற முனைந்தன. பௌத்தர் சமணர்களின் இலக்கிய இலக்கண நூல்கள் தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தியமை குறிப்பிடத்தக்கதே.

சரித்திரத்துக்கு முற்பட்ட காலந் தொடக்கம் தென் இந்தியாவிலுள்ள தமிழகத்தில் வாழ்ந்துவரும் தமிழரின் வரலாற்றினை நன்கு அறிதற்குச் சான்றுகள் இன்னும் போதிய அளவுக்குக் கிடைக்கவில்லை. எனினும், சேர சோழ பாண்டியப் பேரரசுகளைப் பழங்காலத்திலேயே பலநாடுகள்

அறிந்திருந்தன. கி. மு. நாலாம் நூற்ருண்டில் வரையப்பட்ட அசோகரின் கல் வெட்டுக்கள் இவற்றைப்பற்றிக் குறிப்பிடு கின்றன.[1] சந்திரகுப்த மவுரிய அரசனவையிலே கிரேக்க தூதராக யிருந்த மெகத்தெனிசு பாண்டிய அரசையும், அதன் செல்வம், படை முதலியவற்றையும், பற்றிக் குறிப்பிட்டிருக்கிருர். கி. மு. நாலாம் நூற்ருண்டில் வாழ்ந்தவர் எனக் கருதப்படும் சமக்கிருத இலக்கண ஆசிரியராகிய காத்தியாயனர் இப்பேரரசுகளைப் பற்றிக் கூறியுளர். வால்மீகியின் இராமாயணமும் பாரதமும் இவற்றைப் பற்றி வருணித்துள. இசுத்தாபோ ஒரு பாண்டிய அரசனைக் குறிப்பிட்டுளர் (கி. மு. 22). பெரிப்பிளசும் (கி. மு. 81) தலமியும் (கி. பி. 180) தென்னிந்தியாவில் சிறந்த துறைகளைப் பற்றிய விவரங்களைத் தந்து அத்துறைகள் மிகப் பழமையுடையன என்று கூறியுளர்.

இத்தகைய பிறநாட்டாரின் குறிப்புக் களைவிடத் தமிழரின் பழைய வரலாற்றையும் அவர் தம் நாகரிகத்தையும் நாம் அறிந்து கொள்ளுதற்கு இப்பொழுது சங்க இலக்கியங்களே உதவுகின்றன.

தமிழிலக்கண விலக்கியங்களும், பரம்பரை வரலாறுகளும் ஏறக்குறையக் கிறித்துவுக்குமுன் மூன்று சங்கங்கள் ஒன்றையடுத்தொன்ருக நிலைத்து விளங்கின என்றுரைக்கின்றன. இவற்றைப் பற்றிய வரலாறுகளை இறையனர் அகப்பொருளுரையிலே காணலாம். இவ்வுரை முதற் சங்கம் கிறித்துவுக்குப் பதினயிரம் ஆண்டுகளுக்கு முன் தொடங்கியதெனக் கூறுகிறது. இதன் ஆண்டுக் கணக்குக்களையும் பிற விவரங்களையும் பலர் ஏற்றுக்கொள்ளத் தயங்குகின்றனர். எனினும், இச் சங்கங்கள் கி. பி. மூன்ரும் நூற்ருண்டுக்குமுன் இருந்தன என்பதை மறுத்தல் முடியாது.[2] இச் சங்கங்களைப் பற்றி இலக்கிய இலக்கண நூல்களினும், புராணங்களினும் கல்வெட்டினும் காணப்படும் செய்திகளை இலகுவில் ஒதுக்கித் தள்ளல் ஒண்ணுது.

தக்காணத்தின் பழைய வரலாறு இன்னும் நன்கு ஆராயப்படவில்லை. தென்னிந்தியாவிலே புதைபொருள் ஆராய்ச்சி தொடக்க நிலையிலேதான் இருக்கிறது. புதைபொருள் ஆராய்ச்சி வளர்ச்சியடைந்தால் இச்சங்கங்களின் வரலாற்றை மட்டும் அன்றிப் பழந்தமிழரின் நாகரிகத்தையும் நன்கு அறிதற்கு ஏற்ற புதைபொருள்கள் பல கிடைத்தல் கூடும். இதற்குத் திருநெல்வேலிமாவட்டத்திலுள்ள ஆதிச்சநல்லூரில் எடுக்கப்பட்ட பிணத்தாழிகளையும் இரும்புக் கருவிகளையும் உதாரணமாகக் கூறலாம். கி. மு. 1200 அளவில் ஆதிச்சநல்லூரிலே தமிழர் நெல்லைப் பயிரிட்டனர். அங்கேயே இரும்புக் கைத்தொழிலும் தோன்றிற்று.

கி. மு. 4000 ஆண்டளவிலேயே சால்தியர் போன்ற பழங்குடிமக்களுடனும்[3] சாலமோன் போன்ற அரசர்களுடனும்[4] வியாபாரஞ் செய்த தமிழர் சிறந்த கல்வியும் உயர்ந்த நாகரிகமும் உடையவர்களாகவே இருந்திருப்பார். திசையறி கருவி கண்டு பிடிக்கப்படாத பழங்காலத்திலே திரைகடலோடி வாணிகஞ் செய்த தமிழர் புவியியல், கணிதம் முதலியவற்றை நன்கு அறிந்தவர்களாகவும் பிறநாட்டு மக்களின் மொழிகளைப் பயின்றவர்களாயும் இருந்திருப்பர்.

முன்னர்க் குறிப்பிட்ட தமிழ்ச்சங்கங்களைத் தமிழ் அரசர்களே நடத்திவந்தனர். நன்முறையில் நிறுவப்பட்ட அரசாங்கம் கல்வியை வளர்ப்பதற்குப் புலவர்களுக்குப் பொருளுதவி செய்து அவர்களை ஆதரிப்பது விந்தையான செயலன்று. அரசர்களின் ஆதரவினல் புலவர்கள் தம் வாழ்நாளை இலக்கியத்தைப் படைத்தலிலே கழித்தனர்.

இச் சங்கங்களின் காலத்திலே தோன்றியனவெனக் கூறப்படும் நூல்களில் இப்பொழுது தொல்காப்பியமும், மேற்கணக்குக் கீழ்க்கணக்கு நூல்களுமே கிடைக்கின்றன. ஏனைய வெல்லாம் கடலாலும், நெருப்பாலும் கரையானுலும் அழிக்கப்பட்டன. இரண்டாஞ்சங்க காலத்தில் நிகழ்ந்த கடல்கோளினல் அழிக்கப்பட்ட

1. Rock Edicts, 11, xiii. 2. The Pandyan Kingdom, p. 36—K. A.M. Sastri.
3. Hibbert Lectures p. 137—Prof. A. S. Sayce. 4. Kings, IX-X.

நூல்களைப் பற்றித் திருவிளையாடற் புராணம் குறிப்பிடுகிறது.

தொல்காப்பியமே இப்பொழுதுள்ள தமிழ்நூல்களில் மிகப் பழையதெனக் கொள்ளப்படுகிறது. தொல்காப்பியம் தோன்றிய காலம்பற்றிக் கருத்து வேற்றுமைகள் உண்டு.[1] தொல்காப்பியப் பாயிரத்திலே ஐந்திரம் எனும் வடமொழி இலக்கண நூலைப்பற்றிக் கூறப்படுவதால் தொல்காப்பியம் கி. மு. ஏழாம் நூற்றாண்டிலே தோன்றியதெனக் கூறப்படும் பாணினீய இலக்கணநூலுக்கு முந்திய [2]தெனச் சிலர் கருதுகின்றனர்.

கடைச்சங்க நூல்கள் கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்கு முந்தியவை என்பது எல்லோரும் ஏற்றுக்கொண்ட முடிபாகும். தொல்காப்பியமே இக்கடைச் சங்க நூல்களுக்கு இலக்கணமாக யிருந்ததென்பர். தொல்காப்பியம் ஓர் இலக்கண நூலாதலின் அதற்குமுன் பல இலக்கிய நூல்களிருந்திருத்தல்வேண்டும். தொல்காப்பியத்திலேயே இதற்குப் பல சான்றுகள் உண்டு. ஆரியர்கள் இந்தியாவுக்குள் நுழைந்த காலத்திலேயே சிறந்த இலக்கியத்தை உடையவர்களா யிருந்த தமிழர்கள் பல நூல்களை ஆக்கியிருப்பார்கள் என்பதும், அந்நூல்கள் யாவும் அழிந்துவிட்டன என்பதும், அந்நூல்களிலே தொல்காப்பியமே எஞ்சியுளதென்பதும் அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளத்தக்க முடிபுகளேயாகும்.

தொல்காப்பியத்தையும் கடைச்சங்க நூல்களையும் பற்றிப் பிற நாட்டினர் இன்னும் நன்கு அறிந்து கொள்ளவில்லை. சமக்கிருத நூல்கள் பல ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டமையால் சமக்கிருதத்தை மேனாட்டு அறிஞர்கள் நன்கு கற்பதற்கு வாய்ப்பு உண்டாயிற்று. இதனால் இந்திய ஆரியருடைய பண்பாடு நாகரிகம் முதலியன பற்றிப் பல நூல்கள் எழுதப்பட்டன. இந்தியாவின் பழமையையும் பெருமையையும் பற்றிப் பேசும் பிற நாட்டறிஞர்கள் ஆரிய நாகரிகத்தையும் சமக்கிருத மொழியையும் பற்றியே பேசத் தொடங்கினர். பேராசிரியர் சூல்சு புளொக்குக் கூறுவதைப் போல் தனியியல்புடைய பழம்பெரும் பண்பாட்டையும், உலகிலேயே பழமைமிக்க நாகரிகத்தையும், இந்தியாவில் மிகப் பழைய மொழியினையும் உரிய தமிழரைப்பற்றிப் பிற நாட்டார் நன்கு அறிதற்குப் போதிய வாய்ப்புக்கள் உண்டாகவில்லை. அவர்களுடைய நூல்கள் ஐரோப்பிய மொழிகளிலே மொழிபெயர்க்கப்படவில்லை. இப்பொழுது தமிழரையும் தமிழையும் பற்றிப் பிற நாட்டினர் சிறிது அறியத் தொடங்கியதற்கு ஐரோப்பிய அறிஞர்கள் சிலருடைய அருந்தொண்டே காரணமாகும். இந்த அறிஞர்களுக்கும் கடைச்சங்க நூல்கள் முழுவதும் முன்னர்க் கிடைக்கவில்லை.

சங்க இலக்கியங்கள் தமிழரின் உயர்ந்த பண்பையும் சிறந்த நாகரிகத்தையும் நன்கு புலப்படுத்துகின்றன. சேர சோழ பாண்டிய அரசர்களுடைய தலைநகரங்களைப் பற்றி அவை வருணிக்கின்றன. இந்நகரங்களிலே பலநாட்டு மக்கள் சேர்ந்து உறைந்தனர். நகராட்சி நன்முறையில் நடைபெற்றது. பெருவீதிகளும் சிறு வீதிகளும் செம்மையாக அமைக்கப்பட்டன. வீதிகள் வெளிச்சமிடப்பட்டிருந்தன. பல எழுநிலைமாடங்கள் நகர்களை அலங்கரித்தன. நகர மக்களிற் பலர் பெருஞ் செல்வர்களாயிருந்தனர். இலக்கியம், இசை, நாடகம், ஓவியம் முதலிய கவின்கலைகள் போற்றிவளர்க்கப்பட்டன. மகளிர் விலையுயர்ந்த அணிகளையும் ஆடைகளையும் அணிந்தனர்; நறுமணம் மிக்க பூமாலைகளாலும் சாந்துகளாலும் தம்மை அழகுபடுத்தினர்.

ஊராட்சி மன்றங்கள் செம்மையாகத் தொழிலாற்றின; நாட்டுமக்கள் சமூகவாழ்வுக்கு வேண்டிய பல தொழில்களையும் செய்து நாட்டில் செல்வத்தைப் பெருக்கினர்.

அரசர்கள் நீதிதவறாது கோலோச்சினர். அவர்களுக்கு அறிவுரைகூறும் பல அவைகள் இருந்தன. ஐம்பெருங்குழு, எண்பேராயம் முதலியனவும் அரசவமைப்பில் அடங்கியிருந்தன.

1. The Chronology of the Ancient Tamils appendix, IX.—Sivaraja Pillai.
2. இலக்கிய வரலாறு – கா. சு. பிள்ளை, பக்கம், 59.

சமயம், தத்துவம் முதலிய துறைகளிலும் தமிழர் முன்னேற்றமடைந்திருந்தனர். தமிழ் நூல்களிற் பெரும்பாலன அறநெறிகளைப் பற்றிக் கூறுகின்றன. இவை ஒவ்வொரு மனிதனுடைய கடமைகளையும் அவன் சமுதாயத்துக்குச் செய்ய வேண்டிய கடமைகளையும் வலியுறுத்தி ஒரு சிறந்த சமுதாய அமைப்புக்கு வழிகோலின. ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' எனும் பேருண்மையை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழர் உணர்ந்து கடைப்பிடிக்க முயன்றனர். நாகரிக முதிர்ச்சியிற் றோன்றும் இக்கருத்துத் தமிழ்மக்களின் பரந்த நோக்கத்தையும், உயர்ந்த குறிக்கோளையும், ஓருலகக்கொள்கையையும், சமரச சன்மார்க்கத்தையும் நன்கு புலப்படுத்துகிறது. பல்லாயிர ஆண்டுகளாக வாழ்ந்து படிப்படியாக ஒப்பற்ற உயர்நிலையடைந்த தமிழ் மக்களின் வரலாற்றையும் நாகரிகச் சிறப்பையும் விரித்து விளக்குதற்கு எனக்குக் கொடுக்கப்பட்ட நேரம் போதாது. எனவே உங்கள் கருத்தைக் கவரத்தக்க சிலவற்றைத் தொட்டுக் காட்டியுளேன். இனி, இவற்றை விரிவாக அறிய முயலுதல் உங்கள் கடமையாகும். என் உரையை முடிப்பதற்குமுன் தமிழ் இலக்கியத்தின் தனிச் சிறப்பை உங்களுக்கெடுத்துக் காட்ட விரும்பினேன். விரித்துரைக்க வாய்ப்பில்லை. அன்பை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்துளது தமிழிலக்கியத்தின் பெரும்பகுதி. 'அகப்பொருள்' பற்றிய தமிழ் இலக்கியச் செல்வத்துக்கு இணையான இலக்கியத்தை இவ்வுலகில் வேறெம் மொழியிலுங் காணல் முடியாது. தமிழ்ப் பண்பாடு அன்பிலேயே தோய்ந்துளது என்பதை இவ்விலக்கிய நூல்கள் நன்கு காட்டுகின்றன.

தமிழிலக்கிய நூல்களிலே தமிழ்ப்பண்பாட்டின் களஞ்சியமாக விளங்குவது திருக்குறளேயாகும். தன்னோடு தொடர்பு கொண்டோர் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும் பேராற்றல் படைத்தது இந்நூல். இதன் பெருமை உலகெங்கும் பரந்துளது; பல மொழிகளில் இது மொழி பெயர்க்கப்பட்டுளது. இந்நூலைப் பற்றி அல்பேட்டுச்சுவைச்சர் எனும் பேரறிஞர், "உலக இலக்கியத்திலே இந்நூலைப் போலச் சிறந்துயர்ந்த ஞானத்தைக் கொண்ட நூல் வேறில்லை''[1] என்று கூறியுளர். இத்தகைய ஒப்புயர்வில்லா உலகப் பெருநூல் என்றும் உங்கள் தாய் மொழிகளில் மொழி பெயர்க்கப்படாவிடின் இதனை உடனே மொழிபெயர்க்க ஆவன செய்யுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன்.

---

## தொல் தமிழர் முதன்மைச் செல்வம்

அமிழ்தினுமினிய தமிழ்மொழியினைத் தம் தாய்மொழியாகக் கொண்டு வாழும் தமிழ்ப்பெருமக்கள் தம்முயிரினுஞ் சிறப்பாக நாடு, மொழி, நன்னெறி மூன்றினையும் ஒருங்கு கைக்கொண்டொழுகும் ஒண்மையர். இம் மூன்றனுள்ளும் மொழியினை விழியெனக் கொண்டோம்பி வருகின்றனர். அம்மொழியினுக்கு அழகும் அரணுமாயிருப்பது தொல்காப்பியம், அத்தொல்காப்பியத்தில் வாழ்க்கையை வனப்புறுத்துவது பொருளதிகாரம். அதில் 'முதல், கரு, உரி' என மூன்று பாகுபாடுகள் உள்ளன. இம் மூன்றும் முறையே வாழ்க்கைக்கு இடமும் துணையும் இன்பமுமாகும். இவற்றில் நடுவாயமைந்த துணையில் தெய்வத்துணையே முதன்மைபெற்றுத் திகழ்கின்றது. அதனால் தமிழர் முதன்மைச் செல்வம் தனிப்பெருந் தெய்வம். 'செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே' என்னும் தமிழ்மாமறையுங் காண்க.

---

1. The Development of Indian Thought—Dr. Albert Schweitzer.

# தமிழ்த் தெய்வம்

[புலவர் திரு. வடிவேல் முதலியார்]



1883, செப்டம்பர் 1 ஆம் நாள் (சுபாநு வருடம் ஆவணி மீ 17 ஆம் நாள்) திருவெண்ணெய் நல்லூர் புருடோத்தம முதலியாரின் புதல்வராய்ப் பிறந்தார். திருச்சியில் எஸ். பி. ஜி. கல்லூரியில் பயின்றார். திருவெண்ணெய் நல்லூர் சுப்பிரமணிய முதலியாரிடமும், திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளிடமும் தமிழ் பயின்று, திருக்கோவலூர் நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக அலுவல் பார்த்தார். ஞானியாரடிகளிடம் பயின்றதால் செய்யுளியற்றும் வன்மை பெற்றார். திருக்கோவலூர் உலகளந்த பெருமாளின் திருவிளையாடலை விளக்கி ''வாமன வைபவம்'' என்னும் ஒருநூல் இயற்றியுள்ளார். திருவெண்ணெய் நல்லூர் இறைவன் பேரில் ''திருஅருட்டுறைப் புராணம்'' ஒன்று பாடியுள்ளார். நடுநாட்டுக்காக ''மத்திய மண்டல சதகம்'' என்னும் நூலும் இயற்றியுள்ளார். இம்மூன்றும் அச்சிடப் பெருமல் உள்ளன. உரைநடையில் ஞானியாரடிகளுடைய வாழ்க்கை வரலாற்றையும் இயற்றியுள்ளார்.

## இயற்கை மொழி

உலகில் பல்வேறு மொழிகள் வழங்குகின்றன. அவற்றுள் எவையும் செந்தமிழ் மொழிபோல் அத்துணைச்சிறப்புற்ற இயற்கை மொழியாக விளங்கக்காண்கிலோம்.

மேல்நாடுமுதல் எந்நாட்டிலுள்ள பசுவும் ''அம்மா'' என்று அகவுவது கொண்டு, செந்தமிழ்மொழியின் இயற்கைச் சிறப்புத் தெள்ளிதின் விளங்கும். அன்றியும், ''தெய்வத் தமிழ்'' என்று கூறுவதுபோல், எந்த மொழியுடனும் தெய்வத் தொடர்பை உடன் கூட்டிக் கூறக்காண்கிலம். நிற்க; தமிழ்த் தெய்வமாக விளங்குவது யாது என்று ஆராயப்புகுவோம்.

## அருணகிரிநாதர்

''திருப்புகழ் வித்தகர்'' எனப் பாராட்டப்பெறும் அருணகிரிநாதர்; முருகப்பெருமானைப் பின்வருமாறு துதிசெய்கிருர்.

''ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்த்தமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீஅருளல் வேண்டும்
ஆதியருணுசல மமர்ந்த பெருமாளே.''

என்பதாம்.

இதற்குப் பலரும், ஒவ்வொரு செயலும் ஒவ்வொரு முகம் செய்ததாகக் கூறியுள்ளார் என்றே பொருள்கொள்வர்.

ஆனல் இறுதியடியில் ''ஆறுமுகமான பொருளே யருளல்வேண்டும்'' எனக்கூறி யிருப்பாராயின் அனைவரும் கொள்ளும் பொருள் சரியெனக் கொள்ளலாம். அவ்வாறின்றிப் ''பொருள் நீயருளல் வேண்டும்'' எனத் தனியாக 'நீ' என விளிகொடுத்துக் கூறியிருப்பதால், புலவர் பெரு மக்கள் பின்வருமாறு பொருள் கொள்கின்றனர்.

## புலவர் உரை

முருகப்பெருமானே! தேவரீர் மயிலின் மீது ஏறித் திருவிளையாடல் புரிந்தபோதும் ஒருமுகத்துடன் தானே இருந்திருக்கிறீர். சிவபெருமானுக்கு அருமறை பகர்ந்த பொழுதும் ஒருமுகத்துடன் தானே இருந்

திருக்கிறீர். அடியார்களுடைய துன்பங்களைப் போக்கும்போதும் ஒருமுகத்துடன் தானே இருந்திருக்கிறீர், கிரவுஞ்ச கிரியின் மீது வேலெறிந்த போதும் ஒருமுகத்துடன் தானே இருந்திருக்கிறீர் சூரபன்மனுதியரை வதைசெய்த போதும் ஒருமுகத்துடன் தானே இருந்திருக்கிறீர். வள்ளியை மணம்புரிந்த போதும் ஒருமுகத்துடன் தானே இருந்திருக்கிறீர். இவ்வாறு ஒரே முகத்துடன் இருந்து பல திருவிளையாடல்கள் புரிந்த தேவரீர் ஆறுமுகத்துடன் எழுந்தருளிய காரணம் யாது அதனைத் தேவரீர் எனக்கு அருளிச் செய்ய வேண்டுமென்பதே அதன் பொருளாகும். அவ்வாருயின் முருகப்பெருமான் அருணகிரியாருக்கு அளிக்கும் விடையாது.

## முருகப்பெருமான் அருணகிரியாருக்கு அளிக்கும் விடை

*"அப்பனே நின்ஐயம்*
*அனைவருமே யுணர*
*ஆதாரம் ஆகையினுல்*
*அறைந்திடுவோம் கேண்மின்*
*செப்புகின்ற அறுசமயத்*
*தெய்வதமும் யாமே*
*சிவன்அயன்மால் மூவர்களின்*
*திரளுருவும் யாமே*
*இப்புவியில் சிவம்சக்தி*
*யெனுமுருவும் யாமே*
*இயம்புகின்ற தமிழ்மொழியின்*
*வடிவமும்யாம் என்னும்*
*அப்பெரிய உண்மையினை*
*அகிலமெலா முணர*
*ஆறுமுகம் கொண்டிட்டோம்*
*அறிந்திடுக நீயே.''*

என்கிருர். இவற்றுள்; சைவம், வைணவம், சாக்தேயம், காணுபத்யம்; கௌமாரம், சௌரம் என்கின்ற ஆறுசமயத்திலுள்ள கடவுளும் யாமே என்கிருர், அன்றிச் சிவன்முகம் ஒன்று, பிரமன்முகம் நான்கு, மால்முகம் ஒன்று ஆக மூவரின் உருவமும் திரண்டு ஆறுமுகம் கொண்டு விளங்குகிரேம் என்கிருர். அதுவேயுமன்றிச் சிவபெருமானுக்கு ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம் ஆகிய ஐந்து முகங்கள் உள்ளன ஆகையால், அம்பிகையின் முகம் ஒன்றும் சேர்ந்து அம்மையப்பனுக ஆறுமுகம் கொண்டு விளங்குகிறேமென்கிருர். இவைகள் நமக்கு ஒருவாறு விளங்குகின்றன. எனினும் அதற்கடுத்தாற்போல் 'தமிழ் மொழியின் வடிவம்' யாம் என்பது என்ன என்பது சிந்திக்கற்பாலது.

## தமிழ்மொழியின் வடிவம்

தமிழ் மொழியில் உயிரெழுத்துப் பன்னிரண்டு ஆகும். ஆறுமுகப் பெருமானுக்குள்ள பன்னிரண்டு விழிகளையும் பன்னிரண்டு உயிரெழுத்துக்களாகக் கொள்ளலாம். ஆனல், உயிரெழுத்து இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அது ஆறு ஆருகப் பிரிக்கப்படாமல் குற்றெழுத்து ஐந்தும், நெட்டெழுத்து ஏழுமாகவுள்ளது. அவை எவ்வாறு பொருந்துமெனின்;

## உயிரெழுத்துக்கள்

அம்மையப்பனுக விளங்கும் முருகப் பெருமானுக்கு உள்ளவற்றில் ஐந்து முகங்கள் அப்பனுடையதும் ஒருமுகம் அம்மையுடையதுமாகும். அர்த்தநாரீசுரனுக விளங்கும் சிவபெருமானது வலதுபாகம் சிவபெருமானுக்கு உரியதாகையால் அதிக முயற்சியின்றியே உச்சரிக்குங்கால் குற்றெழுத்துக்கள் தோன்றுகின்றன. சக்திக்கு உரியதான நெட்டெழுத்துக்கு சிறிது முயற்சி வேண்டும் ஆகையால் வலது பக்கமுள்ள கண்களைக் குற்றெழுத்துக்களாகவும், இடது பக்கமுள்ள கண்களை நெட்டெழுத்துக்களாகவும் கொள்ளலாம். அவ்வாறு கணக்கிடின் ஐந்து குற்றெழுத்துக்களும் ஐந்து நெட்டெழுத்துக்களும். ஆகும். அடுத்துள்ள அம்பிகையின் கண்கள் இரண்டும் நெட்டெழுத்துக்களாகையால் அம்முறையில் குற்றெழுத்துக்கள் ஐந்தும் நெட்டெழுத்துக்கள் ஏழுமாகக் கொள்ளக்கிடக்கின்றன.

## மெய்யெழுத்துக்கள்

ஆறுமுகச் செவ்வேளின் திருமுகங்கள் ஆறும், இருபுறங்களிலும் ஆறு ஆறு ஆக, திருக்கரங்கள் பன்னிரெண்டும் ஆகப் பதினெட்டும் மெய்யெழுத்துக்களாகக் கொள்ளலாம். அவை முப்பிரிவுகளாகவே அமைந்துள்ளன.

### ஆய்த எழுத்து

முருகப்பெருமான் திருக்கரத்தில் விளங்கும் வேலாயுதத்தையே ஆய்த எழுத்தாகக் கொள்ளலாம்.

இம்முறையில் முருகப்பெருமான் செந்தமிழின் வடிவமாக உள்ளார் என்பது மேற்கூறிய காரணங்களால் தெளிவாம். இதனை விளக்கும் பாடல் பின்வருவதாகும்.

"அந்தமிகு சென்னியில் இலங்குபன் னிருவிழியும்
அகரமுத லாக வெண்ணி
அலகிடும் குறிலைந்தும் நெடிலேழு மாகியே
அமைந்தவுயிர் பன்னி ரண்டாய்ச்
சிந்தனைசெய் சென்னியொடு சேவகம் புரிகரமும்
சேர்ந்துமுப் பிரிவ தாகச்
செப்பிடும் வலியாறு மெலியாறு இடையாறு
செய்யபதி னெட்டு மெய்யாய்
குந்தமெனும்அயிலொன்றும்ஆயுதமதாக்கொண்ட
குறைவிலாத் தமிழெ ழுத்தாய்க்
கூறிடும் வடிவமுடன் ஆடல்செய்நின் பெருமை
குவலயம் கூற வெளிதோ
செந்தமிழின் வடிவான தெய்வமே வள்ளியொடு
தெய்வானை மகிழும் அமுதே
சேவேறு பரமனுமை மீதேறி விளையாடு
திருவெண்ணெய் வடிவே லனே.

இக்கட்டுரையின் மூலம் அருணகிரி நாதர் பாடலுக்குப் புத்துரையும், முருகப் பெருமானே தமிழ்த் தெய்வம் என்பதும் அறிந்து மகிழ்வோமாக.

---

## ஆறுமுகப் பெருமான் அவதாரம்

இந்திரன் முதற்றேவர் யாவருங் கயிலைவாழ் இறைவன் முன்சென்று நின்றே
இகல்செயுஞ் சூரனின் கொடுமையெல் லாமோத ஈசனுங் கோப மாகி
எரிவீசு நுதல்விழி திறந்திட வதினின்றும் எழுந்தாறு பொறிகள் சிதற
எதிர்நின்ற வாயுவும் அங்கியும் அவற்றினை ஏந்தியே கங்கை தன்பால்
தந்திட ஆற்றுது சரவணத் துய்த்தலுந் தாமாறு குழவி யாகி
சார்கார்த்தி கைப்பெண்கள் பாலுண்ண வவைகளைச் சங்கரிசென் றென்றுக்
தகுங்கந்த வேளெனப் பெயர்தர வம்மதலை தகர்தனை யடக்கி பின்னர் [கியே
சதுரான னன்றனைச் சிறையிட்டுப் பிரணவம் சங்கரர் செவியி லோதி
முந்தியம் மைப்பதச் சிலம்பினவ மணிதந்த மொய்குழல்கள் தாம ளித்த
மொய்யுடைய நவவீரர் துணைகொண்டு தாருகனை மோதியே சம்ம ரித்து
முன்வீர வாகுவைத் தூதாய னுப்பியும் மூர்க்கன்கே ளாமை யாலே
முடுகியே மயேந்திரம் சென்றுசூ ரன்சேனை முழுவதும் தொலைத்த பின்னர்
தந்திர மாகவே சூரன்மா மரமாகிச் சலதியு ளிருத்தல் கண்டு
சத்திவேல் தன்னைவிட் டிருகூறு செய்துமே தகைமயில் சேவ லாகத்
தானேற்றுத் தேவர்தஞ் சிறைநீக்கித் தெய்வானை தன்னுடன் வள்ளி தனையும்
தனிமணம் பூண்டிட்ட முருகவேள் தன்புகழ் தரணிமிசை வாழ்க மாதோ.

---

# மொழி வளர்ச்சி முறை

[திரு. கீ. இராமலிங்கனார், எம். ஏ,]

இவர் 12-11-1899 இல் பிறந்தவர். சொந்த ஊர் திருவள்ளூர்க் கூற்றத்தைச் சார்ந்த கீழச்சேரியாகும். இவருடைய தந்தையார் திரு ப. இரத்தன முதலியாராவர். இளமையில் நன்முகக் கல்வி பயின்று எம். ஏ., பட்டம் பெற்றார். துணைப் பதிவாளராகவும் பங்கீட்டு அதிகாரியாகவும் பல மாவட்டங்களில் ஆணையராகவும் திருச்சி நகர ஆணையராகவும் பணியாற்றினார். சிலகாலம் தருமையாதீனங் கீழ்க்கலைக் கல்லூரியின் முதல்வராகப் பணியாற்றினார். பின்னர்



மதுரை மீனாட்சி ஆலை நலத்துறை அலுவலராகத் தொண்டாற்றினார். கடந்த சில ஆண்டுகளாகச் சென்னை அரசின் ஆட்சி மொழித் தனியலுவலராகப் பணியாற்றி வருகின்றார். தமிழிலே ஆட்சி நடக்கவேண்டுமென்று அயராது உழைத்து வரும் இவர் 'நகராட்சி முறை' 'ஆட்சிச் சொற்கள்' என்ற இருநூல்களை இயற்றியுள்ளார். இவருடைய இவ்வரிய தொண்டைப் பாராட்டி 'ஆட்சிமொழிக் காவலர்' என்ற அரிய பட்டம் அளிக்கப்பட்டது.

"பிறமொழிச் சொற்களை எவ்வளவுக்கு எவ்வளவு, அப்படி அப்படியே ஒரு மொழி ஏற்றுக்கொள்ளுகிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு அந்தமொழி வளர்ச்சியடையும்.'' பல அறிஞர்களாலே பேசப்படும் கருத்தாகும் இது. அவர்கள் கூற்றுக்கு அரணாக ஆங்கிலமொழியை எடுத்துக் காட்டுவதும் அவர்களது வழக்கமாக இருக்கிறது. இதில் உண்மையுண்டா இல்லையா, இருந்தால் எந்த அளவு இருக்கின்றது, என்று பலர் ஆராய்வதில்லை.

ஒரு புதுக்கருத்தையோ, பொருளையோ குறிப்பதற்கு ஒரு மொழியில் அதுவரையில் சொல்லே இல்லை யென்முல், அக்கருத்தையோ பொருளையோ குறிக்கும் பிறமொழிச் சொல்லை முதன்முதலில் பயன்படுத்துவது இயல்பாகலாம். இது எளிதாகவும் இருக்கும். ஆனால் சொல்லே இல்லையென்று யார் முடிவு செய்வது? அந்த மொழியறிவே இல்லாதவரோ அல்லது மிகக் குறைந்த அறிவே உள்ளவரோ முடிவு செய்யலாமா? "சொல் உண்டு" என்பதைத் தெரிந்தவர்களே எடுத்துக்கூற வேண்டும் அல்லவா? அவர்கள் கூறும் வரையில், பிறமொழிச் சொல்லை ஆண்டு வருவதில் குறையிராது. சொல்கிடைத்து விட்டதும் அம்மொழிச் சொல்லை ஆள முற்படுவதில் தயக்கமோ அருவருப்போ இருப்பது பொருத்தமாகாது. வேண்டுமென்றால் பிற மொழிச் சொல்லையுங்கூடப் பயன்படுத்திக்கொண்டு வரலாம். ஆனால் இது சில காலம் மட்டுமே நிகழவேண்டும். அம்மொழிச் சொல் பயிலுவதற்குத் துணையாக இருக்கும் காலம் மட்டுமே பிறமொழிச் சொல் ஆளப்பெறலாம்.

அம் மொழியில் புதுக்கருத்தையோ புதுப்பொருளையோ குறிப்பதற்குச் சொல்லே இல்லையென்று ஏற்பட்டாலும், அக் கருத்தையோ பொருளையோ சுட்டுவதற்குத் தக்கதொரு சொல்லை அம்மொழியில் ஆக்கிக் கொள்வது ஞாயமாகும் அதுவரையில் பிறமொழிச் சொல்லைப் பயன்படுத்தி வந்தாலும், பொருத்தமான சொல் அம்மொழியில் அமைந்துவிட்டால் பிறகு மெல்ல மெல்லப் பிறமொழிச் சொல்லைப் புறக்கணித்து விடவேண்டும். "Under ground drainage'' என்பதற்கு நேரான தமிழ்த்தொடர் முதலில் கிடைக்கவில்லை. தமிழில் நாம் பேசும்போது மட்டுமல்ல எழுதும்போது கூட "அண்டர் கிரௌண்ட் டிரெய்னேஜ்'' என்று எழுதினோம். "புதைசாக்கடை" என்ற நேரான

தமிழ்ச்சொல் புதிதாகக் கண்டு பிடிக்கப் பட்டதும் இனியுமா ''அண்டர்கிரௌண்ட் டிரெய்னேஜ்'' என்று சொல்லுவது?

'பஸ்' என்றால் இன்று மூலைமுடுக்கு களில் இருப்பவருக்கும் தெரியும் உண்மை. அது ஒரு புதுவகை ஊர்தியைக் குறிக்கும் சொல். தமிழ்நாட்டில் அத்தகையதொரு வண்டியை அது வருவதற்கு முன்பு கண்ட தில்லை. அந்தப் போக்குவரத்துக் கருவியை முதன்முதலில் பார்த்ததுமே, அதன் பெயர் என்ன என்று அறியும் அவா எழும் போது அதனைப் 'பஸ்' என்று ஆங்கில மொழியில் அறிந்தவர், 'பஸ்' 'பஸ்' என்று கூறினர். உடனே அச்சொல் எளிதாக எல்லார் வாயிலும் பயிலத் தொடங்கியது. இப்படிப் பயின்று கொண்டே வரும்போது, 'பஸ்' என்பதன் பொருளை ஆராய்ந்தவர்கள் அதற்கொரு பெயரைத் தமிழில் ஆக்கினார்கள்.

இந்த ஊர்தி, வெளியேயிருந்து மாடோ, குதிரையோ, மனிதனோ வேறு எதுவோ எவரோ இழுக்காமலே இயங்கு வது. பின்னே இருந்தும் எவராவது எது வாவது தள்ளுவதும் இல்லை. இந்த ஊர்தியின் உள்ளுக்குள்ளே யிருந்தே தொழிற்படும் ஓர் ஆற்றலால், இது செலுத்தப் பெறுகிறது. அப்படி உள்ளே யிருந்தே செலுத்தப் பெறுவதை ''உந்து தல்'' என்று தமிழில் சொல்லுவர். 'ஏதோ ஓர் எண்ணம் என் உள்ளத்தில் உந்திக் கொண்டிருக்கிறது" என்று படிக்காத மக் களும் கூறுவர். புறத்தே இருக்கும் கரு வியால் இயக்கப் பெறாமல், உள்ளே இயங் கும் விசையினாலே உந்தப் பெறும் ஆற்றலை, ஆங்கிலத்தில் ''மோட்டார்'' (Motor) ஆற்றல் என்பர். எனவே, ''மோட்டார்'' என்பதற்கு நேர்தமிழ்ச் சொல் ''உந்து" என்பதை யறியலாம்.

''மோட்டார் கார்" நமக்குத் தெரியும். ''மோட்டார்'' என்றால் உந்து. "கார்'' என்றால் "தேர்," ஊர்தி. "உந்தூர்தி" என்பதே "மோட்டார் கார்'' என்பதற்குப் பொருத்தமான தமிழ்ப் பெயர். ஆங்கிலத் தில் ''மோட்டார்'' என்றோ ''கார்'' என்றோ ஒரு சொல்லை மட்டும் சொன்னாலுமே போதும். ''மோட்டார் கார்'' என்று சொல்லத் தேவையில்லை அதேபோல, தமிழில் ''உந்து'' என்றாலே சாலும். ''உந் தூர்தி'' என்று சொல்லவேண்டுவதில்லை. ''மோட்டார் கார்'' ''மோட்டார்'', ''கார்'' என்றெல்லாம் சொல்லிக்கொண்டே இருக் கும்போதே, அவற்றோடு 'உந்தூர்தி' 'உந்து' என்றும் சொல்லிக்கொண்டே வருவோமானால், மெதுமெதுவாகத் தமிழ்ச் சொல் நிலைத்துவிடும்; ஆங்கிலச்சொல் தானாகவே அகன்று கொள்ளும். இளங் காதுகளுக்கு 'உந்தூர்தி'யும் 'உந்தும்' இனிக்கும். பழங்காதுகளுக்கு அச் சொற் களைக் காட்டிலும் 'மோட்டார்கார்' 'மோட் டார்', 'கார்' இவையே சுவையுள்ளவை யாகத் தோன்றலாம். இதற்காக எவரும் கவலைப்படவேண்டாம். அவர்கள் அந்த ஆங்கிலச் சொற்களையே அவர்கள் காலம் முழுவதும் உச்சரித்து மகிழ்ந்துகொண்டே இருந்து விடலாம். மற்றவர்கள் 'உந் தூர்தி'யையும் 'உந்தையும்' பழகிக்கொண் டிருந்தால் அடுத்த தலைமுறையில் கட்டா யம் தக்க தமிழ்ச்சொற்கள் நிலைபெற்று விடும்.

'பஸ்'ஸைப் பற்றியல்லவோ துவங்கி னோம்? மோட்டார் காரில் போய்ச் சேர்ந்து விட்டோமே! பஸ்ஸை நோக்கத்தான் மோட்டார் கார் பேச்சுவந்தது. 'பஸ்' என்ற சொல்லுக்கு வண்டி என்ற பொருளே இல்லை. 'பஸ்' என்பதும் ஒரு தனிச்சொல் அன்று. இந்தியில் 'பஸ்' என்றால் 'போதும்' என்று பொருள். 'பஸ்' வண்டியில் ஏறினால் ஏறிச் செல்லுகிறவர் கள் பாடு, 'போதும் போதும்' என்று ஆகி விடுகிறது. ஏன்? தெருவில் நடந்து போகிறவர்களுடைய பாடும், பஸ் போகும் போது, போதும் போதும் என்று ஆகி விடாமலா இருக்கிறது? ஆனால் இவற் றால், அந்த வண்டிக்குப் 'பஸ்' என்று பெயர் வரவில்லை. ஆங்கிலச் சொல் அல் லவா 'பஸ்' என்பது? இந்தி அல்லவே.

மோட்டார் காரில் சிலர் மட்டுமே ஏறிக்கொண்டு போகலாம். பலபேர் ஏறிக் கொண்டு செல்ல அதே வகையான பெரிய தொரு வண்டியைச் செய்தனர். அதற்கு 'ஆம்னிபஸ் மோட்டார் கார்' (Omnibus Motor car) என்று பெயரிட்டனர். 'மோட் டார் கார்' என்றால்தான் நமக்குப் பொருள் தெரியும். இனி 'ஆம்னிபஸ்' என்னும்

ஆங்கிலத்தொடருக்கு என்ன பொருள்? 'எல்லாங் கவர்ந்த' 'எல்லாம் அடங்கிய' என்ற பொருள் அதற்கு உண்டு. ஒரு சிலரே யல்லாமல் எல்லோரும், பலராக, ஏறிச் செல்வது என்ற கருத்தை அச் சொல் தருகிறது. ஆகவே 'ஆம்னிபஸ் மோட்டார் கார்' என்ருல், 'பலபேர் ஏறிப் போகிற உந்தூர்தி' என்று தமிழில் சொல்லலாம். இதனைச் சுருக்கமாகச் சொல்வதென்ருல் பெரிய உந்து என்று பொருள்படும் சொல்லான 'பேருந்து' என்ற சொல்லைப் பயன்படுத்திஞல் போதும், அல்லவா? பொருத்தமாக அமைந்துவிடுகிறது தமிழில். ஆனல் ஆங்கிலத்தில் 'பஸ்' என்பது அப்படி யமையவில்லை. முதலில் இருக்கும் 'ஆம்னி'யை உதறிவிட்டு, பின்னல் உள்ள 'மோட்டார் கார்' ஐயும் தள்ளிவிட்டு, நடுவில் இருக்கும் 'பஸ்' ஐ மட்டும் வைத்துக் கொண்டார்கள். சுருக்கமாக அமைந்து விட்டாலும் பொருத்தமாக அமையவில்லை என்பதை விளக்கத்தேவையில்லை. தமிழில் பொருத்தமாகவும் சுருக்கமாகவும் ஒரு தொடர் கிடைத்திருக்கும்போது அதனை நாம் போற்றிப் பயன்படுத்த வேண்டாமா? 'வேண்டும்' 'வேண்டும்' என்று தமிழ்ச் சுவை யுணர்ந்தவர்கள் சொல்லலாம்.

''மோட்டார், 'பஸ்' என்ருல்தானே பொதுமக்கள் தெளிவாய் புரிந்து கொள்வார்கள்; 'உந்து' 'பேருந்து' என்று சொன்னல், ஐயோ பாவம்! அவர்கள் எப்படி அறிய முடியும்? பொருள் தெரியாத அச் சொற்களைப் பொதுமக்கள் மேல் சுமத்துவது பொருத்தமாகாதே", என்று உண்மையாகவே சிலர் நினைக்கிருர்கள். இதே இரக்க உணர்ச்சி முதன் முதலில் 'மோட்டார்' 'பஸ்' என்ற சொற்களைச் செலாவணிக்குக் கொண்டு வந்தபோது இருந்திருந்தால், அச் சொற்களை ஆட்சிக்குக் கொண்டுவந்திருக்க முடியாது. பொருள் விளங்காத பிறமொழிச் சொற்களை ஆட்சிக்குக் கொண்டுவந்த அப்போது, பொதுமக்கள் ஏதும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. இப்போது, பொருத்தமான, பொருள் உள்ள தமிழ்ச் சொற்களைப் பழக்கத்திற்குக் கொண்டுவரும்போது அவர்கள் எவ்வகையான கூப்பாடும் போடமாட்டார்கள். ஆனல், 'மோட்டார்' 'பஸ்' என்ற சொற்களை அடியோடு மறைத்துவிட்டு, 'உந்து' 'பேருந்து' என்ற சொற்களை மட்டுமே வழங்கச் சொல்வதால் இன்று சிறிது இடர்ப்படுவார்கள். ஆகவே, 'மோட்டார்' 'பஸ்' என்ற சொற்களும், இன்றைக்கு வழங்கட்டும். 'உந்து' 'பேருந்து' என்ற சொற்களையும் வழங்குவோம் நாளாவட்டத்தில் ஆங்கிலச் சொற்கள் தாமாகவே ஒதுங்கிக்கொள்ளும். 'உந்து'ம் 'பேருந்து'ம் எல்லோர் வாயிலும் எளிதில் இயங்கி வரும்.

இன்னும் சிலருக்குப் பிறமொழிச் சொற்களைக் கேட்டுக் கேட்டுக் காதில் அச் சொற்கள் சுவைபடத் தங்கிவிட்டிருக்கின்றன. அவற்றிற்கு மாற்ருக நல்ல தமிழ்ச் சொற்கள் தோன்றும்போது கூட, பிறமொழிச்சொற்களே, சுவையாக மட்டுமல்ல, பொருத்தமாகவுங்கூட அவர்களுக்குப் புலனுகின்றன. அதுபழக்கத்தின்குறையே. பேயோடு பழகினுலும் பிரிவது அரிதல்லவா? 'பஸ் என்று அப்படியே காலத்துக்கும் சொல்லிக்கொண்டிருந்தால் என்ன கெட்டுப்போய்விடும்?' என்றுகூட அவர்களில் சிலர் கேட்கிருர்கள். ''ஆமாம், அவர்கள் கேட்பது பொருத்தந்தானே, 'பஸ்' என்றே சொன்னல் என்னதான் கெட்டு விடுமாம்'' என்று மற்றும் சிலரும் ஒத்து வினவுகிருர்கள்.

'Bus' என்ருல் தமிழில் 'பஸ்,' என்று எழுதுகிருேம். கட்டியில் 'Puss' வருகிறது என்னும்போதும் 'பஸ்' வருகிறது என்று கடிதங்களில் எழுதவும் செய்கிருேம். ''என்ன இவர் இப்படி 'பஸ்'(Fuss)பண்ணுகிருர்'' என்று தமிழில் சொல்லும் போதும், எழுதும்போதுங் கூட 'பஸ்' என்றே குறிக்கிருேம். ஒரே எழுத்தை 'B', 'P', 'F' இம் மூன்று ஒலிகட்கும் பயன்படுத்துகிருேம். இம்மூன்று எழுத்துக்களின் ஆங்கில ஒலிகள் தெரிந்திருப்பதனுலே, 'ப' என்னும் ஒரே எழுத்தை, வலித்தும் மெலித்தும் உதட்டை மடித்தும் தமிழில் ஒலித்துவிட முடிகிறது. அப்படியே கேட்டுக் கேட்டு ஆங்கிலம் தெரியாதவர்களும் சரியாக ஒலித்துவிடுகிருர்கள். இவ்வாறே ஒலித்து வந்தால் நாளாவட்டத்தில் என்ன ஆகும்? மூன்று ஓசைகளுக்கு ஒரே எழுத்து இருப்

பது தமிழ்மொழியிலுள்ள குறை; எனவே, மூன்று ஓசைகளையும் குறிக்கத் தனித்தனியே மூன்று எழுத்துக்கள் இன்றியமையாதவை என்ற முடிவுக்கு வருவோம். அப்படியே அந்த எழுத்துக்களை உண்டாக்கவும் சொல்வோம். இப்படித் தமிழுக்குப் புறம்பான பல ஓசைகளையுடைய பல பிறமொழிச் சொற்களைத் தமிழில் ஒவ்வோர் எழுத்துக்களைக் கொண்டே முதலில் உச்சரித்து வரலாம். ஆனால், கடைசியில் ஒவ்வோர் ஓசைக்கும் ஒவ்வொரு தனி எழுத்து ஆக்க வேண்டி வரும். தமிழ் நெடுங்கணக்கை அடியோடு மாற்றியமைக்க நேர்ந்துவிடும். இந்தவகையாகத்தான் முன்பு ஒரு காலத்தில் ஒரேமொழியாக இருந்தது, பலப்பல நூற்றுண்டுகளுக்கிடையில் தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் என்றெல்லாம் பிரிந்துபோய்விட்டன. எஞ்சித் தமிழ் என்று ஒன்று தனியே நின்று கொண்டிருக்கிறது. இதுவும் பிரிந்து இன்னும் சிலமொழிகளாகச் சிதைந்து போகாமல் இருக்கவேண்டுமென்றால், மொழி வளர்ச்சி செய்யும் முறையிலே நாம் கண்ணும் கருத்துமாக இருந்து, முடிந்த வரையில் தமிழ் வேர்களில் இருந்தே புதிதாகத் தேவைப்படும் சொற்களை ஆக்கிக் கொள்ளவேண்டும். இப்படிச் செய்வது வேறு எந்த மொழியையோ அருவருப்பதோ பகைப்பதோ ஆகாது. தமிழ் மொழிக்கு மட்டுமல்ல, வளமையான எந்த மொழியில் சொல்லாக்கம் செய்வதானாலும் இந்தக் கொள்கையைக் கையாள்வதே பொருத்தமாகும். இதுவே குன்றாமல் மொழிவளர்ச்சி செய்யும் முறை.

பிறமொழிக் கலப்பால் ஆங்கிலம் வளர்ந்ததா கெட்டதா? என்னும் கதையைப் பிறிதொரு நேரம் ஆராய்வோம்.

---

## பிறமொழிக் கலப்பு

பிறமொழிச் சொற்கள் தம் மொழியில் புகுவதை ஒவ்வொரு மொழியினரும் ஒவ்வொரு காலத்தில் எதிர்த்து வந்திருக்கின்றனர். அதற்குக் காரணம், மிக மிக இன்றியமையாத—பழகிய—சொற்கள் மொழியில் இயல்பாக அமைவனவாகத் தோன்றுகின்றன. பழகாத புதுச் சொற்களைக் கற்றவர்கள் சிலர் புகுத்த முயலும் முயற்சி செயற்கையாக உள்ளது. பொதுமக்களின் பேச்சுவழக்கில் பரவிக் கலக்கும் பிறமொழிச் சொற்கள், வந்த மொழியின் ஒலிமுறைக்கு ஏற்ப ஓரளவு உருமாறி அமைகின்றன. அதனால் அந்த மொழியினர், தம்மொழிச் சொற்கள்போல் அவற்றை வெறுப்பின்றி ஆளுகின்றனர். கற்றவர்கள் எழுதும்போது செயற்கையாகப் புகுத்தும் சொற்கள் உருமாறுவதில்லை: பிறமொழிச் சொற்களாகவே வேறுபட்டு நிற்கின்றன. இவ்வாறு ஒட்டாமல் நிற்கும் பிறமொழிச் சொற்களின் தொகை மிகும்போது, மொழியின் இயற்கைத் தன்மை கெடுவதாக உணரும் மக்கள் அவற்றை எதிர்க்கத் தலைப்படுகின்றனர்; பிரெஞ்சு மொழிச் சொற்கள் ஜெர்மன் மொழியில் மிகுதியாகக் கலந்தபோது, இவ்வாறு அடிக்கடி எதிர்ப்பு இருந்து வந்தது. தமிழில் வடசொற் கலப்பும் இவ்வாறே தொடர்ந்து எதிர்க்கப்பட்டு வருகின்றது.

—டாக்டர் மு. வரதராசனார், ''மொழி வரலாறு''

---

# விதியும், மதியும்

[திருவருட்டிரு சோமசுந்தர பரமாசாரிய சுவாமிகள், மதுரையாதீனம்]



ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள், குலசேகரன் பட்டினத்தில் திரு ம. கோ. வைரவநாத பிள்ளைக்கும் திருமதி பாப்பம்மாள் என்பவர்க்கும் 24-4-1902இல் தோன்றினார்கள். பாளையங்கோட்டை "செயின்ட் சேவியர் உயர்நிலைப் பள்ளி"யில் பயின்றார்கள். ஓராண்டு ஆசிரியப் பணியாற்றினார்கள். 1921 இல் இலங்கைக்குச் சென்று 'சுந்தரம் அன் கோ'வை 1926 இல் நிறுவினார்கள். இலங்கை வானொலி மூலம் 'கூட்டுவழிபாட்டை'யும் சிறந்த வினா விடைச் சொற்பொழிவுகளையும் நிகழ்த்திச் சைவத் தொண்டாற்றினார்கள். மதுரை ஆதீனத்தின் 290 ஆவது குரு மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் இளவரசாக இவர்களை 1953 இல் அமர்த்திக்கொண்டார்கள். 1957 முதல் மதுரை ஆதீனத்தின் 291 ஆவது குருமகாசந்நிதானமாகத் திகழுகின்றார்கள். பல ஆராய்ச்சி நூல்களை இயற்றித் தமிழுக்கும் சைவத்திற்கும் அரிய தொண்டாற்றி வருகின்றார்கள்.

விதியும் மதியும் என்பதில் விதி பெரிதா? மதிபெரிதா? விதியை மதியால் வெல்லலாமா? என்பன சிந்தனைக்குரிய விஷயங்களாகும். அதில் விதி என்பது என்ன? விதிக்கு மூலம் யாது? விதிவிதிப்பவர் யார்? என்பனவற்றை அறிவதுதான் மதி உடையவனது முதலாவது கடமை. நமது மதியைக்கொண்டு நாம் செய்யும் நல்வினை தீவினைகளால் உண்டாகின்ற புண்ணிய பாவத்திற்கேற்பக் கருணையுடைய ஆண்டவன் அதற்கு இன்ன இன்பம், இன்ன துன்பம் அனுபவிக்க வேண்டுமென்று தீர்ப்பு அளிக்கும் அத்தீர்ப்பே விதியாகும். ஆண்டவன் நமக்கு அனுபவ அறிவு உண்டாகும்படி வகுக்கும் இன்ப துன்பங்களின் வகைகளே விதியாகும். அதனாலேயே "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி, தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது" என்றார் வள்ளுவர். அதில் ஒருவன் எவ்வளவுதான் முயற்சி செய்து கோடி கோடியாகத் தேடிக் கொண்டாலும், ஆண்டவன் விதித்த விதியின்படியல்லாமல் இன்பம் அனுபவிக்க முடியாது என்று விதியின் வலிமையையும் அதை விதிக்கின்ற ஆண்டவனது வலிமையையும் உணர்த்துகின்றார்.

ஒரு மனிதன் அவனது அறியாமையினால் தீவினைகளையும், நல்வினைகளையும் செய்கிறான். அவற்றை நியாயமுள்ள, கருணையுள்ள ஆண்டவன் பார்த்து அவற்றைப் பதிவுசெய்து அவ்வினைகளுக்குரிய புண்ணியம் பாவம் இவ்வளவென்று தீர்மானிக்கிறார். அது சஞ்சிதவினையாகும். அப்புண்ணிய பாவத்திற்குத் தகுந்தபடி நாம் இன்ப துன்பம் அனுபவித்தால்தானே நாம் செய்த நல்வினை, தீவினைகளின் தன்மை நமக்குப் புலப்படும். ஆகவே விதியின்படி நாம் அனுபவிக்கும் ஒவ்வோர் இன்பத்திற்கும், துன்பத்திற்கும், நாம் நமது மதியினால் முன்பு செய்த செயல்களே மூலகாரணம். ஆண்டவன் விதித்த விதியை மீறி நாம் எள்ளளவு இன்பமும் அனுபவிக்க முடியாது.

ஏராளமான பொருள் இருந்துவிட்டால், அல்லது உடல்வசதி இருந்துவிட்டால் இன்பம் துய்க்கலாம் என்று சிலர் கருதலாம். அது பணவசதியுடையவர்களும் இன்பம் துய்க்கமுடியாமல் திண்டாடுவதைத் தெரியாத, அனுபவமில்லாதவரது கூற்றாகும். நாம் செய்த வினைப்பயனை நாம் அனுபவிக்கும்படி ஏன் ஆண்டவன் செய்ய வேண்டும்? என்று கேட்கலாம். உதாரணமாக ஒரு சிறு குழந்தை மற்றொரு குழந்தையை அடித்துவிட்டது என்று வைத்துக்கொள்வோம். அடிபட்ட குழந்தைக்கு வேதனை இருப்பதால் அது

அழும். அடித்த குழந்தைக்குத் தான் அடித்ததும் அது அழுவதும்தான் தெரியுமே யொழிய அந்த அடி அக்குழந்தைக்கு எப்படி இருந்தது? எவ்வளவு வேதனையைக் கொடுத்தது என்றெல்லாம் தெரிய முடியாதல்லவா? அடித்துவிட்டுச் சிரிக்கும். அடித்த அக்குழந்தையைப் பார்த்து இனிமேல் அடிக்கக்கூடாது. அடித்தால் அவளுக்கு வலிக்கும் என்று வாயினல் சொன்னல் வலியென்ருல் என்ன? எப்படி இருக்கும் என்று கேட்கும். அதை அக் குழந்தை உணரச் செய்ய வேண்டும்.

அதைப் படமெழுதி விளக்குவதா? நாம் அக் குழந்தையை அடித்தால்தானே அதனல் தனக்கு ஏற்பட்ட வேதனையும் துன்பமும் விளங்கும். நாம் பிறரை அடித்தால் பிறர் இன்ன விதமாக வேதனைப்பட வேண்டியது வருமென்ற அனுபவ அறிவு அப்பொழுதுதான் ஏற்படும். இதுதான் அனுபவ அறிவு பெறும்படி ஆண்டவன் செய்வதின் அடிப்படை. நாம் பிறருக்குத் தீங்கு செய்தால் அத்தீங்கின் விளைவு இன்னதென்று நமக்கு அறிவுறுத்த வேண்டும் என்ற கருணையினல் அதனைப் பிறரைக் கொண்டு செய்கிருர். நாம் செய்யும் நன்மையும் தீமையும் செய்த அளவைப் பொறுத்ததல்லாமல் அவற்றை யாருக்குச் செய்தோமோ அவர்களின் தகுதிக்குத் தக்கபடி புண்ணிய பாவம் கூடவும் குறையவும் ஏற்படும்.

ஒரு வைத்தியர் நமக்குள்ள வியாதி தீர மருந்து கொடுத்தால் கசப்பு மருந்து கொடுக்க வேண்டிய வியாதிக்குக் கசப்பு மருந்தும், அக்கசப்புத் தெரியாமலிருக்கச் சிறிது சர்க்கரையும், கசப்பையும், இனிப்பையும் மாறிமாறிக் கொடுத்துத்தான் நமது நோயைத் தீர்ப்பார். அதுபோலவே ஆண்டவனும் நம்மிடம் உள்ள அறியாமை என்னும் நோய் நீங்க, அனுபவப் பாடம் போதிப்பதற்காகத் துன்பத்தை ஊட்டினலும் அத்துன்பத்தில் சலிப்பும் மனச் சோர்வும் வாராதிருக்க இடையிடையே சிறுசிறு இன்பத்தையும் தந்து நோயைக் குணப்படுத்தும் வைத்திய நாதனுக விளங்குகிருர்.

நாம் நம்மைப்போல் பிறரையும் எண்ணவேண்டும்; அதற்குரிய அனுபவ அறிவு பெறவேண்டும் என்று கருதிய கருணையினலேயே நமக்கு அவர் விதிக்க வேண்டியதை விதிக்கிருர் என்பதை நன்ருக உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். அந்த விதியே ஊழ், தலையெழுத்து, பிராரத்தம், தெய்வநியதி, நசீபு என்றெல்லாம் சொல்லப்பெறுகிறது. இனி அவ் விதியை மதியால் வெல்லலாமா? என்று கேட்கலாம். பொதுவாக ஆண்டவன் விதித்த விதிக்கு உட்பட்டுத்தான் மதி தொழிற்பட வேண்டியதாயிருக்கிறது. உதாரணமாகச் சிறைச்சாலைக்குச் சென்ற ஒருவன் சுய அறிவும், சுய இச்சையும் சுய ஆற்றலும் உடையவனுகத்தான் இருக்கிருன். ஆனல் அவன் சிறைச்சாலைக்கு வெளியில் வாழும்போது செய்த தீய செயலுக்குத் தக்கபடி அரசாங்கத்தாரால் விதிக்கப்பெற்ற தண்டனைப்படி உள்ளே சென்றிருப்பவன்; அரசாங்கம் விதித்த அவ் விதிக்கு உட்பட்டுத்தான் அவன் மதியைச் செலுத்திக் கொள்ள வேண்டுமேயொழிய சுயேச்சையாக நடப்பேன் என்று எண்ணவோ, சொல்லவோ, நடக்கவோ முடியாதல்லவா? அதுபோல நாமெல்லாம் நமது மனம், வாக்குக், காயங்களால் முன் செய்த வினைகளுக்குத் தக்கபடி ஆண்டவனல் ஒரு தீர்ப்புக் கொடுக்கப் பெற்று, அவன் விதித்த கட்டளைப்படி பூலோகமாகிய இச்சிறையினுள் வந்திருக்கின்ருேம். நமக்கு விதித்த விதிக்கு உட்பட்டே நாம் நடக்கவேண்டும். நாம் எவ்வளவு மதியுடையவர்களாயிருந்தாலும் அவ்விதிக்கு மாருக நடக்க முடியாது. எப்பொழுதும் உணவை ஊட்டுகிறவர்கள், அவ் வுணவை உண்பவர்களைவிட வலிமையுடையவர்களாயிருக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் உணவை ஊட்ட முடியும் அந்த முறையில் நாமெல்லாம் உண்பவர்கள். ஆண்டவன் ஊட்டுபவன். அவன் ஊட்ட நாம் உண்கிருேமே தவிர நாமாக உண்பதில்லை. அப்படி அவன் ஊட்டும் உணவாகிய இன்ப துன்பமும் நாம் செய்த செயலினலேயே ஆவன.

இந்த உண்மை சதாவும் மனத்தில் பதிந்திருந்தால் நமக்குத் தீங்கு செய்யும் ஆணையோ பெண்ணையோ நோவ மாட்டோம். யாராவது நம்மீது கல்லை எறிந்

தால் அக்கல்லை எறிந்தவர்கள் எங்கே யிருக்கிருர்கள் என்று நாம் பார்ப்போமே தவிர நம்மீது விழுந்த கல்லைக் கடிக்கவோ, அடிக்கவோ, நோவவோ மாட்டோமல்லவா? அதுபோல ஆண்டவன் நாம் துன்பம் அனுபவித்து அறிவுபெறவேண்டுமென்று எண்ணி அத்துன்பத்தை ஆட்கள் மூலமோ, வியாதி மூலமோ பூதங்கள் மூலமோ அனுபவிக்கச் செய்தால், அதனை அறியாமல் நமக்குத் துன்பம் செய்த ஆட்கள்பேரில் சீறுதலும், நோதலும், கல்லை எறிந்தவனை நோவாமல், தன்மீது விழுந்த கல்லையே நோதலைப்போன்ற நகைப்புக்கிடமான செயலேயாகும். நம்மையே நாம் நொந்து, வந்ததுன்பத்தைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். இதனையே வள்ளுவர் "உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை, அற்றே தவத்திற்கு உரு" என்று கூறியிருக்கிருர். மதியுடைய ஒருவன் தனது மதியினுல் செய்த செயல்களை அறிந்து அதற்குரிய பலாபலனை ஒரு நியதிப்படி விதிக்கின்ற ஆண்டவன் ஒருவன் உண்டு. அவர் நாம் பிறருக்குச் செய்யும் செயலுக்கேற்பவே விதியை விதிக்கின்ருர். அவர் விதித்த விதியை அவராகவே மாற்றக் கருதினுல் மாற்றலாமே தவிர, வேறு யாராலும் மாற்றவோ குறைக்கவோ முடியாது ஆனுல் அவ்வாறு செய்யுமாறு நாம் நமது மதியினுல் விண்ணப்பம் செய்து கொள்ளவும் ஆண்டவனது இரக்கத்திற்கு நம்மைப் பாத்திரர்களாக்கிக் கொள்ளவும் முடியும். இதை வலியுறுத்தியே நமது ஔவைப் பிராட்டியார்,

> "சிவாய நமஎன்று சிந்தித் திருப்பார்க்(கு)
> அபாயம் ஒருநாளும் இல்லை—உபாயம்
> இதுவே மதியாகும் அல்லாத வெல்லாம்
> விதியே மதியாய் விடும்"

என்று அருளியிருக்கிருர். அவ்வம்மையார் விதியினுல் வரக்கூடிய அபாயம் இல்லாது காத்துக்கொள்ள உபாயம் ஒன்று சொல்லுகிருள். விதியை விதிக்கின்றவரது துணையை மதியினுல் அறிந்து பற்றிக் கொண்டால் ஒருவாறு விதியை வென்று விடலாம் என்கிருர். மார்க்கண்டேயர் சதாவும் பூசைசெய்து ஆண்டவனது துணைபெற்று விதியையே மாற்றியவர். இதைத்தான்,

> "கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
> ஆற்றல் தலைப்பட் டவர்க்கு"

என்று வள்ளுவர் அருளியுள்ளார். அவ்விதம் விதியையே ஒருவேளை மாற்ற முடியாவிட்டாலும் ஆண்டவனது நாம செபத்தினுல் அவன் விதித்தபடி என்ன நடந்தாலும் அக்காரியங்கள் தன் உள்ளத்தைப் பாதிக்காத முறையில் நமது உள்ளத்திற்கு வலிமை பெற்றுக் கொள்ளலாம் மனக் கவலையற்று வாழலாம். அப்படி உள்ளம் உரம் பெற்றமையால்தான் திருநாவுக்கரசருக்கு அரசன் செய்வித்த துன்பமெல்லாம் துன்பமாகத் தோன்றவில்லை. அவ்விதம் உள்ளம் உரம்பெருவிட்டாலும் ஆண்டவனது நாமசெபமானது தகுதியுள்ள ஒருவர் வழி நமக்கு உதவி செய்வித்து நம் துன்பத்தைப் போக்குவிப்பதைக் கண்கூடாகக் காணலாம். அப்படி நமக்கு உதவி செய்ய வரும் ஆட்களும் நாம் வழிபட்ட மூர்த்திகளின் பெயர்தாங்கியவர்களாகவே இருப்பதையும் காணலாம்.

ஆண்டவனைக் குறித்து நாமசெபம் செய்யும்பொழுது மற்ற எண்ணங்கள் வந்து தடுக்கலாம். அதனைச் சமாளிக்க வேண்டுமானுல் ஒருநாளில் சிறிது நேரமாவது இறைவனை நினைத்து, பூசைசெய்தல் வேண்டும். மற்ற நேரங்களிலெல்லாம் அவனது சிந்தனையோடிருந்தால் உள்ளம் உரம்பெற்றுபொறுக்கும் ஆற்றலராவோம். மற்றவரெல்லாம் விதியின்வழியே நடந்து துன்பங்களை அனுபவித்தே அறிவு விளக்கமும் ஞானமும் பெறுவர்.

ஆகவே இந்த உபாயத்தை மதியுடையவர்கள் தெரிந்து கடைப்பிடித்து விதியின் வலிமையை மாற்றவோ குறைக்கவோ, செய்துகொள்ளவேண்டும். அதற்குரிய மதிநுட்பத்தை எல்லாம்வல்ல எம்பெருமான் எல்லோருக்கும் அருள்பாலிக்கவேண்டும்.

# அவையத்தார் இயல்பு

[திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்]

[இக் கட்டுரையை வெளியிட அனுமதியளித்த அகில இந்திய வானொலி நிலையத்தாருக்கு எம் நன்றி உரித்தாகுக.]

இவர் 6-11-1915 இல் நெற்குப்பையில் பிறந்தவர். மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதத் தேர்வில் 1935 இல் வெற்றிபெற்றுர். 1943 இல் சென்னைப் பல்கலைக் கழக 'வித்துவான்' பட்டத்தைப் பெற்று ஐந்தாம் ஜார்ஜு மன்னர் பரிசாகிய ஆயிரம் வெண்பொற்காசையும் பெற்றுர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் 1936 இல் பணியேற்று 1953 முதல் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் புலமைத் துறைத் தலைவராகப் பணியாற்றி வருகின்றுர். 1943 முதல் ஐந்தாண்டுகள் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழிசை ஆலோசனைக் குழுவின் செயலாளராக இருந்து தமிழிசை பற்றிய 20 அரிய வெளியீடுகளை வெளியிட்டுள்ளார். 1949 முதல் தமிழிசைச் சங்கத் தேவாரப் பண் ஆராய்ச்சிக் குழுவின் செயலாளராக பணியாற்றி வருகின்றுர். பல தமிழ் நூல்கள் இயற்றியுள்ளார். 'சாகித்திய அக்கடமி'யின் சார்பில் பல தொண்டுகளைத் தமிழுக்கு ஆற்றிவருகின்றுர். 1958 இல் மேலை நாடுகட்குச் சென்று மீண்டார்.



அவையத்தாருடைய இயல்புகள், பண்டைத் தமிழ்நூல்களிலும், கல்வெட்டுக்களிலும் ஆங்காங்குக் காணப்படுகின்றன. அவற்றைச் சுருக்கமாக இங்கே கூறுவேன். பண்டைக் காலத்தில் இருந்த அவைகளை அரசர் அவை, புலவர் அவை என்னும் இரண்டு பெரும் பிரிவில் அடக்கலாம். அரசர்களுடைய அவையில், வழக்கு ஆராய்ந்து நீதி வழங்குதல் முதலிய அரசாட்சிக்கு உரிய செயல்கள் எல்லாம் நடைபெற்றன. இச்செயல்களை நடத்துதற்கு ஆங்காங்குச் சிற்றவைகள் நிறுவுதல் உண்டு. வழக்குக்களை ஆராய்ந்து நீதி வழங்கும் அவைக்கு அறங்கூறு அவையம் என்று பெயர் வழங்கினர்.

முற்காலத்துத் தமிழ் அரசர்கள், புலவர்களுடைய அவையிலும் கண்ணும் கருத்துமாக இருந்தார்கள். புலவர்களுடைய அவையில், பழைய நூல்களை ஆராய்தல், உரை எழுதுதல், புதிய நூல்கள் இயற்றி அரங்கேற்றுதல் முதலிய பணிகள் நிகழ்ந்தன. இவ் அவையில் பல புலவர்கள் உறுப்பினர் ஆகவும், அவருள் ஒருவர் தலைவராகவும் வீற்றிருந்தனர். காய்சினவழுதி முதலாய பாண்டிய மன்னர்கள், முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்று சங்கங்களை நிறுவி, அச் சங்கங்களில் புலவர் பெருமக்களைப் போற்றி, அவர்கள் வாயிலாகப் பல அருந்தமிழ் நூல்களை வெளிப்படுத்தினர் எனவும், அவர்களுள் பாண்டியர் பதினைவர் மூன்று சங்கங்களிலும் புலவர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டு வீற்றிருந்தனர் எனவும் இறையனர் களவியல் உரையால் அறிகின்றேம்.[2] தொல்காப்பியத்துக்குப் பனம்பாரனரால் இயற்றப்பட்ட பாயிரத்தில் உள்ள,

"நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து"

என்னும் பகுதியால், தொல்காப்பியம், பாண்டியன் மாகீர்த்தி அவையில், அகத்

1. இது, திருச்சி அகில இந்திய வானொலியில் 28—2—1945 இல் நிகழ்த்தப் பெற்ற சொற்பொழிவு.
2. இறையனர் களவியல், சூத்திரம் 1 உரை.

தியர் மாணுக்கராகிய அதங்கோட்டாசிரியர் கேட்ட வினுக்களுக்கெல்லாம் குற்றம் அற விடை கூறப்பட்டு அரங்கேற்றப் பெற்றது என்பது தெரிகின்றது. இக் காலத்தில் போல முற்காலத்தில், எவரும் தம் நோக்கத்திற்கு ஏற்ப நூல் இயற்றி வெளியிடுதல் இயலாது. ஒருவர் இயற்றிய நூல், தக்க புலவர்களுடைய அவையில் குற்றம் தீர அரங்கேற்றப்பெற்ற பின்பே எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படும். இது கருதியே எல்லா நூல்களுக்கும் முன்பே இருக்கவேண்டிய சிறப்புப்பாயிரத்துக்குப் பதினெரு இலக்கணங்களே வகுத்த தொல்லாசிரியர், அவற்றுள் ஒன்ருகக் களன் என்பதனையும் கொண்டனர். களன் என்பதற்கு அவைக்களம் என்பது பொருள் ஆகும். எனவே, ஒரு நூலின் முன்னே அந்நூல், இன்னருடைய அவைக்களத்தே அரங்கேற்றப்பட்டது எனக் கூறுதல் வேண்டும் என்பதாம். ''அவையடக்கியலே'' என்று தொடங்கும் தொல்காப்பியச் சூத்திர[1]விதிப்படி, நூல்களில் அவையடக்கம் கூறும் வழக்கமும் இக்கருத்தை வலியுறுத்துவதாகும்.

வெண்பாப் பாட்டியல் முதலிய நூல்களில், நல்லவை, நிறையவை, தீயவை என்னும் மூவகை அவைகளின் இயல்புகள் கூறப்பட்டுள்ளன.[2] அவற்றுள் நல்லவையில் உள்ளோர் இலக்கணம், அறநெறி நிற்றலும், பொய், காமம், சினம், செற்றம் என்னும் இவை இல்லாமையும், கலேகளெல்லாம் உணர்தலும் என்பர். நிறையவையில் உள்ளோர் இலக்கணம், அடக்கம், செம்மை, நடுவுநிலே, ஞானம், நற்குலம் என்னும் இவை உடைமையும், ஒருவர் தாம் கற்றவற்றைப் பிறர் மனங் கொள்ளக் கூறமாட்டாராயினும், அம்மாட்டாமையை மறைத்துப் பொருளேச் சொல்லிக் காட்டி, அதனைத் தவறு இன்ருக எல்லோர் மனமும் கொள்ளும்படி செய்தலும் என்பர். நிறையவையின் இயல்பு ஒன்றை, மலேபடுகடாத்தில் உள்ள,

''நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து
வல்லா ராயினும் புறமறைத்துச் சென்ருேரைச்
சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி
நல்லிதின் இயக்குமவன் சுற்றத்து ஒழுக்கமும்.''[3]

என்னும் பகுதியாலும் அறியலாம். மேற்கூறப்பட்ட இயல்புகளேயுடைய நல்லவையிலும், நிறையவையிலும் நூல்களே அரங்கேற்றலாம். தீய அவையில் அரங்கேற்றுதல் ஆகாது. அரங்கேற்றும் புலவரோடு ஒத்த புலவர் உள்ள அவை, நல்லவை என்பதும், மேற்பட்ட புலவர் உள்ள அவை நிறையவை என்பதும் தெரிகின்றன. இவ்விலக்கணங்களுக்கு மாருன இயல்புடையவர் உள்ள அவை, தீய அவையாம். யாப்பருங்கல விருத்தியுரையிலும் நல்லவை, தீயவை, குறையவை, நிறையவை என்னும் நால்வகை அவைகளின் இயல்புகள் கூறப்பட்டுள்ளன.[4]

முற்காலத்து அரசர்களுடைய அவையில், வில்வித்தை யாழ்வித்தை முதலியனவும் அரங்கேற்றப்படுதல் உண்டு என்பதும், இருவர் வாதம் செய்ய எண்ணிஞல், தகுதியில் சிறந்தவர்களே, அவையில், நடுநிலேத் தானத்தில் அமைத்து, அவர்கள் முன்பு வாதம்செய்து, வெற்றி தோல்வி அறிதல் உண்டு என்பதும் பெருங்கதை முதலிய நூல்களில் காணப்படுகின்றன. அவையில் வாதம் செய்தல் உண்டு என்பதை, 'மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்' என்னும் நன்னூல் சூத்திரப்[5] பகுதியாலும் உணரலாம்.

இனி அரசர்களுடைய அவையில், ஓலக்க அவை, மந்திராலோசனே அவை என இரண்டு வகை காண்கின்ருேம். ஓலக்க அவையில், அரசர்கள் பிறரும், அமைச்சர் முதலாயோரும் இருப்பார்கள். இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் முத்தமிழும் முழங்கும். முத்தமிழ்ப் புலவர்கட்கும் பரிசுகள் வழங்கப்படும். மேலும் பொதுவான பல செயல்கள் நடைபெறும்.

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், சூத்திரம் 109.
2. வெண்பாப்பாட்டியல், பொதுவியல், செய்யுள் 9—11.
3. மலேபடுகடாம், அடி 77—80.
4. யாப்பருங்கலவிருத்தி, சூத்திரம். 96. உரை,
5. நன்னூல், சூத்திரம், 53.

மந்திராலோசனை செய்யும் அவையைப் பற்றிய குறிப்புக்கள், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், பாரதம் முதலிய நூல்களில், கட்டியங்காரன், தசரதன், இராவணன், துரியோதனன் முதலாயோருடைய அவைகளைக் கூறும் இடங்களில் காணப்படுகின்றன. அவ்வவையில் இருப்பவர்களுள் பலர் கூற்றுக்கள், தம் அரசர்களுடைய கருத்து நல்லதாயினும், தீயதாயினும் அதற்குச் சார்பாக உள்ளன. அரசன் தீயவனுயின், அவன் கருத்தை மறுத்து இடித்துக் கூறும் அவையத்தார் சிலர் இருந்தமையும்,[1] அந்நூல்களின் வாயிலாக அறிகின்றோம். எடுத்துக்காட்டாகத் தசரதனுடைய அவையத்தார் இயல்பையும், இராவணனுடைய அவையத்தார் இயல்பையும் பார்ப்போம்: தசரதனுடைய அவையத்தார் இயல்புகள், அயோத்தியா காண்டத்து மந்திரப்படலத்தில் பல பாடல்களிற் காணப்படுகின்றன. அப் பாடல்கள், திருக்குறட் கருத்துக்கள் பலவற்றை அடக்கி உள்ளன. அவற்றுள் இரண்டு பாடல்களைக் கூறுவேன்.

"உற்றது கொண்டு மேல்வந்து
உறுபொருள் உணரும் கோளார்
மற்றது வினையின் வந்தது
ஆயினும், மாற்றல் ஆற்றும்
பெற்றியர்; பிறப்பின் மேன்மைப்
பெரியவர்; அரிய நூலும்
கற்றவர்; மானம் நோக்கிற்,
கவரிமா அனைய நீரார்."[2]

"தம்முயிர்க்கு உறுதி யெண்ணார்
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
நின்று உரைக்கும் வீரர்
விடாதுசெம்மையில் திறம்பல் செல்லாத்
தேற்றத்தார் தெரியுங் காலம்
மும்மையும் உணர வல்லார்
ஒருமையே மொழியும் நீரார்."[3]

என்பனவாம்.

இராவணனுடைய மந்திராலோசனை அவையைப் பற்றிய பல குறிப்புக்கள், யுத்த காண்டத்து மந்திரப் படலத்திலும், ஒற்றுக் கேள்விப் படலத்திலும் உள்ளன. அறிவும், அனுபவமும், முதுமையும், குணமும் உடைய அமைச்சர்களும், மக்கள் தம்பியர் போன்ற நெருங்கிய உறவினரும், ஊமர் முதலியோரும் அல்லாதவரை இராவணன், அவைக்கு வெளியில் போகச் செய்தான் என்பது அங்கே கூறப்பட்டுள்ளது.[4] இளையரையும், மகளிரையும் வெளியில் போகச் செய்தான் என்பதைக் கம்பர் இரண்டு படலத்தும் கூறியுள்ளார்.[5] அது, அவர்கட்கு மறைப்பொருளை அடக்கிவைத்துக்கொள்ளும் ஆற்றல் இல்லாமையைப் புலப்படுத்துவதாகும். மந்திராலோசனை செய்யுங்கால் உடன் இருக்கத் தகாதவர்கள் இவரென்பதைப் பாரதத்தில் உள்ள,

"துன்று பிணியோர் துறந்தோர் அடங்காதோர்
கன்று சினமனத்தோர் கல்லா தவர் இளையோர்
ஒன்று முறைமை யுணரா தவர்மகளிர்
என்றுமிவர் மந்திரத்தின் எய்தப் பெறுதாரே."[6]

என்னும் பாடலால் நன்கு அறியலாம்.

அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதர், ஒற்றர் ஆகியவர்களை அரசனுக்கு உரிய ஐம்பெருங்குழு எனவும், கரணத்தியலவர் முதலிய எண்மரை அரசனுக்கு உரிய எண்பேராயம் எனவும் பழந்தமிழ் நூல்கள் கூறுகின்றன.

இனி, அறங்கூறு அவையத்தார் இயல்புகளை நோக்குவோம். அவர் இயல்புகள், தொல்காப்பியத்திலும், புறப்பொருள்

1. இராமாயணத்தில், இராவணன் அவையில், சிலர், இராவணன் கருத்துக்கு உடன்பட்டுப் பேசியதும், வீடணன், எதிர்த்துப் பேசியதும், பாரதத்தில் பாஞ்சாலியின் துகில் உரியப்பட்ட காலத்தில், விகர்ணன், துரியோதனன் செயலை எதிர்த்துப் பேசியதும் இங்குக் குறிப்பிடத்தக்கன.

2. கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், மந்திரப் படலம், செய்யுள், 6.

3. கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், மந்திரப் படலம், செய்யுள், 8.

4. கம்பராமாயணம், யுத்த காண்டம், மந்திரப் படலம், செய்யுள், 8, 9. கம்பராமாயணம், யுத்த காண்டம், ஒற்றுக் கேள்விப் படலம், செய்யுள். 41.

5. கம்பராமாயணம், யுத்த காண்டம், மந்திரப் படலம், செய்யுள். 7. கம்பராமாயணம், யுத்த காண்டம், ஒற்றுக்கேள்விப் படலம், செய்யுள், 40.

6. பாரதம், கிருட்டினன் தூதுச் சருக்கம், செய்யுள், 50.

வெண்பாமாலையிலும் வாகைத்திணைத் துறைகளுள் ஒன்ருகக் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியத்தில், "எட்டுவகை நுதலிய அவையகத்தானும்"[1] எனவும், புறப்பொருள் வெண்பாமாலையில், அவைய முல்லை என்னுந் துறையின் உதாரணத்தில், "எட்டின் வழிபடர்தல் வல்லது அவை"[2] எனவும் கூறப்பட்டிருத்தலால், அவையத்தாருக்கு எட்டு இயல்புகள் இன்றியமையாது இருத்தல் வேண்டும் என்பது தெரிகின்றது. அவை, குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவு நிலைமை, பொருமையின்மை, அவாவின்மை என்பனவாம்.

இவற்றைத் தொல்காப்பிய வுரையில் காட்டப்பட்டுள்ள,

"குடிப்பிறப்பு உடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மை வாய்மடுத்து மாந்தித் தூய்மையிற்
காதல் இன்பத்துள் தங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை அவாஅ வின்மையென
இருபெரு நிதியமும் ஒருதாம் ஈட்டும்
தோலா நாவின் மேலோர் பேரவை,"[3]

என்னும் ஆசிரியமாலைப் பாடற்பகுதியாலும், புறப்பொருள் வெண்பாமாலை உரையில் காட்டப்பட்டுள்ள,

"குடிப்பிறப்புக் கல்வி குணம்வாய்மை தூய்மை
நடுச்சொல்லு நல்லணி யாக்கம்—கெடுக்கும்
அழுக்காறு அவாவின்மை அவ்விரண் டோடு
இழுக்கா அவையின்கண் எட்டு."[4] [எட்டு

என்னும் பழைய வெண்பாவாலும் அறியலாம். இவற்றுள் தொல்காப்பிய உரையில் ஒழுக்கம் எனக் காணப்படும் இடத்தில், புறப்பொருள் வெண்பாமாலை உரையில், குணம் எனக் காணப்படுகின்றது. ஒழுக்கம் உடைமையும் ஒரு குணமேயாம்.

இவ் அறங்கூறு அவையத்தைப் பற்றி மதுரைக் காஞ்சியில்,

"அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோல் அன்ன செம்மைத்து ஆகிச்
சிறந்த கொள்கை அறங்கூறு அவையம்."[5]

எனப் பொருள்நயம் சிறப்பக் கூறப்பட்டுள்ளது. இவ் அடிகளின்கருத்து, அவையில் அறம் கூறுவோர், வழக்கிட்டவர்களுக்கு உண்டாகும் அச்சத்தையும், வருத்தத்தையும், பற்றுள்ளத்தையும் நீக்கி, ஒரு பக்கத்தில் கோபமும், மற்ரெரு பக்கத்தில் மகிழ்ச்சியும் செய்யாமல் தம் மனத்தைக் காத்து, நடுவுநிலைமையும், விரதங்களும் உடையராய் இருத்தல் வேண்டும் என்பதாம். இவற்றுள் அச்சம் என்பது, நடுவுநிலைமை தவருமல் வழக்கிற்கு முடிவு கூறுவார்களோ கூறமாட்டார்களோ என்னும் ஐயத்தால், வழக்கிடுவாரிடத்து உண்டாவதாகும். அவலம் என்பது, வருத்தம் அது, வழக்கில் தோற்றவர்களுக்கு அத்தோல்வியால் உண்டாவதாகும். ஆர்வம் என்பது, அவர்களுடைய உள்ளம் கருதிய பொருள்கள்மேல் தோன்றிய பற்றுள்ளமாகும். அஃதாவது—வழக்கில் தம் கொள்கையே நேர்மையானது என்று நினைக்கும் முடிவான உள்ளம் வழக்கிடுவாரிடத்து அச்சம், அவலம், ஆர்வம் என்னும் இம்மூன்றும் இருத்தல் இயல்பே. வழக்கிற்கு முடிவு கூறும் பொழுது வழக்கிட்டவருடைய மனம் கொள்ளுமாறு நன்ருக விளக்கி முடிவைக் கூறுதலின் வாயிலாக இம் மூன்றையும் போக்குதல் வேண்டும். இவ்வாறு செய்வதற்கு அவையத்தாரிடம் அமையவேண்டிய ஆற்றல், நடுவுநிலை பிறழாமை என்பது தோன்ற 'ஞெமன் கோல் அன்ன செம்மைத் தாகி' என மூன்ரும் அடியில் கூறப்பட்டது. சில நடுவர்கள் வழக்கின் உண்மை, தம் மனத்தில் தெரிந்தவுடன் பொய்வழக்கிடுவார்பால் கோபக் குறிப்புக் காட்டுதலும், மெய்வழக்கிடுவார்பால் மகிழ்ச்சிக் குறிப்புக் காட்டுதலும் உண்டு. அவ்வாறு செய்யாமல் அவர்களின் மனம் காக்கப்படுதல் வேண்டும்.

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், சூத்திரம். 17.
2. புறப்பொருள் வெண்பாமாலை, செய்யுள். 173.
3. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், சூத்திரம். 17 இளம்பூரணர் உரை.
4. புறப்பொருள் வெண்பாமாலை, செய்யுள் 173 உரை, மேற்கோள்.
5. மதுரைக் காஞ்சி. அடி, 489—492.

அதற்கு ஏற்ப மனம், விரதங்களால் பண் பட்டிருத்தல் வேண்டும் என்பது தோன்றக் 'கொள்கை' என நான்காம் அடியில் கூறப் பட்டது. கொள்கை என்பதற்கு விரதம் என் பது பொருளாகும். இவ்வாறு முதல் அடிப் பொருளுக்கு மூன்றும் அடிப் பொருளும், இரண்டாம் அடிப் பொருளுக்கு நான்காம் அடிப் பொருளும் காரணமாய், நிரல்நிறை யாய் அமைந்து விளங்கும் அழகு இன்பந் தருவதாகும். இவ் அறங்கூறு அவையம், பண்டைக் காலத்தில் இருந்தமையை,

''அரைசுகோல் கோடினும் அறங்கூறு அவையத்து
உரைநூல் கோடி ஒருதிறம் பற்றினும்.''

என்னும் சிலப்பதிகாரப் பகுதியும்[1] அறங் கூறு அவையம்—தருமாசனத்தார் வழக் குரைக்கும் இடம் என்னும் அடியார்க்கு நல்லார் உரைப்பகுதியும் வலியுறுத்துவன வாம்.

இத்தகைய அறங்கூறு அவையங்கள் முற்காலத்துப் பல இடங்களில் இருந்த மைக்குப் பெரியபுராணமும் சான்று பகர் கின்றது. சிவபெருமான், திருவெண்ணெய் நல்லூரில் இருந்த அவையில், சுந்தர மூர்த்தி நாயனரோடு வழக்குத் தொடர்ந்து அடிமைஓலை காட்டிச் சுந்தரமூர்த்தியை அடிமைகொண்டார் என்னும் வரலாற் ருலும், திருநீலகண்ட நாயனர், தம்மிடம் சிவபெருமான் கொடுத்த ஓட்டினைக் கொடா மலும், அவ் ஓடு காணமற் போனமையை மெய்ப்பிக்கத் தம்மனைவியின் கையைப் பிடித்துக் குளத்தில் மூழ்கிச் சூள் செய்யா மலும் இருந்த பொழுது சிவபெருமான், தில்லைவாழ் அந்தணர்கள் வீற்றிருந்த அவைக்குச் சென்று வழக்குத் தொடர்ந்து வெற்றி பெற்ருர் என்ற வரலாற்ருலும் திருவெண்ணெய் நல்லூரிலும், தில்லை யிலும் அறங்கூறு அவையங்கள் இருந்தன என அறிகின்ருேம். அவ் அவையில் இருந்து வழக்காராய்ந்த பெரியோர்களைப் பற்றிச் சேக்கிழார் கூறிய "பண்பின் மிக்க மேன்மையோர்"[2] "அனைத்து நூல் உணர்ந்தீர்"[3] "மாசிலா மறையோர்"[4] என்னுந் தொடர்களை ஆழ்ந்து நோக்கு வார்க்கு அப் பெரியோர்கள்பால் மேற் கூறப்பட்ட குடிப்பிறப்பு முதலிய இயல்பு கள் இருந்தன என்பது புலனகும். அர சனே வழக்காராய்ந்து முடிவு கூறுதலும் உண்டு என்பதைச் சோழன் கரிகாற் பெரு வளத்தானுடைய வரலாற்ருல் அறிய லாம்.

இனி ஊர்தொறும் நிறுவப்படும் கிராம சபைகளில் இருந்தவர்களின் இயல்புகளைப் பற்றிக் கல்வெட்டுக்களில் காணப்படுங் குறிப்புக்களைப் பார்ப்போம்: இவ் அவை யத்தார், சம்வத்சரவாரியம், தோட்டவாரி யம், ஏரிவாரியம், பொன்வாரியம், பஞ்ச வாரியம் என்னும் ஐந்து உட்கழகங்களைத் தம்மகத்துக் கொண்டு, கிராம ஆட்சி முழு மையும் நடத்தினர். இவ் அவையின் உறுப் பினர்கள், ஆண்டுதோறும் ஆங்காங்குப் பொது மக்களால், குடவோலை வாயிலாகத் தேர்ந்தெடுக்கப் பெறுவர்.

''கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்
பொறிகண்டு அழிக்கும் ஆவண மாக்களின்.''[5]

என்னும் அகநானூற்றுப் பகுதி, இவ் வழக்கத்தைக் குறிப்பதாகும். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர், பெரு மக்கள் எனவும், திருவடியார் எனவும் கூறப்படுவர். இவ் அவையாருக்கு ஆளுங் கணத்தார் என்னும் பொதுப் பெயர் உண்டு. இவ் அவையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படும் உரிமையுடையோர், காணிக்கடன் செலுத்துதற்கு ஏற்ற கால் வேலி நிலமும், சொந்த மனையும் உடை யவராகவும், சிறந்த நூல்களைக் கற்ற அறி ஞராகவும், செயல்களை நிறைவேற்றும் வன்மை உடையவராகவும், அறநெறியில் ஈட்டிய பொருளைக் கொண்டு தூய வாழ்க்கை நடத்துவோராகவும், முப்பத் தைந்துக்குமேல் எழுபத்தைந்துக்கு உட் பட்ட ஆண்டு உடையவராகவும், மூன்று ஆண்டுக்கு உட்பட்டு எந்த நிறைவேற்றுக்

1. சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்த காதை, அடி 135--136.
2. பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம், செய்யுள், 63.
3. பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம், செய்யுள், 54.
4. பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம், செய்யுள், 60.
5. அகநானூறு, செய்யுள், 77.

கழகத்திலும் உறுப்பினராக இராதவராகவும் இருத்தல் வேண்டும்.

கீழ்க்காணும் இயல்புடையவர்கள், தம் வாழ்நாள் முழுதும் அவ் அவையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுத்தற்குத் தகுதி அற்றவராவர்:-ஏதேனும் ஒரு சபையில் உறுப்பினராக இருந்து கணக்குக் காட்டாதிருந்தவர், ஐவகைப் பெரும் பாதகம் செய்தோர், கிராமக் குற்றப்பதிவுப் புத்தகத்திற் பதிவு செய்யப்பட்டவர், பிறர் பொருளைக் கவர்ந்தோர், கள்ளக் கையெழுத்திட்டோர், குற்றங் காரணமாகக் கழுதைமேல் ஏற்றப்பட்டோர், கையூட்டுக் கொண்டோர், கிராமத்துரோகி என்று கருதப்பட்டோர், மேற் குறிக்கப் பெற்றவர்களின் உறவினர்.

இவ் அவையின் உறுப்பினர்களுக்கு எவ்வகை ஊதியமும் இல்லை. வழக்கின் தீர்ப்பை எழுதுவோனுக்கும், கணக்கெழுதும் கரணத்தானுக்கும் ஊதியம் உண்டு. அவையின் செலவிற்குச் சபாவிநியோகம் என்னும் வரி வாங்கப் பெற்றது. அவையின் நிகழ்ச்சி, இரவிலும் நடைபெறுவது உண்டு. உறுப்பினர்களுக்கு அவைக்கு வருமாறு முரசறைந்தும், இரட்டைக் கொம்பு ஊதியும் அறிவிப்பது வழக்கம்.

நியாய விசாரணை செய்யும் வேலை, முற்கூறப்பட்ட உட்கழகம் ஐந்தனுள், சம்வத்சர வாரியத்தைச் சேர்ந்தது. நியாய விசாரணை செய்வோர், கொலை செய்தவனுக்குக் கொலைத்தண்டம் விதித்தலும், பிற குற்றஞ் செய்தவர்களுக்குச் சிறையிடுதலும், விலங்கிடுதலும் பொன்தண்டம் விதித்தலும் உண்டு. அறியாமையால் நேர்ந்த சாவிற்கெல்லாம் கொலைத் தண்டம் விதிக்கமாட்டார்கள். பொன்தண்டம் விதிக்கப்பட்டவர் அதனைக் கொடாது ஓடிவிட்டால், அவருடைய வீடு காணி முதலியவற்றை அரசனது ஆணையின்படி விற்று, ஊர்ச் சபையார் ஒழுங்கு செய்வர்.

இத்துணையும் கூறியவாற்றால், முற்காலத்து இருந்த பலவகை அவையத்தார் இயல்புகளை ஒருவாறு அறியலாம்

---

## திருக்கூட்டம்

உலகியல் அவையத்தார் போன்று வீட்டியல் அவையத்தாருமுளர். உலகியலை அன்பியலென்றும் வீட்டியலை அருளியலென்றும் கூறலாம். அருளியல் வாழ்வுடையார் மெய்யடியாராவர். மெய்யடியாரெனினும் மெய்யுணர்வு கைவரப் பெற்ற மெய்த்தவத்தோரெனினும் ஒன்றே. இம் மெய்யடியார் பல்வேறு அவையத்தாராலும், சொல் வேந்தராலும் நன்கு மதிக்கப்பெறுவராவர். இவர்கள் இறைநாட்டமிக்கவராய் முறையே பத்தராய்ப் பணிதலும், பரமனையே பாடுதலும், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தலுமாகிய செயற்கருஞ் செய்கையர். இவர்கள் தம்பொருட்டுவாழும் தன்மையர் போன்று காணப்படினும் இவர்தம் உள்ளமும், உரையும், உஞற்றுதலும் உலக நன்மையின் பொருட்டே யென்பது தேற்றம். 'வையக முந்துயர் தீர்கவே' என்பதுதான் அவர்களுடைய நீங்கா அருள் நெஞ்சத்துத் தோன்றும் பொருளுண்மையாகும். இம் மெய்யடியார் கூட்ட மாண்பு வரும் செந்திருமாமறைமுடிபா னுணரலாம்:

உடையா ளுன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தானல் அடியேனுன்
அடியார் நடுவுள் இருக்குமரு ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே.

---

# வள்ளுவர் காட்டும் பொருளாதாரம்

[டாக்டர். திரு. பா. நடராசன்]

இவர் 13-5-1910 இல் கன்னியாகுமரி மாவட்டத்து ஆசிராமம் என்னும் சிற்றூரில் திரு. பாலசுப்பிரமணிய பிள்ளைக்கும் தாயம்மையாருக்கும் மகனாராகத் தோன்றினார். நாகர் கோவில் ஸ்காட் கிருத்துவக் கல்லூரியில் பயின்றபின் சிதம்பரம் மீனாட்சி கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'டாக்டர்' பட்டம் பெற்றார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் பொருளியல் துறையில் விரிவுரையாளராகப் பணியேற்றார்.



சென்னை, ஆந்திர அரசுகளின் பொருள்துறைக் கருத்துரையாளராகப் பணியாற்றினார். நாகர்கோவில் இந்துக் கல்லூரியின் முதல்வராகச் சிலகாலம் பணியாற்றினார். இப்பொழுது டில்லிப் பயன்துறைப் பொருளியல் ஆராய்ச்சிக் கழகத்தின் இயக்குநராகப் பணியாற்றி வருகின்றார். அரிய நூல்களைத் தமிழில் இயற்றியுள்ளார். திருமந்திரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வருகின்றார். மேலை நாடுகட்குச் சென்று பல சொற்பொழிவுகளை நிகழ்த்தியுள்ளார்.

திருவள்ளுவர் அறநெறி வகுத்த சான்றோரெனவே பலரும் கருதுவர். ஆயின் அவர் அரிய பொருள்நூல் பேரறிஞருமாவர்; வள்ளுவர் காட்டும் பொருளாதாரம் அவர் காட்டிய ஏனைய அறங்களைப் போலவே எக்காலத்திற்கும், எந் நாட்டிற்கும் ஏற்றது. காலத்தாலும் தேயத்தாலும் மாறுபடும் கருத்துக்களைக் கூறாது என்றும் பொன்றாது நிலைக்கும் அடிப்படையான கருத்துக்களே அவர் நூலின்கண் இடம் பெறுகின்றன. ஆயினும் இன்றையப் பொருளாதாரக் கருத்துக்கள் அனைத்தும் வள்ளுவர் நூலிலே உள்ளன எனக்கூறல் பொருந்தாது. 18 ஆம் நூற்றாண்டின் இறுதியிலேதான் பொருளாதாரம் ஒரு தனிக்கலையாக ஆரம்பமாயிற்று. அதனைத் தனிக்கலையாக அமைத்து வளர்த்த பெருமை அறிஞர் ஆடம் ஸ்மித்திற்கே உரியதாகும். ஆடம்ஸ்மித் கண்ட பொருளாதாரம் இயந்திர வளர்ச்சியின் ஏதுவாய்ப் பல்வேறு கிளைகளாய்ப் பிரிந்து வளரலாயிற்று. இன்றைய பொருளாதார நூல் கண்ட கருத்து விரிவுகள் யாவும் வள்ளுவனார் குறளிலே காண்டல் அரிது. எனினும் அவற்றின் அடிப்படைக் கருத்துக்கள் திருவள்ளுவர் நூலிலே உள்ளன.

வள்ளுவரின் பொருளாதாரக் கருத்துக்களில் பெரும்பாலனவும் பொருட்பாலிலேதான் காணப்படுகின்றன. வாழ்விற்கு இன்றியமையாதனவாய்த் துய்க்கத்தக்கன அனைத்தும் 'பொருள்' எனும் சொல்லில் வள்ளுவர் அடக்குகிறார். அவர் காலத்தே பொருளாதாரம் தனித்து நிற்கவில்லை. அரசியலின் முக்கிய அங்கமாக அது விளங்கியது. மேலை நாட்டிலும் ஆடம்ஸ்மித் காலம் வரையிலும் இந்நிலையே நிலவியிருந்தது. ஆல்பிரட் மார்ஷல் போன்றவரே அதைத் தனித்ததோர் கலையாக விஞ்ஞான முறையிலே பிரித்து வளர்த்தனர்.

வள்ளுவர் காணும் இலட்சியவள நாடு பசி, நோய் அச்சம் என்னும் மூன்றினின்றும் மக்கள் விடுதலைபெற்று விளங்குவது.

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு."

என்றார். இந்த இலட்சியத்தை அடைதற்கு ஏற்ற பொருளாதாரக் கோட்பாடுகளையும் வகுத்துத் தந்தார். பசிப்பிணிக்கு வித்தாயிருப்பது வறுமை; எனவே ஆல்பிரட் மார்ஷல் போன்ற பொருளாதார அறிஞர்கள் வறுமையின் கொடுமையைக்

கூறித் தங்கள் நூல்களைத் தொடங்குகிறார்கள். வள்ளுவரும் வறுமையின் கொடுமையை விரித்துக் கூறுகிறார்.

"இன்மை யெனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும்."

என்றும்,

"தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குரவு என்னும் நசை"

என்றும் வறுமையின் கொடுமையை விளக்குகிறார்.

வறுமையின் கொடுமையால் இரக்கின்றனர். இரத்தல் ஒரு சமுதாயத்தின் இழிவுக்கு எல்லையாகும் எனவே இரத்தலை வள்ளுவர் முற்றிலும் வெறுத்துப் பேசுகிறார். "நல்லாறு எனினும் கொளல் தீது" என்கிறார் வள்ளுவர். இரந்துதான் உயிர் வாழவேண்டும், இதுவே விதி–என எவரேனும் கூறின் அத்தகைய விதியை வகுத்தவன் இரந்துண்டு அழிவானாக என வெகுண்டு கூறுகிறார். தாகத்தான் தளரும் பசுவின் பொருட்டுத் தண்ணீரைக் கேட்டலும் இழிவு என்கிறார்.

இங்ஙனம் இரத்தலையும் இரவச்சத்தையும் கூறும் வள்ளுவர் இக்கொடுமையை ஒழிக்க அரசியல் சட்டம் எதுவும் வகுக்கவில்லை. அறச்சட்டத்தை வகுக்கிறார். சமுதாயத் தமைந்த பொருளாதார மேடுபள்ளங்களை அறத்தால் அன்பால் அருளால் சமப்படுத்தக் கருதுகிறார். நல்லார்கட்பட்ட செல்வத்தைப் பல்லோர்க்கும் பயன்படத் தூண்டுகிறார். அறிவுடையார் பால் அமைந்த திரு ஊர் நடுவே உள்ள பயன்படு பழுமரம் போலவும், ஊருணிபோலவும் உதவுவதாக; ஈத்துவக்கும் இன்பத்தைச் செல்வர்கள் உணர்வார்களாக; பாடுபட்டுத் தேடிய பணத்தைப் பாதுகாத்து வைத்தற்குரிய ஏம இடம் பசித்தோர் வயிருகும்; எனவே அற்றார்க்கும் அலந்தார்க்கும் செல்வர்கள் வழங்குவார்களாக; தாம் பெற்ற செல்வத்தால் சுற்றத்தால் சுற்றப்பட வாழ்வார்களாக; சகடக்கால் போலவரும் திரு உள்ள போதே சாவாத புகழையும் அறத்தையும் தேடிக்கொள்வார்களாக — எனக் குவிந்தோர் பால் கிடக்கும் செல்வம் பரந்து பல்லோர்க்கும் பயன்படுமாற்றை அறநெறி வாயிலாகக் காட்டுகிறார் வள்ளுவர். அறச்சட்டமே என்றும் நிலைக்கும் சட்டம்; அரசியல்சட்டம் மாறுந்தன்மையது என்பதை அறிந்தவர்.

பொருளின் இன்றியமையாச் சிறப்பை வள்ளுவர் பெரிதும் வற்புறுத்துகிறார். பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை. பகைவரின் செருக்கையும் தருக்கையும் அறுக்கும் படை பொருளன்றி வேறில்லை. திரண்ட செல்வம் படைத்தோன் அரிய செயலிலே இறங்குதல் மலை யுச்சிமீது நின்று மத யானைப் போரைக் காண்டல் ஒப்பாகும். மதிக்கத்தக்க மாண்பிலாரையும் மதிக்கப்படுமாறு செய்வது பொருள்.

பொருள் இம்மையையும் மறுமையையும் வழங்க வல்லது; ஆயினும் அதனை நல்லாற்றிலேயே ஈட்டுதல் வேண்டும்; அறவழியிலே தேடிய செல்வம் அறத்தையும் இன்பத்தையும் அளிக்கும். தீய வழியிலே திரட்டிய செல்வம் அழிவதோடன்றித் துன்பத்தையும் தந்தகலும்.

"அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்."

அருளோடும் அன்போடும் வாராத செல்வத்தை நல்லோர் என்றும் நாடார்.

பொருள் ஓரிடத்தே தேங்கிக் கிடத்தல் முறையன்று; செல்வம் சுழன்று கொண்டே இருக்கவேண்டும்; செல்வத்துப் பயன் துய்த்தலாகும். தானும் தக்காரும் உற்றாரும் மற்றாரும் நன்கு உண்ண உடுக்கச் செல்வம் உதவுதல் வேண்டும். பொருளாலேயே அனைத்துமாம் என்பது உண்மை; எனினும் அதுகருதித் தானும் உண்ணாது தக்கார்க்கும் ஈயாது இவறுவோன் மண்ணிற்கே சுமையாக அமைகிறான். அத்தகையோன் பொருள் அவனுக்கும் அவன் வாழும் நாட்டிற்கும் தீதாம். அவன் இருப்பினும் இறந்தானாகவே எண்ணப்படுவான்.

"வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃது
உண்ணான் செத்தான் செயக்கிடந்த தில்"

எனவே நலம் நிறைந்த சமுதாயத்தே வறுமை இரத்தல், இவறுதல் ஆயவை

இருத்தல் கூடாது என்பது வள்ளுவரின் பொருளாதாரக் கருத்தாம்.

இத்தகைய சமுதாயம் அமைய மக்களிடம் வேண்டற்பாலன ஊக்கமும் ஓயா உழைப்பும். செல்வம் ஊக்கத்தாலே சேர்வது; முயற்சி மெய்வருத்தக் கூலிதரும். உடையரெனப்படுவது ஊக்கம்; ஊக்கமிலாச் செல்வன் உண்மையில் வறியவனுவான். சேர்த்த செல்வம் சிதைதல் கூடும்; எனினும் ஊக்கமுடையான் அதுகண்டு அஞ்சி அழியான். இழந்துவிட்டோமே என ஏங்கி மடியான். ஊக்கமுடையவரே மக்கள் என மதிக்கப்படத் தக்கவர்; மற்ருேர் மரமனையர். தாமரைத் தண்டு தண்ணீரின் அளவைப் பொறுத்து உயர்ந்தோங்கி நிற்கும். பொருளின் உயர்வும் ஊக்கத்தின் எல்லைக் கேற்றவாறு அமைந்திருக்கும். இத்தகைய ஊக்கமுடன் செயலாற்றுங்கால் சோம்பராகிய மடி மெல்லென மேவலாம். அந்நிலையில் அவன் மடியைத் தனதாக்கிக் கொள்ளுகிருள் மூதேவி. முயற்சியுடையானிடத்தே திருமகள் தங்குகிருள். எனவே மடிமை அகற்றி வினையாற்றல் வேண்டும். வினையாற்றுங்கால் எடுத்த செயல்களுக்கு இடையூறுகள் நேரலாம்; மெய்வருத்தம் பாராது கண் துஞ்சாது வினையாற்றலே வெற்றிதருவதாகும். இடுக்கண் ஏற்பட்டபோது அது கண்டு கலங்காத்தன்மை வேண்டும் துன்பம் தொடர்ந்தபோது சிந்தை தளர்வோன் செயலாற்றிப் பொருளீட்டித் தனக்கும் நாட்டிற்கும் சிறந்தன செய்யும் ஆற்றலற்றவனுவான். எனவே இடுக்கண் அழியாமை வேண்டும்; அதுமட்டுமன்றி துன்பம் வந்தபோது அகமும் முகமும் மலர்ந்து நிற்கும் ஆண்மையும் வேண்டும். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்பது வள்ளுவர் வாக்கு. எப்பணியையும் அரிதென எண்ணிச் சோர்தல் ஆகாது. 'அருமையுடைத்தென்று அசாவாமை வேண்டும்.' உழைப்பே செல்வம்; ஊக்கமே உடைமை. ஊக்கமிலான் கருத்துக்கள் கனவாகவே முடியும். முயற்சியிலான் வழங்கும் தன்மை பேடி கரத்தமைந்த படைபோன்று பயனற்றதாம். நெடுநீர், மறவி, மடி, துயில் ஆகிய நான்கும் அழிவார் மேற்கொள்ளும் அணிகளாகும். மடியுடையான் குடியழியும், அத்தகைய மக்கட் சமுதாயம் ஒழியும்; நாடு நலிவுறும்; அடிமை வாழ்வு வளரும்.

வள்ளுவர் வகுக்கும் பொருளாதார வாழ்வு ஓயா உழைப்பை அடிப்படையாகக் கொண்டது; உலையாத ஊக்கத்தை உயிராய்க் கொண்டது; தாளாண்மையும் வேளாண்மையும் நிறைந்தது. மேடும் பள்ளமும் கருதாது பாரச் சகடம் ஈர்த்து ஏகும் வன்மை வாய்ந்த எருதேபோல் இடையிடையே மேவும் அல்லலையும் தொல்லைகளையும் வீசியெறிந்து வெற்றி மாளிகை நோக்கி வீரமுடன் செல்வோன் கரத்ததே சமுதாயம்; அவன் ஆணை வழியே நாடும் வாழ்வும் செல்லும்.

உற்பத்திக் கருத்தாக்களாகப் பொருளாதார நூல், நிலம், தொழில், முதல் அமைப்பு ஆயவற்றைக் கருதியது. வள்ளுவரும் நிலத்தை முதற்கருவியாகப் பொருளாதாரத்திற்குக் கொள்கிருர்.

வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொள்கிருர். உழவு ஓங்கியிருந்த காலத்தே வள்ளுவர் வாழ்ந்தார் என்பதனுல் அதற்குச் சிறப்புக் கொடுத்தாரல்லர். வேளாண்மை எக்காலத்திலும் எல்லாத் தொழிற்கும் அடிப்படையாக, அச்சாணியாக அமைந்துள்ளது என்பது கொண்டேயாம். உண்டி முதற்றே உலகம்; எனவே உணவைப் படைப்பது மனிதனின் தலை சிறந்த தொழிலாகிறது. 'உழுவார் உலகத்தார்க்கு ஆணி; அஃதாற்ருது எழுவாரை எல்லாம் பொறுத்து' என்பது வள்ளுவர் வாய்மொழி. உழவர் தம் பணியாற்ருது வாளாவிருப்பின் உலகைத் துறந்தோம் எனும் முனிவர்க்கும் உயிர் வாழ்தல் அரிது. எத்தொழிலைச் செய்யினும் மக்கள் ஏர்த்தொழிலைப் பின்பற்றியே வாழவேண்டியவராவர். அதுவே தொழில்களில் அனைத்தினும் தலைசிறந்தது. நெற்கதிர் நிறைந்த நாட்டினை அந்நிய நாடுகள் அடைக்கலமாக வந்தடையும். இக் கருத்துக்களை எல்லாம் தம் அழகிய குறட்பாக்களால் வள்ளுவர் இனிது கூறி உழவின் பெருமையையும் அருமையையும் விளக்குகிருர்.

சமுதாய அரண்மனையின் வன்மை வாய்ந்த தூணுகப் பாயிரத்தில் வான்

சிறப்பை வள்ளுவர் அமைத்ததன் கருத்தை அவர் உழவுக்குக் கொடுத்த சிறப்பால் உணர்கிறோம். முன்னுரையாகக் கருதப் படும் பாயிரத்தின் இரண்டாம் பகுதி வான் சிறப்பாகும். அதன் வாயிலாக ஏர்த்தொழி லின் இன்றியமையாமையை வள்ளுவர் 'ஏரின் உழா அர் உழவர்' எனக்குறிப்பிட் டார். அத்தகைய ஏர்த்தொழிலின் ஏற்றத் தைத் தனித்ததோர் அதிகாரத்தால் இங்கு விளக்குதல் அதன் ஒப்பற்ற சிறப்பை எடுத்துணர்த்தவே யாகும்.

உழுவாரே கைகட்டி வாழாது தலை நிமிர்ந்து வாழ்பவர். ஏனையோருக்கு அத்துணைப் பொருளாதார சுதந்திரம் இருப்பதில்லை. வள்ளுவர் காலத்தே பயிர்த் தொழிலில் அரசு தலையிட்டதில்லை; உழவர் எவரிடமும் சென்று ஏற்றதில்லை.

உழவின் சிறப்புப் பற்றிக் கூறும் திரு வள்ளுவர் அத்தொழில் பற்றிய பொது வான நுட்பங்களையும் குறிப்பிடுகிறார். அவர் காட்டும் நுட்பங்கள் அத்தொழிலின் வெற்றிக்கு வேண்டியன. மண்ணைப் பண்படுத்தல் மிகவும் இன்றியமையாதது. காற்று எங்கும் நன்கு புகுமளவிற்குக் கதிர வன் ஒளியிலே மண் துகளாய் உலர்த்தப் படல் வேண்டும்; களை முளையிலே களை யப்படல் வேண்டும். உழுதல், எருவிடு தல், களைகட்டல், நீர்பாய்ச்சல் ஆகியவற் றினும் அப்பயிரைக் காப்பது சிறந்ததென வள்ளுவர் கூறுகிறார். நிலம் உழைப்புக் கேற்ற ஊதியம் உதவவல்லது.

உழவர்க்கே நிலம் உரியதாம். பாடு படாது, பயிர் செய்த பயனை மட்டும் பெற விரும்புவோரை விட்டு நிலமகள் நீங்கு கிறாள். போற்றப்படாத மனைவி புலந்து ஊடிவிடுதல்போலச் சென்று ஓம்பிப் பயி ரிடாதவனுக்கும் நிலம் தக்க பயனை அளித் தல் இல்லை.

"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்."

செல்வத்திற்குரிய வழிகளை மக்களுக்கு வகுத்தளித்தல், அரசாங்க வருமானத்தைத் திரட்டுதல், அது சிதையாவாறு காத்தல், காத்த அதனைத் தக்க வழி அறிந்து செலவு செய்தல்—

"இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு."

இந்நான்குள்ளும் வள்ளுவரின் அரசாங் கப் பொருளாதாரக் கோட்பாடு அடங்கும். இவற்றை இன்றைய அரசியல் பொருளா தாரத்தில் பொது வருவாய், அதனை நிர் வகிக்கும் வகை, செலவிடும் முறை எனும் மூன்றிலே அடக்குவர்.

பொது வருவாயைத் திருவள்ளுவர் உறுபொருள், உல்குபொருள், தெறு பொருள் என மூவகையாகப் பிரிக்கிறார். 'உறுபொருள்' என்பதனை மணக்குடவரும் பரிப்பெருமாளும் 'இயல்பாகவே வரு பொருள்' எனப் பொருள்கொண்டனர். இயல்பாகக் குடிகள் வழங்கும் பொருள் உறுபொருள் எனப்படும். பரிமேலழகர் 'வைத்தா ரிறந்து போக நெடுங்காலம் நிலத்தின்கட் கிடந்து பின் கண்டெடுத்த தூஉம் தாயத்தார் பெருததூஉமாம்' என உறுபொருளுக்கு விளக்கம் கூறுகிறார். இத் தகைய பொருளையெல்லாம் ஒரு நாட்டின் நிலையான வருவாயெனக் கூறுதல் இய லாது. இந்திய நாட்டில் வழி வழியாக அரசுக்கு வருவாயில் ஆறில் ஒரு பங்கு வழங்கும் வழக்கம் இருந்து வருகிறது. இது ஒவ்வொருவரின் கடமையாகவே அமைந்திருக்கிறது. இது செலுத்தப்பட வேண்டிய தொகை என எவரும் வருந்தி வழங்கியதன்று தொன்றுதொட்டு இயல் பாகவே செலுத்திவந்த தொகையாகும். உள்ளம் நோவாது உவந்து தாமாகவே மன்னர்க்கு மக்கள் இத்தொகையை வழங்கி வந்தனர். எனவே இது 'உறுபொருள்' எனப்பட்டது.

வற்புறுத்தி வரிவாங்குதலை வள்ளுவர் முற்றிலும் வெறுக்கிறார். குடிகளைத் துன் புறுத்தி வரி வாங்கும் மன்னவன் பாலை வனத்தே வேலைக்காட்டி வழிப்பறிசெய்யும் கள்வனுக்கு ஒப்பாகக் கருதப்படுவான்.

"வேலொடு நின்றான் 'இடு'என் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு."

நாட்டின் அடுத்த வருவாய் எனப் பட்டது சுங்க வரியாகும். பழந்தமிழகத்தே ஏனைய நாடுகளிலிருந்து எண்ணிறந்த பொருள்கள் இறக்குமதியாயின. காவிரி, கொற்கை, முசிரி முதலிய துறைமுகங்களில்

யவனரின் கலங்கள் வந்து நின்றன. காவிரிப்பூம் பட்டினத்தே பண்டங்களில் புலிக்குறி பொறிக்கப்பட்டிருந்தது. எனவே சுங்கம் அரசாங்கத்துக்கு இன்றியமையாத தாகியிருந்தது.

மூன்ருவது வருவாயாக மாற்ருரை முறியடித்துக்கொணர்ந்த பொருள் அமைந்தது. இது வழிவழியாக வந்த வருவாயாகும். இன்றும் போரில் தோல்வியுற்ற நாடுகளின் பொருளை வென்ருர் நஷ்ட ஈடு என்ற பெயரில் கவர்வதுண்டு.

'இயற்றலும்' என்பதற்கு அரசாங்கமே பொருள் வருவாய்க்குரிய வழிகளை ஆக்குதல் எனச் சிலர் பொருள் கொண்டார்கள். இன்றும் தொழில் முதலியவற்றைத் தேசீயமாக்கும் செயலைக் காண்கின்ருேம். எனினும் வள்ளுவர் காலத்தே இம் முறை இருந்ததென உறுதியாகக் கூறுதல் அரிது. நாட்டிலே வருவாய் பெருகுதற்கு நல்ல சூழ்நிலைகளை அமைத்தல் அரசாங்கத்தின் கடமை என்றே வள்ளுவர் கொண்டார்.

வரவு செலவுத் திட்டவகை பற்றி வள்ளுவர் கருத்து அறியத்தக்கதாகும். திருவள்ளுவர் காலத்தே தனிப்பட்டவர்க்கும் அரசினர்க்கும் இவ்வகையில் வேறுபாடு வகுக்கவில்லை. வருவாய்க்கு ஏற்ற வகையில் செலவு செய்தல் வேண்டும்; வரும் வழி சிறிதாயினும் தீங்கில்லை, செல்லும் வழி பெரிதாகாவிடின். அளவறிந்து வாழ்தலை வள்ளுவர் வற்புறுத்துகிருர். அங்ஙனம் அறியாது செலவு செய்வோன் வாழ்வு உள்ளதுபோல் தோன்றி விரைவில் அழிந்துவிடும்.

> "அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
> இல்லாகித் தோன்ருக் கெடும்."

இம்முறை இன்றைய அரசுக்கு ஏற்றதெனக் கூறல் இயலாது. பற்ருக்குறைத் திட்டங்களை வருங்கால நலம் கருதி அரசாங்கம் வகுக்கக்கூடும். அரசு தொடர்ந்து நிகழ்வது; இது தனிப்பட்டவர்க்கு ஏலாததாகலாம். ஆயினும், அரசுங்கூட என்றுமே பற்ருக்குறை வரவு செலவுத் திட்டங்களில் ஆட்சியை நடத்த முடியாது. என்ருவது குறைவை நிரப்பியே ஆக வேண்டும்.

'வகுத்தல்' என்பது பொருளைச் செலவிடும் வகைகளுக்குப் பிரித்தலாகும். அந்நாளில் அறத்திற்கென அரசு ஒரு பகுதியை ஒதுக்கி இறைபணிக்கும் ஏழைகட்கும் வழங்கிவந்தது. மற்ருெரு பகுதி படைகளுக்காகச் செலவிடப்பட்டது. மூன்ருவது சமுதாயத்தின்பொருட்டு, குளம் வெட்டல், சாலைகள் சோலைகள் அமைத்தல் ஆகியவற்றிற்காகச் செலவிடப்பட்டது.

இவ்வாறு பொருள்நூல் நுணுக்கங்களை வகுத்த வள்ளுவர் கிரேக்க பிளாட்டோ, அரிஸ்டாட்டில் ஆகியோரை வென்று நிற்கின்ருர். பிளாட்டோ காணும் பொருளாதார அமைப்பு கொடுங்கோல் ஆட்சிக்கே உகந்ததாகிவிடுகிறது. பிளாட்டோவின் மாணவராக அரிஸ்டாட்டில் இருந்தபோதிலும் ஆசிரியன் பொருளாதாரக் கொள்கையினின்றும் அவர் மாறுபடுகிருர்; ஆயினும் பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் என்று வள்ளுவர்போல் கொள்ளாது, பொருளாதாரத்துள் சாதி உயர்வு தாழ்வை அரிஸ்டாட்டில் புகுத்துகிருர். வடமொழி யாசிரியர்களுள்ளே சாணக்கியரைச் சிற்சில துறைகளில் வள்ளுவர்க்கு ஒப்பிடலாம்; என்ருலும் அடிப்படையில் இருவருக்கும் பெருவேற்றுமை புலனுகின்றது. வள்ளுவர் பொருளாதாரம் அறத்தை அடிப்படையாகக் கொண்டது. சாணக்கியர் காணும் பொருளாதாரம் அரசனுக்கு முறை பெரிதன்று; முடிவே பெரிது என்ற அடிப்படையில் அமைந்தது. இன்றைப் பொருளியல் வல்லுநர்களில் பொருளாதார நூலின் தந்தை எனப்படும் 'ஆடம் ஸ்மித்' என்பாரொடு வள்ளுவரை நன்கு ஒப்பிட்டுக் கூறமுடியும். இருவரும் அறத்தினை அடிப்படையாகக்கொண்டு பொருளாதாரத்தை வகுத்தனர். தனி மனிதனின் பொருளாதார உரிமையை வற்புறுத்தினர்; சமுதாயத்துக்கு அவன் ஆற்றவேண்டும் கடமைகளை வற்புறுத்தினர். இருவரும் தத்தம் நூற்களால் தத்தம் நாடுகளில் பொருளாதாரப் பெருக்கத்தையும் கண்டனர்.

---

# என்னையாண்டருள்வாய் எந்தையே

[இசையரசு திரு. எம். எம். தண்டபாணிதேசிகர்]

1908ல் சோழநாட்டுத் திருச்செங்காட்டாங்குடியில் தோன்றியவர். தந்தையார் முத்தையா தேசிகர். அன்னையார் பாப்பம்மையார். இளமையிலேயே நாதசுர வித்துவான் சடையப்ப பிள்ளை, மாணிக்க தேசிகர், சங்கீத கலாநிதி இராசமாணிக்கம் பிள்ளை ஆகியோரிடம் இசை பயின்றார். எட்டாண்டுகள் ஒக்கூர் இலட்சுமணஞ் செட்டியாரின் தேவாரப் பாடசாலையில் இசை ஆசிரியராகப் பணியாற்றினார். 'பட்டினத்தார்' படத்தில் நடித்து உருக்கமான பாடல்களைப் பாடியுள்ளார். கடந்த பன்னிரண்டாண்டுகளாக அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில் இசைப்பகுதியின் தலைவராகப் பணியாற்றி வருகின்றார். தனித் தமிழிசையைப் பரப்பவேண்டுமென்று தனித் தமிழ்ப்பாடல்களை மட்டுமே பாடிவரும் இவர் தொண்டைப் பாராட்ட 'இசையரசு' என்ற பட்டம் வழங்கப் பெற்றது. 1957 இல் நடைபெற்ற தமிழிசைச்சங்க ஆண்டு விழாவில் அச்சங்கம் இவருக்கு 'இசைப்பேரறிஞர்' என்ற பட்டம் வழங்கியது.



பண் : பைரவி] [பாணி : ஆதி

**பண்ணியல்**

என்னையாண்டருள்வாய் எந்தையே
எழில்மிகுஏரகத் தமர்ந்துறைஇறையே (என்னை)

**துணைப்பண்ணியல்**

அன்னையினும் அன்புடைய ஆறுமுகத்தரசே
அருந்தமிழ் இசையினில் அமைந்தநன்முருகே (என்னை)

**பண்ணியல் முடிவு**

கண்கண்ட தெய்வமுன்னைக் கருத்திலிருத்திக்கொண்டேன்
கலையெலாம் நின்னுருவிற் கலந்துஇருக்கக்கண்டேன்
பண்கொண்ட பொன்னடியைப் பற்றிப்புகழ்ந்து நின்றேன்
பன்னிருசெவியில் என்சொன்மாலை கேளாய் என்றேன் (என்னை)

பண் : சிம்மேந்திரமத்திமம்] [பாணி : ரூபகம்

**பண்ணியல்**

அவையறிந்து பேசவேண்டும்
அறிஞருலகம் ஆசைகொள்ள (அவை)

**துணைப்பண்ணியல்**

சுவையறிந்து உண்பதுபோல்
சுருங்கச்சொல்லி விளங்கவைத்து (அவை)

### பண்ணியல் முடிவு

வழுவில்லாமல் சொல்லும்பொருளை
வகையுடனே வகுத்துக்கொண்டு
குழுவினரெல் லோரும்போற்றக்
குறிப்பறிந்து குணங்கள்தோன்ற (அவை)

பண் : கௌளை] [பாணி : ஆதி

### பண்ணியல்

ஆண்டருள்வாய் என்றன் அன்னையே
அருந்தவத்தோர் போற்றும் அங்கயற்கண்ணியே (ஆண்)

### துணைப்பண்ணியல்

வேண்டிநின் பொன்னடியை விரும்பித்தொழுது நின்றேன்
வெய்யவினைகள் போக்கி உய்யும் வழியுண்டாக்கி (ஆண்)

### பண்ணியல் முடிவு

அள்ளக்குறையாத அருட்பெருஞ்செல்வமே
அறமறியாரிடம் உறவு கொள்ளாமலே
உள்ளமெலாம் இனிக்க உன்புகழ்பாடினேன்
உருவும் இளமையும்ஒண் பொருளும் புகழும் தந்தே (ஆண்)

பண் : கல்யாணி] [பாணி : ஆதி

### பண்ணியல்

ஏழிசையாகிய இசைமகளே—என்றும்
இன்பமே வடிவமாய்த் திகழ்பவளே இமிழிசை (ஏழிசை)

### துணைப்பண்ணியல்

வாழியென்றேஉனை வாழ்த்தி வணங்கவே
வல்லமைதந்தருள் உள்ளம் மகிழ்வுறும் (ஏழிசை)

### பண்ணியல் முடிவு

பழந்தமிழ் நூல்களில் பண்களெனப் பிறந்தாய்
பாணர் மிடற்றினிலே பண்புறவே வளர்ந்தாய்
குழலிலும் யாழிலும் குரல்துத்தங் கைக்கிளை
உழைஇளி விளரியும் தாரமுமாகி நின்றாய். (ஏழிசை)

# இரண்டு கவிதைகள்

[திரு. இர. பாலகிருட்டிண முதலியார்]



நல்லாடை என்னும் ஊரில் 26-6-1903 இல் இரத்தினசபாபதி முதலியாருக்கும் சுந்தரத் தண்ணிக்கும் தோன்றியவர் இவர். பி. ஏ. பட்டமும் எல். டி. பட்டமும் பெற்றுள்ளார். கல்வித்துறை யதிகாரியாகத் தமிழ் மாநிலத்தின் நீலகிரி, கன்னியாகுமரி ஆகிய மாவட்டங்கள் நீங்கலாக எல்லா மாவட்டங்களிலும் பணியாற்றியுள்ளார். சிறுவர்க்கேற்ற நூல்களையும் 'சங்ககாலப் பாவலரும் காவலரும்,' 'இளங்கண்ணன் நினைவு மலர்' போன்ற கட்டுரை நூல்களையும் தமிழில் இயற்றியுள்ளார். சங்க இலக்கிய இன்கவித் திரட்டு என்னும் சங்க இலக்கியத்தில் சிறந்த 300 பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். ஆங்கிலத்தில் பல கட்டுரைகளையும் கவிதைகளையும் இயற்றியுள்ளார். இப்பொழுது சென்னையில் தென்மொழிகள் நூல் நிறுவனத்தில் தமிழ் நூற்பதிப்பாளராகப் பணிபுரிந்து வருகின்றார். தமிழ்க் கவிதைகளை அதன் சுவை குன்றாது ஆங்கிலத்தில் நன்கு மொழிபெயர்க்க வல்லவர் இவர்.

## தமிழ்ப் பள்ளு

## THE SONG OF THE TAMILS

ஆடுவமே பள்ளுப் பாடுவமே!—தமிழ்
ஆட்சியின் மாட்சியில் கூடுவமே (ஆடுவமே)
கோடுயர் வேங்கடக் குன்றமுதல்—நல்ல
குமரிமட்டும் தமிழர் கோலங் கண்டே
நாம் ஆடுவமே........

Come ye comrades we'll sing and dance!
We'll gath'r beneath the banner extolled—
The glorious banner of the Tamils bold!
Of the Tamils' lovely life in the fold
Of Venkad high and Comorin of old,
Come ye comrades we'll sing and dance!

மானிடம் என்னுமோர் ஆதிப்பயிர்—தமிழ்
மக்களென் றேகுதித் தாடுவமே!
கானிடை வாழ்ந்திட்ட மனிதர்க்கெலாம்—நல்ல
கதியினைக் காட்டினர் தமிழரென்றே
நாம் ஆடுவமே........

Come ye comrades we'll leap and dance!
Most ancient crop of the great mankind
Are Tamils,—they leave the rest behind!

For dwellers barb'rous in jungles blind
They oped the door of the cultured mind!
Come ye comrades we'll leap and dance!

மூலமென்றே சொல்லல் முத்தமிழாம்—புவி
மூர்க்கம் தவிர்த்ததும்அப் புத்தமுதாம் !
ஞாலமெலாம்தமிழ், தமிழர்களே—புவி
நாம் எனவே குதித் தாடுவமே!
நாம் ஆடுவமே.........

The threefold Tamil[1] of the tongues of the earth,
Is the parent old that has pruned away
Man's boorishness with her amirt sway!
O Tamil, Tamil in the earth alway
And Tamils ever swaying the earth so gay!
Come ye comrades we'll dance in mirth!

வானிடை மிதந்திடும் தென்றலிலே—மணி
மாடங்கள் கூடங்கள் மீதினிலே,
தேனிடை ஊறிய செம்பவழ—இதழ்ச்
சேயிழை யாரோடும் ஆடுவமே
நாம்—ஆடுவமே.......

In the southwind soft that moves aloft,
Mid rooms and halls of mansions high,
Hand in hand O merrily,
With maids of lips of the coral dye,—
O lips sweet-dipped in honey never dry!—
Come ye comrades we'll dance, sing oft!

கவிதைகள், காவியம், உயர்கலைகள்,—உளம்
கவர்ந்திடும் சிற்பமும் சிறந்தனவாம்
குவிகின்ற பொன்பொருள் செங்நெலெலாம்—இங்குக்
குறையிலவாம்என் றுடுவமே
நாம்—ஆடுவமே.......

—பாரதிதாசன்.

Poems, epics, arts, that cling,
Structures that allure the heart,
Flourish in our land so smart!
Heaps of gold and things of the sort
And paddy of gold are never short!—
Come ye comrades we'll dance and sing!

*—Translated by R. Balakrishnan.*

1. **Threefold Tamil: Literature, Music and Drama (Iyal, Isai and Koothu or Nadagam).**

# கோடாலிக்காரன்

# THE WOOD CUTTER

வெய்யில் தாழ வரச் சொல்லடி—இந்தத்
தையல் சொன்ன தாகச் சொல்லடி
    வெய்யில் தாழ வரச் சொல்லடி

Maid, ask him come when the sun goes west ;
Convey this wish of my eager breast ;
Ask him come when the sun goes west.

கையில் கோடாலி கொண்டு
கட்டை பிளப்பாரைக் கண்டு
கொய்யாக் கனியை இன்று
கொய்து போகலாம் என்று
    வெய்யில் தாழ வரச்சொல்லடி

Who splits the wood with the axe hand-pressed,—
    Inform him, maid, this day will suit
To pluck away the unpluckable fruit !
    Ask him come when the sun goes west.

கூரைக்குப்பின் னால்இருக்கும் தென்னை—அதன்
கூடஇருக் கும்வளர்ந்த புன்னை
நேரினிலே காத்திருப்பேன்! என்னை
நிந்திப்பதில் என்னபயன் பின்னை ?
    வெய்யில் தாழ வரச் சொல்லடி

By the hut where the Punnai[1] and the palm heave pressed,
    O there will I wait for him, go tell,—
Let him not fail when all is well !
    Ask him come when the sun goes west.

தாய்அய லூர்சென்று விட்டாள்—நாளை
தான்வரு வாள் இன்றுநல்ல வேளை
வாய்மணக்கக் கள்ளொழுகும் பாளை—நாள்
மாறிவிட்டால் ஆசைஎலாம் தூளே
    வெய்யில் தாழ வரச் சொல்லடி

—பாரதிதாசன்.

My mother is away, with a day we are blessed;
    The spathe sweet-smelling spills toddy away !
Woe unto us if he let slip the day !
    Ask him come when the sun goes west.

—*Translated by R. Balakrishnan*

---

1. Punnai : A flowering tree. The Alexandrian laurel.

உ

# அருட் பாடல்கள்

[அருட்கவி சேதுராமன்]

முருகன் கண்கண்ட தெய்வம். இதற்குச் சான்ருக உள்ளார்-கீழ்க்கண்ட அருட்பாடல்களைப் பாடிய சிரஞ்சீவி சேதுராமஞர் என்பவர். இவர் திருப்போரூர் முருகவேளால் (கர ஆண்டு தைத்திங்களில்-1952ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில்) ஆட்கொள்ளப்பட்டவர். ஆண்டில் இளைஞர்; 4-2-1937 இல் பிறந்தவர்; அந்தணர் குலத்தினர்; வள்ளிமலைத் திருப்புகழ் சுவாமிகளுக்கு அடிமைப்பட்டவர்; இவர் குடும்பமே ஷேசுவாமிகளிடம் மிக ஈடுபட்ட குடும்பம்.



திருப்போரூராண்டவர் அளித்த அருள்வலத்தால் 1953 ஆம் ஆண்டு முதல் சந்தப்பாக்கள் பாடும் பேற்றினைப் பெற்றவர். அதுமுதல் சிவசந்நிதிகளில் இவருக்குதித்த அருட்பாக்கள் பல; அவை சந்தப்பாக்கள், தேவாரப் பதிகங்கள் போன்றன. இன்றுவரை உதித்தன 3000-க்குக் குறைவில்லை. முருகன் சந்நிதியில் நாள்தவருது பாடும் நியமத்தினர். கீழ்க்கண்ட பாடல்கள் திருத்தணிகேசர் சந்நிதி (திரு. வ. சு. செ. பிள்ளையவர்களில்லம்) யில் பாடப்பெற்றன.

ராகம்: பூரிகல்யாணி] 26-5-'54 [தாளம்: சங்கீர்ணஜாதி ஜம்பை

'நமச்சி வாய வாழ்க' எனச்சிவா புராணம்
நவிற்று வார்,வி நோத — நடராசர்—
நடித்த [1]கோயி லேகி எடுத்த பாதம் ஓதி
[2]நகைத்த சாதி யாரை — எளிதாக;
அமர்த்தி யூமை யாக விதித்த வாத வூரர்,
அருட்ப்ர காச [3]ஊரர், — அவிநாசி—
அகத்தி லோர்[4]க ராவை வருத்தி நேயர் சேயை
அழைத்த [5]மாதி தோழர், — அருளாலே;
[6]சுமத்த பாறை யோட(ம்) மிதப்ப வாரியூடு
சொலித்த [7]வாச கேசர், — தமிழ்மாலை—
தொடுத்து ஞான தாள(ம்)[8] மணிப்ர வாள யான
[9]சுசத்ர மாதி பேறு — பெறுமேதை;
[10]தமக்கை யால்விசேட அருட்ப்ர சாத [11]மேவி
[12]சமத்த கால ஞாநி — இவர்நால்வர்
தமக்கு நேரதான தமிழ்ப்ப ணோது மாறு
தலைப்ப டாயெ னுசொல் — பெருமாளே.

பாடல் 1—குறிப்பு: 1. கோயில் - தில்லை. 2. நகைத்த சாதியார் - புத்தர். 3. ஊரர் - ஆரூரர்; சுந்தரர். 4. கரா-முதலை. வருத்தி - வரவழைத்து. 5. மாதி-சிவபிரான். தோழர்-சுந்தரர். 6. சுமத்த பாறை - சுமந்த கல். 7. வாசக ஈசர் - சொல்லரசர்; நாவுக்கரசர். 8. மணி - இரத்தினம். ப்ரவாளம் - பவளம் (இழைத்த). யானம் - பல்லக்கு. 9. சு - நல்ல, சத்ரம் - (முத்துக்)குடை. 10. தமக்கை - திலகவதியார். 11. மேவி-மேவினவர்-அப்பர். 12. சமத்தகால ஞாநி - அப்பருக்குச் சமகால ஞாநி-ஞானசம்பந்தர்.

**ராகம்: மத்தியமாவதி]** 8-6-'54 *[தாளம்:* **ஜம்பை**

நரசிங்க வடிவு[1]எடு துளசிங்கன் மருக! சுர
நதிகங்கை புதல்வ! [2]நர — பதியானய்—
நறைகொண்ட பலமலர்கள் நிறைகின்ற [3]நிறமுடைய
[4]நகமங்கை குமர! [5]விடை — நடையோனே;

சரசங்கள் புரியவல விதிவிந்தை இருவினைகள்
சதிமங்கி யழியஅருள் — தணிகேசா—
தமிழ்கொஞ்சு திரு[6]அதர! குறவஞ்சி [7]ரமண! குக!
தமியன்ற [8]னக மயிலில் — இவர்வாயே;

நரசிங்க முனையரையர் விறன்மிண்டர் முனையடுவர்
நமிநந்தி யடிகளொடு — [9]கணநாதர்—
நவில் [10]நந்த முநிவர்[11]பசு பதிதண்டி யடிகள் பிடி
நடை மங்கை யரசியுடன் — நெடுமாறர்;

கரகுங்கி லியகலயர் [12]குறிதொண்டர் திருமுருகர்
[13]கலிகம்பர் [14]கலியமுநி — இசைஞாநி—
[15]கழல்சிங்கர் சடையரொரு [16]சிறுதொண்டர் புரிபணிகள்
கரைகண்ட பரனுதவு — பெருமாளே.

**ராகம்: காவடிச்சிந்து]** 6-9-'54 *[தாளம்:* **ஜம்பை**

[17]அப்பருட னுடுபடலக் கைப்பறிசெய் அளவுயரத்
[18]தப்பர்திரி நெடுபொழில் மிக் — கயல்சூழும்—
அப்பதியெ மடிகள்கரக் [19]கப்பரைகொள் பவருலகுக்
[20]கப்பரவர் மருவுதிருப் — புகலூரில்;

[21]அப்பரென எதுகையமைத் தொப்பரிய கவிதைநுழைத்
[22]தப்பர் புகல் பதிக[23]மிடைக் — கிடையான—
[24]அட்டவணை யதனின்மிகைப் பட்டஇடர் படுசடலத்
[25]தட்டுழிய முழுதும் விதிப் — பயனேதான்;

1. எடுதுளசிங்கன் - எடுத்த, துளவணிந்த, சிங்கம்போன்ற திறலாளி. 2. நரபதி - அரசன்; உக்கிரபாண்டியன். 3. நிறம் - மார்பு. 4. நகம் - மலை. 5. விடை நடை - 'ஏறுபோற் பீடு நடை', திருக்குறள். 6. அதரம் - வாயிதழ். 'தமிழ் கொஞ்சு திருவதர' என்றது ஞானசம்பந்தரை. 7. ரமணன் - கணவன். 8. அகமயில் - மனமயில். 9. கணநாத நாயனர். 10. நந்தனர் - திருநாளைப் போவார் நாயனர். 11. உருத்திரபசுபதி நாயனர். 12. திருக்குறிப்புத்தொண்ட நாயனர். 13. கலிக்கம்ப நாயனர். 14. கலிய நாயனர். 15. கழற்சிங்க நாயனர். 16. சிறுத்தொண்ட நாயனர். இப் பாடலில் அறுபத்து மூவருள் 19 நாயன்மாரது பெயர்கள் அடுக்காக வந்துள்ளமை கவனித்தற்பாலது.

17. அப்பர் - ஆடு; மேடராசி. 18. அப்பர் திரி - ஆண் குரங்குகள் திரிகின்ற. 19. கப்பரை - கபாலம். 20. அப்பர் - சிவபிரான். "திரிசிராமலை அப்பர்"—திருப்புகழ். 21. அப்பரென்று எதுகை யமைந்த, திருப்புகலூர்ப் பதிகத்து, அப்பர் தேவாரம்: —4-54-3. 22. அப்பர் - திருநாவுக்கரசர். 23. இடைக்கு இடை - மேற்கூறிய பாடல் திருப்புகலூர்ப் பதிகத்தில் இடையென்பது பதிகத்திற் பாதி; முதலைந்து பாக்களுள் இடை - பாதியாக அமைந்த, மூன்ருவது பாடலாகும். பதிகமிடை - பதிகத்தில், கிடையான - கிடப்பதான என்றும் கொள்ளலாம். 24. அட்டவணை - பட்டியல், 25. அட்டுழியம் - அடூழியம்; அநியாய இடர்கள்,

[1]இப்படியன் இவனிறையற் றிப்படிவன் எனஎழுதுற்
றெப்பொழுது முணர்வருமெய்ப் படிவோனே—
[2]இச்சைமகள் எயினர்குலக் [3]கொச்சைமகள் [4]அமளிபடுத்
திச்சைமிக அணையுமலைப் புயவீரா;

[5]உப்பரிகை உலவுகொடிச் [6]சர்ப்பகிரி நகரில்வசித்
[7]தொப்புரவு பயில் [8]முநிவர்க் குபகாரா—
[9]உத்தரிய முதலியலட் சத்துமறை உபநிடதத்
துச்சியென அணிதணிகைப் பெருமாளே.

## திருப்பாண்டிக்கொடுமுடிக் கொடுமுடிநாதேசுரர் பதிகம்

[நாலடி மேல்வைப்பு]

பண் : கொல்லி; இராகம்: நவரோசு] 21-5-57 [தாளம்: ஆதி

வெங்கயத் தின்னுரி போர்த்தீர்!
செங்கயற் கண்ணிபங் கானீர்!
மங்கையர்க் கேவலை விற்றீர்!
பங்கயத் தண்புனல் பாயும்
பாண்டிக் கொடுமுடி யீரே!—பதம்
வேண்டிக் கொடு(ம்)முடி மீதே.

[10]பார்ப்பதி எங்கணும் உள்ளீர்!
[11]பேர்ப்பதி னுயிரங் கொண்டீர்!
[12]ஆர்ப்பதி கத்துடி ஆர்ப்பீர்!
பார்ப்பதி பங்கினில் மேவும்
பாண்டிக் கொடுமுடி யீரே—பதம்
வேண்டிக் கொடு(ம்)முடி மீதே.

நித்தலுங் கைதொழு தேத்தும்
சித்தரை ஏன்றருள் செய்வீர்!
பித்தரைப் போல்நடம் பேணிப்
பத்தரை ஆட்கொளும் பண்பீர்!
பாண்டிக்கொடு முடியீரே!—பதம்
வேண்டிக் கொடு(ம்)முடி மீதே.

[13]ஆர்கலி போலமர் கங்கை
நீர்மிலை நீள்சடை மீதே
[14]ஆர்தலை மாலை யணிந்தீர்!
பார்மலி காவிரி பாயும்
பாண்டிக்கொடு முடியீரே—பதம்
வேண்டிக் கொடு(ம்) முடிமீதே.

[15]சேலன மார்வயற் சேருர்
நீலமர் சோலைநெய்த் தானம்
[16]ஆலமர் பூம்பொழி லாங்கே
பாலன மேனிய னுய்வாழ்
பாண்டிக் கொடுமுடி யீரே—பதம்
வேண்டிக் கொடு(ம்)முடி மீதே.

1. "இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன், இவனிறைவனென்றெழுதிக் காட்டொணுதே" —அப்பர். 2. இச்சைமகள் - இச்சா சக்தி; வள்ளி. 3. கொச்சை மகள் - கொச்சைமொழி பேசுபவள் : வேடிச்சியாதலின். 4. அமளி - படுக்கை. 5. உப்பரிகை - மேல்மாடம். 6. சர்ப்பகிரி - நாகமலை; திருச்செங்கோடு. இதைச் சம்பந்தர், "கொடிமாடச் செங்குன்றூ"ரென்று பாடியுள்ளாராதலின், இது 'உப்பரிகை உலவுகொடிச் சர்ப்பகிரி' என்னப்பட்டது. 7. ஒப்புரவு - முறைமை. உபகாரம். 8. முநிவன் - திருச்செங்கோட்டில் முருகவேள் உதவிவேண்டி யருள்பெற்ற குணசீலர் என்னும் அன்பர். 9. உத்தரியம் - மேலாடை. மேலாடை, கீழாடை முதலியவெல்லாம் கடவுட்கு வேதம், உபநிடதம் முதலியவையேயாம்.

10. பார்+பதி - உலகிலுள்ள தலங்கள். 11. பேர் - பேர்கள்; 12. ஆர்ப்பு அதிகத் துடி எனப் பிரிக்க. 13. ஆர்கலி - கடல். 14. ஆர் - ஆத்தி. 15. சேல்+அ(ன்)னம்+ஆர்வயல் எனப் பிரிக்க. 16. திருவாலம்பொழில் என்னும் தேவார தலம் "ஆலமர் பூம்பொழில்" எனப்பட்டது.

[1]பெண்டரை யாகிய பெட்பீர் !
[2]தண்டலை நீணெறி தங்கி
அண்டரை யாட்கொள வல்லீர் !
[3]பண்டரங் கம்பயில் கூத்தீர் !
பாண்டிக் கொடுமுடி யீரே—பதம்
வேண்டிக் கொடு(ம்)முடி மீதே.

[4]கண்ணுறு மைந்தெழுத் துண்மை
எண்ணுறுஞ் சிந்தையில் நாவில்
நண்ணுறும் நாவலா ரூரர்
பண்ணுறும் பாடல்க ளோதும்
பாண்டிக் கொடுமுடி யீரே—பதம்
வேண்டிக் கொடு(ம்)முடி மீதே.

[5]கோவல னயபெம் மானும்
நாவல வேதனும் நண்ணுத்
[6]தீவல செம்மைசொல் [7]மூவர்
பாவலர் பாடலு மார்ந்த
பாண்டிக் கொடுமுடி யீரே—பதம்
வேண்டிக் கொடு(ம்)முடி மீதே.

நதியணி வேணிகொள் நல்லீர்!
துதியணி சொற்றமிழ் வல்லார்
[8]பதியென வும்பழ [9]மூவர்
பதியெனும் நன்னகர்ப் பாடும்
பாண்டிக் கொடுமுடி யீரே—பதம்
வேண்டிக் கொடு(ம்)முடி மீதே.

மன்னருந் தேவரும் வந்து
சொன்[10]னறும் பாலிற் றுதிக்கும்
என்னரு மாமணி யானீர் !
பன்னருங் [11]காவளி பண்செய்
பாண்டிக் கொடுமுடி யீரே!—பதம்
வேண்டிக் கொடு(ம்)முடி மீதே.

[12]ஆண்டிக் கொடுமுடி மேற்றுள்
வேண்டிக் கொடு(ம்)முடி மாலை
[13]பூண்டிக் கொடுமுடி பூண்பீர்!
பாண்டிக் கொடுமுடி மேவிப்
[14]பண்மொழி நாயகி பங்கிற்—பயில்
தண்மொழி சாற்றிநிற் பீரே.

## வடபழநியாண்டவர் - மூலத்தானம்

இராகம்: இந்தோளம்] 1-4-57 [தாளம்: சாபு

விதுநிகர் வத் திரநீபா—
வெளிறு பொடித் திருமேனிப்;
புதுமண நற் புழுகாளா—
புகலிட மற் றுளதோதான் ;
சது முகனைத் திருமாலைத்—
தரு முலகத் தொருரூபா ;
மது கரமொய்த் தொளிர்தாரா—
வட பழநிப் பெருமாளே.

---

1. பெண்டு+அரை ஆகிய. பெட்பு - பெருமை 2. இது ஒரு தேவாரதலம். 3. பண்டரங்கம்- பாண்டரங்கம் என்பது சிவபிரான் நடனங்களுள் ஒன்று. 4. சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'நமசிவாய' திருப்பதிகம் பாடியமை ஈண்டு கூறப்பட்டுள்ளது. 5. கோவலன் - கோபாலன். 6. தீவ(ல்)ல - தீயாகிய வல்லமைபெற்ற. 7. மூவர் - சம்பந்தர்; அப்பர்; சுந்தரர் மூவர். 8. பதி - தலைவன். 9. மூவர் பதி - மும்மூர்த்தி க்ஷேத்திரம். 10. நறும்பாலில் - மணமிக்க பாலைப்போல. 11. காஅளி - சோலை வண்டு. 12. ஆண்டு - ஆட்கொண்டு, இ - இந்த, கொடும் முடி - (எனது) கொடிய தலைமேல் எனப் பிரித்துப் பொருள் கொள்க. 13. பூண்+திக்கொடு (முடிமாலை முடிபூண்பீர்) எனக்கொள்க. 14. இவ்வூர்த் தேவியார் பெயர்.

# கவிஞர் ஆற்றல்

[திரு. சு. நடேச பிள்ளை]

1895 ஆவது ஆண்டில் தஞ்சையில் பிறந்தவர். பி. ஏ., பி. எல். பட்டம் பெற்றுத் தஞ்சையில் வழக்கறிஞராக இருந்தார். 1923இல் இலங்கைக்குச் சென்று யாழ்ப்பாணத்துப் பரமேசுவரர் கல்லூரியின் முதல்வராகப் பணியேற்ருர். 1934 ஆம் ஆண்டில் அரசினரவையின் உறுப்பினராகத் தெரிவு செய்யப்பட்டு 25 ஆண்டுகள் அரசியற் பணியாற்றினுர். 1925 இல் இலங்கை அரசு அமைச்சர் பதவி ஏற்ருர். இவர் இலங்கையிலும் இந்தியாவிலும் கல்விப்புகழ் படைத்த



தவர். தமிழுக்கும் சைவத்திற்கும் பெருந்தொண்டாற்றி வருகின்ருர். சுன்னுகத்தில் இராமநாதன் கல்லூரியை நிறுவி நடத்தி வருகின்ருர். இராமநாதன் பல்கலைக் கழகமென்னும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தை நிறுவப் பாடுபட்டு வருகின்ருர். 'சகுந்தலை வெண்பா' என்ற நூலை இயற்றியுள்ளார். இது இப்பொழுது அச்சிலிருக்கின்றது. 1959 இல் திருவள்ளுவர் காலத்தைப் பற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவுகளாற்றினுர்.

1. உலகம் இனிமை இழந்திதயம்
உவர்த்துச் சலிப்பை யுறும்போதும்
கலங்கும் மனத்தில் இருள்படிந்து
காதல் மருண்டு விழும்போதும்
துலங்கும் வாழ்வை உயிரடைந்து
துண்டு சுடராய் மீண்டதுவே
இலங்கும் படியாம் இனிய இசை
எழுப்பிப் புதிய உலகளிப்போம்.

2. எழில்பூத் தொளிரும் தளிருடைத்தாய்
இயங்கும் உலகம் எமதிசைகேட்
டொழியா தொலிக்குங் கடற்றிரைமீ
துதிக்கும் வெண்பொன் உவாமதியின்
குளிர்ந்த கிரணத் தொளிபரப்பிக்
கூத்து நவிற்றும் எமைக்கண்டு
செழிந்த ஞாலத் தியற்கையெனும்
செல்வி புரியும் செயலதுவே.

3. உலகிற் காணு ஒளிகண்டோம்
உளத்தில் மின்னற் கொடிபோலப்
பலவா யெழுந்து கருத்துக்கள்
புலத்திற் சொலித்துப் பெருவாழ்வின்
நிலையைக் காட்டும் நன்மையுடன்
தீமை யின்பம் துன்பமெலாம்
உலப்பில் ஒன்றின் உயர்ஞானக்
காட்சி யாகிக் கலந்திடவே.

# எங்கள் சிறந்த வெளியீடுகள்

## புதுமைப்பித்தன்

| | |
|---|---|
| புதுமைப்பித்தன் கதைகள் ரூ | 3 00 |
| புதிய ஒளி | 3 00 |
| அன்று இரவு | 3 00 |
| புதுமைப்பித்தன் கட்டுரைகள் | 2 50 |
| சித்தி | 1 75 |
| வாக்கும் வக்கும் | 1 50 |
| மணியோசை | 1 50 |
| தெய்வம் கொடுத்த வரம் | 1 50 |
| புதுமைப்பித்தன் கவிதைகள் | 1 50 |
| சிற்றன்னை | 1 25 |
| உலக அரங்கு | 1 25 |
| முதலும் முடிவும் | 1 25 |
| பளிங்குச் சிலை | 1 00 |
| ஆண்மை | 1 00 |
| பிரேத மனிதன் | 1 00 |
| நாரத ராமாயணம் | 1 00 |
| நிச்சயமா நாளைக்கு | 1 00 |

## ரகுநாதன்

| | |
|---|---|
| பஞ்சும் பசியும் | 3 50 |
| புதுமைப்பித்தன் வரலாறு | 3 00 |
| சிலை பேசிற்று | 2 50 |
| ரகுநாதன் கவிதைகள் | 2 50 |
| கன்னிகா | 2 00 |
| இலக்கிய விமர்சனம் | 2 00 |
| சேற்றில் மலர்ந்த செந்தாமரை | 2 00 |
| மருது பாண்டியர் | 2 00 |
| புயல் | 1 50 |
| நான் இருவர் | 1 50 |

## தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

| | |
|---|---|
| வள்ளுவரும் மகளிரும் | 3 00 |
| அன்பு முடி | 2 00 |

## டாக்டர், துரை அரங்கனார்

| | |
|---|---|
| இலக்கியக் கட்டுரைகள் | 2 50 |
| கட்டுரை எழுதும் முறை | 2 50 |
| இப்சென் நாடகங்கள் | 5 00 |

## சாமி சிதம்பரனார்

| | |
|---|---|
| திருக்குறள் பொருள்விளக்கம் | 4 50 |
| சிலப்பதிகாரத் தமிழகம் | 3 75 |
| மணிமேகலை காட்டும் மனித வாழ்வு | 3 50 |
| இலக்கியச் சோலை | 3 00 |
| பதினெண்கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும் | 3 00 |
| வடலூரார் வாய்மொழி | 3 00 |
| எட்டுத்தொகையும் பண்டைத் தமிழரும் | 3 00 |
| பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும் | 2 50 |
| தொல்காப்பியத் தமிழர் | 2 25 |
| கம்பன் கண்ட தமிழகம் | 2 25 |
| பழந்தமிழர் அரசியல் | 2 25 |

## S. S. ராமசாமி பிள்ளை

| | |
|---|---|
| வானத்தின் வண்ணக் கோலம் | 3 00 |
| வானமண்டல யாத்திரை (விஞ்ஞானம்) | 2 50 |
| அற்புத மருந்துகள் (வைத்திய நூல்) | 2 00 |
| டெலிவிஷன் | 1 75 |
| மெண்டலோவ் (வெற்றிகண்ட விஞ்ஞானி) | 1 00 |
| புற்று நோய் | 1 00 |
| சுகப்பிரசவம் | 0 75 |

## அழ. வள்ளியப்பா

| | |
|---|---|
| உமாவின் பூனைக்குட்டி | 1 50 |
| ரோஜாச் செடி | 1 50 |
| அம்மாவும் அத்தையும் | 1 50 |

## சரஸ்வதி ராம்னாத்

| | |
|---|---|
| ராஜநர்த்தகி (சரித்திர நாவல்) | 4 00 |
| வீர சுதந்திரம் | 3 50 |
| தேவவிரதன் (மகாபாரதக் கதை) | 1 00 |
| பலவான் பீமன் ,, | 0 75 |
| கொடையாளி கர்ணன் ,, | 0 75 |

# ஸ்டார் பிரசுரம்

66, பெரிய தெரு, திருவல்லிக்கேணி,

சென்னை - 5.

